# இன்றைய இந்திய இலக்கியம்

ஒரு கருத்துக் கோவை

மொழிபெயர்ப்பு:
ஏ. ஜி. வேங்கடாச்சாரி



சாகித்திய அக்காதெமி
புது தில்லி

# இன்றைய இந்திய இலக்கியம்

## ஒரு கருத்துக் கோவை

மொழிபெயர்ப்பு :
ஏ. ஜி. வேங்கடாச்சாரி



சாகித்திய அக்காதெமி
புது தில்லி

*Inraya Indiya Ilakkiyam* : Tamil translation of *Contemporary Indian Literature — A Symposium* (revised and enlarged edition) from English by A. G. Venkatachary. Sahitya Akademi, New Delhi, 1963. Price Rs. 12·00.

© சாகித்திய அக்காதெமி, புது தில்லி

முதல் பதிப்பு, 1963

விற்பனை ஏஜெண்டு :
மீனாட்சி புத்தக நிலையம்
மேல கோபுர வீதி, மதுரை

Also available at :
Sahitya Akademi, New Delhi

அச்சிட்டோர் :
கபீர் பிரின்டிங் ஒர்க்ஸ், சென்னை–5

விலை ரூ. 12·00

# முகவுரை

தற்கால இந்திய இலக்கியத்தைப் பற்றி இந்த சிறு நூலை சாகித்ய அகாடமி வெளியிடுவதை அறிந்து மகிழ்கின்றேன். இதில் எழுதி இருப்பவர்கள் ஒவ்வொரு மொழியின் வரலாறு, அதன் இலக்கிய வளர்ச்சியைப் பற்றிய சுருக்கமான (விவரணை) தகவல், தற்காலப் போக்கைப் பற்றிய விவரணை ஆகியவற்றை வழங்கியுள்ளார். வெவ்வேறு மொழிகளைச் சேர்ந்த இந்த எழுத்தாளரின் கண்ணோட்டத்தில் ஒரு ஒற்றுமை காணப்படுகிறது. எல்லோருக்குமே பொதுப்படையான மூலாதாரம் ஒன்றுதான். ஏறக்குறைய எல்லோரும் உணர்ச்சி விஷயத்திலும், மதி நுட்ப வகையிலும் ஒரே மாதிரியான அனுபவம் பெற்றவர்கள். அயல் நாடுகளில் தோன்றிப் போந்த கருத்துக்கள் விஷயத்தில் நமது நாடு எக்காலத்திலும் அலட்சியமாக இருந்தது இல்லை. ஆனால் அவற்றிற் கெல்லாம் தனக்கென உரிய ஒரு விசேஷமான திருப்பத்தையும் முத்திரையையும் அது அளித்துள்ளது.

இலக்கியம் புனிதமான ஒரு சாதனம். அதை ஒழுங்காகப் பயன்படுத்தினால், அறியாமையையும் துவேஷத்தையும் வளர்க்கும் சக்திகளை சமாளித்து தேசிய ஒற்றுமையையும், உலக சமுதாய அமைப்பையும் தோற்றுவிக்க முடியும். இலக்கியமானது கடந்த காலத்தை எடுத்துரைத்து, நிகழ்காலத்தைப் பிரதிபலித்து, எதிர்காலத்தை உருவாக்குவதாக அமைய வேண்டும். அருள் பெற்ற மொழியானது (தேஜோமயீவாக்) வாசகர்களிடம் கருணை

யையும், வாழ்வைப் பற்றி விரிவான கண்ணோட்டத்தை யும் வளர்க்கத் துணை புரியும். தாம் வாழும் உலகைப் புரிந்து கொள்ளவும் தம்மைத்தாமே உணர்ந்து கொள்ள வும் தமது எதிர்காலத்தையும் விவேகத்துடன் உரு வாக்கவும் அவர்களுக்கு உதவுவதாக இருக்கும்.

மனதும் இதயமும் படும் அவஸ்தைகளையும், நமது நம்பிக்கைகளையும் அபிலாஷைகளையும் வாசகர்களுக்கு இந்தச் சிறிய நூல் புலப்படுத்துமென்று நம்புகிறேன்.

எஸ். ராதாகிருஷ்ணன்

# இன்றைய இந்திய இலக்கியம்

## கட்டுரையாளர்கள்

**பிரிஞ்சிகுமார் பருவா :** (பி. 1910) புகழ்பெற்ற ஆஸாமிய புலவர், நாவலாசிரியர், சிறுகதை எழுத்தாளர். இயற்றிய நூல்கள்: ஆஸாமிய பண்பாட்டின் வரலாறு, பழங்கால ஆஸாமிய இலக்கிய ஆராய்ச்சி.

**மாயாதர மான்சின்ஹா :** (பி. 1905) புகழ்பெற்ற ஒரியக் கவிஞர், நாடகாசிரியர், விமரிசகர். சாம்பல்பூர் கங்காதர் மேகர் காலேஜின் முதல்வர். இவரது நூல்கள்: தூபா, ஹேம புஷ்பா, அக்ஷயதா (கவிதைத் தொகுப்பு நூல்கள்); கவிதையின் கவி, ஒரிய சமாஜ்-ஒ-சாஹித்யா.

**குவாஜா அஹமத் பருகி :** (பி. 1917) புகழ்பெற்ற இலக்கிய விமரிசகர். டெல்லி காலேஜ் உருது இலாகா தலைவர். 'மீர்தக்கி மீர்ஹையாத் ஷைரி' என்ற விமரின நூலுக்காக சாகித்திய அக்காதெமிப் பரிசு பெற்றவர்.

**வி. கே. கோகாக் :** (பி. 1909) கவிஞர், நாடகாசிரியர், கட்டுரையாளர், விமரிசகர். கர்நாடக சர்வகலாசாலையில் ஆங்கிலப் பேராசிரியர். 1934ல் கர்நாடகக் கவிஞர் மகாநாட்டின் தலைவர். 1949ல் கர்நாடக சாஹித்ய கோஷ்டியின் தலைவர். இயற்றிய நூல்கள்: பாவனு (கவிதைகள்) இந்திய கர்நாடகா (கட்டுரைகள்) சாஹித்யதள்ளி பிரகதி (விமரிசனம்).

**பி. என். புஷ்ப :** (பி. 1917) ஸ்ரீநகர் ஏ. எஸ். கலாசாலையில் ஸம்ஸ்கிருத, ஹிந்தி இலாகா தலைவர். காஷ்மீரி

கவிதைத் தொகுப்பு ஒன்றை ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ளார்.

**மன்ஷுக்லால் ஜாவேரி:** (பி. 1907) கவிஞர், விமரிசகர், பேராசிரியர். இயற்றிய நூல்களில் சில: சந்திர தூதன், ஆராதனை (கவிதைத் தொகுப்புகள்), குஜராத்தி சாஹித்யனு ரேகாதரிசன் (விமரிசனம்).

**தெ. பொ. மீனாட்சிசுந்தரன்:** (பி. 1901) கட்டுரையாளர், விமரிசகர். அண்ணாமலை சர்வகலாசாலைத் தமிழ்ப் பேராசிரியர்.

**கே. ராமகோடீசுவர ராவ்:** (பி. 1894) மசூலிப்பட்டினம். தேசிய காலேஜ் பிரின்சிபால். "திரிவேணி" என்ற ஆங்கில சஞ்சிகையின் ஆசிரியர். 'காவூர் பிரதானி' (வாழ்க்கை வரலாறு), 'மகாராஷ்டிர வீருலு' (வரலாறு) என்ற நூல்களை இயற்றியவர்.

**குசவந்த சிங்கு:** (பி. 1915) சிறந்த பத்திரிகையாளர். நாவலாசிரியர், சிறுகதை எழுத்தாளர். இப்போது "யோஜனு" பத்திரிகையின் பிரதம ஆசிரியர்.

**எம். வி. ராஜாத்தியக்ஷா:** (பி. 1913) பம்பாய் எல்பின்ஸ்டன் காலேஜில் ஆங்கில விரிவுரையாளர். ஐந்து பெரிய மராத்திய கவிஞர்களின் பாடல் தொகுப்பை வெளியிட்டவர்.

**சி. குன்னன் ராஜா:** (1895—1963) ஸம்ஸ்கிருதத்திலும் மலையாளத்திலும் புலவர். ஆந்திர கலாசாலையில் ஸம்ஸ்கிருத ரீடராயிருந்தவர்.

**காஜி அப்துல் வாதூத்:** (பி. 1894) வங்காளியில் நாவலாசிரியர். கட்டுரையாளர். சிறுகதை எழுத்தாளர். 1939ல் வங்காளி இலக்கிய மகாநாட்டின் தலைவர். இயற்றிய நூல்கள்: 'மீர் பரிவார்' (சிறுகதைகள்), 'நவபர்யாயா' (கட்டுரைகள்,) 'ஆஜாத்' (நாவல்).

**டாக்டர். வி. ராகவன் :** (பி. 1908) சென்னை சர்வகலா சாலை ஸம்ஸ்கிருதப் பேராசிரியர். 1953ல் பிரான்சில் நடைபெற்ற சர்வதேச கீழ்த்திசை பண்பினரின் மிஷனில் அகில இந்திய கீழ்த்திசை பண்பினர் மகாநாட்டு பிரதிநிதியாக கலந்துகொண்டார். ஸம்ஸ்கிருதம், ஆங்கிலம், தமிழ் முதலிய மொழி களில் புலமைமிக்க நூல்களை வெளியிட்டுள்ளார். 250 ஆராய்ச்சிக் கட்டுரைகளை வரைந்துள்ளார். "ஜர்னல் ஆப் ஓரியண்டல் ரிஸர்ச்" சஞ்சிகையின் ஆசிரியர்.

**லால்சிங் ஹஸாரி அஜ்வானி :** (பி. 1899) சிந்தி கவிஞர், விமரிசகர். பம்பாய் பாந்திராலில் நேஷனல் காலேஜ் பிரின்சிபால். பல சிந்தி கவிதை, கட்டுரைத் தொகுப்புகளை வெளியிட்டுள்ளார். 'நவோதர்' (கவிதைகள்) 'விசார்' (கட்டுரைகள்).

**எஸ். எச். வாத்ஸ்யாயன் :** (பி. 1911) கவிஞர், நாவ லாசிரியர், சிறுகதை எழுத்தாளர். 'வாக்' என்ற ஹிந்தி காலாண்டு சஞ்சிகையின் ஆசிரியர். இயற்றிய நூல்கள் : 'பக்னதுதா' (கவிதைகள்) 'சேகர்', 'ஏக்ஜீவனி' (நாவல்), 'ஆஜ்நேயகி கஹானியா' (கதைகள்).

**கே. ஆர். ஸ்ரீநிவாச அய்யங்கார் :** (பி. 1908) புலவர், விமரிசகர், வாழ்க்கை வரலாற்று நூலாசிரியர். ஆந்திரா சர்வகலாசாலையில் ஆங்கிலப் பேராசிரியர். இயற்றிய நூல்கள் : 'இந்தோ-ஆங்கில இலக்கியம்', 'ஆங்கில இலக்கியத்தில் இந்திய நூல்கள்', 'ஸ்ரீ அரவிந்தர்'.

# ஆஸ்ஸாமி இலக்கியம்

பிரிஞ்சி குமார பருவா

## முகவுரை

இந்தோ-ஆரிய மொழிகளின் குடும்பத்தைச் சேர்ந்தது ஆஸ்ஸாமி. அதன் கீழ்க் கோடிக் கிளையாக அது அமைந்துள்ளது. இலக்கணக் கட்டுக்கோப்பு, ஒலி வடிவம், சொற்றொடர் அமைப்பு ஆகிய அம்சங்களில் முழு ஆரிய மொழியாகவே அது திகழ்கிறது. ஒரிய, வங்க மொழிகளைப் போலவே ஆஸ்ஸாமியும் பிராச்சிய (கிழகத்திய) அபபிரும்சத்திலிருந்து ஜனித்தது.

ஏடு ஏறிய ஆஸ்ஸாமிய இலக்கியங்களில் மிகப் பழையனவாகக் கிடைக்கின்றவை பதின்மூன்றுவது நூற்றுண்டைச் சேர்ந்தவை. அவை சமய நூல்கள் அல்லது ஸம்ஸ்கிருத இலக்கியத்தைத் தழுவிய வழி நூல்கள். பிறகு பல நூற்றுண்டுகளில் இதே போக்கு நீடித்தது. பிராந்திய மன்னர்களும் சிற்றரசர்களும் ஆதரவு கொடுத்து பதினைன்காவது நூற்றுண்டில் ஆஸ்ஸாமிய இலக்கியத்தைப் போஷித்தனர். மகா மாணிக்கியன் என்ற கச்சார் மன்னன் வேண்ட ராமாயணத்தை அச்சமயத்தில் மாதவ கண்டலி மொழி பெயர்த்தார். மகாபாரத சம்பவங்களும் ஆஸ்ஸாமிய மொழியில் வரையப் பெற்றன. மானஸா என்ற நாக தேவதையின் புகழைப் பாடும் கவிதைகள் உதித்தன. இதே காலத்தில்தான் அவளைப்பற்றிய கற்பனைக் கதைகளும் எழுதப்பட்டன.

பதினைந்தாம் நூற்றாண்டில் சங்கர தேவர் நவ வைஷ்ணவ இயக்கத்தைப் பரப்பினார். அதன் வளர்ச்சியுடன்கூட ஆஸ்ஸாமிய இலக்கியமும் ஏற்றம் கண்டது. இடைக்காலம் எனக் கருதக்கூடிய அந்த சமயத்தில்தான் ஆஸ்ஸாமியின் ஆத்மீக, கலாச்சார வாழ்வை உருவாக்கிய பெரும் சக்தியாக சங்கரதேவர் திகழ்ந்தார் என்று மக்கள் கருதுகின்றனர். பிரசாரம் செய்து தமது வழிக்குப் பிறரை மாற்றுவது ஒன்றே சங்கர தேவரும் அவரது சீடர்களும் செய்து வந்த மதத் திருப்பணி என்று கருதலாகாது. ஆஸ்ஸாமியரின் வாழ்வு, இலக்கியம், மதி நுட்பம், கல்வியறிவு ஆகிய அனைத்தையும் பிரமாதமாக அவர்கள் ஊக்குவித்தனர். சங்கர தேவரும் அவரது சீடர்களும் ஆஸ்ஸாமிய மொழியில் படைத்த இலக்கியம் மாபெரும் விளைவுகளுடன் கூடிய இலக்கிய சகாப்தத்தையே தோற்றுவித்துவிட்டது. பதினைந்து பதினாறுவது நூற்றாண்டுகளில் பாகவத சிரோன்மணிகளான கவிஞர்கள் இயற்றிய இலக்கியம் பலதரப்பட்டது. மகாபாரதம், ராமாயணம், பாகவத புராணம் மொழிபெயர்க்கப்பட்டன. அவற்றை ஆதாரமாகக்கொண்ட வழி நூல்கள் வந்தன. வைஷ்ணவ சித்தாந்த விளக்கங்கள் வெளியாயின. வர கீதங்கள் என்ற சமயப் பாசுரங்களும் அங்கீய நாட் என்ற நாடக வகைகளும் தோன்றின.

ஆஹோம் மன்னர்களின் ஆதரவில் ஆஸ்ஸாமிய இலக்கியம் பதினேழாம் நூற்றாண்டில் விருத்தியடைந்தது. ஆஹோம் மன்னர்களின் வரலாறுகளைச் சித்தரிக்கும் புரஞ்சிவகை நூல்கள் உரைநடையில் எழுதப் பெற்றதுதான் அக்காலத்து ஆஸ்ஸாமிய இலக்கியச் சாதனைகளில் மகத்தானது. இந்த நிகரற்ற சரித்திர இலக்கியப் படைப்பைப்பற்றி ஸர் ஜி. ஏ. கிரியர்ஸன் கூறுகிறார்: "தமது தேசிய இலக்கியத்தைப் பற்றி ஆஸ்ஸாமியர் பெருமைப்படுவது இயல்பே. இந்தியாவில் சரித்திர இலக்கியம் வியக்கத்தக்க வகையில் அரிதாயிருப்

பதுதான் பரந்து காணப்படும் நிலே. ஆனல் இவ்வகைப் படைப்பில் ஆஸ்ஸாமியர் அடைந்துள்ள வெற்றி பிற துறைச் சாதனைகளைவிட மிக மிக உயர்வானது. புரஞ்சி களின் சரித்திர நூல்கள் அளவில் பெரியவை, எண்ணிக் கையில் மிகுதியானவை. கனவாகை மதிக்கப் பெறுவ தற்கு இன்றியமையாத தகுதி புரஞ்சிகள் தெரிந்திருப் பது.'' (இந்திய மொழிவகை ஸர்வே). சமய நூல்கள் மட்டுமின்றி வசனத்திலும் பாட்டிலுமாக வேறு பலவகை இலக்கியங்களும் அரண்மனையாதரவுடன் வெளி வந்தன. வைத்தியம், வானசாஸ்திரம், கணித விதிகள், நாட்டியம், சிற்பம் பற்றியவை அந்நூல்கள். சிருங்காரப் பாடல் களும் பாசுரங்களும் தொகுக்கப்பட்டன. கீத கோவிந்தம் பல்வேறு பாட பேதங்களுடன் இசைக்கப் பெற்றது.

சரித்திர நூல்களும் வாழ்க்கை வழி இலக்கியங்களும் அரண்மனை ஆதரவுடன் வளர்ச்சி கண்டு வருகையில், வைஷ்ணவ ஸத்திரங்களின் ஆதரவில் வேறு வகை இலக்கியமொன்றும் பிறக்கலாயிற்று. வைஷ்ணவ பக்த சிகாமணிகளின் வாழ்க்கை வரலாறுகளைக் கொண்டவை 'சரிதபுதி' என்ற இவ்வகை நூல்கள். இது நமது இலக்கியத்துக்கு முற்றிலும் புதியதோர் அம்சம். தெய்வங்களையும் தேவிகளையும் பற்றிதான் முந்திய இலக் கியங்கள் எல்லாம் கூறின. புரஞ்சிகளிலும் சரிதபுதி களிலும் முதல் தடவையாக வாழும் மனிதர்களைப் பற்றி வரைந்தனர்.

### நவீன காலம்

ஆஸ்ஸாமின் சரித்திரத்தில் 18ஆவது நூற்றுண்டின் கடைப்பகுதியும் பத்தொன்பதாம் நூற்றுண்டின் தொடக்க மும் இருண்ட காலம் எனக் கூறலாம். உட்பகைகள் மலிந்திருந்தன. தீவிர வைஷ்ணவப் பிரிவினரான மோவாமாரியர்களின் மதச் சண்டைகள் நிகழ்ந்தன. கடைசியாக 1816 முதல் 1819 வரையிலும் பிறகு 1824-

லும் பர்மியர் படையெடுத்தனர். ஆஸ்ஸாம் தன் சுதந்திரத்தை இறுதியாக இழந்தது. 1827இல் பிரிட்டிஷார் ஆஸ்ஸாமைத் தம் வசப்படுத்திக் கொண்டனர். பிரிட்டிஷ் ஆட்சியின் துவக்கத்தில் பள்ளிக்கூடங்களிலும், அரசாட்சித் துறையிலும் ஆஸ்ஸாமிய மொழி கைவிடப்பட்டது. (1837—72). மொழியின் பயிற்சிக்கும் வளர்ச்சிக்கும் உகந்த காலமல்ல அது. ஆட்சித்துறை அந்தஸ்தை ஆஸ்ஸாமிய மொழி இழந்த 1836ஆம் ஆண்டில் அமெரிக்க பாப்டிஸ்ட் மிஷனரிகள் சிலர் வந்தனர். தமது சாதனங்களின் பகுதியாக அச்சடிக்கும் இயந்திரமொன்றை அவர்கள் கொணர்ந்திருந்தனர். 1846இல் ஆஸ்ஸாமி மொழியில் "அருணோதயம்" என்ற மாத சஞ்சிகையை சிவசாகரிலிருந்து அமெரிக்க மிஷனரிகள் பிரசுரித்தனர். சமயப் பிரசுரங்களை மட்டுமின்றி பல்வேறு விஷயத் துறைகளில் பாட புத்தகங்களையும் மிஷனரிகள் வெளியிட்டனர். மிஷனரிகளின் முயற்சியும், ஸ்தல தலைவர்கள் அளித்த ஆதரவுமாகச் சேர்ந்து, 1882ஆம் ஆண்டில் மீண்டும் உரித்தான அந்தஸ்து ஆஸ்ஸாமிய மொழிக்குக் கிடைக்கச் செய்தன. இக்காலத்திய இலக்கியச் சிருஷ்டிகளைப் பற்றி 1907ஆம் ஆண்டில் புலவரும் பன்மொழி வல்லுனருமான ஸ்ரீ பி. எச். மூர் என்ற மிஷனரி எழுதியுள்ளார் :

"நவீன ஆஸ்ஸாமிய இலக்கியம் தோன்றியது பத்தொன்பதாம் நூற்றாண்டின் கடைசி அறுபது ஆண்டுகளில். கிறிஸ்துவ இலக்கியம், பிறவகை இலக்கியம் ஆகிய இரண்டுமே அப்படித்தான். பிரவுன், பிரான்ஸன், நிதி லெவி ஆகிய மூவர்தாம் ஆஸ்ஸாமிய கிறிஸ்துவ இலக்கியத்துக்கு அடிகோலியவர்கள்."

இலக்கியம் என்ற மதிப்பிற்குரிய படைப்புக்கள் இருபதாவது நூற்றாண்டின் ஆரம்பத்தில்தான் வரலாயின. கல்கத்தாக் காலேஜுகளில் மேற்கத்தியக் கல்வி பயின்ற ஆஸ்ஸாமிய இளைஞர்களின் முயற்சிகளே இதை

அளித்தன. நான்கு நண்பர்கள் 1889இல் 'ஜோனகி' (மின்மினி) என்ற மாதப் பத்திரிகையை கல்கத்தாவில் காலேஜில் படிக்கையில் தோற்றுவித்தனர். சந்திரகுமார அகர்வாலா (1858—1938), லக்ஷ்மீநாத பெஜ்பரூவா (1868—1938), ஹேம் சந்திரகோஸ்வாமி (1872—1928), பத்மநாத கோஹெய்ன் பரூவா (1871—1946) ஆகியோர் தாம் அந் நால்வரும். ஆங்கிலக் காதல்—கவிதா இயக்கத்தின் சில அம்சங்கள் அதில் இடம் பெற்றன. நவீன ஆஸ்ஸாமிய இலக்கியத்தின் மறுமலர்ச்சி ஊற்று தேசிய உணர்வு. இந்த எழுத்தாளரும் இவர்களது வட்டத்தினரும் இயற்றிய இலக்கியத்தில் இந்த உணர்வு பல உருவ அமைப்புக்களில் வெளி வந்தது. மென்மையான இசைக் கவிதைகளை மட்டுமின்றி, உணர்ச்சியூட்டும் தேசபக்தப் பாடல்களையும் விருவிருப்பு நிறைந்த வருணனைக் கவிதைகளையும் அவர்கள் புனைந்தனர். இலக்கிய, சமூக, மத விஷயமான கட்டுரைகளை வரைந்தனர். சிறு கதைகள், நாடகங்கள், நாவல்கள் இயற்றினர். சரித்திர ஆராய்ச்சியிலும், நாட்டுப் பாடல்கள், நாட்டுக் கதைகள் ஆகியவற்றின் சேகரத்திலும் அவர்கள் ஆர்வ மிகுதியுடன் காணப்பட்டனர்.

### மறுமலர்ச்சிக் காதல் இயக்க முதல்வர்

ஆங்கில இலக்கியந்தான் இந்த வகைக் கவிஞர்களுக்கு ஊக்கமளித்தது. காதலையும் அழகையும் பற்றிய கவிதைகளை இவர்களெல்லோரும் இயற்றியிருக்கிறார்கள். இவர்களில் லக்ஷ்மீநாத பெஜ்பரூவா பலதுறைப் படைப்பினராக விளங்கினார். அவர் தலைசிறந்த கவி, மகத்தான கட்டுரை அமைப்பாளர், புகழ் பெற்ற பத்திரிகையாளர். சம்பிரதாயக் கட்டுத் திட்டங்களைத் தகர்த்தெறிந்து அவர் கவிதை செய்தார். புதிய நோக்குடன் எழுதினார்; அத்துடன் புதிய வடிவங்களையும் சொற் சித்திரங்களையும் உண்டுபண்ணினார். காதல் கீதங்கள், இயற்

கைக் கவிதைகள், வருணனைப் பாக்கள், உலாக்கள் முதலியன அவரது சிருஷ்டிகளில் முதன்மையானவை. "அமர ஜன்ம பூமி", "மோர் தேசா", "ஆஸாம் சங்கீத்", "பின்பராகி" போன்ற தேசபக்தப் பாடல்களிலும் கவிதைகளிலும் அவர் ஆஸ்ஸாமியப் பண்பாடு, சரித்திரம் ஆகியவற்றின் கீர்த்தியையும் உயர்வையும், ஆர்வ மிகுதியுடன் அன்பு நிறைந்தவராக வியந்து புகழ்ந்திருக்கிறார். பழம் பெருமையைப் பற்றிய லட்சிய நினைவுகள் பெஜ்பரூவாவின் தேசிய உணர்ச்சிகளை ஊக்குவித்தன. ஆஸ்ஸாமின் எதிர்கால வளர்ச்சியில் வரம்பு கடந்த நம்பிக்கையைத் தெரிவித்து அவர் எழுதினார். ராஜீயத் துறையில் மட்டுமின்றி, வாழ்க்கை வசதிகளிலும், அழகுணர்ச்சியிலும், அறநெறியிலும் அது ஏற்றம் காணும் என்று அவர் நம்பினார்.

தேசபக்திப் பாட்டிசைத்த மற்றொரு எழுத்தாளர் கமலாகாந்த பட்டாசாரியா. மறதியுற்றுத் துயிலில் ஆழ்ந்திருந்த சமுதாயத்தைத் தட்டி எழுப்பி, பழைய பண்பாட்டின் அருமை பெருமைகளை உணர்த்துவதுடன் அவர் நிற்கவில்லை. நாட்டில் ஜனநாயக ஆட்சி முறை ஏற்பட வேண்டிய அவசியத்தை அவர் வலியுறுத்தினார். "சிந்தா" (உக்கிரமான சிந்தனைகள்) "சிந்தா தரங்கா" (சிந்தனை அலைகள்) என்பவை கமலா காந்தரின் கவிதைத் தொகுப்புக்களில் குறிப்பிடத்தக்கவை. விடுதலையற்ற வாழ்வும், அதன் விளைவாக நாடு படும் அல்லல்களும் அவரைப் பெரிதும் வருத்தின.

"பிரதிமா" (பொம்மை), "பின் பராகி" (குழல் சித்தன்) என்ற இரண்டு தொகுப்புக்களில் சந்திர குமார அகர்வாலா எழுதிய பல மென்மையான பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அகஸ்ட் காம்டே என்ற பிரெஞ்சுத் தத்துவ ஞானியும், பூஜைக்கு உகந்தது மனித வர்க்கமே என்ற வைஷ்ணவக் கருத்தும் அவரது சிந்தனைகளை உருவாக்கியிருப்பதை இப்பாடல்களில் காணலாம். ஆத்

மார்த்தான கருத்துக்கள் கொண்டவர்கள் துர்க்கேசுவர சர்மா, நீலமணி பூக்கன் என்ற இரண்டு கவிகளும். துர்க்கேசுவர சர்மா ஒரு தத்துவ ஞானக் கவி. வாழ்வும், ஆண்டவனது சந்நிதானமும், பரிபக்குவத்தை நாடி அமைதியற்று அலையும் ஆத்மாவுந்தான் அவரது நித்திய விசாரமாக இருந்து வருபவை. நீலமணி பூக்கனது கவிதைகளில் உணர்ச்சி வேகத்தைவிட கருத்துச் செறிவு அதிகம். கவியின் சௌந்தரிய தாகத்தை மானஸீ (மதியழகு) யில் காணலாம். சத்தியத்தையும், சௌந்தரியத்தையும் நாடும் அமரத் தேட்டமே அவரது ஸந்தனி (தேட்டம்). ஆகஸ்ட் புரட்சியில் கலந்துகொண்டதற்காக 1942இல் பூக்கன் சிறைப்பட்டார். ஜிஞ்ஜிரி (விலங்குகள்) என்ற நூலில் அவரது அக்காலத்து அனுபவங்களைக் காணலாம்.

ஹிதேசுவர பர்பரூவா ஆங்கில இலக்கியம் படித்தவர். ஷேக்ஸ்பியர், வேர்ட்ஸ்வொர்த், மில்டன் இலக்கியங்கள் வசப்பட்டவர். எதுகையில்லாப் பாட்டமைப்பு, சானெட் என்ற பாடல் வடிவம், இரங்கற் பா முதலியவை அவர் அளித்த இலக்கிய வகைகள். மைக்கேல் மதுசூதனதத் காட்டிய வழியையும் தாண்டிச் சென்று ஷேக்ஸ்பியரின் முறைகளைத் தழுவி எதுகையற்ற பாடலமைப்பை அவர் உருவாக்கினர். அவரது காவியங்களில் "கமட புரத்து வம்ஸம்" (1912), "யுத்த க்ஷேத்திராத் ஆஹோம் ரமணி" (போர்க் களத்தில் ஆஹோம் வீரப் பெண்மணி) ஆகிய இரண்டும் ஆஹோம் வரலாற்றிலுள்ளவை. இரண்டுமே வீரவுணர்ச்சி ததும்பும் காவியங்கள். பர்பரூவாவின் வீரிய மிக்க நாட்டுப் பாடல்கள் ஆஸ்ஸாமியில் பழமொழிகளாகிவிட்டன:

தந்தையர் நாட்டின் விடுதலைப் போரில்
களபலியாவோன் இன்ப மெய்துவான்,
மரணம் என்பது மாளா ஓய்வு,
இன்ப நிறைவுடன் பிரபஞ்ச அன்னையின்

மடிமிசைத் தவழ்வான்,
தித்திக்கும் நிலவாகும் தீ,
மண்ணின் மஞ்சம் மலர் மஞ்சமாகும்,
உடலைத் துளைத்துக் குத்தும் ஈட்டிகள்
அவன் மீது பொழியும் மலர் மாரியாமே.

இந்தக் காலத்துக் கவிஞர்களில் ருசிகரமான மற்றொருவர் அம்பிகாகிரி ராய் சௌதுரி. கவி, பாடகன், இசையமைப்போன், பத்திரிகையாளன், ராஜீயக் கிளர்ச்சிக்காரன், தேசபக்தன் என்று மக்கள் அறிந்தவர் அம்பிகாகிரி. இளமையில் மென்மையான காதல் கீதங்களை அவர் இயற்றினர். துமி (நீ) என்ற அவரது அகப்பொருள் காவியம் முதலில் 1915இல் வெளியானது. பத்து அசைகள் கொண்ட மூவடுக்கு வரிகளாக அது புனையப் பெற்றது. மென்மை, சந்த இனிமை, மிருதுவான இசையமைப்புள்ள இணையற்ற பாடல். அழகும் புலனுணர்ச்சி மிகுதியும் உள்ள பாவைத் தோற்றங்களே 'துமி'யில் கவிஞனை கண்டு வழங்கியிருப்பவை. ஆனல் வாழ்க்கையின் பிற்பகுதியில் விடுதலைப் போரில் ஈடுபாடும் சிறைவாசமும் கிட்டியதால், வாழ்க்கையைப் பற்றியும் கவிதையைப் பற்றியும் அவரது மனப்பாங்கு பெரிதும் மாறிவிட்டது. இப்பொழுது அம்பிகாகிரி பெரும்பாலும் வல்லமை மிகுந்த அரசியல் கவிதைகளையே இயற்றுகிருர்.

இந்தக் காலத்துக் கவிஞர்களில் முக்கியமான ஒருவர் ரகுநாத சௌத்ரி. 'பிஹாகி–கவி' (பறவைக் கவிஞர்) என்று அவரை மக்கள் அறிவர். 'ஸதரி' (இனியவள்) என்பது அவரது முதல் கவிதைத் தொகுப்பு. பறவைகளும் மலர்களும் அவருக்கு மிகப் பிடித்தமானவை என்பதை இது புலப்படுத்தியது. இரண்டு நீளமான பாடல்களை பிறகு அவர் தனித்தனியாக வெளியிட்டார். 'கெடேகி' (குயில்) என்பது ஒன்று. 'தஹி–கடாரா' (வாலாட்டி) என்பது மற்ருென்று. பறவையபிமானம் அவரது மனதில் வேரூன்றிக் கிடந்ததை இவற்றிலிருந்து

அறியலாம். பறவையின் தோற்றம் உலகிற்கு ஒரு புதுப் பிறப்பு என்பதுதான் கெடேகியின் மையமான கருத்து. கெடேகியின் கானம் உருவில்லா மகிழ்ச்சி, மனிதன் அறிந்திராத இன்ப மயமான லய ஐக்கியச் சிறப்பு நிலை. தன்னை ஈர்த்த இயற்கையின் வனப்பை இந்தக் கட்டுக் கோப்பில் வைத்து விவரிக்கிறான் கவிஞன். இந்த வருணனைகளில் காளிதாஸனது செல்வாக்கைக் கணிசமாகக் காணலாம்.

ஜதீந்திரநாத் துவாராவின்[1] நூல்களில் நெறி முறைக்கு ஒவ்வாத அவநம்பிக்கை–மிகுதியின் இழிநிலைக் கவர்ச்சியை முழுமையில் காணலாம். அவரது சொந்த உணர்ச்சிகள், முரண்பாடு நிறைந்த மன நிலைகள், பறந்தோடும் காதல், ஆசாபங்கத்துடன் கூடிய மனக்கிளர்ச்சி ஆகியவை அவரது எழுத்துக்களில் பதிவாகியுள்ளன. சொல்லினிமை, சந்த அழகு, புதுமை கமழும் இயற்கைக் காட்சிகளின் வளமை ஆகியவற்றை ஆஸ்ஸாமிய கவிதா இலக்கியத்துக்கு துவாரா அளித்துள்ளார். ஆறு, படகு, படகோட்டி ஆகியவற்றை வைத்துக்கொண்டு தமது கற்பனைச் சித்திரங்களில் பலவற்றை அவர் வரைந்துள்ளார். ஜதீந்திரநாதின் ஆரம்ப நூல்களில் ஒன்று 'ஓமர்தீர்த்தம்' (1926). கய்யாமின் ருபையாத், ரமணீயமாகவும் மிகுந்த மென்மையுடனும் இதில் வடித்துத் தரப்பட்டுள்ளது. அவரது வசன காவியங்களும் (கதா கவிதா) பிரபலமானவை. ஆஸ்ஸாமி மொழியில் இந்த உத்தியை வெற்றிகரமாகக் கையாண்ட ஒரே எழுத்தாளர் அவர் தாம்.

ரத்தினகாந்த பார்க்ககடியின் கவிதைகளில் அன்

1. 'வனபுல்' (காட்டுப் பூ) என்ற அவரது புத்தகம் நாடு விடுதலையடைந்த பிறகு ஆஸ்ஸாமியில் வெளியான நூல்களில் மிகச் சிறந்தது என்று கருதப்பட்டு சாகித்திய அக்காதெமியின் பரிசைப் பெற்றது.

பின் மிருதுவான உணர்ச்சி மிக அழகாகவும், இசையின் பத்துடனும் ததும்பக் காணலாம். டாகுரைப் படித்து ரத்தினகாந்த சிறிது நன்மையடைந்திருப்பதாகத் தெரி கிறது. முக்கியமாக சந்த அமைப்பில் இதைக் காண லாம். பா—அமைப்பில் ஆஸ்ஸாமிய மொழியில் தேவ காந்த பரூவா ஓர் அற்புதத்தையே நிகழ்த்தியுள்ளார். தமது காதல் கவிதைகளை நாடக பாணியிலுள்ள தனி யுரைகளில் அவர் வார்த்துப் படைத்திருக்கிறார். ராபர்ட் பிரவுனிங் கையாண்ட உத்தியைப் போன்றது இது.

திம்பேசுவா நியோக், வினந்த சந்திர பரூவா ஆகிய இருவரும் சக்தி வாய்ந்த நாட்டுப் பாடல் தொடர்களை இயற்றினர். பெரும்பாலும் ஆஸ்ஸாமின் பழம் பெருமை களையும், தற்காலச் சிறுமையையும் ஒப்பிட்டுக் காட்டி அவர்கள் எழுதினர். பழமையை அவர்கள் கிளறுவது, இன்றும் இனியும் வளமுடன் வாழ்வதற்கான தைரியம், உற்சாகம், உள்ளொளி பெறுவதற்காகத்தான். பழைய உத்தமர்களையும், நாரீமணிகளையும் நினைவு கூர்ந்து, அவர்களது உதாரணங்களைப் பின்பற்றி, அந்நிய ஆட் சித் தளைகளையும் மிடிமையையும் தகர்த்து, வாழ்வின் எல்லா அம்சங்களிலும் ஏற்றம் கண்ட, வளம் மிகுந்த ஆஸ்ஸாமை உருவாக்க வேண்டுமென்று கோருகின்றனர். மொழி, இலக்கியம், பண்பாடு, பொருளாதார வாழ்வு— எல்லாமே புதிய சக்தியுடன் திகழச் செய்யவேண்டும். ஆனால் அனல் கக்கும் தன்மையுள்ள தேச பக்தக் கவி தைகளை பிரஸன்னலால் சௌதுரியின் பாடல்களில்தான் காணலாம்.

இந்த அரை நூற்றாண்டில் பல பெண் எழுத்தாளர் தோன்றினர். அவர்களில் நளினிபாலா தலை சிறந்த மேதை யெனலாம். நளினிபாலா ஆத்மானுபவம் பெற்ற கவிமணி. விவரிக்கவொண்ணாத மனக்கிளர்ச்சி. இலக்கண வரம்பில் பிடிபடாத ஏதோ ஒன்றின்பால் அடங்காத ஆசையுள்ள்வர் நளினிபாலா. "ஸந்தியா ஸுர்"

(அஸ்தமன இசை) "ஸபோனு ஸுர்" (கனவுலக இசை), பரஷ்மனி (கவசம்) ஆகிய அவரது மூன்று கவிதைத் தொகுப்புகளிலும் ஒரே விஷயம் மையப் பொருளாக அமைந்துள்ளது. வாழ்க்கையின் துக்கமும் கஷ்டமும் சல்லடையாகத் துளைத்துவிட்ட இருதயத்தின் ஆழ்ந்த உணர்ச்சி வெள்ளம் அவரது கவிதைகள் அனைத்திலும் பெருக்கெடுத்து ஓடுகிறது. தம்மேசுவரி தேவி பரௌனி மற்ருெரு கியாதி வாய்ந்த பக்திக் கவிஞர். அவரது கவிதைகள் இரண்டு தொடர்களாக வெளிவந்துள்ளன. அவை புலார் ஸராய் (புஷ்பக் கடை), "பிரானர் பரஷ்" (ஆத்த ஸ்பரிசம்) என்பவை. இவையிரண்டும் பக்தி மார்க்கத்திலும், ஜீவாத்மா பரமாத்மாவுடன் ஐக்கியமாவதற்கு ஆசைப்படுவதிலும் ஆழ்ந்த நம்பிக்கையைத் தெரிவிப்பவை. இளவயதினரான இன்றைய வசன கவிதா எழுத்தாளர்களான பெண்களில் ஸுப்பிரபா கோஸ்வாமி, பிரீத் பரூதா, லக்ஷ ஹீராதாஸ், ஸுசி விதா ராய் சௌதுரி ஆகியோர் விசேஷமாகக் குறிப்பிட வேண்டியவர்கள்.

### யுத்த–பிற்கால கவிதை

சென்ற உலக யுத்தத்துக்குமுன் ஆஸ்ஸாமியக் கவிதையில் தெய்வீகமான காதலும், மானிடக் காதலும் இயற்கையும், நாட்டுப் பற்றுந்தான் பிரதான விஷயங்களாக விளங்கின. யுத்தகாலத்திலிருந்து நமது கவிகள், முக்கியமாக இளவட்டத்தினர், சோஷலிஸ்ட், மார்க்ஸீய சித்தாந்தங்களுடன் அதிகப் பரிச்சியமுள்ளவர்களாகி விட்டனர். வாழ்க்கை எளிமையும் மிருதுத் தன்மையும் உள்ளது என்று அவர்கள் இப்பொழுது கருதவில்லை. அது சிக்கல்கள் மிகக்கொண்டது, முரண்பட்ட பிரச்சினைகள் நிறைந்தது என்பதைக் காண்கிருர்கள். அவர்களுடைய கவிதைகள் இந்த முரண்பாடுகளைப் பற்றியனவாகத்தான் இருக்க முடியும். வாழ்க்கையின் பல்வேறு மாறுபட்ட நிலைகள்,

அவற்றின் ஹாஸ்யமும், சோகமும்கூட, கருத்தாழமுள்ள கவிதைகளிலும் இசைவான வகைகளில் இணைந்து காணப்பெறுகின்றன. தமது புதிய தேவைகளுக்கு ஐரோப்பிய சங்கேத—வாதிகளின் தத்துவத்தையும், உத்திகளையும் இந்த இளம் கவிஞர்கள் நாடுகின்றனர். அவர்களில் ஒரு சிலரது போக்கை உருவாக்கினவை டி. எஸ். எலியட்டும், நவீன வங்கக் கவிஞர்களான புத்த தேவபோஸ், ஜீவானந்தாஸ, அமீயா சக்ரவர்த்தி போன்ரேரின் படைப்புக்கள். ஆஸ்ஸாமிய எழுத்தாளரில் பலர் கல்கத்தா காலேஜுகளில் படித்தது, அல்லது வங்கக் கவிதையை ஆழ்ந்த அனுதாபத்துடன் சுவைத்ததே இதற்குக் காரணம். முதலாளித்துவச் சுரண்டல், வர்க்கப் போர், சமுதாய அமைப்பில் துரிதமான மாறுதல்களின் அவசியம் போன்ற விஷயங்களைப் பற்றி இந்தக் கவிஞர் கள் பிரஸ்தாபித்துள்ளனர். ஒரு புதிய சமுதாய அமைப்பி னின்று எழும் சிக்கலான ஆண்—பெண் பிரச்னைகளும், மனதின் உள்ளுணர்வு தோற்றுவிக்கும் சிடுக்குகளும் இந்தப் புதிய கவிதையில், கேட்டிராத பரிபாஷையில், பழக்கப்படாத சொல்லாட்சியுடன் தென்படுகின்றன. விஞ்ஞானத்திலும் உளநூல்களிலுமிருந்து புதிய சொற் களை எடுத்து இதற்காகக் கையாண்டிருக்கிருர்கள். எனவே, விஷயத்தில் மட்டுமின்றி வடிவத்திலும் இந்தப் புதிய கவிதை மிகப் புதிதாகவே காணப்படுகிறது. சம்பிரதாயக் கவிதா வடிவங்களையும், உத்திகளையும்கூடப் புறக்கணித்துவிட்டு, எதுகையில்லாத பாடல் முறை போன்று பாடலமைப்பிலும் விருப்பப்படி மாறுதல்களைச் செய்திருக்கிருர்கள். அவர்களுடைய கற்பனையும் புதிது. சம்பிரதாய உருவகங்களைப் பயன்படுத்துகையில் அசாதா ரணமான வியாக்கியானம் அவற்றிற்குத் தரப்படுகிறது.

சங்கேதக் கவிதை என்ற வகையைப் பிரபலப்படுத்தி யதில் ஹேம் பருவா வழிகாட்டி எனச் சொல்லலாம். அவரது கற்பனைகள் புதுமையானவை. வஞ்சப் புகழ்ச்சி

யாக முரண்பாடுகள் வழங்கப் பெறுவது இதன் அம்சம். இது திடும்பிரவேசமாகக் கிளம்பியுள்ள அசாதாரண நடைமுறை. இத்தகைய வழிகளை நவகாந்த பரூவாவும் கையாண்டு பரீட்சை பார்த்திருக்கிறார். "ஹே அரண்ய, ஹே மகாநகர்", என்ற அவரது கவிதையில் சொல்லாட்சி விசித்திரமானதோர் கலப்படம். பழகு மொழியில் கடுமையான ஸம்ஸ்கிருதச் சொற்களைச் சேர்த்து வழங்குகிறார். சிக்கலான கற்பனைச் சித்திரங்களுடன் கூடிய புதிய கவிதா உத்திகள் இதனுடன் பிணைத்துவிடப் பட்டுள்ளன. நவகாந்த பரூவாவும் மகேந்திர போராவும் ஒரு சாதாரண அணி–இலக்கண உத்தியைக் கையாள்கிறார்கள். ஆங்கிலம், ஸம்ஸ்கிருதம், ஆஸ்ஸாமி நூல்களிலிருந்து, அவற்றின் மூலமுடுக்குகளிலிருந்து, எவரும் சந்தேகிக்கக் கூடாதவகையில் மேற்கோள்களை எடுத்துச் சேர்க்கிறார்கள். அடுத்துவரும் வரிகள் அவற்றிற்கு உரை வழங்குவனவாக அமையும்.

இந்தப் புதுமைக் கவிதையின் வளர்ச்சிக்கு சஞ்சிகைகள் பேருதவி புரிந்துள்ளன. "ராமதனு" (வானவில்) என்ற மாசிகைமூலம் இளம் எழுத்தாளர் ஒரு குடும்பத்தினர் போல இணைகின்றார்கள். ராஜீய, சமூகப் பிரசார சாதனம் என்று இலக்கியத்தை இவர்கள் மதிக்கிறார்களாகையால் யாப்பிலக்கணத்தைப் பொருட்படுத்தாமல் எழுதுகிறார்கள். எனவே இவர்களது பாக்கள் பத்திரிகை மோஸ்தருக்கு மேல் உயருவதில்லை. எழுதுவதை பழைய கவிஞர்கள் அநேகமாக நிறுத்திவிட்டார்கள். இளம் கவிகள் இன்னும் பரீட்சைசெய்து பார்க்கும் கட்டத்திலேயே இருந்து வருகிறார்கள். தற்கால ஆஸ்ஸாமியக் கவிதா நிலவரத்தில் இது மிகமிக வருந்தத்தக்க அம்சம். உண்மையில் கவிதை என்று கருதக்கூடிய புதுவகைப் படைப்பு ஆஸ்ஸாமிய மொழியில் இனிமேல்தான் ஏற்பட வேண்டும்.

**நாடகம்**

நாடகம், நாடக மேடை ஆகிய இரண்டிலுமே ஆஸ்ஸாமிய மொழியில் வளமான பரம்பரை உண்டு. 'அங்கீய நாட்' என்ற மத்தியகால நாடக அமைப்பு இன்னும் கிராமங்களில் கவர்ச்சியுள்ள பொழுதுபோக்காக இருந்துவருகிறது. ஆனால் நவீன நாடகமுறை மேலை நாடுகளிலிருந்து வந்ததுதான். மேலைநாட்டுப் பாணியில் ஆஸ்ஸாமியில் நாடகம் இயற்றியவர்கள் குணபிராம பரூவா, ஹேமசந்திர பரூவா, ருத்திர ராம பார்தோலாய் ஆகியோர். பெஜ்பரூவாவின் நாடகங்களில் தேசபக்த உணர்ச்சி மேலோங்கி நிற்கும். "சக்ரத்வஜ சிம்ஹா" என்ற நாடகத்தில் ஆஸ்ஸாமிய வரலாற்றில் புகழ்மிகுந்த காலமொன்றை அவர் சித்தரிக்கிறார். சக்ரத்வஜ சிம்ஹா என்ற ஆஹோமி மன்னரின் ஆட்சிக்காலம் (1663–1669), இந்நாடகத்தின் நிலைக்களம். ஆஸ்ஸாம்மீது அடுத்தடுத்து வந்த முகம்மதியப் படையெடுப்புக்களை முறியடித்து தோற்கடித்தனர். லாத்வர பூக்கன் தலைமையில் இது நடந்தேறியது. ஆஸ்ஸாம் மீது நடைபெற்ற பர்மியப் படையெடுப்பை (1816) விஷயமாகக் கொண்டது "பெளி-மார்" (சூரிய அஸ்தமனம்) என்பது. அக்காலத்து நிகழ்ச்சித் தொடர்களை வகைப்படுத்தித் தருவதுடன் ஆஸ்ஸாம் தன் சுதந்திரத்தை இழப்பதில் கொண்டுபோய் விட்ட ஆஹோமிய மன்னராட்சியின் சீரழிவுச் சூழ்நிலை அதில் பரிமளிக்கிறது. 'ஜயமதி' என்ற மற்றொரு சரித்திர நாடகத்தில் தரப்படுவது வரலாறு மட்டுமல்ல; நாகரிக மெருகு ஏறாத தலீமி என்ற ஒரு நாக அழகியை மைய மாகக் கொண்டு அற்புதமான காதலும் அதில் சேர்த்து இழைக்கப்பட்டிருக்கிறது. லக்ஷ்மீநாதரின் கேலி நாடகங்களில் நையாண்டியும் உல்லாசமான நகைச்சுவையும் மிகுதியாக இருக்கும்.

வசனம், கவிதை ஆகிய இரண்டிலும் திறம்படைத்த பெரிய எழுத்தாளர்களில் பத்மநாத கோஹெய்ன்

பருவா ஒருவர். சரித்திர, புராணக் கதைகளை வைத்துக் கொண்டு அவர் நாடகங்களை இயற்றியுள்ளார். மூன்று பரிகாச நாடகங்களையும் அவர் வரைந்துள்ளார். 'ஜயமதி' (1900) கதாதர் (1907), சாதனி, (1911) லசித் பூக்கன் (1915) ஆகிய நான்கு நாடகங்களும் ஆஹோம் வரலாற்றை அடிப்படையாகக் கொண்டவை. நாடகக் கதையை உருவாக்குவதில் சொற்கட்டையோ, புது மனப் பான்மையையோ அல்லது புத்தொளி வீசச் செய் வதையோ அவர் கவனிக்கவேயில்லை. அநாவசியமான உணர்ச்சிப் பெருக்கு, மறைபொருட்களின் வருணனை, இயற்கையிடம் பரிவு, பயனில்லாத உரையாடல், பொருத்தமில்லாத ஹாஸ்யக் காட்சிகள் போன்றவை காரணமாக இந்த வரலாற்று நாடகங்களின் கதை-வளர்ச்சி பாதிக்கப்பட்டுள்ளது. சாமானிய மக்களையும் நாட்டுப் புறக் காட்சிகளையும் சித்தரிப்பதில் கோஹெய்ன் பருவா சமர்த்தராகக் காணப்படுகிறார். 'கால்புரா' (கிராமத் தலைவன்) வில் அவரது திறன் மேலோங்கிக் காணப் பெறுகிறது. இந்தக் கேலிக்கூத்து பிரிட்டிஷ் ஆட்சி யானது 19-வது நூற்றாண்டின் கடைசிப் பத்தாண்டுகளில் எவ்வாறு இருந்தது என்பதை அப்படியே காட்டுகிறது. தீனபந்துமித்திரா வங்கத்தில் இயற்றியுள்ள 'நீல தர்ப்பன்' என்ற நாடகத்தைப்போல 'கால்புரா'வும் ஒரு நோக்கத்துடன் எழுதப்பெற்ற நாடகம். இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆஸ்ஸாமிய நாடகத் துறையின் வளர்ச்சிக்கு இது பேருதவியாக அமைந்தது. பொறுப்பும் வேலைப் பளுவும் கூடிய, ஆனால் சம்பளமில் லாத கிராமத் தலைமைப் பதவியை வகிப்பவனின் பரிதாப வாழ்க்கையைச் சித்தரிக்கிறது, இந்த நாடகம். பதவிப் பொறுப்பில் தீவிரமாக ஆழ்ந்துவிட்டதன் காரணமாக அவனது சொந்த விவகாரங்கள் பாழாகின்றன. சன்மானம் எதுவுமில்லை என்பது மட்டுமல்ல, தணிக்கை வரிசையில் உள்ள சிறிய, பெரிய சர்க்கார் அதிகாரிகள்

எல்லோரின் நிந்தனைக்கும் அவமதிப்புக்கும் அவன் உள்ளாக நேரிடுகிறது.

சந்திரதர பரூவா நாடு நன்கறிந்த மற்ருெரு நாடகாசிரியர். ‘மேகநாத வதம்’ (1904) ‘திலோத்தமா சம்பவம்’ இரண்டும் அவரது புராண நாடகங்கள். தளையில்லாச் செய்யுள் வடிவில் அவை இயற்றப் பட்டுள்ளன. முதல் நாடகம் இந்திரஜித்தின் வதத்தைப் பற்றியது. சுந்தன், உபசுந்தன் ஆகிய இருவரும் திலோத்தமையை அடையப் போட்டி போட்டு மாண்ட கதை இரண்டாவது நாடகம். மைக்கேல் மதுசூதன தத்தரின் செல்வாக்கை கதையமைப்பிலும் குணசித்திர வகையிலும் இந்த நாடகங்களில் காணலாம். ‘பாத்ய பரீக்ஷயா’ (விதி செய்த முடிவு) என்ற கேலிக்கூத்தில் விதி பெரிதா, செல்வம் பெரிதா என்பதைப்பற்றி நகைச்சுவை ததும்ப விசாரணை செய்து முடிவு காணப் பார்க்கிருர் நாடகாசிரியர். தக்க சூழ்நிலைகளில், மக்கள் பேசும் அன்ருட மொழி வகையை வைத்துக்கொண்டு, கிராம வாழ்க்கையின் பல்வேறு தோற்றங்களை இங்கு மிகத் திறம்படக் காட்டுகிருர் ஆசிரியர். கருத்தாழமுள்ள நாடகங்களைவிட கேலிக்கூத்துக்களை உருவாக்குவதில் தான் இக்காலத்து நாடகாசிரியர்கள் அதிக வெற்றி கண்டிருக்கிருர்கள். இவற்றில் மித்திர தேவ மஹந்தாவின் ‘பிய பிபர்யாய’, ‘குசிரிகணர் ஆத்மங்கல’ ஆகிய இரண்டும் கதை விஷயத்தின் உல்லாச அமைப்பு, ரசமான உரையாடல், ஹாஸ்யக் காட்சிகள் காரணமாக பெருவெற்றி அடைந்தன.

அகில இந்திய ரீதியில் விடுதலைக்கான தேசிய இயக்கம் தலைதூக்கியபோது சரித்திர நாடகங்கள் நிறைய வெளிவரலாயின. வளம் மிகுந்த ஆஸ்ஸாமியச் சரித்திர நிகழ்ச்சிகள், நாடகம் கதையாக்குவதற்குத் தயாராக்கக் கிடைத்தன. நகுல சந்திர பூயன் இயற்றிய ‘பதன்பர் பூக்கன்’, பிரசன்னலால் சௌதுரியின் ‘நீலாம்பர்’,

சைவதர ராஜஹோவாவின் 'ஸ்வர்க்க தேவப் பிரசாத சிங்', தைவசந்திர தாலுக்தாரின் 'பாஸ்கர வர்மன்' ஆகியவை, இந்நூற்ருண்டின் ஆரம்பத்தில் நடிக்கப் பெற்ற உணர்ச்சி மிகுந்த நாடகங்களில் ஒரு சிலவாகும். திறமும், கல்வியும் நிறைந்த ஓர் உயர்ந்த புருஷனை 'பாஸ்கர வர்மன்' நாடகத்தில் தாலுக்தார் அளிக்கிருர். நேருக்கு நேர் நடப்பதுபோல, ஜீவகளை ததும்ப சரித்திரச் சூழ்நிலைகளை அவர் உருவாக்கித் தந்துள்ளார். ஆஸ்ஸாமிய நாடக அரங்கிற்கு வேண்டிய நாடகங்களை எழுதிக் கொடுத்தவர், ஆதுல் சந்திர ஹஜாரிகா. அவருக்கு முன் வங்க நூலாசிரியர்களின் படைப்புக்கள் தாம் ஏகபோகமாக இருந்துவந்தன. பிறர் கை பார்க்கும் நிலையை ஒழித்துவிட்டார் ஹஜாரிகா.

நாடு விடுதலை எய்தியபின் புரட்சிகரமான, நாட்டுப் பற்று மிகுதியாக உள்ள சரித்திர நாடகங்கள் மேலும் வரையப் பெற்றுள்ளன. சந்திரகாந்த பூக்கனின் 'பியாரி பூக்கன்', பிரவீன் பூக்கனின் 'மணிராம திவான்' ஆகியவை பத்தொன்பதாம் நூற்ருண்டுத் தேசபக்தர்கள் இருவரைப்பற்றியவை. பிரிட்டிஷாரை விரட்டிவிட்டு தேசத்தை விடுவிக்கும் இரகசியச் சதிகளில் அவர்கள் ஈடுபட்டனர். துரதிருஷ்டவசமாக அவை வெளியாகி, இருவரையும் விசாரணையின்றி தூக்கிலிட்டு விட்டார்கள். 'குசல கோவார்' சுரேந்திர நாத் சைகியா இயற்றிய நாடகம். 1942 ஆகஸ்டு இயக்கத்தில் வீரசுவர்க்க மெய்திய குசல கோவாரின் வாழ்க்கையைப் பற்றியது, இந்நாடகம். இதுவும் கணிசமான வெற்றி கண்டது. கமலானந்த பட்டாச்சாரியா ('நாககோலார்') ஜோதி பிரசாத் அகர்வாலா ('சோலித்குவாரி', 'சுரேங்கர் விகிரி') ஆகியவை கற்பனை மிகுந்த காதல் நாடகங்கள். நவீன ஆஸ்ஸாமிய நாடகவுலகின் சரித்திரத்தில் முதலிடம். ஜோதி பிரஸாத் அகர்வாலாவுக்கு உண்டு. அவர் தேசபக்தர்; தலைசிறந்த கவி; காவிய நாடகம் இயற்றி

யுள்ளார். அவர் ஐரோப்பாவில் பயிற்சி பெற்றவராகை யால் அவரது பாடல்களில், மெட்டுகளில், நாடக உத்தி களில் அயல் நாடுகளின் செல்வாக்கைக் காணலாம்.

### நாவல்

இருபதாம் நூற்றுண்டுக்கு முன் ஆஸ்ஸாமிய இலக்கியத்தில் நாவல்கள் என்று கருதக்கூடிய நூல்கள் இல்லையெனலாம். கற்பனைத் திறனுடன் எல்லாத் தகுதி களும் கொண்டதான நாவலை வசனத்தில் முதலில் இயற்றியவர் ரஜனி காந்த பார்தொலாய். அவரது கதைகளின் மூலங்கள் 'புரஞ்சி'கள். ஆனால் 1895-ல் எழுதப்பெற்ற மீரிஜியாரி (மீரி மங்கை) என்ற அவரது முதல் நாவல் சரித்திர நவீனமன்று. ஒரு மீரி இளைஞ னுக்கும், மீரி யுவதிக்குமிடையே தோன்றிய காதலை அது சித்தரிக்கிறது. இதன் நிலைக்களம் சுபஸ்ரீ நதிக்கரை. இந்த மானிட சோகக் கதையில் இந்நதி வெறும் பின்னணியாக மட்டும் இராமல் கதையில் விறுவிறுப்புடன் பங்கு பற்றுகிறது. நவீன ஆஸ்ஸாமிய இலக்கியத்தின் ஆரம்பதசையில் மலைஜாதிகளின் வாழ்க்கையும், இயற்கை யின் உயிரோவியங்களும் அதை வழக்கத்துக்குப் புறம்பான வகையில் வளப்படுத்தியுள்ளன. காதலைப் பிரதானமாகக் கொண்ட மனோமதி (1900) ரஹதாய் லிகிரி (1930) என்பவையும் பார்தொலாயின் நாவல்கள். ஆஸ்ஸாம் மீது நடைபெற்ற பர்மியப் படையெடுப்பை விஷயமாகக் கொண்டவை இவ்விரண்டும். பதினெட்டாம் நூற்றுண்டின் அரசியல் இயக்கமொன்றை மையமாக வைத்துப் புனையப் பெற்றது 'தண்டு வா துரோஹ்' என்ற அவரது மூன்றுவது நூல். தமது சொந்த நாட்டில் மலையழகையும் அடிவாரத்தின் எழிலையும் அள்ளிப் பருகி ஆஸ்ஸாமிய சரித்திர நாவல்களை இயற்றும் ஆர்வத்தைத் தமக்கு அளித்தவை ஸர் வால்டர் ஸ்காட், பங்கிம் சந்திர சாட்டர்ஜி ஆகியோரின் நூல்களே என்று

இந்த நாடகத்தின் முகவுரையில் அவர் எழுதியிருக்கிருர். பண்டைய வீரர்களின் புகழும், நாட்டில் பரவியிருந்த வைணவத்தின் உயர் நலங்களும் பார்தொலாயின் படைப்புகளில் அறிவியல் தொனிக்கச் செய்கின்றன. ஆனல் அவரது பிரதான நோக்கம் கதை சொல்லு வதாகவே இருக்கிறது. இந்நாவல்கள் இன்னும் மக்களைக் கவர்ந்து வருகின்றன. பத்மநாத கோஹெயின் பரூவாவின் 'லஹரி', 'பானுமதி' என்ற இரண்டும் ஆஹோமிய காலத்து நிகழ்ச்சிகளைப் பற்றிய காதல் நவீனங்கள். சரித்திர நிலைக்களனை வைத்து வரையப் பெற்றிருந்தும் குறிப்பிடத்தக்க வரலாற்று அம்சமெதுவும் இவ்விரண்டிலும் இல்லை. தைவ சந்திர தாலூக்தார், தண்டிநாத காரிதா ஆகிய இருவர்களின் நாவல்களில் ஆண் பெண் உறவு முறை ஆராய்ச்சி நடந்திருக்கிறது. இத்துறையில் ரஜனி காந்த பார்தொலாயை இவ்விரு வரும் சிறிது மிஞ்சியிருக்கிருர்கள். 'ஆதர்ச பீடம்' (லட்சிய பூமி) என்பதில் காந்தியக் கருத்துக்களை தாலூக் தார் பெருமையாகக் காட்டுகிருர். காரிதாவின் 'ஸாதனு' விலும் அதே போன்ற லட்சியவாத நோக்கைக் காணலாம்.

சென்ற பத்தாண்டுகளுக்கு முன்வரை ஆஸ்ஸாமிய மொழியில் வந்த கற்பனைக் கதைகள் அதிகமில்லை. அண்மையில் தர உயர்வும், புதிய போக்குகளும் கொண்ட நவீனங்கள் வந்துள்ளன. காதல்தான் பழைய கதை யமைப்பில் முக்கிய அம்சம். நேரிடை அனுபவமும் உள வியல் ஆராய்ச்சியும் நிறைந்த கற்பனைக் கதைகளுக்கு இப்பொழுது எழுத்தாளர் திரும்பியிருக்கிருகள். சமூ கத்தால் புறக்கணிக்கப்படுவோர்பால் கவனம் செலுத்தி சமுதாய தராதரங்களை மதிப்பிடும் கற்பனைக் கதைகளை இக்காலத்து எழுத்தாளர் வரைகின்றனர். இத்தகைய நா்வல்களில் ஒன்று ஆஸ்ஸாமின் கிராம வாழ்க்கையைப் பற்றிய 'ஜீவனர் பதாத்' (வாழ்க்கையின் ராஜபாட்டை) என்பது. அப்படியே நாட்டுப்புற வாழ்வைச் சித்திரிக்

கிறது என்ற புகழ் அதற்குப் பரவலாகக் கிட்டியுள்ளது. ஹிதேச தேக்காவின் 'அஜிர் மனு' (கால புருஷன்) ஆத்மநாத சர்மாவின் 'ஜீவனர் தீன் அத்யாய' (வாழ்வில் மூன்று அத்தியாயங்கள்) சந்திர காந்த கொகோயின் 'ஸோனர் நங்கல்' (தங்கக் கலப்பை), கோவிந்த மஹந்தாவின் 'கிரிஷிகர் நடி' (உழவன் பரம்பரை) முதலியன சமூக ஆராய்ச்சி நாவல்களில் முக்கியமான ஒரு சில. 'கபில பரீய சாது' என்ற காதல் கதையை நவகாந்த பரூவா இயற்றியுள்ளார். ஆண்டுதோறும் தன் நீரோட்டத் திசையை மாற்றிக்கொள்ளும் கபிலி நதியின் கரையோரம் வசிக்கும் மக்களின் துயரக் கதையை அது சொல்லுகிறது. 'த்வார் ஆருகைஷ' (இனி மேகமில்லை) என்ற நூலில் சென்ற உலக யுத்த மானது சமூகத்தின் அறிவுணர்ச்சி, ஒழுக்கங்கள், பழக்கவழக்கங்கள் ஆகியவற்றை எவ்வாறு மாற்றியிருக் கின்றன என்பதை ஜோகேஷ் தாஸ் விவரித்துள்ளார். பிரேந்திர குமார பட்டாச்சாரியா கதை சொல்லும் அருள் படைத்தவர். ராஜ்பதே ரிங்கியாங் (ராஜபாட்டையின் அழைப்பு) என்பதில் சமூகத் தீமைகளைத் திருத்த விரும்பும் இளம் புரட்சிக்காரனின் வாழ்க்கை தரப்பட் டுள்ளது. அறிவாற்றலும் உளவியலும் அவரது வழியில் பிரகாசமாகக் காணப்பெறும் சாதனங்கள்.

கதையமைப்பின் உத்திகள், மனித உள்ளத்தின் அடங்கிய நோக்கங்கள் பற்றிய வருணனைகள் காரண மாக வேறு சில மனநிலை-நவீனங்கள் சமீபத்தில் வெளியாகி அங்கீகார முத்திரை பெற்றுள்ளன. பிரபுல்ல தத்த கோஸ்வாமியின் 'கேச பதர் கபனி' (நடுங்கும் தளிர்கள்) ஒரு இளைஞனின் தத்துவார்த்த உள்ளக் கிளர்ச்சியை வருணிக்கிறது. ராதிகா மோஹன் கோஸ்வாமியின் 'சாக்னய்யர்' (நீர்ச் சுழல்) காலத்துடன் ஒத்துச் செல்ல இயலாத ஓர் இளைஞனின் ஆசாபங்கம் நிறைந்த வாழ்க்கையைச் சித்தரிக்கிறது.

சிறுகதை

சிறுகதை வளர்ச்சிக்கு மேலை நாடுகளின் செல்வாக்கே காரணம். சிறுகதையை உயர்ந்த கலைப் படைப்பாக உயர்த்திய பெருமை முதலாவதாக லக்ஷ்மீநாத பெஜ் பரூவாவைச் சாரும். அவர் வாழ்நாள் முழுவதும் பத்திரிகாசிரியராக இருந்தவர். எனவே இந்த நிலையி லிருந்து கொண்டு கதையைக் கண்ணோட்டம் பார்ப்பவர். இடம் குறைவாக இருப்பவர் கதையையும் சொற்களையும் செட்டாகப் பயன்படுத்த வேண்டும். 'சாது கதர் குகி', 'ஜோன்பிரி', 'சுரபி' என்ற மூன்று புத்தகங்களில் அவரது சிறுகதைகள் தொகுக்கப் பெற்றுள்ளன. வாழ்க்கையின் ஒரு மூலை, ஒரு சிறிய அனுபவம், கண நேரம் மனதில் பதியும் நிகழ்ச்சி முதலியன அவரது சிறுகதைகளின் விஷயங்கள். அவரும் ஸரத் சந்திர கோஸ்வாமியும் தமது கட்டுத் கதைகளை பிராந்திய நிலவரத்தில் வைத்து எழுதினர். கண்ணெதிரில் நடப்பது போல அவை அமைந்திருந்தன. ஆழ்ந்த மனிதாபி மானம், இரக்கத்தை எழுப்பும் ஆற்றல், நகைச்சுவை முதலியன இருந்தும், நடுத்தர வகுப்பினருக்குரிய சில தனி மனநிலைகள் காரணமாக, அவர்களுடைய படைப்புக் களில் சொல்லாட்சி சற்று தேக்கமுற்றுள்ளது.

நாகேந்திர நாராயண செளதுரி, திரைலோக்ய நாத கோஸ்வாமி படைப்புக்களில் ஆழ்ந்த சமுதாய நல உணர்வு இருந்தது. அருணு, மர்சிகா (கானல் நீர்) என்ற இரண்டு தொகுப்புகளிலுமுள்ள கதைகளில் நம்மைச் சுற்றியுள்ள வாழ்க்கையின் கூறுகளைக் காண லாம். 'அருணு' வில் இடம் பெற்றுள்ள 'ஜரஜா' என்ற கதை வீரியமுள்ளது. திருமண வாழ்வுக்குப் புறம்பாகப் பிறந்த ரத்தன் குரூரமான இகழ்ச்சிக்கும் சமுதாயக் கொடுமைக்கும் உள்ளாகிறன் என்பதை அது சித்தரிக் கிறது. 'விதவா' (கைம்பெண்) என்ற மற்றொரு கதை யில் ஒரு தாயும் மகளும் இருவரும் விதவைகள் - படும்

துயரத்தையும் சமூக இடுக்கண்களையும் காணலாம். இரண்டாவது உலக யுத்தத்தின் விளைவாக எழுந்த சீர்கேடுகளைப் பற்றியவை 'மரீசிகா' என்ற தொகுப்பி லுள்ள கதைகள். கோஸ்வாமியின் 'ஜீய மனு' (உயி ருள்ள மனிதன்) ஒரு குறுநாவல். யுத்தத்தின் விளைவாக ஏற்பட்ட ஒழுக்கச் சிதைவையும் தேவைப்படும் சீர்திருத் தங்களையும் பற்றியது இந்தக் கதை. மஹிபோரா, லக்ஷ்மீகாந்த பூக்கன் ஆகியோரின் கதைகளில் ஆஸ்ஸா மிய ஹாஸ்யத்தின் உயர்நிலையைக் காணலாம். ஹரிராம் தேக்காவின் கதைகளில் உள்ள தனியம்சம் வஞ்சகப் புகழ்ச்சி எனும் உத்தி.

ஆஸ்ஸாமி மொழியில் மிக நவீன வகைச் சிறுகதை களை இயற்றியவர் லக்ஷ்மிநாத சர்மா. அவரது கதை களில்தான் முதலாவதாக பெண்ணும் அவளது உணர்ச்சி களும் விவரிக்கப்படுகின்றன. அவரைத் தொடர்ந்து நிறையப்பேர் இக்கால மாதரையும் அவர்களுடைய காதல் விவகாரங்களையும் பற்றி எழுதியிருக்கிறார்கள். வீணு பரூவா, ராமதாஸ் போன்றோர் இவ்வகையில் குறிப்பிடத் தக்கவர்கள். 'பத்-பரிவர்த்தன்' (காட்சி மாற்றம்) என்ற சிறுகதைத் தொகுப்பு பெரும்பாலும் காலேஜ் மாணவி களின் வாழ்க்கையையும் அவர்களுடைய உணர்ச்சி மிகுந்த தற்காலிகமான காதல்களையும் பற்றியவை. அவர் நாட்டுப்புற வாழ்க்கையைப் பற்றியும் எழுதியிருக் கிறார். 'ஆகோனிபாய்' என்ற தொகுப்பில் அதே பெயருள்ள கதை இருக்கிறது. அது நல்ல வலுவான படைப்பு. ஆகோனிபாய் என்ற கிராமப் பெண் எப்பொழுதும் கிராமத்தாருக்கு உழைப்பவள்; ஆனால் அவளது வாழ்க்கை துன்பம் நிறைந்தது. கிராம வாழ்க்கை சித்திரங்கள் அதில் அழகாக, செழுமை மிகுதி யுடன் தீட்டப் பெற்றுள்ளன. ராமதாஸின் கதைகள் வாசகர்களைக் கவருவதற்குக் காரணம் அவரது கதை புனையும் வகைத் திறனும் கதையைச் சொல்லும் உத்தியுந்

தான். விளக்கமான வருணனை, உரையாடலின் நேர்த்தி, அழுத்தமான சிந்தனை, மிக நுட்பமான உணர்ச்சி வேற்றுமைகளைத் தெளிவாகப் புலப்படுத்தும் அசாதாரண மான சொல்லாட்சி போன்றவை காரணமாக ஆஸ்ஸாமி மொழியிலேயே மிகச் சிறந்த கதைகளில் அவர் வரைந் துள்ளவை இடம் பெறுகின்றன. சமூகம் வழக்கமாக அங்கீகரிக்கும் காதல் வகைகள் உண்டு. அவற்றிற்குப் புறம்பான விபரீத வகைகளைப் பற்றியவை அவரது கதைகள். தம் உள—ஆய்வுத் திறனுடன், அனுதாப மிகுதியுடன் இவற்றை ஆசிரியர் எழுதியுள்ளார். 'சேதுபந்தன்' (பிளவு பிணைந்தது), 'பரஸ ஜேதீய நமே' (வேனில் வருகையில்) போன்ற கதைகளில் இதை ஒன்ருகக் காணலாம். 'உஷா', 'சங்கிராம்' இரண்டும் தீனு நாத் சர்மாவின் ஓரளவு புகழ்பெற்ற நாவல்கள். ஆனுல் அவர் சிறுகதை எழுத்தாளர் என்றுதான் அதிகமாகப் பிரபலமடைந்தவர். துலால் (1952) அகல்சரியா (1953) கோவா பதுரிய ஓதார் தளாத் (1952) கல்பனு அருபஸ்தலா ஆகிய கதைத் தொகுப்புக் கள் பிரபலமானவை. சர்மாவின் கதைகள் பெரும்பா லும் காதலைப் பற்றியவை. அருவருப்பான, விசுவாச மற்ற பெண்களின் வாழ்க்கையைப் பற்றியவை அவை. 'சோவரன்' புது மனைவியின் அடங்காக் காதலைப் பற்றியது. பெண்ணுள்ளத்தின் சிக்கல்களை அது ஆழமாக துருவிப் பார்க்கின்றது. அவரது சிரத்தை யும், கண்ணேட்டமும் குறுகியவை. கதைகள் ஒரே தினுசானவை.

லக்ஷ்மீதர சர்மாவுக்குப் பிறகு இரண்டாவது உலக யுத்தத் தொடக்கம் வரை எழுதிய சிறுகதையாளர் முக்கியமாக பிராய்டால் கவர்ச்சிக்கப்பட்டனர். ஐரோப் பிய எழுத்தாளரைப் படித்துப் படித்து பாலுறவுச் சித்திரங்களில் அதிக அக்கறை காட்டியவர்கள். வாழ்க்கையின் பிற உண்மைகளைப் போலவே நியாயமற்ற

காதல் வாழ்வும், வரம்பற்ற பெண்-கவர்ச்சியும் வாஸ்தவமானவை என்று சந்தேகமற ஏற்றுக்கொண்டு எழுதியவர்கள். எனவே காதலை அப்பட்டமாகச் சொல்கையில் கூச்சமோ, நியதியோ, ஐயமோ இல்லாது எழுதினர். புதிய சமூகச் சூழ்நிலையில் அடிப்படையான ஆண் பெண் உறவைப் பற்றிய புது மதிப்பீடு தேவை எனக் கருதினர்.

இரண்டாவது உலக யுத்தத்துக்குப் பின்னர் கவிதை, நாடகங்கள், நாவல்களைப் போலவே சிறுகதையும் மாறுதலடைந்திருக்கிறது. நடுத்தர வர்க்கத்தினர், தொழிலாளர், விவசாயிகள் பிரச்னைகளே சிறுகதைகளில் வருகின்றன. புதிய சமூக, பொருளாதார சூழ்நிலை, அதன் முரண்பாடுகள், சந்தர்ப்ப சமத்துவம் இல்லாமை ஆகியவையே இன்றைய சிறுகதையின் வாலாயமான விஷயங்களாகி விட்டன. முந்தைய சமூக அமைப்பில் காணப்பெற்ற விவசாயியின் நிம்மதியான வாழ்க்கையை புது சமூக அமைப்பில் காணப்பெறும் அமைதியின்மை, மிடிமை, கொடுங்கோன்மை, சுரண்டல், கோபதாபம், உழைப்பில் வெறுப்பு முதலியவற்றுடன் எதிரிடை நோக்கில் அது புலப்படுத்துகிறது. அசாதாரணமான கதைக் கோர்வையுடன் வசீகரமான நடையும் சேர்ந்திருப்பதால் இவ்வகை எழுத்தாளரிடையே அப்துல் மாலிக் கணிசமான பெருமையுடன் விளங்குகிறார். ஜோகேஷ் தாஸ், வீரேந்திர குமார் பட்டாசார்யா, ஹேமேன் பர்கேஹேயின், பவேந்திர நாத சைகியா ஆகியோரும் பிறரும், இதுபோலவே பல வழிகளில் நவீன சிறுகதைகளை, பொலிவுடன் கூட, வகைகள் பலவற்றில் வரைந்துள்ளனர்.

### கட்டுரை

பத்தொன்பதாவது நூற்றாண்டில் ஏறக்குறைய பக்குவமடைந்திருந்த வசனம் பின்னர் கட்டுரையாக வளர்ச்சி கண்டது. லக்ஷ்மீநாத பேஜ் பரூவா தன்மய

மான கட்டுரைகள் வேரூன்றச் செய்தவர், நானாவிதமான விஷயங்களை வசனத்தில் எழுதிய வல்லுனர்களில் அவரும் ஒருவர். அரியதோர் வசீகரம் அவரது கட்டுரைகளில் இருந்தது. நகைச்சுவையும், பொறுத்தருளும் பண்புடன் கூடிய ஆய்வுத் திறனும் படைத்தவர். கட்டுரைக்கும் சிறு கதைக்கும் மையமான வடிவமொன்றைக் கண்டுபிடித்துக் கையாள்வதில் செஸ்டெர்டனைப் போலவே அவரும் வெற்றி கண்டார். எண்ணிறந்த அன்றாடத் துக்கடாக் களையும் குடும்ப நிகழ்ச்சிகளையும் விஷயமாகக் கொண்டு எழுதிக் களிப்பூட்டுவது அவரது உத்தி. ஸர் ரோஜர் டி கவர்லீயின் மறுதோற்றமாக கிருபாபர் பார் பரூவா என்ற ஒரு பாத்திரத்தைத் தமது கட்டுரைகளில் படைத்தார். கிருபாபரின் கோணங்கிச் செயல்களில் ஆஸ்ஸாமிய வாழ் வையும் பழக்கவழக்கங்களையும் அப்படியே காணலாம். "பார்பரூவர் பவர் பூர்புரானி" என்ற தலைப்பினுல் இன்ப மூட்டும் கட்டுரைத் தொடர்களை அவர் வழங்கியுள்ளார். "பார்பரூவாவின் சிந்தனைக் குமிழ்கள்" என்பது அதன் பொருள். ஆஸ்ஸாமிய இலக்கியத்தில் அவை புகழ் பெற்றவை. பெரும்பாலும் அவை நடைமுறை விஷயங் களைப் பற்றியனவாகவே இருக்கும். நாட்டிலுள்ள மேம் புல்மேஞ்சிகளையும், உதவாக்கரை ஸ்தாபனங்களையும் அவை கேலி செய்கின்றன. உயர்ந்த நகைச்சுவையும், கூர்மையான நோக்கும் சேர்ந்திருப்பதால், தமது காலத்துப் பிரச்னைகளைப் பற்றி வேடிக்கையாகவும், இன்பகரமாகவும், மனதை ஆட்கொள்ளும் வகையிலும் எழுத அவரால் முடிந்தது. தன்மயமான கட்டுரை வகையை மிக வெற்றிகரமாகக் கையாண்டவர்கள் ஹாலிராம் தேகாவும் ஹேமசந்திர பரூவாவுந்தான்.

"கேந்திர சபா" என்ற தொகுப்பில் சேர்க்கப் பட்டுள்ள சமூக நடைச் சித்திரங்களில் சத்தியநாத போரா ஹேமசந்திர பரூவாவைப் பின்பற்றியுள்ளார். ஆனால் கனமாக எழுதும் தகுதி வாய்ந்த உரைநடை

எழுத்தாளராக அவர் மாறிவிட்டார். 'சாரதி' (வழி காட்டி), 'சிந்தாகளி' (சிந்தனை அரும்புகள்) என்ற நூல்களிலுள்ள சத்தியநாதன் கட்டுரைகள் சிந்தனைச் செறிவும், அடர்த்தியான சொற்கட்டும் உள்ளவை. இந்தக் கட்டுரைகள் மூலம் சத்தியநாத் மொழியை ஒரு வரையறை செய்து, இலக்கணத்துக்கும் மொழியின் மரபுக்கும் மறுவாழ்வளித்து, உரை நடையை ஒரு கட்டுக் கோப்புக்குள் வைத்தார். உயர்நிலை எய்திய மற்றொரு வசனகர்த்தா பணிகாந்த காகதி. அவர் பரந்த அறி வாற்றலும் புலமையும் மிக்கவர்; மாகாணத்திலேயே அதியற்புதமான அறிவு படைத்தவர். புத்திகூர்மையைப் போலவே எழுத்தின் வன்மையும் இருந்தது. ஆஸ்ஸாமி மொழியையும் இலக்கியத்தையும் பற்றி, மெருகேறிய தெள்ளிய நடையில் ஆதாரபூர்வமான புலமை மணம் கமழும் கட்டுரைத் தொடர்களை அவர் வரைந்துள்ளார். அவை என்றென்றைக்கும் எமது மொழியை அணி செய்யக்கூடியவை.

ஆங்கிலக் கல்வியானது தேசிய வளர்ச்சிக்குத் தூண்டுகோலாக இருந்ததுடன், சொந்த மொழி, பண் பாடு, வரலாறு ஆகியவற்றில் பெருமையையும் ஊக்கு வித்தது என்பது மறுக்க முடியாத உண்மை. இதன் விளைவாகப் பல கல்விமான்கள் ஆஸ்ஸாமின் பழைய சரித்திரத்திலும் இலக்கியத்திலும் ஆழ்ந்து பாடுபட்டு உழைத்து நல்ல வரலாற்றுக் கட்டுரை மகசூல்களை எடுத் திருக்கிறார்கள். ஹேமசந்திர கோஸ்வாமியின் தொல்லா ராய்ச்சிகள் தலைசிறந்த வசன நடையில் வரையப் பெற்றுள்ளன. ஆஹோமி சரித்திரத்தின் புற வழிகளை சூரியகுமார பூயானின் சரித்திரப் படைப்புகள் ஆழ்ந்து துருவியிருக்கின்றன. பழஞ் சொற்களைப் பழகு மொழிச் சொற்களாகப் புதுப்பித்த பெருமை பூயானுக்கு உண்டு. பழைய, வழக்கொழிந்த சொற்களையும், சொற்றொடர் களையும் பழைய ஆஸ்ஸாமி குறிப்பேடுகளிலிருந்து

(புரஞ்சிகள்) எடுத்துத் திறம்பட தமது கட்டுரைகளில் அவர் கையாண்டிருக்கிறார். ருசிகரமாக சரித்திரக் கட்டுரைகளை வரைந்துள்ளார் வேணுதர சர்மா. அவரது சைலி அலாதி. தூய்மையான ஆஸ்ஸாமிய சொல்லாட்சியில் அவருக்கு ஆழ்ந்த பற்றுதலுண்டு. பழைய, மதிப்புயர்ந்த ஆஸ்ஸாமியச் சுவடிகளைப் பதிப்பித்து வெளியிடுவதில் சூரியகுமார பூயான் தமது வாழ்நாளைச் செலவழித்துள்ளார். ஹரிநாராயண தத்த பரூவா, காளிராம் மேதி, பிரிஞ்சி குமார பரூவா, உபேந்திர சந்திர லேகரு, மகேசுவர நியோக், சத்தியேந்திரநாத சர்மா இன்னும் பலர் அவரைப் பின்பற்றி எழுதியுள்ளனர். பல்வேறு விஷயங்களைப் பற்றிய பழஞ்சுவடிகளை இந்தப் புலவர்கள் ஆராய்ச்சிப் பதிப்புக்களாக வெளியிட்டுள்ளனர். ஆஸ்ஸாமிய மொழியின் வளர்ச்சியை இதன் மூலம் அவர்கள் மதிப்பிட்டு, ஆஸ்ஸாமிய மக்களின் மேதை எப்படித் தொடர்ச்சியாகப் பிரகாசித்து வந்துள்ளது என்பதைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். ஆஸ்ஸாமிய மக்களின் பண்பாடு, கிராமிய வாழ்வு முதலியவற்றை நாட்டுக் கதைகள், கதைப் பாட்டுக்கள் மூலம் தொகுத்து வெளியாக்கிய முதல்வர்கள் லக்ஷ்மீநாத பேஜ் பரூவாவும், நகுல சந்திர பூயானும். சென்ற சில ஆண்டுகளில் பண்பாட்டையும் சரித்திரத்தையும் விஷயமாகக் கொண்ட மதிப்பு வாய்ந்த பெரு நூல்கள் வெளி வந்துள்ளன. சென்ற அரை நூற்றாண்டில் வெளியாகியுள்ள இலக்கியப் படைப்புக்களின் வகை விதங்களையும் எண்ணிக்கையையும் பார்த்தால், ஆஸ்ஸாமி இலக்கிய மரபு நன்றாக வேரூன்றியிருக்கிறது. எதிர்காலத்தில் உன்னதமான முழுமையான பண்பாட்டுச் சம்பிரதாயம் தோன்றும் என்ற திடநம்பிக்கை ஏற்படுகிறது.

## SELECT ASSAMESE BIBLIOGRAPHY

*Assamese Literature.*
By Dr. Birinchi Kumar Barua,
Published by P E N, India.

*Studies in Early Assamese Literature.*
By Dr. Birinchi Kumar Barua.

*Studies in Literature of Assam.*
By Surya Kumar Bhuyan.

*Aspects of Early Assamese Literature.*
Published by Gauhati University.

*Linguistic Survey of India.*
By G. A. Grierson. Vol. V, Part I, pp. 393—446

*Assamese: Its Formation and Development.*
By Banikanta Kakati.

*Sankaradeva and his Predecessors.*
By Dr Maheswar Neog.

# உடியா (ஒரியா) இலக்கியம்

மாயாதர மான்சின்ஹா

## மொழியும் மக்களும்

இந்தியக் குடியரசின் தென் கிழக்கு எல்லைப் பகுதியில் உள்ள ஒரிஸ்ஸா ராஜ்யத்தின் ஒன்றரைக் கோடிமக்கள் பேசும் மொழி ஒரியா (உடியா). ஒரிஸ்ஸா ராஜ்யத்துக்கு வெளியேயும் ஒரியா பேசுவோர் லட்சக் கணக்கில் இருக்கிறார்கள். பண்டைக் காலத்தில் கலிங்கர்கள், உத்கலர்கள், ஓத்ராக்கள் என்று அழைக்கப் பெற்று மகத்தான ராணுவக் கீர்த்தியுடன், கடலாடிய புகழ் படைத்திருந்த மக்களின் மொழி ஒரியா. கங்கைத் தீரத்திலிருந்து கோதாவரி வரை அவர்களது சாம்ராஜ்யம் பல நூற்றுண்டுகள் பரவிக் கிடந்தது. ஒரு காலத்தில் கடலுக்கு அப்பாலும் செழிப்பான குடியேற்றங்கள் இருந்தன. கீர்த்திமான்களான சைலோத்பவர்களின் சாம்ராஜ்யம் தென்கிழக்கு ஆசியாவில் பல பகுதிகளுக்கு வியாபித்திருந்தது.

குடியேற்றங்களும் சாம்ராஜ்யங்களும் மறைந்து போயின. அது சகஜம். பழைய கலிங்கம் சிறிய ஒரிஸாவாக இன்று இந்தியக் குடியரசில் காணப் பெறுகிறது. எனினும் கலையும், சிற்பக் கலையும் மகாசாம்ராஜ்யம் பூராவிலும் பரம்பரைச் செல்வமாக அழியாமல் இன்றும் திகழ்கின்றன. சீரழிந்து மிதியடியில் உழலும் வாரிசுகளுக்கு அவர்கள் அளித்த பரம்பரைச் செல்வம்

இது. பழங்காலத்தில் சாம்ராஜ்யங்களையும் மகத்தான கட்டுக்கோப்புகளையும் உருவாக்கிய சக்திமான்கள் கலிங்கர்களும், உத்கலர்களும். கட்டுமானத் துறையில் கீர்த்தியுடன் அவர்கள் விளங்கியது ஓர் ஆயிரம் ஆண்டுகள். கி. மு. இரண்டாவது நூற்றாண்டில் கண்டகிரி-உதயகிரி, ஜைனக் குகைக் கோயில்களைக் கட்டும் பணியுடன் இது தொடங்கியது. 13-வது நூற்றாண்டில் கொனார்க்காவில் மகத்தான கனவை நனவாக்கி கல்லில் படைத்த அற்புதத்துடன்கூட அது முடிவுபெற்றது. முற்றிலும் ஆராயப் பெறாத சந்தர்ப்பங்களின் காரணமாக இலக்கியக் கலை வளர்ச்சி கண்டது. தேசிய உள்ளக் கிடக்கை கட்டடக் கலைகள் மூலமாகவும், சிற்பக் கலை மூலமாகவும் வெளிப் போந்து ஒரிஸ்ஸா மக்களிடையே பரிமளித்து நிலை நின்ற பிறகுதான் இலக்கியத்துக்கான வாய்ப்புக்கள் தோன்றின.

கி. பி. 8-வது, 9-வது நூற்றாண்டுகளில் இயற்றப்பட்ட "பௌத்தகான ஓ தோஹா" என்ற நூல். தங்களுடையது என்று ஆஸாமியர், வங்காளிகள், ஒரியாப் பண்டிதர்கள் ஆகிய எல்லோருமே உரிமை கொண்டாடுகிறார்கள். ஆனால் இன்று எழுதப்பட்டும், பேசப்பட்டும் வரும் ஒரியா, வங்க, ஆஸாமிய மொழிகளுடன் சேர்ந்தே நெருங்கிய வளர்ச்சி கண்டு வந்திருக்கிறது. 14-வது நூற்றாண்டில் தான் அது தனிச் சிறப்பு அடைந்ததாகக் கூறலாம்.

14-வது நூற்றாண்டிலிருந்து 19-வது நூற்றாண்டு முடிய உள்ள 500 ஆண்டுகளை நவீன காலம் என்று கூறலாம். இக்காலத்தில் ஒரிய இலக்கியத்தின் வளர்ச்சியும், நூல்களின் வெளியீடும் பிற இந்திய மொழி இலக்கியங்களின் வளர்ச்சியைப் போலவேதான் இருந்து வந்துள்ளன. கையாண்ட உத்திகள், தன்மைகள் ஆகியவற்றில் வேறுபாடுகள் காணப் பெற்றன. புனிதமான இலக்கியம், லௌகிக இலக்கியம் ஆகிய இரண்டும்

சேர்ந்ததே ஒரிய இலக்கியம். ராமாயணம், மகாபாரதம், பாகவத புராணம் ஆகிய மூன்றும் சேர்ந்த சக்கர வட்டங்களுக்கு வெளியே புனித இலக்கியப் பரம்பரையினர் சஞ்சரிக்கவில்லை. சஞ்சரிக்கலாகாது என்ற தடைவிதிகளுக்கு அவர்கள் கட்டுப்பட்டிருந்தனர். ஆனால் இந்த வரம்புகளுக்கு உள்ளேயும் மகத்தான படைப்புகளை அவர்கள்தாம் சிருஷ்டித்தனர். குறுகியதாக இருந்த போதிலும் இவ்வகையில் வெளியாகியுள்ள நூல்கள் எளிமையானவை. இசைப் பாடல்கள், நாட்டுக் கவிதைப் பாடல்கள், காவியங்கள், புராணங்கள் நிறைய வந்துள்ளன. இவை தவிர 12 வகை ராமாயண நூல்கள் பிரசுரிக்கப்பட்டுள்ளன. மகாபாரதத்தில் நான்கு உண்டு.

## நவீன காலம்

மத்திய கால உலகையும் அதன் புராணச் சூழ்நிலையையும் விட்டு அடியோடு விலகி இலக்கியங்களைப் படைத்திருப்பது நவீன காலத்தில்தான். மேலை நாடுகளுடன் ஏற்பட்ட தொடர்பின் காரணமாக கண்ணோட்டமும், கற்பனையும் மாறுதல் கண்டு, மக்களுக்கு ஒரு புதிய நியாய அநியாய நியதிகளை வழங்கியது. இதன் காரணமாக, நவீன இலக்கியம் தோன்றி பல முனைகளிலிருந்து மக்களது உணர்ச்சிகளை எடுத்துக் கையாண்டது. இது இலக்கிய கர்த்தாக்களுக்குக் கிட்டாத ஒரு வாய்ப்பு.

சரித்திரப் போக்கின் காரணமாக மேலை நாடுகளின் தொடர்பு ஒரிஸ்ஸாவுக்கு சற்றுத் தாமதித்தே கிட்டியது. அத்தொடர்பு ஏற்பட்ட சூழ்நிலை மக்களுக்குச் சாதகமாக இருக்கவில்லை. அடுத்தாற்போல் வழங்கும் சகோதர வங்க மொழியுடன் கூட ஒப்பிட்டுப் பார்த்தால் ஒரியா பிற்பட்ட நிலையில் இருப்பது தெரியும். இதற்குக் காரணம் மொழியோ அதைப் பேசும் மக்களோ சுபாவத்தில் மட்டமானவர்களாக இருப்பது அல்ல. பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் வங்கத்தைப் பல திசைகளில் செழிக்க வைத்த

வாய்ப்புக்கள் ஒரிஸ்ஸாவுக்குக் கிடைக்க ஒரு நூற்றாண்டு ஆயிற்று.

ஒரியர்களுக்கு என்று ஒரு தனி ராஜ்யம் ஏற்பட்டு இருபது ஆண்டுகள்தான் ஆகிறது. 16-வது நூற்றாண்டின் இறுதியில் ஒரிஸ்ஸா தன் சுதந்திரத்தை இழந்தது. 400 வருஷங்களுக்குப் பிறகு, பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவிலிருந்து வெளியேறுவதற்கு பத்து ஆண்டுகள் முன்னர் தான், ஒரிய மக்களின் ராஜ்யமாக ஒரிஸ்ஸா மீண்டும் அமைந்தது. அதற்கு முன் ஒரிஸ்ஸாவும் ஒரியர்களும் நான்கு வெவ்வேறு மாகாணங்களில் சிதறுண்டு அமுக்கப் பட்டு, ஒவ்வொன்றிலும் சுரண்டப்பட்ட மைனாரிட்டியினராக இருந்து வந்தனர். பிளாஸி போராட்டத்தையடுத்த ஒரு நூற்றாண்டில் வங்காளத்தில் ஒரு தனி சர்வகலாசாலை ஏற்பட்டது. ஆங்கிலப் பள்ளிகள், கல்லூரிகள் நிறையத் தோன்றின. அதன் இலக்கியம் ஓர் உயர்நிலைக்கு விம்மியது. அதனுடன் ஒப்பிட்டுப் பேசக்கூடிய அபிவிருத்தி ஒரியாவுக்கோ ஆஸ்ஸாமி மொழிக்கோ ஏற்படவில்லை. இக்காலத்தில் ஒரிஸ்ஸாவில் ஒரு முழு ஹைஸ்கூல் கூட ஏற்படவில்லை. இவ்வளவையும் தப்பி மொழியும் இலக்கியமும் உயிர்வாழ்ந்து இருப்பதுடன் கூட வளர்ச்சியும் கண்டிருக்கின்றன என்றால், சுரண்டலுக்கு எதிராக ஒரியா மக்கள் காண்பித்து வந்த உணர்ச்சியின் ஈட்டி முனையாக இருந்த அசாதாரணமான திறமையும் வன்மையும் படைத்த பக்கீர் மோகன் சேனாபதி ஆற்றிய பணிதான் காரணம். அவர்தான் நவீன ஒரிய இலக்கியத்தின் தந்தை எனலாம்.

பக்கீர் மோகன் சேனாபதி (1843–1918), தமது குடும்பத்தின் சிறப்புப் பெயருக்கு ஏற்ப, நவீன ஒரிய இலக்கியம், தேசிய உணர்ச்சி ஆகிய இரண்டிலுமே உண்மையான தளகர்த்தராக விளங்கினார். பல வகைகளில் அவர் ஈடு இணையற்றவர். அவர் படித்தது மூன்று அல்லது நான்கு ஆண்டுகள்தாம். தமது சொந்த ஊராகிய

பாலாசூர் என்ற பழைய துறைமுகப் பட்டினத்தில் ரேவுக் கரையில் பாய்மரங்களைச் செப்பனிடும் பணியில் ஈடு பட்டிருந்த தமது மாமனுக்குத் துணை புரிந்தார். வாழ்க்கை இவ்வாறு தொடங்கியபோதிலும், தமது மதி நுட்பத்தின் காரணமாகவும், நல்ல உழைப்பின் மூலமாக வும், பல ஒரிஸ்ஸா சமஸ்தானங்களின் திவான் பதவிக்கு அவர் உயர்ந்தார். அவருக்குக் குறைந்தது ஐந்து மொழி களில் புலமை உண்டு. ஆங்கிலத்திலும் பரிச்சயம் பெற்ருர். முதலில் நூற்களை அச்சுவாகனம் ஏற்றியவர் அவரே. நூல் வெளியீடு, பத்திரிகைத் துறை ஆகிய வற்றில், குறிப்பாக கூட்டுறவு முறையில், முன்வந்து பணியாற்றிய பெருமை அவருக்கு உண்டு. ராமாயணத் தையும், மகாபாரதத்தையும் மூலத்திலிருந்து நவீன ஒரியாவில் தனி ஒருவராகவே உழைத்து அவர் மொழி பெயர்த்தார். இரண்டு இதிகாசங்களும் முன்னர் பிறரால் மொழிபெயர்க்கப்பட்டிருந்தபோதிலும் இப்பணியை அவர் ஆற்றினுர். ஒரியாவில் சிறுகதைகளைப் புனைந்தவர் அவரே. தொடர்ந்து கதைப் பாடல்கள், பக்திப் பாடல்கள், விவரணைப் பாடல்கள், நகைச்சுவை ததும்பும் நிந்தனைக் கவிதைகள், புத்தரைப் பற்றிய ஓர் இதிகாசம் ஆகியவை அவரது படைப்புக்கள். பதவியிலிருந்து ஓய்வு எடுத்துக் கொண்ட பிறகு அவர் அரை டஜன் முதன்மையான நாவல்களை எழுதினுர். அவர் கையாண்ட நடை ருசிகர மானது. இன்னும் அதை எவரும் மிஞ்சியதில்லை. நாட்டுப்பற்று, பிரத்தியட்ச அனுபவத்தின் தெம்பு, நகைச் சுவை, உயர்ந்த அற உணர்ச்சி பரிமளிக்கும் பெருமை ஆகியவை இந்த நாவல்களில் குறிப்பிடத்தக்க அம்சங்கள்.

ஒரிஸ்ஸாவுக்கு வெளியே பக்கீர் மோகனை இன்னும் பலர் அறியமாட்டார்கள். ஒரிஸ்ஸாவில் பணிபுரியும் பிற மொழியினரான ஐ. ஏ. எஸ்., அதிகாரிகள், அவர் நாவல் களில் ஒன்றிரண்டை படித்தாக வேண்டும். இதற்குக் காரணம் மக்கள் கையாளும் பழகுமொழியில் அவை

இயற்றப்பட்டிருப்பதுதான். நாவலாசிரியர் என்ற வகையில் நவீன இந்திய இலக்கிய உலகில் சேனபதி விசேஷச் சிறப்புள்ளவர் என்று அவர்கள் சொல்ல நான் கேட்டிருக்கிறேன். மக்களுக்கான இலக்கியங்களைப் புனைவதில் பிறரை அவர் முந்திக் கொண்டார் என்று அவர்கள் கூறியுள்ளனர். நவாபுகள், பீகங்கள், தளகர்த்தர்கள், இளவரசிகள் போன்றோரையும் வங்க நடுத்தர மேல் வகுப்பினரையும் பற்றி, ஸம்ஸ்கிருதச் சொல்லாட்சி மிகுந்த உரைநடையில், புகழ்பெற்ற பங்கிம் சந்திரர் வங்காளியில் எழுதி வந்த காலத்தில், அநாமதேயராக இருந்த இந்த ஒரிஸ்ஸா நாவலாசிரியர் படிப்பில்லாத எளிய கைத்தறியாளர்கள், நாவிதர்கள், குடியானவர்கள், கிராம சௌக்கிதார் போன்றவர்களைப் பற்றி எழுதினர். அந்த சௌக்கிதாரே கொள்ளைக் கூட்டத்தினருக்கும் உடந்தையாக இருந்தவர். நகரத்திலும் நாட்டிலும் பணிப் பெண்கள் விஷமத்தை வளர்த்துக்கொண்டே போனதைப் பற்றி அவர் எழுதியுள்ளார். ஆங்கில மாஜிஸ்திரேட்டுகளின் கீழ் பணிபுரிந்த குமாஸ்தாக்களின் பேராசை, வக்கீல்களின் வெளிப்பகட்டு, பழம்பெரும் குடும்பங்களைச் சேர்ந்த இளைஞர்கள் ஆங்கிலக் கல்வியைக் கொஞ்சம் சுவைத்த உடன் தமது பெற்றோர்களுக்கு குழப்பத்தை விளைவித்த சோக நிலைகள் ஆகியவை அவருக்கு விஷயங்களாக அமைந்தன. ஆங்கிலத்தை பக்கீர் மோகன் முறைப்படி கல்லாதது ஓர் அனுகூலமாகவே அமைந்தது. அவர் மக்களிடையே வேரூன்றியவர். அன்றாடம் தமது வாழ்க்கையில் அவர்கள் உபயோகிக்கும் சக்தி வாய்ந்த சொற்களைக் கையாள இது துணைபுரிந்தது. அவற்றைப் படிக்கையில் கிராமத் தெருவின் நாற்றத்தை நுகரலாம்; நெல் வயல்களின் மணத்தை ரசிக்கலாம். கிராமப் பெண்கள் அன்றாடம் குளத்தங்கரையில் குளித்து வம்பளக்கும் வன்மையைச் சுவைக்கலாம். சிறுகதைகளிலும், நாவல்களிலும் மிகத் திறம்பட இவ்விஷயங்களை

உபயோகித்து அவற்றிற்கு ஓர் இலக்கிய மதிப்பையும் நயத்தையும் அளித்தார்.

பக்கீர் மோகனது நாவல்களிலும் சிறுகதைகளிலும் காணப்பெறும் ஆண்களும், பெண்களும் உயிர்த் துடிப் புள்ளவர்கள். பிரத்தியட்ச மனப்பான்மையில் நிகரற்ற வர்கள். தெய்வீக உள்ளொளி வீசுவதை அவர்களிடம் காணலாம். பெரிய சாகித்யகர்த்தாக்கள் தாம் இத்தகைய படைப்புக்களை சிருஷ்டிக்க வல்லவர்கள். சாதாரண ஆண் களையும் பெண்களையும் சாசுவதமாக வாழக்கூடிய பாத் திரங்களாக சிருஷ்டிப்பது பெரிய சேவைதான். ஆனல் அவரது பாத்திரங்கள் பிற மக்களைவிட அதிக சோபை யுடன் விளங்குவது ஒரு தனிச் சிறப்பு. அவர் அமைத் துக் கொடுத்துள்ள தேசிய சித்திர வரிசையானது ஒரிய சமூகத்தின் எல்லா அந்தஸ்துக்களையும் அப்படியே எடுத் துக் காண்பிப்பதாக இருக்கிறது. செர்வான்டிஸையும் அவரது படைப்பாகிய டான் குவிக்ஸாட்டையுமே இந்தப் பாத்திரங்கள் நமக்கு நினைவூட்டுகின்றன. செர்வான்டி ஸின் நூலில் ஸ்பானிஷ் சமுதாயம் அப்படியே கலை யுணர்ச்சி ததும்ப, பிரத்தியட்சபாவத்துடன் விவரிக்கப் பட்டிருப்பது எல்லோரும் அறிந்ததே. அதேமாதிரி ஒரியர்களுக்குப் பணிபுரிந்துள்ளார் பக்கீர் மோகன்.

'சாமண் ஆடகுண்டா'[1] (6 ஏகரும் 8 சென்டும்) என்பது அவரது நாவல்களில் ஒன்று. குழந்தை இல்லாத வெள்ளை மனம் படைத்த நெசவாளித் தம்பதிகளை கிராம சௌகார் எவ்வாறெல்லாம் சீரழித்தான் என்பது இந் நாவலில் விவரிக்கப்பட்டுள்ளது. கிராம வாழ்க்கையை தத்ரூபமாக எடுத்துக்காட்டுவதில் காணப்பெறும் ஆழம் இந்த நூலின் தனி அம்சம். "உத்கல் சாகித்யா" என்ற மாசிகையில் முதலில் தொடர்நாவலாக் இக்கதை

---

1. பிற இந்திய பாஷைகளில் மொழிபெயர்ப்பதற்காக இந்த நாவலை சாகித்திய அக்காதெமி தேர்ந்தெடுத்துள்ளது.

வெளிவந்தது. ஒரு கொலைக் குற்றத்தை துப்புத் துலக்கி விசாரணை செய்வது ப்ற்றிய வருணனைகள் இந்த நாவலில் பிரமாதமாகக் காணப்பெறுகின்றன. உண்மையில் வாழும் மக்கள்தாம் அவ்வாறு விவரிக்கப்பட்டிருக்கிருர்கள் என்று நினைத்து நேரில் வழக்கு விசாரணையைக் காண்பதற்காக• தொலைதூரங்களிலிருந்து கட்டாக்குக்கு ஜனங்கள் வந்தார்கள்.

பிரேம் சந்தின் "கோதான்" நூலுக்கும் இதற்கும் அடிப்படையான ஒற்றுமைகள் உண்டு. பிரேம் சந்துக்கு 50 ஆண்டுகளுக்கு முன்னர் இந்நூலை சேனுபதி இயற்றிஞர். "லச்மா" என்பது சேனுபதியின் சரித்திர நாவல். வங்காளத்திலும், ஒரிஸ்ஸாவிலும் மராட்டியர் படையெடுத்து விளைவித்த நாசங்களை அது வருணிக்கிறது. "மாமூ" (தாய் மாமன்) "பிராயச் சித்தம்" ஆகிய நாவல்களில் பழைய சமுதாய அமைப்பானது ஐரோப்பிய பண்பாட்டின் மோதல் காரணமாக சிதைவுற்றதை வருணிக்கிறது. எந்த நியதிகளை ஏற்பதென்பதைப் பற்றி இளைஞர்களுக்கு ஏற்பட்ட சங்கடங்களை அது சித்திரிக்கிறது. மீட்சியையும் மறு வாழ்வையும் பற்றிய இதிகாசங்கள் என்றுகூட இந்த நாவல்களைக் கருதலாம். தவறு இழைக்கும் பாத்திரங்கள், பலதரப்பட்ட அனுபவங்களுக்குப் பிறகு, நன்னெறிக்குத் திரும்பி நல்வாழ்வு நடத்துபவர்களாக மாறுவது குறிப்பிடத்தக்க அம்சம்.

ஒரு மகத்தான இலக்கிய கர்த்தாவாக இருந்ததுடன் சிறு வயதிலேயே பக்கீர் மோகன் வங்க கலாச்சார, மொழி ஆதிக்கப் போக்குகளை எதிர்த்து தமது தாய்மொழியை உயிர்ப்பிக்கத் துணைபுரியும் பணியில் ஈட்டி முனையாகத் திகழ்ந்தார். ஆகையால்தான் ஒரிய இலக்கியத்தில் அவருக்கு ஓர் இணையற்ற ஸ்தானம் எப்போதுமே உண்டு.

**ராதாநாத், மதுசூதன்**

பக்கீர் மோகன் தனித்து இயங்கிய எழுத்தாளர் அல்ல. புத்துயிர் தந்து பழைய ஒரிய மொழியையும் அதன் மரபையும் போஷிப்பதற்காக தம்மை அர்ப்பணம் செய்துகொண்ட திறமை வாய்ந்த எழுத்தாளர் குழாத்தின் தலைவராக அவர் திகழ்ந்தார். அவருடன் சேர்ந்து இலக்கிய மும்மூர்த்திகளாக பணியாற்றிப் புகழ் பெற்ற மற்றுமிருவர் ராதாநாத், மதுசூதன். இருவரும் உயர்ந்த கவிஞர்கள். மனிதன், இயற்கை, தெய்வம் ஆகியவை தாம் அவர்களுடைய கவிதா விஷயங்கள். ஒரு தொன்மையான மொழியில் தன்னிறைவு பெற்று, புது இலக்கியத்தை மூவருமாகப் படைத்தனர். இவர்கள் மிக அந்நியோந்நியமாகப் பழகியவர்கள். இவர்களது சிருஷ்டிகளில் இலக்கிய வளமையின் முழுமையைக் காணலாம். நாட்டிலும் நகரத்திலும் மேலெழுந்தவாறு காணும் தோற்றங்களின் அடியே மனித உணர்வுகள் எவ்வாறெல்லாம் சிறிதும் சந்தேகிக்க இயலாத வகைகளில் நாடகமாடுகின்றன, என்பதை பக்கீர் மோகன் பிரகாசப்படுத்தினர். மதுசூதன் (1853—1912) கம்பீரமான பாணியில் தெய்வத்தைப் பற்றியும், தூய வாழ்வைப் பற்றியும், ஜீவாத்மா பரமாத்மாவுடன் ஐக்கியப்படும் பேரானந்தத்தைப் பற்றியும் பாடினர். அவர் எல்லாவற்றிலும் ஆண்டவனைக் கண்டார். உன்னதமான இமாலயத்தின் புனிதமான சிகரங்களிலும், அன்றாட வாழ்க்கையின் ஒரே தினுசான நிகழ்ச்சிகளிலும் தெய்வம் அவருக்குக் காட்சி அளித்தது. இலக்கியப் புகழில் அவருக்கு நாட்டமில்லை. பெரிய நூல் எதையும் இயற்ற அவர் முயற்சிக்கவுமில்லை. அவரது படைப்புகள் ஏராளமான பாடல்கள்தாம். இசைப் பாடல்கள், சிந்துகள், புகழ்ப் பாடல்கள், 14–வரிப் பாடல்கள் ஆகிய அவரது படைப்புக்களில் உயர் வாழ்க்கையின் மாண்பைக் காணலாம். “நஷீப் பிரதி”, “ஆகாஷ் பிரதி” (பிரபஞ்சம்), “துவனி” (சப்தம்), “ஹிமாசலே

உதயோத்ஸவ'' (ஹிமாலயத்தில் சூரியோதயம்), ''ரிஷிப்ராணே தேவ அவதாரண'' (ரிஷியின் ஆத்மாவை தெய்வம் ஆட்கொண்ட வரலாறு) ஆகியவை, எந்த இலக்கியத்திலும், இணையற்றவை என மதிக்கப்பெறும். அவரது துதிப்பாடல்களை ஆயிரக்கணக்கான பள்ளிக் குழந்தைகள் ஒரிஸ்ஸாவில் அன்றாடம் பாடுகிறார்கள். ஒரிஸ்ஸாவின் தேசிய வாழ்க்கையில் இடம் பெறுவிடினும், ஒரிய இலக்கியத்தில், தார்மிக ஆத்மீக சக்தியாக அவரது பாடல்கள் பிரகாசிக்கின்றன.

ராதாநாத் (1848—1908) ஓர் உண்மைக் கவி. அழகுணர்ச்சி மிகுந்தவர். உரைநடையில் சேனாபதி ஆற்றிய தொண்டைப்போல கவிதைக்குப் பணியாற்றியவர். ஒரியர்களுக்கு உண்மையான தேசிய இலக்கியத்தைச் சிருஷ்டித்துக் கொடுத்தவர். அது அந்த மண்ணில் முளைத்த இலக்கியம். முன்னர் கண்டிராத அழகும் மாண்பும் அதன் பிரதான அம்சங்கள். இரண்டு முக்கியமான திசைகளில் ஒரியக் கவிதையில் ஒரு புது சகாப்தத்தை ராதாநாத் தோற்றுவித்தார். அதற்கு முன் கவிதை எழுதவேண்டுமென்றால் உபேந்திரநாத் பஞ்சாவும் அவரது மரபினரும் கையாண்ட கவர்ச்சிகரமான உத்திகள் தாம் அவற்றில் மேலோங்கிக் காணப்பெறும். சொற்சிலம்பம் அவற்றின் பிரதான அம்சம். அந்த நிலையிலிருந்து ஒரிய கவிதையை அவர் விடுவித்தார். மோனையை வேண்டிய அளவுக்கு வைத்துக்கொண்டு, சொற்களை ஜாக்கிரதையாகப் பொறுக்கிக் கையாண்டு, பழைய கவி சிரேஷ்டர்களைப்போல, மிக எளிய முறையில் மக்களை மகிழ்வூட்டுவதில் அவர் வெற்றி கண்டார். சப்தமும் அர்த்தமும் நெருங்கிய உறவு உள்ளவை, சரிவர இணைக்கப்பெற வேண்டியவை என்ற நியதியை அவர் கையாண்டார். பொருத்தமான சொற்களைத் தக்கவாறு பொறுக்கி துல்லியமாகப் பயன்படுத்துவது அவரது சாத

னங்களில் ஒன்று. இவ்வகையில் அவர் காளிதாசனைப் பின்பற்றினர்.

ஒரியக் கவிதையில் ஏற்படுத்திய புரட்சியுடன் நில்லாமல் நவீன ஒரிய இலக்கியத்திலும், தேசிய வாழ்விலும் அவர் கையாண்ட முக்கியமான லட்சியச் சிறப்புகள் குறிப்பிடத் தக்கவை. இலக்கிய உலகின் தோற்றத்தையே அவர் ஆட்கொண்டுவிட்டார் என்று சொல்லலாம். கிரேக்க, இத்தாலிய செல்வாக்கு அதில் முக்கியமாகக் காணப்பெற்றது. ஒரிஸ்ஸாவின் வரலாற்றிலிருந்தோ, லத்தீன் கிரேக்க புராணங்களிலிருந்தோ, விஷயங்களை எடுத்துக்கொண்டு ஒரிய நிலைக்களனில் வைத்து நிறுத்தி, தமது தலைவனும் தலைவியும் சஞ்சரிக்கச் செய்தது அவரது உத்தி. அவருக்கு முன் நான்கு நூற்றுண்டுகளுக்கு ஒரியக் கவிஞர்கள் கங்கை, யமுனை, கோவர்த்தனமலை போன்ற வட இந்திய விஷயங்களைப் பற்றியே பாடினர்கள். அவற்றை அவர்களில் ஒருவரும் கண்டதில்லை. ஒரிஸ்ஸாவின் அழகு மிகுந்த காட்சிகள் காலடியில் இருந்தும், அவர்கள் அவற்றைக் காணவில்லை. ஒரிஸ்ஸாவில் விசாலமான கம்பீரமான மகாநதி, பிராம்மணி, வைதரணி, அழகே உருவான மலயகிரி, மேகாசன், மகேந்திரா முதலியவை பற்றி அவர்கள் பாடவில்லை. சரளதாஸ், பலராம்தாஸ் ஆகிய இருவர்தான் இதற்கு விலக்காக இருந்தவர்கள். ராதாநாத் முதல் தடவையாக, ஒரிஸ்ஸாவின் எழில் மிகுந்த தோற்றங்களைப் புகழ்ந்து பாடினர். இசையமைப்புடன் கூட சுவைத்தார். ஒரிஸ்ஸாவின் அழகுக்கும் செல்வத்துக்கும் காரணமாக இருந்த சிலிகா ஏரியைப் பற்றி நீண்டதோர் இசைப் பாடலை இயற்றினர். குறள் வடிவத்தில், இந்திர ஜாலம் போல, தங்கு தடையின்றி, இளமை பெருக்கெடுத்தோடும் இயற்கைத் துதிப் பாடலாக அது கம்பீரமாக அமைந்தது. ஏரியின் பல்வேறு காட்சிகளையும் அம்சங்களையும் மிக நுட்பமாக வருணித்து, உயிருள்ள மனிதனைப்போல அது தோன்றச்

செய்து, பொதுவாக அக்கால ஒரிஸ்ஸாவையும் பழங் காலப் பெருமையையும் உவமை காட்டி, பாடினுர் ராதா நாத். ஆகையால்தான் அவரது சிலிகா [1] என்ற கவிதை ஒரிய இலக்கியத்தில் ஒரு தனிப் பெருமையுடன் திகழ் கின்றது.

சிலிகா ஏரியைப் போலவே, ராதாநாத்தின் கவிதா வலேயில் சிக்காத ஒரு புகழ் பெற்ற மலேயோ, நதியோ, எழில் தோற்றமோ, சரித்திர நினேவுச் சின்னமோ, கட வுளோ ஒரிஸ்ஸாவில் இல்லேயெனக் கூறலாம். சிலிகா ஏரியைப் போலவே பல இடங்கள் இப்பொழுது அடைந் துள்ள புகழ் அவருடைய கவிதையின் மூலமாகத்தான். இந்தியா பூராவுக்கும் காளிதாசன் செய்ததை இயற்கைக் கவிஞன் என்ற வகையில், ஒரிஸ்ஸாவுக்கு ராதாநாத் செய் திருக்கிருர். கிரேக்கர்கள் தமது சாம்ராஜ்யத்துக்கு ஆற் றிய பணியைப்போல, ராதாநாத் ஒரிஸ்ஸாவை உயிருள்ள தெய்வங்களேக் கொண்டதாக்கி, மனிதர்களுடைய விவ காரங்களில் அவர்கள் தீவிர அக்கறை கொள்ளும்படி செய்து, அழகில் சிறந்ததும் மோனத்தில் ஆழ்ந்ததுமான இயற்கையை உயிருள்ள புருஷர்களேக் கொண்டு நிரப்பி விட்டார். கவிதா சௌந்தரியம் மிகுந்த நாடாக ஒரிஸ் ஸாவை ஆக்கி, அமானுஷ்யமான பிரகிருதிகள், கட்டுக் கதைகள், புராணங்கள், ஆணழகர்களான வீரர்களும் எழில் மிக்க மங்கையரும் தலேவர்கள், தலேவிகளாக நட மாடும்படி செய்துவிட்டார். கட்டாக் மக்கள் இன்று சரித் திரப் பிரசித்தமான கல்பாவிய நதிக்கரை மீது மாலேயில் உல்லாசமாக நடந்து பொழுது போக்குகிருர்கள். மறுபுறம் கரட்ஜோடி நதியைக் காண்கிருர்கள். இவை ராதாநாத் தின் கவிதா ஜாலத்தில் சிறப்புற்றுள்ளன. படித்த ஒரியாக் காரன் தனது நாட்டில் எங்கு சென்ற போதிலும், அந்த

---

1. பிற இந்திய பாஷைகளில் மொழி பெயர்க்க இந்தக் கவிதை சாகித்திய அக்காதெமியால் தேர்ந்தெடுக்கப்பெற்றது.

இடத்தைப் பற்றி ராதாநாத் இயற்றிய கவிதைகளிலிருந்து சில வரிகளையேனும் எடுத்துச் சொல்லியாக வேண்டிய கவர்ச்சி அவருக்கு உண்டு.

ராதாநாத் ஓர் இதிகாச கவிஞர். அவர் இயற்றிய இசைப் பாடல்கள் மிகக் கொஞ்சம். முன்னர் கண்டிராத பெரிய காவியங்களைத்தான் அவர் புனைந்துள்ளார். சரித்திர சம்பந்தமுள்ள விஷயங்கள், எளிமையும் கம்பீரமும் அகமகிழ்ச்சியும் தேசபக்தியும் கூடிய விஷயங்கள், வாழ்க்கையைப் பற்றிய வேதாந்த விசாரங்கள் ஆகியவை ராதாநாத்தின் காவியங்களுக்கு ஒரியாக் கவிதை உலகில் ஒரு தனிப் பெருமையை அளித்து, அந்த இலக்கியத்தில் ஒரு புது சந்ததியைத் தோற்றுவித்துள்ளன.

அவரது காவியங்களில் மிகப் பெரிதும் முதன்மையானதும் "மகாயாத்ரா" என்ற இதிகாசம். அது எதுகையில்லாத, சப்த ஜாலம் நிறைந்த, கம்பீரமான நடையுடன் கூடியது. 21 அத்தியாயங்களில் அதைப் பூர்த்தி செய்ய அவர் திட்டமிட்டிருந்தார். ஆனால் ஏழு எழுதியாவதற்குள் அவர் காலமாகி விட்டார். இப்படிக் குறைவாக இருந்தபோதிலும் அது கம்பீரமான சிருஷ்டி என்று கூறவேண்டும். குருக்ஷேத்திரா யுத்தத்திற்குப் பிறகு, பாண்டவர்கள் சுவர்க்காரோகணம் செய்த மகா பாரதக் கதையை வைத்துக்கொண்டு, இந்தியாவில் பல் வேறு அன்னிய ஆதிக்கங்களை ஒரு யாத்திரையாக விவரித்து, எதிர்காலத்தைப் பற்றிய சூசகங்களைக் கூறி, அவர் பாடினார். பாண்டவர்கள் பூரிக்கு வரும்படி அவர் செய்துள்ளார். அங்கே அக்னி தேவனை அவர்கள் சந்திக்கிறார்கள். ஒரிஸ்ஸாவிலும், மத்திய இந்தியாவிலுமுள்ள தொன்மையான களங்களுக்கு அவர்கள் அவனை இட்டுச் செல்கின்றான். அங்கிருந்து மேற்குத் தொடர்ச்சி மலையைச் சேர்ந்த ஸஹ்யாத்ரிக்கு அவர்கள் செல்கிறார்கள். அங்கே அக்னி அவர்களுடைய அகக்கண் முன்னால் இந்தியாவின் வரலாற்றை, திரையை விலக்கிக் காட்டு

கிருன். கலியுகம் தோன்றுவதன் விளைவாக ஒழுக்கச் சிதைவு ஏற்பட்டு, ஆரியர்களின் கீர்த்தி சொந்த நாட்டி லேயே எப்படியெல்லாம் தாழ்வுறும் என்பதை அவன் புலப்படுத்துகிருன். முகமத் கோரி பிரித்வி ராஜை தோற்கடித்த சோக நிகழ்ச்சி வரை கவிஞன் தனது கதை யைச் சொல்லுகிருன். யுத்தங்களையும், இயற்கையையும் பற்றிய வருணனைகள், இதிகாச காம்பீரியம் படைத்தவை. கடைசி யுத்தத்திற்கு முன்னுல் ஹிந்து சேனுபதி தேச பக்தி ததும்பச் செய்யும் உரையும் மறக்க முடியாதபடி உன்னதமாக அமைந்துள்ளது.

**வாரிசுகள்**

ராதா நாத், பக்கீர் மோகன், மதுசூதன் ஆகிய ஒவ்வொருவருக்கும் ஒரு சிறிய பரம்பரை உண்டு. அவற்றில் சிலவற்றைக்கூட ஆராய இங்கு இடமில்லை. எனினும் இருவரைக் குறித்துச் சுருக்கமாகப் பிரஸ்தா பிப்பது அவசியம். ஒருவர் சொந்த கற்பனைத் திறனுடன் விளங்கினுர். மற்றொருவர் சாதாரணமான கவிதா உயர்வு படைத்தவர்.

ராதாநாத்தையும், மதுசூதனையும் பின்பற்றி எழுதி னுர் நந்தகிஷோர் பால். நாட்டுப் பாடல்கள், சம்பிர தாயங்கள் முதலியவற்றை நவீன இசைப் பாடல்களில் புகுத்தினுர் அவர். ''பள்ளி சித்ரா'' (கிராமத் தோற்றம்) என்பது ஒவ்வொரு ஒரியா மகனின் இருதயத்திலும் பழைய கால நினைவுகளை தோற்றுவிக்கும். நவீன நாகரிகத்தின் மோதல் காரணமாக, மீள முடியாதபடி அழிந்துவிட்ட, அமைதியான, கவர்ச்சிகரமாக தன் னிறைவு பெற்றுப் புனிதமடைந்த அந்தக் கிராம வாழ்க்கையை அக்கவிதைகளில் காணலாம். ''நானு பாயா கீத்'' (பல பித்துப் பிடித்த பாடல்கள்) குழந்தைகளுக் கான கவிதைத் தொகுப்புகளில் மிக முக்கியமானது.

கங்காதர மேஹர் சாம்பல்பூரைச் சேர்ந்த நெசவுக்

காரக் கவிஞர். அவரது கவிதைத் திறன் குறிப்பிடத் தக்கது. படிப்பு சொற்பம். ஆனால் பழைய புராண விஷயங்களை எடுத்துக் கொண்டு, புதிய மெருகும் ரசனையும் கலந்து புத்திசையைப் புகுத்தி, எதுகை மோனை சேர்த்து, ஒரிஸ்ஸாவில் முன் எப்பொழுதும் கண்டும் கேட்டுமிராத பிரத்தியட்ச ஸ்வரூபங்களை அவர் சிருஷ்டித்தார். சாம்பல்பூர் ஜவுளி உலகப் பிரசித்த மானது. அது ஜீவனுக்கான குலத் தொழில். கவிதையை ஜீவசக்தியுள்ள, ரம்மியமான, கவர்ச்சிகரமான கலையாகப் பாவித்து அஞ்சலி செலுத்தினர் மேஹர். அவரது ஒவ்வொரு காவியமும் சீனச் சித்திரத் தொடர்போன்றது. ஜீவசக்தியும், உணர்ச்சி மிகுதியும், வர்ண ஜாலமும் நிகழ்ச்சி நிலைகளும் கொண்டது. தாம் எடுத்துக் கொண்ட விஷயங்களின் வரம்பு குறுகியதாக இருந்த போதிலும், ஒவ்வொன்றையும் ஒரு சிறு சொர்க்கமாகவே அவர் படைத்துவிட்டார். அவரது ஈரடி, நாலடிப் பாடல்களில் பெரும்பாலானவை மக்களது வாழ்க்கையில் ஒன்றிவிட்டன. மிகச் சிறந்த கவிதைக் கலைக்கு எடுத்துக்காட்டாக அவரது பாடல்கள் மதிக்கப்பெறுகின்றன. அவரது எதுகை மோனைகள் சோடையற்றவை. இசை மிகுந்தவை. "தபஸ்வினி" என்ற காவியத்தில் அவர் சிருஷ்டித்துள்ள 'சீதை' பெண் குலத்தின் லட்சிய தெய்வத்தை, உயர்ந்த வகையில் அமைத்துக் காட்டுகின்றது.

## சத்தியவாதி மரபு

ராதாநாத், மதுசூதன் ஆகியோரின் சீடர்கள் இந்த நூற்றாண்டின் மூன்றுவது பத்தாண்டுவரை அவரது மரபையொட்டி எழுதி வந்தனர் என்றும் முதல் பத்தாண்டிலேயே அவர்களது இலக்கியச் செல்வாக்கு காலியாகிவிட்டதாகவே சொல்லவேண்டும். புதிய அறிஞர்

குழு ஒன்றைத் தோற்றுவித்துவிட்டு அது வெளிக்குப் புலப்படாமலேயே மறைந்துவிட்டது.

ஒரிஸ்ஸா பிரிட்டிஷ் ஆட்சியின்கீழ் வந்து சரியாக நூறு ஆண்டுகள் கழித்து, 1903-ல் "உத்கல் சம்மிளனி" தோன்றியது. ஒரியா மொழி பேசும் பகுதிகள் நான்கு வெவ்வேறு மாகாணங்களில் சிதறுண்டு கிடந்தன. அவற்றை ஒரே அமைப்பாக இணைக்க வேண்டுமென்று கோரிய அந்த மேடையில், மகாராஜாக்களும் மக்களும் ஒன்றுகூடினர். மொழிவழி ராஜ்ய அமைப்புக்கு இதுவே முதல் கோரிக்கை என்று கூறலாம். 1903-ம் ஆண்டிலிருந்து முதல் உலக யுத்தம் முடிவுறும் வரை, அதாவது காந்திஜி தோன்றி அவரது ஒத்துழையாமை இயக்கம் தலைதூக்கிய காலம்வரை, இதுவே ஒரியர்களின் ஆழ்ந்த கனவாகவும், சுறுசுறுப்பான அபிலாஷையாகவும் இருந்து வந்தது. இந்தத் தேசிய உணர்வின் பிரதிநிதியாக நவீன இந்தியாவில் தோன்றிய மகாபுருஷர் பண்டித கோபபந்து தாஸ் (1877—1928). கவிதை கட்டுரை மூலமாகவும், தமது வாசாலகத்தாலும் ஒரிஸ்ஸா மக்களை அவர் ஈர்த்தார். மக்களின் இதயத் துடிப்பை அவரது சொற்கள் எதிரொலித்தன. ஒரு வரலாற்றுச் சித்திர மண்டபம், ஒரு தோட்டப் பள்ளி ஆகியவற்றை பூரியருகில் சசி கோபால் என்ற ஊரில் அவர் தோற்றுவித்தார். புலமை மிகுந்த பண்டித நீலகண்டதாஸ், கோதாவரீச மிச்ரா, கிருபாசிந்து மிச்ரா ஆகியோர் (அன்னிய ஆட்சியின் கீழ் நிறைய சம்பளத்துடன் கூடிய பதவிகளை வகித்திருக்கத் தகுதியுள்ளவர்கள்) சொற்ப ஊதியம் பெற்று, இங்கே பணியாற்ற முன்வந்தனர். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு இந்தப் பள்ளிக்கூடம் ஒரிஸ்ஸாவின் கலாகேந்திரமாக விளங்கியது. கல்வி, இலக்கியத் திருப்பணி மூலம் சமுதாயச் சீரமைப்பில், பண்டித கோபபந்துவின் ஊக்கமிகு தலைமையின் கீழ் எல்லோரும் சிரத்தையுடன் பங்கு பற்றினர். ஆனால் அடிப்படையில்

இது பழம் பெருமையை புதுப்பிக்கும் இயக்கமாகவே உருவாகியது. வேத காலத்துப் பண்பாட்டிற்கு திரும்பச் சென்று, எளிய வாழ்வும், உயர்ந்த சிந்தனையும் கூடிய லட்சிய நிலை வற்புறுத்தப்பட்டது. ஒவ்வொரு தனி நபரின் வாழ்க்கையும் சமுதாயத்திற்காக, மனித சமூகத் துக்காக, கீதையில் கூறியிருப்பது போல, இடையறுது தியாகம் செய்வதாக, மறுமலர்ச்சி இயக்கமாக அமைய வேண்டும் என்று போதிக்கப்பட்டது. ஆனால் கோபபந்து தாஸின் வாழ்க்கையில் தவிர மற்றப்படி இந்த லட்சியங் கள் அனுஷ்டானத்திற்கு வரவில்லை. எனவே தேசிய வாழ்வில் பெரிய தார்மிகச் சக்தி என்ற வகையில் இந்த ஸ்தாபனம் உருப்படியாக ஏதையும் செய்ய முடியாது போயிற்று.

ஆனால் அது பனியாற்றிய குறுகிய காலத்தில் தோற்றுவித்த நல்ல இலக்கியம், அதற்குச் சிறந்த நினைவுச் சின்னமாக அமைந்துள்ளது. "சத்யவாதி" (உண்மை விளம்பி) என்ற மாதப் பத்திரிகையிலும் "சமாஜ்" என்ற வாரப் பத்திரிகையிலும் கோப பந்து தமது உருக்கமான உணர்ச்சிகளையும் அபிலாஷை களையும் நல்லாசிகளையும் வழங்கினர். ஒரியாவிலேயே அது தன்னிகரற்றதாக, கம்பீரமான நடையுடன், சொல்லாட்சியுடன், தூய்மையுடன் சிந்தனைச் சீர்மை யுடன், உண்மையான கவிதா ரசனையுடன் திகழ்ந்தது. 'பந்தீகா ஆத்ம சிந்தன்' 'ஒரு கைதியின் தனியுரை' என்ற அவரது பாட்டு ஒரிஸ்ஸாவில் நாட்டுப் பாடலைப் போல புகழ்பெற்றுள்ளது.

கோபபந்துவின் நெருங்கிய சீடர்களில் முக்கிய மானவர் பண்டித நீலகண்ட தாஸ். "ஆரிய ஜீவன்" என்ற நூலில் பண்டிதருக்கே உரிய, கருத்துச் செறிவுள்ள, பிராம்மண லட்சியத்தை அவர் பிரசாரம் செய்தார். கொனர்காவைப் பற்றி எழில் மிகுந்த காவியம் ஒன்றை யும் அவர் இயற்றியுள்ளார். சத்யவாதி விஹாரத்தைச்

சேர்ந்த மாணவர்களை அங்கு அழைத்துச் சென்று காண்பித்து, ஒரிஸ்ஸாவின் வரலாற்றை, சிந்தனையை ஊக்குவிக்கும் சிறப்புமிக்க பாணியில் அவர்களுக்கு எடுத்துரைப்பதாக அது அமைந்துள்ளது. அரசியல் பாதையில் நீண்ட காலம் சஞ்சரித்த பிறகு, இலக்கிய உலகிற்கு பண்டித தாஸ் மீண்டும் திரும்பியுள்ளார். ஒரியா மக்களின் சமூக, இலக்கிய சரித்திரத்தை "உடியா சாகித்யர் கிரமபரிணும்" (ஒரிய இலக்கியத்தின் படிப் படியான வளர்ச்சி) என்ற நூலில் விவரித்துள்ளார். இது மிகச் சிறந்த படைப்பு என்று மதிக்கப் பெறுகிறது. இதே மரபைச் சேர்ந்த பண்டித கிருபா சிந்து மிச்ரா "கொனர்கா", "பாராவதி" என்ற இரண்டு நூல்களை இயற்றியுள்ளார். அவை முதல் தரமான சரித்திர சிருஷ்டிகள் என்று போற்றப் பெறுகின்றன. பண்டித கோதாவரீச மிச்ரா நாட்டுப் பற்று ததும்பும் நாடகங்களையும், கவிதைகளையும், இணையற்ற சிந்துக்களையும் இயற்றியுள்ளார். ஒரிஸ்ஸாவில் ஒரு குழுவினர் சேர்ந்து மொத்தமாக சிருஷ்டித்த சிறப்பான இலக்கிய வகை என்ற பெருமை இம்மூவரது நூல்களுக்குத்தான் உண்டு. சத்யவாதி மரபு மறைந்துவிட்டது. அதற்குக் காரணம் எதுவாக இருந்தபோதிலும், ஒரிஸ்ஸாவின் தேசிய வாழ்க்கையில் அது ஒரு சூன்யத்தை ஏற்படுத்திவிட்டது. அதை இனி நிரப்பவே முடியாது. வங்காளத்துக்கு சாந்தி நிகேதன் செய்த தொண்டைப் போலவே, தான் பணியாற்றிய குறுகிய காலத்தில் ஒரிஸ்ஸாவுக்கு அது சேவை புரிந்தது.

### நாடகமும் நாடக மேடையும்

இவ்வாண்டுகளில் கண்ணியமான இலக்கிய வகை என்ற புகழ் நாடகங்களுக்கு மெதுவாக கிடைக்கலாயிற்று. ஒரிஸ்ஸாவின் தேசிய வாழ்விலும் அது மெதுவாக இடம் பெறலாயிற்று. ஒரிஸ்ஸாவில் வங்காளி நாடகங்களை

வங்காளி சங்கங்கள் நடத்திக் காட்டி வந்ததற்கு அறை கூவலாக அது தோன்றியது. ராம சங்கர ராய், காம பால மிச்ரா, பிகாரி சரண் பட் நாயக், கோவிந்த சுரதேவ் ஆகியோர் இத்துறையில் உழைத்து, நாடக அரங் கிற்கு கண்ணியத்தையும் செல்வாக்கையும் அளித்தனர். பொழுது போக்குக்காக மட்டுமின்றி ஆசார சீர்திருத்தங் களுக்காகவும், தேசிய மறுமலர்ச்சிக்காகவும், நாடகங் களைப் பயன்படுத்தி வழி காட்டினர். தமது சரித்திர நாட கங்களின் விஷயங்களுக்காக, வங்காள நாடகாசிரியர்கள், ராஜஸ்தானம், மகாராஷ்டிரம் ஆகியவற்றின் சரித்திரங் களை துருவிப் பார்க்க வேண்டியிருந்தது. ஆனால் ஒரிஸ்ஸா நாடகாசிரியர்களுக்கு ஒரிஸ்ஸாவின் சரித்திரத்தி லேயே நிறைய கதாநாயகர்கள் கிடைத்தனர். காரவேலா, கபிலேந்திரா, புருஷோத்தம், அனங்கபீமன் ஆகிய மன்னர்களின் கீழ் ஒரியர்கள் சாம்ராஜ்யங்களையே அமைத்து ஆண்டார்கள். நெடுங்காலமாகப் பிரிந்து போய் சிதறுண்டு கிடந்த மக்களுக்கு இது உகப்பாக இருந்தது இயற்கையே.

இதே காலத்தில் வைஷ்ணவ பாணு என்பவர் பழைய கிராமிய நாடக முறையாகிய யாத்திரையை புதுமைப் படுத்தி, தற்கால நிலைமைகளைப் பிரதிபலிக்கச் செய்து, அரங்கேறக்கூடிய நாடகமாக உருவாக்கித் துணை புரிந் தார். அதே சமயத்தில் இசை நாடக எழில்கள் கூடவே இருக்கும்படி கவனித்துக் கொண்டார். ஒரிஸ்ஸாவின் கிராமங்களில் தன்னந்தனியராக இந்தத் திறன் படைத்த வீரர் ஆற்றிய பணி நவீன இந்தியாவில் ஈடு இணை யற்றது.

### காந்தி, டாகுர், 'பசுமை'யாளர்

இதற்குள் காந்தியச் சூறுவளி நாடெங்கும் வீசியது. பண்டித கோபபந்துவும் அவரது ஊழியர்களும், தேசிய இயக்கத்தில் குதித்தனர். இருந்த ஒரே கலாகேந்திரம்

ஒரிஸ்ஸாவில் நடவாது போய்விட்டது. சத்யவாதி கோஷ்டி இவ்வாறு விலகிவிடவே, கட்டாக்கில் இருந்த காலேஜ் மாணவர் குழு ஒன்று வங்காளி அச்சில் வார்த்த புதிய நாஞவித இலக்கிய படைப்புக்களைக் கொணர்ந்தனர். அது டாகுரின் புகழும் பெருமையும் உச்சநிலையில் இருந்த காலம். அவரது செல்வாக்கு எதிர்த்து நிற்கக் கூடாதது என்பது உண்மையே. அந்த இளைஞர்கள் அடியோடு அதற்கு இரையாக்கிவிட்டனர். டாகுரின் கவிதை ஞானக் களஞ்சியம். ஆனல் அதிலிருந்து உண்மையிலேயே மதிப்புள்ள எதையும் அவர்கள் அடைந்ததாகத் தெரியவில்லை. அவரது ஒரு சில சாதாரண எதுகைத் திட்டங்களையும் வெளிப்பகட்டுக் களையும் பின்பற்றி அவர்கள் எழுதினர். டாகுரின் கவிதையில் சில சமயம் நாம் காணும் முரண்பாடும், அறிவுக்குப் புலப்படாத தன்மையும், அவர்களது பாடல் களில் புகுந்து கொண்டன. தம்மை அவர்கள் "சபூஜா" அல்லது பச்சை வர்ணத்தவர் என அழைத்துக் கொண்டனர். பழைய வைதிக சமுதாயக் கருத்துக்களை எதிர்த்து வங்கத்தில் டாகுரும், பிரமத சௌதுரியும் பிரசாரம் செய்தபோது கையாண்ட உத்திகளையே இவர் களும் பின்பற்றினர். வங்காளி "சபூஜ் பத்ரா"வைப் போல இவர்களுக்கும் ஒரு பிரசார ஏடு இருந்தது. அதன் பெயர் "யுக வீணை" (காலத்து யாழ்).

ஒரிஸ்ஸாவின் இலக்கிய உலகில் ஐந்து, ஆறு ஆண்டுகளுக்கு இக்குழுவினர் விசேஷ பரபரப்பை விளை வித்தனர். அவர்கள் படைத்துக் கொடுத்தவை நாவல் கள். பெரும்பாலும் அவை இறக்குமதிச் சரக்குகள், நாட்டின் மண்ணில் முளைத்தவை அல்ல என்பது மக்க ளுக்குத் தெரியும். சொந்தப் பிரசுராலயங்களையும் அவர் கள் ஏற்படுத்திக் கொண்டனர். ஆனல் எழுந்தது போலவே இக்குழு அடங்கியும் விட்டது. பிறகு பசுமை யானது மஞ்சள் வர்ணமாக மாறிவிட்டது.

எனினும் 'பசுமை'யாளர் அடுத்த இருபது ஆண்டுகள் வரை இளந்தலைமுறையினரைப் பெரிதும் கவர்ந்தனர். டாகுரின் எதுகை அமைப்புகள் ஒரிய இலக்கியத்தில் வேரூன்றவும், இன்னும் பல பிராந்திய உத்திகள் நிலைத்து நிற்கவும் அவர்கள் துணை புரிந்தனர். அன்னதா சங்கர ராய், வைகுண்டநாத் பட்நாயக் ஆகியோர் எழுதிய அக்காலத்துப் பாடல்களில் பல ஒரியா மொழிப் பெட்டகத்தின் சிறப்பணிகள் வரவேற்க வேண்டியவை என்று விமரிசகர்கள் இன்றும் கருதுகின்றனர். இந்தப் பாடல்கள் ஒரு புதிய இசை நயத்துடன் கூடிய அற்புத உலகிற்கு அழைத்துச் செல்கின்றன. பிரேமை, சௌந்தரியம், வாழ்க்கை, கற்பனைச் சித்திரம் முதலியன நிறைந்த புதிய ஆதரிசங்கள் தென்படுகின்றன. இவற்றில் காணப்பெறும் சொல்லாட்சியின் இசை நயம் புதுவகையானது. பண்பாடு மிகுந்த ஒரியர்களின் காதில் இவை நாராசம்போல விழுந்தன. அவர்கள் சாரளா தாஸ் முதல் கங்காதர மேகர், நீலகண்டதாஸ் வரையுள்ள நெடுநாளைய கவிதா பரம்பரையின் காவிய ரசனையில் ஊறியவர்கள். இந்தப் பரம்பரை ஒரியா மண்ணுக்கே உரித்தானது. மொழியின் மரபும், மக்களின் ஆன்மாவும் அதில் இழைந்து ஓடின. "வாசந்தி" என்ற நாவலை இந்தக் குழு பொதுப்படைப்பாக வெளியிட்டது. அது பரபரப்பை விளைவித்தது. பின்னர் வந்த நாவலாசிரியர்களுக்கு அது முன்னோடியாக அமைந்தது. 'மரடீர் மானிஷ்' (மண்ணில் முளைத்த மனிதன்[1]) என்ற நாவலை காளிந்தி சரண் பாணிக்ராஹி எழுதினர். இந்தக் குழுவின் புகழ் உச்சநிலையிலிருந்தபோது இது வெளியாயிற்று. அவரது கதைகளில் பல பரவலாகப் படிக்கப்பெற்றன. இந்தப் புகழ் தகுதியின் விளைவாகக் கிடைத்

1. பிற இந்திய மொழிகளில் மொழி பெயர்ப்பதற்கு சாகித்திய அக்காதெமியால் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது.

தது. காளிந்தி சரண், இக்காலப் பிரச்னைகளைப் பற்றி எழுதும் பணியாளராக இன்று திகழ்கிறார். அவரது உரைநடை முக்கியமாகப் போற்றப்படுகிறது.

## மக்களது கவிஞர்கள்

பசுமையாளரைத் தொடர்ந்த சோஷலிஸ்டுகளும், கம்யூனிஸ்டுகளும் 1930-க்குப் பிறகு முன்னுக்கு வந்தனர். பிராய்ட், வால்ட் விட்மன், கார்ல் மார்க்ஸ் போன்றோரை அவர்கள் கூடவே கொணர்ந்தனர். முன் போலவே இன்றும் ஒரிஸ்ஸா பெரும்பாலும் வேளாண்மை மிகுந்த ராஜ்ய மாகவே இருந்து வருகிறது. நேற்றுவரை அங்கு நெல் அறைக்கும் இயந்திரங்கள் தவிர வேறு தொழில்கள் இருந்ததில்லை. எனினும் வர்க்கப் போராட்டத்தை விஷயமாகக்கொண்டு, அனல் கக்கும் கவிதைகளை அவர்கள் இயற்றி வெளியிட்டனர். தனக்குத் தெரியாமலேயே, கட்டாக்கின் புழுதிபடிந்த, அசிங்கமான தெருக்களில் ரிக்ஷா இழுக்கும் ஏழை, எண்ணற்ற சிறு கதைகளின் நாயகனாகி விட்டான். புதிய வழிகளை ஏற்றுக்கொள்ள மறுத்தவர்கள் பழங்காலத்து கற்பனைக் கனவாளர் என்ற நிந்தனைக்கு உள்ளாயினர். இந்த வர்க்கப் போர் உண்மையிலேயே வந்து, இருந்து, மறைந்த ஒரு ஸர்வ தேச மோஸ்தர். மக்களது கவிஞர்கள் எனத் தம்மை வர்ணித்துக் கொண்டவர்களது மார்க்ஸீயச் சொல்லாட்சி, கற்றறிந்தவர்கள்கூடப் புரிந்துகொள்ள இயலாததாக இருந்தது.

ஏராளமான இடதுசாரி எழுத்தாளரிடையே திறமை சாலிகள் என்று சிலர் பிரகாசிக்கவே செய்தனர். ஒரியாக் கவிதை—உலகில் அவர்களது புகழ் நிலைத்திருக்கும். இதற்கு காரணம் ஒரு சாரார் சார்பில் பிரசார ரீதியில் அவர்கள் செய்த உபதேசம் அல்ல. உண்மையான மனிதாபிமானமும், சமுதாய நிலையைப் பற்றிய பிரத் யட்ச வருணனையும் அவற்றில் இருந்ததே முக்கிய

காரணம். ஸசீ ர்ரவுத் ராய் இயற்றிய 'பள்ளிஸ்ரீ' ஒரிஸ்ஸாவில் நியாயமான புகழை அடைந்துள்ளது. அவரது சிறு கதைகள், பாடல்கள் சில தற்கால வாழ்வின் ஆசாபங்கத்தை வெளிப்படுத்துகின்றன. அவை நிலைத்து நிற்கக்கூடியவை. அனந்த பட்நாயக்கின் பாடல்கள் சிலவும் மனமோகன மிச்ரா எழுதியுள்ள உணர்ச்சி மிகுந்த சில பாடல்களும், அவற்றின் ராஜீயச் சார்பு எவ்வாறு இருந்தபோதிலும், பலரது மனதை உருக்கியுள்ளன.

இப்பொழுது இலக்கிய கர்த்தாக்கள் இடதுசாரி சித்தாந்தத்தை சகஜமாகக் கையாள்கின்றனர். ஆனால் மிரட்டும் ரீதியில் போர்க் கோஷம் செய்வது இப்பொழுதெல்லாம் காணப்பெறுவதில்லை. எலியட், எஜ்ரா பௌண்ட் போன்றோரின் அடிச்சுவட்டில் எழுத்தாளர் செல்கின்றனர். வேண்டுமென்றே முன்னுக்குப் பின் முரணாகவும், கோர்வை இல்லாமலும் செய்யுள் வடிவில் 'சேதித்துப் போட்டு முற்போக்குக் கவிதை என்று வலம் வரச் செய்வது வரவர அதிகரித்து வந்துள்ளது. மரபையொட்டி செய்யுளில் எழுதுவதாக ஏன் இடையருது பாசாங்கு செய்து வருகின்றனர் என்பதைப் புரிந்து கொள்வது சிரமமாக இருக்கிறது.

சென்ற 30 ஆண்டுகளுக்கு மேலாக பரபரப்பான இலக்கியப் படைப்புகள் தோன்றி மறைந்த போதிலும் எந்த ராஜீயப் பற்றுதலும் இல்லாமலும், இடதுசாரி, வலதுசாரி அபிமானம் இல்லாமல், தவறைக் கண்டித்தும் சரியாக இருப்பதைப் புகழ்ந்தும், நூலை இயற்றியவர் யாரெனப் பாராமல் நியாயத்தைப் போற்றும் தைரியமான எழுத்தாளர்கள் இருக்கவே செய்கிறார்கள். பொறுமையுடன் இவர்கள் இலக்கியப் பண்பாட்டை வளர்த்து வருகிறார்கள். இந்தக் குழுவைச் சேர்ந்தவர்கள் ராதா மோகன் பட்நாயக். அவரது பாடல்களில் எழிலும், அன்பும், வீரமும், பழுதற்ற எதுகை அமைப்புடன் காணப்பெறும். பழைய இலக்கியங்களில் அவர் ஆழ்ந்த

புலமை மிகுந்தவர். யாப்பிலக்கணமீ நன்கு அறிந்தவர். டாக்டர் குஞ்ச விஹாரிதாஸ் சாந்தி நிகேதனத்தைச் சேர்ந்தவர். அவர் இலக்கியத்திடம் தூய காதல் கொண்ட வர். ஒரிஸ்ஸாவின் நாட்டுப் பாடல்களை தொகுக்கும் மகத்தான பணியில் அவர் இப்பொழுது ஈடுபட்டுள்ளார். மொத்தத்தில் கவிதைக்குக் கிராக்கி குறைந்து வருகிறது. ஒன்றிரண்டு கவிஞர்கள் மட்டும் இதற்கு விலக்கு என்று சொல்லலாம். சென்ற பத்து ஆண்டுகளில் நாவல்களும், நாடகங்களுமே ஒரிஸ்ஸாவில் அதிகமாக வெளி வந்துள்ளன.

### கற்பனைக் கதை, நாடகம், உரைநடை

பக்கீர் மோகனுக்குப் பிறகு ஒரிஸ்ஸாவில் நாவல்கள் நெடுநாளைய இடைவெளிக்குப் பிறகுதான் தோன்றின. ஒவ்வோர் ஆண்டும் ஒன்றிரண்டு பிரசுரிக்கப்பட்ட தென்றாலும் அவை குறிப்பிடத்தக்கவாறு இல்லை. கற்பனைக் கதை இலக்கியத்தில் அடுத்தபடி திளைத்தவர்கள் "பசுமை"யாளர். ஆனால் அவர்களது முயற்சி இரண்டு நாவல்களில் அடங்கிவிட்டது. சென்ற 10 ஆண்டுகளில் ஒரியா இலக்கியத்தில் கற்பனைக் கதைகள் அலைமோதி உள்ளன. கோபிநாத், கனுசரண் என்ற மகாந்தி சகோதரர்கள் சந்திரமோனிதாஸ், நித்யானந்த மகாபாத்ரா ஆகியோர் இவ்வகையில் குறிப்பிடத்தக்கவர்கள். சாதாரண துப்பறியும் கதை வகைகள் போக சீரிய நோக்கத்துடன் எழுதப்பெறும் நாவல்கள் வெளி வந்துள்ளன. கனுசரண், கோபிநாத், நித்யானந்தா ஆகியோர் அவற்றை ஏற்றுள்ளனர். புதிய துறைகளை நாடி கோபிநாத்[1] ஆதிவாசிகளைப்பற்றி எழுதியுள்ளார். அவரது

1. 'அமிருதர் சந்தான்' என்ற அவரது நாவல் மலை ஜாதியினரின் வாழ்வைப் பற்றியது. 1955-இல் அதற்கு சாகித்திய அக்காதெமி பரிசு கிடைத்தது.

அண்ணன் கனு சமுதாய பிரச்னைகளை வைத்து நாவல் எழுதுகிறார். இருவரும் நிறைய எழுதித் தள்ளு கின்றனர்.

## நாடக அரங்கம்

ஒரிஸ்ஸா தனி ராஜ்யமாக அமைந்த பிறகு கட்டாக் நகர மக்களின் வாழ்வு செழித்தது. நாடக அரங்கம் சாசுவதமான அடிப்படையில் அமைவதற்கு ஆதரவு கிடைத்தது. ஒரிஸ்ஸாவில் இப்போது 4 நாடக அரங்குகள் இருக்கின்றன. நாடகம் இயற்றுவோருக்கு நல்ல வருவாய் கிடைக்கிறது. நாவல்களைப் போலவே நாடகங்களுக்கும் நல்ல கிராக்கி இருக்கின்றது. ஒரிய நாடக மரபை இடையறாது போஷித்து வருகின்றவர்கள் அசுவினி குமார கோஷ், காளிசரன் பட் நாயக் ஆகியோர். பண்டித கோதாவரீச மிச்ராவும், கோவிந்த சுரதேவும் உருவாக்கிய மரபைத்தான் அவர்கள் கையாள்கின்றனர். புராதன வரலாற்று நாடகங்களுக்கு மவுசு இருந்த காலம் போய் விட்டது. இன்று சமூக நாடகங்கள் அரங்கேறுகின்றன.

## உரைநடை

ராம் சங்கர், பக்கீர் மோகன் மரபினரின் நாவல்களும், ரத்னாகர் பதி, விபின் பிஹாரிராய், பண்டித நீலகண்ட தாஸ், சசிபூஷண் ராய் (ராதாநாத் ராயின் புதல்வர்) ஆகியோரின் கட்டுரைகளும் கோபால சந்திர பிரஹராஜின் சிந்தனைப் படைப்புகளும் கவிதா மணம் வீசும் பண்டித கோபபந்து தாஸின் கட்டுரைகளும் உரைகளுமாகச் சேர்ந்து ஒரிய உரைநடையை நல்ல உயர்ந்த தரமுள்ள தாக வளர்த்திருக்கின்றன. பழைய நூல்களிலும் இடைக் கால இலக்கியங்களிலும் விஞ்ஞானப் பிரிவுகள் மிகக் குறைவு. இதுவும் நிறை செய்யப்பட்டு வருகிறது. திற னாய்வுப் பணியும் நடைபெறுகிறது. ஒரியா இலக்கியத்தின் அதிகார பூர்வமான வரலாற்றை ஒரு சிறிய நூலாக தரி

ணீசரண் ராட் வெளியிட்டார். இந்நூற்றுண்டின் தொடக்கத்தில் அது வந்தது. பின்னர் பண்டித விநுயக மிச்ராவும் சூர்யநாராயண தாஸும் பெரிய அளவில் கனமான இலக்கிய வரலாற்று நூல்களை இயற்றியுள்ளனர். "உடியா சாகித்யர் கிரமபரிணும்" என்ற பெயரில் சமுதாய இலக்கியத் திறனுய்வு நூல் ஒன்றை இரண்டு பெரிய புத்தகங்களாக பண்டித நீலகண்ட தாஸ் வெளியிட்டிருக்கிருர். அண்மையில் பக்கீர் மோகன், கங்காதர மேகர் போன்ற தனிப்பட்ட கவிஞர்களைப் பற்றி ஏராளமான புத்தகங்கள் வெளிவந்துள்ளன. "உடியா பாஷாதத்துவ" என்ற மகத்தான மொழி ஆராய்ச்சி நூல் ஒன்றை பண்டித கோபீநாத நந்தசர்மா இயற்றியுள்ளார். இதுவும் இந்த நூற்றுண்டின் தொடக்கத்தில் வெளியாயிற்று. பண்டித விநுயக் மிச்ரா இதைத் தொடர்ந்து சிரமப்பட்டு பணியாற்றி கிரிஜா சங்கர்ராய், கோலக் பிஹாரி தாஸ் ஆகியோரின் துணையுடன் ஒரியா மொழியின் சரித்திரம் ஒன்றை எழுதியுள்ளார். சிறிதும் பெரிதுமாக ஒரு டஜன் அகராதிகள் இருக்கின்றன. "உடியா சப்த தத்வ போத அபிதான்" என்ற பெயரில் சொற்களின் மூல ஆராய்ச்சியுடன் கூடிய அகராதியும் வெளியாகியுள்ளது. பண்டித கோபீநாத் நந்த சர்மா இதன் ஆசிரியர். நான்கு மொழி அகராதி ஒன்றை மிகப் பெரிய அளவில் கோபால் சந்திர பிரஹராஜ் இயற்றி வெளியிட்டுள்ளார். "பூரண சந்திர உடிய பாஷா கோசம்" என்பது இதன் பெயர். இது ஏழு புத்தகங்கள் கொண்டது. இதை வெளியிட ஒன்றரை லட்சம் ரூபாய் செலவாயிற்று. அவசியமான, ருசிகரமான பலதரப்பட்ட தகவல்களைப் பொதுமக்களுக்கு வழங்கும் வகையில் நான்கு ஐந்து ஜனரஞ்சிதமான கலைக் களஞ்சியங்கள் வெளியாயின. இந்த முயற்சியை அடுத்து "உத்கலர்களின் கலைக் களஞ்சியம்" ஒன்றைக் கண்யமான புலமை மிகுந்தோரைக் கொண்டு தயாரிக்கும் பணியை உத்கல் சர்வகலாசாலை மேற்கொண்டிருக்கிறது.

அறிவியல் இலக்கியப் பசி ஒரிய மக்களிடையே நிதானமாக இருந்து வருகிறது. உலக சரித்திரத்தை எடுத்துக் கூறும் பெரிய நூல்கள், விவசாய புத்தகங்கள், ஹைட்ரஜன் குண்டு வெடியின் நியாய அநியாயங்கள் போன்ற நூல்கள் வெளி வந்துள்ளன. இளம் விஞ்ஞானி கள் "விஞ்ஞான பிரசார சமிதி" என்ற பெயருடன் ஒரியா மொழியில் விஞ்ஞானத்தைப் பிரபலப்படுத்த பாடு பட்டு வருகிறுர்கள். இத்துறையில் பணியாற்றியவர்களில் கோகுலானந்த மகாபாத்ரா, டாக்டர் பி. கே. பேகுரா ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். மனமோகன அச்ச கத்தைச் சேர்ந்த பிரபுல்ல குமார்தாஸ் துணிவு மிகுந்த பிரசுரகர்த்தர். நோபெல் பரிசுகள் பெற்ற எல்லோரது நூல்களையும் ஒரியா மொழியில் மொழிபெயர்த்து வெளி யிடும் பெரிய பொறுப்பை அவர் ஏற்றுக் கொண்டிருக் கிருர். ஐஸ்லாந்தைச் சேர்ந்த ஹால்டார் லாக்ஸ்னெஸ் என்பவரின் "சுதந்திர மக்கள்" என்ற நூலை ஆசியாவி லேயே முதலாவதாக மொழிபெயர்த்து வெளியிட்ட பெருமை அவருக்கு உண்டு. ஜனநாயகம், பார்லி மெண்டரி ஆட்சி முறை, சமூக, ராஜீய ஆராய்ச்சி முதலிய துறைகளில் நூல்களையும் கட்டுரைகளையும் இயற்றி வெளி யிடுவதை ஒரு திருப்பணியாக நடத்தி வருபவர் வைத்ய நாத மிச்ரா என்ற இளம் கல்லூரி விரிவுரையாளர். கற்றறிந்த ஒரிஸ்ஸா மக்கள், தேசிய நல்வாழ்வுக்கு ஜீவாதாரமான இந்த விஷயங்களை நன்கு அறிந்து கொள்ள வேண்டுமென்பது அவரது அவா. வைத்தியம், மனேதத்துவம், நியாயம், கால்நடைகள், கோழிப் பண்ணை முதலியவை பற்றிய நூல்கள் கடைகளுக்கு வந்து கொண்டிருக்கின்றன. "உத்கல் சாகித்யா" என்ற நூலில் யானைகளைப் பற்றிக் காணப் பெறுவன போன்ற அதிகார பூர்வமான விஷயங்களை வேறு எந்த இந்திய மொழியிலும் காண முடியாது. தொழில் துறை, விஞ் ஞானத் துறை பற்றிய கலைச் சொற்கள் துண்டு துண்டாக

வெளியிடப்பட்டுள்ளன. டாக்டர் ஆர்த்த வல்லப மகாந்தியைத் தலைவராகக் கொண்ட ஒரு கமிட்டியினர், சர்க்கார் சார்பில், இதற்காக உழைத்து வருகின்றனர். குழந்தை இலக்கியமும் ஏற்றம் கண்டு வருகிறது. இதில் பெரிய தொகைகளை முதலீடு செய்ய வேண்டியிருப்பது ஒரு சிரமம். "சிசு சங்களி" (குழந்தைகளின் கருவூலம்) என்பது சரஸ்வதி அச்சக வெளியீடு. அது இன்னும் பூர்த்தியாகவில்லை. எனினும் குழந்தைகளுக்கான சிறந்த கலைக் களஞ்சியம் என்று அதைக் கூறலாம்.

பழங்காலத்திலும் இடைக்காலத்திலும், இன்றும்கூட எழுத்தாளரிடையே ஒரிஸ்ஸாவில் பெண்கள் இருந்திருக்கிறார்கள். இருவர் சந்தேகமற நல்ல திறன் படைத்தவர்கள். காலம் சென்ற டாக்டர் குந்தளா குமாரி சாபத் டில்லியில் வாழ்ந்து மரித்தார். தமது காலத்தில் கவிதைகள், நாவல்கள் இயற்றியும், தேசப் பணியாற்றியும் அவர் புகழ் அடைந்தவர். ஸ்ரீமதி வித்யுத் பிரபாதேவி திறமை மிகுந்த எழுத்தாளராக விளங்குகிறார். அவரது இசைப் பாடல்களின் ஓட்டம் இயற்கையானது, எதுகை பிழையற்றது, கற்பனை பிரகாசமானது.

ஒரிஸ்ஸா தனி ராஜ்யமாவதற்கு முன்னர் இருந்ததை விட இப்போது நிலவரம் பிரகாசமாகக் காணப்படுகிறது. நான் காலேஜில் படித்த காலத்தில் 1930-ஆம் ஆண்டுக்குப் பிறகுகூட, ஒரிஸ்ஸாவில் ஒன்றிரண்டு வாரப் பத்திரிகைகள் மட்டுமே இருந்தன. இப்போது ஓர் ஆங்கில தினசரி உள்பட ஐந்து பத்திரிகைகள் வெளியாகின்றன. புத்தக வெளியீட்டுத் தொழிலும் சிறப்பாக நடைபெறுகிறது. ஒரிஸ்ஸாவின் எதிர்காலம் சிறப்பாக இருக்கும் என்ற நிச்சயமும் நம்பிக்கையும் ஏற்பட்டுள்ளது. பயன்படுத்தக்கூடிய இயற்கையான வள மிகுதியும், கலை, பண்பாட்டுத் துறைகளில் வாய்த்துள்ள சீரிய சம்பிரதாயமும் இடைவிடாது ஏற்றம் கண்டு புதிய வடிவங்களில் உருப் பெறுவதே இதற்குக் காரணம்.

## SELECT BIBILIOGRAPHY OF ORIA LITERATURE

*Orissa.*
By W. W. Hunter.

*A Comparative Grammar of the Four Eastern Indian Languages.*
By John Beames.

*Typical Selections of Oriya Literature* (3 *Vols.*).
By B. C. Majumdar, Calcutta University.

*Modern Oriya Literature.*
By Priya Ranjan Sen, Calcutta University.

*Linguistic Survey of India.*
By G. A. Griersen, Vol. V, pt. 2, pp. 367–449.

# உருது இலக்கியம்

குவாஜா அஹ்மத் பரூக்கி

## சரித்திரச் சூழ்நிலை

1857-ம் வருஷத்து தேசிய எழுச்சி விசேஷ பொருள் படைத்த நிகழ்ச்சி. மொகலாய சாம்ராஜ்யம் காலாவதி யாகிவிட்டது. மூன்று நூற்றுண்டுகளின் ஆட்சியில் அது போஷித்து வளர்ப்பதற்கு முயன்ற பண்பாடு மண் ணோடு மண்ணுகிவிட்டது. தொழில்துறைப் புரட்சியும், புதிய விஞ்ஞானங்களும் அளித்த வசதிகளைப் பயன் படுத்திக்கொண்டு பிரிட்டிஷார் இந்தியாவில் உறுதியாக வேரூன்றினர். தமது நலன்களுக்காக இந்தியாவைச் சுரண்டுவதற்கு அவர்கள் தடையற்றவர்களாக இருந் தனர். பழைய சுதேசிய அமைப்பு மாறி, புதிய அந்நிய அமைப்பு ஒன்று மேலோங்கியது. ஆனல் புது அமைப் பில் முற்போக்கு அம்சங்களும் சில நல்வாய்ப்புக்களும் இருக்கவே செய்தன. மேலைநாடுகளின் கல்வி கேள்வி களும், விஞ்ஞானமும் அதன் மூலம் நம்மை நெருங்கி வந்தன. நமது சமுதாய வாழ்வையும், மனோ நிலை களையும் அது பாதித்தது.

ஆனல் அந்நிய ஏகாதிபத்தியம் நிலைபெற்றதன் காரணமாக பொருளாதார, ராஜீயத் துறைகளில் பிரிட் டிஷ், இந்திய நலன்களிடையே கடுமையான மோதல் ஏற் பட்டது. 1857-ம் ஆண்டின் கலகம் ஒரு தனிப்பட்ட

நிகழ்ச்சி அல்ல, சரித்திரப் போக்கில் அகஸ்மாத்தாகத் தோன்றியதும் அல்ல. ராஜீய வகையிலும், பண்பாட்டுத் துறையிலும், பிரிட்டிஷ் ஜயத்தின் காரணமாக கஷ்டத்துக்கு உள்ளான இந்திய மக்களின் அதிருப்தியானது மலைபோல பெருகிக் குவிந்துபோனதன் விளைவே அது. அது வெறும் ராணுவக் கலகம் அல்ல. டாக்டர் டப் கூறிய படி, அது கலகத் தன்மையுடன் கூடிய புரட்சி. எதிர் காலத்தில் நடைபெறவிருந்த சுதந்திரப் போராட்டத்திற்கு அது ஒரு மேடை—ஒத்திகையாக அமைந்தது. ஐக்கிய இயக்கம் என்ற ஒரு சம்பிரதாயத்தை அது தோற்றுவித்தது. பழைய அமைப்பின் சமுதாய சக்திகள், 1857-ம் ஆண்டில் தமது ஆதிக்கத்தை மீட்டுக்கொள்ளும் இறுதியான முயற்சியில் தோல்வியுற்றன. 1870-க்குப் பிறகுதான் புதிய சமுதாய சக்திகள் தோன்றலாயின.

இந்திய தேசிய காங்கிரஸ் 1885-ல் தொடக்கப் பெற்றது. 1870-க்கும் 1885-க்குமிடையே உள்ள காலத்தில் கிராம மக்களிடையே அதிருப்தி வளர்ந்தது. கைத்தொழில்கள் நசுக்கப்பட்டன. கைவினைஞர்களின் தொழில்கள் மங்கின. 1867-க்கும் 1885-க்குமிடையே பயங்கரமான பல பஞ்சங்கள் தோன்றின. 1875-ல் தக்காண விவசாயிகள் கலகம் செய்து எழுந்தனர். தேசியப் பத்திரிகைகள் படிப்படியாக வளர்ச்சி கண்டன. படித்த நடுத்தர அறிவாளிகளை பிற நாடுகளின் சுதந்திர அனுபவங்களும் நூல்களும் பெரிதும் ஊக்குவித்தன. அமெரிக்க மக்களின் சுதந்திரப் போர், ஆஸ்ட்ரிய ஆதிக்கத்திலிருந்து தேசிய விடுதலைக்காக இத்தாலி போரிட்ட வரலாறு, தாமஸ் பெயின், ஸ்பென்ஸர், மில், வால்டேர் போன்றோரின் நூல்கள், கரிபால்டி, மாஜினி ஆகியோரின் வாழ்க்கைச் சரிதங்கள் முதலியன அவர்களுக்குத் தெம்பூட்டின. தமது ராஜீய கருத்துக்களை வகைப்படுத்தி அவர்கள் வெளிப்படுத்தலாயினர். இந்திய மிதவாதிகள் முற்

போக்கு ரீதியில்தான் உழைத்தனர். ஆனாலும் வேலையில் லாத் திண்டாட்டம் வளர்ந்து வந்ததும், மக்களிடையே ஏற்பட்ட ஏமாற்ற உணர்ச்சியுமாகச் சேர்ந்து, இந்தியா வில் மிடுக்குடன் கூடிய தேசியத்தின் வளர்ச்சிக்கு வேகம் அளித்தன. 1905 முதல் 1918 வரையுள்ள காலத்தில் தேசிய இயக்கம் தீவிரமாகி, அறைகூவி அழைக்கும் சக்தி பெற்று, விரிவான சமுதாய அடிப்படையின் மீது உருவா கத் தொடங்கியது. முதல் உலக யுத்தம், ஹோம் ரூல் கிளர்ச்சி, யுத்த பிற்காலப் பொருளாதார நெருக்கடி ஆகி யவை இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் அஸ்திவா ரத்தை அரித்துவிட்டன.

ரௌலட் சட்டத்தை இயற்றியது, பஞ்சாப் ராணுவச் சட்ட அமுல், கிலாபத் கிளர்ச்சி ஆகியவை, தேசிய அதிருப்தி வளர்ந்து, பெருக்கெடுத்தோடுவதற்கு வாய்ப்பு அளித்தன. அரசியல் தலைவர்களுக்கு எதிரிடையாக உறுதியான நடவடிக்கைகளை பிரிட்டிஷ் சர்க்கார் எடுத் தனர். மௌலானா ஆஜாதின் "அல் ஹிலால்", மௌலானா முகம்மது அலியின் "காம்ரேட்", "ஹம் தார்த்" பத்திரிகைகளை அவர்கள் தடை செய்துவிட்ட னர். பிரசித்தி பெற்ற தலைவர்களை 1915-ல் சிறைப்படுத் தினர். கிலாபத் இயக்கத்தை உற்சாகத்துடன் மகாத்மா காந்தி ஆதரித்தார், 1921-ல் பிரசித்தி பெற்ற ஒத்துழை யாமை இயக்கத்தைத் துவக்கினார். தமது கடைசி மூச்சு இருக்கும்வரை இந்திய அரசியல் துறையில் அவரே ஆதிக்கம் பெற்று விளங்கினார். 1930 முதல் 1934 வரை யிலும், 1942-ல் (வெடித்த) தேசிய வெகு ஜன இயக்கங் களும், இரண்டாவது உலக மகா யுத்தமும் உருப்பெற்ற காலத்திலேயே, வகுப்புவாதச் சக்திகளும் உரம் பெற்று ஓங்கலாயின. இதன் விளைவாகத்தான் தேசம் இறுதியா கப் பிளவு பட்டு பாகிஸ்தான் உதயமாயிற்று. வகுப்பு வாதத்தை கருவறுப்பதற்காகத் தம்மையே ஜீவபலியாக அர்ப்பணித்தார் காந்திஜி.

## இலக்கியச் சூழ்நிலை

தேசிய வளர்ச்சியின் இந்த வரலாற்றில் எல்லாக் கட்டங்களிலும் உருது இலக்கியம் அதற்கு இசைவாகவே உருப்பெற்றது. மக்களது உள்ளக்கிடக்கை, உணர்ச்சிப் பெருக்கு, காதுடன் காது வைத்தாற் போன்ற கருத்துரைகள் ஆகியவற்றில் அது பிரதிபலித்தது. வாழ்க்கையை அப்படியே எடுத்துக் காட்டும் வகையில் அது பழைய அரண்மனைச் சம்பிரதாயங்களைக் கைவிட்டது. ரோஜாப் பூவையும், வானம்பாடியையும் அலங்காரச் சொல்லணிகளுடன் வருணித்து, சொற்சிலம்பம் புரிந்து, அலுத்துப் போன கற்பனையை அள்ளிக் கொட்டும் சம்பிரதாயங்களையும் அது கைவிட்டது. 1856-ல் அயோத்தி ராஜ்யமும், 1857-ல் டெல்லி ராஜ்யமும் மறைந்துபோய், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியானது ஒன்று திரண்ட காலையில் இந்த மாறுதல் தோன்றியது. விசேஷ முக்கியத்துவம் உள்ள இந்த நிகழ்ச்சிகளிலிருந்து உருது இலக்கியம் தப்பவில்லை. மாறுதல்களின் எல்லாக் கட்டங்களிலும் கடுமையான போராட்டம், கசப்பான விளைவுகள், ஆரோக்கியமான இணைப்பு ஆகிய எல்லாவற்றையுமே அதில் காணலாம். பழமையுடன் கூடவே வீரியத்துடன் கூடிய புதிய சிந்தனை—வழியும் உருவாயிற்று. இது ஆங்கிலக் கல்வி, அச்சு வசதி, நவீனப் போக்குவரத்துச் சாதனங்கள் ஆகியவற்றின் நேரடி விளைவு.

பிரிட்டிஷ் பண்பாட்டின் செல்வாக்கு முதல் தடவையாக வெளிப்பட்டது 19-வது நூற்றாண்டில். 1825 முதல் 1850 வரை டெல்லியில் உருது மறுமலர்ச்சி கண்டது குறிப்பிடத்தக்கது. உற்சாகிகள் கொண்ட குழாம் ஒன்று உழைத்து, மேலைத்திசை விஞ்ஞானத்தின் கல்வி கேள்விகளையும் உருதுவில் அமைத்துக் கொடுக்க முற்பட்டது. 1825-ல் நிறுவப்பட்ட பழைய டெல்லி காலேஜ், தலைநகரில் விஞ்ஞான மறுமலர்ச்சியைத் தோற்றுவித்தது. விஞ்ஞான சோதனைகளை மாணவர்கள் டெல்லி காலேஜில்

செய்தபோது பிரமித்துப் போயினர். ஒரு புதிய யுகத்தைச் சமைப்பவர்கள் என்ற பெருமையுடன்கூட, கனவு கண்ட நல்வாழ்வுக்கான ஆதர்சங்களை அவர்கள் பார்க்கலாயினர். 1844-ல் தாய் பாஷை மொழிபெயர்ப்புச் சங்கம் டெல்லி காலேஜில் நிறுவப்பட்டது. விஞ்ஞான விஷயங்களைப் பற்றிய நூல்களை அது வெளியிட்டது. பேராசிரியர் ராமச்சந்திரா, "முபிதுன்–நஜீரின்", "முஹிபே ஹிந்த்" என்ற பெயருள்ள இரண்டு சஞ்சிகைகளை வெளியிட்டார். மேலை நாடுகளின் கருத்துக்களையும் விஞ்ஞான மதிப்பீடுகளையும் பிரசாரப்படுத்துவதே அவற்றின் நோக்கம். 1864-ல் டெல்லி சங்கம் தோன்றியது. அதன் காரிய தரிசி பியாரிலால் அசோப். ஆஜாத், ஹாலி ஆகியோர் உருது இலக்கியத்தில் நல்ல மாறுதல்களைச் செய்வதற்கு இது உதவியாக இருந்தது. (ஆஜாத் 1910-இலும், ஹாலி 1914-இலும் காலமாயினர்.)

எனினும் ஏற்பட்ட மாறுதலானது துரிதமாகவோ, கவர்ச்சிகரமாகவோ இருக்கவில்லை. இந்தியாவின் மேதைக்கு ஏற்றவாறு அது மந்தகதியில் சென்றது. முதலில் வழி வகுத்துக் கொடுத்தவர்கள் சீர்திருத்த மனப்பான்மையினராக காணப்பெற்றனர், புரட்சி மனப்பான்மையினராக அல்ல. பழையனவற்றை அவர்கள் முற்றிலும் புறக்கணிக்கவில்லை. பழம்பெரும் இலக்கியக் கருத்துக்களை புதுவகையிலே வியாக்கியானம் செய்து மக்களுக்கு வழங்கினர். உருது மொழிக்கு ஒரு தெம்பையும் சக்தியையும் அளித்து, வாழ்க்கையுடன் ஒட்டியதாக அது இருக்கவேண்டுமென்று செய்வதே அவர்களுடைய பிரதான நோக்கம். மேலை நாடுகளின் போக்கு மிகையாகக் கையாளப்படாதவாறு அவர்கள் தவிர்த்தனர். உண்மை உணர்ச்சி இல்லாத செயற்கைப் படைப்பு வகைகளைக் கண்டித்தனர். படாடோபமான கற்பனைச் சித்திரங்களையும், சொற்களை அள்ளிக் கொட்டும் மிகையான போக்கையும் அவர்கள் விரும்பவில்லை.

புதிய இயக்கத்தை வகையாக்கி வளர்த்தவர்கள் ஆஜாதும், ஹாலியும். கர்னல் ஹால்ராய்டு கொடுத்த யோசனைப்படி 1874-ல் அவர்கள் கவியரங்குகளை ஏற்பாடு செய்தனர். அவற்றில் புதுவகைப் பாடல்கள் பாடப் பெற்றன. "பர்க்ஹருட்?" "உம்மீத்", "இன்ஸாப்", "ஹுப்பே வதன்" ஆகியவை ஹாலி புனைந்த கவிதா நூல்கள். உருதுக் கவிதையில் ஒரு புதிய மெய்யுணர்வை அவை தோற்றுவித்தன. அலிகார் இயக்கத்தைத் தோற்று வித்த சர் சையத் அஹ்மத்கான் வேண்டிக்கொண்டபடி அவர் இயற்றிய "முஸ்ஸத்தாஸ்" உருதுவில் இயற்றப் பட்டுள்ள அக்காலத்து முதன்மையான கவிதைகளில் ஒன்று. புது சகாப்தத்தை அது உருவாக்கியதாகச் சொல்லலாம். சமுதாய உணர்ச்சிக்கு ஏற்ப, பயனுள்ள நடவடிக்கைக்கு உதவும்படியாக இருக்கும் வகையில், பழைய இலக்கியத்திற்கு மதிப்பீடு வழங்கியவர் ஹாலி. இலக்கியமானது பொருள்படைத்ததாக இருக்கவேண்டு மாயின், வாழ்க்கைக்குப் பணிபுரிந்து அதைப் பிரதிபலிப்பதாக அமைய வேண்டுமென்று அவர் நம்பினர். சர் சையத் அஹ்மத் கான் (1898-ல் காலமானர்) தமது வழிகாட்டும் திறன், செல்வாக்கு, சீர்திருத்த உற்சாகம் ஆகியவற்றின் மூலம் உருது இலக்கியத்தின் வழியையே மாற்றியமைத்தார். ஆங்கில இலக்கியத் துடன் ஏற்பட்ட தொடர்பின் காரணமாக உருதுவின் சில்லிட்ட தன்மை உருகிப்போய்விட்டது. அரண்மனைச் சூழ்நிலையில் வளர்ந்துவிட்ட பனிக் குவியலே அது. பழைய தராதரங்களைப் பின்னுக்குத் தள்ளி, விலங்கு களைத் தகர்த்து இலக்கியத்தை விடுவித்தார்கள். இவ் வாறு உருதுவில் மறுமலர்ச்சி தோன்றலாயிற்று.

புதிய இயக்கங்களின் வித்தை சுல்தான் கியூலி குதுப் ஷாவின் கவிதைகளிலும், மீரும் சுதாவும் இயற்றிய "ஷஹர் அஷோப்" என்ற நூலிலும், மீர் ஹாசனின் "மஸ்நபீஸ்", அனீசின் "மர்ஸியாஸ்", "நஜீர்

அக்பராபாதி'' பாடல்களிலும், மிர்ஜா கலீப் இயற்றிய கஜல்களிலும் காணலாம். கியூலி குதுப் ஷா (1611), மீர் (1810), சுதா (1780), மீர் ஹாஸன் (1786), ஹனீஸ் (1874), நஜீர் அக்பராபாதி (1830), மிர்ஜா கலீப் (1869) ஆண்டுகளில் காலமாயினர். கலீப் இல்லாமல் ஹாலி தோன்றியிருக்க முடியாது, இக்பாலும் வந்திருக்க மாட்டார் என்று கூறப்பெறுவது முற்றிலும் சரியே. இக்பால் காலமானது 1938-ல். ஹாலியும் இக்பாலும் நவீன உருதுக் கவிதைக்கு இரண்டு தூண்கள். ஆனால் இவைதான் உருது இலக்கியம் என்று கருதுவதற்கில்லை. இவை பீடிகை என்றுதான் கொள்ளலாம். புதிய இயக்க மாக எடுப்புடன் அது வளருவதற்கு மேலைநாடுகளின் கல்விமுறை அளித்த தெம்பும், உற்சாகமும் தேவைப் பட்டன.

இலக்கியத்தின் ஒவ்வொரு துறையிலும் மாறுதல் தென்பட்டது. செயற்கைக் கவிதா பரம்பரை மங்கியது. சம்பிரதாயமான கஜல் மிகக் குறுகிய பாணியாகக் கருதப் பெற்றது. சமூக, ராஜீய விஷயங்களுக்கேற்ப அதை விரிவாக்கினர். இயற்கை, நாட்டுப்பற்று போன்ற புதிய விஷயங்களை வைத்துக்கொண்டு, கவிதைகள் வரையப் பெற்றன. தமது புதிய பொறுப்பை கவிஞர்கள் உணர்ந்து, வாழ்க்கை விஷயத்தில் மனிதாபிமானமும், துல்லியமான உணர்ச்சிபாவமும் தேவையென்பதை அறிந்து பணியாற்றினர். ஹாலியின் சீர்திருத்த ஆர்வ மும் திறனாய்வுத் தகுதியும், இஸ்மாயிலின் (கா: 1817) மதிநுட்பமும், துர்க்கா சஹாய சுரூர் (கா : 1910) புலப் படுத்திய தேசிய மிடுக்கும், அக்பரின் (கா : 1921) பொன்னான பாடல்களும் புதிய இயக்கத்தின் வளர்ச்சிக் குத் துணை புரிந்தன. நகைச்சுவைகளும், நையாண்டி களும் அக்பரது கவிதைகளில் பரிமளித்தன. பத்திரிகை கள், சஞ்சிகைகள், மேலைநாட்டு மொழிகளிலிருந்து தர்ஜுமாக்கள் வெளிவந்தன. பல விஷயங்களைக்

குறித்து ஆக்க ரீதியில் முதல் நூல்களே நிறைய எழுதப் பெற்றன.

முதல் உலக யுத்தத்திற்கு முன்னர் இருந்த உருதுக் கவிதைகளை வண்டல் படிந்த படுகையில் மெதுவாக நகரும் நீரோட்டத்துடன் ஒப்பிடலாம். 19-வது நூற்றாண்டின் தாராளப் போக்குள்ள இயக்கங்களின் விளைவாக, வாழ்க்கையின் ஓட்டமும் மெதுவாகவே காணப் பெற்றது. இந்திய தேசியத்தைப் பற்றிப் பாடி, தேசியச் சீரழிவைக் குறித்து வருந்திய முதல் கவிஞர் ஹாலி. அவரது கவிதை வாழ்க்கையிலிருந்து வேறுபட்டிருக்கவில்லை, அதன் பல்வேறு வர்ணஜாலங்களைப் பிரதிபலித்தது. பின்னர் வந்த எழுத்தாளர் பின்பற்றுவதற்கான தரங்களை அவர் நிர்ணயித்து விட்டுச் சென்றார். புது விஷயங்களைக் குறித்துக் கவிதைகள் நிறைய அடிக்கடி வெளிவரலாயின. ஆனால் அவை பெரும்பாலும் மொழி பெயர்ப்புக்களாகவோ, தழுவல்களாகவோதான் இருந்தன. அசல் கவிதைகளும் பல வெளிவந்தன. அவற்றில் உயர்ந்த தேசபக்திக் கருத்துக்கள் நிறைய காணப் பெற்றன. அந்த நாட்டுப்பற்றானது அநேகமாக பெண்ணின் காதலைப்போல் அமைந்திருந்தது. விண் தாரகைகள், ஜொலிக்கும் இரவுகள், வெடிக்கும் மொட்டுகள், இசைபாடும் பறவைகள் ஆகியவற்றைத் தாமே புதிதாகக் கண்டது போல அவர்கள் பாடினர். சக் பஸ்த் (கா : 1926), வஹீதுதீன் சலீம், (1928), சௌக் கித்வாய் (கா : 1928), பெனஜீர்ஷா (கா : 1930), சுரூர் ஜஹானபாதி (கா : 1910), நஜிர் நாதர் (கா : 1912) ஆகியோரின் பாடல்கள் 1914-க்கு முன்னர் இருந்த கவிதைகளின் போக்கைத் தெளிவாகப் பிரதிபலிக்கின்றன.

கஜல்களின் வகையில் மாறுதல் மெதுவாகத்தான் ஏற்பட்டது. அதன் அடிப்படையை விரிவாக்கி சமுதாய தேவைக்கேற்றதாக அமைத்தார் ஹாலி. வழி வழிவந்த சாமான்யமான சொல்லணி உத்திகளைக் கைவிட்டு, புதிய

கஜலை அவர் உருவாக்கினர். சிந்தனைச் செறிவும், உணர்ச்சிப் பெருக்கும் எளிய மொழியில் ஒருங்கே அமைந்து காணப்பெற்றன. அமீர் (கா : 1900), தாக் (கா : 1904) ஆகிய இருவரும் மக்களிடையே செல்வாக்கு டன் விளங்கினர். எனினும் உருது கஜல், மீர், கலீப் ஆகியோரின் சம்பிரதாய வழிகளுக்கு மீண்டும் வேகமாகத் திரும்பியது. இவர்கள் உருதுக் கவிதையின் மகா புருஷர்கள். லக்னோவில் ஹாலியை அவரது சீர்திருத்த உணர்ச்சிக்காகக் கண்டனம் செய்தார்கள். கஜல் இப்படித்தான் இருக்கவேண்டுமென்று தீர்மானித்தவர்கள் மீரும் கலீபும்தான். சாகீப் (கா : 1869), அஜீஸ் (கா : 1935), அசார் ஆகியோர் இப்பெரியார்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றினர். ஹசரத் மொஹானி (கா : 1951), முசாபி (கா : 1824) நாசீம் தெஹ்லாவீ (கா : 1843) ஆகியோர் மரபில் உழைத்தவர். டெல்லிக்கும், லக்னோவுக்குமிடையே எழும்பியிருந்த தடை மதில்கள் தகர்ந்தன. இரண்டு சைலிகளும் மகிழ்ச்சி தரக்கூடிய வகையில் கலந்து ஒன்றின.

இக்பால் மேதையாகப் பிரகாசித்தார். கஜலுக்கு ஒரு புதிய திருப்பத்தைக் கொடுத்தார். தமது காலத்துப் பிரச்சினைகளை, பண்பாட்டின் முரண்பாடுகளை, சமுதாயக் குமுறல்களை கஜலில் வைத்துப் பாடினர். கஜல் முதலில் தோன்றியது காதலுக்கு ஏற்ற சந்தமாகத்தான். சம்பிரதாயப் பாணிகளையும் கலீப் போன்றவர்களின் சைலியையும் தமது காவியங்களுக்குப் புதுவகையில் பயன்படுத்திக்கொள்ளும் சாமர்த்தியம் அவருக்கு உண்டு. அவரது உணர்ச்சிப் பெருக்கில் கலந்து காணப்பெறும் அடிப்படையான தத்துவார்த்த நிர்ணயம் கஜலில் திறம்பட, ஊடும் பாவுமாக இழையோடி இருக்கின்றது. அவரது கவிதையில் எத்தனையோ விசித்திர வகைகள் உண்டு. முற்போக்குச் சிந்தனைகள் நிறைந்து காணப்

பெறும். வாழ்க்கை விஷயத்தில் பொருள் படைத்ததாகக் கஜலை அவர் ஆக்கிவிட்டார்.

ஷா அஜீமாபாதி (கா. 1927)யின் கவிதைகளில் நாசீக்கின் சொல்லணிகளையும், மீர் ரியாஜின் புதுமை, சோகம், இசைத்திறன் ஆகியவற்றையும் காணலாம். (நாசீக் 1838-லும், மீர் 1810-லும் காலமாயினர்). 1934-ல் உயிர்நீத்த ரியாஜ், வாழ்க்கையின் கடுமை, இன்னல்கள் ஆகியவற்றிலிருந்து தப்புவதாக நினைத்துக்கொண்டு, மதுவைத் தமது கவிதை விஷயமாக்கினர். ஆர்ஜு மிகத் துணிவுடன்கூட, மக்கள் சாதாரணமாகப் பேசும் சொற்களை அப்பட்டமாகக் கவிதையில் ஏற்றியவர். அதுவே அவரது சக்தி. இது உண்மையில் நல்ல முறையில் செய்யப்பட்ட சீர்திருத்தமாகும். யாஸ்-ஒ-யஹானு கலீபை கண்டனம் செய்பவர்தாம். எனினும் துல்லியமான உணர்ச்சி பாவத்தில் அவர் கலீபைப் பின்பற்றினர். கலீபைப் போல சொற்கள் சிறகடித்துச் செல்லும்படி கவிதை புனையும் மனோதருமமோ, பாபம் தெய்வீகத் தன்மையுடன் மிளிரச் செய்துகாட்டும் ஜொலிப்போ ஆழமோ அவரிடம் இல்லை. எனினும் அவரது பாடல்களில் சில வடித்து எடுத்த கவிதா நறுமணம் வீசுபவை. புதிய தோரணையில் தமது உணர்ச்சி-ஆர்வத்தை அவர் கொட்டியிருக்கிறார். ஆர்ஜு, அஜீஸ் (கா. 1935), சாகீப், சாபீ, ஆசார் ஆகியோருடன் அவரும் சேர்ந்து மதிக்கப் பெற வேண்டியவர். லக்னோ பாணியில் இயற்றப்பெறும் கஜலுக்கு மதிப்பையும், பொருளையும் அளித்தவர்கள் இந்தப் பரம்பரையினர்.

### கவிதையின் தற்காலப் போக்கு

நவீன இந்தியாவின் தலைசிறந்த கஜல் கவிஞர் ஹஜரத் மொஹானி. லக்னோ கஜலைக் கண்டனம் செய்து ஹாலி வளர்த்திருந்த சூழ்நிலையில் அவரது கவிதா மேதை வெளிப்படலாயிற்று. இந்தக் கண்டனம் நேரெதி

ரான இருவகை விளைவுகள் கொண்டதாக இருந்தது. அஜ்மத்துல்லாகான் (கா. 1927) கஜலைத் தீர்த்துக்கட்ட வேண்டுமென்று விரும்பியவர். அதில் கருத்தொற்றுமையோ இயற்கைத் தன்மையோ இல்லையென்பது அவரது எண்ணம். உருது கஜலுக்கு தெம்பூட்டி டெல்லி, லக்னோ சைலிகள் இரண்டையும் சாமர்த்தியமாக இணைத்தவர் ஹஜரத் மொஹானி. கலை தவிர பிற துறைகளில் எல்லாம் தீவிரவாதியாகவும், புரட்சியாளராகவும் விளங்கினார் ஹஜரத். கஜல் சம்பிரதாயத்தின் பழைய அணிகளையும், விஷய வகைகளையும் பயன்படுத்திக்கொண்டு புதிய மிடுக்குடன் கூடிய சூழ்நிலையை அவர் தோற்றுவித்தார். பழமைக்கும், புதுமைக்கும் அவர் பாலம் அமைத்தார். பழமையின் ஜீவகளை, நிகழ்கால உணர்வு, எதிர்காலத்துச் சாத்தியக்கூறுகள் ஆகிய மூன்றையும் தமது கஜலில் அவர் இணைத்துப் பாடினார். காதலை அவர் கையாளும் வகை அலுப்பைத் தராது. சம்பிரதாய வழிமுறை மண்டியதாகவும் அது இருக்கவில்லை. பிரத்தியட்ச பாவத்துடன் உண்மையைப் பிரதிபலிப்பதாக, அது அமைந்துள்ளது. அவரது இசையமைப்பு தனித்தன்மை வாய்ந்ததாக, கீழ்த்திசை நாடுகளின் மணம் கமழ்வதாக, அடக்கமான ஜீவசக்தியுடன் கூடியதாக காணப்பெறுகிறது. ஹஜரத் புதிய கஜலை சிருஷ்டிக்கவில்லை. பழைய கஜலுக்குப் புதுமை அளித்தார். முசாபி (கா. 1824), மோமின் (கா. 1851) ஆகியோரின் இலக்கிய மரபினராக இருந்து அவர்களது சிறப்பு—அம்சங்களுடன் கூடி தமது சமூக, ராஜீய துறைகளில் தமக்கு ஏற்பட்ட அனுபவச் செழுமையையும், உணர்ச்சிகளையும் சேர்த்துப் பாடினார். ஹஜரத் தமக்கென ஒரு தனி வழியை வகுத்துக்கொண்டு தமது கலாமேதையை வெளிப்படுத்தினார்.

பாலியின் கஜல்கள் இனிமை மிகுந்தவை. இதற்குக் காரணம் சோக உணர்ச்சிகள் அவற்றில் ததும்புவது தான். மிக நுட்பமான உணர்ச்சிகளை அவர் அழகாகவும்,

ஆர்வத்துடனும், மனதை உருக்கும் வகையிலும் எடுத்துச் சொல்கிறார். சிந்தையை உயர்நிலையில் வைத்துக் காட்டி, சிறப்பாகச் சீர்களை ஆளும் திறனைப் பயன்படுத்தி கஜல்களைப் புனைவது அவருக்கு விசேஷப் புகழை அளித்திருக்கிறது. அவர் உண்மையுணர்வு நிறைந்தவர். கண்டுணர்வதைப் புலப்படுத்தியவர். தூய கவிதை புனைவதில் தமது சகாக்கள் எல்லோரையும் அவர் மிஞ்சி விடுகிறார். அவரது வாழ்க்கை துன்பம் நிறைந்தது. அது இசைவாக அமைந்ததே இல்லை. எனவே சோகந்தான் அவரது பாடல்களில் மேலோங்கிக் கிடக்கிறது. அவரது மிகச் சிறந்த இசைக்கு அதுவே ஆதாரம். ஆசாபங்கத்தின் ஆழத்திலிருந்து சுரப்பவை அவரது கண்ணீர்த்துளிகள். கிடைக்காத ஒன்றுக்காக ஆவலுடன் ஏங்கும் தவிப்பை அதில் காணலாம். அவரது சிந்தனை சிலர் நினைப்பதுபோல் குறுகியது அல்ல.

கலீப், மோமின் ஆகியோரின் வழியைப் பெரிய அளவில் பின்பற்றியவர் ஆஷ்கார் (கா. 1936). அவரும் கஜலுக்கு விரிவான அடிப்படையை அமைத்துள்ளார். அவற்றின் கட்டுக்கோப்பில் தூய்மையும், மென்மையும் கற்பனை வளமும் நிறைந்துள்ளன. கஜல் எழுத்தாளர்களிடையே அவருக்கு உயர்ந்ததோர் ஸ்தானம் உண்டு.

ஆசாரின் இசைக் கவிதை புனையும் சக்தி அசாதாரணமானது. மனித உணர்ச்சிகள் எவற்றையெல்லாம் எட்டிப்பிடிக்க முடியுமோ அவையனைத்தையும் அவர் திறம்பட பாடியுள்ளார்.

ஜிஹார் முக்கியமாக புகழ் அடைந்தது கஜல் புனைபவர் என்ற வகையில்தான். இசைச் சொற்சித்திரங்கள், துல்லியமான உணர்ச்சி பாவங்கள், சிந்தனையை ஊக்குவிக்கும் அடக்கமான விவேகம், எல்லாவகைத் தன்னிலைகளையும் அவற்றின் சாயைகளையும் எதிரொலிக்கும் குணம் முதலியவற்றில் அவர் ஈடு இணையின்றி விளங்குகிறார். அவரது கற்பனை வியக்கத்தக்க வளம் கொண்டது.

சந்தமும் இசையும் அசாதாரணமான விதத்தில் எல்லா விஷயங்களிலும் மேலோங்கிக் காணப்பெறுகின்றன. காதலும், அழகும் அவரது கற்பனைக்கு ஆதாரமாக இருப்பவை. மனித ஆத்மாவை சித்திரம் பிடித்துக் காண் பிப்பதில் வருணனைச் செருக்குள்ள அவரது இசைப் பாடல்கள் குறிப்பிடத்தக்க வெற்றி அடைந்துள்ளன. இன்பமயமான மதமதப்பும், மோகக் கிறுக்கும் அவற்றில் காணப்பெறுகின்றன. அவரது சிருஷ்டிகளில் மேலெழுந்த வாறு காணப்படும் மென்மைகளைப் பின்பற்றி எழுதுவ தற்கு பல இளைஞர்கள் முயன்று பார்த்துள்ளனர். ஆனால் அவர்களுக்கு அதிக வெற்றி கிடைக்கவில்லை.

மேலை தேசங்களின் கவிதா ஊற்றை ஆழ்ந்து சுவைத்தவர் பிராக். கீழ்த்திசைப் பண்பாட்டுக்கு முரணில்லாத வகையில் மேற்றிசைப் பண்பாட்டை ஜீரணித்துக்கொண்ட பெருமை அவருக்கு உண்டு. அன்றாடப் பிரச்சினைகளைப்பற்றிய அவரது ஆத்மீக அனுபவத்தில் அன்பு, தாராளம், புரட்சியுணர்வு ஆகியவை மிகுதியாகக் காணப்பெறும். உணர்ச்சி பாவத்துடன் மெய்யுணர்வுடன் கூட ஒவ்வொரு பாவத் துக்கும், நிலைமைக்கும் அவர் ஈடுகொடுக்கிறார். அவரது உணர்ச்சிப் பெருக்கு சிந்தனை—வளம் கொண்டது. பரந்த ஞானத்தை நன்றாக ஜெரித்துக்கொண்டவராகை யால் அதன் மூலம் அவரது கற்பனையும் செழுமையுற்று இருக்கிறது. சில சமயம் அடக்கமின்றி எழுதுவது அவரிடம் உள்ள ஒரு குறை.

பைஜின் கஜல்கள் தனித்தன்மை உள்ளவை, உள்ளத்தை உருக்குபவை. அவரது உதாரணங்கள் விரிவான அனுபவத்திலிருந்து கிடைத்தவை. அவரது கற்பனைக் கட்டுக்கோப்பு தானாகவே அமைவது, எனவே இயற்கையானது. பல ஆண்டுகள் அவர் அரசியல் கைதியாக இருந்திருக்கிறார். இந்தச் சிறை வாழ்க்கை அவர் இயற்றியுள்ள சங்கேதப் பாடல்களுக்கு ஒரு தனி

சோலையை அளிக்கிறது. கனவின் இன்பத்தை அவரது பாடல்களில் காணலாம். பிராக்கைப்போல் அவரது படைப்புகளும் மேடும் பள்ளமுமாகத் தானிருக்கும். அவரது ஆத்மா நிம்மதியின்றி இருப்பதை அந்த எழுத்துக்கள் புலப்படுத்துகின்றன.

ஜாஸ்பியின் கஜல்கள் வாழ்க்கையை, உணர்ச்சி பூர்வமாக, நிர்ப்பந்தமின்றி, சுபாவ ரீதியில் எடுத்துக் காட்டுகின்றன. துல்லியமான உணர்ச்சி பாவத்தை கவிதையானது வெளிப்படுத்த வேண்டுமென்ற நோக்கத்துடன் அவர் பாடுபட்டிருக்கிறார். சோகம் படிந்த சிந்தனையின் காரணமாக, அவரது குரலில் ஒரு கவர்ச்சியும், உள்ளத்தை தீவிரமாக ஆட்கொள்ளும் சக்தியும் ஏற்படுகின்றன. அழகு உலகம் தஞ்சமடைய வேண்டிய் இடம் என்று ரவீஷ் கருதுகின்றார். ஆனால் அவரது சிந்தனையில் வலிமை இல்லை. அவரது சைலி செயற்கைத் தன்மை வாய்ந்ததாக இருக்கிறது. மஜ்ரூ, நாசீம் காசீமீ, அக்துருல் இமான் ஆகியோர் முன்னுக்கு வரக் கூடிய கஜல் கவிஞர்கள். இவர்கள் தமது திறனின் வரம்புகளை அறிய முயன்று வருகிறார்கள்.

1936 முதல் 1946 வரை உருது கஜல் மிகக் கடுமையான கண்டனத்துக்கு உள்ளாகியிருக்கிறது. எனினும் அந்தக் கண்டனங்களை எல்லாம் தப்பி அது பிழைத்துள்ளது. அந்தப் பத்து ஆண்டுகள் கலக உணர்ச்சியும், சோதனை மிகுதியும் கொண்டவை. வருணனைக் கவிதைகள், சீர்ப்பாடல்கள், கீதங்கள், சீர் ஒழுங்கு இல்லாத வசன கவிதைகள், வரம்புகளே இல்லாத செய்யுட்கள் போன்ற பல வடிவங்களில் பரீட்சைகள் நடந்தன. மக்களின் அபிமானமும் வர வர அதிகமாகக் கிடைத்தது. ஆனால் தற்காலிகமாக செல்வாக்கற்று இருந்த கஜல் மீண்டும் வெற்றிகரமாக வெளிப்போந்துள்ளது. பைஜ் இயற்றிய தஸ்தே சபாவின் பிரசுரம் கஜல்களின் வரலாற்றில் குறிப்பிடத்தக்கதோர் நிகழ்ச்சி. தேசத்தின்

பிரிவினையும், அதைத் தொடர்ந்து எழுந்த கடும் பிரச்சினைகளும் கஜலுக்கு மீண்டும் செல்வாக்கை ஏற்படுத்தித் தந்தன. சொந்த அனுபவத்தில் வேரூன்றிய பாவனைகளை அமைத்துப் பாடுவதற்கு இந்தப் பாடல்வகை நல்ல தகுதி படைத்தது. அகதிகளின் ஆசாபங்கம், மனத்துயர், இழந்துபோன பெருமைகளின்பால் தொடர்ந்து நீடித்த பாசம் ஆகியவற்றை சகீர், ஜகந்நாத ஆஜாத், ஆர்ஷ மல்சியானி, மஹ்ரூம், ஹரிச்சந்திர அக்தார், ஹபீஸ் ஹோஷ்யார்புரி, சாலிக், தபாஸும், ஜஹீர், காடுல், நசீர் காசிம் உட்பட பலரது கஜல் களில் தெளிவாகக் காணலாம். இந்தக் கவிதை—வகையில் சில சமயம் பிரசார அம்சம் எடுப்பாகக் காணப்பெறு கின்றது. மேலும் உணர்ச்சிப் பெருக்கு அதிலுள்ள ஒரு குறை. ஆனால் ஏனோதானோவென்ற முயற்சியை இதில் எங்குமே காணமுடியாது. உண்மை உணர்ச்சியே ஒலிக்கின்றது. பாவம், தன்மை, கருத்துச் செறிவு ஆகிய மூன்றும் இசைவாக இணைந்துள்ளன. உருது கஜலில் இது குறிப்பிடத்தக்கதோர் கட்டம்.

தொனி, அழுத்தம் ஆகியவற்றில்தான் இப்போதைய கஜல் முந்தைய கஜலினின்றும் மாறுபட்டதாக இருக் கிறது. இப்பொழுதெல்லாம், கவிஞர்கள் காதலியின் அலைபாயும் கேசங்களையோ, கன்னத்தில் விழும் குமிழையோ, முகத்தில் தென்படும் மருவையோ பாடுவது இல்லை. உள்ளுரைச் சிறப்பே அவற்றில் குரல் கொடுக் கிறது. சொல்லணி—மிகுதி அவற்றில் இல்லை. அலங்கார அம்சங்களை மிகுதியாக வைத்துக் காண்பிப்பதும் இல்லை. தெய்வானுபவ அம்சம் குறைந்து வருகிறது. மனிதனையோ, உலக வாழ்க்கையையோ பற்றிய சிந்தனை களோ தாம் அதிகம் காணப்பெறுகின்றன. துரதிருஷ்ட வசமாக புதுமையின் மோகத்தில் புத்தியை ஒரு கட்டுத் திட்டத்தில் வைப்பது குறைவாக இருக்கிறது. கவிதா இலக்கணத்தைப் பற்றிய ஞானசூன்யம் காணப்பெறு

கிறது. இதன் விளைவாக இப்போதைய கஜலில் அழகும், மனதை ஈர்க்கும் சக்தியும் குறைந்து காணப்பெறு கின்றன. ஆனால் திறமைசாலியான கவிஞர்கள் இன்றும் நல்ல உயர்ந்த பாடல்களை கஜல்களில் இயற்றித்தான் வருகிறார்கள்.

மற்ற வகைப் பாடல்களில், இக்பாலின் ' கிஜ்ரே–ரா ' நவீன உருது கவிதா இலக்கியத்தில் ஒரு பெரிய நிகழ்ச்சி. பிந்திய கவிஞர்களுக்கு அது ஆதர்சமாக விளங்குகிறது. கொந்தளிப்பு நிறைந்த 1914-ம் ஆண்டில் அது எழுதப் பெற்றது. இக்பால் ஒரு ஞானி, மனிதாபிமானம் மிகுந்தவர். சமூக, ராஜீய, பொருளாதாரப் பிரச்சினைகள், கீழ்த்திசை நாடுகளை எவ்வாறு எதிர் நோக்குகின்றன என்பதைப்பற்றி ஆழ்ந்து சிந்தித்தவர். குரானில் காணப்பெறும் தத்துவார்த்த அடிப்படையில் அவற்றைச் சோதித்துப் பார்த்தவர். தொட்டதை எல்லாம் சிறப்பிக் கும் மேதை அவர். அவர் எழுதிய எல்லாமே பொன் என மின்னின. சங்கேதமாக எடுத்துச் சொல்லும் கவிதா முறையின் எல்லைகளை அவர் விரிவாக்கினார். பங்கே-தாரா, பாலே-ஜிப்ரீல், ஜர்பே-கலீம் ஆகிய கவிதைகள் உருதுவில் ஒரு புதிய சகாப்தத்தைத் தோற்றுவித்து எந்த நல்ல இலக்கியத்துடனும் ஒப்பு நோக்கக்கூடிய வளத்தையும் அதற்கு அளித்தன.

புரட்சிக் கவிஞர் என்று எல்லோரும் அறிந்தவர் ஜோஷ் மலீஹாபாடி. இரண்டு யுத்தங்கள், 1921-ம் வருஷத்து ஒத்துழையாமை இயக்கம், 1929–30-ல் தலை தூக்கிய பொருளாதார இன்னல்கள், 1931-ல் எழுந்த சட்ட மறுப்பு, உழைப்புக்கும் மூலதனத்துக்குமிடையே எழுந்த போராட்டம், சோஷலிஸ்டுக் கருத்துக்களின் வெள்ளப் பெருக்கு ஆகியவை உருது இலக்கியத்தைப் பெரிதும் பாதித்து, ஒரு கலக உணர்ச்சியை உண்டு பண்ணிவிட்டன. இந்தக் கலகத்தின் சின்னமாக விளங்குபவர் ஜோஷ். ஆனால் பிரசார அம்சமும்,

மேலெழுந்த போக்கும், கரடுமுரடான தன்மையும் அவரது படைப்புகளில் மிகுதியாகக் காணப்பெறு கின்றன. சில சமயம் ரசக் குறைவாகத் தோன்றும்படி மட்டமாக எழுதும் ஆர்வமும் அவருக்கு உண்டு. அவர் மேம்புல் மேய்பவர். ஆனால் பளபளப்பான சொல்வளம் படைத்தவராகையால் இந்தக் குறை மறைந்து போகிறது. இக்பாலுக்கு அடுத்தபடி இளம் கவிஞர்களை அதிகமாகக் கவர்ந்தவர் அவரே. புரட்சிப் பாடல்களின் மாபெரும் ஆசான் என்று அவரை அவர்கள் மதிக்கின்றனர். உவமைகள், ஒப்புவமைகள் அவரிடம் வந்து குவிகின்றன. எல்லோரும் நன்கறிந்த எளிமையான காட்சிகளை சித்திரிப்பதில் அவை அவருக்குப் பெரிதும் பயன்படு கின்றன.

ஜாபர் அலிகான் லாகவமாக நிறைய எழுதும் திறமை மிக்க புலவர். ஆனால் இன்று தோன்றி நாளை மறையக் கூடிய அற்பமான விஷயங்களைப் பற்றி கவி பாடி தமக் குள்ள திறனை அவர் வீணடித்து இருக்கிறார். சீமாப் சிறந்த புலவர். அவசர அடியில் எழுதுபவர். ஆனால் அவரிடம் தன்னம்பிக்கை மிகுதி உண்டு. தாம் கையாண்ட விஷயங்களின் முக்கியத்திற்கேற்ப அவரது கவிதைத் திறன் மனதை ஆட்கொள்வது இல்லை.

ஹாலி முதல் இக்பால் வரை, ஜாபர் அலிகான், ஏஸன், மாஹிர் ஆகியோரின் படைப்புகளில் உருது "நஜம்" முன்னர்க் கண்டிராத உயர்நிலைகளை எட்டிப் பிடித்தது. ஷாநாமா-இ-இஸ்லாம் என்ற நீளமான வரலாற்றுக் காவியத்தை, பிர்டௌஸியைப் பின்பற்றி, ஹபீஜ் ஜலந்தாரி இயற்றினர். தக்காணத்தில் நுஸ்ராதி (கா. 1673) அலிநாமாவை இயற்றினர். காவர் நாமாவை புனைந்தவர் ருஸ்தமி. உருதுவில் கதைப் பாடல்களாக வெளிவந்த முதல் நூல்கள் இவை. ஹபீஜ் ஜலந்தாரியின் ஷாநாமா-இ-இஸ்லாம் பார்ப்பதற்கு மிகப் பெரிதாகவும், கம்பீரமாகவும் இருப்பதால் கற்பனை ஒழுங்காக அமை

கின்றது. ஆனால் மூன்று பகுதிகளில் முதல் இரண்டில் தான் அவர் அதிக வெற்றி கண்டிருக்கிறார். மூன்றாவது பகுதியில் கவிதா சக்தி அவரிடமிருந்து ஓடிவிட்டதாகவே தோன்றுகிறது. அவர் இயற்றிய கீதங்கள் நிலைத்திருக்கும்; இசையும் சந்தமும் அவற்றுக்குச் சிறப்புத் தருகின்றன.

ஹிந்தி மொழியின் பாணியில் உருதுப் பாடல்களை இயற்றுவது இப்போது காணப்பெறும் மிக விசித்திரமான இலக்கிய முயற்சிகளில் ஒன்று. இது நெடுநாளைய வரலாற்றுடன் கூடிய ஒருகவிதா வகை. இந்தியப் பண்பாட்டில் பாடப்பெறும் பலவகைச் சேர்க்கைகளும் அவை ஒன்றிய நிலையும் இந்தக் கவிதைகளில் நிழலாடுகின்றன. அஜ்மத் உல்லாகான், ஹபீஜ் ஜலந்தாரி, அக்தார் ஷேரானி, டாஸீர், காலீத், மக்புல் அஹ்மத் பூரி, ஹபீஜ் ஹோஷ்யார்புரி, சாகர் நிஜாமி, அபீத் இந்திரஜித் சர்மா ஆகியோர் மென்மையான உருதுவில் தெள்ளிய பாடல்களைப் பாடியிருக்கிறார்கள். குடும்ப வாழ்க்கையின் நெருங்கிய அனுபவ வாடை அவற்றில் வீசுகிறது. ஷவுக்லா கித்வாய், ஆர்ஜூ, ரஜாக் ஆகியோர், தமது கஜல்களில் இதே இசை இன்பத்தை வழங்கியுள்ளனர். ஆனால் அஜ்மத்துல் கானின் பாடல்களில்தான் இந்த பாவம் உயர்ந்த நிலைகளை அடைந்துள்ளது. அவரது பாடல்களில் மூச்சையே நிறுத்தி வைக்கக்கூடிய ஒரு தன்மையும், விடாது தொடர்ந்து வந்து மிடுக்காக ஆட்கொள்ளும் ஒரு சிறப்பும் இருப்பதைக் காணலாம். கற்பனைக் கவிதைப் படைப்புகளில் மிகச் சிறப்பாக விளங்குபவர் அக்தார் ஷேரானி. அப்படியே படம் பிடித்துக்காட்டும் தன்மை, விவரணைகள், வளமாக இருக்கும் பெருமை, சூழ்நிலைகளின் பொருத்தம், உருதுவில் அதுவரை காணப்பெறாத இன்ப மயக்கம் அவற்றில் உண்டு. கற்பனையின் கம்பீரம், புதிய சந்த வகைகளைக் கண்டுபிடித்துக் கையாளும் தகுதி, தடுக்கப் பெற்ற காதல் விஷயங்களைப்

பாடுவதில் ஒரு துணிவு காரணமாக அவரது கவிதைக்கு ஓர் உயர்நிலை கிடைத்துள்ளது.

முற்போக்கு எழுத்தாளரின் இயக்கம் 1935-இல் தொடங்கியது. ஒரு புதிய இயக்கத்திற்கு உரிய வெறியும், பிரசார ஆர்வமும் அதில் மிளிர்ந்தன. பழைய உளுத்துப் போன வகைகளைக் கைவிடுவதில் அது தொடங்கியது. ஆனால் இவ்வியக்கத்தினர் கையாள்வதற்கு முற்பட்ட புது வகைகள், தெளிவாக, நாட்டின் பண்பாட்டில் உறுதியாக வேர்விட்டவையல்ல. பழையன எல்லாவற்றையும் கடுமை யாகக் கண்டனம் செய்தார்கள், " முற்போக்காளர்கள் ". தமது பரீட்சைகளை வரம்பில்லாது நடத்திப் பார்த்தனர். மனம் விட்டுக் கூறுவது என்ற வகையில் ஆபாசத்தை எட்டிப் பிடித்தனர். மிராஜி, ரஷித் ஆகியோர் போலி-முற் போக்காளரில் குறிப்பிடத்தக்கவர்கள். தமது அரசியல் தத்துவத்தை அவர்கள் பரபரப்பான வகையில் பேரொலி செய்தனர். உயர்ந்த கவிதை என்றால் அதில் கருத்துச் செறிவும், உணர்ச்சி பாவமும் இருக்கவேண்டும். இந்த அம்சங்கள் இவற்றில் மிகமிகக் குறைவு. ஒரு குறிப்பிட்ட அரசியல் தத்துவத்தை வலியுறுத்தி மிகைப்படுத்திக் காட்டியபோதிலும், இந்த இயக்கமானது, ஆரம்ப உற்சாகத்தின் நுரை அடங்கிய பிறகு, உருது இலக்கியத் திற்கு ஜீவாதாரமான ஒரு வகையில் ஒரு புதிய ஆக்க சக்தியை, விடுதலை உணர்ச்சியை அளித்தது. ஜோஷ், பைஜ், பிராக், ஜாஸ்பி, மஜாஜ், மக்தும், ஜான் நிசார் அக்தார், சர்தார் ஜாப்ரி ஆகியோர் இவ்வகைப் படைப்பு களில் ஈடுபட்டவர்கள். பிரத்தியட்ச பாவத்தின் வலிமை யையும் நிலைத்திருக்கக் கூடிய குணங்களின் தனிச் சக்தி யையும் இவைகளில் காணலாம். சமுதாய முறையை மாற்றியமைக்கும் அறைகூவலை அவர்கள் உணர்ந்தனர், தமக்கு உசிதமென புலப்பட்ட வழிகளில் பரிகாரம் காண முற்பட்டனர். அலங்காரச் செம்பில் அடக்கி வைத்திருக் கும் புஷ்பங்களின் அழகைப் போல அவர்களது பாடல்

களில் சிலவற்றைப் பொறுக்கியெடுத்து அனுபவிக்கலாம். வறுமை, அடிமைத்தனம், சுரண்டல் மிகுதியாக இருந்த ஒரு காலத்தின் நிலவரத்தை உணர்ச்சி வேகத்துடன் பாடியதன் காரணமாக, அவை சுவை மிகுதியுடன் விளங்குகின்றன. 1931 முதல் மக்களிடையே ஒரு தீவிர உணர்ச்சி வேகம் காணப்பெற்றது. சோஷலிஸ்டு சமுதாய அமைப்பைத் தோற்றுவிப்பதற்காக உழைப்பாள வர்க்கம் போராடியது. இந்த விழிப்பைச் சித்திரித்துக் காட்டுகின்றனர் "முற்போக்கு"க் கவிஞர்கள். அவர்களுடைய படைப்புக்களில் ஒரு முழுமையோ, நிலையான தன்மையோ இல்லை. ஆனால் மதிநுட்பமும், உணர்ச்சி வேகமும் உண்டு. சாளரங்களின் கதவுகளைத் திறந்து வெளியே எட்டிப் பார்க்கும்படி அவர்கள் அழைக்கின்றனர்.

மொத்தமாகப் பார்க்குமிடத்து இன்றைய உருதுக் கவிதை தெம்பூட்டுவதாகவும் பெரிய அளவில் வளர்ச்சி காணக் கூடியதாகவும் தென்படுகிறது. மதச் சார்பற்ற, பரந்த உள்ளம் படைத்த, ஆர்வம் மிகுந்த, நாட்டுப் பற்றை அது அப்படியே பிரதிபலிக்கிறது. விடுதலைப் போராட்டம், சமூக, பொருளாதார ஏற்றத் தாழ்வுகளுக்கு எதிரிடையான போராட்டம், கலகங்கள் மலிந்து இருப்பதால் தேசம் படும் வேதனை, மறு வாழ்வளிக்கும் பயங்கரமான பிரச்சினை முதலியவை பாடப்பெற்றுள்ளன. பிரிவினையைத் தொடர்ந்து எழுந்த வேதனை அடங்கிவிட்டது. ரணங்கள் ஆறி வருகின்றன. கசப்பு கரைந்து வருகிறது. க்ஷேமநல அரசாங்க அமைப்புக்கும்; சோஷலிஸ்டு சமுதாய ஏற்பாட்டுக்கும் நாம் அடிகோலியுள்ளோம். நமது சொந்தப் பண்பாட்டை மட்டுமின்றி பழையனவாகவும், புதியனவாகவும் உள்ள பிற பண்பாடுகளையும் ஆழ்ந்து உணர்ந்து அறியும் புதிய அழகுணர்ச்சியுடன் கூடிய மனப்பான்மைக்கும் அடிகோலி இருக்கிறோம். இன்றைய உருதுக் கவிஞன், பெரிய நோக்கத்தை

வைத்துக்கொண்டு துணிவுடன் ஏற்றம் காண்பதற்கு முயல்கின்ருன். நவ இந்தியாவின் ஆதர்சத்தைக் காண விழைகின்ருன். விரிவான தெம்பூட்டும் கண்ணேட்டம் அவனிடம் காணப் பெறுகிறது. அவன் சொல்வது பலிக்க வேண்டுமாயின் உணர்ச்சியும், மதிநுட்பமும் சேர்ந்து உழைக்கும் சமநிலே அவனிடம் இருந்தாக வேண்டும். கவிதைக் கலேயில் உண்மையான சிருஷ்டிகள் தோன்றுவதற்கு இது அவசியம். தனது காலத்தில் வாழும் மக்களின் சுவையைப் பெரிதென மதித்து, பயனற்ற உபதேச ரீதியில் கவிதை புனேவதை அவன் தவிர்க்கவேண்டும்.

### சிறு கதை

உருதுவில் தற்காலச் சிறு கதை பிரேம் சந்துடன் தொடங்கியது என்று கூறலாம். அவர் துல்லியமான உணர்ச்சி பாவம், சிந்தனேச் செறிவு கொண்டவர். எளிய, ஆனல் வளமை மிகுந்த பாணியில், உழைக்கும் மக்களின் வாழ்க்கையிலிருந்து பொருள்படைத்த நிகழ்ச்சிகளேயும், மிக மென்மையான தருணங்களேயும் எடுத்துக் கையாண்டிருக்கிருர். நியாஜ், யால்ட்ராம், எல். அஹ்மத் ஆகியோர் பிரத்தியட்ச பாவத்தைத் தாண்டிச் சென்று தமது திறமைகளேப் புலப்படுத்தி உள்ளனர். அவர்களது கற்பனேச் சித்திரங்கள் உழைப்பு மிகுதியினின்று தோன்றியவை. சுற்றுமுற்றும் பழக்கமான பிரத்தியட்ச அனுபவங்களே அவர்களேப் போலவே அனேகமாக எல்லா எழுத்தாளரும் தள்ளிவிடுவதைக் காண்கிருேம். கற்பனேக் காதல் சித்திரம் என்ற சகதியிலிருந்து சிறு கதையை மீட்டவர் பிரேம் சந்த். நியாஜும், யால்ட்ராமும் அதைத் தமது கற்பனேத் திறனின் மூலம் அந்தப் படுகுழியில் தள்ளினர். எனவே உருது சிறு கதையை உருவான அஸ்திவாரத்தின் மீது அமைத்தவர் பிரேம் சந்த். செக்காவ், மோபஸந்த் போன்ற அயல் தேசத்து மாபெரும்

எழுத்தாளர் அவருக்கு உதாரணங்களாக விளங்கினர். முற்போக்கு இயக்கமானது சிறு கதை எழுதுவதிலும் அக்கறையை ஊக்குவித்தது. 1936-க்குப் பிறகு சிறு கதை என்பது முக்கியமான இலக்கிய வடிவம் என்று ஒப்புக்கொள்ளப் பட்டது. உருது சிறு கதைக்கு ஒரு நோக்கத்தையும், மார்க்கத்தையும் வகுத்துக் கொடுத்தவர் பிரேம் சந்த். கொந்தளிப்பான அக்காலத்தில் ஆத்மீக வரலாற்றைத் தமது கதைகளில் அவர் அமைத்துக் காட்டியுள்ளார்.

பிரேம் சந்த் சீர்திருத்த நோக்கத்தில் சில சமயம் சரிந்துவிடுகிறுர். ஆனுல் பொருள் படைத்த நிகழ்ச்சிகளையும், மக்களது உணர்ச்சி பாவங்களையும் அப்பட்டமாக வருணிப்பதில் அவர் வெற்றி கண்டுள்ளார். கலையும், வாழ்க்கையும் இன்பமாக இணைந்து இருப்பதற்கு மிகச் சிறந்த உதாரணம் அவர் இயற்றியுள்ள "காபான்" (சவத்தை மூடும் சல்லாத் துணி). உருதுச் சிறு கதை வரலாற்றில் இது ஒரு திருப்புமுகம். பல்வேறு சிறுகதை எழுத்தாளர்கள் தொகுப்புக்களைக் கொண்ட "அங்காரே" 1935-ல் வெளியாயிற்று. தடை செய்யப்பட்ட போதிலும் அக்காலத்துச் சிறு கதை எழுத்தாளர்களிடம் அது விசேஷச் செல்வாக்குடன் விளங்கியது. மிக முக்கியமான நிகழ்ச்சி 1936-ல் முற்போக்கு எழுத்தாளர் சங்கம் தோற்றுவிக்கப் பட்டதுதான். சிறு கதையின் வளர்ச்சியில் இது மற்றொரு கட்டம்.

1936 முதல் 1946 வரை முற்போக்கு வழியினரது பிரகடனந்தான் உருதுச் சிறு கதையில் மீண்டும் மீண்டும் ஒலிக்கிறது, எதிரொலிக்கிறது. ஹுசைனி, கிருஷ்ண சந்திரா, பேதி, அக்தார் அன்சாரி, அஹ்மத் அலி, இஸ்மத் அக்டாய் ஹயாதுல்லா, பலவந்த் சிங், அஹ்மத் நதீன் காஸ்மி, ஹசன் அன்சாரி, குலாம் அப்பாஸ், மும்தாஜ் ஷெரீன், மும்தாஜ் முஸ்தீக், இப்ராஹிம்

ஜானிஸ், மாண்டு ஆகிய ஒவ்வொருவரும், தமக்கே உரிய வழியில், சிறு கதையின் அபிவிருத்திக்காக உழைத்து வந்திருக்கிறார்கள். கற்பனை மிகுந்த அவர்களது சக்தி யானது, சம்பிரதாயமான வடிவத்தையும், சைலியையும் ஊடுருவிக் கொண்டு புதிய மார்க்கங்களை உருவாக்கித் தருகிறது. உணர்ச்சிப் போக்கில் உள் நுட்பங்களைப் போலவே, சமூகத் தொடர்புள்ள பிரச்சினைகளை அவர்கள் மதிக்கின்றனர். அஹ்மத் அலியின் "ஹமாரி கல்" (எங்கள் சந்து), "மேரா கம்ரா" (என் அறை), கிருஷ்ண சந்திராவின் "தோ பர்லாங் லம்பீ சடக்" (இரண்டு பர்லாங் ரோட்), மாண்டுவின் "நயா கானூ" (புதிய சட்டம்), ஹயதுல்லாவின் "ஆகிரீ கோஷிஷ்" (கடைசி முயற்சி), பேடியின் "கரம் கோட்" (கம்பிளிக் கோட்) இவை இந்தவகைப் படைப்புக்களில் மிகச் சிறந்த உதா ரணங்கள். இவற்றில் கலையும், வாழ்க்கையும் அழ குணர்ச்சியுடன் இணைக்கப்பட்டுள்ளன. துரதிருஷ்டவச மாக சில கதைகள் ஆண்–பெண் உறவுகளைப் பற்றியும், பிற விஷயங்களைப் பற்றியும் இள வயதினரின் புத்தி பேதலிக்கக் கூடிய வகையில், துணிவு மிகுதியுடன் அடக்கமின்றி, வரையப் பெற்றுள்ளன.

மாண்டு, பேதி, கிருஷ்ண சந்திரா, இஸ்மத் ஹயாதுல்லா, அக்தர் ஓரனுப், அஹ்மத் அலி ஆகியோர் விரிவான பல துறைகளில் எழுதுவதாலும் நானுவித கவர்ச்சிகள் இருப்பதாலும், பாணியில் சிக்கல் காணப் பெறுவதாலும் முக்கியத்துவம் அடைந்துள்ளனர். கற் பனையும், கூரிய நோக்கும் கலந்து காணப்பெறுகின்றன. எதிர்காலத்திற்கு இது நல்ல மகிழ்ச்சிகரமான அறிகுறி. அஹ்மத் ராதின் காஸ்மீ, பலவந்த்சிங், குலாம் அப்பாஸ், ஹெஜாப் இம்தியாஜ், மும்தாஜ் முப்தி, ஆகா பேபர், இப்ராஹிம் ஜாலீஸ், ஹஜ்ரா மஸ்ரூர், ஸலேஹா அபீது ஹுசேன், கடீஜா மஸ்ருர், மும்தாஜ் ஷெரீன், தாஸ்னீம், மஹேந்திரநாத், சுகாயில், கரட்டுல் அயின், ஷபிக்குர்

ரஹ்மான் ஆகியோர் தலைசிறந்த சிறு கதை எழுத்தாளர் களென மதிக்கப் பெறுகின்றனர். மனம் விட்டு, நெஞ்சை அள்ளக்கூடிய வகையில், மனித சுபாவத்தைப் பற்றி எழுதுபவர்கள் என்ற புகழ் அவர்களுக்கு உண்டு. ஆனால் மட்டமான கலையுணர்ச்சி கொண்ட ஒரு சிலர் ஆண்–பெண் உறவைப் பற்றிய பித்தை, பரபரப்பு மிகுந்த வகையில், உணர்ச்சிப் பெருக்குடன் கதைகளில் சேர்த்துள்ளனர். முற்போக்காளர் எழுதிக் குவித்துள்ள கதைகளில் மிக மட்டமானவை நல்லவற்றுடன் கலந்து காணப்படுகின்றன. பதரை நீக்கி மணியைக் கொள்வது பகுத்தறிவுள்ள விமரிசகர்களால் முடியும்.

1947-ல் தேசம் பிளவுபட்டது பயங்கரமான சோக நிகழ்ச்சி. சொல்லொணாத துயரையும், தொல்லையை யும் அது கொணர்ந்தது. பத்துலட்சக் கணக்கில் மக்கள் தமது வீடு வாயில்களைவிட்டு வெளியேறி இந்தியாவிலோ, அல்லது பாகிஸ்தானிலோ குடியேற வேண்டியதாயிற்று. இந்தத் துன்பியல் நிகழ்ச்சியை உருதுச் சிறு கதை எழுத்தாளர்கள், நடுநிலையுடன் கூடிய நிந்தனைப் படைப்புக்களாக உருவாக்கியுள்ளனர். "ஹம் வாஷ்ஷி ஹைம்" (நாம் காட்டுமிராண்டிகள்) என்பது கிருஷ்ண சந்திராவின் கதை. புத்தித் தெளிவையும், சகிப்புத் தன்மையையும் அது உணர்ச்சி மிகுதியுடன் வற்புறுத்து கிறது. அவரது தூய்மையான மனிதாபிமானம் இதில் பரிமளிக்கின்றது. உண்மையிலேயே இது ஒரு கலைப் படைப்புத்தான். கலகங்களையும் அதைத் தொடர்ந்து எழுந்த பிரச்சினைகளையும் பற்றி இஸ்மத் எழுதியிருக் கிறார். "சோனே கா அண்டா" (பொன் முட்டை) என்ற தலைப்பில் அந்த அம்மையார் வெளியிட்டுள்ள கதை களும், "சௌதீ கா ஜோரா" (சௌதீயின் உடுப்பு) என்ற தொகுப்பும் திறமையற்றவை அல்ல. ஆனால் கிருஷ்ணசந்திராவின் பல கதைகளைப் போலவே அவரது கதைகளும் மிக வியர்த்தமாகவும், அடக்கமின்றியும்

அமைந்துள்ளன. நோக்கத்தைப் பிரமாதப்படுத்தும் சந்தடியில் கலைஞனது புருஷாகாரம் குன்றிவிடுகிறது. அஹ்மத் நதீன் காஜ்மி, திறம்பட, மனச்சாட்சி பூர்வமாக, பிரத்தியட்ச பாவத்துடன் கதை எழுதுபவர். உணர்ச்சி களின் "உள் இயக்கங்களை" அவர் சித்திரித்துக் காட்டி யுள்ளார். மேன்மையான மானிட நியதிகளை அவர் வற்புறுத்திச் சொல்லியிருக்கிறார். "ராஜீயத்தை விட கலை உணர்வே அவரது கருத்தில் எடுப்பாக காணப்பெறு கிறது. கற்பனையையும், உணர்ச்சிகளையும் துணையாகக் கொண்டு வாழ்க்கைக்கு அவர் விளக்கம் கூறுகிறார், தமது கதைகளில். "நயா பர்ஹாத்", அதிஷே குல்" (தீயின் மொட்டு), "அல்ஹாம் தோ லில்லா" (ஆண்டவனை வாழ்த்துவோம்) ஆகிய மூன்றிலும் அவரது உள்ளம் பேசுகிறது. அவை தெம்பூட்டுகின்றன. தமக்கு உரித் தான ஒரு சக்தியை அவர் அதில் இயற்றியிருக்கிறார். குவாஜா அஹ்மத் அப்பாஸின் படைப்புக்களில் பர பரப்பு இருக்கிறது. ஆனால் கிருஷ்ணசந்திராவிடம் காணப்படும் குறைகளும் உள்ளன. ராஜீய பிரசார நோக்குடன் எழுதியுள்ள கதைகள் கற்பனைச் சக்தியை மட்டம் தட்டுகின்றன.

முன்னுக்கு வந்துகொண்டிருக்கும் சிறுகதை எழுத் தாளர்களில் குறிப்பிட வேண்டியவர்கள் தேவேந்திர இஸ் ஸர், அன்வார் அஜீம், அஷ்பக் அஹ்மத், ஜமீருதின், இபு னுல் ஹசன், கலீல் அஹ்மத், ஷௌகத் சிதீகீ, அன்வார், இம்தியார் ஹுசேன் ஆவர். அவர்கள் கையாளும் உத்தி கள் வாழ்க்கையின் அனுபவத்தை உணர்ந்து சுவைக்கச் செய்யும் தன்மை படைத்தவை, துணிவுடன்கூட தீட்டப் பெற்றுள்ள சித்திரங்கள். அவை பிரத்தியட்ச பாவம் நிறைந்தவை. கதை விஷயம் சம்பந்தப்பட்ட வரை இலக்கிய நுட்பங்களை நல்லபடி படித்து இன்புறுவதற் கான சாதனங்களில் அவை முக்கியமானவை. இயற் கைக்கு இசைவான விவரங்களை அடிப்படையாகக்

கொண்டு சங்கேத உத்திகளை தக்க அமைப்புடன் சேர்த்து அவை எடுத்துக் காட்டுகின்றன. சந்தர்ப்பச் சேர்க்கையின் தளைகளைத் தகர்த்து, கைக்குப் பிடிபடாத உணர்ச்சி பாவங்களைக் கண்டறியச் செய்யும் ஒரு சில சக்தி வாய்ந்த தன்மைகள் அவற்றில் மேலோங்கிக் காணப்பெறுகின்றன. ஆபாசத்தை வற்புறுத்தும் போக்கு குறைந்து வருகிறது. வாழ்க்கையில் அழகு ததும்பும் சின்னஞ் சிறு நுட்பங்களை வடித்தெடுத்து, குணசித் திரக் கதைகளையும், மேற்படி நிலைமைகளையும் சேர்த்து இணைக்கும் உத்தி முக்கியமாகக் காணப் பெறுகிறது. கற்பனு சக்தி மிகுந்த கலைஞர்கள் என்ற வகையில் அவர் களுடைய சாதனைகள் பிரமாதமல்ல. ஆனால் தமது காலத்து ஆத்மீக வரலாற்றை அவர்கள் நமக்கு வழங்கி யுள்ளனர். நம்பிக்கை மரத்திருந்த நிலையிலிருந்து வெளி வரும் தன்மையினராக அவர்களைக் காண்கிறோம்.

### நாவல்

உருது கற்பனைக் கதையில் "தஸ்தான்" என்ற அணி எடுப்பானது. கற்பனைக் கதைகள் சுற்றிச்சுற்றி, சக்கர வட்டமாக வருவதுதான் இதன் பிரதான அம்சம். அனேகமாக பாரசீகத்திலிருந்து இவை மொழி பெயர்க்கப் பட்டவை. லக்ஷ்மணபுரியில் இருக்கும் நவல்கிஷோர் அச்ச கம் இவற்றை வெளியிடுகிறது. மனித சக்திக்கு மீறிய சாதனைகளை விஷயமாகக் கொண்ட இந்தக் கதைகள், அனேகமாக, தீரத்துடன் கூடிய புது சாதனைகள், வீரம், காதல் பற்றியவை. மிக மிக நீளமானவை. ஜயிக்க முடி யாத அளவு தைரியமும், நற்குணங்களும் படைத்த கதாநாயகர்கள் ஒருவர்பின் ஒருவராக தொடர்ச்சியாக, பல சாகசங்களைப் புரிந்து, கெட்ட போக்கிரிகளை அடக்கி, கெட்ட எண்ணமும் சூழ்ச்சித் திறனும் படைத்த மாயாவி களை சமாளிக்கும் வீர புருஷர்களாய் தென்படுகின்றனர். நஜீர் அஹ்மத் 1912-ல் காலமானர். அவருக்குப் பிறகு

பண்டித ரதன்நாத் ஸர்ஷார் உண்மையில் உருது நாவலுக்கு அடிகோலினர். ஸர்ஷார் காலமானது 1902-ம் வருஷம். பிசாஞ–ஏ–ஆஜாத் என்ற நூலை தொடர் கதையாக "அவாத் அக்பர்" என்ற சஞ்சிகையில் அவர் வெளியிட்டார். அது அமரத்துவம் வாய்ந்தது. லக்ஷ்மணபுரி வாழ்க்கையை எல்லா அம்சங்களிலும் அது விளக்கிக் காட்டுகிறது. ஆனல் அதுவே பின்பற்ற வேண்டிய லட்சியம் என்று அது கூறவில்லை. 1926-ல் காலமான அப்துல் ஹாலின் ஷரார் தாம் இயற்றியுள்ள "தில் குடாஜ்" என்ற நூலின் மூலம் சரித்திர நவீனத் துறையில் பெரிய சேவை புரிந்துள்ளார். ஷரார் ஒரு நாவலாசிரியர் மட்டுமல்ல. சரித்திர ஆசிரியர், விமரிசகர், கட்டுரையாளர், பத்திரிகையாளர். எல்லாத் துறைகளிலுமே உயர்ந்த நிலையில் இருப்பவர். அவர் நிறைய எழுதிக் குவிக்கிருர். ஆனல் எப்போதுமே அவை மிகுந்த, சிறந்த சுவையுடன் விளங்கும். "உம்ரா ஜான் ஆடா" என்பது பண்பாடு மிகுந்த ஒரு லக்ஷ்மணபுரி நாட்டியப் பெண்ணின் சுயசரிதை. இதை இயற்றியவர் மீர்ஜா ஹாடி ரூஸ்வா. உம்ரா ஜான் ஆடா என்ற புனைப் பெயரைத் தமது கதைகளுக்கு அவர் வைத்துக்கொண்டுள்ளார். நஜீர் அஹ்மத்தின் "ஜாகீர்தார் பேக்", ஸர்ஷாரின் "கோஜீ", ரூஸ்வானின் "பிஸ்மில்லா", ரஷீதுல் கைரியின், "நானி அஷோக்" ஆகியவை உருது இலக்கியத்தில் மிக ருசிகரமான பாத்திரங்கள். வாழ்க்கை அவை மூலம் களிநடம் புரிகின்றது.

நாவலாசிரியர்களிடையே பிரேம்சந்த் மிகமிக உயர்ந்தவர். பிரத்தியட்ச பாவத்துடன் எழுதுபவர். மிதியுண்டு அவதியுறும் தாழ்நிலை மக்களின் துயரை அப்படியே படம் பிடித்துக் காட்டியிருக்கிருர். வாயில்லாப் பூச்சிகளுக்குக் குரல் கொடுத்தவர். எளிய மனிதப் பண்பை கம்பீரமாக உருப்படுத்தியவர். பொருளாதாரப் போராட்டம், ஆத்மீக எழுச்சி ஆகிய இரண்டுமே தெளி

வாக அவரது நூல்களில் இடம் பெற்றுள்ளன. சிறுகதை எழுத்தாளர்களுக்கும், நாவலாசிரியர்களுக்கும் அவர்தாம் கலங்கரை விளக்கமாக இருப்பவர். மைதான்–ஏ–அமல் (அரங்கம்) என்ற அவரது நாவல் ஷரார், ரூஸ்வா, ரஷீதின் கைரி ஆகியோரின் நாவல்களினின்றும் வேறுபட்டது. உருதுவில் தற்காலத்து நாவலின் தொடக்கத்தை அது குறிப்பிடுகிறது. "கோதான்" என்பது தான் அவரது படைப்புக்களில் தலையாயது. கிராம மக்களின் வாழ்க்கையை நாவல் வடிவத்தில், பரபரப்பான நிகழ்ச்சிகளுடன் சேர்த்து, எவ்வளவோ வேறுபாடுகளை வளமாக வழங்கி உருது நாவலில் முன் கண்டிராத சிறப்பு நிலைகளை அவர் அடைந்துள்ளார்.

முற்போக்கு இயக்கமானது நாவல்களைவிட சிறுகதைகள் விஷயத்தில்தான் கவனத்தை மும்முரமாகச் செலுத்தியது. 1936 முதல் 1946 வரை இலக்கிய கலை வடிவங்களில் சிறுகதையே மேலோங்கிக் காணப்பெற்றது. "ஸிகாஸ்த்" (தோல்வி) என்ற தலைப்பில் கிருஷ்ணசந்திரா இயற்றிய நாவல்தான் படிக்கக் கூடியதாக அமைந்திருக்கிறது. ஆனால் அதிலும் சிறக்கச் சொல்லக்கூடிய அம்சமெதுவும் இல்லை.

புகழ் பெற்ற இன்றைய நாவலாசிரியர்களில் இஸ்மத் சுக்டாய், அஜீஸ் அஹ்மத், கராட்டுல் ஐன் ஹைதர், ஸலீஹா அபீத் ஹுஸேன் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். இஸ்மத் எழுதியுள்ள "டேரி லகீர்" (கோணல் வழி) முதல் நூல் அல்ல. எனினும், நவநவமான உத்திகளையும் கதை சொல்லும் விதங்களையும் அவர் கையாண்டிருக்கிறார். ஒரு நடுத்தர முஸ்லிம் குடும்பத்தின் வாழ்க்கையை விவரணைகளுடன் அவர் வழங்கியுள்ளார். பால் உணர்ச்சியை சமுதாயச் சூழ்நிலையில் வைத்து அவர் ஆராய்ச்சி செய்திருக்கிறார். அஜீஸ் அஹ்மத்தின் "குரேஜ்" முதல் தரமாக எழுதப்பட்டுள்ள நூல். ஆனால் இந்த நாவலில் ஆண்–பெண் உறவுகளைப்பற்றி அடக்க

மில்லாமலும், விகாரமாகவும் எழுதியிருப்பது பல வாசகர் களுக்கு வெறுப்பூட்டி இருக்கிறது. "ஐஸீ புலந்தி" (இந்த உச்சநிலை), "ஐஸீ பஸ்தீ" (இந்தத் தாழ்நிலை), "ஷப்நாம்" (பனித்துளி) ஆகிய அஜீஸ் அஹ்மத்தின் நாவல்கள் படிக்க நன்றாக இருக்கின்றன. ஆனால் அதற்கு மேல் அவற்றைக் குறித்துச் சொல்வதற்கு எதுவுமில்லை.

கராட்டுல் ஐன் ஹைதர் இரண்டு முக்கியமான நாவல் களை எழுதியுள்ளார். "மேரி பே சனும் கானே", "பஸனே காமே தில்" (என் மனத்துயரின் கதை) அவற் றின் பெயர்கள். ஜேம்ஸ் ஜாய்ஸைப் பின்பற்ற அவர் முயன்றுள்ளார். பிரக்ஞா யுக்தி என்ற வழியை ஆற் ரேட்டம்போலச் சில சமயம் அவர் வெற்றிகரமாகக் கையாண்டிருக்கிறார்.

ஸலீஹா அபீத் ஹுஸேன் தவிர, மற்ற இன்றைய நாவலாசிரியர்களுக்கு தெய்வ நம்பிக்கையே கிடையாது. அவர்கூட ஆழமாக, மனதை ஈர்க்க வல்லதாக எதையும் சொல்வது இல்லை. இக்கால வாழ்வின் போலித் தன்மை களை அஹ்ஸான பரூக்கி கடுமையாக நிந்தனை செய்கிறார். "ஆஷ்னாய்", "ஷாமே அவாத்" ஆகிய அவரது நூல் கள் ருசிகரமாக இருக்கின்றன. ஆனால் அவற்றில் ஆழம் இல்லை. "அன்வார்", "ஷமீன்" ஆகிய பியாஜ் அலியின் நாவல்கள் பொழுதுபோக்கிற்கு உகந்தவை. மக்களுக்கு விருப்பமானது எதுவென்பதைத் தெரிந்து எழுதுபவர் அவரைப்போல அதிகம் பேர் இல்லை. "ஔர் இன்சான் மர்கயா" (மனிதன் மரித்தான்) என்பது ராமானந்த சாகரின் நாவல். முதல் பக்கத்திலிருந்தே நமது மனதை அது கவர்ந்து விடுகிறது. கடைசிவரை அதே ஓட்டந்தான். ஒரு நுட்பமான ஆத்மா 1947-ம் வருஷத்து வகுப்புவாதக் கலவரங்களின் கெடுபிடியில் சிக்கித் தவித்ததைப் பற்றிய கவர்ச்சிகரமான சித்திரம் அது. இருள் படர்ந்த அக்காலத்தில் மக்கள் மொத்தமாக பித்துப் பிடித்துத் திரிந்தபோது, அதைப்பற்றி உரு

வான, மனிதாபிமான நோக்குடன் வரையப்பெற்றுள்ளது இந்த நாவல்.

உருது நாவல்களில் பலவகைக் குறைகள் உண்டு. உலகப் பேரிலக்கியத்தினுல் போஷிக்கப்பெற்ற கலைஞர்கள் மிகக் குறைவு. உணர்ச்சிச் சூழலின் சிக்கல்களை ஆழ்ந்து பார்த்து வாழ்க்கையின் அனுபவங்களை அப்படியே சுவைக்கச் செய்யும் தன்மையுள்ளவர்கள் அதிகம் இல்லை. அஹ்மத் அலி, கிருஷ்ண சந்திரா, இஸ்மத், அஜீஸ் அஹ்மத், குவாஜா அஹ்மத் அப்பாஸ், ஸலீஹா அபீத் ஹுசேன், கராட்டுல் ஐன் ஹைதர், ஏ. ஹமீது, இன்திசார் ஹுசேன், அதில் ரஷீத், ரஷீத் அக்தார், ஜமுனுதாஸ், ஷௌகத் தான்வி ஆகியோர் முன்னுக்கு வரக்கூடிய திறமைசாலிகளான நாவலாசிரியர்கள். மொத்தத்தில் அவர்கள் உருதுவின் மனிதாபிமான சம்பிரதாயத்தை அப்படியே பின்பற்றியவர்கள்.

### நடைச் சித்திரம், சமூக வரலாறு

நடைச் சித்திரங்களை வரைவதில் பர்ஹதுல்லா பேக், ரஷீத் அஹ்மத் சித்தீக்கி, காஜி அப்துல் கபார், மௌலானு அப்துல் மஜீத் தர்யாபாதி, நியாஜ் பத்தேபுரி, டாக்டர் அபீத் ஹுசேன், குவாஜா ஹசன் நிஜாமி ஆகியோர் விசேஷமாக குறிப்பிடத் தக்கவர்கள். இந்திய வாழ்க்கையையும், பழக்க வழக்கங்களையும், வாசகர்களை மகிழ்விக்கும் வகையில் மிக விரிவாக, ரஞ்சகமாக அவர்கள் எழுதியுள்ளனர்.

சமூக வரலாற்றை எடுத்துரைக்கும் இலக்கிய வகை உருதுவுக்குப் புதிது. கிருஷ்ண சந்திராவின் "பௌதே" (செடிகள்), சுபஹ் ஹோதீ ஹை (அருணேதயம்), அதில் ரஷீதின் "கிசான் கீ பூல்" (சரத்கால புஷ்பங்கள்) பிகர் தான்ஸாலியின் "ச தரியா" (ஆருவது நதி), ஸஜ்வார் சமீரின் "ஜப் பந்தன் டுடே" (பந்தங்கள் அறுந்த போது), இப்ராஹிம் ஜனியின் "தோ முல்க், ஏக்

கஹானீ'' (ஒரு கதை, இரண்டு தேசம்) ஆகியவை, பத்திரிகைத்துறை அளித்த நல்ல வெற்றிகரமான படைப்புக்கள். பிற்காலத்தில் தொடர்ந்து பெருவாரியாக துவேஷம் வளர்ந்தபோது உருது எழுத்தாளர் எடுத்துக் கொண்டு உருவாக்கின மனிதாபிமானத்தை இவை விளக்குகின்றன.

## நாடகம்

உருது இலக்கியத்தில் முதல் நாடகம் அமானத் இயற்றியுள்ள ''இந்திர சபா''. இது இன்பியல் இசைச் சித்திரம். அவத் ராஜ்யத்தின் கடைசி மன்னரான பவஜீத் அலிஷா காலத்தில தயாரிக்கப்பட்டது. 1856ல் அவர் சிங்காதனத்திலிருந்து இறக்கப்பட்டார். பின்னர் பார்ஸி நாடகக் கம்பெனிகள் பொதுமக்களின் பொழுது போக்கிற்காக நாடகங்களை ஆடிக் காண்பித்தன. இந்தக் கம்பெனிகளுக்காக நாடகங்களை வரைந்து கொடுத்து புகழ் பெற்றவர்களில் முகமத் மியான் ரௌனக் பனுர்ஸி, தாலீப், ஆஷன் லக்னுவி ஆகியோர் முக்கியமானவர்கள். ஆகா ஹஷர் காஷ்மீரியை உருது நாடக மேடையின் மார்லோ என்று கூறுவர். இக்காலத்து நாடகங்கள் பெரும்பாலும் மந்த கதியில் செல்லும் ஒரு விறைப்பான உரைநடையில் எழுதப்பெற்றவை.

உருதுவில் பெரிய நாடகங்கள் இல்லை. இஷ்தியாக் ஹசேன் குரேஷி, ஸமீத் இம்டியாஸ் அலிதாஜ், பேராசிரியர் முகம்மத் முஜீப், டாக்டர் அபீத் ஹுசேன், அஹ்மத் ஷுஜா, ஷஹீத் அஹ்மத் தெஹ்லாவி, அபீத் அலி, அபீத், பஜல் ஹக் குரேஷி, மீர்ஜா அபீத், உபேந்திரநாத் அஷ்க், முகம்மத் ஹுசேன், கே. எல். கபூர், ஷௌகத் தான்வீ ஆகியோர் உருது நாடகத்தின் விஷய வரம்புகளை விரிவாக்கியுள்ளனர். தேசம் சுதந்திரம் அடைந்து, உலகப் பண்பாட்டை ஏற்று ஜீரணித்துக் கொள்ள முற்பட்டிருக்கும் தருவாயில் உருது நாடகம்

வளர்ச்சி கண்டு வருகிறது. முந்தைய குறைபாடுகளை அகற்ற முயற்சிகள் நடந்து வருகின்றன. ஓரங்க நாடகங்கள், ரேடியோ நாடகங்கள் அதிகமாக மக்களை ஈர்க்கின்றன. பிலிம் நாடகங்கள் நிறைய வந்துள்ளன. ஆனால் இலக்கியத்தை அவை வளப்படுத்துவதாகச் சொல்வதற்கில்லை, மக்களது ருசி எப்படி இருக்கிறதென்பதையே இவை காண்பிக்கின்றன.

இந்தியாவில் ஓர் உருது நாடக அரங்கை உருவாக்க ஆர்வம் இருந்து வருகிறது. இப்போதைய அரங்கம் சுதேசத் தன்மை வாய்ந்தது அல்ல. மேலைநாடுகளின் நாடக வழி முறைகளைப் பின்பற்றி, சென்ற 100 ஆண்டுகளில் அது வளர்ச்சி கண்டது. தெருக்கூத்து, திறந்த வெளி நாடகம், திருவிழாக் கால ஆட்டங்கள், கிராமிய கேளிக்கைகள் ஆகியவை மறைந்து வருகின்றன. தொன்மையான இந்தச் செல்வத்தை மீண்டும் உயிர்ப்பித்துக் காட்ட முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. பழைய, புதிய பாணிகளை மகிழ்ச்சிகரமாக இணைத்து நாடகத்தை உருவாக்கும் பணியில் ஹபீப் தன்வீர் இயற்றியுள்ள "ஆக்ரா பஜார்" குறிப்பிடத்தக்கது. உருது நாடகத்தின் எதிர்காலம் பிரகாசமாக இருக்குமென்பதை இது காட்டுகிறது.

## திறனாய்வு

திறனாய்தல், பதிப்பித்தல் ஆகிய துறைகளில் குறிப்பிட வேண்டியவர்கள் டாக்டர் அப்துல் ஹக், பேராசிரியர் ஹமீத் ஹசன் காத்ரி, நியாஜ் பத்தேபுரி, ஸஜ்ஜத் ஜாஹீர், டாக்டர் அப்துல்லா, பேராசிரியர் கலீமுதீன், பேராசிரியர் மசூத் ஹுசேன் ரிஜ்வி, மஜ்னு கோரக்புரி, இமேதாத் பரேலாவி, பிராக், அஸ்காரி, மும்தாஜ் ஹுசேன் ஆகியோர். பேராசிரியர் ஆலி அஹ்மத் சூரூர், ஸயீத் ஏதிஷாம் ஹுசேன் ஆகியோர் புகழ்பெற்ற திறனாய்வாளர். இலக்கியத்தை அதன் எல்லா சமூக

வகைகளிலும் அவர்கள் மதிப்பிடுகின்றனர். திறனாய்வை விஞ்ஞான முறைப்படி அவர்கள் நடத்துகின்றனர். கலை கலைக்காகத்தான் என்ற தத்துவ அடிப்படையில், மனதில் எப்படிப் பதிகின்றது என்பதைக் கொண்டு திறனாய்வு செய்யும் போக்கு முன்னர் சகஜமாக இருந்து வந்தது. ஆனால் இப்போது அது மிகத் தாழ்நிலையை அடைந்துள்ளது. இலக்கிய வரலாற்று நூல்களை இயற்றி யுள்ளவர்கள் மாமூத் ஷெரானீ, குலாம் ரஸூல் மேஹர், ஹமீத் ஹஸன் காத்ரீ, நசீருத்தீன் ஹாஷ்மி, அப்துல் சலாம் நத்வீ, டாக்டர் ராம் பாபு சாக்சேனா, மாலிக் ராம், விக்கார் அஜீம், தன்ஹா, பேராசிரியர் சார்வரி, டாக்டர் ஜோரே ஆகியோர். அவர்களும், இன்னும் பலரும் செய்த முயற்சிகள் பல புதிய உண்மைகளைப் புலப்படுத்தியிருக்கின்றன. பல பழைய தவறுகளை அவர்கள் திருத்தியிருக்கின்றனர். வைத்திய பரிசோதனை யைப் போன்ற ஆசாபாசமற்ற நிலையில் இருந்து கொண்டு, அவர்களிற் சிலர் திறனாய்வை நடத்தியுள்ள னர். காஜி அப்துல் வடுட், இம்தியாஜ் அலீகான் ஆர்ஷி, டாக்டர் அப்துஸ் சத்தார் சித்தீகி ஆகியோர் உருது இலக்கியத்தின் 'கனிவள' ஆராய்ச்சியாளர்கள். தொன்மையான இலக்கியங்களில் எஞ்சி நிற்கும் பழைய வடிவங்களைத் துருவி ஆராய்வதில் அவர்கள் புகழ் அடைந்திருக்கிறார்கள். இப்போதைய பத்து ஆண்டு களில் திறனாய்வு நூல்கள் ஏராளமாக வெளிவந்துள்ளன. அவற்றில் சிறப்பான பகுதிகளை திரட்டிப் பார்த்தால் தீவிர சிரத்தையுடன் பணியாற்றும் தன்மையைக் காணலாம். இலக்கியத் திறனாய்வுக்கும் தற்கால சரித்திரத்திற்கும் இடையே உள்ள பரஸ்பரத் தொடர்புகள் சிக்கலானவை என்பது புலனாகும்.

**நகைச்சுவை, நிந்தனை**

உருதுவில் நிந்தனை இலக்கியம் நிறைய இருக்கிறது. இம்தியாஸ் அலி தாஜ், பத்ராஸ், ரஷீத் அஹ்மத் சித்தீகி, காஜி அப்துல் கபார், டாக்டர் அபீத் ஹுசேன், கன்னையலால் கபூர், ஷௌகத் தானவீ ஆகியோர் பெருந்தன்மையுடன் நகைச்சுவை ததும்ப, மனதைப் புளகாங்கிதப்படுத்தும் சக்தி வாய்ந்த சைலியைக் கையாளுகிறார்கள்.

**விஞ்ஞான சரித்திர இலக்கியம்**

விஞ்ஞானம், சமயம், சரித்திரம், கல்வி போன்ற முக்கியமான விஷயங்களைப்பற்றி பலர் எழுதியுள்ளனர். அவர்களில் குறிப்பிட வேண்டியவர்கள் மௌலானா அபுல் கலாம் ஆஜாத், டாக்டர் அபீத் ஹுசேன், குவாஜா குலாமுஸ்-சையித்தீன், டாக்டர் ஜக்கீர் ஹுசேன், சைய்யத் சுலேமான் நத்வீ, மௌலானா அப்துல் மஜீத் தர்யாபாடி, நியாஜ், அப்துல் ஆசன் அலி, ஷா மொய்ன்-உத்தீன், ஜாபர் ஹுசேன், சையத் அஹ்மத், ஹிப்ஜுர் ரஹ்மான், மௌலானா ஹுசேன் அஹ்மத் மதானி, மனசிர் அஹ்ஸான் கிலானீ, காலீக் நிஜாமி, மௌலானா ஆஷ்ரப் அலீ, சாபா-உத்தீன் அப்துல் ரஹ்மான், மௌலானா மௌதூதீ ஆகியோர் பலவகையான அறிவியல் நூல்களை இயற்றியுள்ளனர். தெளிவு, புலமை, ஆராய்ச்சி, தழுவல் ஆகிய துறைகளில் அவை எடுத்துக் காட்டுகளாக விளங்குகின்றன.

**கடிதங்கள்**

உருது இலக்கியம் கடித இலக்கியத் துறையில் நல்ல வளம் பெற்றுள்ளது. அவை பலதரப்பட்டவை, விரிவானவை. ரஜப் அலீ பெக் சுரூர், வஜீத் அலி ஷா, மிர்ஜா காலீப், ஹாலி, ஷிப்லீ, மேஹ்தீ இப்பாதீ, மௌலானா அபுல் கலாம் ஆஜாத் போன்றோர் புனைந்தவை இக்கடிதங்கள்.

சிந்தனையும் உணர்ச்சிப் பெருக்கும் கலந்து செயல்பட்ட, நாடகத்தை ஒத்த வாழ்க்கையை இவர்கள் நடத்தியவர்கள். அந்த வாழ்க்கையை நேரில் நின்று உரையாடுவது போன்ற அன்னியோன்ய சைனியில், தெம்பூட்டும் வகையில் இந்த துல்லியமான ஆத்மாக்கள் இவற்றை நமக்கு அளித்துள்ளன. நியாஜ்ஜின் கடிதங்கள் நீர்க்குமிழிகள் போன்றவை. தொட்டால் மறைந்துவிடும் அற்புதமானவை. மௌல்வி அப்துல் ஹக், ஹமீர் ஹாஸன் காத்ரீ ஆகியோரின் கடிதங்கள் சாங்கியமற்ற வகையில் மனதில் தோன்றியவற்றை அப்படியே எழுதும் ரீதியில் அமைந்துள்ளன. அன்ருட உரையாடல் போல் மனம் விட்டு அவை உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்துகின்றன. எவ்வளவோ இலக்கிய அலுவல்களிடையே டாக்டர் இக்பாலும், சையத் சுலேமான் நத்வியும் தமது கடிதங்களை எழுதித் தள்ளினர். எனினும் அவை அவர்களது உள்ளப்போக்கை அறிய உதவுபடியாக இருக்கின்றன. "குபாரே கடீர்"[1] என்ற தலைப்பில் வெளியாகியுள்ள மௌலானு ஆஜாத் கடிதங்கள் அவசரத்தில் எழுதப்பட்டவை அல்ல. எழுதி அவை உருவாவதற்கு அவகாசம் அதற்கு அளிக்கப்பட்டது. ஒவ்வொரு வாக்கியமும் ஒரு மலராக அமைந்த பிறகுதான் அவற்றைத் தபாலில் அனுப்புவது வழக்கம். சிறையில் பட்டுப்பூச்சி போல் கச்சிதமாக தமது கடிதங்களை அவர் வரைந்தார். சொல்லாட்சி, கலையுணர்ச்சி, மிக நுட்பமான கருத்துக்களை எடுத்துரைக்கும் தன்மை ஆகிய அம்சங்கள் அவற்றில் குறிப்பிடத்தக்கவை. ஸஜ்ஜத் ஜாஹீரும் சிறையிலிருந்து கடிதங்களை எழுதினர். ஆனுல் அவற்றில் ஒளி இல்லை, இருள் படர்ந்திருக்கிறது. ஸபீயா அக்தாரின் கடிதங்களில் ஜீவகளை ததும்பும்

1. இந்த நூலின் தேவநாகரி பதிப்பு அரும்பத உரையுடன் சாகித்திய அக்காதெமியால் பிரசுரிக்கப்படுகிறது.

உணர்ச்சி பெருக்கெடுத்து ஓடும். அவரது அடக்கமும் சக்தியுமாகச் சேர்ந்து,படிப்பவர்களுக்கு ஒரு டானிக்கைப் போலவோ, கடற்காற்றைப் போலவோ தெம்பை அளிக் கின்றன. அவரது சைலி பிரத்தியேகமாக அவருக்கே உரித்தானது. அதன் நறுமணம் எல்லாக் கடிதங்களிலும் பரந்து கிடக்கின்றன.

இந்திய வரலாறு கொந்தளிக்கும் கடல் போன்றது. எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கையை அளிக்கும் ஒரு ரம்மியமான தீவு போல இக்காலம் அமைந்துள்ளது. இந்திய அபிவிருத்தியில் இது ஒரு முக்கியமான கட்டம். கொந்தளிப்பும் மையிருளும் சேர்ந்த கடுமையான இரவு கழிந்துவிட்டது. இந்தப் போக்குகளை எல்லாம் உருது இலக்கியத்திலும் காணலாம். அது வாழ்க்கையும் கவர்ச்சியும் கலந்த ஒரு சேர்க்கை. குறைகள் இருந்தும் அதில் பரந்த நோக்கம் உண்டு. தெம்பூட்டுகிறது. மனிதாபிமானம் மிளிருகிறது. நவ இந்தியாவை அமைப்பதில் தனது சமுதாய பொறுப்புக்களை உருது இலக்கியம் அறிந்தே இருக்கிறது.

## SELECT BIBILIOGRAPHY OF URDU LITERATURE

*Encyclopaedia of Islam.*
Vol. IV, Pt. ii, 1934 pp. 1023–29; article on Urdu Literature by Dr. Abdul Haq.

*Encyclopaedia Britannica.*
11th edition, Vol. XIII, pp. 479–491; articles on Hindostani and Hindostani Literature; also latest edition of the same, pp. 572–574, article on 'Urdu Literature' by Mr. R. Russell.

*History of Urudu Literature.*
By Dr. Ram Babu Saxena; Ram Narain Lal; Allahabad, 1927.

*The Influence of English Literature on Urudu Literature.*
By S. Abdul Latiff; London, 1924.

*Urudu Prose under the Influence of Sir Syed Ahmad.*
By Shaikh Mohd. Asraf; Lahore, March 1940.

*The Ardent Pilgrim, A Study of Dr. Iqbal.*
By Iqbal Singh; London, 1951.

*Urdu Ghazal* (A Study of Urdu Lyrical poetry with selections).
By Dr. Yusuf Hussain; Delhi, 1952.

*Poems from Iqbal.*
Translated by Victor G. Kiernan; London, 1955.

*Interpretations of Ghalif.*
By J. L Kaul; Atmaram & Sons, Delhi, 1957.

*Linguistic Survey of India.*
By G. A. Grierson, Vol. IX, Pt. 1, pp. 42–270.

# கன்னட இலக்கியம்

வி. கே. கோகாக்

## முகவுரை

புதிதாக அமைந்துள்ள கர்நாடக ராஜ்யத்திலே முன்னர் பம்பாய், சென்னை, ஹைதராபாத் ஆகிய பகுதியைச் சேர்ந்த ராஜ்யங்களும், மைசூரும், குடகும் சேர்ந்தன. புதிய ராஜ்யத்தின் நிலப் பரப்பு 85,000 சதுர மைல்கள். ஜனத்தொகை இரண்டரைக் கோடி. அதன் மக்கள் வளம் மிகுந்த, தொன்மையான வரலாற்றுச் சிறப்புள்ளவர்கள். இந்தியப் பண்பாடு, கலை, சிற்பம் ஆகியவற்றிற்கு கதம்பர்கள், ராஷ்ட்ர கூடர்கள், சாளுக்கியர்கள், ஹொய்ஸலர்கள், விஜயநகர சக்கரவர்த்திகள் ஆகியோர்கீழ் குறிப்பிடத்தக்க நற்பணி நடந்திருக்கிறது.

தொன்மையை மட்டும் எடுத்துக்கொண்டால், கன்னட இலக்கியமானது இந்தியாவிலேயே தமிழ் நாட்டு இலக்கியத்துக்கு அடுத்தபடி மிகப் பழையது. கர்னடகத்தில் ஜைன சமயம் தோன்றிய காலத்திலேயே கன்னட இலக்கியம் உதயமாயிற்று. ஆருவது, ஏழாவது நூற்ருண்டுகளின் கல்வெட்டுகளில் இதன் வடிவங்களைக் காணலாம். அக்காலத்து கவிஞர் பலரின் நூல்கள் கிடைக்காது போய் விட்டன. கவிராஜ மார்கா (கி. பி. 825) அப்போதைய கவிதை பற்றிய ஒரு நூல். இதுதான் கன்னடத்தில் கிடைக்கும் முதல் நூலாகும். முதல் உரைநடை நூல்

வொட்டராதான (கி. பி. 925). 925 முதல் 1150 வரை உள்ள காலத்தை சம்பு–சைலியில் இதிகாச இலக்கியம் உருப்பெற்ற பொற்காலம் என்று குறிப்பிடலாம். பம்பா, பொன்ன, ரன்ன ஆகியோர் இந்த முறையைச் சிறப்பாகக் கையாண்டவர்கள். 1150 முதல் 1360 வரை உள்ள காலம் வாழ்விலும் சரி, எழுத்துலகிலும் சரி, வீர சைவர்களின் கலக உணர்ச்சி மேலோங்கி இருந்தது. வசனம் அல்லது சிறிய உரைநடை இசைக் காவியங்கள் புதிய சந்த வகைகள் (ராகளே, த்ரிபதி, ஷட்பதி போன்றவை) போன்ற புதிய வடிவங்கள் இக்காலத்தில் தோன்றலாயின. எழுதும் வசன நடை பேச்சு நடைக்கு நெருங்கி வந்தது.

1336 முதல் 1575 வரை விஜய நகர ஆட்சியின் பொற்காலம். தாஸர்கள் என்ற வைஷ்ணவ கவி யோகிகளின் படைப்புக்கள் இக்காலத்தில் முக்கியமானவை. குமார வியாஸ, லக்ஷ்மீச, ரத்னகரவர்ணி ஆகியோர் இதிகாச ரீதியில் கவிதைகளை இயற்றினர். நிஜகுண சிவயோகி போன்ற தெய்வஞ்ஞர்கள் வீர சைவர்களிடையே தோன்றினர். 1575 முதல் 1700 வரை பழைய இலக்கிய வழி வகைகள் தொடர்ந்து பிரகாசமாக இருந்த காலம். சர்வக்ஞன் என்ற வசைக் கவிஞன், விஜயநகர ராஜ்யம் அழிந்த பிறகு சமுதாய அமைப்பில் ஏற்பட்ட மாறுதல்களைப் புலப்படுத்தினன். மைசூரைச் சேர்ந்த சிக்க தேவ ராயர் சம்பு இதிகாச இலக்கிய வகையை 18-வது நூற்றாண்டில் புதுப்பிக்க முயன்றார். வரலாற்று நூல்களுக்கு துணை புரியக்கூடிய வசன நடையும் தோன்றியது. 19-வது நூற்றாண்டின் முதல் பத்தாண்டுகள் வரை இந்த நோக்கமே முக்கியமாகக் காணப்பெற்றது. தற்கால இலக்கியம் என்பது ஏறக்குறைய இந்த சமயத்தில் தொடங்கியதாகக் கூறலாம்.

**தற்காலம்**

இன்றைய இந்திய இலக்கிய சாதனைகள் பலதரப்பட்டவை. அவற்றை உருவாக்கியவை புதிய சிந்தனையும், புதிய வாழ்வை நோக்கமாகக் கொண்ட இயக்கமும். இது தொடங்கி ஒரு நூற்றாண்டுக்கு மேல் ஆகிறது. இடைவிடாது, தடுக்க இயலாத வகையில் அது முன்னேறி, எல்லாவற்றையும் மாற்றி உருவகப்படுத்தி வருவதன் முழுமையை இன்னும் கண்டாக வில்லை. இந்தப் புதிய சக்திகளை, மோதலை சென்ற நூற்றாண்டின் நடுவில் கன்னட இலக்கியமும் அனுபவித்தது. சில புலவர்களும் அக்காலத்து கிறிஸ்தவ மிஷனரிகளும் எழுதியிருப்பவைகளில் இதன் செல்வாக்கைக் காணலாம். இடைக்கால நிலையிலிருந்து தற்கால வடிவத்துக்குக் கன்னட மொழியானது மாறிய சமயம் அது. அமைப்பிலும் மாறுதல் ஏற்பட்டது. இந்த இடைக்காலத்தில் தோன்றிய நூல்களில் குறிப்பிடத்தக்கது கெம்பு நாராயணுவின் முத்ரா மஞ்ஜூஷா (1823). முத்ரா ராக்ஷஸம் போன்ற ஸம்ஸ்கிருத நாடகக் கதையை முதல் நூல் போல அமைத்துக் காட்டும் உரைநடைக் கற்பனைச் சித்திரம் அது. இடைக்கால, தற்கால இலக்கண அமைப்புகள் அதில் காணப்பெறுகின்றன. 1799 முதல் 1868 வரை மைசூர் ரஜ்யத்தை ஆண்டு வந்த மும்மடி கிருஷ்ண ராயர் பெரிய கலா போஷகர். அவர் சிறப்பான இலக்கியக் கர்த்தா. அவர் பெயரால் உள்ள கன்னட நூல்கள் பல உரைநடையில் அமைந்துள்ளன. கன்னட இலக்கியத்தில் உரைநடை அடைந்த பிராதான்யத்தை அது ஒருவாறு புலப்படுத்தியது. உரைநடையின் முடிவும் செய்யுளின் தொடக்கமும் ஒன்று என்று சொல்வார்கள். ஆனால் கன்னட இலக்கியத்தில் 1400 ஆண்டுக் காலம் உரைநடை தலைதூக்கவே இல்லை. செய்யுள் முடிவுறவே இல்லை. கன்னட இலக்கியம் குறுகிய தன்மை வாய்ந்ததாகிவிட்டது. அதை முன் நின்று உருவாக்கியவர் ஒரு மைசூர் மன்னர்.

**மேலை நாடுகளின் செல்வாக்கு**

தற்கால இந்திய இலக்கியம் சுதேசியத் தன்மைவாய்ந்ததா? அல்லது வெளியில் வேர் விட்டதா என்பதைப் பற்றிய ஆராய்ச்சி விரைவில் புலவர்கள் மட்டுமே அக்கறை கொள்ளக் கூடியதாகிவிடும். இந்திய இலக்கிய அடிவானில் மேலைநாடுகள் ஊக்குவித்த ஒளிச்சுடர், தொடக்கத்தில் என்றும் கண்டிராத சக்தியுடன் இருந்தது என்ற உண்மையை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். இந்திய எழுத்துலகில் நூறு ஆண்டுகளுக்கு முன் வந்து புகுந்து கொண்ட புதிய கிரஹம் என்று மட்டும் அதைக் கூறுவதற்கில்லை. புதிய கண், காதுகளை ஆங்கில இலக்கியம் அளித்துள்ளது. நாவல், சிறுகதை, துன்பியல் நாடகம், வாழ்க்கை வரலாறு, சுயசரிதை, கட்டுரைக் குறிப்பு, சிறு கவிதை, இசைப் பாடல் ஆகியவையும் இன்னும் பல இலக்கிய வகைகளும் அவற்றின் ரம்மியமான உட்பிரிவுகளும் முடிவு இல்லாத விசித்திர வளமையைக் காண்பிக்கின்றன. ஷேக்ஸ்பியர், மில்டன், அடிசன், ஸ்விப்ட், ஜான்ஸன், கோல்ட்ஸ்மித், பர்க், வொர்ட்ஸ்வர்த், ஷெல்லி, கீட்ஸ், ஸ்காட், ஜேன் ஆஸ்டன், மெக்காலே, டிக்கன்ஸ், தாக்கரே ஆகியோரின் நூல்களை இங்கு பெரிதும் விரும்பிப் படித்தனர். ஸ்காட், வங்க மொழி எழுத்தாளரான பங்கிமையும், மராத்தி எழுத்தாளரான ஆப்தேயையும் ஊக்குவித்தார். அவர்களுடைய நாவல்கள் கன்னடத்தில் வெங்கடாச்சார், கலகநாத் ஆகியோரை ஆட்கொண்டன.

எதுகை இல்லாத செய்யுள் வடிவத்தில் அவல நாடகத்தையும், சரித்திர நாடகத்தையும் கன்னடத்தில் எழுதத் தொடங்கியதற்கு ஷேக்ஸ்பியர் முக்கிய காரணம். புராதன நாடகங்கள் விஷயத்திலும் ஷேக்ஸ்பியர் பாணியையே கன்னடத்தில் கையாண்டனர். பழக்க வழக்கங்களைப் பற்றிய இன்பியல் நாடகங்கள் கோல்ட்ஸ்மித், ஷெரிடன் வழிகளைப் பின்பற்றியவை. கன்னட சமூக நாடகங்கள் இப்சனை வாழ்த்த வேண்டியவை.

ஆய்வுத் தன்மை விளைவித்த உரையாடல் நாடகங்கள் ஷாவின் பாணியில் எழுந்தன. கன்னட சங்கீத நாடகமும் பிறவகை இசை நாடகங்களும் ஆங்கில மரபைச் சார்ந்தவை. கர்னாடக கிராமிய மரபுகளில் இத்தகைய நூல்கள் இருக்கவே செய்தன. போ, ஹாதார்ன், கானன் டாயல் ஆகியோர்கள் சிறுகதை இலக்கியத்தின் முன்னோடிகள். வாழ்க்கை வரலாறுகளை எழுதுபவர்களுக்கு வழி காட்டியவர்களாக இருந்தவர்கள் பாஸ்வலும், மெக்காலேயும். திரிவிக்ரமா, திவாகர், மதுரா சென்னு ஆகியோர் தம்மைத் தாமே சுயசரிதைகளில் விவரித்துக் கொண்டதற்கு வழி காட்டிகளாக இருந்தவை வொர்ட்ஸ்வொர்த்தின் கவிதையும் மில், டால்ஸ்டாய், ஆஸ்கார் வைல்ட் ஆகியோரின் சுயசரிதைகளுமே. லாம்ப், ஹாஜ்லிட் ஆகியோரின் கட்டுரைகளும் அவை போன்ற படைப்புகளும் அரட்டையும் மின்வெட்டும் என்ற தலைப்பில் வந்துள்ள கட்டுரைக் கோவைக்குக் காரணமாயின. கன்னடத்தில் திறனாய்வு நூல்களை உருப்படுத்தியவர்கள் கோல்ரிட்ஜ், ஆர்னல்ட், பிராட்லி ஆகியோர். பால்கிரேவின் கோல்டன் டிரஷரி கன்னட கவிதை உலகில் ஒரு புரட்சியை உண்டு பண்ணியது. பி. எம். ஸ்ரீகண்டய்யா என்ற கியாதி வாய்ந்த ஆங்கிலப் பேராசிரியர் அவற்றால் பெரிதும் கவரப்பட்டு அத்தொகுப்பிலுள்ள பல பாடல்களை கன்னடத்தில் மொழிபெயர்த்துள்ளார். புதிய இயக்கம் கவிதை உலகில் அதை ஓர் அறைகூவலாக ஏற்றுக்கொண்டு முன்னேறத் தொடங்கியது. புதிய சந்த வகைகளின் கருவூலமாகவும் அது அமைந்தது. ஆங்கில சந்தங்களை புதிய கன்னட சந்தங்கள் பெரிதும் பின்பற்றின. ஒரு வகையில் பார்த்தால் இடைக்கால கவிதைப் பரம்பரையின் விஸ்தரிப்பு என்றும் அவற்றை மதிப்பிடக் கூடும்.

புதிய இலக்கிய வடிவங்களும் நோக்கங்களும் வந்து மோதியது தற்கால கன்னடத்திற்கு வரம்பற்ற பயன் சுரப்பதாயிற்று. பிற இந்திய இலக்கியங்களின் விஷயத்

திலும் இது உண்மையே. அணுசக்தி ஆராய்ச்சியானது விஞ்ஞானிகளின் சிந்தனைகளையும், செயலையும் புரட்சிகர மாக்கி இருப்பதுபோல, இந்தக் கன்னட இலக்கிய மோதல் இங்கு இலக்கியப் படைப்பை புரட்சிகரமாக மாற்றி யுள்ளது. முன்னிருந்தவைகளைவிட அதிக விரிவாக பெரிய அரண்மனைகளை அமைத்து தரும் ரீதியில் கன்னட இலக்கியத்தை அது பெருமைப்படுத்தியது. உயர்தரப் படிப்புக்காக இங்கிலாந்துக்கும், அமெரிக்காவுக்கும் சென்ற இளம் எழுத்தாளர் இந்தப் புதுச் செல்வாக்கு களை ஊற்றுக் கண்ணிலேயே சுவைத்து புதிய உத்திகளை கன்னடத்தில் கையாண்டனர். நாடகத் துறையில் கைலாஸம், அத்யா ஆகியோரும், கவிதை உலகில் கோகக், பி. சதாசிவ ராவ் ஆகியோரும் இம்மாதிரி பணியாற்றியவர்கள்.

ஆங்கிலப் பண்பாட்டுடன் ஏற்பட்ட தொடர்பு, பல துறைகளில் இலக்கியங்கள் தோன்றுவதற்குத் துணையாக இருந்தது. விஞ்ஞான விசாரணை இடைக்காலத்திற்கு முன்னமேயே இந்தியாவில் நின்றுபோய்விட்டது. ஆனால் நமது சர்வகலாசாலைகளில் போதிக்கப்பெறும் ஆங்கில முறைக்கல்வியானது, எவ்வளவோ குறைபாடுகள் இருந்த போதிலும் புதிய விஞ்ஞான இலக்கியம் தோன்றுவதைப் பெரிதும் ஊக்குவித்தது. அநேகமாக எல்லா வகை விஞ்ஞானங்களைப் பற்றியும் கன்னடத்தில் இப்போது நூல்களைக் காணலாம். கர்னடக சர்வகலாசாலைகளில் கன்னடம் போதனை மொழியாகும்போது இத்துறையில் அபிவிருத்தி மிடுக்காக இருக்கும். தமது கண்டுபிடிப்பு களையும் நிர்மாண ரீதியில் தோன்றும் உணர்வுகளையும் கன்னடத்தில் கன்னட விஞ்ஞானிகளும், பொருளாதார நிபுணர்களும் வியந்து கூறத் தயாராக இருக்கையில் தான் இலக்கியமானது தாய்மொழியை வளப்படுத்தும். விடாமுயற்சியும், தியாக புத்தியும் இருந்து வந்ததன் காரணமாக கன்னடப் பத்திரிகைத் துறையானது

உயர்ந்த ரகமானதாக அமைந்துள்ளது. முற்றிலும் ஆங்கில சம்பிரதாயத்தைத் தழுவியே அது தொடங்கியது. ஆங்கில மரபையொட்டிய ஒரு வகைக் கன்னடத்தின் மூலமாகத்தான் செய்திகளையும், கருத்துக்களையும் அது வெளியிட்டது. அவை விசித்திர ஒலி வடிவங்கள் கொண்டனவாக இருந்தன. ஆனால் இப்போது இந்திய ஜனநாயகத்தைப் போலவே பத்திரிகைக் கன்னடமும் சுய அந்துஸ்துள்ளதாக வளர்ந்துவிட்டது. மக்களிடையே வேறுபட்டுப் புழங்கும் கன்னட மொழியில் கருத்துக்களை வளர்க்கவும் கண்டனங்களை வழங்கவும் அதனால் முடிகிறது. குழந்தைகளுக்கும், முதியோருக்குமான ஒரு புதிய இலக்கியம் தோன்றி வருகிறது. மொழிபெயர்ப்பு, தழுவல், சொந்தமான படைப்பு ஆகியவை, அந்த வரிசையில் இல்லாவிட்டாலும் பிரபலமாகி வருகின்றன.

## இலக்கிய மறுமலர்ச்சி

இந்திய இலக்கியங்களை மேலை நாடுகளின் மோதல் எவ்வாறு பாதித்துள்ளது என்பதைக் கவனிக்கையில் ஒரு விசித்திரத்தைக் காணலாம். அன்னிய ஆலயங்களின் முன் வழிபடும் போக்கு உருவாகையிலேயே பழைய செல்வங்களின் மறுமலர்ச்சியும் கூடவே உருப்பெறலாயிற்று. விழிப்புற்று எழுந்த ஒரு நடுத்தர வகுப்பை, சூயஸ் கால்வாய் வழியாக இந்தியாவுக்கு வந்து புதிய தீவிர உணர்ச்சி படைத்த தேசியம் பற்றிக்கொண்டது. வேதங்கள், உபநிடதங்கள், காளிதாஸன், சூத்திரகன், பாணினி ஆகியோரின் அருமை பெருமைகளை மீண்டும் அறிந்து கொண்டோம். ஷோபனுர் மாக்ஸ்–முல்லர், ரைடர், கீத் போன்றோர் மூலம் இந்தப் புத்துணர்ச்சி கிடைத்தது. ஆனால் அதே சமயத்தில் காட்வின், மில், பெர்ட்ராண்ட் ரஸ்ஸல் போன்றோரின் நூல்களைப் படித்து வேதங்களையும், உபநிடதங்களையும் கொளுத்தும் அபாயகரமான நிலையையும் நெருங்கினோம்.

இந்த மறுமலர்ச்சி பரந்த அடிப்படையைக் கொண்டதாக இருந்தது. புதிய இயக்கத்தின் பிரதான அம்சமே இந்த மறுமலர்ச்சிதான் என்றும் கருதத் தோன்றிற்று. இந்தப் புதிய செல்வாக்கின் கீழ் வந்தவர்களில் பஸவப்ப சாஸ்திரி குறிப்பிடத்தக்கவர். ஒதெல்லோவை அவர் கன்னடத்தில் மொழிபெயர்த்துள்ளார். அவரே காளிதாஸனது சாகுந்தலத்தை அற்புதமாக மொழிபெயர்த்துள்ளார். உத்தர ராம சரிதத்தை கன்னடத்தில் ஆக்கித் தந்தவர் முலபாகல். காதம்பரியை நவீன கன்னடத்தில் படைத்துத் தந்தார் துர்மரி. ஸம்ஸ்கிருதப் பெரு நூல்களை கன்னட இலக்கியத்தில் மொழிபெயர்ப்பது நீடித்து வந்துள்ள ஒரு மரபு. முற்றிலும் புதியதொரு சூழ்நிலையில் அது இப்போது மறுமலர்ச்சி கண்டது. புராணங்களும் கன்னடத்தில் மொழிபெயர்க்கப்பட்டன. புதிய உள்ளுணர்வு காரணமாக பெரிய ஐரோப்பிய எழுத்தாளருக்கு அஞ்சலி செய்தோமாயினும், நமது சுயமரியாதையை, நாம் தற்காலிகமாக மறந்து விலகிய மகத்தான சம்பிரதாயத்தை மறப்பதில்லை என்று உறுதி கொண்டோம்.

கிறிஸ்துவ சமயப் பிரசார நோக்குடன் பாடுபட்டவர்களாயினும், அன்னிய மிஷனரிகள், பழம் பெருமையை நமக்கு மீட்டுத் தருவதில் மதிப்பில்லா பணியாற்றினர். எபிகிராபிகா கர்ஞடிகா என்பதை ரைஸ் வெளியிட்டது முதல் நவீன முறையில் வரலாற்றின் ஆராய்ச்சியில் கவனம் செலுத்தப்பட்டது. 1500 ஆண்டுகளில் கன்னட மொழியானது எவ்வளவு சொல்வளத்தை சேர்த்து பிரமாதமாக வளர்ந்தது என்பதை இலக்கிய ஆர்வம் உள்ளவர்களுக்கு சிட்டலின் ‘கன்னட—ஆங்கில அகராதி’ புலப்படுத்தியது. கன்னட நூலாசிரியர்களின் வாழ்க்கைகளையும் நூல்களையும் அவர்கள் வாழ்ந்த காலத்துக் கிரமப்படி வரிசைப்படுத்தி, திறனாய்வு முறையில் வாழ்க்கைச் சரிதமும் சேர்ந்து வழங்கப் பெற்ற நூல்கள் ‘கவிசரிதே’ என்ற தொடர். பழைய கன்னட காவிய

செல்வங்களை, காவிய கலாநிதி வெளியீடுகள் மக்களுக்குக் கிடைக்கச் செய்தன. வசனங்கள் கன்னட இலக்கியத்தில் மிக மதிப்பு வாய்ந்த ஒரு பிரிவைச் சேர்ந்தவை. அவற்றைப் பிரகாசப்படுத்தியவர் ஸ்ரீ ஹாலகட்டி. இருளில் மங்கிப்போயிருந்த ரத்திஞகர வர்ணியை மீட்டு கன்னட கவிதை இலக்கியத்தில் நியாயமான முன்னணி ஸ்தானம் அதற்கு அளிக்கப்பட்டது. சர்வக்ஞரின் நூல்களும், தாஸரின் நூல்களும் பிரபலமடைந்தன. காக்ஸ்டன் அச்சகம் ஆங்கிலேயர்களுக்கு ஏராளமாக வருவாயைத் தேடிக்கொடுத்தது. ஆனாலும் கன்னட மக்களை மீண்டும் ஒன்ருகச் சேர்த்துவைத்தது. இந்திய மக்கள் அனைவரையும் ஒன்றுபடுத்தியது; தமது பொதுவான மரபைப்பற்றி ஒரு தீவிரமான உணர்வு ஏற்படச் செய்தது.

கன்னட மறுமலர்ச்சி இலக்கியத்தில் மிக முக்கியமாகக் காணப்பெறுவது நமது மகத்தான இலக்கிய மரபின் பிரக்ஞை. கன்னடக் கவிதையை பின்வருமாறு பாடுகிருர் பேந்த்ரே :

"போகமும் யோகமும் மிளிர்கின்றன உன்னிடம்
ஜைன கூண்டின் மதுவே, வீர சைவ ஞானிகள்
தவித்தனர் உன்னையடைய.
அவர்களது பிரியமான மனப் பெண் நீ!
ஆடிப்பாடிய ஞானிகளின் நாட்டியப் பெண் நீ!
அவர்களது ஆனந்தத்தையும் முறையீடுகளையும்
உருவாக்கிஞய் நீ!
முத்தன்ஞவின் காதலும் அன்பும் உனது வான
வில்லை ஒத்த சொற்களால் அருள் பெற்றன.
ஏ தேவி! இணையற்ற ஒளிமிகுந்த மாதே!
எனது அந்தராத்மாவில் ஐக்கியமாகி விடு.
நான் நெடுநாள் காத்திருக்கிறேன்.
கீதமே! ஓ கீதமே!"

கிராமியக் கவிதையின் மறுமலர்ச்சிக்குத் துணை புரிந்தவர்கள் பேந்த்ரே, மதுரா சென்னு ஆகிய இருவரும். கதைப் பாடல்களையும் மற்ற கீதங்களையும் இவர்கள் ஊக்குவித்தனர். பழைய கல்வெட்டுகளும், வீர புருஷர் களைப் பற்றிய வரலாறும் சரித்திரத்தைப் பிரகாசப் படுத்தின. நமது பண்பாடு நாட்டுக் கதைகளிலும், பழைய மொழிகளிலும் உறைந்துகிடப்பதைக் கண்டு கொண்டோம். ஆங்காங்கு வழங்கிய கன்னட மொழி வகைகளை, ஊர்களின் பெயர்களை, விஞ்ஞான ரீதியில் ஆராய்ந்ததன் காரணமாக கவிதையும் நாடகமும் வர்ண ஜாலம் பெற்றன. கன்னட நாட்டில் மொழி ஆராய்ச்சியும் விஞ்ஞான ரீதியில் இடம் பெற்றது.

மேலை நாடுகளை அனுசரித்துச் செல்வது, அதே சமயத்தில் இந்திய மரபுக்கு புது வாழ்வு என்ற இரு வழிகளில் இந்திய மறுமலர்ச்சியானது மாறத்தொடங் கியது. எல்லா இந்திய மொழிகளிலும் காணப்பெறும் செல்வாக்கு இது. இவ்வகையில் இந்திய மொழிகள் ஒன்றுக் கொன்று உதாரணமாக இருந்தன. கர்னடகத்தின் யக்ஷ கானங்கள் மராத்தி நாடகம் தோன்றுவதற்குக் காரண மாயின. மராத்தி நாவல், முக்கியமாக ஆப்தேயின் சரித்திர வீரக் கதைகள் கன்னட நாவலுக்கு வழி காட்டியாயின. ராஜாராம் மோகன்ராய், மகரிஷி தயா னந்தா, ஸ்ரீ ராமகிருஷ்ணு, ஸ்வாமி விவேகானந்தா, ஸ்ரீ அரவிந்தர், ஸ்ரீமதி அன்னி பெஸன்ட், மகாத்மா காந்தி, ரவீந்திரநாத டாகுர், ஸ்ரீ ரமண மகரிஷி ஆகியோர் ஒரு ராஜ்யத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல. இந்தியா பூராவுக் கும் சொந்தமாயினர். பல முகங்களைக் கொண்ட புதிய இயக்கத்தின் பொருள்படைத்த சின்னங்களாக அவர்கள் மதிக்கப் பெற்றனர். தேசம் அவர்களை அப்படியே போற்றியது. அவர்களது வாழ்க்கையும், உரைகளும் பண்பட்ட பல உள்ளங்களைக் கவர்ந்தன. அவர்கள் ஒவ்வொருவருக்கும் இருந்த செல்வாக்கு தொடக்கத்தி

லிருந்ததைப் போலவே இன்றும் இருந்து வருவதைக் காணலாம். இந்தச் செல்வாக்கு நமது மக்களிடையே பரவுவதற்கு ஆங்கில மொழி, ம்திப்புள்ள சாதனமாக அமைந்தது. அரவிந்தர், பண்டித நேரு ஆகியோர் பிரதானமாகவும் டாகுர், காந்திஜி இரண்டாம் பட்சமாக வும் ஆங்கிலத்தைக் கையாண்டவர்கள்.

## ஓர் ஆராய்ச்சி

கலைஞனுக்குப் படைத்தாக வேண்டுமென்ற துடிப்பு உண்டு. அது அவனது உளத்தேவைகளில் ஒன்று. மறுமலர்ச்சியின் பிரதான அக்கறையும் அதுவே. பழமைக்காகவே கிளறிப் பார்க்க கலைஞன் விரும்பவில்லை. அது புதை பொருளாராச்சியாளரின் பணி. டாம்பீகம் மிகுந்த ஒரு ஐரோப்பிய யாத்ரிகர் தனது சாமான்களில் தான் சென்று வந்த தேசங்களின் பெயர்களையெல்லாம் விலாசச் சீட்டுகளாக ஒட்டியிருப்பதுபோல எல்லாவற்றை யும் பழமையின் பெருமைகளை காட்சியாக வைப்பதில் கலைஞனுக்குத் திருப்தி இருக்காது. அது பிரத்தியட்சப் பிரமாணம். இப்போதைய நிலவரம் என்ன, எதிர்காலம் எப்படியிருக்கும் என்பதைப் பற்றிய உள்ளுணர்வுகள் அவனுக்குச் சுயமாக உண்டு. பழமைக்குத் திரும்பி அவன் இங்கே எடுத்துச் சொல்லுகின்ருன் என்ருல் தனது உள்ளுணர்வுகளைச். சரிப்படுத்திக்கொண்டு வலுப் படுத்தவே அவ்வாறு பாடுபடுகின்ருன். சுற்றுமுற்றும் பார்த்து பிற தேச இலக்கிய இயக்கங்களை அவன் சுவைக் கிருன் என்ருல் அதற்குக் காரணம் தனது மனதில் இருப்பதைப் போன்ற ஒரு சமநிலைத் துடிப்பு அவற்றில் காணப்பெறுவதுதான். டாகுரின் கஸ்தூரி மானைப்போல அவன் பரவலாகச் சஞ்சரிக்கிருன் என்ருல் அதற்குக் காரணம் தனது உள்ளுணர்வின் மனம் என்ற பனித்திரை அவனைப் பித்தனுக்கி விடுவதுதான். வாழ்க்கையைப் பற்றிய தனது சொந்த மனப்பான்மை

அவன் அளவிலும் வியாபகத்திலும் மிளிர்ந்து கிடப்பதைக் காண்கிறுன். இந்த அற்புதமான முறைகளை நவீன இந்திய மொழிகள் ஆங்கில இலக்கியத்திலிருந்து கடன்வாங்கி, தமது இணையற்ற கவர்ச்சிகரமான இலக்கிய யாத்திரையை நடத்தியுள்ளன. அதே சமயத்தில் தமக்கு உற்சாகம் அளிப்பதற்காக, சொந்த நாட்டின் பழைய இலக்கிய ஊற்றுக்களையும் நன்ருகச் சுவைத்து தனது உரிமையை வளர்த்துக்கொண்டிருந்தது. இக்காலத்தில், இவற்றில் பேசும் ஆண்களும் பெண்களும் வாழ்ந்து தமது அபிலாஷைகள் கைகூடுவதற்கு உழைக்கவும் வேண்டியிருந்தது.

இந்தப் புதுவாழ்வு என்பது என்ன? கன்னட மக்கள் சம்பந்தப்பட்டவரை, அதை விளக்கிக்கூற முடியும். சிந்தனை, வாழ்வைப் பற்றிய பொது இயக்கத்தின் தொடக்கம் 19-ம் நூற்ருண்டின் முற்பகுதி என்று கூறலாம். மொழியின் அமைப்பு யாரும் உணராத வகையில் மாறலாயிற்று. உரைநடையானது வரவர தனக்கு உரித்தான ஆதிக்கத்தைப் பெற்று வளர்ந்தது.

கன்னட நூல்கள் அச்சிடப் பெற்றன. 1865-ல் மைசூரில் 'கர்னுடக பிரகாசிகா' போன்ற பத்திரிகைகள் கன்னடத்தில் தோன்றின. 'நியூடெஸ்டமென்ட்' என்ற விவிலிய நூல் 1823-ல் கன்னட மொழி பெயர்ப்பாக வந்தது. தென் கர்னுடகத்தில் மைசூர் அரண்மனையின் ஆதரவு காரணமாக கன்னட இலக்கிய மரபானது இடையருது வளர்ச்சி கண்டது. கர்னுடகத்தின் பிற பகுதிகள் பல்வேறு நிர்வாகங்களின் கீழ் சிதறுண்டு போய்விட்டன. அங்கெல்லாம் கன்னடமானது உயிர் வாழ்ந்திருப்பதற்கே போரிடவேண்டி யிருந்தது. ஆனுல் இந்தப் போராட்ட அவசியம் ஏற்பட்டதன் காரணமாக இன்னும் பல செல்வாக்குகள் அதைக் கவர்ந்து ஜனநாயகக் கருத்துகளும் சொல் வடிவங்களும் உருப்பெறுவதற்கு துணை புரிந்தன. இக்காலத்து நூல்களில் மாறிவரும் நிலைமை

யின் அடையாளங்களையும் நிச்சயமற்ற ஒரு தலைமையை யும் காணலாம். எனினும் இடைக்கால இலக்கிய மரபு விடாது வேரூன்றி இருந்தது. இலக்கிய உலகில் அதுவே பிரதான சக்தியாக மிளிர்ந்தது.

19-வது நூற்றாண்டின் பிற்பாதியில் புது வாழ்வு ஒன்றின் இன நாதத்தையும் ஜீவ சலனத்தையும் காண லாம். இக்காலத்தில் மேலைத் திசை மரபைப் பின் பற்றுவதும் தேச மறுமலர்ச்சியில் ஆர்வம் கொள்வது மான ஒரு வழிமுறையும் நீடித்தது. மொழிபெயர்ப்பு மூலம் ஸம்ஸ்கிருதம், ஆங்கிலம் போன்ற பிறமொழி நூல்கள் கன்னடத்தில் தொடர்ந்து வந்துகொண்டே யிருந்தன. நாடகம், நாவல், வாழ்க்கை வரலாறு, திறனாய்வு நூல்கள் முதலியவை நிலைபெற்றன. இந்த வடிவங்களில் நாவல்தான் சிறப்பாக வேரூன்றியது. கன்னட கற்பனைக் கதைத் துறையில் பிரத்தியட்ச பாவத் துக்கு எடுத்துக் காட்டாக விளங்கிய முதல் பெரிய எழுத்தாளர் எம். எஸ். புட்டண்ணா. இந்தப் புதிய பிரக்ஞையானது பெரிய அளவில் காணப் பெறுவது முத்தண்ணாவின் ராமாசுவமேதா என்ற நாவலில். சம்பிரதாயமான ஒரு கட்டுக்கதையை புதியதோர் வடிவத் தில், இதிகாசம் போல் அவர் அமைத்துக் காட்டினார். கதை சொல்லும் முத்தண்ணாவும் அவரது மனைவி மனோரமாவும் கன்னட இலக்கியத்திற்கு பெனிடிக், பீட்ரிஸ் போல பணியாற்றிய தம்பதி. பல இலக்கிய சஞ்சிகைகள் தோன்றின; புதிய இலக்கிய வடிவங்கள் அமைதியாக உருப்பெறலாயின. இசைப் பாடலின் சைலி சந்தம் சிறப்பு நயங்களும் மாறுதல் தன்மை படைத்தனவாக இருந்தன. புதிய செல்வாக்குகளே இந்தப் போக்கிற்குக் காரணம். ஷாரிப் ஸாஹப் என்பவர் அருள்பெற்ற கிராமியக் கவிஞர். இவர் தமது ஆத்மார்த்த சிந்தனைகளின் சின்னமாக நூல் ஆலை ஒன்றைப் பற்றிப் பாடினார் என்றாலும் இது பொருள் படைத்த போக்கு.

பைபிள், பாத்திமை கீதங்கள் முதலியவற்றை மொழி பெயர்த்து வெளியிடுவதில் கிறிஸ்துவ மிஷனரிகளும் விசேஷ சுறுசுறுப்பு காட்டினர்.

1900 முதல் 1920 வரை உள்ள காலத்தில் பலதரப் பட்ட உருப்படியான வெற்றிகள் கிடைத்தன. பி. ராமா ராவ், சூலூர், முடாவிடு, முலயே திம்மப்பய்யா, பஞ்சே மங்கேஷ் ராவ், எஸ். ஜி. நரசிம்மாச்சார் ஆகிய எழுத் தாளர்கள் விசேஷமாக பிரபலமடைந்தது இக்காலத்தில் தான். இக்காலக் கன்னடக் கவிதை திட்டவட்டமாக இவர் கள் மூலம் உருப்பெற்றது. எஸ். கட்டி, வி. எம். தட்டி, சந்தகவி, காவ்யானந்தா ஆகியோரும் கவிதைகளைப் புனைந்தனர். எச். நாராயணராவ், பி. எம். ஸ்ரீகண்டய்யா ஆகியோரின் இசை வடிவ* மொழிபெயர்ப்புகளும் இக் காலத்தில் வெளியாயின. கேரூர் பல துறைகளில் வழி காட்டியாக விளங்கிய மேதை. அற்புதமான நாடகங்கள், நாவல்கள், சிறு கதைகளை அவர் வரைந்துள்ளார். தவிர பத்திரிகையாளர் என்ற வகையிலும் சூழ்நிலைகளுக்கேற்ப பணியாற்றியுள்ளார். 1914-ல் சாகித்ய பரிஷத் தோற்று விக்கப்பட்டபோது கன்னட நாட்டில் மறுமலர்ச்சியானது முறைப்படி அரியாசனம் ஏறியது என்று கூறலாம்.

### பொற்காலம்

1920-க்குப் பிறகு கன்னட இலக்கியத்தில் பொற் காலம் உதயமாயிற்று. கர்நாடகமெங்கும் இசைக் குயில்கள் திடீரெனத் தோன்றி கவி பாடின. பி. எம். ஸ்ரீகண்டய்யா, மாஸ்தி, டி. வி. குண்டப்பா ஆகி யோரின் தலைமையில் பணியாற்றிய தாளிருக் குழு; பஞ்சே, மற்றும் கோவிந்தபாய் தலைமையில் மங்களூர் மித்ரமண்டலி; தார்வாடில் பேந்த்ரே தலைமையில் இணைந்த கெலியாரா கும்போ – இவையும் இன்னும் பல கோஷ்டிகளும் ராஜ்யமெங்கும் சுறுசுறுப்பாக செயலாற்றி அழகு ததும்பும் அற்புதமான கவிதைகள் தோன்று

வதற்குத் துணை புரிந்தன. அருள் பெற்ற இளம் கவிகள் கே. வி. புட்டப்பா, வி. சீதாராமய்யா, பி. டி. என். ராஜரத்தனம், காடங் கோட்லு, மதுரா சென்னு, முகலி ஆகியோர் இந்தக் குழாங்களைச் சேர்ந்தவர்கள். பெடிகெரி, சாலி ஆகியோரும் கவர்ச்சிகரமாகக் கவிதைகளை இயற்றினர். அவர்களது பாடல்களில் அவர்கள் வாழ்ந்த நாட்டு மண்ணின் நறுமணம் கமழ்ந்தது; அந்தக் காலத்து தேசிய மறுமலர்ச்சி அவற்றில் பிரதான இடம் பெற்றது. சிந்து, இரங்கற்பா, பதினாலடிப் பாடல், கீதம், பிரார்த்தனைப் பாடல், கதைப்பாட்டு, நாட்டுக் கவிதை, வீரப்பாடல், தத்துவப் பாடல், இசை நாடகங்கள், ஓருரைச் சித்திரங்கள் ; இவையும் இன்னும் பல கவிதா வடிவங்களும் மிக இன்பகரமான சூழ்நிலையில் உண்மையான அருள்வடிவங்களாக வளம் பெற்றன. நாவல் பாத்திரங்கள் ஜீவசக்தியுடன், நாடகமாடக் கூடியவாறு படைக்கப் பெற்றன. பழக்கவழக்கங்களில் சித்திர வடிவமாக அமைந்தது பேடிகரின் ' சுதர்சனு ' என்ற நாவல்; ஏ. என். கிருஷ்ணராவ் இயற்றிய சந்தியாராகா என்ற நாவல் குணசித்ரப் படைப்பில் சிறந்தது ; கஸ்தூரியின் ' சக்ர திருஷ்டி ' ஒரு சிந்தனைச் சித்திரம் ; ' அந்தரங்க ' என்ற பெயரால் தேவுடு இயற்றியுள்ளது ஆராய்ச்சி நாவல் ; மரளி மண்ணிகே (நிலத்துக்குத் திரும்பு) என்று கரந்து இயற்றியது காலப்போக்கிற்கு ஏற்ற நாவல் ; காரண புருஷன் என்று முகலி இயற்றியது பிரச்னைகள் ததும்பும் நாவல் ; ' விசுவாமித்ர சிருஷ்டி ' என்று ஆத்யா இயற்றிய நாவல் பிரக்ஞையின் நீரோட்ட நிலையை விளக்குவது. ஓர் இடத்தை வைத்துக்கொண்டு நாவல் புனைவதற்கு சிறந்த எடுத்துக் காட்டாக அமைவது கரந்தின் பேட்டடா ஜீவா. பேட்டிகிரி, கேரூர், மாஸ்தி, கே. வி. ஐயர் ஆகியோருடைய வரலாற்று நாவல்கள் மிக மிக ருசிகரமானவை. துப்பறியும் நாவல்களை பொழுது போக்காக எழுதுபவர்கள்தான் இன்னும் நிறைய இருக்

கிறுர்கள். சிக்கலான அமைப்பு முறைகளைக் கொண்டு நாவல்களுக்கு எடுத்துக் காட்டாக இருப்பவைகளில் ஏ. என். கிருஷ்ணராவின் நட சார்வபௌமா, கே. வி. புட்டப்பாவின் கானூற சுப்பம்மா, கோகக்கின் சமரஸவே ஜீவனு (இசைந்த வாழ்வு) குறிப்பிடத்தக்கவை.

இக்காலத்தில் நாடகங்களை இயற்றிப் புகழ் அடைந் தவர்கள் டி. வி. கைலாசம், உயில்கோல், கருடா, சம்ஸா, ஆத்யா ஆகியோர். எல்லாவகை நாடகங்களும் வெற்றிகரமாக இயற்றப்பட்டுள்ளன. புராதன கட்டுக் கதை வகையில் கருடாவின் பாதுகா பட்டாபிஷேகம், வி. கே. வெங்கட்ராமய்யாவின் மண்டோதரி; சரித்திர நாடக வகையில் சம்ஸாவின் சுகுண கம்பீர, மாஸ்தியின் தலக்கோட்டா; சமூக நாடக வகையில் உயில் கோலின் சிக்ஷண சம்ப்ரம; கைலாஸத்தின் சுயஆட்சி, ஆத்யா வின் ஹரிஜன வார ஆகியவை; நிரந்தர நாடகங்களில் கரந்தின் கர்ப்பகுடி, முகுளியின் நாமதாரி குறிப்பிடத் தக்கவை.. சோகம் ததும்பும் துன்பியல் நாடகங்களை இயற்றியவர்களில் சம்ஸா குறிப்பிடத் தக்கவர். 'தவறு இழைத்தது யார்?' என்ற கைலாஸத்தின் நாடகமும் அவ்வகைப்பட்டது. காதல் மிளிரும் இன்பியல் நாடக வகையில் கோகக்கின் 'யுகாந்தரம்' போன்றவை; ஓரங்க நாடக வகையில் கைலாஸம், ஆத்யா, பேந்த்ரே ஆகியவர்களின் நாடகங்கள் தனிச் சிறப்புள்ளவை. செய்யுள் நாடகவடிவம் நல்ல வரலாற்றுச் சிறப்பு படைத்தது. கிரேக்க துன்பியல் நாடகப் பாணியை ஸ்ரீ எழுதிய அசுவத்தாமன் என்ற நாடகத்திலும், கே. வி. ஆரின் மொழி பெயர்ப்பாகிய அண்டிகவியிலும் காணலாம். எதுகையில்லாத செய்யுள் வடிவ நாடகங்களை ஷேக்ஸ்பியரைத் தழுவி புட்டப்பா, டி. வி. குண்டப்பா ஆகியோர் இயற்றியுள்ளனர். மாஸ்தியின் யசோதரா நாடகமும் அத்தகையதே; சங்கீத நாடகங்களுள் சில வருமாறு: திருப்பணி; பி. டி. என். இயற்றிய "அகல்யா"

கரந்த் இயற்றிய சோமியா பாக்கியா, யாரோ சொன்னுர் கள் என்பவை துன்ப இயல், இன்ப இயல் நாடகங்கள்; எதுகையற்ற செய்யுள் வடிவம் கன்னடத்திற்குப் புதிதன்று. ராகளே என்ற யாப்பு வகை இத்தகையதே. எனவே சக்திவாய்ந்த கன்னட நாடகங்கள் இந்த யாப்பு வகையில் சுலபமாக அமைந்தன.

இக்காலத்து இலக்கிய வகைகளில் அதிகமாக விரும்பப் பெறுவது சிறு கதை. கன்னட சிறு கதையின் தந்தை மாஸ்தி. அவர் மிகச் சிறந்த சிறுகதைகளை வழங்கியிருக்கிருர். 'சரிபுத்திரரின் அந்திம காலம்' போன்ற தத்துவார்த்தக் கதைகள், 'வசுமதி' போன்ற தேசபக்தக் கதைகள், 'நிஜகல் ராணி' போன்ற சரித்திரக் கதைகள், 'மோஸரிஞ', 'மங்கம்மா' போன்ற நாட்டு வாழ்க்கைக் கதைகள், 'யார் அது, இந்திரா்வா?' போன்ற பாட்டுக் கதைகள் முதலியவை அவர் இயற்றி யிருப்பவை. பேட்டிகேரி, ஆனந்தா, கோரூர், கோபால கிருஷ்ணராவ், கிருஷ்ணகுமார், ஸ்ரீமதி கௌரம்மா ஆகியோரும் இன்னும் ஏராளமான பேரும் நிகழ்ச்சிகளை, குணசித்திர பாவத்தை, உணர்ச்சியை, சிந்தனையை, சூழ்நிலையை, மனநிலையை வைத்துக் கொண்டு கதைகளை வரைந்துள்ளனர்.

இக்காலத்துக் கன்னட இலக்கியத்தில் குறிப்பிடத் தக்க பகுதி கட்டுரை. ஆராய்ச்சி நூல்களும், பத்திரிகைக் கட்டுரைகளுமாக அது தொடங்கி நாளாகிறது. ஆனுல் தனி நபர்களைப் பற்றிய கட்டுரை வகை Gossip And Flashes என்ற தொகுப்புடன் துவங்கியது. ஏ. என். மூர்த்தி ராவின் 'பகற் கனவு' கட்டுரைகளில் விரிவான தன்மையையும் எண்ணற்ற வகைகளையும் காணலாம். அதே மாதிரிதான் நாராயண பட்டரின் 'உபந்யாஸகளு', என். கே. குல்கர்னியின் 'முஸ்குலு புட்டிகே', ஆத்யா வின் 'ஸ்வாரஸ்யா' என்பவையும். எஸ். கிருஷ்ண சர்மாவும் பேந்த்ரேயும் எழுதியுள்ள குணசித்திர கட்டுரை

களும் ஆய்வுத் திறன் படைத்த டி. என். எஸ்., ஏ. என். கிருஷ்ணராவ் கட்டுரைகளும் 'பாவன சித்ரகளு' என்ற பெயரில் பாடித் தந்துள்ள நடைச் சித்திரங்களும், கோகக் வரைந்துள்ள கடிதங்களும். பண்பாட்டையும் பூகோளத்தையும் கலந்து வழங்கும் கோகக்கின் கட்டுரை களும் இத்துறையில் அடைந்துள்ள வெற்றியின் பரிமாணங்களை ஒருவாறு உணர்த்துகின்றன. கன்னட சுயசரிதைகள் ஆத்மீகமானவை. மதுரா சென்னுவின் பீடிகை அத்தகையது. ராஜரத்னம் இயற்றிய 'பத்து ஆண்டுகள்' இலக்கிய நயம் மிகுந்தது. அழகின் வடிவம் என்று கோகக் எழுதியிருப்பது மனோகரமானது. சௌமனே என்று திவாகர் எழுதியிருப்பது முக்கியமான அரசியல் தன்மை வாய்ந்தது. 'கடலுக்கு அப்பா லிருந்து' என்று கோகக் எழுதியிருப்பதும் 'விடுதலை யின் விலை' என்று ஏ. ராவ் எழுதியுள்ளதும் நாள் குறிப்பு இலக்கியத்தைச் சேர்ந்தவை. வி. சீதாராமய்யா, கோஸாவி, மான்வி ஆகியோர் மகிழ்ச்சி தரும் பிரயாண நூல்களை எழுதியிருக்கிறார்கள். புதிய இயக்கத்தின் கோட்பாடு என்னவென்பதை விளக்கும் முயற்சி என்ற வகையில்தான் இக்காலத்தில் இலக்கியத் திறனாய்வு உருப் பெற்றிருக்கிறது. பழைய கன்னட இலக்கியத்தின் பிரம்மாண்டமான கருவூலங்களை விளக்கிக் கூறுகையில், ஐரோப்பிய இலக்கியத்தின் லட்சியங்களை எடுத்துரைக் கையில், பழமையையும் புதுமையையும் இணைக்கும் முயற்சி வகையில் இது உருப்பெற்றுள்ளது. ஸம்ஸ்கிருத அழகுக் கலையின் வரலாறு என்ற பெயரில் டி. என். எஸ். இயற்றியிருப்பதையும் முகளியின் கன்னட இலக்கியச் சரி தம், த்வந்யாலோகம் என்பதை மொழிபெயர்த்து கிருஷ்ண மூர்த்தி பதிப்பித்திருப்பதையும் கார்க்கியின் சந்தோ விகாஸமும் இத்தகையவை. முந்தைய பாராவின் குறிப் பிட்டுள்ள எழுத்தாளர்களில் பலர் இலக்கியத் திறனாய் வுக்குத் துணை புரிந்திருக்கிறார்கள். மலவாட், ரங்கண்ணு

போன்ற விமர்சகர்கள் இத்துறைப் பணியை வளப் படுத்தியிருக்கிறுர்கள். பஸவன்லால், குந்தநகர் போன்ற புலவர்கள் பழைய கன்னட பேரிலக்கியங்களை ஆராய்ச்சிப் பதிப்புகளாக வெளியிட்டிருக்கிறுர்கள். சில புகழ் பெற்ற இலக்கிய வல்லுனர்களைக் கௌரவிக்கும் வகையில் வெளியான நினைவு மலர்கள் கன்னட இலக்கிய விமரிசனத் துறையில் மதிப்பு உயர்ந்தவையாக விளங்குகின்றன. ஒன்றுக்கு மேற்பட்ட இலக்கிய வகைப் பணிகளை அவர் களில் பலர் புரிந்திருக்கிறுர்கள் என்று சொல்லலாம்.

## 1939-ம் பிறகும்

அடுத்த கட்டம் 1939-ல் தொடங்குவதாகச் சொல்ல லாம். இரண்டாவது உலக யுத்தம் அவ்வாண்டில் தொடங்கியது. 1930-க்குப் பின் உருவான முற்போக்கு இலக்கிய இயக்கம் இத்தருணத்தில் உரிமையுடன் இயங்கியது. இதன் சக்தி வாய்ந்த செல்வாக்கை இக் காலத்துப் படைப்புகளில் காணலாம். இலக்கியத்துறை களில் இளம் தலைமுறையினர் முன்னுக்கு வருவதற்கு இது சிறந்த வாய்ப்பை அளித்தது. இந்தப் புதிய மனநிலையைத் தெளிவாகக் காட்டுவது இசைக் கவிதை களின் தொகுதியாகிய ரஸரிஷி என்பது. முந்தைய காலத்து பழைய எழுத்தாளர்களும் தொடர்ந்து எழுதி வந்தனர். புது திசையிலும் அவர்களில் சிலர் வழிகாட்டி களாக விளங்கினர். இந்தியாவில் பரபரப்பான நிகழ்ச்சி கள் காணப்பெற்றன. 1942-வது வருஷத்திய 'குவிட் இந்தியா' இயக்கம், 1947 சுதந்திர உதயம், வகுப்புக் கலகங்கள், இந்திய சமஸ்தானங்களின் மறைவு, காந்திஜியின் கொலை, கோவா விடுதலை இயக்கம், ராஜ்யங் களின் சீரமைப்பு முதலியவை நிகழ்ந்தன. இந்தச் சூழ்நிலையின் நிழலிலும், ஒளியிலும் இளம் தலை முறையைச் சேர்ந்த இலக்கிய கர்த்தாக்கள் திளைத்து வளர்ச்சி கண்டனர். பழைய தலைமுறை எழுத்தாளர்

இதே உண்மைகளை வைத்துக் கொண்டு கலைச்சித்திரங்களை பக்குவப்பட்ட திருஷ்டியுடன் வடித்துக் கொடுத்தனர். இளம் எழுத்தாளரின் படைப்புகளில் ஒரு புதிய வேகம் இருந்தது.

புதிய கவிதைகள் நிறைய வந்தன. கே. நரசிம்மஸ்வாமி, அடிகா, ஸ்ரீதரா, கனவி, எக்குண்டி, கிண்ணிகோலி, ஆர். சர்மா ஆகியோர்களும் மற்றவர்களும் இசைக் கவிதையில் புது வகையில் உணர்ச்சிப் பெருக்கைக் கலந்தனர். நீண்ட பாடல்கள் எத்தனையோ வகை வகையாக வந்தன. புட்டப்பா ராமாயண இதிகாசத்தை எதுகையற்ற செய்யுள் வடிவில் இயற்றும் பணியைப் பூர்த்தி செய்தார். அதற்கு சாகித்ய அகாடமி பரிசு கிடைத்தது. தமது நம்பிக்கையை வெளிப்படுத்தும் பீடிகையுடன்கூட கக்கா என்பதை டி. வி. ஜி. வெளியிட்டார். காண்டர்பரி கதைகளைப் போல், மாஸ்தி நவராத்திரி என்ற கதை நூல் இயற்றினர். ஒரு வீர இதிகாச காவ்யத்தின் பீடு நடையை பேந்த்ரேயின் சசி கீதம் என்ற நூலில் காணலாம். கிறிஸ்துவையும், புத்தரையும் பற்றி கோவிந்தபாய் இயற்றியுள்ள நீண்ட பாடல்கள், ஆர்னல்டின் சோரப்-ருஸ்தும் போன்ற பாடலைத் தழுவிய நிகழ்ச்சிச் சித்திரம், வாழ்க்கைக் கோயில் என்று விநயக் இயற்றியுள்ள இசைப்பாடல் இந்திய மறுமலர்ச்சியை உருவகப்படுத்தித் தருவதாக உள்ளன. அடிகாவின் பள்ளத்தாக்கு, கொண்டாலபுரா ஆகியவை டி. எஸ். எலியட்டின் தரிசு நிலம் என்பதைப் போல அமைந்துள்ளன. கடல் கீதங்கள் என்ற தொகுதியில் விநயக் எதுகையற்ற பாடல்களை இயற்றியுள்ளார். புது விஷயங்களை அவர் சேர்த்துள்ளார். நாட்டுப் பாடல் வகையில் இருந்தாலும், சம்பிரதாய ஏற்பாட்டில் அமைந்தாலும் சொற்களின் வடிவமும் தன்மையும் கவர்ச்சிகரமாக இருந்தன. புதிய சொல்லாட்சி, கற்பனைச் சித்திரம், சந்த அமைப்பு ஆகிய எல்லாமே இந்தப்

புதுவகைக் கவிதா முயற்சிகளில் மலர்ந்தன. இத்தகைய உத்திகள் இவ்வகையில் மேலும் உற்சாகமாக வெளி வரக் கூடும். விநாயக, அடிகா, ஆர். சர்மா, சிவருத்ரப்பா, கனலி ஆகியோரும் பிறரும் இத்தகைய புதுப் பாதைகளை வகுத்திருக்கிறார்கள். இக்காலப் பாணியில்கூட எத்தனையோ வகைகளில் கவிதைகள் எழுதி வருகின்றனர். எல்லா வகைகளிலும் முயற்சிகள் நடைபெறுகின்றன.

1939-க்குப் பிறகு பல்வேறு இலக்கியத் துறைகளில், பல தனிப்பட்டோரின் சாதனைகளை மதிப்பிடுவதற்கு இங்கு இடமில்லை. எனினும் கற்பனைக் கதைத் துறையில் சில பெயர்களைக் குறிப்பிட முடியும். மிர்ஜி, கட்டிமணி, இனும்தார், கல்கண்டு சிவராவ், டி. ஆர். எஸ்., கே. டி. புரானிக், ஹெக்டே ஆகியோர் குறிப்பிடத்தக்க புதிய பெயர்கள். இவர்களில் சிலர் சிறு கதைகளையும் எழுதி யிருக்கிறார்கள். ஹாயில்கோல், அனந்தமூர்த்தி, வரகிரி ஆகியோர் குறிப்பிட வேண்டியவர்கள். நாடகத் துறையில் பர்வத வாணி, எல். ஜே. பேந்த்ரே, என். கே. குல்கர்னி ஆகியவை புகழ்பெற்ற பெயர்கள். நதிக், கதக்கர், வடப்பி ஆகியோர் உரைநடை சித்திரங்களில் வல்லுனர்கள். கே. கிருஷ்ணமூர்த்தி, கே. நரசிம்ம மூர்த்தி இன்னும் பலர் இலக்கியத் திறனாய்வுப் பணியாற்றி யுள்ளனர்.

இரண்டாவது உலக யுத்தத்தை நிலைக்களனாகக் கொண்டு நிறைய நாவல்களும், சிறுகதைகளும் எழுதப் பெற்றுள்ளன. பாடல்களும் அதில் விசேஷமாக இடம் பெற்றுள்ளன. மனித சுபாவம் மாறாமல் இருக்கும் வகையில் போர்க்களமே அமைதியின் அன்னை என்று கூறுகிறார் கோவிந்த பாய். கிறிஸ்து, புத்தர், பஸவா ஆகியோர் தமது சமாதான உபதேசங்களை எந்த மண் மீது செய்தார்களோ அங்கேதான் பெருங்கொலை நிகழ்ந் திருக்கிறது என்கிறார் இன்சல். ஒரு கவிஞன் ஹிட்லருடன் பேட்டி காண்பதை 'அசுரன்' என்ற தமது நூலில்

விஞயகர் வழங்கி, அசுரப் பிரசித்தி எப்படியிருக்குமென்பதை விளக்குகிறார். ஹிரோஷிமா பெருங் கொலையை, உள்ளம் வெடிக்க அனுதாப மிக்கதாக இயற்றியுள்ளார் சித்தல். கஸ்தூரியும், போலிப் புகழ்பாடும் யுக்தியைக் கையாண்டு அணுகுண்டு பரீட்சையைக் கேலி செய்திருக்கிறார். யுத்தத்தை தெளிவான செய்யுள் வடிவத்தில் ஶ்ரீராவ் வழங்கியிருக்கிறார்.

இனும்தார், கட்டிமணி ஆகியோரின் நாவல்களில் குவிட் இந்தியா இயக்கம் கவர்ச்சிகரமாக இடம் பெற்றுள்ளது. ஒரு சக்தி வாய்ந்த பாடலில் வி. சீதாராமய்யா இந்த மாபெரும் எழுச்சிக்குப் புகழ்பாடியிருக்கிறார் :

"இந்த மக்கள் !
அவர்களது முன்னேற்ற வேகத்தைத் தடுக்க யாரே வல்லார் !
வரம்பற்ற ஆசைகளுக்கு வரம்புகட்ட யாரால் இயலும் ?
ஆலய கோபுரங்களாக அவை விம்மியெழுந்து
நீலவானை நோக்கிப் பாயும் வானவீதியின் பிரகாச ஒளியை
மக்களின் சாதனை-ஒளி பரிகசிக்கிறது.
காற்றை அளந்து பார்க்கும் சக்தி வாய்ந்தது அது"

நேதாஜி போஸின் இந்திய தேசிய சைன்யத்தை ஒரு நீண்ட பாடலில் ராவ் புகழ்ந்திருக்கிறார். 1943-ஆம் வருஷத்து வங்கப் பஞ்சம், பல ருசிகரமான கதைகளும் முகலியின் 'அண்ணு' போன்ற நாவல்களும் தோன்றக் காரணமாக அமைந்தது. கோவிந்தபாய் இதைப்பற்றி எழுதுகையில் 'செழுமையின் திருவருள்—அதனிடை பசியினுல் மரணம் ; வாழ்வின் மலர்ச்சி—அதனிடை மூச்சுள்ள பிண வாழ்க்கை" என்கிறார்.

சுதந்திர உலகம் எல்லோரது மனதையும் புளகாங்கி தப்படுத்தியது. அநேகமாக எல்லாக் கவிஞர்களும் திடீ ரெனப் பாடல்களாக புனைந்து தள்ளினர். கற்பனைக் கதைகளும், நாடகங்களும் விடுதலையைக் கொண்டாடும் வகையில் எழுந்தன. சோக சக்கரம் என்று ஆத்யா எழுதி யுள்ள நாடகம் அத்தன்மையது. உத்கோஷா என்ற பாடல் தொகுப்பு இந்த வகையில் தென் கனனடக் கவிஞர் களால் வெளியிடப்பெற்றது. ஆனால் மகிழ்ச்சியுடைய ஏமாற்றத்தின் சாயையும் அதில் தொனித்தது.

"இரு வடிவங்களின் வெந்துயர், இரு
வாழ்வுகள், இரு அன்புகள்! சிடுக்கான பாதை—
ஒரு வழி இரண்டாயிற்று"

என்று கூறிய ஜேனஸ் போல இருமுக தேவதையாக, பாரத மாதாவைக் கண்டு சோக திருஷ்டியுடன் எழுதினர் விநயகர். காந்திஜியின் ஜயந்தி விழாவன்று பேந்த்ரே எழுதினர்: "இன்றுவது நாம் உண்மையைக் கூறு வோம். வருஷம் பூராவுமே பொய்க்கு அல்லவா அர்ப் பணம் செய்து விடுகிறோம்". "விளக்கு ஒளியும் தோரணங்கள் சுதந்திர உதயத்தை அறிவிக்கின்றன. ஆனால் கரும் புகையைக் கக்கி மனித வாழ்வை விறகாக எரிக்கும் உண்மையைப் புலப்படுத்தும் ராட்சஸப் புகை போக்கிகளை நாம் எவ்வாறு மறக்க முடியும்?" என்று கேட்கிறார் சித்தல்.

காந்திஜியின் கொலை மக்களின் மனச்சாட்சிக்கு ஒரு அறைகூவலாக அமைந்தது. ஒரு புதிய நியதியின் அறி யாமை உணர்ச்சி அவர்களை ஆட்கொண்டது. உள்ளத்தை உருக்கும் கவிதைத் தொகுப்புக்களை வெளியிட்டு தேசப் பிதாவுக்கு கன்னடக் கவிஞர்கள் அஞ்சலி செய்தனர். வல்லபபாய் படேலைப் பற்றி ஹேமந்த் எழுதியுள்ள இரங்கற்பா உள்ளத்தைத் தொடுவது, தேச ஐக்கியச் சிற்பிக்கு சிறந்த புகழாக அமைந்துள்ளது. நிர்மாண

ரீதியில் அரவணைத்துச் செல்லும் நற்பண்பே நெருக்கடியிலிருந்து மீள்வதற்கு வழியென்ற சித்தாந்தத்தைக் கவிஞர்கள் பாடினர். அடிகா கூறுகிறார்: "நம்பிக்கை மலரும் தோட்டம் இருப்பது காணீர்; வளம் மிகுந்த மண்: அதன்மீது முட்களும் கற்களும் தெறித்துள்ளன. நீருற்றுக்கள் அங்கே விளையாடுதலையும் காணீர்" பாரத மாதா பின்வருமாறு கூறுவதாக விநயகா சித்தரித்துள்ளார்:

"ஞானிகள் அவதரித்தது இதற்காக
நம்புங்கள் இதை குழந்தைகளே!
மிடிமையை விரட்டுவோம் நாட்டிலிருந்து!
சமநிலை சாந்தம் அரியாசனம் ஏறட்டும்
இன்று நடும் சுதந்திரச் செடி வளர்ந்தோங்கி
பூத்துக் குலுங்கி ஒளிக்கனி அளிக்குமாக"

## புதிய இயக்கத்தின் அடிப்படை

வெளியான கவிதைகளிலிருந்து புதிய சகாப்தத்தின் தோற்றத்தை ஒருவாறு எடுத்துக் காட்டினேன். வேறு துறைகளிலும் பணி நடந்திருக்கிறது. இந்தப் புதிய இயக்கத்தில் வாழ்வும் சிந்தனையும் எவ்வாறு முழுமை கண்டு மலர்ந்திருக்கின்றன என்பதன் அடிப்படையைச் சிறிது விளக்க முற்படுகிறேன்.

இந்த இலக்கியத்தின் படைப்பாளர்கள் பெரும்பாலும் பல்வேறு தொழில்களைச் செய்பவர்கள்; பல்வேறு மதங்களைப் பின்பற்றுகிறவர்கள். ஹிந்துக்கள், உத்தங்கி போன்ற கிறிஸ்துவர்கள், அக்பர் அலி போன்ற முஸ்லிம்கள் அவர்களில் உள்ளனர். ஹிந்துக்களில் ஜைனர், லிங்காயத்தார், பிராம்மணர்கள், ஒக்கலிகர்கள், ரெட்டியார்கள். அவர்களுடைய கல்வியறிவும் பலதரப்பட்டது. சாரிப் சாஹேப்புக்கு கன்னட அரிச்சுவடியே தெரியாது. கைலாஸம் போன்றோர் மிகச் சிறப்புடன் ஆங்கிலச் சர்வகலாசாலைகளில் சிறப்பாகக் கல்வி பயின்றவர்கள்.

பி. கே. லக்ஷ்மேசுவர் போன்ற ஆரம்ப ஆசிரியர்கள், பஸவன்லால் போன்ற செகண்டரி பள்ளி ஆசிரியர்கள், ஹொன்னபூர்மத் போன்ற வக்கீல்கள், தேசாய் தத்தா மூர்த்தி போன்ற குமாஸ்தாக்கள், முத்தன்ன போன்ற தேகப்பயிற்சி ஆசிரியர்கள், கோவிந்தபாய் போன்ற மிராசுதார்கள் ஆகியோர் பணியாற்றியவர்களில் சிலர். மிஷனரிகள், பாதிரிகள், மடத்து சுவாமிகள் போன்ருே ரும் எழுதியிருக்கிருர்கள். பத்திரிகையாளர்கள், வெங் கட செட்டி, வாணி போன்ற கடைக்காரர்கள், பஞ்சி மங் கேஷ் ராவ் போன்ற கல்வி இன்ஸ்பெக்டர்கள், சர்வகலா சாலே ஆசிரியர்கள் (இவர்கள் இன்று எழுத்துலகில் முக் கியமாக இருப்பவர்கள்), மாஸ்தி போன்ற சர்க்கார் அதி காரிகள், சிவராம் போன்ற டாக்டர்கள், எஸ். சர்மா போன்ற கிளர்ச்சியாளர், பீஹாரில் கவர்னராயிருந்த ஆர். ஆர். திவாகர் முதலியவர்களே இவ்வரிசையில் காணலாம். கன்னட எழுத்துலகு ஒரு குடியாட்சி. சாஸரின் காண்டர்பரி யாத்ரிகர் போல எத்தனேயோ தொழில் செய்வோர். காற்று தான் விரும்பும் திசையில் அடிக்கிறது. தெருப் பாடகன், தனிமையில் திளேக்கும் புலவன் இருவரும் அமர கீதங்களே இயற்ற அது துணே புரிகிறது. சிலர் எழுதுவதையே தொழிலாகக் கொண்டி ருக்கிருர்கள். கரந்த், ஏ. என். கிருஷ்ண ராவ் போன்ற வர்கள் இத்தகையோர்.

இந்தப் புதிய இலக்கியப் படைப்பின் முக்கியமான கோட்பாடுகளில் ஒன்று ஆசிரியரின் சொந்த மனநிலேயை வெளிப்படுத்துவதுதான். மனிதனது தனித் தன்மை புனிதமானது என்று அதில் வற்புறுத்தப்படுகின்றது. அந்த தனித் தன்மையை பிரகாசப்படுத்துவதன் மூலம் இலக்கியம் முழுமை காண்கிறது என்ற பிரக்ஞை எழுத் தாளருக்கு வந்திருக்கிறது. இந்தக் கண்டுபிடிப்பானது புதிய எழுத்தாளரின் தலேமை எழுத்தாளர்களுக்கு வெறி மயக்கத்தை உண்டு பண்ணியிருக்கிறது. இசைப் பாடல்

கள், உரைநடைச் சித்திரங்கள், நாவல்கள், நாடகங்கள் ஆகிய எல்லாமே தனி நபரை புகழ்வனவாக இருக் கின்றன. சமீபத்தில்தான் கவிஞர்கள் வலுவில் முயற்சி செய்து விஷயங்களின் மறுபுறத்தைத் திரும்பிப் பார்த் துள்ளனர். தனி நபரின் உயர்விலிருந்து விடுபட்டு விசுவ மானவ தத்துவத்தைக் கண்டுள்ளனர். கலைஞனை பிரபஞ்ச புருஷனைக் காண்கின்றனர். தனது உணர்ச்சி பாவங்களின் விசித்திரத் தொடராக அவனை மதிப்ப தில்லை.

இயற்கை பற்றியும் புதிய நோக்குடன் இவர்கள் எழு தினர். உலகப் பிரசித்தி பெற்ற ஜோக் அருவியைப் பற்றி இக்காலம் வரை கன்னட இலக்கியத்தில் யாரும் எழு தாதது ஆச்சரியமே. ஆனால் இன்றைய கன்னட இலக் கியத்தில் அதன் ஒலிச் சித்திரங்களை நிறையக் காண லாம். நவீனக் கவிதையில் இயற்கையைக் காதற் கண்க ளுடன் வீர உணர்வுடன் அணுகும் போக்கைக் காண லாம். அழகு மிகுந்த காட்சி ஒவ்வொன்றுமே கன்னடச் சித்திரத்துக்கு துணை புரிகின்றது. கர்னடகத்தின் கலை யும் சிற்பமும் பல பாடல்களுக்கும், கட்டுரைகளுக்கும் விஷயமாக அமைந்துள்ளன. சஹ்யாத்ரியைப் பற்றி புட் டப்பா உணர்ச்சிப் பொருக்குடன் இயற்றிய பாடல், விடி வையும், சாந்தியையும் பற்றி பேந்த்ரே தீட்டியுள்ளவை, நெடுஞ்சாலை, நீர்த் தடாகம் போன்ற விஷயங்களைப் பற் றிய சீதாராமய்யாவின் பாடல்கள், கடலின் கம்பீரத்தை யும், பயங்கரத்தையும் பற்றிய விநயகாவின் சித்திரம், கிருத்திக நட்சத்திரக் கூட்டம் வான வீதியில் சஞ்சரிக் கும் சாசுவதமான விவகாரம் பற்றி பி. டி. என். வர்ணிப் பது, இப்படிப் பல. தொழிற்சாலையின் ஒலியும், மின் விசை தயாரிக்கும் எஞ்சின்களின் ஓசையும் கன்னடக் கவிதையில் கேட்கின்றன. பிற இலக்கிய வடிவங்களிலும் இவை இடம் பெற்றுள்ளன.

முக்கியமாகக் காணப்பெறும் மற்றொரு இலக்கிய

விஷயம் தேசியம். '33 கோடி மக்களின் கீதம்' என்று பேந்த்ரே இயற்றியுள்ள ஒரு கவிதை சேர்ந்து பாடும் ஒலிச் சித்திரமாக அமைந்துள்ளது. 'கனவில் கண்ட காட்சி' என்ற நூலில் தாயைக் கனவு காண்கிறவன் பார்க்கிருன். அந்தத் தாய் தேசத்தின் ஆத்மா. அவனிடம் பேர் கேட்கிருள். பயங்கர அதிர்ச்சியை ஊட்டுகிருள். "நீ ஆண்பிள்ளையாக இருந்தால் என் பலிபீடத்தின் முன் உன்னையே பலியிட்டு ருசுச் செய் பார்க்கலாம்" என்கிருள். அகமும் புறமும் ஒரே விடுதலை உணர்ச்சியுடன் இருக்க வேண்டியவை என்பதை இளஞ் சன்னியாசி என்ற நூலில் காணலாம். காதலைப் பற்றி வழிவழி மனப்பான்மை பால் உணர்ச்சி மிகுந்ததாகவும், அழகு நிறைந்ததாகவும் காணப்படுகிறது. அதில் ஆத்மீக அற நெறி உணர்வுகள் மேலோங்கி நிற்கவில்லை. மனிதனின் மற்றொரு ஆத்ம பாவம் இருப்பதை அங்கீகரித்துத் துருவித் தேடும் போக்கு நாவல்களில், நாடகங்களில், கவிதைகளில் காணப் பெறுகிறது. வரம்பில்லாத மனித குண சித்திரங்களை பிரகாசப்படுத்தும் கவிதைகள் வந்துள்ளன. சமூக நீதியை வற்புறுத்தும் கவிதைகள் நெஞ்சை உருக்குபவை. 'பையில் ஒரு பருக்கைச் சோறு' என்ற பெயருடன் பேந்த்ரே இயற்றியுள்ள உணர்ச்சி மிகுந்த பாடலில் வாயில்லாப் பூச்சிகளான கோடானுகோடி மக்களின் துயரங்களைக் காணலாம். 'குருட்டுத் தங்கம் குதிக்குது' என்ற பாடல் முதலாளித்துவத்தைக் கடுமையாகத் தாக்குகிறது:

" கோயில் மணிகள் ஒலிக்கின்றன
மாளிகைகளை யாழும் குழலும் இன்புறச் செய்கின்றன
சந்தைக் கடையில் பணப்பைகள் ஒலிக்கின்றன
பித்துப் பிடித்த நடனம், மனம் போனபோக்கில் கூத்து
குருட்டுப் பொன் தரையில் நெடுஞ்சாடாக விழுந்தது
தமாஷ் நிலையில் இருக்கையில் "

ராஜரத்னம் தமது 'ரத்னுவின் பாடல்' என்ற தொகுப்பில் பழகு கன்னடத்தை உபயோகித்து, சமுதாயத்தில் காணப்படும் அக்கிரமங்களையும், அநீதிகளையும் வெளிப்படுத்துகிருர். மாஸ்தியின் 'திருப்பணி' ஒரு சங்கீத நாடகம். ஓர் ஹரிஜன ஞானி முக்தி பெறும் விஷயங்களைக் கதையாகக் கொண்டது. பலகரா, உத்தரா போன்ற சக்தி வாய்ந்த பல நாடகங்களில் தீண்டாமை பிரதான விஷயமாகக் காணப்படுகிறது. 'குயிலும், சோவியத் ரஷியாவும்' என்று புட்டப்பா எழுதியிருப்பதிலும், பேந்த்ரேயின் 'ருத்ர வீணை'யிலும் சர்வதேச நிலைமையை கன்னடக் கவிஞன் பாடி கண்டனங்களை வழங்கி, வரப் போவதையும் சொல்கின்ருன். ருத்ர வீணையில் ஒரு பகுதி வருமாறு :

" மீண்டும் எரிமலை கக்குகிறது
மலைகள் வெடிக்கின்றன
நதி நீரைத் தடுக்க அணைகளுக்குச் சக்தியில்லை.
செம்மண்ணை அவை அரித்துச் செல்கின்றன.
நியாயபீடம் கவிழ்கின்றது.
சிம்மாசனங்கள் சிதைகளாகின்றன
மனக்குழப்பம், அதன்பின் ஜாதியும்
மதமும் திரும்புகின்றன."

தத்துவார்த்த அம்சங்களுடன் கூடிய கற்பனை இசைக் கவிதைகளிலும், சிறுகதைகளிலும், நாவல்களிலும், நாடகங்களிலும், முக்கியமாகக் காணப்படுகிறது. ஸ்ரீயின் 'சுக்ர கீதை', மதுரா சென்னுவின் 'என் காதலன்'. பேந்த்ரேயின் 'வாழ்க்கை என்ற வாள்', மாஸ்தியின் 'உஷா' போன்ற ஓரங்க நாடகங்கள், கோகாக்கின் 'வாழ்வின் இசைவு' போன்ற நாவல்கள் கரந்தின் 'முக்த துவாரா' போன்ற சங்கீத நாடகங்கள் கவிதைகளில் இந்தப் போக்கைக் காணலாம். இது மறுமலர்ச்சியில் பிரதானமாகக் காணப்படும் அம்சம்.

புராதனக் கட்டுக் கதைகளேயும், நிகழ்ச்சிகளேயும், பாத்திரங்களேயும் மனித வடிவத்தில் உணர்ச்சி உள்ளவை யாகச் சித்திரித்துக் காண்பிப்பது மற்ருெரு முக்கியமான அம்சம். இதிகாச பிரதிநாயகர்களான இராவணன் போன்றவர்களே ஆதரித்து எழுதக் கூடிய புட்டப்பாவின் இராமாயணம், ஸி. கே. வியின் மண்டோதரி, ஆத்யாவின் 'நிருத்தர குமாரா'வில் காணப்பெறும் உத்தர குமாரன் போன்ற பாத்திரங்கள் இத்தன்மை படைத்தவை. இக் காலத்துக் கன்னடக் கவிதை, கற்பனேக் கதை, நாடகம் மற்ற வகையில் இலக்கியம் எல்லாவற்றிலுமே கலே, உற்சாகம் ஆகியவை பற்றிய சிந்தனேகளும் பயனுள்ள வகையில் இடம் பெற்றுள்ளன. மாஸ்தியின் சுப்பண்ணு, ஏ. என். கிருஷ்ணராவின் 'சந்தியா ராகா,' கோகாக்கின் 'கலோபாசகா,' விமர்சகாவின் 'வைத்யா,' கைலாசத் தின் 'சூர்ப்பநகை,' ஆத்யாவின் 'பூர்வ ரங்கா,' 'சம்புஷ்ட ராமாயணு,' பி. டி. என்னின் 'ரஸ ஸரஸ்வதி' ஆகியவை இவ்வகையில் குறிப்பிடத்தக்க சில சான்றுகள்.

### எட்டு உபநதிகள்

எட்டு உபநதிகள் சேர்ந்த சங்கமமே இக்கால கன்னட இலக்கியம். எல்லா நவீன இந்திய இலக்கியங் களிலுமே இந்தப் போக்கைக் காணலாம். இந்திய மறுமலர்ச்சியானது வளம் படைத்தது, ஒன்றுக்கொன்று இசைவான தன்மையுள்ளது என்பதை ருசுப்பிக்க இது ஒருக்கால் பயன்படலாம். புதிய சகாப்தம் வந்ததன் காரணமாக இவை அதிகப் பிரகாசம் பெற்று இருக்க லாம். மற்றவை முழுமை கண்டு வலிமையும் அடைந் துள்ளன. வெளிப்படையாகப் பார்த்தால் அவற்றி னிடையே முரண்பாடு இருப்பதாகத் தோன்றும். ஆனால் எல்லா முரண்பாடுகளேயும் மீறி நின்று, எதிரிடை நிலேகளே சமரஸப்படுத்திக்கொண்டு செல்வதுதான் வாழ்க்கை. இவை சங்கமமாவதைப் பார்க்கும்பொழுது

புது இயக்கத்தின் சிக்கல்களைக் காண்கிறோம். அதே சமயத்தில் எல்லாம் சேர்ந்த வியாபகமான ஐக்கியமும் புலப்படுகிறது.

ஒரு லட்சியம் நோக்கி நிற்கும்படி வைத்துக்கொண்டு மனிதன் குறைகளை மதிப்பிட்டு எடுத்துக் காட்டும் நிந்தனை இலக்கிய வகைகள் பிரத்யட்சப் படைப்புக்கள் போன்ற தலைகீழ் சிருஷ்டிகளைக் காண்கிறோம். கைலாஸம், கரந்த், கஸ்தூரி, பீச்சி, ஆத்யா, அடிகா, கட்டிமணி, வி. ஜி. பட் ஆகியோர் மனிதனின் மகத்தான அஞ்ஞானத்தையும் மூட நம்பிக்கைகளையும் கண்டு நகையாடுகின்றனர். நமது அன்றாட வாழ்க்கைகளில் காணப்படும் வேஷங்கள், ஆழமாக இல்லாமல் மேம்புல் மேயும் தன்மை, நமது சமூக, ராஜீய, மத ஸ்தாபனங்களின் பலவீனம் ஆகியவற்றை அவர்கள் பரிகசிக்கின்றனர். ஆனந்தமயமான காகிதப் படகு போன்ற லட்சியக் கனவுகளில் சஞ்சரிக்க அவர்கள் மறுக்கின்றனர். ஆனால் அவர்கள் ஒவ்வொருவரும் தமக்கே உரிய வகையில் மென்மை, நல்லதனம், இதமாக உரையாடுதல் ஆகிய நற்குணங்களை சம்பிரதாய முறையிலோ அல்லது தமக்குத் தோன்றும் பந்தமற்ற வழியிலோ எழுதி தமது தனித்தன்மையை பிரகாசப்படுத்திக் கொண்டிருக்கின்றனர். அந்த அளவு மனிதாபிமானத்துடன் செயலாற்றுகின்றனர். வேறு வகைகளைச் சேர்ந்த எழுத்தாளர்களிடையே, பிரத்யட்ச வாதிகளிடம் இந்தப் போக்கு இருப்பதைக் காணலாம். ஆனால் தம்முடைய தனிச் சிறப்புகளை அல்லது அபிலாஷைகளை அவர்கள் முன் வைத்து அவற்றில் தமது படைப்புக்களை வெளிப்படுத்தில்லை. டி. எச். லாரன்ஸ் அல்லது அவருக்கு முன் டி. எஸ். எலியட் போன்ற இந்த பிரத்யட்ச வாதிகளில் சிலர் சோகத்தைக் கொட்டலாம். கண்டனங்களை வீசக்கூடும். அல்லது சர்வநாசம் வருகிறது என்று கூறலாம். ஆசாபங்கத்திலிருந்து எழுகின்றவை அவர்களுடைய துயரக் குரல்கள்.

தற்கால ஆங்கில எழுத்துக்களைப் பின்பற்றி வற்புறுத்திக் கூறுவதை, அவர்களது பாணியில், இந்த எழுத்தாளர் சொல்கிறார்கள். ஆனால் இந்தியாவிலேயே வறுமையும், துக்கமும் நிறைய இருக்கையில் வெளியிலிருப்பவர்களிட மிருந்து இந்திய எழுத்தாளர் துயரத்தையோ, பரிகாசத் தையோ, கோபத்தையோ எடுத்துக்கொண்டு எழுத வேண்டுமென்பதில்லை. நமது சமூக வாழ்க்கையில் காணப்பெறும் ஏற்றத் தாழ்வுகளை அப்பட்டமாக கன்னட நாவல்களும், நாடகங்களும் காண்பிக்கின்றன. பேந்த் ரேயின் பரிகாசக் கோமாளி என்ற நாடகத்தில் கதாநாயகி விவாகப் பிரச்னைகளைப் பற்றிப் பின்வருமாறு தீர்ப்புக் கூறுகிறாள்: "திருமணம் ஆகிறவர்கள் மட்டுமே ரட்சிக் கப் பெறுகின்றனர் என்பது உண்மையானால் அவளது ஆத்மா சுவர்க்கத்தை அடைகிறதோ இல்லையோ அதைப் பற்றிக் கவலையே இல்லை. எப்போதுமே நரகத்தில் அடிமை நிலையில் வைத்திருக்கப் பெறுமானால் அவள் ஆத்மா மகிழ்ச்சியுடன் இருக்கும். அவள் மீண்டும் பிறப்பு எடுப்பாளாகில் அவளுக்கோ அவளது பெற்றோர் களுக்கோ மன அமைதி இராது". ஓர் அசுவமேத யாகத்தை நடத்துவதில் உள்ள சிரமங்கள் விவாகத்தில் இருக்கிறது என்று சொல்கிறார் ஆத்யா. "வெங்கப்பா வின் மகள் கமலம் இங்கு இந்த உலகில் இருக்கிறாள். அவளுடைய விவாகத்தைப் பற்றிய குழப்பம். அவளை சாசுவதமாக ஏற்று உபசரிக்கும் வாய்ப்புள்ள இளைஞன் வழியில் அவளைத் தடுத்து நிறுத்தி ஏன் திருமணம் புரிந்துகொள்ளக் கூடாது?" மாமியார், விதவை, படித்த பெண், கூட்டு குடும்ப முறை, விபசாரம், கள்ளக் காதலி ஆகிய பல விஷயங்கள், நாடகங்கள், நாவல்கள் ஆகிய வற்றில் கதை விஷயமாக அமைந்துள்ளன. இக்காலக் கல்விப் பிரச்னைகள் கைலாஸத்தின் 'உறுதியும் ஓட்டை யும்,' ஆத்யாவின் 'சரஸ்வதியின் சர்க்கஸ்,' என். கே. யின் 'வக்கீல் அறை' ஆகிய நாடகங்களில் சித்திரிக்கப்

பெறுகிறது. 'மரண நாடகம்' என்ற தமது நூலில் பேந்த்ரே நிலப்பிரபுத்துவ முறையை கண்டிக்கிறார். 'சுய ஆட்சி' என்ற நூலில் விவேகம் இல்லாத ஜனநாயகத்தைச் சாடுகிறார். முனிசிபல் கவுன்ஸிலர்களுக்காக அவர் தயாரித்துள்ள விதிகள் வருமாறு: தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு இரண்டு கவுன்ஸிலர்கள் ஒரே பேட்டையில் ஒரே தெருவில் இருக்கக்கூடாது. அப்போதுதான் எத்தனை கவுன்ஸிலர்கள் இருக்கிறார்களோ அத்தனை தெருக்களாவது நமது நகரில் சுத்தமாக இருக்கும் என்ற உத்தரவாதமாவது வரி கொடுப்போருக்கு இருக்கும்.

சமூக சீர்திருத்தப் பிரச்னைகளை முக்கியமாக வைத்து எழுதுகிறவர்கள் முற்போக்கு எழுத்தாளர். தினகர தேசாய், எஸ். தொட்ட மணி, ஆர்ச்சிக், வெங்கண்ண, கல்கண்டு சிவராவ் ஆகியவர்கள் சமுதாய பிரச்னைகளை பிரக்ஞையுடன்கூட தேசிய சந்தர்ப்பச் சூழ்நிலைகளில் வைத்து எழுதுகிறார்கள். அவர்களில் சிலர் மார்க்ஸீய சிந்தனைகளிலும், சித்தாந்தங்களிலும் பலமாக ஊன்றியிருப்பவர்கள். எனினும் மார்க்சீயமே சில முக்கிய பெரிய மாறுதல்களை அடைந்திருக்கிறது. அவற்றில் ஒன்று ஸ்டாலினிஸம். இப்போது காணப்படுவது ஸ்டாலினிஸத்துக்கு எதிரிடையான போக்கு. க்ஷேமநல அரசாங்க லட்சியத்தைப் பற்றிய ஆர்வம் பல ஏழுத்தாளருக்கு உண்டு. அது விரைந்து வரவேண்டுமென்று அவர்கள் துடிக்கின்றனர். சோஷலிஸம் வேண்டுமென்ற உணர்ச்சி - மிகுதியுடன் ஏழைகளின் வாழ்வைச் சித்திரித்து எழுதுபவர் பலர். பேந்த்ரேயின் பிச்சைக்காரர், தொத்துநோய், ராஜரத்தினத்தின் 'நரகத்தில் நீதி', ராமகாந்தின் 'கல்கி' ஆகியவை இத்தன்மை படைத்தவை. பல பிரத்யட்சவாதிகளுக்கும் நிந்தனை முறையைக் கையாள்வோருக்கும் சோஷலிஸம் உருவானதோர் சித்தாந்தத்துக்காக பயன்படுகிறது.

வழிவழி முறைகளில் நம்பிக்கைகொண்டு, ஏற்கனவே

வேறுபட்டு இருந்துவரும் சமயங்களின் உயர்நிலைகளுக்கு மதிப்புக் கொடுத்து, அவற்றை எடுத்துச் சொல்லி பரப்பு வதில், அதற்குரிய இலக்கியத்தை ஆராய்ந்து இன்றைய நிலைக்கு ஏற்ப மறுபடி எடுத்துரைப்பதில் காலத்தையும், நேரத்தையும் அவர்கள் செலவழிக்கின்றனர். இத்துறை யில் மடங்களைச் சேர்ந்த ஸ்வாமிகள் விசேஷ சுறுசுறுப்பு காண்பிக்கின்றனர். மூலங்களின் ஆராய்ச்சி உரையாற் றல், ஏடுகளை பதிப்பித்து வெளியிடுவது போன்ற துறைகளில் சில எழுத்தாளர்கள் நல்ல பணியாற்றி யிருக்கிறார்கள். எப். ஜி. ஹாலக்கட்டி, ஆர். எஸ். பஞ்சமுகி ஆகியோர் இவ்வகையில் குறிப்பிடத்தக்கவர் கள். தாங்கள் பிறந்த மதம் எதுவாக இருந்தபோதிலும் வேறு ஒரு மதத்துக்காக உழைத்திருப்பவர்கள் உண்டு. புத்த சமயத்துக்காக அவ்வாறு பாடுபட்டிருக்கிறார்கள். ஆனால் இவ்வழிப் படைப்புக்கள் நிர்மாண ரீதியில் இல்லாமல் குணதோஷ விமரிசன ரீதியில் இருக்கின்றன. நாம் வாழ்வது புரட்சிக் காலம். சம்பிரதாயத்தில் நம்பிக்கை, ஊக்கம் தந்து செயலாற்ற துணை புரியும் சக்தியாக இருக்க முடியாது. அது தீவிர வெறியுடன் கூடிய நம்பிக்கையாகவும், குறுகிய பாதையில் புத்தியைச் செலுத்துவதாகவும் ஆகிவிடக்கூடிய அபாயம் உண்டு. பிற சிந்தனைகளுடன்கூட தொடர்பு ஏற்பட்டு ஒரு சமநிலை ஒழுங்காக அமையாவிடில் இது நிகழக்கூடும். ஆனால் பல நூற்றாண்டுகளில் எத்தனையோ சமயங்கள் கர்நாடகத்தில் வளம் பெற்றுள்ளன. சமணம், வீர சைவம், வைணவம், ஸ்ரீ வைணவம், அத்வைதம் ஆகியவை கன்னட இலக்கியத்தில் ஆதிகாலத்திலேயே வேறுபட்டு இருப்பவை. இஸ்லாமும் கிறிஸ்துவ மதமும் இவ்விலக்கியத்தில் சரிவர ஒட்டுப்போடப்பட்டுள்ளன. போட்டியும், தகராறும் இல்லாதபடி ஒரு புதிய இசைவான உருவமைப்பு தோன்றுவதற்கு இத்துறைப் படைப்புக்கள்

உதவுபடியாகவும், விசேஷ மதிப்புள்ளவையாகவும் காணப்பெறுகின்றன.

வேரூன்றி உள்ள மதம், வழிவழி முறைகள் ஆகிய வற்றில் உள்ள கெடுதல்களை வைத்துக்கொண்டு ஒரு நாலாவது வகை எழுத்தாளர் நிறைய எழுதியுள்ளனர். இவர்களே சமுசயமுள்ள மனிதாபிமானிகள். ஆத்யா வின் 'நிருத்தர குமார்', வி. ஜி. பட்டின் கவிதைகள், ஆர். சர்மாவின் 'இதய கீதம்' ஆகியவற்றில் இந்தப் போக்கைக் காணலாம். டி. வி. ஜி. சொந்த தெய்வானு பவம் மிகுந்த சமுசயவாதி. கக்கா என்ற தமது நூலில் கவிதா வடிவத்தில் கம்பீரமாக தமக்குள்ள அவநம்பிக்கை களை அவர் பிரகாசப்படுத்தியுள்ளார். மேலைநாடுகளில் தனிச் சிறப்புடன் காணப்படும் மனிதாபிமான மன நிலையை வி. சீதாராமய்யாவின் படைப்புகளில் காண லாம். அது தெய்வானுபவத்தின் இறுதி வரம்புவரை செல் கிறது. ஆனால் மதிநுட்ப மிகுதியின் காரணமாக தனித் தன்மையை தியாகம் செய்ய அது தயாராக இல்லை. உள்ளுணர்வை ஆராயும் சிரத்தை அதில் காணப்பெறு கிறது. ப்ராய்ட், ஜங்க் போன்றோரைப் பின்பற்றி மிக உயர்ந்த தன்மையுடையனவாக மனநிலைகள் அதில் சித்திரிக்கப்பட்டுள்ளன. ஐன்ஸ்டீனின் ஆராய்ச்சிகளும் அதேமாதிரி இன்றும் பெற்றுள்ளன. மூலம் எதுவாக இருந்தபோதிலும் சீதாராமய்யா, எஸ். வி. ரங்கண்ணு, ஏ. என். மூர்த்தி ராவ், காசியப் போன்ற மனிதாபிமானி களின் எழுத்துக்களில் அன்பும், அருள்நோக்கும் உண்மையில் திடமான உறுதியும், துல்லியமான மனித உணர்ச்சிகளும் நிறைந்து காணப்பெறுகின்றன. கன்னட நாட்டை அன்புடன் வருணிக்கிறார் சீதாராமய்யா. கவிதா தேவி தம்மிடம் நிலையாக இருப்பதில் தம்மைத் தாமே ஹாஸ்யமாக நொந்துகொள்கிறார். வகுப்புவாத வெறியில் ஹிந்துக்களையும், முஸ்லிம்களையும் ஒருங்கே காப்பாற்றும் மனிதாபிமானிகளை அவர் மனமாறப்

புகழ்கிருர். ஒரு பௌதிக சாலையில் நடைபெறும் ஒளிபற்றிய ஆராய்ச்சியானது அறிவாளிகளின் மன இருளை அகற்றலாம், ஆனுல் படித்தவர்களின் மனதை அது இருள் அடிக்கவும் செய்யும் என்கிருர் அவர்.

கவிதா சக்தியும் மத நம்பிக்கையும் உள்ள ஐந்தாவது வகை எழுத்தாளர் உண்டு. மாஸ்தி, பி. டி. நரசிம்மாச்சார், கோவிந்தபாய், தேவுடு, ஸாலி, கர்க்கி, இஞ்சல், எக்குண்டி, ஆகியோர் இவ்வகையினர். சம்பிரதாயங்கள், ஆலயங்கள், பழைய கற்பனை, சித்திரங்கள், புராதன கட்டுக் கதைகள் அவர்களைக் கவர்ச்சிக்கின்றன. அனுபவ முதிர்ச்சியும், சொல்லாமல் சொல்லும் தன்மையும் அவர்களிடம் சிறப்பாகக் காணப்பெறுகின்றன. எனவே அவர்கள் எழுதுவது நேரிடையாக இருதயத்தை ஆட்கொள்கிறது. இவர்களில் சிலர் தமது மத நம்பிக்கைகளை வெளிப்படையாகப் பிரகாசப் படுத்துவதில்லை. ஆனுல் மற்றவர்கள் மனிதனின் ஆத்மாவைப் பெரிதும் மாற்றுபவர்கள். அது பிரக்ஞையை பிரகாசப்படுத்தும் ஒரு ஜோதி முனை அல்ல. களிமண்ணில் புதைந்து கிடக்கும் மரணமற்ற ஆத்மீக, சிறு பொறி என்பது அவர்களுடைய நிலை. இந்த நிலையிலிருந்துகொண்டு வாழ்க்கை, பிரகிருதி, மனிதன் ஆகிய எல்லாவற்றையுமே அவர்கள் பார்க்கின்றனர்.

அழகுணர்ச்சிக்கு முக்கியத்துவம் கொடுக்கும் நாட்டம் உள்ள எழுத்தாளர் அடுத்த வகையினர். புட்டப்பா, ஆனந்தா போன்றவர்களின் வாழ்க்கை, சௌந்தர்ய உலகில் ஆத்மாவின் அருஞ்செயல் யாத்திரையாக புலப்படுகிறது. கடவுளே அழகு என்கிருர் புட்டப்பா. கலையையும், வாழ்க்கையையும் ஒன்ருகப் பாவித்து உணர்ச்சிச் செல்வத்தில் அவர் வாழ்ந்து திளைக்கிருர். கலா சுந்தரி என்று சங்கீத தேவதையை அழைக்கிருர். அவளது இமைகள் அசைந்தால் தம்மை

அருள் முழுமையாக ஆட்கொண்டுவிடும் என்பது அவருடைய நம்பிக்கை. அழகுணர்ச்சியை அவர் எளிமையாகச் சித்திரிக்கவில்லை. அவருடைய ராமாயணக் கதை அமைப்பில் காணப்பெறும் உட்பொருள் விசேஷம் அலாதியானது. அதில் ஸ்ரீராமகிருஷ்ண, விவேகானந்தர், அரவிந்தர் போன்றோரின் செல்வாக்கைக் காணமுடியாது. சீரிய நோக்கம் ஒன்றை முக்கியமாகக்கொண்டு செறிவு நிறைந்த அல்லது அறநெறியை வலியுறுத்தும் தத்துவ நூல்களைப் பற்றியும் குறிப்பிடவேண்டியது அவசியம். ஹொன்னபூர்மத், தாராநாத், திவாகர், புடிகல் மத் ஆகியோரின் நூல்கள் இத்தன்மை படைத்தவை. சமுதாயம் அறவழியில் நின்று அருள் சுடருடன் பிரகாசிக்கச் செய்யும் நோக்கத்துடன் அவர்கள் எழுதினர்.

தெய்வபக்தி மிகுதியுடன் எழுதும் வகையினர் உண்டு. புட்டப்பாவின் படைப்புக்களில் ஸ்ரீ அரவிந்தரின் செல்வாக்கைக் காணலாம். இந்த வகையினரை ஊக்குவிப்பது அரவிந்தர்தான். ஆத்மாவையும், ஜடப் பொருளையும், சமுதாயத்தையும், தனி நபரையும், நியாயவாதத்தையும், உள்ளுணர்வையும் சரிவர சமரசப்படுத்திச் செல்லும் ஒரு தத்துவத்தை ஸ்ரீ அரவிந்தர் உபதேசிக்கிறார். நேர் எதிர் நிலைகளில் இருப்பனபோலத் தோன்றும் நூல்களை ஒரு சீர்ப்படுத்தி விரிவான நியதிகளின் அடிப்படையில் அது சமரசப்படுத்துகிறது. பகுத்தறிவு வாதம், தெய்வானுபவம், அழகுணர்ச்சி, சோஷலிஸம், செயல்-சிந்தனை ஆகியவை இவ்வாறு இணைக்கப் பெறுகின்றன. பேந்த்ரே, மதுரா சென்ன, கோகக், முகலி இன்னும் பலரை அரவிந்தர் கவர்ந்தது இவ்வகையில்தான். தனிநபர், சமுதாயம் ஆகிய இரண்டுமே அவர்களுடைய பிரக்ஞை —எவ்வாறெல்லாம் வளர்ச்சி கண்டது என்பதை முழுமையுடன் உணர்ந்து எழுத இயலாது. ஒவ்வொருவர் விஷயத்திலும் புரிந்து கொண்டு செயலாற்றிய விதம்

வெவ்வேருக இருந்தது. மதுரா சென்னு முக்கியமாக தனி நபரின் வளர்ச்சியில் சிரத்தை காட்டினுர். ஒரு கீதம் தன் உள்ளேயே ஆழமாக ஒரு மூலத்திலிருந்து எவ்வாறு வளர்ந்து உருவாகிறது என்பதை அவர் பாடியிருக்கிருர் :

“ மின்னொளி போல தொலையில் வெட்டி
விரைந்தோடும் நீ யார் என்று வியக்
கிறேன். இங்கு ஒரு ஒளி, அங்கு
ஒரு தகதகப்பு-நீ யார், நல்லொளி படைத்தனே ”

முதலிலிருந்தே இந்த இரு வழி வளர்ச்சியை அதிகமாக உணர்ந்து பாடியிருப்பவர் பேந்த்ரே. கவர்ச்சிகரமான கற்பனை நிறைந்த வகையில் அவர் பாடுகிருர் :

“ மெல்லிய இழைகளால் ஆன பஞ்சணை மேகங்கள்
மீது படுத்துறங்க நாடுகிறது மனம்.
துயரின் நினைவையே விட்டொழிக்கத் துடிக்
கிறது ”

விண்ணின் ஒளியும் வர்ணஜாலமும் நிறைந்த சக்தி வாய்ந்த கவிதை அவரால் இயற்றப்பட்டது :—

“ அரைப் பட்டினி, போஷாக்கில்லை.
ஏழையின் மனக்குரல் விம்மி வெடிக்கிறது.
சோறு கேட்கும் கூக்குரல் மிரட்டி இடிக்கிறது.
கடவுளை தரையுள் புதைப்போம்.
இரவுதோறும் அவரது சமாதிக்குச் செல்வோம்.
அதன் முன் தூபம்போட வெறியுடன் திரியும்
மக்கள்
சித்தாந்தங்களை எரிப்போம்.
ஆத்மாவை நரகப்படுகுழியில் எறிவோம்
அதன் சீட்கைகளையும் கதறல்களையும் தொட
ருவோம்.
காலனற்ற பித்துப் பிடித்து இவ்
வுலகை ஒரு படுக்கையாக்குவோம் ”.

இந்த எட்டு வகை எழுத்தாளரையும் இந்தியாவில் ஒவ்வொரு பிரதேசத்திலும் காணலாம். இந்திய மறு மலர்ச்சியானது இத்தகைய அச்சுக்களில் வார்த்தது போன்ற ஒரு படைப்பு. அதில் மாறுதல்கள் வெவ்வேருக இருக்கக்கூடும். வளமையும் பன்மையும் நிறைந்த எழுச்சி அது. உலகில் பண்பாட்டுத் துறைப் பணியை நிறைவேற்றி வைக்கும் விழிப்பை அது தன்னில் கொண்டது. ஒவ்வோர் எழுத்தாளனது நம்பிக்கையும், சூழ்நிலே, சந்தர்ப்பம், மனநிலே ஆகியவற்றைப் பொறுத் தது. இலக்கியம் சம்பந்தப்பட்டவரை எல்லா நம்பிக்கை களுமே ஒரு சீராகச் சொல்லக் கூடியவையே. சமுதாயத் தினர் அவற்றை நம்பினுல் போதும். அவனுடைய எழுத்து செல்லாக் காசாக ஆகும். ஒரு சமுதாயத்தை மதிப்பிடுவது எந்த தத்துவத்தை வழிபடுகிருன் என் பதைக் கொண்டு அல்ல. அவனது உள்ளுணர்வில் சுடர் விட்டுப் பிரகாசிக்கும் தத்துவம் எது என்பதுதான் முக்கியம். அவனது தத்துவம் ஒரு கருத்தை அமைப் பதற்கான முளே போன்றது. அந்த முளேயில் எந்த வர்ணமுள்ள சட்டையையும் மாட்டலாம். முளேயோ அல்லது மாட்டுபவனே பிரதானமல்ல.

இந்த எல்லாவகை எழுத்தாளரின் படைப்புகளும் ஒன்றுடன் ஒன்று கலந்து செழிப்பு வாய்ந்த ஒரு புது வாழ்வில் ஒன்றுபடுகின்றன என்பது உண்மையில் சிறிது நுட்பமாகப் பார்த்தால் தெளிவாகும். சமுதாயத்தின் அஸ்திவாரங்களே தூய்மைப்படுத்தி அறியாமை, ஊழல், மூடநம்பிக்கை முதலியவற்றை வேருடன் களேய முடி கிறது. துணை புரிகிறது பிரத்யட்சவாதம், உண்மையை யும், நேர்மையையும் திடமாக தனி நபரிடம் அது வளர்க் கிறது. முற்போக்கு எழுத்தானது சரிவர மறுமலர்ச்சி காணும் சமுதாயத்தின் லட்சியத்தை ஆதரித்து நிற்கிறது. தனி நபர் முழுமை காணக்கூடியபடி, நிர்ப்பந்தம் இல்லாமல், தடையின்றி வளர்வதற்கு திருந்திய அந்த

சமுதாயம் துணை புரியும். நமது மக்கள் முன்னோர்களிடமிருந்து வழி வழியாகப் பெற்றுள்ள நம்பிக்கைகள், அடிப்படைகளை விவரித்து ஒவ்வொன்றிலும் உள்ள முக்கியமான அம்சங்களை வடித்துக் கொடுத்து உதவி அளிக்கிறது சமுதாய இலக்கியம். ஓரளவு சமுசயத்துடன் பிரச்னைகளை அணுகுவது, எந்த சித்தாந்தமும் மனதை அடியோடு ஆட்கொள்ளாதபடி தடுக்கிறது. திறந்த கண்களுடன் எவ்வித விலங்குமின்றி அனுபவங்களைச் சுவைத்து மனிதனது உள்ளுணர்வை அது ஊக்குவிக்கிறது. அறவழியில் செல்லும் இலக்கியம், சமுதாயமும் தனி நபரும் ஒழுங்கான கட்டுப்பாடுகளுடன் வளர்ச்சி காண வேண்டுமென்பதை வற்புறுத்துகிறது. மனிதாபிமானம், மனது கல்லாகாதபடி மூளையையும், இருதயத்தையும் பக்குவப்படுத்துகிறது. அழகுணர்ச்சியானது சிறிதிலும் பெரிதிலும் எல்லாவற்றிலுமே செளந்தர்யச் சிறப்பை புலப்படுத்துகிறது. தெய்வானுபவ இலக்கியமானது இந்த வாழ்க்கைக்கு மேலே உள்ள உயர்ந்த மற்ற வாழ்க்கைகளைத் துல்லியமாக, சிறப்பாகக் காண்பிக்கிறது. ஒரு மனிதன் வளர்ச்சியடையக்கூடிய நிலைமைக்கு முடிவே இல்லை. அவனது அகங்காரம் ஆசைகள் மாறி, ஆத்மாவும் சிந்தனையும் ஒன்றி, இவ்வுலகின் மீது ஒரு சொர்க்கத்தை படைப்பதற்கான அந்தரங்க சக்தியை அவனுக்கு புலப்படுத்துகிறது. இந்திய மறுமலர்ச்சியின் நோக்கமும் பிரயத்தனமும் அதுவே. இலக்கியமானது அதன் வெளிப்படையான தோற்றுவாய். எல்லாத் துறைகளிலும் சுறுசுறுப்பாகப் பணியாற்றி எத்தனையோ கேந்திரங்களில் இருந்து அது செயல்புரிகிறது. ஆனால் பலவாக உள்ள தன்மையில் ஒன்றைக் காணலாம். இந்தியா வாழ்வு அடையப் போகிற புதிய சிக்கலான இசைவான நிலைமைதான் அந்த ஐக்கியமாக இருக்கப் போகிறது.

இந்தச் சிக்கலின் ஆழத்தை இக்கால இலக்கியம்

கண்டு விட்டதாகச் சொல்வதற்கில்லை. ஞானத்தின் இருதயத்தை அது தொட்டு விட்டதாகவும் கொள்ள இயலாது. இந்தியாவின் பிற நாடகங்களைப் போலக் கன்னட இலக்கியமும் ஒரு புது சமரஸ பாவத்தை நோக்கி உருவாகி வருகிறது. அதன் தொடக்கம் தேக்கம் உள்ளதாக இருக்கலாம். அதன் மாறுதல்களின் போக்கு துரிதமாக இருக்கலாம். ஒரு நிலையிலிருந்து நேர் எதிர் நிலைக்கு அது ஊசலாடலாம். தனி நபரின் சௌந்தரிய சஞ்சாரங்கள் எப்படி எல்லாமோ அதைக் கொண்டு போகலாம். எனினும் அந்த ஒற்றுமையே பிரதானமாகக் காணப் பெறுகிறது.

## SELECT KANNADA BIBLIOGRAPHY

*A History of Kanarese Literature.*
By E. P. Rice.

*The Heritage of Karnataka.*
By Dr. R. S. Mugali.

*Popular Culture in Karnataka.*
By Masti Venkatesa Iyengar.

*Literature in the Modern Indian Languages.*
Edited by V. K. Gokak; Publications Division, Ministry of Information, Government of India.

*Linguistic Survey of India.*
By G. A. Grierson, Vol. IV, pp. 362–384.

# கஷ்மீரி (காஷ்மீரி) இலக்கியம்

பின். என். புஷ்பா

## முகவுரை

இன்றைய காஷ்மீரி இலக்கியம் சென்ற ஐம்பது ஆண்டுகளில் அங்கு வளர்ச்சி கண்டு வந்துள்ள சமுதாய, கலாச்சார போக்கின் அருமைக் குழந்தை. இந்தியாவில் பிற மொழி இலக்கியங்கள் ஒரு நூற்றாண்டில் சாதித்தவை களை 30 வருஷங்களுக்குக் குறைவான காலத்தில் செய்து முடித்த 'குழந்தை மேதாவி' என்றுகூட இதைச் சொல்லலாம். ஸம்ஸ்கிருதத்திலும், பாரஸீக மொழியிலும் ஆறு நூற்றாண்டுகளுக்கு மேலாக இருந்து வந்த மிகச் சிறந்த இலக்கிய மரபின் வழிவழி வந்தது இவ்விலக்கியம். ஆனால் எப்போதுமே காஷ்மீரி ராஜ பாஷையாக இருந் தது இல்லை. 15-வது நூற்றாண்டில் பண்பு மிக்க ஜைனுல்-அபி-தின், ஆட்சித் துறை நீங்கலாக பிறவகைகளில் அதன் வளர்ச்சிக்குப் பேருதவி அளித்தார். எனினும் சுல்தான்களது தர்பார்களிலோ, பின்னர் வந்தவர்களின் அரசவைகளிலோ பாரஸீகத்தை வெளியேற்றிவிட்டு அதன் இடத்தை நிரப்பிக்கொள்வதற்கான சக்தி வாய்ந்த தாக அது வளரவில்லை. வங்காளி, குஜராத்தி, மராத்தி ஆகியவை வெவ்வேறு பிராந்தியங்களில் வழங்கி வந்த அபப்ரம்சங்களிலிருந்து தோன்றியவை. காஷ்மீரி மொழியும் அத்தகையதுதான் என்றாலும் பிற மொழி களுக்கிருந்த வாய்ப்பு அதற்கு நியாயப்படி கிடைக்க வில்லை. பாரஸீகப் பாணியில், இயற்கையாக அமையாத

டாம்பிகப் பாடல்களை இயற்றுவதற்குத் தவிர பிறவகைகளில் அது பயன்பட்டது இல்லை.

பின்னர் வந்த மன்னர்களின் அலட்சிய புத்தியை கடமையுணர்வுள்ள கலைஞன் பயன்படுத்திக்கொண்டு, உருவான சாதனைகளைப் புரிந்திருக்கலாம். ஆனால் ராஜீய ஆதிக்க வேட்டைக்காரர்கள் அதற்கான ஸ்திர வாழ்வும், சமாதானச் சூழ்நிலையும் இல்லாதபடி செய்து விட்டனர். தொடக்கத்தில் தெய்வானுபவ, ஆத்மானுபவத் துறைகளில் காஷ்மீரி மொழி ஆழ்ந்து கிடந்தது. எனினும் காலப்போக்கில் கபடமற்ற பாமர மக்களின் மொழியாக அது மாறியே தீரவேண்டுமென்பது புலனாயிற்று. 'ஸர்வகோசர தேவ பாஷா' என்று காஷ்மீரி மொழியை வருணித்து 13-வது நூற்றாண்டில் சிதிகண்டா, தாந்திரிக் பிரார்த்தனைக் கீதங்களையும் அதில் எழுதி பிரபலப்படுத்தினர். ஸம்ஸ்கிருதத்துடன் ஆரம்ப இணைப்புகள் இருந்ததால் இது சாத்யமாயிற்று.

ஸம்ஸ்கிருதம், பாரஸீகம், உருது மொழிகள் இலக்கியத் துறையில் தத்தம் காலத்தில் ஏகபோகமாக இருந்து வந்தன. எனினும் காஷ்மீரி மொழியும் தப்பிப் பிழைத்து ஏற்றத் தாழ்வுடன் வளர்ச்சி கண்டது. இதற்குக் காரணம் இந்த மொழிகளிலிருந்து கற்பனைத் திறனுடன் கூடிய நல்ல அம்சங்களை அது எடுத்து தனதாக்கிக் கொண்டதுதான். எனவே இன்று, கிரியர்ஸன் கண்டது போல ஹிந்து காஷ்மீரி, முஸ்லிம் காஷ்மீரி என்று பேதம் இல்லை. இன்று புழங்குவது ஒரே காஷ்மீரி மொழிதான். இங்குமங்கும் பிராந்திய வேற்றுமைகள் இருக்கலாம். இவற்றிற்கு சமய பேதம் காரணம் அல்ல. பல்வேறு துறையினரான மக்களது மொழிச் சுபாவமே காரணம். நகர மக்களும், நாட்டுப்புற வாசிகளும் பேசும் காஷ்மீரி மொழியில் வேற்றுமை உண்டு. ஸ்ரீநகருக்கு வடக்கே மராஜ் பகுதியினர் பேசும் காஷ்மீரியும், அதற்கு தெற்கே காமராஜ் பகுதியினர் பேசும் காஷ்மீரியும் வேறு

பாடுடையன. ஆயினும் ஹிந்து காஷ்மீரி, முஸ்லிம் காஷ்மீரி என்று கூறப்படுபவைகளிடையே காணப்பெறும் வேற்றுமைகளைவிட இவை சற்று அதிகமே.

சமீபகாலம் வரை ஆரம்பப் பாடசாலைகளில்கூட காஷ்மீரி போதிக்கப்படாமல் இருந்தது வருந்தத்தக்கது. ஆகையால்தான் காஷ்மீரில் பத்திரிகைத் துறை இன்னும் வளர்ச்சி காணவில்லை. உரைநடை இன்னும் சரிவர அமையவில்லை. தகுதியுள்ள திறமைசாலிகளுக்குப் பஞ்சமில்லை. ஆனால் நூல்களை வெளியிடுவதற்குப் போதிய வசதிகள் இல்லை. மேலும், வாசகர்களுடைய அலட்சிய புத்தியும் மற்றொரு காரணம். காஷ்மீரி மொழி அறிவானது நல்ல சம்பளமுள்ள வேலைகளை அளிக்கும் என்ற உறுதி இல்லாதிருந்ததால் இந்த நிலைமை நீடித்தது.

எனினும், காஷ்மீரி மொழியில்தான், மக்களிடையே வழங்கும் சொல்லாட்சியில்தான், அப்பகுதியில் வசிக்கும் ஜனங்களது வாழ்க்கையைப் போதியவாறு சித்திரித்து, வெளிப்படுத்த முடியும். இதை ருசுப்பிப்பதுபோல, அண்மையில், எவ்வளவோ சிரமங்களிடையே, சிறுகதை களும், கட்டுரைகளும் வெளிவந்துள்ளன. ஸத்ஸங்கர் (ஏழுமலை) என்பது அக்தார் மொஹீயுத்-தீன் இயற்றிய நூல். சோமநாத ஜுட்ஷி, உமேஷ் கௌல், ரோஷன், நாதிம், ஹர்வோன் ஆகிய அறுவரின் ஆரம்ப முயற்சி களைத் தொடர்ந்து ஏழாவது படைப்பாக இந்நூல் வெளிப் போந்துள்ளது. தாஜ் பீகத்தைப் போல, வெகு சமீபத் தில் காமில், அலி முகம்மத் லோன் ஆகிய ஆரம்ப எழுத்தாளர், வழிகாட்டிய முந்திய எழுத்தாளர்களின் நம்பிக்கைகளை வீண்போகாதபடி, நல்ல நூல்களை வெளியிட்டுள்ளனர். புஷ்கர பான், அலி முகமத் லோன், கமில், ஜுட்ஷி, ரோஷன் ஆகியோரின் நாடகங்கள் எதிர் காலத்தைப் பற்றி நம்பிக்கை தருவனவாக இருக்கின்றன. ஹப்பா காதூனைப்பற்றி ஜுன் என்ற நாடகத்தில் ஜகந் நாத வலி தந்துள்ள வரலாறும், கிரிஸ்த் சுந்து கரா என்று

முகியுத்-தின்-ஹஜீனி இயற்றியுள்ள நூலும் குறிப்பிடத் தக்கவை. முப்பது ஆண்டுகளுக்கு முன் காஷ்மீரி நாடகத்துறையை வேரூன்றச் செய்ய முயற்சிகள் நடந்து கொண்டிருந்தபொழுது, நந்தலால் கௌல் மண்டால் ஒரு நாடகம் இயற்றினர். அது ஹஜீனி நாடகத்தினின்று மாறுபட்டது. ஸதாச்*கஹாவத் (உண்மையின் உரைகள்) என்பது அதன் பெயர். அது ஹரிச்சந்திரனைப் பற்றிய புராணக் கதை. குணீகத் (ஒரே கதை) என்ற பெயரால் மூன்று ஆண்டுகளுக்கு முன் வெளிவந்த சமூக நாடகங்கள் முற்றிலும் வேறு வகையைச் சேர்ந்தவை. காஷ்மீரி மொழியில் முதல் நாவல் இன்னும் அச்சேருதது துரதிருஷ்டவசமானது. இன்றுவரை நாவல்கள் எழுத்துப் பிரதிகளாகவே இருந்து வருகின்றன. அக்தர், கமில், லோன் ஆகிய மூவரின் நாவல்கள் அச்சேறினல் இத் துறையில் நல்ல துவக்கம் ஏற்பட்டிருப்பதாகக் கூறலாம்.

சமீபகாலப் படைப்புக்களில் புதுமையான உத்திகளோ, சொற்சித்திரங்களோ தோன்றி ஏற்றம் கண்டிருப்பதாகச் சொல்வதற்கில்லை. எனினும் நாட்டு மண்ணின் நறுமணம் அவற்றில் வீசுகிறது. காஷ்மீரில் மலர்ந்து வரும் புதுவாழ்வின் தன்மையை அதில் காணலாம். ஓடியாடி உழைக்கும் ராஜீயத் தொண்டன், விழிப்புற்றுள்ள விவசாயி, சுருங்கி வரும் நடுத்தர வகுப்பினர், கஷ்டப்பட்டு உழைக்கும் கைவினைஞன், சுறுசுறுப்பான படகோட்டி, வியர்த்து விருவிருக்க உழைக்கும் தொழிலாளி, பித்துப் பிடித்த குமாஸ்தா, சோம்பேறியான சுகவாசி, பணிவும் சோகமும் நிறைந்த மாதர் ஆகிய பலவகைப்பட்டோர் ஒரு புதிய சூழ்நிலையைச் சுவைக்கத் தொடங்கியிருக்கிருர்கள். மாறிவரும் உலகின் புதிய சூழ்நிலைகளைத் துருவி ஆராய்ந்து வருகிருர்கள். எதிர் காலம் சிறப்பாக அமையுமென்ற ஆசைமிகுதி இந்த எழுத்தில் சந்தேகமறக் காணப்படுகிறது. எனினும் அதில் பெரும்பகுதி இப்போதைய நிலைமையின் சிரம

நிலேகளே உக்கிரமாகப் புலப்படுத்தவும் செய்கிறது. காஷ்மீரி செய்யுள் இவ்வகையில் இன்பகரமான வளர்ச்சி கண்டு வருகிறது.

## பழைய மரபு

காஷ்மீரி உரைநடை இன்னும் மெதுவாக ஊர்ந்தே செல்கிறது. ஆனால் காஷ்மீரி செய்யுள் கணிசமாக ஏற்றம் கண்டு தரத்திலும் உயர்ந்து காணப் பெறுகிறது. இந்த மரபு தோன்றியது 13-வது நூற்றாண்டில். மகாநய பிரகாசா என்ற சைவ (தந்திர) ஆய்வு நூலே சிதிகண்டா அப்போது வெளியிட்டார். எல்லோருக்கும் புரியும்படி யான பழகு மொழியில் அதைத் தாம் இயற்றுவதாக அவர் அறிவித்தார். மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்த சமயக் கருத்துக்களே பிரசாரம் செய்வதற்கு பழகு மொழி முதலில் நல்லபடி பயன்பட்டது. விரைவில் இலக்கியத் துறைப் பணிகளும் அதற்கு வாய்த்தன. அக்காலத்தில் காஷ்மீர் ராஜீய நெருக்கடியினால் பெரிதும் பாதிக்கப் பெற்றது. சைவ சித்தாந்தமும் முஸ்லிம் தெய்வக்ஞர்கள் பிரசாரம் செய்த ஸூஃபி மதமும் ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொள்கையில், புதிய, சமூக, கலாசாரப் படைப்பு கள் உறுப்பெறுவது இயல்பே. இந்த இணைப்பின் புதிய சுருதியை 14-வது நூற்றாண்டில் லால் டேடின் (லல்ய த்யந்) நூல்களிலும் அவரைத் தொடர்ந்து வந்த ஷேக் நூருத்தின் வலி (நந்தரிஷி) என்பவரது நீதி நெறிச் செய்யுள் வடிவப் படைப்புக்களிலும் காணலாம். "ஆண்டவன் அனைத் திலும் உறைகின்றான். எனினும் எல்லாவற்றையும் மிஞ்சி நிற்கின்றான்" என்ற கருத்தில் முழுக்க முழுக்க ஆழ்ந் துள்ள தெய்வீக கீதங்கள் அழகு வடிவங்களாக லால் டேடின் பாடல்களில் அமைந்துள்ளன. சுய அனுபவம், ஆராய்ச்சி மூலம் அடையும் அனுபவம் ஆகிய இரண்டு மாகச் சேர்ந்து பின்னப்பட்ட ஒரு சிருஷ்டி அது. உலகாயதம், ஆத்மீகம் ஆகிய இரண்டுக்குமிடையே ஒரு

சமரஸ நிலையைத் தோற்றுவிப்பதன் அவசியத்தை நந்த ரிஷியின் பாடல்கள் வலியுறுத்தியுள்ளன. அகத் தூய்மையும் கட்டுப்பாடும் அவசியமென இவ்விரு ஞானிகளும் கபீருக்கு நெடுங்கால முன்னரே வலியுறுத்தியுள்ளனர். ஆத்மீக விஷயங்களில் காணப்பெற்ற அலட்சிய புத்தியையும், வறட்டுச் சம்பிரதாய அபிமானத்தையும் எதிர்த்து இவர்கள் கிளர்ச்சி செய்தனர். இவர்களது பாடல்களில் ஹிந்து சமயமும் இஸ்லாமும் ஒரே பரிபாஷையைக் கையாளுகின்றன. சித்தாந்தம், சமயம், ஜாதி போன்ற பாகுபாடுகளுக்கு அப்பாற்பட்ட மானிட வர்க்க சகோதரத்துவம், சமூக சமத்துவம், ஆத்மீக ஒருமை நிலவ வேண்டுமென்றுதான் இவை உருக்கமாக வேண்டுகின்றன.

இந்த இலக்கிய முயற்சியின் வளர்ச்சிக்கு ஒரு சௌகரியமான உத்தியை அமைத்துக் கொடுக்க பாரஸீக 'மஸ்நவி' வழி பயன்பட்டது. தெய்வானுபவ மரபுக்கு மஸ்னவி புதுத் திருப்பத்தை அளித்தவர். யூசுப்-ஜுலேகா, லைலா மஜ்நூ, குல்ரெஸ் போன்ற பாரசீக ரத்தினங்களின் காஷ்மீரித் தழுவல்களை மாமூத் காமி வழங்கினார். அவற்றில் ஜீவகளை ததும்புகிறது. முதல் நூல் போன்ற அமைப்பு காணப் பெறுகின்றது. புதை பொருள் மிகுந்த கற்பனைச் சித்திரங்கள் நிறைந்தவை அவை. அழகு ததும்ப வெகு பிரகாசமாக அமைந்துள்ள இலக்கிய சிருஷ்டிக்கு ஹமீல் எடுத்துக் காட்டு. வலீ-உல்லாஹ் மட்டு இக்கதையைச் சொன்னவர். இதைப் பாடல்களாக்கி தமது மேதையைக் காட்டியவர் ஜரீப். இந்த இரண்டும் சேர்ந்து இசைவாக வெளிவந்துள்ள நூல் சிறப்பாக அமைந்துள்ள அற்புதம் குறிப்பிடத் தக்கது.

முந்தைய இரண்டு நூற்றாண்டுகளில் நீண்ட கதைப் பாடல்களை இயற்றும் பழக்கம் வந்தது. பல நூற்றாண்டுகளுக்கு முன்னர்கூட இந்த முறை கையாளப் பெற்றது.

சுல்தான்-உல்-அபிதீன் (15-வது நூற்றுண்டு) பண்புள்ள மன்னர். அவரது அரசவைக் கவிஞர்கள் பிர்தௌசியின் ஷாநாமாவை காஷ்மீரிச் செய்யுளில் அமைத்துக் கொடுத்தனர். பாணசுரவதம் என்ற இதிகாசத்தையும், ஜைன சரிதம் என்ற வாழ்க்கை வரலாற்றுக் கவிதையையும், ஜைன விலாஸம் என்ற நாடகத்தையும் அவர் இயற்றினர். ஆனல் ஆதரவு தந்து வந்த மன்னர் காலமான பிறகு விளைந்த குழப்பத்தில் இவையும் இன்னும் பல சிருஷ்டிகளும் புகைந்து போயின. மீண்டும் 19-வது நூற்றுண்டில் தான் இந்த மரபு தலைதூக்க இயன்றது. தெய்வீகக் கற்பனைச் சித்திரங்களைப் படைப்பதற்கு மாமூத் காமி இதைக் கையாண்டார். கிருஷ்ண, சிவ சரிதங்களை, சம்பிரதாய வழி முறைகளைப் பின்பற்றி, புதிய பொருளுடன் அமைத்துக் கொடுத்தவர் பரமானந்தர். "ராதா சுயம்வரம்", "சுதாமா சரிதம்", "சிவலக்ன" ஆகியவை மிகச் சிறந்த புலமையும், கருத்துச் செறிவும் நிறைந்தவை. வைணவ பக்திப் பெருக்கையும், சைவத்தின் தியாகத்தையும் அதில் ஒரு சேரக் காணலாம். கதைகள் புராணத்திலிருந்து எடுக்கப் பெற்றவைதாம். எனினும், இக்கால சமூகத்துக்கு மகிழ்ச்சியையும், நன்னம்பிக்கையையும் தரக்கூடியவையாக அவை உருவாயின. பிரகாசராம் குரிகாமி 18-ம் நூற்றுண்டில் "ராமாவதார சரிதம்" என்ற நூலை இயற்றினர். அது பெரிதும் விரும்பிப் படிக்கப் பெற்றது. அதன்மூலம் ராமாயணக் கவிதை மக்களிடையே பிரபலமாகி இருந்தது. வஹாப் பரே (19-வது நூற்றுண்டு) வரலாற்றுக் கவிதைகளை இயற்றி ஒரு புது வழியைச் சமைத்துக் கொடுத்தார்.

லால் டேட் போன்றவர்கள் இசைப் பாடல் வகையைப் பிரபலப்படுத்தியிருந்தனர். ஆனல் ஹப்பா கட்டுன், அர்னிமல் ஆகியோரின் உணர்ச்சி வேகம் நிறைந்த கவிதைகளில்தான் இப்போக்கு முழுமை கண்டது. ஹப்பா கட்டுன், யூசுப் ஷா சக்கின் காதல் கிழத்தி; இலக்கியத்

திறம் படைத்தவர். 16-ம் நூற்றாண்டில் மறுமலர்ச்சி இலக்கிய மரபைத் தோற்றுவித்து, இலக்கிய உலகில் ஒரு புதிய சகாப்தத்தை தொடக்கி வைத்தார். குடியானப் பெண்ணாக இருந்து ராணியின் அந்தஸ்தை அடைந்தவர். காஷ்மீரி இசைக் கவிதையில் வாழ்க்கையின் உணர்ச்சி மிக்க அனுபவங்களைப் புனைந்து வழங்கினார். புன்முறுவலும் கண்ணீரும் கலந்த சோக கீதம் அவர் இயற்றியது. 18-ம் நூற்றாண்டில் அரணிமால் தோன்றிய வரை ஹப்பா கட்டுன் கவிதைகள் தாம் மேலோங்கியிருந்தன. பாரசீக மொழியில் கவிதை இயற்றிய ஒரு பிராம்மணரின் புறக் கணிக்கப்பட்ட மனைவி அரணிமால். மிகச் சிறந்த பாடல் களை காஷ்மீரி மொழியில் அவர் இயற்றியுள்ளார். உணர்ச்சிகள் கிளர்ந்து எழும் சுபாவமான துடிதுடிப்பை, சொந்த அனுபவங்களை, உறவு முறைகளை அவை அள்ளிக் கொட்டின. பிறகு இந்தப் போக்கு வேறு திசையில் திளைத்து பக்திப் பாடல்கள் தோன்றலாயின. லீலா, நாத்ஆகியவை படைக்கப் பெற்றன. கிருஷ்ண ராஜதான், நாஜிம் ஆகியோர் நாட்டுப்பாடல் முறைகளைக் கையாண்டு வளப்படுத்தினார்கள். அதே சமயத்தில் ஆழ்ந்த தெய்வானுபவமுள்ள இசைப் பாடல்களும் தங்கு தடங்கலின்றி இக்காலம் வரை இயற்றுப்பட்டு வந்துள்ளன. மாஸ்டர்ஜி எனப்படும் [1] ஜிந்தா கௌலிடம் காணப்பெறும் ஆத்மீக மனிதாபிமானம் இந்தப் போக்கிற்கு முத்தாய்ப்பாக அமைந்துள்ளது. சென்ற நூற்றாண்டின் இறுதியில்தான் காஷ்மீர்ச் செய்யுளில் அக்காலத்து வாழ்வு பிரதிபலிக்கலாயிற்று. மக்பூப் கரலாவாரி, வஹாப் பரே ஆகியோரது நிந்தனைப் படைப்புக்கள் பிரத்தியட்சவாதப் பாடல்களுக்கு வழி திறந்துவிட்டன. நிந்தனை, கிண்டல், கேலி, பரிகாசம், துன்ப-இன்பியல், கற்பனைப் புகழ் பாடல்

---

1 "சும்ரான்" என்ற அவரது கவிதைத் தொகுப்பிற்கு 1956-ல் சாகித்திய அக்காதெமி பரிசு வழங்கப் பெற்றது.

'ரோஹ்' என்ற கிராமிய ஆட்டப் பாடல் போன்ற பல்வேறு வகைக் கவிதைகளைப் புனைந்தனர். பிரமாதமாக வளர்ச்சி கண்டது கஜல் வகை. முன்னர் காணப்பெறாத இன்பக் கிளர்ச்சியையும், மனதைவிட்டு அகலாமல் நினைந்து மகிழ்வூட்டும் இசைநயமும் கொண்ட கஜல்களை ரசூல் மீர் புனைந்தார். நவீன காஷ்மீரக் கவிதையின் மூலபுருஷ ரான மஹ்ஜூர் (1885—1952) இயற்றிய கஜல்களுக்கு வழிகாட்டியாக விளங்கியவர் மீர்.

## இக்காலம்

சென்ற 25 ஆண்டுகளாக வரையப் பெற்று வரும் காஷ்மீரிக் கவிதையில் காஷ்மீர் மக்களின் புதிய சமூக, ராஜீய விழிப்பு, அவர்களது சுதந்திரப் போராட்ட வரலாறு முதலியவை பிரதிபலிக்கக் காணலாம். ஒரு புதுக் காஷ் மீரைத் தோற்றுவிக்கும் கனவு காணும் மக்களது உணர்வுப் பெருக்கை அது சித்திரிக்கிறது. இத்தகைய மாறுதல் ஏற்பட்டு வருகிறது என்பதை மக்களிடையே முதல் தடவையாக புலப்படுத்தியவர் மஹ்ஜூர். அவரது பாடல் களில் தேச பக்தியும் தேசிய உணர்ச்சியும் கலந்து கிடக் கின்றன. புதிய தொனியை மட்டுமின்றி புதியதோர் கண்ணோட்டத்தையும் அதில் காணலாம். குல் (ரோஜா), புல்புல் (குயில்), ஆகியவை சில சம்பிரதாயச் சின்னங் களாக மதிக்கப் பெற்றவை. பம்பர் (தேனி), யம்பர் ஜல் (தாழம்பூ) ஆகியவையும் அதே மாதிரி சில தனிப் பொருள் படைத்த சின்னங்களாக விளங்கின. புதிய ஆசாபாசங்களை வெளிப்படுத்துபவையாக அவற்றை மாற்றியமைத்தார் மஹ்ஜூர். சின்னங்களை நிமித்தமாக வைத்து எழுதும் மறைபொருள் முறையானது சர்க்காரின் தணிக்கை அதிகாரியிடமிருந்து தப்ப அவருக்குத் துணை புரிந்தது. ஒரு நிலப் பிரபுத்துவ யதேச்சாதிகாரத்துக்கு எதிராக மக்களிடையே சமூக, ராஜீய விழிப்பை உண்டு பண்ணி, சிறைப்படாமல் தப்புவது வேறு எவ்வகையிலும்

சாத்தியப்பட்டிராது. அப்துல் அஹத் ஆஜாத் என்னும் கவிஞர் பட்டவர்த்தனமாகப் பாடினர். தேசிய உணர்ச்சி அவரது பாடல்களில் கிளர்ந்து நிற்கும். மதவெறி, வகுப்புத் துவேஷம், தேசியத் தனி உணர்ச்சி போன்ற எல்லா வகைப் பித்துக்களையும் எதிர்த்து அவர் பாடினர். நியாய மற்ற வேற்றுமை இல்லாத சமுதாய அமைப்பை அவர் வீரியத்துடன் வற்புறுத்தினர்.

அந்தக் காலங்களில் காஷ்மீர் ஒரு வகையான இரட்டையாட்சிச் சுழலில் உழன்று கொண்டிருந்தது. அவற்றில் ஒன்று பழைய ரீதியில் உள்ள பிரபுத்துவ முடியாட்சி முறை, மற்றொன்று ஏகாதிபத்ய ரெஸிடெண்டின் அரசியல் ஆதிக்கம். மனிதத் தன்மையை அவை அலைக்கழித்தன. மக்கள் மிக வன்மையுடன் இவற்றை எதிர்த்தனர். இந்தப் போராட்டத்தின் வீரச் செயல்களை அரீப், "மகர் கார்வான் சோன்" (நமது சுதந்திர வண்டி இடைவிடாது ஓடிக் கொண்டிருந்தது) என்ற தமது பாடல் தொகுப்பில் கௌரவித்துள்ளார். காஷ்மீரி இலக்கியம் பூராவுமே புரட்சி-ஆர்வம் மிகுந்ததாக இருந்தது. பிரபுத்துவ முறையின் பளு தாங்காது தவித்துக் கொண்டிருந்த பாட்டாளி மக்களின் துயரங்களை ஆரிப் என்ற 'கூலிக் கவிஞன்' பாடல்களாக வடித்துக் கொண்டிருக்கையில், மாஸ்டர்ஜி, எளிய நடையில் இக்காலக் கருத்துக்கள் தொனிக்கும் வகையில், தெய்வானுபவ முழுமையுடன்கூட சாசுவதமான ஆவல்களையும், பிரச்னைகளையும் தமது கவிதைகளில் கோர்த்துக் கொடுத்தார். காலம் என்ற நதியில் தோணியேறிக் கடந்து வர்க்க பேதமற்ற சமுதாயத்தைத் தோற்றுவிக்கும் லட்சியத்தையே அவர் பாடினர். குடும்ப வாழ்க்கை, சமுதாய வாழ்வு, தேசிய நிலவரம், சர்வ தேசியம் ஆகிய எல்லாமே இசைவாக இணைக்கப்பட்டிருக்கும் லட்சியத்தையே அவர் பாடினர்.

காஷ்மீரத்தில் எல்லைப்புற மலை ஜாதிகள் புகுந்து தாக்கியபோது, சுதந்திரப் போராட்டமானது, படை

யெடுப்பை எதிர்க்கும் மக்களது எதிர்ப் போராட்டமாக உருவாகியது. 1947-ம் வருஷத்து கார் காலமானது காஷ்மீரின் ராஜீய வாழ்க்கையில் ஒரு திருப்பு முகமாக அமைந்ததுடன்கூட நாட்டின் இலக்கிய கலாசார சம்பிர தாயச் சிறப்புக்கள் புது ஜீவசக்தியுடன்கூட விளங்கும்படி செய்தது.

புதிய கலாசார இலக்கியத்தின் அமைப்பாளர்களில் நாதிம் முன்னணியில் இருப்பவர். இளமையும், வன்மை யும், நம்பிக்கை மிகுதியுமுள்ள மிகச் சிறந்த காஷ்மீரிக் கவிஞர் அவர். ரோஷன், ராஹி, பிரேமி போன்ற இன்னும் பல இளவட்டக் கவிஞர்கள் அவருடன் சேர்ந்து கொண்டனர். அவருக்கு முன் கவிதை புனையத் தொடங் கிய ஆரிப், ஆரிஜ், அம்பர்தார், பாஜில் போன்ற கவிஞர் கள்கூட புதிய போக்கை வரவேற்றுப் பின்பற்றினர். கவிதை எழுதி பழக்கமில்லாத பலர் ஆசாபாசங்களால் உந்தப் பெற்று, சூழ்நிலைக்கு ஏற்ப, தாம் பிறந்த நாட்டின் எதிர்கால நல்வாழ்க்கையைப் பாடினர். மஹ்ஜூர் எல்லோ ருக்கும் நல்லாசி கூறினர்.

மலைஜாதிகளின் படையெடுப்பு தேசமெங்கும் கடும் சேதத்தை விளைவித்தது. நாட்டுப்பற்று மிகுந்த பாடல் கள் மீண்டும் புனையப் பெற்றன. சமுதாயத்திற்கும், ஜனநாயகத்திற்கும் பாதகமாயிருந்த சக்திகளுக்கு எதி ராக மக்களைத் திரட்டி எதிர்ப்புணர்ச்சியை பலப்படுத்து வதற்கு அவை பயன்பட்டன. "மலர்ச்சி" என்று நாதிம் இயற்றியுள்ள நூல் இந்தப் போக்கை நன்கு விளக்குகின்றது. ராஜீயப் பொருளாதார அடிமைத் தளைகளை தகர்த்தெறியப் போரிடும் மக்களது உறுதியை இந்தக் கவிதைகளில் காணலாம். காஷ்மீருக்குள் அமைதி யும் சௌஜன்யமும் மிக்க அவசரமான தேவைகளாக இருந்தன. இதையும் கவிஞர்கள் ஆர்வத்துடன் வற்புறுத் தினர். நாட்டின் மரபில், பண்பாட்டில் மதிப்புள்ள எல்லா வற்றையும் அவர் வற்புறுத்திக் கூறினர். நிலச் சீர்திருத்

தங்களின் பொருளை அவர் பாடினார். அநியாய வட்டி, கிராமக் கடன் ஆகியவற்றிற்கு எதிராக கடும் நடவடிக்கையை வற்புறுத்தினார். வருகின்ற வாழ்வில் தொழிலாளி புதியதோர் பணியை ஆற்ற வேண்டியவன் என்பதைச் சொன்னார். ''ஆண்டுதோறும் கலப்பை கொண்டு நிலமகளின் முக விலாசத்தில் புது விதியை வரைகின்றான் விவசாயி'' என்கிறார்.

'மண்ணின் காயத்தை ஆற்றுவோம்
அதன் நெற்றிக் கோடுகளை அகற்றுவோம்
தோலின் சுருக்கத்தை நீக்குவோம்
கண்ணிற்கு ஒளி தருவோம்.'

கவிஞனுக்கு காற்று கூறுகிறது :

'ரோஜாவின் கண்கள் சினத்தால்
சிவப்பதைக் கண்டேன்
மலையருவிகளுக்கு புது வீர்யத்தை
புரட்சி அளித்துள்ளது. புல்வெளியும் பூக்களும்
போட்டியிட்டுப் பொலிகின்றன. ஓயாத
அருவியில் புத்துறுதி பேசுகிறது.
உச்சி கூம்பிய மரமும் மிடுக்குடன்
நிற்கின்றது. புல்வெளி சிரிக்கிறது.

இயற்கையின் கொண்டாட்டத்தைக் கண்டு கவிஞனது மனமும் விம்முகிறது.

'விடியற்காலையில் முத்து திவலைகள் .
தோன்றி விளைத்த அழகுடன் ஆடைகள்
இன்பநாதமொலிக்க, அருவி பாய்ந்தோடி
வருகுது. மலைகள் மீது நிலவு மங்கி
மறைந்தோடுது. அதன் யௌவனக்
கிறுக்கு கற்கள் மீது பரந்து பாயுது.'

எனினும் கவிஞன் மனதில் வேதனை எழுகிறது :

'வேலையாளின் பங்கைப் பறித்து பணம்
திரட்டிக் குவித்தான் செல்வன்

சந்தை சந்தையாக கர்வத்துடன் சென்று
மனிதனை ஏலம் கோருகிறான் இன்று'

பாட்டாளி மக்களின் விஷயங்களைக் குறித்த படைப்புக்கள் ராஜ்யத்தின் புதிய பொருளாதார நிகழ்ச்சிகளைப் புலப்படுத்தும் வகையைச் சேர்ந்தவை. சென்ற சில ஆண்டுகளாக களத்துப் பாடல்கள், தாலாட்டு, தொட்டில் பாட்டு, தொழிலாளரின் கோஷ்டிப் பாடல்கள் ஆகியவை பிரபலமாகி வந்துள்ளன. காஷ்மீரின் வனப்புமிக்க பருவங்களைப் பற்றி அழகு ஒளி நிறைந்த பாடல்களையும், கற்பனைகளையும் ரோஷன் வழங்கியுள்ளார். சாமானிய மனிதன் தனது பல்வேறு பணிகளில் ஈடுபட்டு, சமாதானத்தையும் செழுமையையும் நாடி, உறுதியுடன் ஏற்றம் காண்பதைப் பற்றி அவை பாடுகின்றன. தொழிலாளர் வாழ்க்கையின் பல அம்சங்களைப் பற்றி பிரேமி பாடியுள்ளார். வயல்களைப் பக்குவப்படுத்தி, நாற்று நட்டு, மகசூலை அறுப்பது பற்றியும், குங்குமப் பூவை சேகரிப்பதைப் பற்றியும் அவர் பாடியுள்ளார். விவசாயிகளிடையே ஏற்பட்டுள்ள மாறுதலின் பெருமை நிறைந்த சௌந்தர்யத்தை அறுவடை பற்றிய ஒரு நாட்டுப் பாடலில் அவர் வைத்து எழுதியுள்ளார்.

மாறுதல்கள் நிகழ்ந்து வரும் இடைக்காலமானது அலுப்புத் தட்டுவதாகவும், மனதுக்குத் தொந்தரவு தருவதாகவும் இருக்கத்தான் செய்யும். அபிவிருத்தியின் வேகக் குறைவு பொறுமையைச் சோதிக்கும். கூடவே ஏமாற்றத்தையும் அது அளிப்பதில் ஆச்சரியமில்லை. புதிய அமைப்பை கைகொட்டி வரவேற்ற கவிஞர்கள் எல்லோரும் சில சமயம் பெருமூச்சுடன் ஆசாபங்கத்தை எடுத்துக் காட்டியும் இருக்கிறார்கள். சாதாரண மக்களின் சிரமங்களை சமூகச் சீர்கேடுகளும் அதிகார வர்க்கத்தின் தவறுகளும் அதிகப்படுத்தியிருக்கின்றன. எனவே கள்ளச் சந்தை, ஒழுங்கீனம் ஆகியவற்றிற்கு எதிராகவும் குரல் கொடுக்கிறான் கவிஞன். பழைய அமைப்பு முறை

யின் ' விட்ட குறைகள் ' இன்னும் நிலைத்து இருப்பதை நையாண்டி செய்து, கசப்புடன் பாடுவதை காலம் சென்ற மஹ்ஜுரின் கஜல்களிலும் காணலாம். புதிதாகக் கிடைத்த சுதந்திரத்தைக் கேலி செய்து மஹ்ஜுர் பாடியிருப்பதைப் பார்ப்போம் :—

' இந்தச் சுதந்திரம் ஒரு வான்விழி மங்கை
அவள் வீடு வீடு வருவாளா?
ஒன்றிரண்டில்தான் அவள் முறுவலிப்பாள்.
மக்கள் துயர்பட்டு வாட, மாப்பிள்ளை போல
அதிகார வர்க்கத்தினர் சுதந்திர மங்கையுடன்
இன்புறுகின்றனர் வீட்டினுள்.'

துரோகிகளைக் கண்டனம் செய்யும் வகையில் மிகக் கடுமையானது ரோஷன் இயற்றியுள்ள ஒரு கவிதை. அது லட்சியத்துக்காக உயிரைக் கொடுத்த ஒரு தியாகி யின் தாய் சொல்லும் கதை. ஆண்டுதோறும் தன் மகனது கல்லறைக்குச் சென்று படாடோபத்துடன் அதன்மீது மலர் மழை பொழிவோரின் பித்தலாட்டத்தை பிட்டுப் பிட்டுக் காட்டுகிருள். சுதந்திரத்திற்கு அவர்கள் துரோகம் இழைத்து விட்டனர் என்று தனது மகனின் அழியாத ஆத்மாவிடம் முறையிட்டுக் கொள்கிருள். போரினின்று நடு வழியில் நழுவி, காலத்துக்கு உதவாத தொன்மையென்ற தலையணைகளில் சாய்ந்து, அவர்கள் சொகுசான வாழ்க்கை நடத்துகின்றனர் என்கிருள். "பிராம்" (பிரமை) என்பது சக்தி வாய்ந்த மற்ருெரு கவிதை. இந்தியாவிலிருந்து தமது நாட்டை பிய்த் தெறியப் பார்க்கும் விஷமத்தை வேரறுப்பது என்று காஷ்மீரி மக்கள் கொண்டுள்ள உறுதியை இப்பாட்டில் வெளிப்படுத்துகிருர் கவிஞர்.

காஷ்மீரின் எதிர்காலத்தைப் பற்றி பந்தோபஸ்து கவுன்ஸில் முடிவு காணுது இருந்து வருவதால் ஒரு நிச்சய மற்ற நிலைமையும், பந்தோபஸ்தின்மையும் இருந்து வரு

வதை பல காஷ்மீரிப் பாடல்கள் எடுத்துக் காட்டுகின்றன. கவிஞன் இதன் விளைவுகளை முற்றும் உணர்ந்தவன். எனவே நிகழ்ச்சிகளின் போக்கைக் கூர்ந்து கவனிக்கிறான். காலம் வீணாவதைக் கண்டு துடிக்கிறான். அவன் மனதார வேண்டுவது உலக அமைதி. அது இலையேல் நல்ல காஷ்மீரத்தை நிர்மாணிப்பதைப் பற்றிய அவனது கனவுகள் கருகிப் போகும். எனவே யுத்த வெறியர்களைச் சாடுகிறான். ஆத்மா கிளர்ந்தெழும்படி அமைந்துள்ள சமாதானப் பாடல்கள் விஷயமாக காஷ்மீரி மொழி பெருமை கொள்ள முடியும். இந்த கீதங்கள் உருவமற்ற லட்சியமாக பாடப் பெறவில்லை. நேருக்கு நேரான உண்மையாக, இன்றைய நிலைமையின் அத்தியாவசியத் தேவையாக, உலகெங்கும் அனைவரின் நாட்டமாக அது வழங்கப் பெறுகிறது. காஷ்மீரிக் கவிஞன் இது விஷயமாகக் கூறுவதைக் காண்போம்.

‘ பூவையும் குயிலையும் மனதை நிரப்பும்
இசையையும் காதலையும் இன்று நான் பாடவில்லை.
பூம்பொழிலும் அருவிகளும் பனித் துளியின்
பசுமைச் சிறப்பும் என் கவிதையில்
இன்று இடம் பெறா. சரத் காலக் காற்றின்
விஷம் தென்றலைத் துரத்தி விரட்டுகிறது.
மனிதனை வாட்ட
மனிதன் மீண்டும் தயாராகின்றான்.
எனவே இன்று கிளம்புவேன். வழியொன்றைச்
சமைப்பேன். தளைகளைத் தகர்ப்பேன்.
தடைகளைப் புரட்டிடுவேன். கொள்ளையனை
நேர் நின்று கேட்பேன். ‘விட்டொழி
உன் போக்கை’ என்பேன். அரிவாளும்,
சுத்தியும், பேனாவும் கொண்டு, நெஞ்சில்
உறுதி படைத்து அடைந்து தீருவேன்
இடம் இடமாகச் சென்று.’

யுத்த வெறியர்களை அறைகூவி அழைக்கும் வகையில் சமாதானப் பாடல்களில் சில வரையப் பெற்றுள்ளன. தமது வெவ்வேறு வாழ்க்கை வழிகளில் சாமானிய மக்கள் நிர்மாணப் பணிகளில் ஆழ்ந்திருப்பதன் மூலம் சமாதான இயக்கத்தை வலுப்படுத்துவதன் அவசியத்தை உணர்ந் திருப்பதாக அவன் காண்கின்றான். நாதிம், ரோஷன், ரஹி, காமில் ஆகியோர் வாழ்க்கையை விரிந்த திரையாக்கி பரந்த அனுபவங்களையொட்டி, வீட்டு விஷயத்தையும் நாட்டு விஷயத்தையும் சேர்த்துப் பாடியிருக்கிறார்கள்.

சாமானிய மக்களுக்கு பந்தோபஸ்தான, சாதகமான எதிர்காலம் உறுதி செய்யப்படுமெனில் அவர்கள் அடையக் கூடாதது ஒன்றுமே இராது என்ற உண்மை காஷ்மீரிக் கவிதையில் மிகுதியாக இருப்பதைக் காண லாம். எனவே கதிரவன் குணதிசை வந்தடைகையில், பல சகாப்தங்கள் இருளை அகற்றி ஒரு புதிய மனித வர்க் கத்துக்கு புதுச் செய்தியைக் கொணர்வதாகப் பாடுகிறான் கவிஞன்.

ராஹி கேட்கிறார்:

‘பகலவன் கிளம்பிக் கதிர்களை வீசி எறிகையில்
இருளுக்கு இடமேது? மின்னல், புயல் நிலைக்குமா
பனியின் சோகை நடுங்கி நீங்கிடாதா?
வசந்தத்தின் இசைவான அழகு வெடித்துக்
குதிக்காதா?’

ராஹியின் பாடல்களில் கலையுணர்ச்சி பரிமளிப்ப தைக் காணலாம். காஷ்மீரி கஜல் வகையில் செய்துள்ள புதிய வெற்றிகரமான பரீட்சைகள் மூலம் மஹ்ஜுர், ஆஜாத், மாஸ்டர்ஜி ஆகியோரையும் மிஞ்சிவிட்டார் ராஹி. அப்பாடல்களில் புதிய சமுதாய–ராஜீய மணம் கமழ்கிறது. இக்பாலின் சைலியில் பல கஜல்களை கமில் இயற்றியுள்ளார். உள்ளக் கிடக்கையை மதி நுட்ப உரு வாக அவர் அமைத்துள்ளார். மாஸ் மலார் (மதுவின்

அலைகள்) என்பது நல்ல தரமான கவிதைகளின் தொகுப்பு.

புதுமைப் பொலிவு கொண்டிருப்பது கஜல் மட்டு மல்ல. காஷ்மீரி சந்தங்கள் வலுப்பெற்றுள்ளன. பழமையும், புதுமையும் சேர்ந்து பீடுநடை போடுகின்றன. வாக்யா, ருபாய, மஸ்நவி போன்ற பாடல் வகைகளுடன் கூட ஈரடிக் குறள்கள், நாலடிப் பாடல்கள் என்ற பதங்கள், தெம்மாங்கு நடைகள், 14 அடிப் பாடல்கள் போன்றவை வெற்றிகரமாக உருப் பெற்றுள்ளன. எதுகையற்ற வசன காவியத்தை சங்கீத நாடகமும், ரேடியோ நாடகங்களும் தாராளமாகப் பயன்படுத்துகின்றன. புதிய பாடல் வகைகள் இதன் விளைவாக உற்பத்தியாகின்றன. வசன காவிய நடை காஷ்மீரி மொழிக்கு அற்புதமான தகுதி வாய்ந்ததாகக் காணப் பெறுகிறது. உயிரெழுத்துக்களின் நெளிவும் சொல்லாட்சியின் செழுமையும் இதை வளப்படுத்தியுள்ளன.

சங்கீத நாடகமும் கவிதா நாடகமும் சமீப காலப் படைப்புக்கள். ஒரு பழங் கதையைச் சங்கீத நாடகமாக அமைத்துள்ளார் நாதிம். தேனீயும் தாழையும் மீண்டும் மீண்டும் இணைந்து வாழ்வதை அவர் பாடியுள்ளார். மாரிக் காலம் அவற்றைப் பிரித்து வைக்கிறது; அதன் பின்னர் வசந்தம் இணைத்து வைக்கிறது. நாச சக்திகளை படைப்புத் திறன் முறியடித்து இறுதி வெற்றியை அளித்தே தீரும் என்பதை உட்பொருளாக வைத்து இதைப் பாடுகின்றார் கவிஞர். விஷமிகள் தோல்வியுற்று காஷ்மீர் விடுதலை பெறும் என்பதை உட்பொருளாகக் கொண்டது இந்தக் கவிதை. பனிக் காலத்தை இறுதியாக வசந்தம் முறியடிப்பதை இவ்வாறு ரவரூபி என்ற பாட்டில் சித்திரிக்கிறார் கமில். நாதிம், ரோஷன் ஆகிய இருவரும் சேர்ந்து இயற்றியுள்ள ஹீமல் நாக ராய என்ற இசை நாடகம் ஒரு பழம் பாடலைத் தழுவியது. அரக்கனை இரக்க முள்ளவனாக மாற்றும் கருத்து அதில் பாடப் பெறுகிறது.

நாகரிக வழி முறைகள் இதற்குப் பயன்படவில்லை; உண்மையான அன்பே இந்த அற்புத மாறுதலைச் செய்ய வல்லது என்கிறார் கலைஞர்.

காஷ்மீரிக் கவிதா உலகில் இப்போது பிரபலமாகி வரும் போக்கு உட்பொருளைக் கூடமாகக் கூறும் கவிதா முறைதான். ஆனால் பழைய வழிக்கும் இதற்கும் ஒரு வித்தியாசம் உண்டு. வெளிப்படையாகக் காண்பிப்பதை விட மறைமுகமாகப் புலப்படுத்துவதுதான் இதில் மேலோங்கியிருப்பதைப் பார்க்கலாம். வழி வழி முறை பிரதானமாக இருக்கும் நிலையில் கவிதையானது ஏதோ இலக்கியச் செப்பிடு வித்தையாக மாறிவிடுகிறது. எனினும் மொத்தத்தில் புதிய காஷ்மீரி இலக்கியமானது இன்றைய நிகழ்ச்சிகளில், எதிர்காலத்தின் செழுமையில், உண்மையான அக்கறை கொண்டிருப்பதைக் காணலாம். இப்போதைய நிலவரம் அதில் மிகுந்து காணப்பெறுவது உண்மையே. இன்றைய பிரச்சினைகளும், பரிசுகளும், வியப்பும், ஆயாசமும், புன்சிரிப்பும், பெருமூச்சும், நம்பிக்கையும், ஆசாபங்கமும்—எல்லாமே அதில் உள்ளன. அதே சமயத்தில், எதிர்காலத்தின் சிறப்பிற்காக வேண்டி இப்போதைய தலைமுறை செய்யவேண்டிய பணியை அது அறிவுறுத்துகிறது.

காஷ்மீரி உரைநடை இப்போதுதான் பால பருவத்தில் இருக்கிறது. கண்முன் புலப்படும் வாழ்க்கையுடன் நெருங்கிய தொடர்பு அதற்கு உண்டு. லட்சிய நிலையில் உருவாக வேண்டிய புதிய அமைப்புக்காக நல்க வேண்டிய உழைப்பையும் அது சிறப்பாகக் கூறுகிறது. காஷ்மீரி மொழிப் பத்திரிகைகள் வளர்ச்சி காணுகையில், கட்டுரைகள், திறனாய்வு, புறக்கணிக்கப் பெற்ற மற்ற இலக்கிய வகைகள் ஆகிய எல்லாமே முன்னுக்கு வரும் என நம்புகிறோம். நிச்சயமற்ற ராஜீய நிலைமை, பொருளாதாரக் குழப்பம் ஆகியவற்றால் ஏற்பட்ட ஆசாபங்கம் அகன்றுவிட்டது. எனவே புதிய திருப்பு முகம் கண்டு

காஷ்மீரி இலக்கியமானது புதிய துறைகளில் தனது கலைப் பண்புகளுடன் திகழ்வது அசாத்தியமல்ல. வாழ்க்கையில் கலையானது முக்கியமான சமுதாய சக்தி என்ற பிரக்ஞை வரவர அதிகமாகப் புலனாகிறது. இந்த உணர்வானது இனி திட்டவட்டமான சாதனைகளாக உருப்பெற வேண்டிய காலம் வந்துவிட்டது. பொருளும் வடிவமும் இடைவிடாது புதுமையுடன் திகழ வேண்டுமென்ற வெறி அடங்க, இனி இசைவான புது முயற்சிகள் மூலம் மனமறிந்து புது வழி வகைகளை வகுக்கும் சக்தி வளரவேண்டும். இன்றைய காஷ்மீரி இலக்கியக் கலைஞர்களின் தலைமுறை செய்யவேண்டிய பணி இது.

## SELECT KASHMIRI BIBLIOGRAPHY

*Essays on Kashmiri Grammar.*
By G. R. Grierson ; Thacker Spink & Co., Calcutta.

*Dictionary of the Kashmiri Language.*
By G. R. Grierson ; London.

*Hatim's Tales.*
Edited by Stein & Grierson ; London.

*Kashmir Sabdamrtam.*
By Isvara Kaul ; A. S. B., Calcutta.

*Dictionary of Kashmiri Proverbs.*
By J. H. Knowles ; London.

*Lalla Vakyani.*
Edited by G. R. Grierson ; London.

*Siva-parinaya.*
By Krishna Razdan, Edited by G. R. Grierson ; A. S. B., Calcutta.

*Ramavataracarita.*
By Prakash Ṛam. Edited by G. R. Grierson ; A. S. B., Calcutta.

*Paramananda-Sukti-Sara.*
Edited by Masterjee, Srinagar.

*Kashmiri Lyrics.*
Compiled and translated by J. L. Kaul, Srinagar.

*Linguistic Survey of India.*
By G. A. Grierson, Vol. VIII, pt. 2, pp. 233–341.

# குஜராத்தி இலக்கியம்

மன்ஷுக்லால் ஜவேரி

**முகவுரை**

குஜராத் மக்களது மொழி குஜராத்தி. குஜராத் மேலைக் கடற்கரையில் உள்ள பிரதேசம். சமீபகாலம் வரை குஜராத் என்று அழைக்கப்பட்டு வந்ததும், சௌராஷ்டிரமும், கட்சும் இதில் அடங்கும். இதன் மொத்த ஜனத்தொகை 150 லட்சம்.

சௌரசேனி பிராக்ருதம், கௌர்ஜர அபபிரம்சம் என்ற இரண்டு இடைவழி கட்டங்கள் மூலம் ஸம்ஸ்கிருதத்திலிருந்து கிளைத்தது குஜராத்தி மொழி. அதற்கு ஒரு தெளிவான தனித்தன்மை ஏற்படத் தொடங்கியது கி. பி. 1200-ம் ஆண்டில். ஆனால் குஜரத் என்று மாகாணப் பெயர் ஏற்பட்ட பிறகுதான் 17-ம் நூற்றாண்டில் குஜராத்தி என்று குறிப்பாக மொழியும் வழங்கலாயிற்று.

நவீன குஜராத்தி இலக்கியத்தின் தந்தை என்று கருதப்படுபவர் நர்மத் என்கிற கவி நர்மதா சங்கர். நர்மதாவுக்கு முன்னால் குஜராத்தி இலக்கியம் இருக்கத்தான் செய்தது. குஜராத்தியில், ஆதிகவி என்று கருதப்பெறும் நரசிம்ம மஹேதா காலத்திற்கு முன்னமேயே குஜராத்தி இலக்கியம் இருந்தது. கி. பி. 1414 முதல் 1852 வரை நான்கு நூற்றாண்டுகளில் ஏராளமான கவிஞர்கள் குஜராத்தில் தோன்றினார்கள். அவர்களில் குறைந்தது அறுவர் முன்னணி குஜராத்தி இலக்கிய வல்லுனர்கள் என்று எக்காலத்திலும் போற்றப் பெறுவர்.

பதினைந்தாம் நூற்றாண்டில் நரசிம்ம மஹேதா, மீராபாய் இருவரும் குஜராத்தி பக்த கவிகளில் மிகச் சிறந்தவர்களாகத் திகழ்ந்தனர். பதினேழாம் நூற்றாண்டில் அக்கோ, பிரேமானந்தா, சாமள் என்ற மூன்று மேதைகள் தோன்றினர். அக்கோ ஒரு பொற்கொல்லர்; நையாண்டி இலக்கியப் படைப்பில் சமர்த்தர்; கடுமையாகக் குறை கூறுவார்; அச்சமின்றி சந்திக்கு இழுப்பார். பிரேமானந்தர் 'ஆக்ஞான' கவிஞர். பல்வேறு பிரசங்கங்களைக் குஜராத்தி கதையில் இழைத்து வழங்குவதில் இணையற்று இருந்தார். பழகிப்போன பாதையை விட்டு விலகி, காதலும் வீரமும் நிறைந்த கற்பனைக் கவிதைத் துறையில் இறங்கிய திறமையான முதல் எழுத்தாளர் சாமள். பதினெட்டாம் நூற்றாண்டின் இரண்டாவது பகுதியில் இனிமையான இசைக் கவிஞர் தயாராம் இருந்தார். குஜராத்தின் அமரர்களான சிறு கவிதை புலவர்களில் 'கர்பிகள்' என்ற பாடல் வகைகளை இயற்றி அவர் புகழடைந்தார். இந்த முதல் அறுவர்கள் தவிர, இடைக்கால குஜராத்தி கவிஞர்களில், பலஞ சரளமான மொழி பெயர்ப்பு சம்பிரதாயத்தைத் தோற்றுவித்தார். கன்ஹட-தே-பிரபந்த என்ற சரித்திரப் படைப்பில் வீர ரசத்தை பத்மநாபர் பிரகாசப்படுத்தியுள்ளார். பாகவதப் புராண வழி முறையில் ஸ்ரீ கிருஷ்ணனது சாகஸங்களை பீமன் பாடுவதாக அது அமைந்துள்ளது. தீர, போஜ ஆகிய இருவரும் இவ்வுலக வாழ்க்கையின் பயனற்ற தன்மையை வற்புறுத்துகிறார்கள். தெய்வத் தன்மையையும் மோட்சத்தையும் அடைவதற்கு மனித சரீரந்தான் சாதனம் என்று முக்கியமாக வலியுறுத்திக் கூறுகிறவர்கள் ஸ்வாமி நாராயண பிரிவைச் சேர்ந்த கவிஞர்கள்.

இந்த நான்கு நெடு நூற்றாண்டுகளில் தோன்றிய கவிதையானது இவ்வுலகின் பிரத்தியட்சத் தொடர்பு இல்லாததாகவும், வாழ்க்கையின் வரம்பற்ற எல்லைகளைத் தன்னுள் அடக்கிக் கொள்ளாததாகவும் இருந்தது.

காதல் பாடப்பெறுகிறது. ஆனால் ராதைக்கும் கிருஷ்ண னுக்கும் உள்ள காதலே மட்டுமே காணலாம். குறிப்பிட்ட வகையைச் சேர்ந்தது என்று இல்லாத கவிதா சிருஷ்டி, ஆழம் இல்லாததாகவும் விசித்திரமாகவும் காணப்படு கிறது. பழைய சம்பிரதாயத்தில் ஞானம், பக்தி, வைராக்கியம் என்ற வழிகளில் சென்று உறைந்துபோய் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிக்குள் அது ஜீவ களையற்றதாகி விடுகிறது.

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிக்குள் குஜராத் தின் வாழ்க்கையும் தேக்கமுற்று பொலிவிழந்து விட்டது. 1899-ம் ஆண்டில் சூரத் நவாபு காலமானார். அதே ஆண்டில் சரங்பூரில் முதல் மிஷனரிப் பள்ளிக்கூடம் தொடங்கப் பெற்றது. 1818 முதல் 1857 வரை பிரிட்டிஷ் ஆதிக்கம் இந்தியாவில் ஆழ வேர்விட்டு உறுதி அடைந்து வந்தது.

### மேலை மோதல்

பிரிட்டிஷ் ஆட்சியுடன்கூட சக்தி வாய்ந்த மேலை நாகரிக விசையும், கூட வந்த விஞ்ஞானக் கண்டு பிடிப்புக்களும், தூரத்தைக் குறைத்து மக்களது மனதின் எல்லைகளை விரிவாக்கின. உள்நாட்டு ராஜீயக் கொந் தளிப்பு ஒருவாறு முடிவுற்றது. குஜராத்தி இளைஞர்கள் சமூகச் சீர்திருத்தப் பணிகளில் குதித்தனர். எழுத்தறி வின்மை, மூட நம்பிக்கை, வாத விவாதம், சிறு பிராய விதவைகள், வயது வேற்றுமை மிகுதியாகவுள்ள திரு மணங்கள் போன்றவைகளை எதிர்த்து அவர்கள் மும்முர மாக கிளர்ச்சி செய்தனர். மேலை நாடுகள்தாம் லட்சிய மாகப் பின்பற்றவேண்டியவையாகவும் அவர்களால் கரு தப்பட்டு வந்தன.

இக்காலத்து இலக்கிய கர்த்தர்களுக்கு எடுத்துக் காட்டாக விளங்குபவர் நர்மத் (1833-1886). இலக்கியத் தில் தன்மயமான விஷயங்களை வைத்து எழுதும் போக்கு

முதல் தடவையாக நிர்ப்பந்தமின்றி வலுவடைந்தது. சரித்திரக் கற்பனைக் கதைகள், ஆசார சீர்திருத்த சமூகக் கதைகள், வேறு உருவம் தரக்கூடிய உருவகக் கதைகள், கட்டுரைகள், வாழ்க்கை வரலாறுகள், சுயசரிதை, நாடகம், வசனத்தில் இலக்கிய விமரிசனம் முதலியன தோன்றி வளர்ந்தன.

நர்மத் 1886-ல் காலமானர். அதற்கு அடுத்த இலக்கியக் காலத்தை கோவர்த்தன ராயின் காலம் (1885-1907) என்பர். இக்காலத்தில்தான் கீழ்த்திசை, மேற்றிசை பண்பாடுகளில் மிகச் சிறந்தனவற்றை இணைக்கும் முயற்சி உருப் பெற்றது. அந்த இணைப்பு வெறும் பிணைப்பாக இராமல் அடிப்படையில் கீழ்த்திசைப் பண்பாடாக இருந்தது. இன்றியமையாத அம்சங்கள் மட்டுமே மேலை நாடுகளிலிருந்து சேர்த்துக்கொள்ளப் பட்டன. இது ஆழ்ந்த சிந்தனையாளர் மிகுதியாக இருந்த காலம். மனதை சமநிலையில் வைத்துக்கொண்டு பெரிய விஷயங்களை ஆராய்ந்து பார்ப்பது அதன் குறிப்பிடத்தக்க தன்மைகளில் ஒன்று. கேள்வி போடாமல் நம்புவதும் வெறும் சம்பிரதாயமும் கூடாது. காரிய காரண வழிதான் மனிதனது சிந்தனையையும் செயலையும் ஊக்குவிக்க வேண்டுமென்று அவர்கள் நம்பினர். தமது காலத்து அடிப்படைப் பிரச்னைகளை அவர்கள் அலசிப் பார்த்து விவாதித்தது இந்த வகையில்தான். பழமை விரும்பிகளுக்கு அதிர்ச்சியையோ அருவறுப்பையோ தரவில்லை. இளைஞர்களை விரட்டி அடிக்க முற்படவுமில்லை மையமான ஒரு வழியை அவர்கள் பின்பற்றினர்.

1886 முதல் 1914 வரை உள்ள காலத்தில் வசனத்தில் சிறு கதையும் கவிதைத் துறையில் ''கண்ட-காவ்யம்'' என்ற வகையும் 14 வரி உள்ள 'சானட்' பாடல் வகையும் இரங்கற்பாக்களும் சகஜமாயின. நான்கு பாகங்கள் கொண்ட சரஸ்வதி சந்திரா என்ற நாவல் வெளியாயிற்று. குஜராத்தி மொழியில் மிக உன்னதமான இலக்கிய

சாதனை என்ற புகழ் அதற்கு உண்டு. குஜராத்தியில் ஒரே ஒரு ஹாஸ்ய நாவல் இருக்கின்றது. பத்ரம் பத்ர, என்பது அதன் பெயர். அது வரையப் பெற்றது இக் காலத்தில். கட்டுரை, நாடகம், உரையாடல், கடிதம் ஆகியவையும், வசனத்தில் இலக்கியப் படைப்புகளாக வளர்ச்சிக் கண்டது அப்போதுதான். ஸம்ஸ்கிருதத் திலும் ஆங்கிலத்திலும் உள்ள உயர்ந்த கிரந்தங்களை நல்லபடி மொழிபெயர்த்து குஜராத்தியை வளப்படுத்தும் பணியும் அப்போது நடைபெற்றது. குஜராத் நாடகத் துறையில் விருத்தி அடைந்து உயர்நிலை எய்திய தும் அப்போதுதான். நானுலால், காந்த், கலாபீ, பலவந்தராய், நரசிம்மராவ் ஆகியோரது கவிதைகள் பீடு நடை போட்டதும் அப்பொழுதே. குஜராத்தில் எதுகை யில்லாத கவிதைகளை இயற்றும் பொது பரீட்சைகளும் இக்காலத்தில் தொடங்கின. மொழி, சரித்திர ஆராய்ச்சி கள், இலக்கணம், யாப்பிலக்கணம், இலக்கிய விமரிசனம் முதலிய துறைகளும் வளம் பெற்றன. மணிலால் துவிவேதி, ஆனந்த சங்கர், கேசவலால் துருவா ஆகியோர் இத்துறைகளில் குறிப்பிடத் தக்கவர்கள்.

### காந்தீய சகாப்தம்

குஜராத்தி இலக்கியத்தில் மிக முக்கியமான திருப்பு முகம் தோன்றியது 1914-ல். அவ்வாண்டில்தான் மகாத்மா காந்தி ஆப்பிரிக்காவிலிருந்து திரும்பி வந்தார். சில மாதங்களில் இந்திய நாட்டின் சூழ்நிலையை பிரமிக்கத் தக்க வகையில் அவர் மாற்றிவிட்டார். காந்திஜியின் பணி, ஹோம்ரூல் இயக்கம், ஜாலியன்வாலா சம்பவம், முதல் உலக யுத்தம், அதன் பின்—விளைவுகள், வெளி உலகில் ரஷியப் புர்ட்சி ஆகியவை குஜராத்தி வாழ்வில் உள்ளக்கிளர்ச்சி—மிகுதியை விளைவித்தன. விடுதலை உணர்ச்சி குஜராத் மக்களது இதயத்தில் ஊறிப் போய் விட்டது. ராஜீயத் துறையில் மட்டுமின்றி, சமயம்,

பொருளாதாரம், சமூகம், இலக்கியம் ஆகிய துறைகளிலும் இது மலர்ச்சி கண்டது. ஒரு புத்துணர்வு பெற்று குஜராத் சோலையுடன் விளங்கியது.

பல முக்கியமான இலக்கிய கர்த்தாக்களின் பிறந்த தின, முக்தி தின விழாக்கள் கொண்டாடப் பெறலாயின. இலக்கிய உரைகள் நிகழ்த்தப் பெற்றன. சரத் உத்சவங்கள், வசந்தோத்சவங்கள், கலைக் கண்காட்சிகள், உரைக் கோவைகள், நாட்டுப் பாடல்களையும் நாடோடிப் பாடல்களையும் கேட்பதற்குக் கூட்டங்கள் கூடுவது முதலியன எங்கும் காணப்பட்டன. அமெச்சூர் நாடகங்களும் இக்காலத்தில் தோன்றலாயின.

காந்தீய சகாப்தத்தின் எழுத்தாளன் வாழ்க்கையைப் பல்வேறு கோணங்களிலிருந்து கண்டான். பொருளாதார ஏற்றத் தாழ்வுகளின் விளைவாகத் தோன்றிய சகிக்க இயலாத நிலைமை அவன் கண்களை உறுத்துகின்றது. கீழ் நிலையில் உள்ளவர்களுக்குச் சேவைபுரிய வேண்டுமென்ற காந்திஜியின் திருவாக்கால் ஊக்குவிக்கப்பட்டு, கிராம முன்னேற்றத்துக்காகவும், தீண்டாமையை அகற்றவும் எழுத்தாளன் பாடுபடுகிறான். செல்வந்தர்களைப் பற்றியே எழுதிவந்ததை மாற்றிக் கொண்டு கிராமங்களில் வசிக்கும் எழுத்தறிவில்லாத ஏழைகளைப் பற்றியும் எழுதுகின்றான்.

காந்தீய சகாப்தத்தில் வசனத்தை மிக ஜாக்கிரதையாகவே எழுத்தாளர்கள் கையாண்டனர். கலையம்சம் பழுதுபடலாகாது என்பதில் விசேஷ அக்கறை அவர்களுக்கு இருந்தது. இக்காலத்து நாவல்களில் கதை அம்சமும் நடையும் முன்னிருந்தவைகளை விட வேறுபாடு உடையனவாக இருந்தன. சிறு கதை இலக்கியம் என்று தனியாக ஒன்று உருவடைந்தது இப்போதுதான். இலகுவான கட்டுரைகள், ஓரங்க நாடகங்கள், தனியுரை என்ற நாடகப் பாணிக் குறிப்பேடுகள் தோன்றின. நாட்டுப் பாடல், கிராமிய இலக்கியம், குழந்தை இலக்கியம், விஞ்ஞானம், பொருளாதாரம், விவசாயம் முதலியவை பற்றிய

படைப்புக்கள் கணிசமாகப் பெருகின. எழுதும் விஷயங்கள் விரிவாயின. கையாண்ட நடையும் தொகுத்தெழுதும் முறையும் அடியோடு மாறுதலடைந்தன. அதற்கு முன்னிருந்த கோவர்த்தன காலத்து இலக்கியத்தின் நடை, அலங்காரம் மிகுந்ததாய் இருந்தது, மேல் அந்தஸ்துக்காரர்களான புலவர்களுக்கென்று வரையப் பெற்றது. காந்தீய சகாப்தத்தில் மிகைப்படுத்திக் கூறலும் சொல்லாட்சி மிகுதியும் இல்லாமலே மொழி கையாளப்பெற்றது. எளிய, நேரிடையான, இயற்கையான எனினும் பொருள் பேதங்களை துல்லியமாக புலப்படுத்தக் கூடியதான, ஒரு வசனநடை உருவாயிற்று. மேல்வகுப்புகளுக்கு மட்டுமன்றி, பாமர மக்களுக்கும் புரிய வேண்டுமென்ற நோக்கத்துடன் காந்தீய சகாப்த இலக்கியம் வளர்ச்சியடைந்தது.

காவியத் துறையில் ராஸ், கர்பீ, கண்ட காவ்ய, பதினுலு வரிப் பாடல், நையாண்டி, இரங்கற்பா, கவிதையில் உரையாடல், முக்தக் ஆகியவை இக்காலத்தில் ஜனித்த அல்லது முழுமை கண்ட இலக்கிய வகைகள். 'ஆக்யான' சைலியில் எழுதப்பெற்ற நையாண்டிப் பாடல்கள் குறிப்பிடத்தக்கவை.

காந்தீய சகாப்தக் கவிஞன் காதல், இயற்கை, தெய்வ விஷயமாக மட்டும் பாடாமல், பிரபஞ்ச காதல், மனித வர்க்க தோழமை ஆகியவற்றைப் பாடினுன். மரணம்கூட வாழ்க்கையில் சுவையான ஒரு மூலைதான் என்று காட்டினுர்கள். அழகைப் போலவே துக்கமும் மிடிமையும் வாழ்க்கை நியதிகளில் சேர்ந்தவை என்பதை அவன் கண்டான்.

கவிதைக்குத் தகுதியான விஷயங்கள் மேகம், நிலா, மலைகள், விண்மீன்கள், தாமரை, குயில் போன்ற அழகான உயரிய விஷயங்கள்தாம் என்று 1914 வரை கருதப்பட்டு வந்தது. இதன் நேர்-எதிர் நிலவரமாக, பன்றி, குப்பைக்காரன், காகிதப்பூ, கக்கூசில் உள்ள ஈ, சாணி

மேடு, வீசி எறிந்த மாங்கொட்டை, ஜோடு மினு மினுக்கிப் பையன் போன்ற விஷயங்களைப் பற்றிக் கவி பாடினார்கள். கவிதை பெருமையும் கம்பீரமும் அடைவது விஷயங் களைப் பொருத்தது அல்ல. தான் எடுத்துக் கொள்ளும் பொருள் விஷயமாக கவிஞன் காண்பிக்கும் மனப் பான்மையையும் அவன் அதை அளிக்கும் விதத்தையும் பொருத்தவை. சில வட்டாரங்களில் புதுமை என் பதற்காக இந்தப் போக்கிலே திளைத்தார்கள். மனிதனது அனுதாபம் எல்லையற்றது, வரம்பு காண இயலாதது, விரிந்துகொண்டே போவது. எனவே இந்தப் போக்கு ஓரளவு தவிர்க்க முடியாததுதான். நேருக்கு நேரான பிரத்தியட்ச சித்திரமும், சில சமயம் அசங்கியமும் ஆபாசமும் கூட இக்காலத்து இலக்கியத்தில் காணப் பெறலாயின.

**சுதந்திரமும் பிறகும்**

இந்தியாவின் நீண்ட, ஏற்றத்தாழ்வுகள் நிறைந்த, சரித்திரத்தில் புதிய, கீர்த்திவாய்ந்த அத்தியாயம் 1947-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15-ம் தேதி தொடங்கியது. ஆனால் இலக்கியம் சம்பந்தப்பட்ட வரை சுதந்திரத்திற்கு முந்திய இலக்கியம், பிந்திய இலக்கியம் என்று பாகு படுத்தி பின்னால் வந்தவர்கள் ஒரு புது யுகத்தைப் படைத் திருக்கிறார்கள் என்று கூறுவது சாத்தியமல்ல. 1947-க்கு முன் பிரபலமாயிருந்த கவிஞர்கள், நாவலாசிரியர்கள், சிறு கதை எழுத்தாளர்கள், நாடகாசிரியர்கள், கட்டுரை யாளர்தாம் இன்றும் சுறுசுறுப்பாக எழுதி வருகிறார்கள், இலக்கியத் துறையில் ஆதிக்கம் வகிக்கிறார்கள்.

சுதந்திரத்திற்கு முந்திய காலத்தில் விடுதலை வேட்கைதான் கவிதையில் பிரதான அம்சமாக இருந்தது. குஜராத்திக் கவிஞன் அதில் அடியோடு ஆழ்ந்து விட்டான். விடுதலையே அவனது கவியின் மூச்சாக இருந்தது. கவிதைகள், இன்னிசைப் பாடல்கள், கதைப்

பாடல்கள், நீண்ட வரலாற்றுக் கவிதைகள், சிந்தனைப் பாடல்கள் ஆகிய எல்லாமே ஏதாவது ஒரு வகையில் விடுதலை உணர்ச்சி இழைக்கப் பெற்றனவாகவே அமைந் தன. அவன் கையாண்ட சரித்திர, புராண விஷயங்கள், சம்பவங்கள் அவனது ஆசாபாசங்களை பிரதிபலிப்பன வாகவே இருந்தன. அவனுக்குத் தெளிவான லட்சியங் கள் இருந்தன. விடுதலையை நோக்கிய ஒரு வழியில் மனிதனது சக்தியும் ஈடுபாடு கொள்ள வேண்டுமென்று நினைத்தான் அவன்.

தேச விடுதலைக்குப் பிறகு விடுதலை வேட்கைக்கு இடம் இல்லை. வேறு தெள்ளத் தெளிவான லக்ஷியம் எதுவும் அவனது கவனம் முழுவதையும் இப்போது ஈர்க்க வில்லை. நாட்டில் தேசியச் சீரமைப்புக்கான பெரிய இயக் கங்கள் நடைபெறுகின்றன. எனினும் எக்காரணத்தாலோ குறிப்பிடத்தக்கவாறு எழுத்தாளனை அவை உற்சாகப் படுத்தவில்லை. பொதுப்படையான இந்த அசிரத்தைக்குக் காரணங்கள் எவையென்று ஆராய இடம் இதுவல்ல. ஆனால் இருபத்து ஐந்து ஆண்டுகளுக்கு முன் அந்நிய ஆதிக்கத்தினின்று நாட்டை விடுவிக்குமாறு சுதந்திர கோஷம் செய்த கவிகளின் தீவிரம், உத்வேகத்துடன் இப் போதைய இயக்கங்களை அவன் அணுகவில்லை.

விஷயம் சம்பந்தப்பட்ட வரையில் குஜராத்தி கவிதை உலகம் பூராவையுமே தன்னுள் கொண்டதாக இருக் கிறது. மிகச் சிறந்த உயர்ந்த அம்சங்களை எடுத்துக் கொண்டு அழகுணர்ச்சியை அதில் இரண்டற வைத்துக் காண்பிக்க முயலுகின்றது. காந்தீய சகாப்த குஜராத்தி கவிஞனும் சரி, இப்போதைய கவிஞனும் சரி, வாழ்க்கை யின் எல்லா விஷயங்களுமே சம அளவில் புனிதமானவை, கண்யமாகக் கருதப்பட வேண்டியவை என்பதை உணர்ந்து இருக்கிறான்.

இருபத்து ஐந்து ஆண்டுகளுக்கு முன் கவிதைக்கும் இசைக்கும் இடையே இருந்த உறவு முறை தறித்துப்

போகும் போலிருந்தது. கவிதையின் மிடுக்கையும் ஜீவ சக்தியையும் இசையானது போஷிக்கவில்லையென்று கருதியோர் உண்டு. ஆனால் இது வெறும் பிரமைதான் என்பதை அதிருஷ்ட வசமாக கவிஞர்கள் விரைவில் கண்டு கொண்டனர். கலப்பற்ற ஸம்ஸ்கிருத சந்தங்களில் அழகான பாடல்களைத் தொடர்ந்து எழுதலாயினர். தமது இசைக் கவிதைகளில் இக்காலத்து குஜராத் எழுத்தாளர் முன்னைவிட அதிக வெற்றி கண்டிருக்கிறார்கள் என்று சொல்ல வேண்டும். இக்காலத்து குஜராத் கவிதை பழைய ஸம்ஸ்கிருத சந்தங்களைப் போல இல்லாமல் இசை வடிவங்களை அதிகமாக நாடுவது போல் தோன்றுகிறது.

இந்தச் சந்தர்ப்பங்களின் கீழ் நீளமான கதைப் பாடல்களோ, சிந்தனைக் கவிதையோ தகுதியானவை யென்று கவிஞன் கருதுவது சாத்தியமல்ல. ஆனால் ஒரு பாட்டானது மிகச் சிறப்பாக அமைந்தபோதிலும் ஒரு பாவம் அல்லது உணர்ச்சியைத்தான் வெளிப்படுத்த வல்லது. துல்லியமான, உருவகமற்ற சிந்தனையை எடுத்துரைக்க அது ஏற்ற சாதனமாக அமைவது சுலபமல்ல. இதிகாச ரீதியில் கவிதை எழுதுவதை இப்போதைக்குக் குஜராத்திக் கவிஞன் விட்டு விட்டதாகவே தோன்றுகிறது. எதுகையற்ற சந்த வகை இல்லாதது தான் இதற்கு காரணமென்று கூறுவதை நாம் ஒப்புக் கொள்ள இயலாது. இதிகாசம் புனையக் கூடிய உண்மையான கவிதா மேதை நம்மிடையே இன்னும் தோன்றவில்லை என்ற உண்மையை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

பழைய தலைமுறைக் கவிஞர்களில் உமாசங்கர ஜோஷி, சுந்தரம், சுந்தர்ஜி பேடாயி ஆகிய மூவரும் இன்னும் கவிதைகளைப் புனைகின்றனர். இத்தலைமுறை எழுத்தாளர்களில் எல்லாத் துறைகளிலும் எழுதிப் புகழ் பெற்றவர்களில் உமாசங்கர் முதன்மையானவர். அவரது பாடல்களின் ஐந்தாவது தொகுப்பாகிய வசந்த வருஷ

சில மாதங்களுக்கு முன் வெளியாயிற்று. இயற்கையை பல் வேறு பாவங்களில் அவர் வைத்துப் பாடியிருக்கிருர். அதன் சுகதுக்கங்களை இசை மெட்டுக்களுடன் அற்புத மாக வழங்கியுள்ளார். சுந்தரம் இயற்றிய யாத்திரை வெளியாகி சில வருஷங்களாகின்றது. ஆத்மீகத் துறை யில் அவரது வளர்ச்சியை கலா ரசனையுடன்கூட இதில் காணலாம். வசுதா (பூமி) என்பதை இயற்றிய சுந்தரம் தரையுடன் மட்டும் நில்லாமல் ஆழ்ந்த தெய்வானுபவத்தை சொந்தமாகச் சுவைத்து அளித்திருக்கிருர். பூமிதேவி யின் மனேகரமான அழகைக் கண்டவுடனேயே இசையாக உருகுகின்றது உமாசங்கரின் உள்ளம். அதன் உள் ளழகைக் கண்டவுடன் தத்துவார்த்த வானில் சிவ்வென்று பறக்கிருர் சுந்தரம். இருவரும் நாடுவது இறுதியில் உண்மையாகிய ஈசனைத்தான். ஒருவர் அதை அழகு வடிவிலும் மற்ருெருவர் யோகத்தின் மூலமும் அடையப் பார்க்கிருர்கள். பேடாயி எழுதியுள்ள விசேஷ அஞ்சலி என்ற தொகுப்பில் காம்பீர்யமும் அடக்கமும் மிகுதியாக உள்ளன. கவிஞனின் உள்ளக் கிடக்கையை அது தெளி வாகப் பிரதிபலிக்கிறது. அத்தலைமுறையினரான கவிஞர் களில் இன்னும் குறிப்பிட வேண்டியவர்கள் சிநேகரச்மி, பூஜா லால், கர்ஸந்தாஸ் மாணிக், கிருஷ்ணலால் ஸ்ரீதரணி ஆகியோர்.

புதிய தலைமுறையைச் சேர்ந்த கவிஞர்களில் ராஜேந்திர ஷா, நிரஞ்சன பகத், பால முகுந்த தவே, வேணிபாய் புரோகித், உஷ்ணஸ் ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்கள். தெளிவும் கற்பனைச் செழுமையும் ராஜேந்திர ரிடம் காணலாம். சந்தச் சிறப்பு, தைர்யமான புதிய பாதைகளில் சஞ்சரிக்கும் வழியும் விஷயமும் நிரஞ்சன னிடம் தென்படுகின்றன. பாலமுகுந்தின் இனிமை, வேணிபாயின் இசையமுதம், உஷ்ணஸ் சித்திரப் படைப்புக்கள் விசேஷமானவை. மகரந்த தவே, பிரஜா ராம், ஜயந்த் பாக், பிருகினி தாகூர், பிரியகாந்த

மணியார் ஆகியோரும் இக்காலக் கவிகளில் புகழ்பெற்ற வேறு சிலர்.

இக்காலத்து இளம் குஜராத்திக் கவிஞனைப் பூராவாக முழு மனதுடன் ஆகர்ஷிக்கும், கவர்ச்சிக்கும் கவனம் வேறு இல்லாததால் மீண்டும் அவன் தொன்மையான விஷயங்களாகிய காதலையும், இயற்கையையும் பற்றியுமே, பாடுகின்றான். அவனது காதல், இளமையின் தெம்புடன், உணர்ச்சி மிகுதியுடன், இனிமையுடன், புது மலர்ச்சி யுடன் காணப்படுகிறது. காதல் அவலத்தை அவன் இன்னும் அறிய மாட்டான். நாடியதை அடையாமல் போவதும் பிறவகை அனுபவங்கள் இல்லாததுமான சித்திரமது. மனித உள்ளத்தின் உட்புற ஆழங்களை அது இன்னும் புகுந்து அறியாதது.

இக்காலத்துக் கவிஞன் சந்தம், சொல்லலங்காரம் ஆகிய இரண்டிலும் நல்ல திறமையைக் காண்பிக்கிறான். அவனது சொல்லாட்சியும் செழுமையாக இருக்கிறது. எதுகை அமைப்பில் அனுபவ முதிர்ச்சி தென்படுகிறது. ஆனால் ஸம்ஸ்கிருத சந்தங்களை உபயோகிப்பதில் சில சமயம் தட்டுப்படுகிறது. வினைச் சொற்கள் முற்றுப் பெறாமல் உள்ளன. சில சமயம் சிரிக்கச் சிரிக்க எழுது கிறான். அப்போது வெறும் சொற்கோவையாகப் பாடல் அமைந்துவிடுகின்றது. சில சமயம் சொல்நயம் தவிர வேறு எதுவும் தென்படுவதில்லை. அனுபவ முதிர்ச்சி காணாமல் கவிதா திருஷ்டி திடீரென நின்று விடுவதுண்டு. முக்தக் சிறு செய்யுள் அமைப்பாகவே நின்றுவிடுகிறது. நீளமும், நல்ல கட்டுக் கோப்பும், சிந்தனைச் சிறப்பும், கற்பனையும், தூரதிருஷ்டியும் கூடிய நீண்ட கவிதைகளை இலக்கியத்தில் அன்றாடம் காண முடியாது. எனவே அவை இன்றைய குஜராத்திக் கவிதையில் அரிதாக இருப் பதைக் குறித்து கவலைப்பட வேண்டியதில்லை. உண் மையாக பாடக்கூடிய, தெளிவான சிறிய சிறிய கவிதைகள் தாம் இன்று மிகுதியாகக் காணப்படுபவை. ஆழம்,

நீளம், பரிமாணம் ஆகியவை இனிமேல்தான் ஏற்பட வேண்டும். தத்துவ தரிசனம் சம்பந்தப்பட்ட வரை புதிதாக எதையும் இத்தலைமுறை சொல்லவில்லை.

இன்று வளர்ச்சி கண்டு வரும் பல்வேறு கவிதா வடிவங்களில் நாட்டிய ரூபக் என்பது விசேஷமாகக் குறிப்பிட வேண்டிய ஒன்று. அது முழு நாடகமும் அல்ல, நீண்ட கதைப் பாடலும் அல்ல. பொருள் படைத்ததும் வாழ்க்கையின் மர்மங்களை உணர்த்துவதுமான ஒரு நாடக சம்பவத்தை எடுத்துக் கொண்டு பாடலில் உரையாடுவதாக இதை அமைக்கிறார்கள். உமாசங்கர் ஜோஷி 'பிராசீனம்' என்ற தமது நூலில் இத்தகைய மிக அழகான சில சிருஷ்டிகளை அளித்துள்ளார்.

நிருத்ய ரூபக் என்ற நாட்டிய நடனத்தை விஷயமாகக் கொண்டு சிந்துக்களை அமைப்பது குஜராத்தில் பழக்கத்திலுள்ள முறை. அது சமீபத்தில்தான் பிரபலமாகி இருக்கின்றது. தனித்தனிப் பாடல்களை வசனக் கோவைகளால் இணைக்கிறார்கள். பாடல்கள் அனுஷ்டுப் சந்தத்தில் இருக்கின்றன. புராணங்கள், வரலாறு, பழங்கதை ஆகியவைதாம் சாதாரணமாக இவற்றிற்கு விஷயங்களை அளிப்பவை. கதையின் உணர்ச்சியில் முக்கியமான கட்டங்களை அல்லது வெவ்வேறு பாவங்களை வெளிப்படுத்த பாடல்கள் பயன்படுகின்றன. இந்த நாட்டுப் பாடல் முறைக் கவிதை மேம்பாடுடையது அல்ல. சங்கீதமும் நடிகர்களின் தோற்றமும் இசைவான அழகு உணர்ச்சியுடன் தென்பட வேண்டும். கலை வளர்ச்சி சங்கங்களும் கல்வி நிலையங்களும் தமது ஆண்டு விழாக்களில் நிருத்ய ரூபகத்தைக் கையாள்வது இப்போது மோஸ்தராய் விட்டது. பொதுமக்களின் பொழுதுபோக்குக்கு வழி செய்வதுதான் இவற்றின் உடனடியான லட்சியம். எனவே நாட்டியத்தையோ, இசையையோ, கலப்பற்ற கர்நாடகப் பாணியில் அவை காண்பிப்பதில்லை.

கவி சம்மேளனங்கள், முஷைராக்கள் (கவிகள் தமது

படைப்புக்களை எடுத்துச் சொல்லும் இலக்கியக் கூட்டங்கள்), இன்னும் பிரபலமாக இருந்து வருகின்றன. புராதன ஸம்ஸ்கிருத சந்தங்களில் அல்லது மாத்திரை யுடன் கூடிய விருத்தங்களில் பாடல்களை இயற்றி கவி சம்மேளனங்களில் சமர்ப்பிக்கிறார்கள். உருது கஜல் களின் பாணியில் இயற்றப்பெறும் கவிதைகள் முஷைராக் களில் இடம் பெறுகின்றன. பொதுமக்களுக்கு கவிதை விஷயத்தில் ஒரு வகையான அக்கறையை இவை உண்டு பண்ணுகின்றன. ஆனால் உணர்ந்து சுவைக்கக்கூடிய உயர்ந்த கவிதை வகையை அவை அதிகப்படுத்து கின்றனவா என்பது சந்தேகமே. உடனடியாகக் கேட்டு ரசிப்பதே அவற்றின் நோக்கம். எனவே துல்லியமான சொற்சித்திர வடிவங்கள் உணர்ச்சிகளையோ சிந்தனை களையோ வெளிப்படுத்தக்கூடியவாறு அவற்றில் இடம் பெறுவது சுலபமல்ல. சிரத்தையுடன், மன ஒருமையுடன் ஆழ்ந்து கவனம் செலுத்தினால்தான் அவற்றைச் சரிவரப் புரிந்துகொள்ள இயலும். இத்தகைய கவிதைகளின் வெற்றி சொல்பவனின் திறமையையும், சொல்லாட்சியின் விசேஷத்தையும் பொறுத்துள்ளது. கவி சம்மேளனத்தில் அல்லது முஷைராக்களில் இடி முழக்கம் போன்ற கர கோஷத்தை பெறும் பாடலானது, அச்சில் படிக்கையில் தகுதியும் திறனாய்வுமுள்ள பாராட்டுதல்களைப் பெறுவது அரிதாகிறது.

### நாவல்

நாவலின் உருவ அமைப்பில் புதிய தோற்றங்கள் எதுவுமில்லை. குஜராத் இலக்கியத்தில் நாவல்தான் மிகப் பிரபலமாக இருந்து வரும் இலக்கியப் பிரிவு. திறமையும் பொதுஜன மதிப்பும் சேர்ந்திருக்க முடியாது என்பதற்கு குஜராத்தி நாவல் ஒரு எடுத்துக் காட்டு. முன்ஷி, ரமணலால் தேசாய், ஜாவேர்சந்த் மேகாணி, குணவந்த ராய் ஆசார்யா, தூமகேது, சுனிலால் வி. ஷா ஆகி

யோர் பழந்தலைமுறையைச் சேர்ந்த நாவலாசிரியர்கள். பன்னுலால் படேல், தரிசக், ஈசுவர பெட்லிக்கர், சுனிலால் மாதியால், சோபான், பீதாம்பர படேல், சாரங்க பாரோட் ஆகியோர் உட்பட இந்தத் தலைமுறையில் குஜராத்தி நாவலாசிரியர்கள் நிறைய இருக்கிருர்கள். அவர்களுக்கு நிறைய வாசகர்களும் உண்டு. அவர்களது நாவல்களில் சில ஏராளமாக விற்பனையாகின்றன. உலகத்தில் ஒப்புக் கொண்டுள்ள நியதிகளை வைத்து மதிப்பிடுவது ஒருபுற மிருக்க, குஜராத் இலக்கியத்தில் மிக உயர்ந்தவையென்று சொல்லக்கூடியவை ஒரு சிலதான் உண்டு. ரமண்லால் தேசாய், ஜாவேர்சந்த் மேகாணி ஆகிய இருவரும் காலமாகி விட்டனர். முன்ஷி தமது இளமைப்பருவ மனுேநிலையிலிருந்து மேலே ஏறவில்லை. பன்னுலால் படேல், தர்சக் (மனுபாய் பாஞ்சோலி) ஆகியோர் குஜ ராத்தி நாவல் துறையில் செய்துள்ள பணி முக்கியமானது. குஜராத்தி கிராம வாழ்க்கையில் தலைசிறந்த முறையில் பன்னுலால் எழுதியுள்ளார். அவருக்கு கிராம வாழ்வின் மூலைமுடுக்குகளெல்லாம் தெரியும். கஷ்டப்பட்டு உழைக் கும் அதன் எளிய மக்கள், அவர்களது அன்பும் துவேஷ மும், பெருந்தன்மையும் அற்பத்தனமும், நேர்மையும் சூழ்ச்சியும், இவ்வாறு உள்ள எதிர்மறை நிலைகளை உருக்கத் துடன் அவர் முற்றிலும் புது உலகமாகவே படைத்துக் கொடுத்திருக்கிருர். மளேலாஜீவ், மானவீனி பவாயி ஆகி யவை அவரது மிகச் சிறந்த நாவல்கள். அவை அழியும் படி குஜராத் விடாது. ஆனுல் கிராம எல்லையைக் கடந்து நகர வாழ்க்கைக்குப் புகுந்தவுடன் அது அவருக்கு அடி யோடு புதிது என்பதைக் கண்டு கொள்ளலாம்.

புகழ் எய்திய மற்ருெரு நாவலாசிரியரான தர்சக் புலமையும் பண்பும் மிகுந்தவர். ஆழ்ந்த சிந்தனையாளர். நன்ருகக் கதை சொல்பவர். அவருக்கு ஒரு வாழ்க்கைத் தத்துவம் உண்டு. அதை நாவல்கள் மூலம் எடுத்துரைக்க முயல்கின்ருர். அவரது நாவல்களுக்கு ஒரு தனிச்

சிறப்பை இந்தத் தத்துவந்தான் அளித்துள்ளது. குஜராத்தியிலுள்ள சாரோத்தர், பட்டிதார்களைப் பற்றி ஈசுவர பெட்லிக்கர் வழங்கியுள்ள படைப்புக்கள் குறிப்பிட வேண்டியவை.

வரலாற்று நாவல்கள் இன்றும் பழங்காலப் பெருமைகளைப் பற்றியனவாகவே இருக்கின்றன. பிரிட்டிஷ் ஆதிக்கத்தின்போது விடுதலைப் போராட்டப் பகுதியாக இத்தகைய நாவல்களை எழுதுவது அவசியமாக இருந்திருக்கலாம். மக்களிடையே தன்மான உணர்ச்சியை தோற்றுவிப்பதற்கு பழமையில் பெருமையானவற்றை மட்டும் எடுத்து அழகுணர்ச்சியுடன் வடித்துக் காண்பிப்பது அப்போது இயற்கையாக இருந்தது. பழங்காலத்தை தெய்வீக அந்தஸ்துக்கு உயர்த்தி எழுதியவர்களில் ஜாவேர்சந்த் மேகாணி குறிப்பிடத்தக்கவர். நமது பண்பாட்டில் மேம்பாடும் சிறப்பும் படைத்தது பழங்காலந்தான் என்பது அவரது கருத்து. முன்ஷி போன்றோர் தற்காலப் பிரச்சினைகளைப் பற்றிய சிந்தனைகளில், சமூக ராஜீய நிலைமைகளில் புத்துணர்வு ஏற்படும்படி செய்வதற்காக பழமையை ஊற்றுக்காலாகவே மதித்தனர். தூமகேது போன்றவர்கள் தமது உற்சாக மிகுதியில் சில மட்டமான குணங்களையும் சம்பவங்களையும் உயர்ந்தவை போல சில சமயம் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். ஒரு காலத்தில் காணப்பட்ட வாழ்க்கை வழி என்ற பழமையை விருப்பு வெறுப்பு இன்றி மதிப்பிட்டு, நாம் அதிலிருந்து வளர்ச்சி கண்டிருக்கிறோம் என்பதை எடுத்துக்காட்டும் தன்மையினர் சிலரே.

சரித்திர பூர்வமான ஆதாரம் என்பது நிலையற்றது. அது வெகுவாக தரும் விளக்கத்தைப் பொறுத்தது. ஒரு நாணயம், ஒரு கல், தேய்ந்துபோன பழைய சுவடியின் ஒரு பக்கம், ஓர் அல்ப விஷயம், எப்படியோ, தோற்றம் பூராவையுமே மாற்றிவிடக் கூடும். எனவே சரித்திரத்தின் தீர்ப்பு என்று முடிவாகக் கூறுவது

சாத்தியமல்ல. எனினும் பழங்காலம் என்பதற்கு நிச்சயமாக ஒரு தனித்தன்மை உண்டு., தனி நபர்களைப் போலவே தேசியச் சமுதாயங்களும் தமது பழங்கால தோற்றங்களை கண்டு களிக்கவே விரும்புகின்றன. அவர்கள் விரும்பக்கூடிய அழகு அந்தப் படங்களில் இல்லாமல் இருக்கலாம். தோற்றம் அருவருப்பாகவும் இருக்கக்கூடும். எனினும் அவை சொந்தப் படங்கள் அல்லவா! ஒரு சமயம் நடந்தேறிய வாழ்க்கைப் பகுதிகள் அல்லவா! தமது புருஷாகாரத்துடன் பிணைக்கப்பட்டவை அல்லவா! எனவே குடும்பப் படங்களின் தொகுப்பில் அவை இடம் பெற்றுத்தான் ஆக வேண்டும்.

குஜராத்தி நாவலாசிரியன் பழமைக்குத் திரும்பி அதை பெருமைப்படுத்துகிறான். தற்கால சமூகத்தை அணுகுகையில் அவன் அதைக் குறைகூறுகின்றான். பழமையின் பெரும் கவர்ச்சி காரணமாக இக்காலம் அவனுக்கு உற்சாகமற்று, ஒளியிழந்து, மிக மட்டமாகத் தென்படுகிறது. தன்னைச் சுற்றியுள்ள மக்களின் சின்னத்தனம் அவனுக்கு அலுப்பை அளிக்கிறது. எனவே பெருந்தன்மை, தைரியம், யோக்யதை, காம்பீர்யம் ஆகியவற்றைச் சுவைப்பதற்கு பழங்காலத்தை யந்திரம் போல நாடுகிறான். ஆனால் இக் காலமானது அவ்வளவு மோசமானதென்று சொல்வதற்கில்லை. 1914-ம் ஆண்டில் ஆப்பிரிக்காவிலிருந்து காந்திஜி திரும்பி வந்தது முதல் குஜராத்தின் உணர்ச்சியில் ஓர் அடிப்படையான மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. கலை, இலக்கியத் துறைகளில் வீர தீரம், தியாகம், செய்நேர்த்தி, துணிவு ஆகியவற்றில் குஜராத்தின் பங்கு அற்பமானதல்ல. எனவே இக் காலத்து சமூகத்தைப் பற்றி குஜராத் எழுத்தாளன் கொண்டுள்ள மனப்பான்மை அவனது லட்சியத்தில் உள்ள பற்றுதலைக் காண்பிக்கிறது. தன்னைச் சுற்றியுள்ள சூழலைவிட சிறப்பானதொன்றைக் காணவே அவன் விரும்புகிறான்.

## சிறு கதை

சிறு கதை தோன்றி அறுபது வருஷங்களாகின்றன. அது நாடகங்களுக்குப் பிறகு காலம் கழித்து வந்தது. நாவல், எதுகையற்ற கவிதை ஆகியவைகூட அதற்கு முன்னால் தோன்றின. எனினும் சிறு கதையானது குஜராத்தி மண்ணில் உறுதியாக வேர் விட்டுள்ளது. எழுதுபவர்களுக்கும், வாசகர்களுக்கும் ஒருங்கே பிடித்த மாக இருக்கும் இலக்கிய வகை நாவலுக்கு அடுத்தபடி சிறு கதைதான்.

பழம் எழுத்தாளர்களில் தூமகேது நாவல்களை இயற்றி வருகிறார். டங்கா என்ற அவரது சிறு கதைத் தொகுப்பின் முதல் இரண்டு பகுதிகள் அவருக்குப் புகழை அளித்தன. பிந்தியச் சிறு கதைகள் அதை வளர்க்க வில்லை. ஜாவேர் சந்த் மேகாணி, ராமநாராயண பாடக் (துவிரேப்) இருவரும் காலமாகிவிட்டனர். முன்ஷி சிறு கதைகளை எழுதுவதை அநேகமாக நிறுத்திவிட்டார். அதேமாதிரிதான் தனசுக்லால் மேதா, உமாசங்கர ஜோஷி (வாசுகி) சுந்தரம் (த்ரிசூல்) ஆகியோரும். குலாப்தாஸ் புரோக்கர், பன்னுலால் படேல் ஆகியோர் இன்னும் கதைகளை எழுதி வருகிறார்கள். மனித சுபாவத்தை அற்புதமாகத் துருவி ஆராய்ந்து எழுதுபவர் குலாப்தாஸ் புரோக்கர். வாழ்க்கையின் சிறிய, வெகு சாதாரணமான அனுபவங்களைக் கொண்டு அழகான கதைகளை அவர் சிருஷ்டித்து விடுகிறார். பன்னுலால் படேலின் கிராமியக் கதைகள் மிகச் சிறந்தவை.

அவர்களுக்கப்புறம் முன் வந்த எழுத்தாளரில் ஜயந்தி தலால் விஷயங்களைத் துருவிப் பார்க்கும் தூரதிருஷ்டி உள்ளவர். நையாண்டி செய்து எழுதுபவர். விஷயம், வடிவம் இரண்டிலும் தைர்யமாக புதிய பரீட்சைகளை செய்து வருபவர். விநோதினி நீலகண்டின் சொற்சித்திர வடிவங்கள் அழகானவை. ஈசுவர பெட்லிக்கர் மனதை உருகும்படி எழுதுபவர். சுன்னிலால்

மாதியா நிறைய எழுதித் தள்ளுபவர். அவரது எழுத்து வன்மையுள்ளது. கிஸன் சின்ஹ சவ்டா அழகில் ஆழ்ந்து கிடப்பவர். இவர்கள் எல்லாம் இன்றும் எழுதிக் கொண்டிருக்கிறுர்கள்.

சமீப கால புதுமை எழுத்தாளர்களில் கேதன முன்ஷி, வேனிபாய் புரோகித், ரமண்லால் பாடக், சிவகுமார் ஜோஷி குறிப்பிடத்தக்கவர்கள். கேதன் முன்ஷி 1956 மார்ச்சில் பரிதாபகரமாக மரணமெய்தி ஞர். சிறு கதை உத்திகளைத் தொடர்ந்து சில ஆண்டு களாக குஜராத்தில் உண்மைக் கதைகள் பிரபலமாகி வருகின்றன. நல்ல கலை வடிவத்தில் வாழ்க்கையின் கவர்ச்சிகரமான அம்சங்களை அப்படியே அவை படைத்துத் தருகின்றன. ஜாவேர்சந்த் மேகாணி, கிஸன் சின்ஹ சாவ்டா, குலாப்தாஸ் புரோக்கர், ஜி. வி. மாவ்லங்கர் ஆகியோரின் உண்மைக் கதைகள் பரப்பரப்பை விளைவிக்கும் நோக்கம் உள்ளவை அல்ல. மனித சுபாவத்தின் சிறந்த சீரிய தன்மைகளைப் புலப் படுத்துவதே அவற்றின் பணி.

சமூகச் சீர்கேடுகளை விஷயங்களாகக் கொண்டவை சாதாரண குஜராத்தி சிறு கதைகள். வறுமை, எழுத் தறிவின்மை, பொருமை, பால் உறவு ஆகியவை இளம் எழுத்தாளர் விரும்பிக் கையாளும் விஷயங்களிற் சில. பிரயாணக் கதைகள், பெரு முயற்சி பற்றிய கதைகள், வேட்டைக் கதைகள் முதலியவை தென்படுகின்றன. ஆனல் அவை பிரத்தியட்ச வாழ்வுக்கு புறம்பானவை. மேலும் அவை மிகக் குறைவானவையுங்கூட. 1942 இயக்கம், வங்காளத்தில் மனிதன் படைத்த பஞ்சம், சுதந்திரம், தேசப் பிரிவினை, நிலைபெயர்ந்த மனித சமூகத்தின் பயங்கரமான சோக அனுபவங்கள், முதல் ஐந்தாண்டுத் திட்டம், எழுச்சி கண்டு மீண்டும் பழைய பொலிவைப் பெறுவதற்காக தேசம் வீர தீரத்துடன் பாடு பட்டு வருவது ஆகிய உள்நாட்டு நிகழ்ச்சிகளும்,

இரண்டாவது உலக யுத்தமும் அதன் விளைவுகளுமான நாசங்கள், இன்னும் உண்மைத் திறமை படைத்த குஜராத்தி எழுத்தாளரை போதிய அளவு கவர்ச்சித்து அவர்களுடைய கற்பனையை ஊக்குவிக்கவில்லை.

இந்தியாவில் துணிவு, திறம் படைத்தவர்களில் குஜராத்திகளையும் சேர்த்துச் சொல்லலாம். பழங் காலத்திலிருந்தே அவர்கள் தொலைதூரம் சென்று உலகின் ஒவ்வொரு மூலைமுடுக்குகளிலும் குடியேறி இருக்கிறார்கள். மனித வாசத்துக்கு அபாயமாக இருந்த இடங்களையெல்லாம் ஊடுருவி அங்கே குடியேறினார்கள். முக்கியமாக வியாபாரிகள் தமது நலன்களுக்குப் பின்பலமாக ஏகாதிபத்திய சலுகையில்லாதவர்கள். எனவே உறவு முறைகள் அபிவிருத்தியில் அவர்கள் கைதேர்ந்தவர்கள். எந்தச் சூழ்நிலைக்கும் ஏற்றவாறு தம்மை நிதானப்படுத்திக் கொள்வதற்கு அவர்களுக்குள்ள சாமர்த்தியம் அபாரமானது. எனினும் குஜராத்துக்கு வெளியேயுள்ள இடங்களையும் நபர்களையும் பற்றி நல்ல கதைகளை இயற்றியவர்கள் அவர்களில் வெகு சிலரே. இது நல்லதா, கெடுதலா என்று விவாதிக்க நான் விரும்பவில்லை. இது குஜராத்திகளிடம் மட்டும் காணப்படும் நிலையா என்பதை ஆராய நான் விரும்பவில்லை. என்னுடைய கருத்துக்களைச் சேர்க்காமல் நிலவரம் என்ன என்பதை மட்டும் இங்கு கூறுகிறேன்.

## நாடகம்

நாடகத்தின் தோற்றமும் வளர்ச்சியும் பிரிட்டிஷ் செல்வாக்கின் காரணமாக ஏற்பட்டவை. தொடக்கத்திலிருந்தே ஆங்கில, ஸம்ஸ்கிருத நாடகங்களின் சிறப்பான அம்சங்கள் சேர்ந்து இணைந்ததாக குஜராத்தி நாடகம் ஏற்பட்டது. ஸம்ஸ்கிருத நாடகங்களைவிட ஆங்கில நாடகங்கள், முக்கியமாக ஷேக்ஸ்பியர் நாடகங்கள், குஜராத்தி நாடக அமைப்பைப் பெரிதும் உருவாக்கின.

முதலில் பிரபல இலக்கிய கர்த்தாக்கள் நடிப்பதற்கு நாடகங்களை இயற்றினார்கள். பிறகு இலக்கிய நாடகமென்றும், நடிப்பதற்கான நாடகமென்றும் படைக்கப் பெறும் நீண்ட காலம் குறுக்கிட்டது. இவை அடிப்படைத் தொடர்பற்றிருந்தன. தகுதித் திறன் படைத்த இலக்கிய வல்லுனர்கள் நாடக மேடையில் நாட்டம் கொள்ளவில்லை. நடிப்பதற்குத் தொழில் முறையில் நாடகம் இயற்றியவர்கள் இலக்கிய அபிமானிகளாக இருக்கவில்லை. இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னிருந்த இலக்கிய நாடகங்களை பிரபலமான தொழில் முறைக் கலைஞர்கள் நடித்துக் காண்பித்தனர். ஆனால் இரு சாராரும் பரஸ்பரம் பெரிய மனது செய்து இதற்கு வழி செய்தனர் என்றுதான் கொள்ள வேண்டும். இலக்கியமும் நாடகங்களும் நேர் எதிராக ஒன்றுடன் ஒன்று தொடர்பு இல்லாத தனித் தன்மையுடன் இருந்து வந்தன.

ஆனால் நிலைமை வேகமாக மாறி வருகிறது. சினிமாவும் கவர்ச்சிகரமான பிற பொழுதுபோக்கு சாதனங்களும் கடுமையாகத் தாக்கத் தொடங்கவே, தொழில் முறையில் நாடகம் போடுகிறவர்கள், மாறிவரும் நிலைமைக்கேற்ப தாமும் மாறி வருகிறார்கள். இக்காலத்துக்குரிய விஷயங்களை நாடகங்களாக வைத்து எழுதலாயினர். பெண் பாத்திரங்களை பெண்களே தாங்கி நடிப்பதற்கு ஊக்கம் அளிக்கப்பட்டது. நாட்டியம், இசை இரண்டும் வழங்கப்பெறும் முறையில் புது மாறுதல்கள் ஏற்பட்டன. ஒரு முழு நாடகத்தைவிட இரண்டு, மூன்று ஓரங்க நாடகங்களை நடிக்குமளவுக்கு தொழில் முறையில் கம்பெனிகள் முன்னுக்கு வந்தன. ஆனால் இந்தப் பரீட்சை பொதுஜன அபிமானிகளுக்குப் பிடித்தமாக இல்லை. எனவே பழைய போக்கிற்குத் திரும்பிவிட்டனர்.

1914-ம் ஆண்டுக்கு பிந்திய காலத்தில் அமெச்சூர் நாடகங்கள் பிரபலமாயின. இதை ஊக்குவித்தவர்களில் சந்திரவதன மேதா, கே. எம். முன்ஷி ஆகியோர் முக்கிய

மானவர்கள். படித்த வகுப்பினரிடையே நாடகப் பணி களில் அக்கறையை அவர்கள் உண்டு பண்ணினர். அமெச்சூர் நாடகங்களை பிரபலப்படுத்தும் அந்த முயற்சி யில் பாமர மக்களைத் திருப்தி செய்விக்கும் அளவுக்கு மேல் உயர அவர்களால் இயலாது போயிற்று. அவர்கள் நடித்த நாடகங்களில் பல, உணர்ச்சியைத் தூண்டி இன்ப சுவை ஊட்டும் தன்மை உள்ளவையாக இருந்தன; அல் லது முன்னுக்குப் பின் முரணான பரிகாச நாடகங்களாக இருந்தன. பல ஆண்டுகளுக்கு இந்த நிலை நீடித்தது.

இடைக்காலத்தில் அமெச்சூர் நாடக இயக்கம் வலு வடைந்தது. ஆமதாபாத், சூரத், பரோடா, ராஜகோட்டை ஆகியவற்றில் விசேஷ சுறுசுறுப்பு தென்பட்டது. நாட கத்திலும், நாடக அரங்க நடைமுறைகளிலும் அக்கறை கொள்ள குழுக்கள் ஆங்காங்கு தோன்றின. பரிகாச நாடகங்கள், ஹாஸ்யச் சித்திரங்கள் மட்டுமன்றி, புது வகை நாடகங்களும் எழுதப்பெற்றன. ஆங்கிலம், வங்காளி ஆகிய மொழிகளிலிருந்து மொழிபெயர்ப்புகளும், தழுவல்களுமான நாடகங்கள் ஊக்குவிக்கப்பெற்றன. அமெச்சூர் நாடக இயக்கம் துரிதமாக நிலைத்து விட்டது.

சென்ற பல ஆண்டுகளில் குஜராத்தில் அமெச்சூர் நாடகங்கள் கண்டுள்ள வளர்ச்சி அற்புதமானது. நடிப்புத் திறமை நல்ல தரமுள்ளதாக இருக்கின்றது. நாடகங் களைக் காண்பிக்கும் நடைமுறைத் திறனும் உயர்ந் துள்ளது. நாடகம் பார்ப்பவர்களும் பகுத்தறிவு உள்ள வர்களாகவும், விஷயமறிந்தவர்களாகவும் இருக்கிறார்கள். ஆனால் நல்ல நாடகங்களை எழுதிக் கொடுப்பவர்கள் குறைவாக இருப்பதுதான் அமெச்சூர் நாடகம் இன்று படும் சிரமம். பள்ளிகளிலும், காலேஜுகளிலும் மிகச் சாதாரணமான பரிகாச நாடகங்களையும், ஹாஸ்யச் சித்தி ரங்களையும் நடிப்பதில் அதிக ஆர்வம் காட்டப்படுகின் றது. மற்ற சங்கங்கள் பிற மொழித் தழுவல்களையும், மொழி பெயர்ப்புக்களையும் நம்பியுள்ளன. குஜராத்தியி

லேயே கற்பனையுடன் எழுதப்பட்ட முதன்மையான நாடகங்கள் அதிகம் இல்லை. தழுவல்களும் மொழிபெயர்ப்புகளும் இலக்கிய வகையில் சிறந்தவையென்று சொல்வதற்கில்லை. குஜரத் அமெச்சூர் நாடக உலகில் வசதியும் திறனும் உண்டு. அதற்கேற்ற நாடகங்கள்தான் கிடைத்தாக வில்லை.

இலக்கிய நாடகத் துறையில் முழு நீள நாடகங்களை எழுதுவது அநேகமாக நின்றுவிட்டது. 1914-ல் வெளியான 'ராயினீ-பர்வத்' என்ற நாடகத்திற்குப் பிறகு உயர்ந்த இலக்கியச் சிறப்புகள் கொண்ட நாடகம் எதுவும் குஜராத்தியில் வரவில்லை. இசை நாடகத்தை நானுலால் புகுத்தினர். ஆனால் அதுவும் குஜராத் மண்ணில் வேர் விட மறுத்துவிட்டது. செய்யுள் வடிவத்தில் நாடகத்தை இயற்ற சில சீரிய முயற்சிகள் நடைபெற்றன. ஆனால் குஜராத்தில் நாடக இலக்கியத் துறையில் வளமாகக் காணப்பெறுவது ஓரங்க நாடகம்தான். படுபாயி, உமர்வாடியா, யசவந்த பாண்டியா, பிராண ஜீவன பதக் ஆகியோர் இதை குஜராத்தி இலக்கியத்தில் வளர்த்துள்ளனர். வடிவத்திலும் விஷயத்திலும் எண்ணற்ற தினுசுகளில் ஓரங்க நாடகம் எண்ணற்ற வகைகளை அளிக்கிறது. சாப்ளு-பாரா என்ற தமது நாடகத்தில் பெண்ணின் வாழ்க்கை எவ்வளவு அவலமானது என்பதை எடுத்துக் காட்டி குஜராத்தின் கிராமிய நிலவரம் பூராவையுமே நல்ல, கெட்ட அம்சங்களுடன் உமாசங்கர் சித்திரித்துள்ளார். ஷஹீத் ஆனே பிஜன் நாடகோ என்பதில் இப்போதைய நாகரிகத்தின் அருவருப்பையும், பாசாங்குத் தனத்தையும் வெளிப் படுத்தியுள்ளார். மனித உள்ளம் பணியாற்றும் மர்மத்தைத் தமது உளவியல் நாடகத்தில் குலாப்தால் புரோக்கர் கேலிச் சித்திர முறையில் வழங்கியுள்ளார். அக்காலத்து சமூக, ராஜீய வெளி வேஷங்களைப் பற்றியது அந்த நாடகம். சக்தி வாய்ந்த சொல்லாட்சி படைத்த சுனிலால் வாடியா கற்பனைத் துறையில் மட்டு

மின்றி பிரத்யட்ச நிலைமையையும் அப்பட்டமாக வர்ணிக்கிருர். குஜராத்தி ஓரங்க நாடகங்கள் எல்லாவற்றிலும் நகைச்சுவையும், சோக இயலும் நிறைந்து காணப் பெறுகின்றன.

## சுயசரிதை, வாழ்க்கை வரலாறு

குஜராத்தி இலக்கியத்தில் சுதந்திரத்திற்குப் பிறகு விசேஷ வளர்ச்சி கண்டிருப்பது சுயசரிதை எழுதும் முறை. இலக்கியப் பணியாற்றும் முதியோர் எல்லோருமே தமது சுய சரிதையை எழுதியிருக்கிருர்கள். முன்ஷி, ரமண்லால் தேசாய், தூமகேது, தனசுக்லால் மேதா, சந்திரவதன மேதா, சாம்ப்ஷி உதேஷி ஆகியோர் தம்மைப் பற்றி எழுதியுள்ளனர். இவை சுவை மிகுந்த நூல்கள். சிலவற்றில் விஷயச் செறிவு உண்டு. கையாண்டிருக்கும் முறை சில நூல்களில் பிரமாதம். சுயசரிதைகளில் முதன்மையானவை நாஞுபாய் பட், இந்துலால் யாக்ஞிக், பிரபுதாஸ் காந்தி ஆகியோர் இயற்றியுள்ளவை நாஞுபாயின் சண்தர் அனே கட்தர் என்பது உள்ளத்தை உருக்கும் எளிய வகையில் மனதைத் திறந்துகாட்டி நேர்மையைப் பிரகாசப்படுத்துகிறது. இந்துலால் யாக்ஞிக்கின் சுயசரிதையில் கையாண்டுள்ள இலக்கிய நடை சுமாரானதுதான். ஆயினும் 1892 முதல் 1921 வரை குஜராத்தின் வரலாற்றைக் கவர்ச்சிகரமாக அவர் அதில் வடித்துக் கொடுத்திருக்கிருர். இந்தக் காலத்தில் எல்லா முக்கிய நடவடிக்கைகளிலும் அவர் அடிப்படையான பங்கு பற்றியவர். எனவே இத்தகைய நூலை இயற்றுவதற்கு அவருக்கு முழுத் தகுதியுண்டு. அவர் தமது சொந்த வாழ்க்கையைப் பற்றி செய்துள்ள பிரஸ்தாபங்கள், முக்கியமாகத் தமது மனைவியைப் பற்றிச் சொல்லியிருப்பவை, ஆத்ம பரிசோதனைக்கு மிகச் சிறந்த எடுத்துக் காட்டுகள். சத்திய சோதனை என்று காந்திஜி எழுதியுள்ள ஆத்ம கதையுடன்கூட அதை ஒப்பிடலாம். பிரபுதாஸ் காந்தி

யின் ஜீவன்-நூன்-பரோத், மிகச் சிறந்த நூல். நூலாசிரியரின் வளர்ச்சியை, மலர்ச்சியைக் கட்டம் கட்டமாகப் புலப்படுத்துகிறது. அதுமட்டுமல்ல. போனிக்ஸ் ஆசிரமத்தில் காந்திஜி சத்தியம், அஹிம்சை சோதனைகளை நடத்திக் கொண்டிருந்த காலத்திற்கு நம்மை அது இட்டுச் செல்கிறது. இந்த சோதனைகள் தாம் நாம் கண்டறிந்த அற்புதமான நிலைகளை உருப்படுத்தின. அவரை ஒரு குழந்தை உள்ளம் எப்படி யெல்லாம் உருவாகிறது, எவ்வளவு விபரீத நிலைகள் அதைப் பாதிக்கின்றன என்பதை முதன்மையாக விவரித்துக் காட்டுவது இந்த நூலுக்குள்ள மிக முக்கியமான தனிச் சிறப்பு. தம்மைப்பற்றிய மதிப்பீட்டில் நூலாசிரியர் மிக அடக்கமாக இருந்திருக்கிருர். ஆனல் இயற்கை பற்றிய அவரது கவர்ச்சிகரமான சக்தி வாய்ந்த வர்ணனைகளும் மனித உள்ளத்தை அவர் நல்ல விதத்தில் புரிந்து கொண்டிருப்பதும் முதன்மையாக உள்ளன. திறமைசாலியான எந்த நூலாசிரியருக்கும் இவை பெருமை தரக்கூடியவை.

குஜராத்தில் வாழ்க்கை வரலாற்று இயக்கம் வளர்ச்சி கண்டு வருகிறது. காந்திஜியின் வாழ்க்கையைப் பற்றிப் பல நூல்கள் இயற்றப்பட்டுள்ளன. சர்தார் வல்லபபாயைப் பற்றி நரஹரி பரிக், டக்கர் பாபாவைப் பற்றி காந்திலால் ஷா, ரவிசங்கர் மகாராஜைப்பற்றி பபல்பாயி மேதா ஆகியோர் இயற்றியுள்ள நூல்கள் குறிப்பிடத்தக்கவை.

தற்கால இலக்கியத்தில் மற்ெருரு பகுதி நிகழ்ச்சிக் குறிப்பு. நரசிம்ம ராவ் திவேதியா குறிப்புக்களில் ஒரு சாதாரண வாழ்க்கையின் போக்கைக் காணலாம். ஆனல் ஒரு வகையில் விதியின் ஓயாத தாக்குதல்களை எதிர்த்து நின்று சமாளித்த வீர வரலாற்றையும் அதில் காணலாம். ஆகாகான் அரண்மனையிலும் நவகாளியிலும் காந்திஜியின் அலுவல்களைக் குறித்து அன்ருடக் குறிப்புகளை எழுதி வைத்து மனுபென் காந்தி வெளியிட்டுள்ளார்.

ஆனால் குஜராத்தி மொழியில் நிகழ்ச்சிக் குறிப்பு இலக்கியத்தில் மிகச் சிறந்த ஐந்து பாகங்களில் வெளியாகியிருக்கும் மகாதேவ்பாய்-நீ-டயரி[1] என்பது. இது மிக உன்னதமான நூல். மூன்று மகா புருஷர்களின் வாழ்க்கையை அதில் காணலாம். காந்திஜியின் அதி அற்புதமான வரலாறு, விசுவாசம் மிகுந்த, எவ்விதமான புரட்டும் இல்லாத மதி நுட்பம் மிகுந்த சர்தார் படேலின் வாழ்க்கை, நூலாசிரியரின் மென்மை மிகுந்த பண்பாடு மிகுந்த அடிப்படை, தம்மை ஒதுக்கிப் பின் அணியில் வைத்துக் கொள்ளும் நூலாசிரியரின் வாழ்க்கை முதலியவற்றை அதில் காணலாம்.

### தன்மயமான கட்டுரை, பத்திரிகைத் துறை

குஜராத் கற்பனு இலக்கியத்தில் மிகக் குறைந்த நிலையில் இருப்பது கட்டுரை வடிவந்தான். காகா கலேல்கரும் வேறு சிலரும் இதைக் கையாண்டுள்ளனர். பிறகு இது புறக்கணிக்கப்பட்டுக் கிடக்கிறது. தரத்தில் உயர்ந்ததான, தன்மயமான கட்டுரைகளை இந்தத் தலைமுறை எழுத்தாளர்களில் இன்னும் ஒருவர்கூட படைக்கவில்லை.

ஹாஸ்யக் கட்டுரைகளின் நிலவரம் வேறு. குஜராத்தில் சிரிக்கச் சிரிக்க எழுதுகிறவர்கள் பலர் இல்லை. ஆனால் இருப்பவர்கள் மிகுந்த திறமைசாலிகளாகக் காணப்படுகின்றனர். பழமைத் தலைமுறைகளில் ஜோகீந்திர தவே, அண்மையில் எழுதுகிறவர்களில் பகுல் திருபாடி, நவநீத சேவக் குறிப்பிடத்தக்கவர்கள். ஜோகீந்திர தவே கொஞ்ச காலமாகச் சொன்னதையே சொல்லி நிலையற்றவகையில் எழுதி வருகிருர். நையாண்டி ஹாஸ்யம், மதிநுட்பம் அவரிடம் உண்டு. மிக மட்டமான ஹாஸ்யத்தி

---

1. சுதந்திரத்திற்குப் பின் குஜராத் மொழியில் இலக்கியச் சிறப்புடன் வெளியான சிறந்த நூல் என்பதற்காக 1955-ல் சாகித்திய அக்காதெமிப் பரிசு இதற்குக் கிடைத்தது.

லிருந்து மிக உயர்ந்தது வரை எல்லாவற்றிலும் அவர் எழுதக் கூடியவர். வக்கிரமான கோணங்களிலிருந்து எதையும், எந்த உண்மையையும் பார்த்து எழுதும் புதுமையும் செழுமையும் திரிபாடியின் ஹாஸ்யத்தில் காணலாம். சப்த தந்த்ர-நீ-வாதோ என்ற பெயரில் நவநீத் இயற்றியுள்ள நூல் சிறந்த நையாண்டி இலக்கியம். தற்கால நிலவரத்தை ஏறக்குறைய கனமான வகையிலே சித்திரிப்பது போல அது அமைந்திருக்கிறது.

இலக்கியத்திற்கு பத்திரிகைத் துறை குஜராத்தில் மறைமுகமான நற்பணி புரிந்திருக்கிறது. வெகு நாட்களாகவே இலக்கிய சர்ச்சைகளுக்கும் புத்தக விமர்சனங்களுக்கும் அனேகமாக பொறுப்புள்ள எல்லா தினசரிகளும், வாரப் பத்திரிகைகளும் இடம் அளித்து வந்திருக்கின்றன. இந்த அம்சத்தின் காரணமாக வாசகர்களிடை இலக்கிய விஷயத்தில் உற்சாகம் இருந்திருக்கிறது. மாசிகைகளும், கால் வருஷ வெளியீடுகளும் தமது கொள்கை வரம்புக்குள் நற்பணியாற்றியுள்ளன. இப்போதுள்ள சஞ்சிகைகளில் பண்பாட்டிலும், இலக்கியச் சிறப்பிலும் முதன்மையாக இருப்பது ஸம்ஸ்கிருதி என்பது. குமார் என்பது வெறும் மாசிகை மட்டுமல்ல. அதை ஒரு கல்வி ஸ்தாபனம் என்றே சொல்லவேண்டும். சென்ற முப்பது ஆண்டுகளாக, ஒரு தலைமுறை பூராவும் உள்ளத்தையும், ஒழுக்கத்தையும் அது உருவாக்கி வந்திருக்கிறது. பத்து ஆண்டுகளுக்கு முன் தோன்றிய அகண்ட ஆனந்த், குஜராத்தி மாசிகைகளின் வரலாற்றில் கண்டிராத ரீதியில் விற்பனையாகி பிரபலம் அடைந்திருக்கிறது. ஜன்ம பூமி என்ற தினசரியையும் குறிப்பிட்டாக வேண்டும். அரசியல் துறையில் இன்று காணப்படும் விழிப்பும் விவேகமும் அது பின்பற்றி வந்துள்ள புத்தி சாலித்தனமான, அடக்கமான கொள்கையின் விளைவுகள்.

நிந்தனைக் கவிதைகள், குஜரத் சஞ்சிகைகளில் காணப்படும் ஒரு முக்கிய அம்சம். இந்த வடிவத்தின்

வளர்ச்சிக்கு மூலகாரணம் 1942-ம் வருஷத்து ‘குவிட் இந்தியா’ இயக்கம். பத்திரிகைகளும், பேச்சு மேடையும் எண்ணற்ற நிர்ப்பந்தங்களுக்குள்ளான காலம். சர்க்காரின் கொள்கையை விமரிசனம் செய்வது இயலாது போயிற்று. ஹாஸ்யம், நிந்தை ஆகியவை மூலமாகத்தான் அக் கொள்கையின் கேலிக்கூத்தைச் சரிவர வெளிப்படுத்த வேண்டியிருந்தது. இதைக் குஜராத்தியில் முதல் முதலாக உணர்ந்து ஆக்யான வழியை இதற்கு பின்பற்றியவர் கர்ஸன்தாஸ் மாணிக். வீரத்தை நையாண்டி செய்யும் வகையில் நிந்தனையும் விகடமும் சிறப்பாக இணைந்து காணப்பெறுவது வைசம்பாயன-நி-வாணி என்பது. உண்மையான பத்திரிகைப் பணியாற்றி, அக்காலத்து பிரிட்டிஷ் சர்க்கார், அதன் பின்பலமாக இருந்தவர்கள் ஆகியோரின் வெளிப்பகட்டையும் முரணான போக்கையும் மிகச் சிறந்த வகையில் அவர் சித்திரித்துள்ளார். இந்த இலக்கிய வழியைப் பின்பற்றியவர்கள் இன்னும் பலர் உண்டு. இன்றும் ஜன்ம பூமி, குஜராத் சமாசார், சந்தேஷ், லோகசத்தா ஆகியவை தமது இலக்கியப் பகுதிகளில் இத்தகைய படைப்புகளை வெளியிடுகின்றன.

### பார்ஸி எழுத்தாளர்

இலக்கியத் துறையில் குஜராத்தி எழுத்தாளர் மட்டுமன்றி, பார்ஸிகளும் நல்ல பணியாற்றியுள்ளனர். நல்ல குஜராத்தியில் அவர்களில் சிலர் கவிதைகளையும், கதைகளையும் எழுதியுள்ளனர். தமது திறத்தாலே குஜராத்தி எழுத்தாளர்களின் மதிப்பைப் அவர்கள் பெற்றுள்ளனர். மொழியின் புனிதம் அல்லது மரபுக்கு மதிப்புத் தராமல் ஒதுங்கி நின்று எப்படியோ எழுதி வருகிறவர்களும் உண்டு. அவர்களுக்கு தனித்தனி வாசகர்கள் உண்டு. எனினும் அவர்கள் எழுதுவது குஜராத்தி மொழியில் கதைகள், நாவல்கள், நாடகங்கள், கவிதைகள், கட்டுரைகள், தலையங்கங்கள் ஆகியவற்றை குஜராத்தி மொழியில்

எழுதி தமது வாசகர்களின் அபிமானத்தை அவர்கள் பெற்றிருக்கிறார்கள்.

### பெண் எழுத்தாளர்

தற்பொழுது குஜராத்தி இலக்கியத்திற்கு பெண்கள் ருசிகரமான சேவை புரிந்திருக்கிறார்கள். ஏற்கெனவே பிரஸ்தாபித்துள்ள விஜேதினி நீலகண்ட், லாபூ பென் மேதா, குந்தநிகா காபடியா, தீருபென் படேல், கீதா பரீக் (கன்னிப் பெயர் காபடியா) ஆகியோர் மிகச் சிறந்த பெண் எழுத்தாளர்.

### மொழிபெயர்ப்புகள்

மொழிபெயர்ப்புகளும், தழுவல்களும் தற்கால குஜராத்தி இலக்கியத்தில் முக்கியமாக இன்றும் இடம் பெற்றுள்ளன. ஷேக்ஸ்பியர், இப்ஸன், டால்ஸ்டாய், விக்டர் ஹியூகோ, மபஸாந்து, செக்காவ், கார்கி, எமர்ஸன், பிளாட்டோ, ஷா போன்ற அன்னிய எழுத்தாளரும், ரவீந்திரநாத் டாகுர், பங்கிம் சந்திரர், சரத்சந்திர சட்டர்ஜி, பிரேம் சந்த், காண்டேகர், சானே குருஜி, ஆத்ரே போன்ற இந்திய எழுத்தாளரும் அவர்களது சில நூல்களின் மொழிபெயர்ப்புகள் மூலம் குஜராத்தி வாசகர்களுக்கு பிரபலமாகி இருக்கிறார்கள். டால்ஸ்டாயின் மிக முக்கியமான நூல்களில் பலவற்றைச் சில வருஷங்களுக்கு முன் விசுவநாத் பட் மொழிபெயர்த்துள்ளார். 'யுத்தமும் சமாதானமும்' என்ற அவரது மாபெரும் நூலை ஜயந்திலால் அண்மையில் மொழிபெயர்த்துள்ளார். டால்ஸ்டாய் நீங்கலாக வேறு எந்த உலகப் புகழ் படைத்த ஆசிரியரும் குஜராத்தியில் திறம்படப் பூராவாக மொழிபெயர்க்கப் பட்டது இல்லை. ஹோமர், வர்ஜில், டாண்டே, மில்டன், கத்தே போன்றவர்களும், கிரேக்கப் புராதன நாடகாசிரியர்களும் இனிமேல் மொழிபெயர்க்க வேண்டியவர்கள்.

நாவல்களும், சிறு கதைகளும் பிற இலக்கியங்களி

லிருந்து மொழிபெயர்க்கப்பட்டு வந்தன. இத்தகைய பணியை ஊக்குவிப்பது கலப்பற்ற இலக்கிய ஆர்வமல்ல, பண ஆசைதான் என்பது தெளிவு.

### அறிவியல் துறை இலக்கியம்

சக்தி வாய்ந்த இலக்கியத்திலிருந்து குஜராத்தி மொழியில் அறிவியல் இலக்கியத்திற்கு திரும்புவோம். அதில் மதிப்புயர்ந்த நூல்கள் இயற்றப்பட்டிருப்பதாகச் சொல்வதற்கில்லை. ஆமதாபாத் குஜராத் வித்யாசாலா, பரோடாவிலுள்ள மகாராஜா சாயாஜிராவ் சர்வகலாசாலை, சூரத்திலிருக்கும் சுனிலால் காந்தி ஆராய்ச்சிக் கழகம், பாரதீய வித்யா பவன், பம்பாயிலிருக்கும் போர்ப்ஸ் குஜராத்தி சபை ஆகியவை பழைய ஏட்டுப் பிரதிகளை வகைப்படுத்தி அதிகார பூர்வமான வாசகங்களை வெளியிட்டிருக்கின்றன. குஜராத்தி மொழி இலக்கியத்தையும் வரலாற்றையும் ஆராய்வதற்கு பயனுள்ள விஷயங்கள் அவற்றின் மூலம் கிடைக்கிறது. சில ஆண்டுகளுக்கு முன் சுந்தரம் இயற்றி வெளியான அர்வாசீன கவிதா, ராம் நாராயண பாக் இயற்றிய பிருகத்பிங்கள[1] இரண்டும் கடுமையாக உழைத்துப் படைக்கப் பெற்றவை. நல்ல விவேகம், திடமாக முடிவு காணும் திறன், சுதந்திர வழி ஆகியவை அவற்றின் விசேஷ அம்சங்கள். இவ்விரண்டும் மொழிக்கும், எல்லா இலக்கியத்திற்கும் பெருமை தரக்கூடிய நூல்கள்.

இலக்கியத் திறனாய்வுத் துறையில் விஷ்ணு பிரசாத திரிவேதி, தோளா ராய் மன்காட், ஜே. யி. சஞ்சானா, விசுவநாத பட், விஜயராய் வைத்யா, அனந்தராய் ராவல் ஆகியோர் பணிபுரிந்து வருகின்றனர். பண்டித சுக்லால்ஜி காலம் சென்ற கிஸோரிலால் மஸ்ருவாலா இருவரும்

1. 1953 முதல் 55 வரை உள்ள ஆண்டுகளில் குஜராத்தியில் இலக்கியச் சிறப்புகள் படைத்த நூல் என்று 1956-ல் சாகித்திய அக்காதெமியின் பரிசு பெற்றது.

தத்துவச் சிந்தனைச் செறிவுள்ள நூல்களை இயற்றி யுள்ளனர். முனிஜீன விஜயா, ஹரப்பிரஸாத சாஸ்திரி, காலம் சென்ற துர்கா சங்கர சாஸ்திரி ஆகியோர் சரித்திர ஆராய்ச்சித் துறையில் பாடுபட்டிருக்கிறார்கள். மொழி இலக்கணம், மொழி ஆய்வுத் துறை ஆகியவற்றில் போகிலால் சந்தே சரா, பேசார்தாஸ் பண்டிட், ஹரிவல்லப பாயாணி, பிரபோத பண்டிட் ஆகியோர் உழைத்துள்ளனர். ஆனால் இதுவரை உயர்தர சஞ்சிகை களில் கட்டுரைகளாகத்தான் இவை வெளிவந்துள்ளன. எல்லா அம்சங்களையும் விவரித்து இலக்கியத் திறனாய்வுக் கொள்கைகளைப் பற்றி தகுதியுள்ள எவரும் எழுதிய நூல் புத்தக வடிவில் வரவே இல்லை. ஸம்ஸ்கிருதம் அல்லது ஆங்கில இலக்கணத்தை அடிப்படையாகக் கொண்டிராத இலக்கண நூல் தோன்றவில்லை. மொழி களைக் கையாளும் வழிகளைப் பற்றிய நூல்கள் இருக் கின்றன. குஜராத்தி மொழியும் இலக்கியமும் என்ற தலைப்புடன் நரசிம்மராவ் திவேதியா இரண்டு பாகங்கள் கொண்ட நூல்கள் எழுதி பல ஆண்டுகளுக்கு முன் வெளியிட்டார். இத்துறையில் புதிதாக நடந்த பல்வேறு ஆராய்ச்சிகளின் அடிப்படையில் அந்நூல் பூராவாக மீண்டும் சோதிக்கப்பெற்று வெளிவந்துள்ளது. விஷயங் களை விஞ்ஞான ரீதியில் இன்றைய நிலை வரைக்கும் சேர்த்து ஆராய்ந்து இயற்றியுள்ள நூல் எதுவும் கிடையாது. ஆங்கில மொழிக்கு ஸெயின்ட்ஸ்பரி, லெகூயி, காஸாமியான் ஆகியோர் தொண்டாற்றி யிருப்பதுபோல குஜராத்தி இலக்கிய வரலாற்றை முழுமை யுடன் உண்மையாக விரிவாக இயற்றித்தர வேண்டிய அவசியமிருக்கிறது.

தேசம் சுதந்திரமடைந்த பிறகுதான் இலக்கிய வளர்ச்சிக்கும் அபிவிருத்திக்கும் பக்குவமான சூழ்நிலையே ஏற்பட்டுள்ளது. ராஜீய சர்க்காரும் மத்திய சர்க்காரும் இலக்கியத் திறனை அங்கீகரிக்கும் வகையில் நல்ல

ரொக்கப் பரிசுகளை வழங்க முன்வந்துள்ளனர். பிராந்திய சர்வகலாசாலைகள் ஏற்பட்டிருப்பது மொழியையும் இலக்கியத்தையும் வகையாக விஞ்ஞான ரீதியில் ஆராய்வதற்கு உதவியுள்ளது. பல்வேறு மொழித் தொகுதிகளிடையேயும் தேசத்துக்குள்ளேயும், சர்வதேச அடிப்படையிலும் தொடர்புகள் விரிந்துகொண்டே போகின்றன: குஜராத்தில் இலக்கியம் தழைப்பதற்கான சூழ்நிலையை அவை உருவாக்கி வருகின்றன. குஜராத்தையும், குஜராத்தி இலக்கியத்தையும் பற்றி மட்டுமே இப்போது சாதாரண குஜராத்தி எழுத்தாளன் நினைப்பதில்லை. அவன் கையாளக்கூடிய வரம்பு விஷயங்களில் புதுமையும் வரம்பற்ற விசாலமும் இருப்பதைக் காணலாம்.

பிற நாட்டு எழுத்தாளரைப் போலவே தற்கால குஜராத்தி எழுத்தாளனுக்கும் ஒரு பிரதிகூலம் இருந்து வருகிறது. அவன் கவிஞன் கூறியதுபோல இரண்டு உலகங்களிடையே ஊசலாடுகின்றான். ஒன்று இறந்து பட்டது, மற்றொன்று பிறப்பதற்கு சக்தி இல்லாதது. சாசுவதமான உயர்ந்த வாழ்க்கை நியதிகளைப் பற்றியும் எதிர்காலத்தைப் பற்றியும் அவனது நம்பிக்கையை அணு, ஹைட்ரஜன் குண்டுகள் சிதைத்து வருகின்றன. எனவே அவனது பணி மலையேற்றம்போல இருந்து வருகின்றது. அந்த சாசுவதமான நியதிகளில் தனக்கு நம்பிக்கையை முதலில் பலப்படுத்திக்கொண்டு, ஜீவ சக்தியை அவன் முதற்படியாகப் பெறவேண்டியிருக்கிறது. பிறகு இன்னும் செத்து மடியாத இருதயங்களில் நிச்சயமாக எதிரொலிக்கும் வகையில் முழு மூச்சுடன் லாகவமாக அவற்றை அவன் பாடவேண்டியிருக்கிறது.

## SELECT GUJARATI BIBLIOGRAPHY

*Milestones in Gujarati Literature.*
By K. M. Jhaveri.

*Further Milestones in Gujarati Literature.*
By K. M. Jhaveri.

*Present State of Gujarati Literature.*
By K. M. Jhaveri.

*Gujarat and its Literature.*
By K. M. Munshi.

*Linguistic Survey of India.*
By G. A. Grierson, Vol. IX, Pt. 2, pp. 323–477.

# தமிழ் இலக்கியம்

தெ. பொ. மீனாட்சிசுந்தரன்

**பின்னணி**

தென் இந்தியாவின் இப்போதைய சென்னை ராஜ்யத்திலும், இலங்கையின் வடக்கு, கிழக்கு ஜில்லாக்களிலும் பிரதானப் பேச்சு மொழி தமிழ்தான். இப்பிராந்தியங்களிலிருந்து தென் ஆப்பிரிக்கா, கிழக்கு ஆப்பிரிக்கா, பர்மா, மலாயா, தொலைக் கிழக்கு போன்ற நாடுகளுக்குக் குடியேறியவர்கள் பேசுவதும் தமிழே. திராவிட மொழிகளின் குடும்பத்தில் தமிழ்தான் மிகப் பழையது என்பது உறுதி. தெலுங்கு, கன்னடம், மலையாளம் மூன்றும் இக்குடும்பத்தின் பிற உறுப்பினர். இந்த மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த சிறு மொழிகளில் துளு, கொடகு, தோடா, கோடா ஆகியவை தென் இந்தியாவிலும், கோண்டி, ஓரான், மால்டி ராஜ்மகால், கூயி, குருக் ஆகியவை மத்திய இந்தியாவிலும், ஒரிஸ்ஸாவிலும் புழங்குகின்றன. தொலையிலுள்ள பலூசிஸ்தானில் பேசப்பெறும் பிரஹூயியும் இக்குடும்பத்தைச் சேர்ந்ததே. பூஜ்யர் ஹேராஸின் ஊகம் உண்மையாக இருக்குமாயின், திராவிட மொழிகளின் குடும்பம் மொஹேஞ்சதாரோ நாகரிகத்துடன் பண்டைக் காலத்திலேயே தொடர்புகள் கொண்டதாக இருந்திருக்க வேண்டும்.

தமிழில் மிகத் தொன்மையான நூல் இன்று கிடைப்பது இலக்கணத்தைப் பற்றிய தொல்காப்பியம் என்று அறிஞர்கள் கூறுகின்றனர். அகத்திய முனிவரின் சீடர் ஒருவர் அதை ஆக்கித் தந்தார் என்பது மரபு. தமிழில் காணப்பெறும் ஸம்ஸ்கிருத திசைச் சொற்களைப் பற்றி இதில் பிரஸ்தாபம் இருக்கிறது. தமிழும், ஸம்ஸ்கிருதமும் தொடர்பு கொண்டது குறைந்தது வரருசி காலத்தில் (கி. மு. நான்காவது நூற்றாண்டில்) என்று வடமொழி நூல்களிலிருந்து அறிகிறோம். ஒரு காலத்தில் ஜைன, புத்த மதங்கள் தமிழ் நாட்டில் சக்தியுடன், செல்வாக்குடன் திகழ்ந்தன. சமயம், வாணிபம், கடலாடி வர்த்தகம் ஆகியவை பயனுள்ள வகையில் வடக்கையும், தெற்கையும் பிணைத்திருக்க வேண்டும். இவ்விரண்டு பண்பாடுகளின் ஒட்டுச் சேர்க்கையின் விளைவுகளில் ஒன்று தென்னிந்தியாவில் (கி. மு. மூன்றாவது நூற்றாண்டில்) பிராம்மி லிபியில் காணப்பெறும் குகைக் கல் வெட்டுக்கள். தமிழும், பிராகிருதமும், சிங்களச் செல்வாக்கும் சேர்ந்த ஒரு கலப்பு மொழியில் அது வரையப்பெற்றுள்ளது.

தமிழ் இலக்கியத்தின் தொன்மையைப் பார்ப்போம். சங்க இலக்கியத்தில் யவனர்களைப் பற்றிய பிரஸ்தாபம் இருக்கிறது. சங்க காலம் கிறிஸ்துவ சகாப்தத்தின் தொடக்கம் என்பதற்கு ருசுக்கள் கிரேக்க நூல்களிலும், அரிக்கமேடு புதைப் பொருட்களிலிருந்தும் கிடைத்துள்ளன. சங்க கால இலக்கியம் விரிவானது. சிறு பாடல் திரட்டுக்களும், நீண்ட கவிதைகளும், காதலும் வீரமும் ஊக்குவித்த நாடக பாணித் தனியுரைகளும் அவற்றில் உள. மேலும், பெருங்காப்பியங்கள் இருக்கின்றன. சிலப்பதிகாரம், (சிலம்பின் காதை), மணிமேகலை என்ற புத்த சமய நூல், இவையும் அமர நூலாகிய குறளும் சங்க கால இறுதியிலோ அல்லது அடுத்த காலத்தின் துவக்கத்திலோ எழுதப் பெற்றிருக்கலாம். அறநெறிகளை சூத்திரங்களாக அமைத்துத் தரும் பணி நடைபெற்றது, அடுத்த காலத்

தில். அது பல்லவர் காலத்தையும் ஊடுருவி இருந்தது என்பது தெளிவு. ஜைன, பௌத்த சமயங்கள் ஏற்றம் கண்டதன் விளைவாக அவற்றிற்கு எதிரிடையான போக்கு உருவாகி சங்ககால இறுதியில் ஹிந்து சமய மறுமலர்ச்சி தோன்றியது. சைவ நாயன்மார்களும், வைணவ ஆழ்வார் களும் தமது இதயத்திலிருந்து சுரந்த தெய்வானுபவப் பிரபந்தங்களில் அது கீர்த்தியுடன் கூடிய முழுமையைக் கண்டது. சிற்பிகளும், கலைஞர்களும் வானை நோக்கிக் காட்டும் கோபுரங்களை ஹிந்து ஆலயங்களில் அமைத்து ஆற்றிய பணியைப் போன்றது, தெய்வீக ஊற்றம் ததும் பும் கவிதைகளை அற்புதச் சொல்லோவியங்களாக அவர் கள் அமைத்து வழங்கிய சேவை. பக்தி மார்க்கத்தையும் சரணாகதியையும் பாமரமக்களுக்கு போதித்தவர்கள் நாயன்மார்களும் ஆழ்வார்களும். முக்கியமாக நாயன்மார் களில் மாணிக்கவாசகர், அப்பர் ஆகியோரையும், ஆழ்வார் களில் நம்மாழ்வாரையும், ஸ்ரீ ஆண்டாளையும் குறிப்பிட வேண்டும். இன்றைக்கும் தமிழ் நாடெங்கும் பக்தர்கள் இப்பாசுரங்களைப் பாடி வருவதைக் காணலாம். இலக்கியப் பெருங்காதைகள் அடுத்தபடி இயற்றப்படலாயின. சோழ சாம்ராஜ்ய காலத்தில் அவை பிரபலமடைந்தன. இவ் வகையில் தலைசிறந்த சாதனையான கம்பனது ராமாய ணம் தமிழ்ப் பேரிலக்கியங்களில் மிக அதிகமாக போற்றப் பட்டு வருவது முற்றிலும் நியாயமே.

சித்தாந்த முறைகளைப் பற்றிய காலம் அடுத்தாற் போல வந்தது. அப்போதைய தமிழ் நாட்டில் தோன்றிய வர்கள் சங்கரரும், ராமானுஜரும். அவர்கள் தமிழ் அறிந் தவர்கள். வேதாந்தம், சைவ சித்தாந்தம், ஸ்ரீவைணவம் ஆகியவை, கட்டுக்கோப்புக்களுடன் கூடிய வாதத் தொடர்பு உள்ள சித்தாந்தங்களாக உருப்பெறலாயின. இந்த இலக்கியத்தின் பெரும்பகுதி ஸம்ஸ்கிருதத்தில் இருந் தது. எனினும் காலக்கிரமத்தில் தமிழிலும் கணிசமான தத்துவ இலக்கியம் தோன்றலாயிற்று. மெய்கண்டார்,

அருள்நந்தி, உமாபதி, பிள்ளைலோகாசாரியர், வேதாந்த தேசிகர், மணவாள மாமுனி ஆகியோர் இவ்வகையில் குறிப்பிடத்தக்கவர்கள். வியாக்கியானமும், உரை வழங்குதலும் மேலோங்கியிருந்த இக்காலத்தில் பழைய கவிதை ஜீவசக்தியுடன்கூட மிளிர்ந்தது. தத்துவ விளக்கங்களுக்காக, தமிழும் ஸம்ஸ்கிருதமும் கலந்த பயனுள்ள மணிப்பிரவாள நடை, பொதுஜனங்கள் இவற்றை அறியச் செய்வதற்குப் பெரிதும் பயன்பட்டது. வேதாந்த தேசிகரது ''ரகசிய த்ரய ஸாரம்'' இதற்கு சிறந்த எடுத்துக்காட்டு. ஸம்ஸ்கிருதச் சேர்க்கையின் காரணமாய் புதுமையாகப் புகுந்த கம்பீரமான சந்தங்களும் சிற்சில சமயம் காதற் சுவையும் தமிழ் இலக்கியத்தில் திளைக்கலாயின. தமிழும், ஸம்ஸ்கிருதமும் இரண்டு தனி நீரோட்டங்களாக இருந்தவை ஒன்றுகக் கலந்தன. இவ்விரு மொழிகளின் சேர்க்கையினின்று கீர்த்தனங்கள் என்ற சங்கீத வடிவங்கள் தோன்றின. இந்தப் போக்குகளின் வளர்ச்சியே இப்போது கர்நாடக சங்கீதம் என்று வழங்கப் பெறுவது. பிற்கால ஞானிகளின் கவிதைகளில் ஆனந்த தாண்டவத்தைக் காணலாம். பாளையக்காரர்கள் என்ற சிற்றரசர்களுக்கு ஆபாசமான கவிதைகளை இசை வல்லுநர்கள் வழங்கினர். ஸ்தல புராணங்கள் பிரபலமாயின. குறவர், பள்ளர் போன்ற பிற்பட்ட வகுப்புக்களின் வாழ்க்கையைப் பற்றி தெருக்கூத்துக்கள் வந்தன. கவிதை, இசை, நடிப்பு ஆகியவை எப்படியோ எங்கும் கண்டிராதவாறு இலக்கியத்தில் ஒருமித்துக் கலந்தன.

### தற்காலம்

குழந்தைகளையும், தாழ்த்தப்பட்டவர்களையும் உத்தேசித்து பழகு தமிழின் வளர்ச்சியில் கிறிஸ்துவப் பாதிரிமார்கள் அக்கறை காட்டினர். கவிதை முதிர்ச்சி பெற்று பயனற்றதாகிவிட்டது. ஜன ரஞ்சிதமான சந்தமோ காலத்திற்கேற்ற சொல்லாட்சியோ அதில் இருக்கவில்லை.

மேலை நாடுகளின் முற்போக்கைப் பற்றிய ஆதர்சத்துடன் பத்தொன்பதாவது நூற்றாண்டு தொடங்கியது. தற்கால சிந்தனைகளைக் கொண்ட நூல்களை மொழி பெயர்த்தும் தழுவியும் வழங்க தமிழர்கள் முற்பட்டனர். மேலை நாடுகளின் இலக்கியப் போக்கைப் பின்பற்றி பத்திரிகைகளையும், கல்வி நிலையங்களையும் தோற்றுவித்தனர். ஆட்சித் துறையில் தமிழ் பெற்றிருந்த இடங்களையெல்லாம் ஆங்கிலம் நிரப்பிக்கொண்டது. 20-வது நூற்றாண்டு சுதந்திர சகாப்தம். சாமான்ய மக்களின் காலம். சுப்ரமண்ய பாரதி ஆஜராகியிருந்த சூரத் காங்கிரஸ் காலத்தில்தான் உண்மையில் அது தொடக்கமுற்றது எனக் கூறலாம்.

தற்காலத் தமிழ் இலக்கியம் இக்கால வாழ்க்கையின் தன்மையையும் போக்கையும் பிரதிபலிப்பதுடன், சமூகத்தின் லட்சியங்களை ஊக்குவிப்பதாகவும் அமைந்துள்ளது. 20-வது நூற்றாண்டு ஆசியாவின் விழிப்பைக் குறிப்பாகக் காட்டுகிறது. தேசிய விடுதலைக்கும், மறுமலர்ச்சிக்குமான போராட்டம் அதன் பிரதான அம்சம். தற்காலத் தமிழ் இலக்கியத்தின் மிகச் சிறந்த படைப்புக்கள் அதன் தேசியப் பாடல்கள்தாம். தமிழ் இலக்கியத்திற்கே உரித்தான மரபுக்கேற்ப, இப்பாடல்கள் ஆழ்ந்த சமய ஆர்வத்துடன் மிளிர்கின்றன. தெய்வானுபவத்தின் ஆழத்தைக் காண முயற்சிக்கையிலேயே பிரபஞ்சத்தையே ஆட்கொள்ளும் உச்ச நிலைகளையும் அவை எட்டிப் பிடிக்கின்றன. தூய்மையான கருணையும், அன்பும் அவற்றில் நிறைந்துள்ளன. கசப்போ, கெட்ட எண்ணமோ அதில் கலக்கவில்லை. அவற்றின் பரந்த தன்மை அடிவானத்தை அடைந்து அதனுடன் ஒன்றுவதுபோல் இருக்கிறது. துவேஷமும், கசப்பும் எப்போதுமே இருந்ததில்லையென்று நான் கூறவில்லை. ஏகாதிபத்தியத்திடம் துவேஷம் என்றுமே இருந்து வந்துள்ளது. குருதியைப் பெருக்கி பழிவாங்கும் நோக்கம் கொண்ட புரட்சிக் கருத்தினர் பலாத்காரச் சித்தாந்தம் ஒன்றை வகுத்துக் கொண்

டனர். சக்தியின் பலிபீடத்தில் தியாக வேள்வி நடத்தி, சக்திதான் "பாரத மாதா" என்று அவர்கள் கருதினர். மிதவாதிகளையும், பிரிட்டிஷாரையும் பாமர ரஞ்சிதமான மெட்டுகளில் பாட்டிசைத்துக் கேலி செய்து நிந்திக்கும் வழக்கம் இருந்து வந்தது. மன்னனும் மக்களும் சோம்ப லில் ஆழ்ந்திருந்த தொன்மையான நிலையை உணர்த்தும் நாட்டுப் பாடல்களிலும் இம்மாதிரி கவர்ச்சிகரமான சூழ் நிலைகள் இருந்தன. ஆனால் மிகச் சிறந்த கவிதைகள் சிலவற்றில் கடுகளவுகூடக் கசப்பு கலக்கவே இல்லை. மென்மையான நகைச்சுவை கூடச் சேர்ந்து, நிந்தனைப் படைப்புக்களாக அவை உருவெடுத்துள்ளன.

பிரகலாதன், அப்பர் சுவாமிகள் பின்பற்றிய வழி எப்போதுமே தமிழனுக்குப் பிடித்தமானது. அப்பர்தான் தென்னிந்தியாவின் முதல் சத்தியாக்கிரகி. "யாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்" என்று, பல்லவ மன்ன னின் செருக்கையும், சக்தியையும் எதிர்த்து, முழக்கினர். எனவே மகாத்மா காந்தியைத் தெய்வமாகக் கருதி, "கத்தி யின்றி ரத்தமின்றி" நடந்த போரில் தமிழர்கள் முக்கிய மான பங்கெடுத்துக் கொண்டதில் ஆச்சரியமில்லை. தென் னுப்பிரிக்க நாட்களிலிருந்தே இது நிகழ்ந்தது. மகாத்மா காந்தியும் அவரது சத்தியாக்கிரகமும் தமிழ் நாட்டின் இத யத்தையே தொட்டுவிட்டன. காந்தி சகாப்தப் பாடல் களைத் தமிழில் அவை ஊக்குவித்தன.

இந்த தேசியத்தின் கவிஞனுகத் தோன்றியவர் பாரதி. ஆழ்ந்த சமய நெறி அவருக்கு உடன் பிறந்தது. பிரபஞ்ச சக்தியை அவர் மனப்பூர்வமாக பூசித்தவர். அவரது கவிதையில் சரளமான ஓட்டம் இருக்கிறது. அதில் இருமனப் போக்கு அல்லது இசைவுக் குறைவு கிடையாது. தாய்நாட்டிடம் அன்பு செலுத்தி அதன் புகழைப் பாடும் கவிதையே பரமானந்த சொரூபத்தையும் புலப்படுத்துகிறது. நாட்டுப் பற்று சமயக் கடமையாகக் காட்சி அளிக்கிறது. விடுதலை இயக்கமே ஆண்டவனின்

சாசுவதமான தாண்டவமாகிறது. சக்தியின் அந்த திவ்வியமான ஊழிக்கூத்தில் வெற்றியும் லட்சிய சித்தியும் உறுதி என்ற நம்பிக்கை மேலோங்கிக் காணப்பெறுகிறது. கொடுமைக்காளாகி தாழ்த்தி வைக்கப்பட்டிருந்த நாட்டு மக்களுடன் சேர்ந்து ஆடுகிறான், பள்ளுப் பாடுகிறான். எல்லோருக்குமே விடுதலை. எல்லா மிடிமைகளினின்றும் விடுதலை என முழக்குகின்றான். வர இருந்தவைகளை இந்தப் பாடல் எவ்வாறு அறுதியிட்டுக் கூறுகிறது! அன்பின் வழியில் சுதந்திர விடிவு காலம் வருவதற்கு கால் நூற்றாண்டுகளுக்கு முன்னமேயே இப்பாடல் புனையப் பெற்றது!

தமிழனுக்குத் தாய்நாடு இருவகையாகக் காட்சி அளிக்கிறது. ஒன்று பாரதத் தாய் என்ற விரிவான தோற்றம். மற்றொன்று தமிழ்நாடு என்ற உறவு முறைக் காட்சி. மொழிவழி ராஜ்யங்கள் ஏற்பட்டுள்ள இப் போதைய பத்தாண்டில் இந்த இரண்டாவது அம்சம் எடுப்பாக ஒருக்கால் காணப் பெறலாம். மிகச் சிறந்த தேசியப் பாடல்களில் தமிழ்நாடு அளிக்கும் காட்சி முக்கிய மாக பண்பாட்டின் உறைவிடமாகத்தான். எனினும் இன்றைய நிலவரத்தில் அது ஒரு தனி உறுப்பு என்ற பூகோள அம்சத்தை மறுப்பதற்கில்லை.

தெய்வமாகப் போற்றிப் பாடப்பெறுவது தமிழ் மொழியேயொழிய தமிழ்நாடு அல்ல. இது இந்நாட்டின் தொன்மையான மரபுக்கு இசைவானது. தமிழ் மொழி ஈசுவர அம்சம், ஆண்டவனது அவதாரம், சிவன், விஷ்ணு அல்லது சக்தி என்று தமிழ் மக்கள் நினைக்கிறார் கள். நாட்டுப் பற்று ஒவ்வொருவர் ரத்தத்திலும் பாய்ந் தோடுகிறது. தமிழன் இதயத்தில் வரலாறும் மரபுமாகச் சேர்ந்து சமயப்பற்றை, சிலகால் மிதமிஞ்சிய ஆர்வத்தை எட்டிப்பிடிக்கும் வகையில் புலப்படுத்துகின்றன. தமது தொன்மையான மொழியின் சுதந்திரத்துக்கு ஆக்கிர மிப்பு நேருகிறது என்ற ஐயப்பாடு சிறிதேனும் தோன்று

கையில், அவர்களிடை இப்போக்கே மேலோங்கியிருக்கக் காணலாம். தனது மொழியில் பாடுவதற்குச் சுதந்திரம், தன் மொழியில் கல்வி போதிக்கப் பெறுவதற்கு, நீதிமன் றங்களில் வாதிடுவதற்கு, சட்டசபைகளில் பேசுவதற்கு, ஆட்சியை நடத்துவதற்கு, திசையெங்கும் தமிழ் முழக்கம் செய்வதற்கு, சுதந்திரம் என்ற அந்த இன்சொல் மிகச் சக்தி வாய்ந்ததாகவும், ஊக்கம் அளிப்பதாகவும் உணர்ந்து உளம் பூரிக்கின்ருன் தமிழன். இது குறுகிய பிராந்திய அபிமானம் என்று அவன் நினைக்கவில்லை. சுறுசுறுப்பான பிரபஞ்ச ஒருமைத் தத்துவத்தின் பகுதி யாகவே, தன் மொழிக்கு இந்த விடுதலையை அவன் உரிமையாகக் கொண்டாடுகிருன். இந்தக் கண்ணோட்டத் தில் பார்த்தாலொழிய தமிழனின் பெருமையைப் பற்றி சமீபகாலத்தில் வெளிவந்துள்ள கவிதையின் முழுப் பொருளையும் புரிந்துகொள்ள முடியாது, பாராட்டுவதும் சிரமம். சில சமயம் துரதிருஷ்ட வசமாக இங்குகூட போர் வெறி எதிரொலிக்கின்றது.

லட்சியத்துக்கு திட்டவட்டமாக உருவம் கொடுத்துக் காட்டுவது தற்காலப் போக்கு. அதன் கவலையெல்லாம் மக்களைப் பற்றியே. "வாழிய செந்தமிழ், வாழ்க நற்றமிழர்" என்று பாடுகிருன் கவிஞன். வறுமையி னின்று, அறியாமையினின்று, மிடிமையினின்று விடுதலை பெற்று, சமூகம் ஆனந்தமயமாக வாழ வேண்டுமென்பது அவனது லட்சியம். "பாரத சமுதாயம் வாழ்கவே" என்பது புகழ்பெற்ற ஒரு பாடலின் பல்லவி. "தனி ஒருவனுக்கு உணவில்லையெனில் ஜகத்தினை அழித்திடு வோம்" என்று முழக்குகின்ருன் கவிஞன். விதியைப் பற்றிய பழம் பேச்சுக்கு இனி இடமில்லை. இந்த நம்பிக் கையுடன்கூட க்ஷேமநல அரசாங்கத்தை அமைக்கும் பண்பை திருவள்ளுவர் காலத்திலேயே பார்க்கலாம். தமிழ்ப் புராணங்களில் அழகாக வருணிக்கப்பட்டுள்ள சுவர்க்கத்தைப் பற்றிய கனவு என்று அதை இங்கு

எவரும் கருதுவதில்லை. நமது அரசியல் அமைப்பின் கீழ் சமூக சீர்திருத்தத்தின் மூலம் அடைய வேண்டிய நிலை அது. சாமானிய மக்களின் சகாப்தம் உதயமாகி விட்டது, மன்னர்களின் காலம் அஸ்தமித்துவிட்டது. இதுவே உண்மையான ஜனநாயகம். இதுவே உண்மை யான சுதந்திரமும் சமத்துவமும். இதுவே சமநிலையில் உள்ள மக்களின் சுதந்திரமான தோழமை. ஆர்வம் கொண்டிருப்பது வெறும் அரசியல் விடுதலையில் மட்டு மல்ல. சமூக, பொருளாதார விடுதலைகள் சமஅளவில் வற் புறுத்தப் பெறுகின்றன. ஆண் பெண் சமத்துவம், எல்லா ஜாதிகள் மதங்களின் சமத்துவம் பேசப் பெறுகிறது. ஒரு சுதந்திர சமுதாயத்தை உருவாக்கும் பொறுப்பு தனக்கு உண்டு என்பதை கவிதை ஏற்றுக்கொள்கிறது. சில சமயம் அது வெறும் சாதாரணமான பிரசார கோஷமாக, நச்சு கலந்த நிலைக்குத் தாழ்ந்துவிடுகிறது. சுய மரியாதை போற்றப் பெறுகிறது. ஆனால் அது பெரும்பாலும் பிறருக்கு அவ மரியாதையை மிடுக்காகக் காண்பிக்கும் நிலைக்குத் தாழ்ந்து விடுகிறது. உலகம் எங்கும் ஒரு புதிய சமூக அமைப்பு தோன்றிக் கொண்டிருக்கையில் இம்மாதிரி விபரீதங்கள் தவிர்க்க முடியாதவை.

### ஜனநாயகமும் இலக்கியமும்

ஆரம்பக் கல்வியின் வளர்ச்சி, பத்திரிகைகள் படிக் கும் பழக்கம் பெருகி வருவது, சினிமாவின் கவர்ச்சி அதி கரித்து வருவது, ரேடியோ, மலிவான பத்திரிகைகள், அரசியல் பிரசாரம், வயது வந்தவர்களுக்கு ஓட்டுரிமை இவை எல்லாமாக இலக்கியத்தின் போக்கைப் பாதித்து வருகின்றன. இலக்கியமானது பொறுக்கியெடுத்த சில ருக்காக என்று இருந்த காலம் மாறிவிட்டது. அது எல்லோரையும் உத்தேசித்ததாக இருக்க வேண்டியதாகி விட்டது. முதற்படியாக கவிதா உணர்ச்சியானது கீழ்

நோக்கி வர வேண்டியிருக்கிறது. பேசும் மொழிக்கும், இலக்கிய மொழிக்குமிடையே உள்ள பிளவு மறைய வேண்டும். பழைய சந்தங்கள் மாற வேண்டும், அல்லது அவை மறைந்து ஒழிய வேண்டும். நாட்டுப் பாடல்கள், நாடகங்களின் சொல்நயம் மெதுவாக ஏற்றம் கண்டு வருகின்றது. தனது தெய்வீக, தேசிய இதிகாசக் கவிதைக்கு அவை தகுதி வாய்ந்தன என்பதை பாரதி நிரூபிக்கின்ருன். எனவே, இலக்கியத்திலும் ஜனநாயகம் நன்ருக வேரூன்றியுள்ளது.

சித்தர்கள் தமிழ் நாட்டின் மாண்புமிக்க ஞானிகள். அவர்கள் தெய்வானுபவம் நிறைந்தவர்கள். வரப்போகும் மாறுதலுக்கு அவர்களே முன்னேடிகளாக விளங்கினர். பாரதியே ஒரு தெய்வஞ்ஞன். உண்மையான தெய்வஞ்ஞானையால் எல்லாவற்றிலும் கடவுளைக் காண்கின்ருன். தனது புதிய ஜனநாயகத்திற்கேற்ப மனிதனுடன் ஆண்டவன் நெருங்கி உறவாட வேண்டுமென்று நினைக்கின்ருன். கடவுளைத் தனது சேவகனுகவும் காண்கின்ருன். இது தீரமிக்க அனுபவம். காதலியாக, தந்தையாக, தாயாக, ஆண்டையாக அவனை சுவைத்துப் பாடுகிருன். இது ஆழ்வார்கள் காலத்துத் தொன்மையான அனுபவம். ஆனல் ஜனநாயக யுகத்தில் ஒவ்வொரு மனித உடலிலும் ஆண்டவனைக் காண வேண்டிய நிலவரத்தில் இது பொருள் படைத்ததாகிறது. இதைவிட ஜனநாயகத்தையோ தனி நபரின் மேன்மையையோ பற்றி அதிகக் கீர்த்தி வாய்ந்த கருத்தை வேறெங்கும் காண இயலாது. அழிவின்றி ஆத்மா மறுபிறப்பில் தோன்றுகிறது என்ற சித்தாந்தத்தில் எப்போதுமே சாதாரண மக்களுக்கு நம்பிக்கை உண்டு. எனவே மிருகங்களும், பறவைகளுங் கூட சகோதர சகோதரிகளாகக் கருதப் பெறுகின்றன. உயிர் வாழ்வன அனைத்தும் சேர்ந்த ஜனநாயகத்தில் ஒரு நம்பிக்கை. ஆண்டவனும் ஞானிகளும் பல்வேறு வடிவங்களில் உலவும் இவ்வுலகில், மனிதனும் மிருகமும் ஒத்து

ழைக்க வேண்டுமென்று கருதப் பெறுகிறது. தாய்ப் பசு, கிளிப் பெண், உடன்பிறந்த நாய் போன்றவை வெறும் அலங்காரச் சொற்றொடர்கள் அல்ல, உயிர் வாழும் உண்மைகள். செயின்ட் பிரான்சிஸ்ஸைப் போலவே பாரதியும் இதை உணர்ந்துள்ளான். குரைக்கும் நாய், கோயில் மணி, பிச்சைக்காரனின் ஓலம் இவை எல்லாமே தெய்வீகப் பாடல்களாக சமநிலையில் அவனுக்குத் தென் படுகின்றன. அவனது 'பாப்பா பாடல்கள்' இந்த உணர்ச்சியை மூச்சாகக் கொண்டவை. பாரதியின் 'குயில் பாட்டு' மகத்தான புதைபொருள் கொண்ட ஒரு தெய்வானுபவம். சூழ்நிலையைப் புரிந்துகொண்டா லொழிய அது விபரீதமான காட்டுமிராண்டிப் பாடல் என்றுதான் நினைக்கத் தோன்றும்.

கவிதை கவிதைக்காகவே என்பதில் பாதி உண்மை தான் இருக்கிறது. கவிஞனுக்கு ஒரு லட்சியம் உண்டு. ஒரு நோக்கம் உண்டு. புருஷார்த்தங்கள் எனப்பெறும் சாசுவதமான அறங்கள் காக்கப்பெற வேண்டுமென் பதே இந்திய சித்தாந்தம். எனினும் இப்பணியாற்று கையில் கவிதை இன்பம் ஒருக்காலும் மறக்கப்படலா காது. காதலியின் மென்மையான இன்ப உரையே கவிதை. அது தலைவனை ஆட்கொள்ளப் பார்ப்பது சாசுவதமான அறங்களின் உயர்வுக்காக. எனவே தமிழ்க் கவிதை எக்காலத்திலும் இந்தச் சீரிய நோக்கத்தை, சமய ஆர்வத்தை மறந்ததே இல்லை. தற்காலத் தமிழிலக்கியத் தில் இந்த ஆர்வ மிகுதியைக் காணலாம். சமூகத்தின் சீரமைப்புக்குப் பொதுப்படையாகவும், சாமானிய மனித னின் உயர்வுக்குக் குறிப்பாகவும் அது பாடுபடுகிறது. அதிலிருந்து ஒளியைவிட வெப்பம் அதிகமாக வெளிவர லாம். சில சமயம் பிரசாரமானது இலக்கியம் போல வேஷம் போடலாம். இந்திய இலக்கியத்தில் ஒழுக்கப் பிரசாரம் கவிதையாகத் தோற்றம் அளிக்கக்கூடிய அபாயம் என்றுமே உண்டு. இக்காலத்து மந்திரங்களாகிய

கோஷங்களுக்கு விசேஷக் கவர்ச்சியும் உண்டு. விடுதலை, சமத்துவம், அன்பு, நாட்டுப் பற்று, தாய்நாடு, தாய்மொழி போன்ற கருத்துக்கள் ஒவ்வொன்றும் தனியாகப் பார்க்கையில் அழகானவைதாம். ஆனால் அவை இம்மாதிரி கோஷங்களுக்கு இரையாகி துஷ்பிரயோகம் செய்யப்படுவதற்கு இடமுண்டு. இந்த விசித்திரமான நிலைமையின் காரணமாகச் சில பாடல்கள் பரவலாகப் படித்துப் பாடப்பெறுகின்றன. அவை செல்வாக்குப் பெற்றிருப்பது அவற்றின் கவிதை இன்பம் காரணமாக அல்ல. மக்களுக்குப் பிடித்தமாக இருக்கின்றன, அப்படிக் கோஷிப்பது இன்றைய மோஸ்தர் என்பவையே காரணங்கள். உணர்ச்சிப் பெருக்கும் படாடோப முறையீடும் கலந்த பாடல்கள், கவிதை என்ற போர்வையில் சுலபமாக மக்களுக்கு தவறான வழிகாட்டிகளாகி விடுகின்றன. சாமானிய மக்கள் உயர்வு காணச் செய்து, எல்லோரும் அறிந்த விஷயங்களைப் பற்றிக் கவிதை பாடுவது என்ற கோட்பாட்டின் பொருள், ஆபாசத்துக்குப் பெருமை தந்து கீழ்த்தர உணர்ச்சிகளுக்கு ஆக்கம் அளிப்பது அல்ல. மலிவாக வெளியீடுகளை அச்சிட்டு வழங்குவதற்கு வசதியுள்ள இக்காலத்தில் பிற வகை இலக்கியங்களை எல்லாம் இத்தகைய படைப்புக்கள் விரட்டிவிடக்கூடிய அபாயம் உண்மையில் இருக்கவே செய்கிறது.

பேச்சில் ஒரு காவிய சந்தம் இருப்பதைப் பற்றி பிரஸ்தாபிக்கப்பட்டது. பேசுகிறபடியே எழுத வேண்டுமென்ற கோரிக்கை வளர்ந்து வருகிறது. படாடோபமான பண்டித மொழி இயற்கையாக மரிக்க வேண்டியதே. ஆனால் இடத்துக்கு இடம், சமூகத்துக்குச் சமூகம் பேசுவதிலுள்ள வேறுபாடுகள் நாடக பாத்திரங்களின் உரையாடல்களில் தவிர, வேறு துறைகளில் பிரபலமாகும் பட்சத்தில், மொழியில் ஒரே களேபரம் ஏற்படத்தான் செய்யும். ரேடியோ, பத்திரிகைகள், அரசியல் உரைகள்,

கல்வியின் வளர்ச்சி ஆகியவை சேர்ந்து ஏறக்குறைய ஒரு தரப்பட்ட மொழி உருவாவதற்கு துணைபுரிந்து வருகின்றன. எனவே, தற்காலத் தமிழ்க் கவிதையின் சொல்லாட்சி பழம்பெரும் இலக்கிய வகையைச் சேர்ந்ததாகவோ, இக்காலத்துப் பேச்சு மொழியாகவோ இருக்கவில்லை. பிராந்திய வேறுபாடுகளுடன் கதைப் பாடல்கள் இசைக்கப்பெறுகின்றன. பழைய நாட்டுப் பாடல்களைப் பின்பற்றி இன்னும் கவிதைகள் புனையப் பெறுகின்றன. அல்லி அரசாணிமாலை, தேசிங்குராஜன் கதை போன்றவைகளின் பழைய மரபு தொடர்ந்து அமுலாகச் செய்யும் முயற்சியாக இது ஒருக்கால் இருக்கக் கூடும். இவை ஓரளவு மக்களின் அபிமானத்தைப் பெற்றுள்ளன. ஆனால் ஆந்திர தேசத்தில் இருப்பதைப் போல தமிழ் நாட்டில் பேசும் மொழியை இலக்கிய மொழியாக்கும் இயக்கம் வலுப்பெறவில்லை. எதுகை மோனை இல்லாத செய்யுளும், வசன காவியமும் ஓரளவு தலை தூக்கியுள்ளன. மேலை நாடுகளின் செல்வாக்கே இதற்குக் காரணம்.

சமீபகாலப் போக்கை எதிர்க்கும் வகையிலும் தொன்மையான பழம் பெருமையைப் புதுப்பிக்கும் ரீதியிலும் இலக்கிய மறுமலர்ச்சி காணப்பெறுகிறது. பாஞ்சாலி, பில்ஹணன், புத்தர் பற்றிய பழம் கதைகள் இக்காலத்திற்கு ஏற்ற நீதியுடன்கூட புதிதாகச் சொல்லப் பெறுகின்றன. தற்கால உலகில் புது லட்சியங்களை உருவாக்கும் வகையில் அவற்றை அமைக்கிறார்கள். சுதந்திரம், தேசபக்தி, பெண்கள் வீரம், உயிர்க்களை உள்ள சமயம் இவ்வாறு இலக்கியத்தில் இடம் பெறுகின்றன.

நகைச்சுவை இக்காலத்தில் இலக்கியத்தில் காணப் பெறும் புதிய போக்கு. கூத்தில் வரும் கோமாளியை நீக்கிப் பார்த்தால் பழைய இலக்கியம் கனமாகவும், கம்பீர உயர்நிலைகளில் அமைந்துமே இருந்தது. தற்கால நகைச்சுவை வகைகள் பெரும்பாலும் சஞ்சிகைகளின் மூலம் வளர்ந்தன. நாட்டுப்பற்றைப் பற்றி பெரிய மனிதர்களைப்

பற்றி, ஹாசியமாகக் கருத்துரை வழங்கும்போக்கிலிருந்து அதுஉருவாயிற்று. தற்கால இலக்கிய வளர்ச்சியில் அதற்குரிய பொறுப்பு கணிசமானது. கதைகள், செய்யுட்கள், கட்டுரைகள் நகைச்சுவை சேர்ந்தே காணப் பெறுகின்றன. உண்மையில் ஆசாபாசமில்லாத பெரியவர்களின் ஆத்மாவுடன் ஒன்றிவிடக்கூடிய தன்மை உண்மையான நகைச்சுவைக்கு உண்டு. துயரின் மிகுதியிலும் அவர்களிடம் இந்த அனுபவத்தைக் காணலாம். கவிமணி நோயால் ஆட்கொள்ளப்பெற்று தவித்தபோதுகூட ஒரு ஞானியின் நடுநிலைமை நோக்குடன்கூட, தமக்கே உரிய நகைச்சுவையுடன், தம் உடலின் மேலுள்ள ரணத்தை வெள்ளி முத்துக்கள் என்றும், ரத்தினங்கள் என்றும் அன்பு ததும்பும் கட்டிகள் வெடித்து வழங்கும் மாணிக்கங்கள் என்றும் பாடுகிருர்.

குழந்தைகள் விஷயத்தில் பரிவு காட்டுவது இந்த நூற்ருண்டின் சிறப்பு. அவர்களுடைய கல்விக்கு வகை செய்ய வேண்டுமென்பது அதிகமாக வற்புறுத்தப் படுகிறது. தாய்மொழியில் போதனை, ஆடல் பாடல் நிறைந்த ஆக்க வேலைகள் மூலம் பரிணமித்து அறிவாற்றல் பெறும் வழி வற்புறுத்தப் பெறுகின்றன. உடல் நிலை, மனவியல் ஆகியவற்றுக்கேற்ப வகை செய்து பாட புத்தகங்கள் தயாரிக்கப் பெறுகின்றன. மொழியில் புதுமை செறிந்த, இதுகாறும் மறைந்து நின்ற சாத்தியக் கூறுகள் வெளிப்படுகின்றன. குழந்தைக் கவிதைகள் மலிந்த மரபு உண்டு தமிழுக்கு. தாலாட்டுப் பாடல்களும், சீராட்டுச் செய்யுள்களும் உண்மையான இலக்கிய அழகு ஜொலிக்கும் ரத்தினங்கள். பாரதியும், கவிமணியும் இத்துறையிலும் வழிகாட்டிகளாகப் பணியாற்றியுள்ளனர்.

## பத்திரிகைத் தொழிலின் செல்வாக்கு

இலக்கியத்தின் மீது பத்திரிகைத் தொழில் பெற்றுள்ள செல்வாக்கை அலட்சியம் செய்ய முடியாது.

தினசரிகள், வாரப் பத்திரிகைகள், மாசிகைகள் இலக்கியம் அல்ல. ஆனால் பலவகைகளில், எல்லாவிதமான இலக்கியங்கள் உருவாவதற்கும் நவீன சிந்தனைகளைப் பரப்பும் சாதனங்களாகவும் அவை பயன்படுகின்றன. தற்கால எழுத்தாளர் பலரது இலக்கிய முதல் முயற்சிகளுக்கு அவை இடமளித்து ஆதரிக்கின்றன. புதுப் புது நிகழ்ச்சிகளை, கருத்துக்களை, கண்டுபிடிப்புக்களை, படைப்புக்களையும் பிறவற்றையும் சாமானிய மக்களுக்கு புரியக் கூடிய வகையில் தமிழில் வழங்கும் சிரமமான பொறுப்பு தமிழ்த் தினசரிக்கு உண்டு. பத்திரிகை வெளிவரும் நேரத்துக்குச் சில நிமிஷங்கள் முன்வரை கிடைக்கும் தகவல்கள் இவ்வாறு தரப்படுகின்றன.

தேசிய விடுதலைக்கு ஆதரவாக பத்திரிகைத் தொழிலில் காலஞ்சென்ற திரு. வி. கலியாணசுந்தர முதலியார் இறங்குவதற்கு முன்னர், ஸம்ஸ்கிருத மூலங்களிலிருந்து உருவாக்கப் பெற்ற பண்டிதச் சொற்றொடர்களை பத்திரிகைகள் உபயோகிப்பது வழக்கமாக இருந்து வந்தது என்று புகழ்பெற்ற நாவலாசிரியர் ‘கல்கி’ கூறியுள்ளார். திரு. வி. கலியாணசுந்தர முதலியாரது செல்வாக்கின் பயனாக, பத்திரிகைகள் கையாளும் மொழி தமிழின் உண்மையான மேதைக்குத் தக்கவாறு உருப் பெற்றது. ஸம்ஸ்கிருதப் பிரயோகங்கள் உட்பட எல்லா அன்னியச் சொற்களையும் அகற்றிவிட வேண்டுமென்று ‘தூய்மையாளர்’ ஓர் இயக்கத்தைத் தொடங்கி இருக்கின்றனர். கடிகாரத்தில் ‘தொங்கட்டான்’ ஒரு கோடியிலிருந்து நேர் எதிர்க்கோடிக்குப் போவது போல, முந்தைய போக்கின் இயற்கையான, தவிர்க்க முடியாத, எதிர்மறை நிலையே இது. எனினும் இதுவரை ஆழ்ந்து வெளிக் கொணரப் பெறாத மூல ஊற்றுக்கள் வெளிவருதற்கு இந்த இயக்கம் துணைபுரிந்திருக்கிறது. எனவே, இவ்வியக்கம் வகுப்புவாதத் தன்மை வாய்ந்தது அல்லது ஸம்ஸ்கிருதத்திற்கு எதிரிடையானது என்று வருணிப்பது நியாய

மாகாது. இது வெறும் எதிர்மறை நிலையல்ல. மொழியைச் சீர்திருத்த வேண்டுமென்ற உருப்படியான நோக்கங்களைக் கொண்டது. ஆனால் பிற துறைகளைப் போலவே இதிலும் நடுமைய நிலைதான் செல்லுபடியாகிறது. சில சமயம் உரையாடும் தமிழும், கொச்சைத் தமிழும் பத்திரிகைத் துறை மீது படையெடுத்து விடுகின்றன. ஆனால் இவற்றால் நிலையான பயன் எதையும் உண்டுபண்ண முடிவதில்லை. தமிழ்ப் பத்திரிகைத் தொழில் ஒரு திட நிலையை அடைந்து விட்டதென்று திடமாக இதற்குள் கூறிவிட முடியாது.

### இலக்கியம் ஒரு தொழில்

20-வது நூற்றாண்டின் தமிழ் இலக்கியத்தில் மற்றொரு முக்கியமான போக்கைக் காணலாம். இலக்கியம் பொழுது போக்காக இருந்த நிலைமை மாறி தொழிலாக மாறி வருகிறது. கவிஞன்கூட வேலையைத் தேடுகிறான், ஆனால் அரசவைக் கவியாக அல்ல. பேசும் படம் எடுக்கும் ஸ்டுடியோவிலோ அல்லது வேறு இடத்திலோ பாடல் புனையும் பணியை அவன் நாடுகிறான். பணம் கொடுப்பவன் கூறும் ராகத்தைப் பாட வேண்டியது தானே? இத்தகைய நிர்ப்பந்தம் இருந்தபோதிலும், ஷேக்ஸ்பியர் என்னவோ மகத்தான மேதையாகவே வாழ்ந்துவிட்டார். மிகக் கெட்டியான பாறையைக் கூட கல்தச்சன் தன் விருப்பப்படி படைத்துவிடுகிறான். பொதுமக்களின் சுவைகளை தனது கச்சாப் பொருட்களாகக் கொண்டு, அதிலிருந்து புதிய அழகான கலை வடிவங்களை எழுத்தாளன் படைக்கின்றான். ஞானிகளும், சித்தர்களும் இலக்கிய சுதந்திரத்தை அனுபவித்ததாகச் சொல்லப் பெறும் காலத்தில்கூட, தமது சூழ்நிலையைப் புறக்கணித்து கவிஞன் பாடியது இல்லை. பொருளாதாரப் பிரச்சினைகளின் செல்வாக்கிற்கு அடியோடு உட்படாமல் இலக்கியப் பிரச்சினை இருக்க முடியாது. ஒரு தனிப்பட்ட

அபிமானியின் விருப்பு வெறுப்புகளுக்கு அடங்கி நடக்கும் நிலையில் இன்று கவிஞன் இல்லை. ஆயினும் படிக்கும் பொதுமக்களது சுவையை அலட்சியம் செய்ய அவனால் இயலாது. பாமர மக்களுக்கு ரஞ்சிதமாக இருப்பதையே வழங்கும் ஆசை இருக்கத்தான் செய்கிறது. ஆனால் கவிஞர்கள் கைகட்டிச் சேவகம் புரியும் அபாயம் இனி இராது. அதிருஷ்டவசமாக நிலைமை அவ்வளவு மோசமாக இருக்கவில்லை. பொதுமக்களின் அபிப்பிராயம் விழிப்புற்று சக்தி வாய்ந்ததாக காணப்பெறுவதே இதற்குக் காரணம். பழைய போக்கிற்கு அடிமையாகிவிட்ட போதிலும் ஒரு புதிய சமுதாயத்தின் சிற்பிகளாகத் திகழ்வதையே இக்காலத்து எழுத்தாளர் அதிகமாக விரும்புகின்றனர். இந்தியாவின் கடைசி கவர்னர்-ஜெனரலாகப் பதவி வகித்த ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் போன்ற அரசியல் தலைவர்கள் எழுத்துலகிலும் புகழ் பெற்று விளங்குவது மகிழ்ச்சி தரும் நல்ல அறிகுறி.

### விஞ்ஞானக் கண்ணோட்டம்

இது முக்கியமாக விஞ்ஞான சகாப்தம்; இயற்கையின் மர்மங்களையும் மறைந்து நிற்கும் சக்திகளையும் துருவித் தேடும் காலம். விஞ்ஞானத்தில் அக்கறை பரவி வருகிறது. கலையின் லட்சியங்களைப் பற்றிய கருத்து, அதன் செல்வாக்கிற்கு முற்றிலும் அப்பாற்பட்டதாக இருப்பது சாத்தியமல்ல. இக்காலத்திலும் சில கலைஞர்களுக்கு விஞ்ஞானமே லட்சியமாகி விட்டது. "சித்திரக் கலை ஒரு விஞ்ஞானம். இயற்கையின் நியதிகளை விசாரிப்பது போல அதில் ஈடுபாடு கொள்ள வேண்டும். அப்படியாயின் வானவெளித் தோற்றத்தை ஏன் இயற்கைத் தத்துவத்தின் ஒரு பகுதியாக கருதலாகாது? சித்திரங்கள் அதன் சாதனைகள் என்று ஏன் கொள்ளலாகாது?" என்று கேட்கிறார் ஸ்ரீ கான்ஸ்டேபிள். அப்படியாயின் சில சிறு கதைகளையும், செய்யுளையும்கூட

அத்தகைய பரிசோதனைகள் என்று கருதலாம் அல்லவா? சாதாரண விஞ்ஞான பாட புத்தகங்கள் இலக்கியத்துக்கு நேரிடையானவை. ஆனல், டிண்டால், ஹக்ஸ்லி, ரஸ்ஸல் போன்ற விஞ்ஞானிகளின் இலக்கிய விளக்கங்கள் உயர் நிலைகளை எட்டிப் பிடித்துள்ளன. அத்தகைய நூல்கள் தமிழில் அபூர்வமாகவே இருக்கின்றன. ஆனல் அடியோடு இல்லையென்று சொல்வதற்கில்லை. ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியின் "தாவரங்களின் இல்லறம்" "திண்ணை ரசாயனம்" ஆகியவை உண்மையில் சிறந்த நூல்கள். ஆனல் அவை மகத்தான விஞ்ஞான உலகைப் புலப்படுத்தும் அறிமுக சாதனங்கள் தான். "பரமாணுவின் புராணம்" என்ற தலைப்பில் காலஞ்சென்ற பேராசிரியர் ராஜேசுவரி எழுதியுள்ள நூலில் அணுவின் விஞ்ஞானமும் வரலாறும் ஒரு புராணத்தைப் போல படிக்கக்கூடிய வகையில் எழுதப் பெற்றன என்று டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் கூறியுள்ளார். மற்ற விஞ்ஞான விஷயங்களைக் குறித்து பொதுமக்களுக்குப் புரியக்கூடிய வகையில் நூல்கள் வெளிவந்துள்ளன. சர்வகலாசாலைகளும், ராஜ்ய சர்க்கார்களும் அவற்றுக்கு பரிசு அளித்திருக்கிருர்கள். தமிழ் மொழி போதிய அளவு நெகிழ்ச்சி உள்ளது, விஞ்ஞான யுகத்தின் தேவைகளுக்கு வளைந்து கொடுக்கக் கூடியது என்ற உண்மையை தமிழ்க் கலைக் களஞ்சியம் புலப்படுத்துகிறது.

நவீன பகுத்தறிவு வாதம் விரிவானதோர் துறை. அதில் ஓர் அம்சமே விஞ்ஞானத்தில் காண்பிக்கப் பெறும் அக்கறை. மற்ருெரு அம்சம் மூட நம்பிக்கைகளையும் அர்த்தமற்ற சடங்குகளையும், ஜாதி அகம்பாவத்தையும், மத வெறியையும் தாக்கும் வகையிலே பரவலாக உள்ள ஒரு தன்மை. துரதிருஷ்ட வசமாக சில சீர்திருத்த வாதிகள், தாம் தாக்கும் எல்லாவற்றுடன்கூட இலக்கியத்தையும் தவறுதலாக இணைத்துப் பேசுகிருர்கள். அவர்களை எதிர்ப்போர், தமிழ் இலக்கியத்திலிருந்து,

தமது நோக்கங்களுக்கு ஏற்ப மேற்கோள் காட்டி, விளக்கம் கூறி, வன்மையாக பதிலுரை வழங்குவது வழக்கமாக இருக்கிறது. தொன்மையான புராண நூல்களின் மதிப்பு, இலக்கியத்தை சுவைக்க வேண்டிய சரியான முறை, உணர்ச்சியைப் புலப்படுத்தும் சைலி, கலையின் பயன், விஞ்ஞான உண்மைக்கும் சரித்திர உண்மைக்குமிடையே உள்ள வேறுபாடு, இலக்கிய உண்மைக்கும் கலையின் உண்மைக்குமுள்ள வித்தியாசம்—இவற்றைச் சுலபமாக புரிந்து கொள்ளாமல் இருப்பதன் விளைவாக, புகை மூட்டமும் குழப்பமும் நிறைந்த சூழ்நிலையில், இலக்கிய அனுபவமானது பெரிதும் பாதிக்கப் பெறுகின்றது.

### திறனாய்வும் கட்டுரையும்

ஆகையால்தான் இலக்கியத் திறனாய்வு, கலை ஆகியவற்றின் அடிப்படைக் கோட்பாடுகளைத் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. பழைய அமைப்புக்கும் இன்றைய சகாப்தத்திற்குமிடையே பிளவு பெருகிக் கொண்டே போகிறது. விஞ்ஞானமும், மதமும் வேறுபட்டுச் செல்கின்றன. வரலாறும், சம்பிரதாயமும், பகுத்தறிவும் இலக்கியமும் அதே எதிரிடைப் போக்கில் காணப் பெறுகின்றன. நவீன தமிழ் உரை நடையின் தந்தையெனக் கருதப்படும் திரு. வி. கலியாண சுந்தர முதலியார் இந்தப் பிளவை இணைக்கும் பாலம் ஒன்றைப் போட்டார். சுவாமி விபுலானந்தர் மற்றொரு பெரியவர். டி. கே. சிதம்பரநாத முதலியார் தமிழ்க் கவிஞர்களுக்கு விளக்கம் தருகையில் தமது ஆத்ம அனுபவத்தையே முக்கியமாக நம்பி, கவிதைகள் நம் முன்னிலையில் களிநடம் புரியச் செய்தவர். இயற்கையிலும் இலக்கியத்திலும் உள்ள அழகை மறைத்து, புறக்கணித்திருந்த இருள் நிலையைத் தமது குறிப்புக் களாகிய மின்வெட்டுகளைக் கொண்டு பிரகாசப்படுத்தினர் பாரதி. அவரது திறனாய்வு சொந்த அனுபவங்களை

அடிப்படையாகக் கொண்டது. அவரது திருஷ்டியும் அனுபவமும் அதில் முழுப் பங்கு பெற்றன. அவரைப் பின்பற்றி கவிமணியும், மறறவர்களும் தமிழ் இலக்கியத்தில் தாங்கள் சுவைத்த வரலாற்றைப் பாடல்களாக வழங்கி யுள்ளனர். இந்தப் போக்கு இன்றும் தொடர்ந்து காணப்படுகிறது. பழைய கவிதைகளைச் சுவைப்பதற்கு ஒரு புது வழியைக் கொடுத்துள்ளார் மறைமலையடிகள். அந்தப் பழ நூல்களுடன்கூட முற்றிலும் ஒன்றி நின்று அடிசன், மெக்காலே நிர்ணயித்துள்ள திறனய்வுக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்ட, சுலபமான நடையோட்டமுள்ள இனிய பாணியில் அவர் மதிப்புரை வழங்கியுள்ளார். அவருக்குத் தீவிரமான விருப்பு வெறுப்புக்கள் உண்டு. எனினும் அவரது தனித் தன்மையைப் புலப்படுத்துகின்றவையாக இருக்கும் காரணத்தால் இவை நல்ல இலக்கியங்களாகக் கருதப் பெறுகின்றன.

இலக்கியத்தில் கட்டுரைகள் ஒரு தனி வகையைச் சேர்ந்தவை. ஆனல் வாழ்க்கையைப் போலவே இவற்றிலும் எண்ணற்ற விதங்கள் உண்டு. சஞ்சிகைகளில் முன்னர் கட்டுரைகள் நிறைய வந்தன. அது சிறு கதை பழக்கத்திற்கு வருவதற்கு முன்னல் இருந்த போக்கு. கொஞ்ச காலமாக கட்டுரையின் இடத்தை ரேடியோப் பேச்சு எடுத்துக் கொண்டு விட்டது. ரேடியோ விரிவான அரங்கத்தை அமைத்துத் தருகிறது. தமிழர்கள் வாழும் இடங்களில் எல்லாம் ஒலிபரப்பாவதைக் கேட்க முடிகிறது. இசை நிகழ்ச்சிகள், பேச்சுக்கள், கருத்தரங்குகள், விவாத மேடைகள், கவியரங்குகள், நாடகங்கள் ஆகிய எல்லாமே ரேடியோவில் குறித்த நேரப்படி நிகழ்ந்தாக வேண்டியிருக்கிறது. இதுவரை இத்தகைய நிர்ப்பந்தம் இல்லாமல் இருந்த ஆசிரியர்களுக்கு இது ஒரு புதிய அனுபவம். அவர்களுடைய கண் முன்னர் கேட்போர் இல்லை. அவர்கள் எவ்வாறு ரசிக்கிருர்கள் என்பதை உற்று நோக்கிச்

சரிப்படுத்திக் கொள்வதற்கு வேண்டிய வாய்ப்பில்லை. தனிமையில், மூடிய அறையினுள், ஜடமாக இருக்கும் யந்திரத்துடன் பேசுவது உற்சாகத்தைத் தணித்துத்தான் விடுகிறது. குரலையே முற்றிலும் நம்பி, பேசுபவன் தன் கடமையைச் செய்கிறன். கேட்பவர்கள் அநேகமாகக் குடும்ப வட்டத்தில் உட்கார்ந்து இருப்பவர்கள். எனவே பேசும் பாணியானது கம்பீரமாக ஆனல் இயற்கையாக, ரஞ்சிதமாக ஆனல் ஆபாசம் இல்லாமல் அமைய வேண்டும். கேட்கும்போதே புரிந்துக்கொள்ளக்கூடிய இலக்கியமாக அது அமைதல் வேண்டும். குரலைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. ரேடியோ நாடகத்தின் உரை யாடல்களில் சொற்களையும் குரலையும் தவிர வேறு ஒன்றும் இல்லை. வெவ்வேறு பாத்திரங்களை குரல்களின் வேறு பாடுகளிலிருந்துதான் தெரிந்துகொள்ள வேண்டும். குரலைக் கொண்டே மாறி வரும் காட்சிகள், உணர்ச்சி வேகங்கள் ஆகியவற்றையும் புரிந்துகொள்ள வேண்டும். அங்க சேஷ்டைகள், நடிப்பு முதலியவற்றையும், சூழ்நிலை யையும், காட்சியமைப்பையும் அவையே புலப்படுத்த வேண்டும். காட்சிகளின் தொடக்கம், முடிவு, நாடகப் பாத் திரங்களின் பிரவேசம், வெளியேற்றம் ஆகிய எல்லாமே அப்படித்தான். சப்தமே சின்னமாகிறது. பேசும் சொல் சக்தி வாய்ந்தது. அதை உயர்த்தி, தாழ்த்தி மென்மை யாக வழங்கி பிரயோகம் செய்வது, சொல்லாட்சியில் வேறுபாடு, வாக்கியத்தின் அமைப்பில் மாறுதல், சங்கீதத் தின் மர்மசக்தி, தனிப்பட்ட பழக்கவழக்கங்களை எடுத்துக் காட்டுவது இவற்றையெல்லாம் புதிது புதிதாகக் கண்டு பிடித்துப் பயன்படுத்துகிறர்கள். தமிழில் புதைந்து கிடக்கும் சக்திகளை இவை வெளிப்படுத்துகின்றன. ஹோமர் பிசகி விடலாம். ஆனல் ஒலி பரப்பும் கலைஞன் தவறிழைக்கக் கூடாது. முழுக் கவனத்துடன் அவன் இருந்தாக வேண்டும். இல்லாவிடில் கேட்கும் கோடியில் அவர்கள் ரேடியோவை நிறுத்தி விடுவார்கள்.

**நாடகம்**

திருசிய காவியத் (முறைப்படி உள்ள நாடகம்) திற்கு மனித வர்க்கத்திற்கு உள்ள வயதாகிறது. தமிழில் ஆடல் பாடல் கவிதை மூன்றும் இசைவாக அமைவதே நாடகம். மலையாளத்திலும் மற்ற இடங்களிலும் பழைய தெருக் கூத்தை புதுப்பிக்கும் முயற்சிகள் நடைபெறக் காணோம். ஆனால் பிற இடங்களில் பாகவத மேளம் என்னும் வகையில் மட்டுமே இம்முயற்சி நடக்கிறது. சுந்தரம் பிள்ளையின் 'மனோன்மணீயம்' அத்தகைய ஒரு நாடகம். அதில் ஒரு நிலையான நல்ல, ஆனால் கவிதைச்சுவை மிகுந்த சிவகாமி சரிதை சேர்க்கப்பட்டுள்ளது. அது நடிப்பதற்காக எழுதப் பெற்றதாக இருந்திருக்க முடியாது. செய்யுளில் நாடகங்களை இன்னும் எழுதுபவர்கள் இருக்கிறார்கள். அது அகவல் என்ற சந்தத்தில் அமைகிறது. ஆனால் மனோன்மணீயத்தின் சிறப்பை எதனாலும் அடைய இயலவில்லை. முது பெரும் கிழவர் சம்பந்த முதலியார் ஐம்பதுக்கு மேற்பட்ட நாடகங்களை எழுதியுள்ளார். அவையெல்லாம் சுலபமாக நடிக்கக் கூடியவை. எனினும் இலக்கியம் என்ற வகையிலே அவை உயர்ந்த தரமானவை என்று சொல்வதற்கில்லை. பிற இடங்களில் எடுப்பாக காணப் பெறும் அப்பட்டமான பிரத்தியட்சக் காட்சியும், பால் உணர்ச்சியும் இல்லாமல் நல்ல கணிசமான முறையிலே அவரது நாடகங்கள் அமைந்துள்ளன. 'கதரின் வெற்றி' யைப் போல பாவலர் இயற்றிய சில நாடகங்கள் புது நோக்குடன்கூட சீர்திருத்த வகையில் நல்லபடி அமைந்துள்ளன. அவ்வாறின்றி சில சமயம் அப்பட்டமான பிரசார ரீதியில் நாடக மேடைமீது நடிகர் பிரசங்கம் செய்வதும் உண்டு. அன்றைய நிகழ்ச்சிகளைச் சேர்த்து, மனத்தில் தோன்றியபடி உரையாடல் செய்து, நடிப்பது பழங்கால தெருக்கூத்தில் வழங்கி வந்த ஒரு சம்பிரதாய பாணி. சமய சம்பிரதாயங்களையும், புராணக் கதைகளையும் பிற இலக்கியங்களையும் நிந்தனை செய்யும் நாடகங்கள் சில

அரசியல், சமூக மகாநாடுகளில் விரும்பி நடிக்கப் பெறுகின்றன. அவை பலர் விரும்பிப் படிக்கும் உண்மையான இலக்கிய நாடகமாகவேண்டுமென்ருல், அவற்றின் தன்மை மாறி எதிரே உள்ளவர்களின் கரகோஷத்தைப் பெறும் பேரார்வத்தை அடக்கி அமைக்கப் பெறுதல் வேண்டும். அப்படியாயின் அவை ஒருநாள் ஷா, இப்சன் போன்ருேரது நாடகங்களுடன் போட்டியிடக் கூடும். ஆவேசமான திட்டுதல்கள், அருவருப்பான பிரசாரம், மட்டரகமான ஆண்-பெண் உறவுநிலைப் பேச்சு, ஆபாசமான கோமாளிக் கூத்து போன்றவை சில சமயம் மேலோங்கிக் காணப் பெறுகின்றன. இவை ஆரோக்கியமான நிந்தனைப் பாணி, சொல்லாமல் சொல்லி விளக்கும் சக்தி, மென்மையான் கவிதை உணர்ச்சி, தூய்மையான நோக்கம் ஆகியவற்றை அமுக்கி விடுகின்றன.

காலப் போக்கிற்கேற்ப சாமானிய மனிதன் ஒருவனைக் கதாநாயகனுக வைத்து நடிப்பதில் வரவர அதிகமாக அக்கறை காண்பிக்கப் பெறுகிறது. குழந்தைகள் கொண்ட நாடகக் குழுக்கள், இன்னும் இருக்கின்றன. நமது நாட்கத்தில் இசையும், நாட்டியமும் இன்னும் இணைபிரியாப் பகுதிகளாக இருந்து வருகின்றன. திறம்படப் பேசுவது நாடகக் கலையின் சிறப்பு அம்சம். ஆனல் இது மிகுதியாயிருப்பதன் காரணமாக சில சமயம் நாடகமானது படாடோப விவகாரமாகி விடுகிறது. இதற்கு நாடகம் பார்ப்போர்மீது குற்றம் சொல்ல இயலாது. வழிகாட்டுவோர் மீதுதான் குற்றம் சொல்ல வேண்டும். தமிழ்க் கவியரசி ஔவையார், சோழ சக்கரவர்த்தி ராஜராஜன் போன்ருேர் பற்றிய நாடகங்கள் வெற்றிகரமாக நடந்துள்ளன. தமிழ்க் கவிதை, மற்றும் தமிழ் மக்கள் லட்சியங்களை திட்டவட்டமாக அவை தாங்கி நிற்கின்றன. சில சமயம் கடந்த காலத்தில் நிகழ்காலக் கருத்துக்களைக் கொண்டுபோய் புகுத்தி அவை காண்பிக்கின்றன. எனினும் இந்த நாடகங்கள் மக்களின் அபிமானத்தைப் பெற்

றிருப்பதிலிருந்து அவர்கள் காம விகாரங்களையோ, பயங்கர நிகழ்ச்சிகளையோ விரும்பவில்லை யென்பது தெளிவாகிறது.

சினிமாவானது நாடகத்தைக் கொன்றுவிட வில்லை. ஆனால் சினிமாவின் கவர்ச்சி பரவலாகவும் அதிக சக்தி வாய்ந்ததாகவும் இருப்பது இயல்பே. யோகிகளின் அஷ்ட சித்திகளைக் கூட கண்முன்னர் கொணர்ந்து நிறுத்தும் சக்தி காமிராவுக்கும் திரையீட்டுத் திறனுக்கும் உண்டு எனக் கருதப்பட்டதை மீண்டும் நாடக அரங்கில் காண்கிறோம். சம்பந்த முதலியாரது மனோஹரா நாடகம் வெள்ளித் திரைக்கு வருகையில் அதில் காட்ட இயலாதது ஒன்றுமே இல்லை என்பது புலனாகியது. புராண, பழங் கதை அடிப்படையிலுள்ள நாடகங்களை விட சமூக நாடகங்களே மேலானவை என கருதப்பட்ட நிலைமை மாறி வருகிறது. நவீன சித்திரக் கலையில் கருத்துக்களைச் சங்கேதமாகத் தீட்டிக் காட்டும் போக்கு சமீப காலத்தில் தென்படுகிறது. பழைய கிராமியக் கதைகளின் கதாநாயகர்களும் நாயகிகளும் மீண்டும் அரங்கில் நடமாடுகின்றனர். நல்லதங்காள் போன்றவை இதன் விளைவாக புதிய உருப்பெற்றுள்ளன. ஆனால் இந்தக் கதை அமைப்பானது தாயுடனும், அண்ணியுடனும் இருந்து வரவேண்டிய லட்சிய உறவு நிலைக் கொள்கையைச் சித்திரிக்கும் வகையில் புது நோக்குடன் பார்க்கப் பெறுகின்றன. தனி ஹாஸ்ய நிகழ்ச்சிகள் முன்னர் அசல் கதை மீது ஒட்டப் பெறுவது உண்டு. இப்போது இந்த நிலைமை மாறி கதையிலேயே பெரிதும் அவை இணைக்கப் பெறுகின்றன. வெள்ளித் திரையின் உயிர்நாடியாக விளங்குபவை நாட்டியமும் இசையும். அடுக்குச் சொற்களுடன் கூடிய உரையாடல்களும் மிதமிஞ்சிய நடிப்பும் நாடகத்திலிருந்து பேசும் படத்திற்கு வந்துவிட்டது இயல்பே.

தமிழ் இசையை அதற்குரிய உயர்நிலைக்குக் கொணர வேண்டுமென்பதற்காக ஓர் இயக்கம் நடந்து வருகிறது.

பத்து ஆண்டுகளுக்கு முன்னுல் வரை சங்கீதக் கச்சேரி களில் தொடர்ந்து ஓரிரண்டு தமிழ்ப் பாடல்களுக்கு மேல் பாடப்படுவதில்லை. இருளில் மங்கிக் கிடந்த பழைய தமிழ் பாடல்களை இந்தப் புதிய இயக்கம் வெளிக் கொணர்ந்து இருக்கிறது. ஒரு காலத்தில் இந்நாட்டில் அவை மக்க ளால் விரும்பப் பெற்றிருந்தன. புதிய கவனங்களை அது ஊக்குவித்துள்ளது. தற்காலக் கவிஞர்களில் சிறந்தவர் கள் நமக்கு ஒரு நல்விருந்து அளித்துள்ளனர். எனினும் இந்தப் பாடல்கள் அன்ருட வாழ்க்கையுடன் தொடர்பற்ற நிலையில் உள்ளன என்ற புகார் இருந்து வருகிறது. எல்லா விஷயங்களையும் பற்றி புதிய பாடல்கள் காளான் கள் போல் முளைத்துக் கொண்டே யிருக்கின்றன. அவை இயற்றப்படும் மொழி தமிழாக இருக்கலாம். ஆனுல் அவற்றின் இசை தென்னிந்தியாவின் இசையாகவோ, கர்நாடக இசையாகவோ, தமிழ் இசையாகவோ இருக்க வில்லை. அவற்றின் தரமும் உயர்ந்ததாக இல்லை. அது எந்த வகை இசையைச் சேர்ந்ததாக இருந்தாலும் இதுவே உண்மை நிலை. சினிமாவில் பிரபலமாக இருந்து வரும் மெட்டுகள், முக்கியமாக ஹிந்துஸ்தான் மெட்டுகள், (கர்நாடக மெட்டுகள் அல்ல) இவற்றை சங்கீதம் என்ருே கவிதை என்ருே சொல்வதற்கில்லை. 'டடடா' பாட்டுகள், 'உடைடப்பா' மெட்டுகள் போன்றவை பிள்ளைப் பிராயப் பாடல்களை நினைவூட்டுபவையாக இருக்கின்றன. இந்தப் பாடல்களைக் கேட்கும் பெரியவர்கள், தேவதைக் கதை களில் வரும் சாகசச் செயல்களை அனுபவித்துக் கொண் டிருக்கும் குழந்தைகளாக மாறி விடுகிருர்கள்.

## நாவலும் சிறுகதையும்

தற்காலத்திய நாவலை உரைநடையில் இதிகாசம் என்று கூறலாம். ஆனுல் அந்த அந்தஸ்தை அடைந் துள்ள நாவல்கள் மிக மிகச் சிலவே. ஆங்கில நாவல் களின் மொழி பெயர்ப்புகளும், தழுவல்களும் தமிழில்

சகஜமாக இருக்கின்றன. டால்ஸ்டாய், ஹார்டி போன்ற மேற்றிசை ஆசிரியர்களின் புகழ்பெற்ற நாவல்களும், பிற இந்திய மொழிகளிலிருந்து நாவல்களும் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன. 'ஆனந்த மடம்' என்ற வங்காளி நாவல் இந்த நூற்றுண்டின் தொடக்கத்திலே மொழிபெயர்ப்பாகி விட்டது. ஆனல் மொழி பெயர்த்த அல்லது தழுவல் செய்துள்ள நூல்கள் எல்லாமே உயர்ந்த பேரிலக்கியங்கள் என்று சொல்ல முடியாது. மறைமலை அடிகளைப் போன்ற புகழ்பெற்ற எழுத்தாளரே 'போர் வீரனின் மனைவி' என்ற கதையை தமக்குள்ள வழியில் எழுதியிருக்கிருர். 'ஷர்லக் ஹோம்ஸ்' ஒரு தமிழ்ப் பாத்திரமாகக் காட்சி யளிக்கிருர். துப்பறியும் கதைகள் அசலிலோ, மொழி பெயர்ப்பிலோ விரும்பிப் படிக்கப் பெறுகின்றன.

மொத்தத்தில் நாடகத்திற்கும் சிறுகதைக்கும் சொன் னவையெல்லாம் நாவலுக்கும் பொருந்தும். சரித்திர நாவல்கள் இருக்கின்றன. பல்லவ, சோழ சாம்ராஜ்யங் களையும் அவற்றின் மக்களையும் பற்றி கவர்ச்சிகரமான வர்ணனையுடன் கூடிய காதல் கதைகளை 'கல்கி' இயற்றி யுள்ளார். மனேதத்துவ நாவல் எப்போதுமே குற்றத் தைக் கூறி, குறிப்புணர்த்தும் தன்மையுடன் கூட புதிய பரீக்ஷார்த்த வகையில் வந்து இருக்கின்றன. ஆனல் இது எல்லோருக்கும் திருப்தி அளிக்கக்கூடிய வகை என்று சொல்வதற்கில்லை. விடுதலை இயக்கம் சில நாவல் களுக்குக் காரணமாக இருந்திருக்கிறது. சரித்திர நாவல் களை விட இவை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை, கால நிலவரத்தைப் புலப்படுத்துபவை. எதிர்காலத்தில் நிகழக் கூடியவற்றையும், சுவர்க்க வாழ்வுக் கற்பனைகளையும் பற்றிய படைப்புக்களை இவ்வகைகளில் சேர்க்கலாம். தன் ஞானரதத்தில் பாரதி மேற்கொண்ட கற்பனை வானவெளி யாத்திரையும் இத்தன்மையதே.

சிறுகதைகளை உரைநடையில் புனையப் பெற்றுள்ள

 அடிப்பாடல்கள் என்றே சொல்ல வேண்டும். டாகுர்,

மற்ற இந்திய எழுத்தாளர், மேலைநாட்டு எழுத்தாளர் ஆகியோரின் மொழிபெயர்ப்புக்களை நிறையக் காண்கிறோம். பல தமிழ்ச் சிறுகதைகள் ஆங்கிலத்திலும், பிற இந்திய மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டு இன்பமூட்டி உள்ளன. சிறுவர்களுக்காக என்று மறைமலையடிகள் சிறுகதைகளையும், பிற கதைகளையும் எழுதியுள்ளார். நவதந்திர கதைகள் பாரதி வழங்கியவை. அவை பழைய பாணியில் உள்ளவை, ஆனால் புதுமைத் திருஷ்டியுடன் கூடியவை. அதோடு அவரது வீரக் கவிதைக் கனலும் கலந்தவை. நவீன உத்திகளுடன் கூடிய ஒரு தனிக் கலை வடிவம் என்ற ரீதியில் சிறு கதையை முதலாவதாக பிரபலப்படுத்தியவர் வ. வே. சு. அய்யர். புதிய சிந்தனைகளுக்கு சாதகமாகவும், புதிய இயக்கங்களுக்கு துணைவனாகவும் அது காணப் பெறுகிறது. புதுமைப்பித்தனது சிறுகதைகள் கவிதைகளுடன் போட்டி போடுகின்றன. அவரது சொற்சித்திரங்கள், ஓசைநயம், சொல்லாமல் சொல்லும் சக்தி, கண்ணோட்டம் முதலியவை அழகு நிரம்பியவை. தமிழில் சிறுகதையைப் போல வேறெந்த இலக்கிய வகையும் அளவில் இவ்வளவு பிரமாதமாக வெளி வருவதில்லை; ஆனால் தரம் சம்பந்தப்பட்டவரை போதிய கவனம் செலுத்தப் பெறுவதில்லை. மொழிவளம், கதையமைப்பு பற்றி நாடகம், நாவல் ஆகியவற்றில் கூறியிருப்பவை சிறு கதைக்கும் பொருந்தும்.

தமிழ் இலக்கியத்தின் சமீபகாலப் போக்கு ஜனநாயகத் தன்மை வாய்ந்தது, நவீனக் கண்ணோட்டம் கொண்டது, விஞ்ஞான, பகுத்தறிவு உணர்ச்சியை பிரதிபலிப்பது, இந்தியாவின் பிற பகுதிகளுடன், வெளி உலகுடனும் இடைவிடாத தொடர்பு மிகுந்திருப்பதன் காரணமாக வளர்ச்சி கண்டு வருவது என்பனவற்றைக் கண்டோம். புதிய விழிப்பினால் முறுக்கேறி, எதிர்காலத் தமிழ் எழுத்தாளர் துணிவுடன், நம்பிக்கையுடன், தமிழ்மொழி இதன் முன்னால் கண்டறியாத வாழ்வை அதற்கு அளிக்கத்

தொடங்குகின்றனர், அதன் மாயசக்திகளை மகிழ்ச்சியுடன் மேலுக்குக் கொணர்கின்றனர். சுட்டிச் சொல்வது, கற்பனைச் செழுமை, நகைச்சுவை, சோக ரசம், கவிதை ஆகியவை அவ்வாறு வெளி வருகின்றன. இறந்துபட்டு நாறுபவை கூட வரவே செய்கின்றன.

## SELECT BIBLIOGRAPHY OF TAMIL LITERATURE

*A History of Tamil Literature.*
By M. S. Purnalingam Pillai.

*History of Tamil Language and Literature.*
By S. Vaiyapuri Pillai.

*Hymns of the Tamil Saivite Poems.*
By F. Kingsbury and G. E. Philips.

*Hymns of the Alwars.*
By J. S. M. Heeper.

*Tamil Literature.*
By Francis Kingsbury.

*Subrahmania Bharati—Patriot and Poet.*
By P. Mahadevan.

*Bharat Milap (from Tamil Ramayana of Kamban)*
By C. Rajagopalachari.

*History of Grammatical Theories in Tamil and their Relation to the Grammatical Literature in Sanskrit.*
By Dr. P. S. Subrahmanya Sastry.

*Leaves from Kamban.*
By Prof. A. Srinivasa Raghavan.

# தெலுங்கு இலக்கியம்

கே. ராமகோடீசுவர ராவ்

தெலுங்கு மூன்று கோடி மக்களுக்கு மேல் தென்னிந்தியாவில் பேசும் மொழி. இந்திய யூனியனில் உள்ள மொழி வழிப் பிரிவுகளில் தெலுங்கு பேசுபவர்கள்தாம் எண்ணிக்கையில் இரண்டாவதாக இருப்பவர்கள். "தெலுங்கு" என்றாலும் "ஆந்திரா" என்றாலும் ஒன்றே. "தெலுகு பாஷா" அல்லது "ஆந்திர பாஷா" என்று மொழியையும் "தெலுகு தேசம்" அல்லது "ஆந்திர தேசம்" என்று நாட்டையும் கூறுவது வழக்கம். நூறு ஆண்டுகளுக்கு முன் "திராவிட மொழிகளின் ஒப்பு நோக்கு இலக்கணம்" என்ற நூலை பிஷப் கால்டுவெல் எழுதி வெளியிட்டது முதல் கற்றறிந்தோர், இந்திய மொழிகளை ஆரியம், திராவிடம் என்ற இரு கூறுகளாக வகைப்படுத்தி தெலுங்கைத் திராவிடத் தொகுப்பில், கன்னடம், தமிழ், மலையாளம் ஆகியவற்றுடன் சேர்த்திருக்கிறார்கள். இந்த மொழி வகைப் பிரிவினின்று எழுந்தவைதாம் தோற்ற—நிலை வேறுபாடுகள்.

காலஞ் சென்ற டாக்டர் சி. நாராயண ராவும், வேறு சில புலவர்களும் சொல்வதைப் பார்த்தால் ஆந்திரம் பிராகிருதங்களில் ஒன்று என ஏற்படுகிறது. பிருஹத் கதையை குணாட்யர் எழுதிய பைசாசி என்ற பிராகிருதத்திலிருந்தும், ஆந்திர சாதவாஹன சக்கரவர்த்தி தமது 'காதா சப்தசதி' என்ற நூலை இயற்றிய 'ஹாலா' என்ற பிராகிருதமும் இதற்கு மூலமாக இருந்தனவென்று

அறிகிறோம். எழுதும் தெலுங்கிலும், பேசும் தெலுங்கிலும் பல நூற்றாண்டுகளாகவே ஸம்ஸ்கிருத வழி முறைச் சொற்கள் கணிசமாகக் கையாளப் பெற்று வந்திருக்கின்றன. தூய்மையான திராவிடச் சொற்களையே பயன்படுத்த முற்பட்டால் மொழியே புரிந்து கொள்ளக் கூடாததாகி விடும். இது கன்னட மொழிக்கும் பொருந்தும். தேசத்தின் வட, தென் பகுதிகளில் காணப்பெறும் இந்தியப் பண்பாட்டை இணைத்துக் காட்டும் ஒரு ஸ்தானத்தை இவ்விரண்டு மொழித் தொகுப்புகளும் வகிக்கின்றன.

மகா பாரதத்தை ஸம்ஸ்கிருதத்திலிருந்து தெலுங்கில் நன்னையா மொழி பெயர்த்து எழுதுவதற்கு நெடு நாட்கள் முன்னரே, பாடல்களும் கட்டுக் கதைகளுமாக, ஒரு கணிசமான இலக்கியம் உருவாகி இருந்தது. ஆனால், நன்னையாவுடன்தான் தெலுங்கில் பேரிலக்கியப் படைப்புத் தோன்றியது எனலாம். மன்னர்களும், பிரபுக்களும் அளித்த ஆதரவின் கீழ் இலக்கியம் வளர்ச்சி கண்டது. நாடெங்கும் கவிஞர்களுக்குப் பெரு மதிப்பு இருந்தது. 11 முதல் 15-ஆம் நூற்றாண்டு வரை தெலுங்குக் கவிஞர்கள் ஸம்ஸ்கிருத இதிகாச புராணங்களில் மிளிரும் ஞானத்தை தமது மக்களுக்கு வடித்துக் கொடுத்தனர். இன்றுகூட, தெலுங்கு மக்களின் வாழ்க்கையைப் பெரிய அளவில் வளப்படுத்தி வருபவை நன்னையா, திக்கண்ணா, எர்ரப்பிராக்[1] என்ற மூவரும் இயற்றிய ஆந்திர மகா பாரதமும், போதனா அளித்த ஆந்திர பாகவதமுந்தான். ஸ்ரீநாதர் தந்த நைஷதமும் அக்காலத்தில் தெலுங்கு இலக்கிய படைப்புகளில் மிக மதிப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகிறது.

---

1. இம்மூன்று கவிஞர்களையும் 'கவித்திரயம்' என்ற ஒரு சொல்லால் சேர்த்துக் குறிப்பிடுவது வழக்கம். இதிகாசமாகிய பாரதத்தின் வெவ்வேறு பகுதிகளை அவர்கள் தெலுங்கில் வழங்கியுள்ளனர்.

விஜயநகர சாம்ராஜ்ய காலத்தில், அதாவது 15-வது முதல் 17-ஆம் நூற்ருண்டு வரை, பிரபந்தம் என்ற ஒரு சுயேச்சையான புதுவகை இலக்கியம் உருவாகியது. கிருஷ்ண தேவருடைய சமஸ்தானக் கவியாக விளங்கிய பெத்தண்ணு மனு சரித்திரத்தை எழுதி, இத்தகைய சிருஷ்டிகளுக்கு வழி காட்டிஞர். சக்கரவர்த்தி கிருஷ்ண தேவராயர், ராமராஜ்ய பூஷணர், தெஞலி ராமகிருஷ்ணு, பிங்களி சூரண்ணு போன்ருேர் இந்தப் பரம்பரையைச் சேர்ந்தவர்கள். பிரபந்தம் என்பது செய்யுளும், வசனமும் சேர்ந்து உருவாக்கப் பெற்ற நீண்ட கதைத் தொடர். கதாநாயகன் அரச பரம்பரையையோ, அல்லது தெய்வத் திருக் கூட்டத்தையோ சேர்ந்தவஞக இருப்பான். அவனைப் போலவே கதாநாயகியும் புராதன அல்லது மத்தியகால இந்தியாவில் தோன்றியவளாகக் காணப்படுவாள். கதையைச் சொல்வதில், வருணனையில், கற்பனைப் பூரிப்பில், கையாளும் பல்வகைச் சந்தங்களில் தெலுங்குப் பிரபந்தம் இந்திய இலக்கியத்தில் ஒரு ஒப்பிலா வகையாகும். தஞ்சாவூரையும், மதுரையையும் சேர்ந்த தெலுங்கு நாயக்க மன்னர்கள் தெலுங்கு இலக்கியத்துடன் ஆடல், பாடல், நாடகம் ஆகியவற்றை நெருக்கமாக இணைத்துவிட்டனர். தெலுங்குச் சொற்கள் 'அஜந்தா' என (உயிர் எழுத்துக்களுடன் முடிவுறுபவையாக) அழைக்கப்படுபவை. எனவே, அவற்றை ஸம்ஸ்கிருதச் சொற்களுடன் கூட சுலபமாகச் சேர்த்து இணைக்க முடிகின்றது, மொழியின் இனிமை பெருகி, இசைக்கு மிக மிக தகுதியுள்ளதாக அதை ஆக்கிவிடுகிறது.

ஸம்ஸ்கிருதத்தின் மூலம் இலக்கிய வளர்ச்சிக்கு ஆந்திரா ஆற்றிய தொண்டு குறிப்பிடத்தக்கது. யாப்பிலக்கண நூல்களை வித்யாநாதரும், ஜகந்நாத பண்டித ராயரும் இயற்றியுள்ளனர். விமரிசகர்களான கொண்டைவீடு இளவரசன் கடைய வேமா, மல்லிநாத சூரி, தெய்

வஞ்ஞூர்களான லீலா சுகர், நாராயண தீர்த்தர் போன்ற வியாக்கியாதாக்களும் அகில—இந்தியப் பண்பாட்டைப் போஷித்து வளர்ப்பதில் பிரதான பங்கு பற்றினர். க்ஷேத்திரக்ஞர், அன்னமாச்சாரியர், தியாகராஜர் ஆகியோர் தெலுங்கில் கிருதிகளை இயற்றியும், குச்சிப்புடி நாட்டிய நாடக பத்ததியை விளக்கி வளர்த்துள்ளவர்களும் பிற மொழிகள் வழங்கும் பகுதிகளிலும் மதிப்பு பெற்றுள்ளவர்கள்.

## வழி காட்டி

கோதாவரி தீரத்தில்தான், கீழச் சாளுக்கிய மன்னன் ராஜராஜன் அல்லது ராஜமகேந்திரன் ஆஸ்தானத்தில் தான், தெலுங்கு மொழியில் உள்ள மகத்தான முதல் அமர சிருஷ்டி—நன்னேயாவின் ஆந்திர மகாபாரதம்—இயற்றப் பட்டது. அது நடந்தேறி ஓராயிரம் ஆண்டுகளாகின்றன. அதே[2] இடத்தில்தான் சென்ற நூற்றுண்டின் இறுதியில் தெலுங்கு இலக்கியம் மறுமலர்ச்சி கண்டது. வீரேசலிங்கம், சிலகமார்த்தி லட்சுமி நரசிம்மன், வசுராய கவி ஆகியோர் மீண்டும் அந்த ஜோதியைப் பிரகாசப் படுத்தினர். பிரிட்டிஷ் ஆட்சி பரவப் பரவ சம்பிரதாய மான பண்பாடு மங்கி மறையலாயிற்று. காலேஜுகளும், சர்வகலாசாலைகளும் தோன்றியதன் விளைவாக ஒரு புது வகை நாகரிகத்துடன் பயனுள்ள தொடர்பு ஏற்பட்டது. மேலை நாடுகளின் இலக்கியமும், விஞ்ஞானமும் ஆந்திர அறிஞர்களுக்கு ஒரு புதிய ஆதரிசத்தை அளித்தன. இந்தியாவின் பிற மொழிகளிலும் இதே மாதிரி நிகழ்ந்தது. ஆரம்ப அதிர்ச்சிக்குப் பிறகு, தெலுங்குப் புலவர்களும், கவிஞர்களும் புது சூழ்நிலையில் வளர்ச்சி கண்டு தாய்மொழி இலக்கியத்தை வளப்படுத்தினர்.

---

2. ராஜமகேந்திரபுரம் அல்லது ராஜமந்திரி.

பல வகைகளிலும் வீரேசலிங்கத்தை ஒரு வழிகாட்டி எனக் கூறவேண்டும். அவர் முக்கியமாக ஆசார சீர் திருத்தவாதி. தொன்மையான நடைமுறைகளுக்கு எதி ராகக் கலகம் செய்தவர். தெளிவான உரைநடையைத் தமது புது ஆயுதமாக உபயோகித்து தமக்குப் பிடித்த மான நோக்கங்களுக்கான சேவையில் அதை ஈடுபடுத் தினர். சமூக அநீதிகளைக் கண்டு கொதிப்படைவது அவரிடம் எடுப்பாக காணப்பெற்ற குணம். எந்தப் புராண ஸ்தாபனமாயினும் சரி, மக்கள் விரிவாக அபிமா னித்த மத நம்பிக்கையாயினும் சரி, அவரது கடுந் தாக்கு தல்களுக்கு இலக்காகாமல் இராது. தமது காலத்து வாழ்க்கையை அனுதாப உணர்ச்சியுடன் தெளிந்தறியும் தகைமை அவருக்கு அவ்வளவாக வாய்க்கவில்லை. அவரது இளம் நண்பரும், ஊர்க்காரருமான லட்சுமீ நரசிம்மன் வியக்கத்தக்க வகையில் இக்குணங்களைப் பெற்றிருந்தார். ஆனாலும், இலக்கியப் பெருமையுள்ள வாழ்க்கை வரலாறு, ஆய்வு நூல், நாடகம், நாவல், விஞ் ஞான அரசியல் கட்டுரைகள், பத்திரிகைத் தொழில், துண்டுப் பிரசுரங்களின் வெளியீடு, சிறுகதை போன்ற எல்லாவகைப் படைப்புகளுக்கும் அவர் வழிகாட்டியாக விளங்கினர்.

அக்காலத்தில் வேறு சில பெரும்புலவர்கள் தோன் றினர். நெல்லூரைச் சேர்ந்த வேதம் வேங்கடராய சாஸ்திரி, பெல்லாரி டி. கிருஷ்ணமாச்சார்லு, மசூலிப் பட்டணத்தைச் சேர்ந்த இரட்டைக் கவிஞர்களெனப் புகழ்பெற்ற வேங்கட சாஸ்திரி, திருப்பதி சாஸ்திரி, கூர ஜாடா அப்பாராவ் (விஜயநகரம்) ஆகியோர் குறிப் பிடத் தக்கவர்கள்.[3] அப்பாராவ் உயர்ந்த கீதங்களை

---

3. இந்த மசூலிப்பட்டணம் விசாகப்பட்டணம் ஜில்லாவில் இருப்பது. அக்காலத்தில் தென் சாம்ராஜ்ய ராஜதானியாக விளங்கிய நகரத்துடன் இதைச் சேர்த்து குழப்பக்கூடாது.

இயற்றி அடுத்த தலைமுறையினரான பசவராஜு அப்பாராவ், அடிவி பாபிராஜு ஆகியோருக்கும், நந்தூரி சுப்பாராவுக்கும் அவர் வழிகாட்டியாக விளங்கினர். 19-வது நூற்றாண்டின் தொடக்கத்தில் தெலுங்குக் கவிதையானது, பேரிலக்கியப் போக்கு என்ற மரபில் சிக்கிச் சீரழிந்து கொண்டிருந்தது. அரசவைகளிலும், பிரபுக்களின் இல்லங்களிலும், பண்டித சபைகளிலும் இருந்து கவிதா தேவியை திருப்பதி வேங்கட கவுலு மீட்டார். ராயப்புரோலு சுப்பாராவ், டி. வி. கிருஷ்ண சாஸ்திரி ஆகியோரின் மெல்லிசை ஊற்றுப் பெருக்கை அவை சாத்தியமாக்கின. அவர்கள் இயற்றியுள்ள "புத்த சரித்திரம்" சிறப்புக்கள் பல கொண்ட நீண்ட பாடல், கற்பனை வளம் மிகுந்தது. தெளிவான சொல்லாட்சி கொண்டது. மகாபாரதக் கதையை அடிப்படையாகக் கொண்ட அவரது நாடகங்கள் காலத்தை வென்று சிறந்து விளங்குகின்றன.

### கற்பனைக் கவிதை

1905-ஆம் ஆண்டில் தோன்றிய தேசிய இயக்கமும், பங்கிம் சந்திரர், நவீந்திரநாத் ஆகியோர் மூலம் மலர்ச்சி கண்ட வங்க இலக்கியமும், பிற தென்னிந்திய மொழிகளை விட தெலுங்கில் முன்னரே எதிரொலித்தன. 17-வது முதல் 19-வது நூற்றாண்டு வரை தோன்றிய ஆங்கில இலக்கியத்திடமும், சில சமயம் ஸம்ஸ்கிருதப் பெரு நூல்களிடமும் வீரேசலிங்கம் தலைமுறையினர் விசேஷ ஆர்வமுள்ளவர்களாக இருந்தனர். கிருஷ்ண சாஸ்திரியின் தலைமுறையினரை 19-வது, 20-வது நூற்றாண்டுகளின் ஐரோப்பிய இலக்கியமும் அவர்கள் காலத்து வங்க இலக்கியமும் பெரிதும் ஊக்குவித்தன.

முதல் உலக யுத்தத்தின்போது காலேஜில் படித்துக் கொண்டிருந்த இளைஞர்களின் சிறந்த இலக்கியப் படைப்புக்கள் 1915 முதல் 1935 வரையுள்ள காலத்தில்

தோன்றின. இந்த இருபது ஆண்டுகளின் இலக்கிய வரலாற்றை ஏதென்சில் பெரிக்கிளிஸ் காலம், இங்கிலாந்தில் எலிஜபெத் சகாப்தம், இந்தியாவில் போஜன் அல்லது கிருஷ்ணதேவ ராயர் காலம் ஆகியவற்றுடன் ஒப்பிடலாம். உணர்ச்சி மிக்க கவிதைகள், கற்பனை வளமுள்ள பாடல்கள், நாவல், சிறுகதை, நாடகம் ஆகியவைதாம் இந்த எழுத்தாளர் அணிசெய்த இலக்கியக் கிளைகள். விசேஷமாக கற்பனைக் கவிதைகள்தாம் அவர்களுக்குப் பிடித்தமாக இருந்தன. இந்திய அமர கவிதா இலக்கியத்தில் கவியின் புருஷாகாரம் வெளிப்போந்து வாசகர்களை ஈர்ப்பது அபூர்வம். பக்தர்கள் ஆண்டவனிடம் அன்பு செலுத்துவதை இதிகாசங்களிலும், சதகங்களிலும் காணலாம். கவிஞர்கள் தங்களுடைய புருஷாகாரத்தைக் கவிதையில் பிரகாசப்படுத்துவதற்கு இதைத்தான் கிட்டத்தட்ட மேற்கோளாக எடுத்துக் கூற முடியும். ஒரு கவிஞன் தனது சொந்த இன்ப துன்பங்களை, தனது சிந்தனைச் சலனங்களை, சிந்தனையிலுள்ள உணர்ச்சி வேகங்களைப் பாடிக் காண்பிப்பது என்பது நமது இலக்கியத்தில் ஒரு புது நிலையை உண்டாக்கியது.

உணர்ச்சி மிகுந்த கற்பனைக் கவிதைகளை இந்த பாவ கவிகள் முக்கியமாக காதலன் அல்லது காதலனை நாடிச் செல்லும் ரீதியில் கவி புனைந்தனர். அதுவே அழகின் மிகச் சிறந்த வடிவம். அதுவே அன்பு என்னும் கோயிலுக்கு வழிகாட்டும் விண்மீன். பெண் ஓர் அசாசுவதமான சிருஷ்டி. மின்னல் கொடி போல, பனிக்கும் கீழ்வானமாக, அலை கடலில் ஆடிக் குதிக்கும் வெண் நுரையாக பெண்ணை அவர்கள் காண்கின்றனர். காதலை லட்சியப் பக்குவத்தில் வைத்துக் காட்டி, மனதை விடாது பற்றிக்கொண்டு கவர்ச்சிக்கும் வகையில் வருணனைகளை வழங்குகிறார்கள். மனதின் உயர்நிலைகள், ஆத்மாவின் அழகு

ஆகியவைகளில்தான் ஏற்றம் காண்கின்றனர்; மாமிச வடிவத்தின் சௌந்தரியங்களைப் பெருமைப்படுத்த வில்லை. இவ்வாறு பணியாற்றி தெலுங்குக் கவிதையை மகோந்நத நிலைக்கு அவர்கள் உயர்த்தினர்.

ராயப்புரோலு சுப்பாராவின் "த்ரீன கங்கணம்", "ஸ்வப்ன குமாரன்" ஆகியவற்றில் காமம் இல்லாத பேரின்பக் காதல் திடமாக விளங்குகிறது. அப்பூரி ராம கிருஷ்ணராவின் "மல்லிகாம்பா"விலும் இதைக் காண லாம். இம்மண்ணுலகின் ஜனித்த கீழ் மகனுன தலைவன் விண்ணுலகில் நேரிழையை நேசிப்பதை நிலைக்களனுக வைத்து ஆசாபங்கத்தினின்று ஜனித்த வருணனையை கிருஷ்ண சாஸ்திரியின் "ஊர்வசி"யிலும், பிற உணர்ச்சிக் கீதங்களிலும் முக்கியமாகக் காணலாம். மனதும், உணர்ச் சியும் ஒன்று சேருவதற்கு ஒரே மாதிரி இருப்பவர்கள் ஆவலுள்ளவர்களாயிருப்பதை சிவசங்கர சாஸ்திரியின் "ஹிருதயேசுவரி" சித்திரிக்கிறது. அன்புக் கடலை யாத்திரிகனுகக் கடந்தே தீருவது என்ற பிரதிக்ஞையை வேதுலா சத்யநாராயண சாஸ்திரி தமது "தீபாவளி"யில் வடித்துக் காட்டியுள்ளார். தமது சிறுதோணி நட்டாற்றில் உடைந்து சிதறுமோ என்ற அச்சம் நாயனி சுப்பா ராவுக்கு உண்டு. ஆனுல் என்ன? பலகைகள் அவரது சிதைக்கும் பயன்படும் அல்லவா? இந்த வகையைச் சேர்ந்த கவிஞர்களில் நாயனி ஒருவர்தாம் வெற்றியை முழக்கி முடிப்பவர். அவரது அன்பு நிறைவு காண் கிறது. இறுதியாக, "விண்ணையும் மண்ணையும் இணைப்பதில்" அவர் வெற்றி அடைகிருர்.

### சாஹிதி சமிதி

ராயப்புரோலு சுப்பாராவ் தமது காலத்துக் கவிஞர் களில் 'முதல்வராகத் திகழ்ந்தார். ஆனுல் சாஹிதி சமிதியைத் தோற்றுவித்த சிவசங்கர சாஸ்திரிதான் இவரையும், இன்னும் பலரையும் இலக்கிய நட்புலகிற்கு

ஈர்த்து இணைத்தவர். மகாராஷ்டிரத்தில் ரவிகிரண மண்டலம், கர்நாடகத்தில் கேலேயர கும்பு ஆகியவை இம்மாதிரி பணியாற்றிய கழகங்கள். ஸம்ஸ்கிருதத்தில் அவருக்குப் புலமை உண்டு. தமது காலத்து ஆங்கில இலக்கியத்தில் நல்ல தேர்ச்சி யடைந்தவர். இவ்வாறே மூன்று, நான்கு இந்திய மொழி இலக்கியங்களை அறிந்தவர். எனவே, சிவசங்கர சாஸ்திரியை கவிஞர்கள், சிறுகதை எழுத்தாளர்கள், இலக்கியக் கட்டுரையாளர்கள் ஆகிய எல்லோருமே தமது மூத்த சகோதரனை ("அண்ணகாரு"வாக) மதித்தனர். பழகு தெலுங்கை இலக்கிய வடிவ அமைப்புக்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென்ற இயக்கத்தைத் தொடக்கி வைத்து ஆதரவு தேடியவர் கிடுகு ராமமூர்த்தி பந்துலு. ஆனால், இந்த உத்தியைக் கையாண்டு வெற்றி காணத் துணை புரிந்தது சாஹிதி சமிதி. செய்யுள் வடிவத்தில் நிலைத் திருக்கக் கூடிய சிருஷ்டிகள் எவ்வளவுதான் தயாரான போதிலும், இரண்டாவது உலக யுத்தத்திற்கு முந்தைய இருபத்தைந்து ஆண்டுகளில் நிலைத்து நிற்கக் கூடியவை யாக எழுதிய பெருமை சமிதியின் வரப்பிரசாதிகளான எழுத்தாளரையும், அவர்களைப் போற்றிப் பின்பற்றியவர்களையுமே சாரும்.

### பாட்டிசைத்தோர்

செய்யுள் எழுதக் கூடியவர்கள் கீதங்களாகவே தாம் சொல்ல வேண்டியதைப் பாடினார்கள். நேற்றுப் போலிருந்தது, ஆனால் நடந்து 40 ஆண்டுகள் ஆகின்றன. நெருங்கின உறவினர்களான பசவராஜு அப்பா ராவ் சட்டக் காலேஜிலும், நந்தூரி சுப்பாராவ் கிறிஸ்தவ காலேஜிலும் சென்னையில் பயின்றார்கள். கூரஜாடா அப்பாராவின் கதைப் பாடல்கள் அவர்களைப் பெரிதும் ஈர்த்தன. உணர்ச்சியுடன்கூட அவர்கள் அவற்றைப் பாடுவது உண்டு. விரைவில் அவர்கள் தாமே தமது

சொந்தக் கவிதைகளைச் சக மாணவர்களின் கூட்டங்களிலும் மனமுருகப் பாடலாயினர். பசவராஜு அப்பாராவின் "செலயேடி கானமு"ம் (மலையருவின் பாடல்), நந்தூரி சுப்பாராவின் "யெங்கி பாடலும்" பொது மக்களைப் பெரிதும் கவர்ச்சித்தன. இன்று இந்தப் பாடல்களை எங்கும் எல்லோரும் இசைப்பதைக் காணலாம். துக்க அனுபவம் உள்ளவர்கள்தாம் நெகிழ்ந்த மனதினராக இருப்பர், அகங்காரம் அவர்களை விட்டுத்தான் அகன்று இருக்கும், என்று அப்பாராவ் கூறினார். சுப்பாராவின் கிராமிய தலைவி யெங்கி, தலைவன் நாயுடு பாவா. இவர்களது காதல், இளவரசன்—இளவரசிக் காதல்களைப் போலவே மென்மை, சீர்மை, உணர்ச்சி மிகுதி போன்ற அம்சங்கள் நிறைந்தது. தலைவன் யெங்கியைக் கண்டு ஒரு சாதாரண கேள்வி கேட்கிறான்.

" நீ எங்கு வசிக்கிறாய், ஒளிசுடர் மாதே,"

கபடமற்ற அப்பெண் பதில் அளிக்கிறாள் :

" உன் நிழலில் என் அரண்மனையை அமைப்பேன் "
என்று.

அடிவி பாபிராஜு[4] சைத்திரிகர், கவிஞர், பாடல் புனைபவர். பின்னர்ச் சிறுகதை நாவலாசிரியராகவும் பெயர் எடுத்தவர். ராஜமகேந்திரபுரம் அரசினர் காலேஜ் பிரின்சிபாலும் பேராசிரியருமான ஆஸ்வால்ட் கோல்ட்ரே அவருக்கு வழிகாட்டியாக விளங்கினார். பண்பாடு நிறைந்த இந்த ஆங்கிலேயரின் தோழமை பாபிராஜு, கவிகுண்டல வெங்கட்டராவ், தாமேர்ல ராமாராவ் உட்பட பலரின் வாழ்க்கையை ஆட்கொண்டு உறுதிப்படுத்தியது. கோல்ட்ரே தாமே சித்திரம் தீட்டுவார், பாடல்களை எழுதுவார். தாமேர்ல சைத்திரிகர் எனப் புகழ் பெற்றவர். நூறு ஆண்டுகளுக்கு முன்பு சிவில் சர்வீஸ் அதிகாரியாக

4. அவர் 1952-ல் காலமாகிவிட்டார்.

இருந்த சி. பி. பிரவுன் என்பவரைப் போலவே நவீன ஆந்திரத்திற்கு ஆசிரியர் கோல்ட்ரே பணி புரிந்துள் ளார். பாபிராஜுவின் மேதை பல துறைகளில் வியா பகம் அடைந்துள்ளது. ஆனால் அவர் விரும்பிய தமது கருத்துக்களை எடுத்துரைப்பது பாடல்களில்தாம். அவற் றின் உயிர்த்துடிப்பும், உணர்ச்சி வேகமும் கேட்போரை வான வீதிக்கு உயர்த்தும். அவரது பாடலில் வரும் கோதாவரி நதி கூட வானை நோக்கி விம்முகிறது.

### விசுவநாதா, பிங்களி

"கோகிலம்மா பெண்ட்லி" (குயிலம்மையின் திரு மணம்) "கின்னரசானி" ஆகிய பாடல்களில் இயற்கை யின் அன்பு ததும்பும் காதல் கதைகளை விசுவநாத சத்ய நாராயணு செப்பியுள்ளார். துவ்வூரி ராமி ரெட்டி இதே துறையில் சீர்மை மிகுந்த செய்யுளைக் கையாண்டிருக் கிருர். மறுமலர்ச்சியாளரில் விசுவநாதத்திற்கு உயர்ந்த தோர் இடமுண்டு. சம்பிரதாயமான இலக்கிய வடிவங் கள் அனைத்தையும் படைத்து பெரும் புகழ் எய்தியவர் விசுவநாதா. செய்யுள், கற்பனைப் பாடல், பாவம் மிகுந்த இசைச் சித்திரம், நாவல், சிறுகதை, ஆராய்ச்சி அம்சமுள்ள கட்டுரை போன்ற எல்லாவற்றிலுமே அவர் புகழ் பெற்றவர். அவரது படைப்புக்களில் வளமை, வீரியமிகுதி, கரடுமுரடான தோற்றம் உண்டு. 'கிரி குமாரா' என்ற புனைப் பெயரில் எழில் மிகுந்த காதல் கவிதைகளை அவர் வடித்துள்ளார். நாட்டுப்பற்று நிறைய தொனிக்கும் அவரது "ஆந்திர பிரசஸ்தி" என்ற காவிய மலர் இலக்கிய உலககில் பீடு நடை போடு கிறது.

பிங்களி லக்ஷ்மிகாந்தம், காடூரி வெங்கடேசுவர ராவ் இருவரும் ஒரு சிறிய கவிதைத் தொகுப்பை வெளியிட்டு தமது இலக்கியப் பணியைத் துவக்கினர். அந்தச் சிறு நூலின் பெயர் "தோலக்காரி". அதை டாக்டர்

சி. ஆர். ரெட்டி பாராட்டியுள்ளார். வருங்கால மேதை இளம் வயதிலேயே வெளிப்பட்டது. அதன் முழுமையை, "சௌந்தர ஆனந்தம்" என்ற, தொடர்ச்சியான நல்ல நிகழ்ச்சிகள் கொண்டதும், புத்தர் காலத்துச் சூழ் நிலையைப் பாடுகிறதுமான நீண்ட காவியமாகக் காண லாம். லட்சிய நிலையில் உள்ள வடிவமும் உணர்ச்சி களின் கம்பீரமுமாகச் சேர்ந்து ஈடு இணையற்ற ஓர் அமரப்படைப்பாக அதை அமைத்து விட்டன.

இயற்கையும் காதலும் இக்காலத்துக் கவிஞர்களின் பிரதான விஷயங்களாக விளங்கின. ஆங்கில ஆட்சிக்கு எதிரிடையான பேராட்டத்தின் ஆரம்ப காலத்தில் தேச பக்தப் பாடல்கள் மக்களுக்கு உணர்ச்சிப் பெருக்கை ஊட்டுவதற்கு சக்தி வாய்ந்த சாதனங்களாகப் பயன் பட்டன. பிரபஞ்சம் எங்கும் பரந்த கனவு காணும் திறன் அவர்களுக்கு உண்டு. சமான்ய ஆண், பெண் மக்களது வாழ்க்கையில் ஒன்றி நிற்காவிடினும் அனுதாபமெல்லாம் அவர்களிடந்தான். சொல்லாட்சி, சந்தம் ஆகிய இரண்டிலும் தொன்மையான பெரு நூல்களுக்கும் மக்களிடையே பிரபலமாகி வந்த புது வழிக்கும் (மார்கி, தேசி ஆகிய இரண்டையும்) இவர்கள் பாலம் அமைத்துப் பிணைத்தனர்.

## இடதுசாரிப் போக்கு

1935-ஆம் ஆண்டுக்குப் பிறகு தெலுங்குக் கவிதை யில் இடதுசாரிப் போக்கு மேலோங்கியது. ராயப்பு ரோலு சுப்பாராவுடன் தொடங்கிய கற்பனைக் கவிதா இலக்கியத்திற்கு எதிராக ஒரு புரட்சியைத் தோற்றுவித் தார் ஸ்ரீரங்கம் ஸ்ரீநிவாசராவ் (ஸ்ரீ. ஸ்ரீ.). புது உலகம் உருவாகின்றது, வியர்வை சிந்தி வயலில் உழைப்போரும், தொழிற்சாலையிலும் பாடுபடுவோறும் உரிமை பெற ஆக்கம் தேடவேண்டும் என்று அவர் பாடினர். தாஜ் மஹாலின் கீர்த்தியைக் கொண்டாடுவதில் பொருளில்லை,

தாஜ்மஹால் எழுவதற்குக் காரணமாய் இருந்த கட்டாய வேலையைப் பற்றி நினைத்துப் பாருங்கள், என்கிறார் அவர். மென்மையான உணர்ச்சிப் பெருக்கும், அதே மனப்பான்மையில் இயற்கையை அதன் அருள் சேர்ந்த தோற்றத்தில் பூசிப்பதும் இனி காவிய விஷயங்கள் ஆக முடியாது என்றார். மேலே நாடுகளைச் சேர்ந்த கருத்துப் பிரதானிகள், பிரத்தியட்சப் பிரமாணிகள் ஆகியோர் இந்தப் புதிய குழுவிடம் விசேஷ செல்வாக்குப் பெற்று விளங்கினர். சம்பிரதாயமான செய்யுள் வடிவங்களை அவர்கள் புறக்கணித்தனர். வளமாக கற்பனைக் கவிகள் கையாண்ட கீத சந்தத்தை விட்டொழித்து, எதுகை மோனையற்ற செய்யுட் பாணியை தமது அபிமான வழியாக அவர்கள் கையாண்டனர். அரசியல் விடுதலையைத் தொடர்ந்து, மக்களிடையே பரவிக் காணப்பெற்ற பொருளாதார அதிருப்தியும், ஏமாற்றமும் ஒழுங்காகத் திருப்பிவிடப்பட்டு வர்க்கப் போராட்டமாக மாற வேண்டுமென்பது அவர்கள் கருத்து. ஆனால் அவர்கள் இவ்வாறு முயற்சித்து வருகையிலேயே மல்லவர்பு விசுவேசுவர ராவ், பிலாகா கணபதி சாஸ்திரி போன்றவர்கள் ராயப்புரோலு கிருஷ்ண சாஸ்திரி சம்பிதாயத்தை போஷித்து அதில் கவிபுனைந்தனர். வேங்கட சாஸ்திரியின் நேர்ச் சீடராகிய புச்சி சுந்தரராம சாஸ்திரி, "பஞ்சவடி" என்னும் காவியத்தில் தமக்குள்ள அசாதாரணமான பக்தித் திறனை வெளிப்படுத்தினர்.

**நவீனப் பேரிலக்கியம்**

அண்மையில் ஒரு புது இயக்கம் தோன்றியது. அதுதான் பேரிலக்கிய வகைக்கு மீண்டும் திரும்ப வேண்டுமென்பதை நோக்கமாகக் கொண்டது. இடதுசாரியினரும், பிரத்தியட்சப் பிரமாண வாதிகளும் இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் பிரபலமாக இருந்த கற்பனை இலக்கியப் பணிக்கு எதிராகப் புதுவழி வகுத்தவர்கள். ஆனால்

1935 முதல் 1950 வரை ஏற்றம் கண்டு வந்த இந்தப் பிரத்தியட்ச பிரமாண வாதம் பயனுள்ளதுதானு என்ற கேள்வியைப் போட்டனர் நவீனப் பேரிலக்கிய வழியின் ரான நன்னூரி கிருஷ்ணமாச்சார்லு, ஜந்தியாலா பாப்பய்ய சாஸ்திரி, ஜி. ஜோஷுவா ஆகியோர். போராட்டம் அவர்களது லட்சியமல்ல. சமரஸமே அவர் களது நோக்கம். "பட்டாபி", "ஆருத்திரா" போன் ருேரின் வசன காவிய நடையானது குழப்பம் மிகுந்த தெனக் கருதி, இந்த புதிய பேரிலக்கிய வழியினர் அதை நிராகரித்தனர். லோகாயத தத்துவத்திற்கும் ஆத்மீக தத்துவத்திற்கும் இடையே ஒரு மைய நிலையைத் தோற்று விக்க வேண்டும், லட்சியவாத நிலக்கும் பிரத்தியட்ச வாதப் போக்கிற்கும் சமரசம் செய்து வைக்க வேண்டு மென்பன அவர்களது கருத்து. இந்த சமரசத்தை தாமும் தமது சகாக்களும் உருவாக்கி வருவதாக கிருஷ்ணமாச்சார்லு கூறுகிருர். கற்பனைக் கவிஞர்களை பிரத்தியட்சப் பிரமாணவாதிகள் எள்ளி நகையாடி, பிரச்சினைகளை விட்டு ஓடி பாட்டுக்கு விஷயம் தேடுபவர் கள் என்று பரிகசித்தனர். ஆனல் இடைவிடாத வர்க்கப் போராட்டத்தைப் பிரசாரம் செய்வது எங்கே கொண்டு போய்விடும் என்று புதிய பேரிலக்கிய வழியினர் கேட் கிருர்கள். மக்களது மிடிமையும், வறுமையும் மறுக்க முடியாதவை. ஆனல் துவேஷ கீதங்கள் எப்படி அவற்றைக் அகற்றக் கூடியவை என்பது அவர்களுடைய கேள்வி. வர்க்கப் போராட்டம் தவிர்க்க முடியாததுதானு? ஒரு ராஜீய, பொருளாதாரப் புரட்சியின் எடுபிடிக் கருவி யாகப் பணியாற்றுவதுதான் கவிதையின் கடமையா? இவைதாம் இன்று எழுந்துள்ள பிரச்னைகள். அழகும், உண்மையும் முழுமை காண்பதற்கான, கம்பீரம் மிகுந்த சாதனமே கவிதை என்றும், இப் பழம்பெருமையைக் கவிதைக்கு மீட்டுத் தரவேண்டுமென்றும் புதிய பேரிலக் கியத்தினர் ஆவல் கொண்டுள்ளனர். ராமாயணக்

கதையைப் பின்னணியாகக் கொண்ட இதிகாசமொன்றை ஏழுதி பேரிலக்கிய சேவை புரிந்துள்ளார் விசுவநாத சத்தியநாராயணு. "சிவ பாரதம்" என்ற தமது நூலில் சிவாஜியைத் தலைவனுக வைத்து கடியாராம் சேஷா சாஸ்திரி பாடியிருப்பதும் இதே தன்மையுள்ளது. நமது காலத்தில் பேரிலக்கியப் பாணியில் சிருஷ்டிக்கப் பெற்ற இதிகாசப் படைப்புக்கள் என்று இவ்விரண்டும் பெருமை யுடன் திகழும்.

### சிறு கதை

தற்கால வாழ்க்கையின் படப்பிடிப்பாகச் சிறு கதையை உருவாக்குவதில் வழிகாட்டியவர் கூரஜாடா அப்பாராவ். இப்பணி தொடங்கி ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாகிறது. பிந்தைய வருஷங்களில் அது வளர்ச்சி கண்டு இலக்கிய உலகில் இன்றைய நிலைக்கு உயர்ந்ததற்கு சிந்தா தீக்ஷிதுலுவை தலைவராகக்கொண்டு பலர் கதை எழுத முற்பட்டதே காரணம். தீக்ஷிதுலுவின் கதைகளில் சாதாரண ஆண், பெண் மக்கள் அனுதாப உணர்ச்சியுடன் காட்சியளிப்பர். நகைச்சுவை மிகுதி உண்டு. கர்நாடக சாகித்ய கர்த்தாவாகிய மாஸ்திவேங்கடேச அய்யங்காரின் கதைகளை ஏறக்குறைய இவை ஒத்திருக்கும். அடுத்தடுத் துள்ள பிராந்தியங்களைச் சேர்ந்தவர்கள் இவர்கள். எனி னும், ஒருவரின் படைப்பை மற்றவர் அறியார். ஆயினும், இருவருமே எடுப்பாகத் தோன்ருது, அடக்கமாக கலையின் சிருஷ்டியில் சிறந்து விளங்குபவர்கள். கதையைச் சொல்லும்விதம் எளிமை மிகுந்தது. கதையே தன் கதை யைச் சொல்வது போலத் தென்படும். எனினும் தவிர்க்க முடியாத முடிவையும் அதன் ஓட்டத்தில் கண்டு கொள்ள லாம். நடுத்தரக் குடும்ப வாழ்க்கையைச் சித்திரிக்கும் கதை வகைகளைக் கூறுவதில் முனி மாணிக்கிய நரசிம்ம ராவ் மிகச் சிறந்தவர். குறிப்பிட்ட சூழ்நிலைகளுக்கு நகைச் சுவை அணி செய்யும் வகையில் படைப்புக்களை உருவாக்கு

வதில் அவர் எப்போதுமே பெரு வெற்றி கண்டார். அவரது இலக்கியத் தலைவி காந்தம், மென்மையும் அன்பும் மிகுந்த வீட்டரசி. எனினும் அவள் சொன்னபடி தான் நடக்க வேண்டும். தனக்குள்ள சாமர்த்தியம் கணவனுக்கு உண்டா என்று அவள் அடிக்கடி ஐயப்படு வது உண்டு. மாதர் படும் கஷ்டங்களைக் குறித்து குடிபாதி வெங்கடாசலம் சக்தி வாய்ந்த இலக்கியங்களைப் படைத்துள்ளார். ஆனால் அவர் அப்பட்டமான பிரத்தி யட்சவாதி என்பதை ஆண், பெண் உறவுபற்றி அவர் எழுதுவது எடுப்பாகக் காண்பிக்கிறது. கண்முன்னர் என்ன நிகழ்கின்றதோ அதுதான் பிரத்தியட்சப் பிரமா ணம் என்று சில சமயங்களில் தவறுதலாக நினைத்து, அத்தகைய விவரங்களை கொண்டு தமது கதைகளை அவர் நிரப்புவதன் காரணமாக அவற்றின் கலைப் பெருமை மங்கி விடுகிறது. தெலுங்கில் வெற்றிகரமான சிறு கதை எழுதுவோர் ஏராளம். அவர்களுடைய எண்ணிக்கை கூடுதலாகிக் கொண்டே போகிறது. பெண் எழுத்தாளரில் குறிப்பிடத்தக்கவர்கள் கணபர்த்தி வரலட்சுமியம்மா, இல்லிந்தலா சரஸ்வதி தேவி, மாலதி சந்தூர் ஆகியோர். மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் உலக வியாபகமாக நடைபெற்ற சிறு கதைப் போட்டியில் இரண்டாவது பரிசு பி. பத்மராஜுவுக்குக் கிடைத்ததே இத்துறையில் ஆந்திர இலக்கிய வளர்ச்சிக்கு ஒரு அளவுகோல். அடிவி பாபி ராஜுவின் கதைகள் கலைஞர்களின் வாழ்க்கையையும், அவர்கள் காணும் சௌந்தரியத்தையும் பற்றியவை. சிலை வடிப்பவன் ஒரு நாட்டியக்காரியிடம் தனது மனதைப் பறி கொடுக்கும் கனவுச் சித்திரமாகிய "கல்லில் சமைந்த பெண்" அவரது மிக உயர்வான படைப்பு.

### நாவல்

தெலுங்கில் முதல் நாவல் இயற்றியவர் வீரேசலிங்கம். சென்ற நூற்றுண்டில் 1880-வாக்கில் வெளியான அவரது

"ராஜசேகர சரித்திரம்" நடுத்தரப் பிராமண குடும்பச் சித்திரமாக அமைந்துள்ளது. குடும்பத் தலைவன் பல்வேறு சிரமங்களை அனுபவித்து இறுதியில் வெற்றி காண்கின்றான். இந்த நாவலை ஓர் ஆங்கிலேயர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். இத்துறையில் வீரேசலிங்கத்தைப் பின்பற்றியவர் சிலகமார்தி லட்சுமி நரசிம்மம். அவரது சரித்திர நாவல்கள் பிரபலமானவை. எனினும், தமது காலத்து ஆந்திர வாழ்க்கையை நிலைக்களனாக வைத்து அவர் இயற்றிய 'ராமச்சந்திர விஜயம்' என்ற நூல்தான் முக்கியமாக அவருக்குப் புகழை அளித்தது. ராமேச தத்தரின் 'தென்னை ஏரி' என்ற நூலைச் சிறப்பாக அவர் மொழி பெயர்த்துள்ளார். வங்க வாழ்வையும், அபிலாஷைகளையும் அந்தத் தலைமுறை ஆந்திரர்களுக்கு இந்நூல் அறிமுகப்படுத்தியது. இந்த நற்பணியை வேங்கட பார்வதீசுவர கவுலு தொடர்ந்து ஆற்றி, பங்கிம் சந்திரரது பெருநூல்கள் உட்பட பல வங்க நூல்களைத் தெலுங்கில் மொழி பெயர்த்துள்ளார். பின்னர் கொஞ்ச காலம் துப்பறியும் கதைகள் எழுதுவதில் கவனம் செலுத்தப் பெற்றது. இலக்கியப் பெருமை அவற்றிற்குக் கிடையாது. 1921-ஆம் ஆண்டில் உன்னவா இலட்சுமி நாராயணா "மால பள்ளி" என்ற[5] காந்தி சகாப்த நாவலை வசன காவியமாக இயற்றினார்.

தற்காலத்து இரு பெரு நாவலாசிரியர்கள் என்ற வகையில் ஆந்திர மக்களின் அபிமானத்திற்கு விசுவநாத சத்தியநாராயணாவும்,அடிவி பாபிராஜுவும் போட்டியிட்டு வந்துள்ளனர். விசுவநாதரின் "வேயி படகலு" (ஆயிரம் தலைகள்) என்ற நாவலுக்கும், பாபி ராஜுவின் "நாராயண ராவ்" என்ற நூலுக்கும் முதல் பரிசை 1934-ல் ஆந்திரப் பல்கலைக் கழகம் பிரித்துக் கொடுக்க

5. ஹிந்தியில் இதை மொழிபெயர்த்து வருகிறார்கள். விரைவில் சாகித்ய அகாதெமி இதைப் பிரசுரிக்கவிருக்கிறது.

வேண்டியிருந்தது. விசுவநாதர் சம்பிரதாய வழி முறைகளில் பற்றுதல் கொண்டவர். வேகமாக மறைந்துவரும் ஒரு சமுதாயத்தின் வழி வரலாறுகளை அவரது நாவல்கள், முக்கியமாக "வேயி படகலு", பிரதிபலிக்கிறது. வருங்கால சந்ததிகளின் நலனை முன்னிட்டு, சமூகத்தின் பல்வேறு அந்தஸ்தினரது பழக்க வழக்கங்கள், சிந்தனைப் போக்கு, உணர்ச்சி வகைகள் முதலியவற்றை அவர் குறித்து வைத்துள்ளார். விரிவான நிலைக்களனை எடுத்துக்கொண்டு தமக்குள்ள முடிவற்ற ஞானத்தைப் பயன்படுத்தி எழுதியுங்கூட, தமது படைப்பில் ஒரு ஐக்கிய பாவத்தைத் தோற்றுவிக்க ஏனோ விசுவநாதரால் முடியவில்லை. பல்வேறு பிரிவுகளாக அவை தனித் தனியே தொங்குகின்றன; ஒழுங்காகச் சேர்ந்து முறுக்குப் பெறவில்லை. பாபி ராஜு அழகை விரும்புபவர், நம்பிக்கை மிகுந்தவர். அவரது கதைகள் எப்பொழுதும் லட்சிய சித்தியும், மகிழ்ச்சியும், கூடியவையாக இருக்கும். கலை நோக்குடன் பார்க்கையில் வேலைப்பாடு தீர்ந்தவையாக அவை காணப்பெறும்.

மற்றொரு முக்கியமான நாவலாசிரியர் நோரி நரசிம்ம சாஸ்திரி. "நாராயண பட்டு", "ருத்திரமாதேவி" ஆகிய நாவல்களில் கீழச் சாளுக்கியர்களின் வாழ்க்கை, காகதீய கால வரலாறுகள் ஆகியவை காணப் பெறுகின்றன. சமூக, ஐக்கிய வரலாற்று நாவல்கள் என்ற வகையில் அவை வெற்றி கண்டுள்ளன. இளம் எழுத்தாளர்களில் சிறந்து விளங்குபவர் "புச்சி பாபு"[6]. "சீவாரகு மிகிலேதி" (எஞ்சியிருப்பது) என்ற நாவலில் தற்காலத் தொழில் சகாப்தத்தின் போராட்டங்களைக் காணலாம். பெரு நகரைச் சுற்றியுள்ள படைகளின் அவசரமும், வேகமும், ஆண்–பெண் உறவு முறை அவலங்களும் அவற்றில் விளக்கப் பெற்றுள்ளன. குணசித்திர அமைப்பு, உரை

---

6. எஸ். வி. சுப்பாராவ்

யாடல், கதை சொல்லும் உத்தி, ஆகியவற்றில் புச்சி பாபு ஏற்றம் கண்டிருக்கிருர். ஓரளவு பரிவின்மை ஊடுருவி யிருந்தும் இச்சிறப்பு அதற்கு ஏற்பட்டுள்ளது.

ஐரோப்பிய மொழிகளிலும், வங்காளியிலும், ஹிந்தி யிலுமிருந்து, குறிப்பாக சரத்சந்திரர், பிரேம்சந்த் படைப்புகளிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட நாவல்கள் ஏராளமாக வந்துள்ளன. ஆனுல் அவற்றின் உரை நடை தரம் உயர்ந்தது என்று சொல்வதற்கில்லை.

### நாடகாசிரியர்கள்

முந்தைய நூற்ருண்டுகளில் திறந்தவெளி அரங்கங் களில் நிகழ்ந்த நாட்டிய, நாடக வகைகள் ஒரு மாதிரி. இன்றைய நாடக மேடை மாறுபட்டது. முக்கியமான நகரங்களில் பண்பட்ட அமெச்சூர்கள் மேடை நாடகத் தைத் தோற்றுவித்தனர். வசனம், செய்யுள், பாடல் கலந்தவை இந்த நாடகங்கள். புராண, வரலாற்று, சமூக விஷயங்கள் நாடகக் கதையாக அமையும். ஹரிப்பிரசாத ராவ், டி. ராகவாச்சாரி, ஸ்தானம் நரசிம்மராவ் போன்ற பெரிய நடிகர்கள் ஆந்திராவில் தோன்றியிருக்கிருர்கள். ஆனுல் டி. கிருஷ்ணமாச்சார்லு, வேதம் வேங்கடராய சாஸ்திரி, பனுகண்டி நரசிம்மராவ், கூரஜாடா அப்பா ராவ் ஆகிய புகழ்பெற்ற நாடகாசிரியர்களுக்குப் பிறகு, வெற்றிகரமாக முழுநீள நாடகங்களை எவரும் எழுதியதே இல்லை. ஒரு நாடகத்தைப் பார்த்த பிறகு, "ஆஹா! என்ன நல்ல நடிப்பு." "ஆனுல் நாடகத்தில் ஒன்று மில்லையே" என்று சொல்லத் தோன்றுகிறது. விசுவ நாதாவின் "நர்த்தனசாலா", வேலூரி சந்திர சேகரம் இயற்றிய "காஞ்சனமாலா" ஆகியவை இலக்கியச் சிறப்புள்ள நல்ல நாடகங்கள். ஆனுல் நடிகர்களோ, பொதுமக்களோ அவற்றை அவ்வளவாக அபிமானிக்க வில்லை.

முழு நீள நாடகத்தை முந்திக்கொண்டுவிட்டது

ஓரங்க நாடகம். துரிதகதியில் செயலாற்றுவது, பொழுது போக்கிற்கு லாயக்காக இருக்கும் தன்மை காரணமாக சமூக இலக்கிய நிகழ்ச்சிகளில் ஓரங்க நாடகம் முக்கிய இடம் பெற்றுவிட்டது. ஆனால் ஓரங்க நாடகமும் அலட்சியம் செய்யப்பெறுகின்றது சினிமாவின் காரணமாக. ஓரங்க நாடகங்களை மிகச் சிறப்பாக இயற்றியுள்ளவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் பிரதம நீதிபதி ராஜமன்னர், நாரலா வேங்கடேசுவர ராவ், மத்து கிருஷ்ணு, ஆசாரிய ஆத்ரேயா ஆகியோர். தற்கால மேடை நாடகத்திற்கு இவர்கள் செய்துள்ள தொண்டு மிக மதிப்பு வாய்ந்தது. படிப்பதற்கு நல்ல இலக்கியமாகவும், நடிக்கக்கூடிய தகுதியுடனுமுள்ள நாடகங்களை இவர்கள் வழங்கியிருக்கிறார்கள்.

## அறிவியல் இலக்கியம்

வசனத்திலும், செய்யுளிலும் ஆக்க ரீதியில் உருவாகியுள்ள பொது இலக்கியத்துடன், அறிவுத்துறை இலக்கியமும் தெலுங்கில் கணிசமாக ஏற்றம் கண்டிருக்கிறது. அரசியல், விஞ்ஞானம், சமுதாய இயல், பொருளாதாரம், சரித்திரம் ஆகியவற்றில் நல்ல தரமான நூல்கள் வெளியாகியுள்ளன. கே. வி. லட்சுமண ராவ், ஸ்ரீ வீரபத்திர ராவ், பாவ ராஜு கிருஷ்ணராவ், சோமசேகர சர்மா ஆகியோரின் சரித்திர நூல்கள் இலக்கியமாகக் கருதப் பெறுவதற்குத் தகுதியுள்ளவை.

ஸ்ரீ டி. பிரகாசத்தின் சுயசரிதை நெஞ்சை உருக்கும் மனிதப் பண்புமிக்க தஸ்தாவேஜு. ஒரு மாபுருஷனின் தன்மையை அது பிரகாசப்படுத்துகிறது. அதன் நடையில் எளிமை, மிடுக்கு, வசீகரம் உண்டு. எழுதி முன்னுக்கு வர விரும்புவோருக்கு, தரமான பத்திரிகைகள் ஊக்கம் அளித்து வந்துள்ளது. ஆக்க ரீதியிலுள்ள படைப்புக்களை பல சஞ்சிகைகள் பிரசுரித்துள்ளன. பின்னர் அவை செய்யுள் கதை, பாடல் தொகுப்புக்களாக

வெளிவந்துள்ளன. ஆந்திரப் பத்திரிகையாளர்களில் முதன்மையாக விளங்கியவர் காலஞ்சென்ற ஸ்ரீ முட்நூரி கிருஷ்ணராவ். அவர் "கிருஷ்ண பத்திரிகை"யில் உழைத்தார். அவரது வசன நடை கம்பீரமானது. இலக்கியம், தத்துவம், கலை விஷயமாக அவர் எழுதிய கட்டுரைகளை "சமீட்சா" என்ற தொகுப்பில் சேர்த்து பிரசுரித்திருக்கிறார்கள்.

### சமீபகால வரலாறு

இன்றைய இலக்கிய நிலவரத்துடன் இதை முடிவுக்குக் கொண்டு வருவோம். நல்ல தரமுள்ள கவிதைகள் தொடர்ந்து வெளியாகின்றன. பால கங்காதர திலகரின் "ஆரோஜுலு" (அந்த நாட்கள்) என்ற கவிதை வாலிப காலத்து ஆசாபாசங்கள், வாழ்க்கை முதலியவற்றின் நினைவுகள் தோன்றி பழைய ஆசைகளைக் கிளறுகின்றன. பழங்கால மணமான வாழ்க்கையின் நினைவுகளுக்காக வேனும் இக்காலத்தில் வாழ்வது பயன் உள்ளதென்ற எண்ணத்துடன்கூட அது முடிவுறுகிறது. பந்துலா ஸ்ரீராம சாஸ்திரி திறமை மிக்க சிறுகதை, ரேடியோ நாடக அமைப்பாளர். முதலில் அவர் "மானவுடு" என்ற பெயரில் ஒரு கதைப் பாடலை இயற்றினார். இது சக்தி வாய்ந்தது. ஒரு கள்வனது மனதில் ஒரு மணி நேரத்திற்குள் தோன்றும் புதுப்புது அனுபவங்களைக் கவர்ச்சிகரமாக அதில் சித்திரித்திருக்கிறார். தற்கொலை செய்து கொள்ளப் பார்க்கும் வீட்டு எஜமானியை காப்பாற்ற வேண்டுமென்ற எண்ணம் இல்லாமலேயே அவன் தப்புவிக்கிறான். "பென்னேடி பதா" என்ற நீண்ட கவிதையை வித்துவான் விசுவம் இயற்றியுள்ளார். அது ராயலசீமையின் கிராமிய வாழ்க்கையைப் பற்றியது. வறுமையையும், மிடிமையையும் எதிர்த்து ஓயாது நடைபெறும் போராட்டத்தை நிலைக்களனாகக் கொண்ட கிராமிய சூழ்நிலைகளை இதில் அவர் படம் பிடித்துக் காட்டு

கிறார். அப்பிராந்திய மக்கள் பேசும் கொச்சை மொழி வகைகள் அதில் இடம் பெற்றுள்ளன. தெலுங்குக் கவிதைக்கு இது ஒரு அணி என்றே சொல்ல வேண்டும். ஆனால் இறுதியில் கவிஞன் உபதேசகனாக மாறி, பணக்காரர்களை நிந்தனை செய்கிறான். உள்ளமோ, மனமோ இல்லாதவர்கள் ஏழைகளின் எலும்பையுருக்கி ரத்தத்தைப் பிழிந்து தமது சுபிட்சத்திற்கு வழி செய்கிறவர்கள் என்று பணக்காரர்களைத் தாக்குகிறார்.

கம்ப ராமாயணம், சிலப்பதிகாரம் ஆகிய தமிழ்ப் பெருங்காவியங்களை விருவிருப்பான தெலுங்குக் காவிய நடையில் ஸ்ரீராமுலு ரெட்டி இயற்றியிருப்பது விசேஷ மதிப்புவாய்ந்த பணி. தமிழர்களையும், தெலுங்கர்களையும் இது இணைத்து வைக்கக்கூடியது.

இரண்டு தெலுங்கான வெளியீடுகள் குறிப்பிடத் தக்கவை. அழகுக்கும், உண்மைக்குமிடையே தொன்று தொட்டு இருந்து வரும் போராட்டத்தை "கேய காவியா" "நாகார்ஜுன சாகரா" என்ற நூல்களில், ரம்மியமான கவிதையில் வைத்து பிரகாசப்படுத்துகிறார் ஸ்ரீ நாராயண ரெட்டி. உண்மையில் அது காதலுக்கும் கடமைக்குமிடையே எழும் போராட்டந்தான். கலைஞன் பத்மதேவரிடம் உள்ள காதலுக்கும், தருமத்தின்பால் தனக்குள்ள கடமைக்குமிடையே சாந்திஸ்ரீ பேதலித்து சிரமப்படுகிறாள். இந்தப் போராட்டத்திற்கு முடிவு காணவில்லை. பத்மதேவர் விஜயபுரியை விட்டுப் போகிறார். பின்னர் ஒரு கனவுக்குள் ஒரு கனவு. சாந்திஸ்ரீ, நாகார்ஜுன சாகரின் தோற்றத்தைக் காண்கின்றாள். பூர்த்தி கானாத காதலானது, வெள்ளத்தைப் போல வெளிப்போந்து, நாகார்ஜுன சாகரின் வடிவத்தை எடுக்கிறது என்பது தான் இதில் கூடமாகச் சொல்லப்படும் பொருள். இது மகத்தான காவியம். தாசரதியின் "மகா ஆந்திரோதயம்" நாட்டுப்பற்று உணர்ச்சி நிறைந்த ஒரு பாடல் தொகுப்பு. விசாலாந்திரக் கனவை முதலில் கண்டவர்

இளங்கவிஞர் தாசரதி. ராஜ்யங்களின் இணைப்பு வருவதற்கு முன்னமேயே இருதயங்களின் இணைப்பை அவர் பிரகாசமாகச் சித்திரித்துள்ளார். நாட்டுப்பற்றுடன் கூடிய பாடல்கள் தவிர, இசை நயம் உள்ள மஞ்சீரா, மாதுரி, பௌஷலட்சுமி என்ற கற்பனைக் கவிதைகளும் இத்தொகுப்பில் உள்ளன.

சினிமாவின் செல்வாக்குக் காரணமாகச் சில ஆண்டுகள் மறைந்து போயிருந்த மேடை நாடகம் மீண்டும் மெதுவாக வெளிவர ஆரம்பித்துள்ளது. மாணவர்களும், பிற நாடக அபிமானிகளும் சேர்ந்துள்ள அமெச்சூர் நாடக சங்கங்கள் விசேஷ ஓரங்க நாடகங்களை கலாசார நிகழ்ச்சிகளில் சேர்த்து நடத்திக் காண்பிப்பது போற்றுதற்குரியது. முந்தைய பத்தாண்டுகளில் செய்யுளும் கலந்து பிரபலமாயிருந்த முழுநீள நாடகங்கள் இன்னும் அபிமானிகளைக் கவர்ச்சிக்கின்றன. ஆனால் புராண, சரித்திரச் சிறப்பு வாய்ந்த புதிய நாடகங்கள் இயற்றப்படுவதில்லை. கவிதைகளிலும், சிறு கதைகளிலும் போலவே இன்றைய நாடகங்களிலும் கதையின் விஷயம் அலுப்பூட்டக்கூடிய வகையில் திரும்பத் திரும்ப வந்துகொண்டேயிருக்கின்றது. ஏழை விவசாயி, வருமானம் போதாத குமாஸ்தா, விபசார விடுதிகளில் அடைக்கலம் புகும் பெண், ரிக்ஷாவாலா இவர்கள்தான் திரும்பத் திரும்ப வருகிறார்கள். சிறுகதையைப் போல நாடகத்திலே இளைஞன்–யுவதி விஷயம் அவ்வளவு அதிகமாக அடிபடுவதில்லை. சில நலன்களுக்கு அல்லது கருத்துக்களுக்குத்தான் பிரசாரம் செய்தாக வேண்டுமென்று இக்கால எழுத்தாளர்களில் சிலர் நினைக்கிறார்கள். ஆனால் நிகழ்ச்சித் தொடரிலும், கதை அமைப்பின் சிறப்பிலும், நோக்கத்தை எடுப்பாகச் செப்பாமலேயே கருத்துக்களை சங்கேதமாகச் சொல்லி மனதில் பதிய வைக்க முடியும் என்பதை அவர்கள் உணருவது இல்லை. தகுதியுள்ள ரேடியோ நாடகங்களும், மேடை நாடகங்களும் அண்மையில் அரங்கேறி

யுள்ளன. மொக்கபதி நரசிம்ம சாஸ்திரி என்ற பழம் எழுத்தாளர் "அனஸ்வரம்" என்ற நாடகத்தை இயற்றி யுள்ளார். சம்பிரதாய வழியில் செல்லும் சமயம் புதிய சக்திகளுக்குத் தலைவணங்கி சில புதுமை அம்சங்களை ஜீரணித்துக் கொண்ட போதிலும் அவற்ருல் அதைத் தகர்க்க முடியாது என்பது கூடமாக அவர் உணர்த்தும் பாடம். 'ரிக்ஷாவாலா' என்ற ரேடியோ நாடகத்தில் பட்டிப் புரோலு கிருஷ்ணமூர்த்தி ஒரு உயர்ந்த தரமான படைப்பை வழங்கியுள்ளார். ஒரு சின்னஞ் சிறு பெண் ரிக்ஷாவாலாவின் கவனத்தை ஈர்க்கும் பரிதாபகரமான கதை அது. இறுதியில் அவள் தன் பேத்தி என்பதை அவன் அறிகிருன். ஆனல் மீண்டும் குடும்பம் ஒன்று படுவதற்கான காலம் கடந்து விட்டபிறகுதான் அது தெளிவு பெறுகிறது. "ஆருத்திரா" இயற்றியுள்ள "சாலபஞ்சிகா" என்ற நூல் கதையின் அமைப்பைப் பற்றியது. கதையாவது தன் போக்கில் வளர்ச்சி காணும்படி விடாமல் நடிகன் ஒவ்வொரு திருப்பத்திலும் அதை முறுக்கித் திரிப்பதையும், பாடகன், கவிஞன், நாடகத் தயாரிப்பாளன் ஆகியோரையும் லேசாகக் கடிந்துகொள்ளும் வகையில் அது இயற்றப்பட்டுள்ளது. பெல்லம் கொண்ட ராமதாஸ் இயற்றியுள்ள "அதிதி" (விருந்தினர்) என்பது வெற்றிகரமான மற்ருெரு நாடகம். வசனமும் நடிப்பும் இதில் அடக்கமாகவே காணப்பெறு கின்றன. இதன் காரணமாக நாடகத்தின் உச்சநிலை பிரமாதமாக அமைந்து விடுகிறது. நிந்தனைப் பாணியில் நாடகம் இயற்றப்பட்டுள்ளது. கதாநாயகன் ஒரு லட்சிய வாதி. ஆனல் நட்புக் கொண்டு யாரை மேம்படுத்தப் பாடுபடுகிருனே அதே மக்கள் அவனைக் கொன்று விடுகின்றனர்.

இன்று மக்கள் அதிகமாக விரும்பிப் படிக்கும் இலக்கிய வகை சிறுகதைதான். தினசரிப் பத்திரிகைகள், வாரப் பத்திரிகைகள், உயர்ந்த ரக மாதப் பத்திரிகைகள்

அவற்றை நூற்றுக்கணக்கில் பிரசுரிக்கின்றன. ஆனால் அவற்றின் தரம் மிக மேலானது என்று சொல்வதற்கில்லை. ஒரே விஷயம் திரும்பத் திரும்ப வந்து கொண்டிருக்கிறது. சாதாரணச் சிறுகதைகளில் கையாளப் பெறும் தெலுங்கு உரைநடை மிக திருப்தியற்றதாக இருக்கிறது. வடிவத்தையும் உத்தியையும் சரிவரக் கவனிக்காதது சிறுகதைத் துறையையே பாழ்படுத்தி விடக் கூடும். இலக்கியப் போட்டிகளின் காரணமாக சில சமயம் முதல் தரமான கதைகள் கிடைக்கின்றன. பிரதான இலக்கிய மாசிகைகளில் உயர்ந்த தரம் காணப் பெறுகிறது. தென்னேட்டி சூரியின் 'பாரதி', கொம்மூரி வேணுகோபால ராவின் 'சூர்யோதயம்', புச்சி பாபுவின் "நிரந்தர திரயம்", திருமார்த்தி ராமாராவின் "மேமி முக்குரம்", வி. சீதாதேவியின் "மாறி போயின மனுஷி" ஆகியவை தரத்திலும் நடையிலும் சிறப்பாக விளங்கும் கதைகள். "மாயாதாரி சித்ராலு" என்பது விசேஷ கவனத்திற்குரிய கதை. அது ஒரு கலாரசிகனைப் பற்றியது. ஸ்டெபான் ஜுவேய்க் என்ற ஜெர்மன் கதையிலிருந்து இதை சிறப்பாக டாக்டர் வி. என். சர்மா மொழிபெயர்த்துள்ளார். தமது முந்தைய கதைகளின் கதாநாயகியாக விளங்கிய காந்தம் என்பவள் முதுமையில் ஞானச்சுடராக, அனுபவ முதிர்ச்சியுடன் வாழும் விதத்தை முனிமாணிக்கியம் கதையாக வழங்கியுள்ளார்.

இலக்கிய, கலைத் துறைகளின் திறனாய்வு பற்றிய சிறந்த நூல்களை இன்றைய தெலுங்கில் காணலாம். பெரும் காவியங்கள், இலக்கியம் அல்லது கலைப் படைப்புக்களை அமைப்பதற்கான சித்தாந்தங்களை வகைப் படுத்திக் கூறும் கட்டுரைகள், உயர்ந்த மாசிகைகளிலும், வாரப் பத்திரிகைகளிலும், தினசரிகளின் வார அனுபந்தங்களிலும் வருவதைக் காணலாம். முந்தைய தலைமுறையில் டாக்டர் சி. ஆர். ரெட்டி, ஆர். அனந்த கிருஷ்ண சர்மா, பி. லட்சுமிகாந்தம் ஆகியோர் இயற்றிய

பாணியின் தொடர்பே இந்தச் சாதனை. தெலுங்கு, ஆங்கில நாவல்களை ஆழ்ந்த ஞானத்துடன் கூட வி. வி. எல். நரசிம்மராவ் ஒப்பு நோக்குகிறார். யாப்பிலக்கணம், வாழ்க்கை அனுபவத்தின் தன்மை போன்ற விஷயங்களைக் குறித்து பொத்துக்குச்சி சுப்ரமணிய சாஸ்திரி பிரமாதமான கட்டுரைத் தொடர்களை இயற்றியுள்ளார். "கலோபாஸனு" என்ற நூலில் கலைப் படைப்பின் சித்தாந்தங்களை பி. ஜெகன்னாதசுவாமி ஆராய்கிறார். டாக்டர் சி. சத்யநாராயணாவின் "பாரதீய கலா", ஜி. வெங்கடேசுவரராவின் "கிருஹ அலங்காரணு", டாக்டர் எம். ராமாராவின் "நாகார்ஜுன கொண்டா" ஆகிய மூன்றும் இந்தியச் சிற்பக் கலையையும், சித்திரக் கலையையும் ஆராய்வதற்குச் சிறந்த அறிமுக நூல்களாகும். அவை மிகத் தெளிவாக, கண்ணியமான உரை நடையில் எழுதப்பெற்றுள்ளன. ஏராளமாகக் கலைச் சித்திரங்கள் அச்சிடப்பட்டிருக்கும் விதம் கண்களுக்கு விருந்தாக அமைந்துள்ளது.

பிற இந்திய மொழிகளிலுள்ள இலக்கியத்தை பரிச்சயம் செய்து வைத்து விளக்கம் தரும் நூல்கள் தெலுங்கில் அதிகமாக வந்து கொண்டிருப்பது வரவேற்கத்தக்க ஓர் அம்சம். ஜெயசங்கர பிரசாத் ஹிந்தியில் இயற்றியுள்ள "காமாயினி" என்ற கவிதை பற்றி கர்ண ராஜசேஷகிரி ராவ் இயற்றியுள்ள கட்டுரையும், நஜ்ருல் இஸ்லாம் என்ற வங்க கவியைப் பற்றிய ரஹ்மானின் கட்டுரையும் விசேஷமாகக் குறிப்பிடவேண்டியவை. மகத்தான இலக்கியம் உருவாகி, புத்தி பூர்வமாக விமரிசிக்கப் பெற வேண்டுமாயின் ஆக்க வகையில் ஆய்வுரைக் கொள்கைகள் தெளிவுபட்டாக வேண்டும். மேலே குறிப்பிட்ட சிறிய எழுத்தாளர் குழு இவ்வகையில் செய்திருப்பதற்காக நன்றி செலுத்த வேண்டும்.

தெலுங்கு இலக்கியம் மகத்தானது, வளர்ந்து வருவது. ஸம்ஸ்கிருதமும் தெலுங்கும் சிறப்பாக இணைந்து

கையாளப் பெறுவதால், தியாகராஜரின் கீர்த்தனைகளை உலகப் புகழ் கொண்டனவாக ஆக்கிய இனிமையும் அழகும் அம்மொழியில் சிறந்து காணப்பெறுகின்றன. பல நூற்றுண்டுகள் உழைத்து ஏற்றம் கண்ட பிரதான இந்திய மொழிகளின் இலக்கிய வரலாறு எழுதப் பெறுங் கால், அதில் தெலுங்கு ஒரு கௌரவமான இடம் பெற்றிருக்கும். நன்னையா காலத்திலிருந்து தற்காலம் வரை இலக்கியப் பரம்பரை தொடர்ச்சியாக அறுபடாமல் வளர்ச்சி கண்டு வந்திருக்கிறது என்பது புலனுகும்.

## SELECT BIBLIOGRAPHY OF TELUGU LITERATURE

*Telugu Literature.*
By P. Chenchaiah and Raja M. Bhujanga Rao Bahadur.

*Telugu Literature.*
By Dr. P. T. Raju.

*A Hand Book of Telugu Literature.*
By L. K. Sitaramaiya.

*A Historical Sketch of Telugu Literature.*
By T. Rajagopala Rao.

*The Songs of Tyagaraja.*
By Dr. C. Narayana Rao.

*The Novel in Telugu Literature.*
By Prof. V. N. Bhusan.

*Modern Telugu Poetry (An Anthology).*
Edited by Smt. A. Chaya Devi.

*Linguistic Survey of India.*
By G. A. Grierson, Vol. IV. pp. 576–618.

# பஞ்சாபி இலக்கியம்

குசவந்த சிங்கு

இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் இரண்டு கோடி பேருக்கு மேல் ஹிந்துக்களும், முஸ்லிம்களும், சீக்கியர் களும், பஞ்சாபி பேசுகிறார்கள். அரபி, தேவநாகரி, குர்முகி ஆகிய மூன்று வெவ்வேறு லிபிகளில், வெவ்வேறு சமயங்களைச் சேர்ந்தவர்களது படைப்புக்கள் கொண்டது அதன் இலக்கிய மரபு. இந்த லிபிகளை அரபி, பர்ஷியன், உருது மொழிகளும், ஸம்ஸ்கிருதத்திலிருந்து கிளைத்த பல பாஷைகளும் பயன்படுத்துகின்றனவாகையால் அவற்றில் பொதிந்துள்ள கருத்துக்களால் பஞ்சாபி மொழி வளமடைந்துள்ளது. சில சிறு குழுவினரின் மொழிகளும் சேர்ந்து சுவை மிகுந்த இந்தக் கலவைக்கு மேலும் நறுமணம் தந்து, அலாதியான ஒரு புஷ்டியும் ஆண்மைச் செறுக்கும் அதற்கு கிடைக்கச் செய்துள்ளன.

எந்த மொழிக்கும் காலவரயறை கட்டுவது சுலபமல்ல. பஞ்சாபியைப் போல மொழிமூலம் பலதரப்பட்டதாக உள்ள பாஷை விஷயத்தில் இது அதிகச் சிரமமானது. இதன் தோற்றுவாய் பன்னிரண்டாம் நூற்றாண்டு என்பர் சிலர். வேறு புலவர்கள் அதை மேலும் முன்னுக்குத் தள்ளியுள்ளனர். அதிகாரபூர்வமான தஸ்தாவேஜுகள் இல்லாத நிலையில், இலக்கியத்தின் பகுதியாகி, இக்கால எழுத்தாளரை ஊக்குவித்தவர்களும் தெளிவாக அடையாளம் கண்டறியக் கூடியவர்களுமான எழுத்தாளரை

முதன் முதலாக எடுத்துக் கொண்டால் அதிகமான தவறு நேரிடாது. இத்தகையோரில் இரண்டு முக்கியப் பிரிவு களைக் காணலாம். முஸ்லிம் சூபிகள் ஒரு சாரார், சீக்கிய குருக்கள் மற்ற சாரார். இரண்டின் தொடக்கமும் பதினைந்தாம் நூற்றாண்டுதான். இந்த இரண்டு ஓடை களும் மிக விரைவிலேயே கலந்து இப்போதைய மொழி யின் தாய் தந்தையராகி விட்டன.

## சூபிகள்

இந்தியா மீது முஸ்லிம் படையெடுப்பு நடைபெற்ற தைத் தொடர்ந்து சூபிகள் வந்தார்கள். ஆனால் நாட்டு மக்களின் மொழியையும் பழக்க வழக்கங்களையும் அவர் கள் கற்றறிந்த பிறகுதான் இந்தியரது வாழ்க்கையிலும் இலக்கியத்திலும் அவர்கள் செல்வாக்குப் பெற முடிந்தது. ஆனால் அக்காலம் வருமுன் அவர்களது சமய ஆர்வம் கணிசமாக ஆறிப் போய்விட்டது. தமது மதம் தவிர பிறவற்றை ஏற்றுக்கொள்ளவும், அவற்றை மதித்துப் போற்றவுங்கூட அவர்கள் இணங்கலாயினர். மூல்டான் அருகிலுள்ள பாக்பட்டணந்தான் சூபிகளுடைய தலைமை யிடம். அவர்களது சமயக் கருத்துக்கள் பிறவிடங்களை விட இப்பகுதியில் தான் அதிகப் பிரபலமடைந்திருந்தன. சீக்கிய குருக்கள், முக்கியமாக அந்த சமயத்தைத் தோற்றுவித்த குரு நானக், பக்தி இயக்கத்து மகான்கள் விஷயத்தில் காட்டியது போன்ற சிரத்தையுடன் அவற் றைப் படித்தனர். காதலனும் காதலியும் மாயையால் அல்லது பிரமையால் பிரிக்கப்பட்டிருப்பதைப் போன்றது தான் ஆண்டவனுக்கும் மனிதனுக்கும் உள்ள உறவு முறை என்பது சூபி கருத்து. பிரிவு நிலை நீங்குவது அத்தியந்த நேசம், தீவிர ஆற்றாமை மூலமாகத்தான் சாத்தியமாகும். அவர்களது இலக்கியங்கள் பெரும் பாலும் இதையே கூறுகின்றன. புலே ஷா இயற்றியுள்ள பிரபலமான இப்பாடலில் இதைக் காணலாம்.

என்றும் புதிய வஸந்தம் காதலுக்குண்டு :
வேத மொழி அலுக்கின்றது.
குர்-ஆன் ஞானம் சோர்வு தருகிறது.
பிரார்த்தித்து அலுத்தேன். தெண்டனிட்டு
நெற்றிதான் புண்பட்டது.
ஹிந்துக்களின் புனித ஸ்தலங்களில்,
மக்கா யாத்திரையில்
கண்டேனில்லை கடவுளை.
அன்பைக் கண்டவனே ஒளியினைக் கண்டான்.

சீக்கிய குருக்களின் நூல்களிலும் இதே கருத்துத் தான் திரும்பத் திரும்ப வருகிறது. ஹீர ரஞ்சா, சசி புன்னு சோனு மஹிவால் என்ற பஞ்சாபின் மூன்று இதிகாசங்களின் விஷயமும் இதுவே. ஓர் ஆயுள் காலம் பிரிந்திருந்து, சேர்க்கையை வேண்டி மரணத்தில் சந்திக்கும் காதலர்களைப் பற்றியவை இவை மூன்றும். இன்று வாழும் மகத்தான எழுத்தாளராகிய பாய் வீர சிங்கின் கவிதைகளில் இதன் எதிரொலியைப் பரந்து கேட்கலாம்.

சூபிகள் கிராமவாசிகள். அவர்களது சொல்லாட்சியில் நாட்டுப்புற வாடையின் தெம்பு உண்டு. வேளாளர்களின் அன்றாட நடவடிக்கைகளிலிருந்து நிறைய உவமைகள், உருவக அணிகள் அவர்களுக்குக் கிடைத்தன. உழவடை, நெசவு, தயிர் கடைவது, நிறைய உறவினர் கொண்ட கூட்டுக் குடும்பங்களில் தென்படும் எதிரெதிர்ப் போக்குகள், உடன்பிறந்தாரிடம் பரிவும் அவர்களது மனைவிமாரிடம் கடுமையும் காட்டும் சகோதரிகள், மாமியார் கொடுமை, பிறந்தகம் செல்ல நாட்டுப் பெண்கள் தவிப்பது முதலியன இலக்கிய அணிகளை வாரிக் கொடுத்தன. தமது உபதேசங்களில் சீக்கிய குருக்கள், முக்கியமாக குரு நானக், நாடறிந்த பொழுதுபோக்குகளையும் நிலவரங்களையும் கையாண்டனர்.

காபீ, பாரஹ்-மா, சிஹர்பி போன்ற சில செய்யுள் வடிவங்கள் பஞ்சாபி இலக்கியத்தில் பரவியதற்கு சூபிகள் தாம் காரணம். காபீ பாரசீகக் கவிதையில் பிரபலமாக இருப்பது. இன்றும் உருதுச் செய்யுளில் இது செல்வாக்குடன் காணப் பெறுகிறது. பாரஹ்-மா என்றால் பன்னிரண்டு மாதங்கள் என்று பொருள். பருவங்களின் எழிலை மனம் போனவாறு வருணிக்க இவ்வகை இடம் தருகிறது. கூடவே தாங்கள் சொல்ல விரும்புவதையெல்லாம் கோர்த்துக் கட்டிவிடலாம். பஞ்சாபிக் கவிதையில் வளமை மிகுந்த இயற்கை வருணனைகள் இச் செய்யுள் வடிவத்தில் தான் இருக்கின்றன. 'ஹீர ரஞ்சா'வில் வாரிஸ் ஷா ரம்மியமான பாரஹ்-மா ஒன்றை இயற்றியுள்ளார். ஆதிக் கிரந்தத்தில் குரு நானக் இயற்றியுள்ள பாரஹ்-மா மொழியிலேயே முதன்மையான அழகு சொட்டும் பாடல். (இந்த மரபை இக்காலத்து எழுத்தாளர் கைவிட்டது வருந்தத் தக்கது.) சிஹர்பி என்பது ஒருவகைச் சித்திரக் கவிதை. பாடலடிகளின் முதலெழுத்துக்களை கூட்டிப் படிக்க அது ஒரு சொற்றொடராக அமையும். அடி நினைவுக்கு வர இது உதவும். இது பஞ்சாபி மொழியில் மட்டும் தனியாக உள்ள முறை. இதைச் சீக்கிய குருக்கள் கொஞ்சகாலம் கையாண்டு பிறகு விட்டுவிட்டனர். மீண்டும் இதை எவரும் உயிர்ப்பிக்கவில்லை.

### சீக்கிய குருக்கள்

சீக்கிய குருக்களில் பெரும்பாலோர் செய்யுள் இயற்றினர். நானக், அங்கத், அமர் தாஸ், ராமதாஸ், அர்ஜுன், டேஜ் பகதூர் ஆகியோரின் சிருஷ்டிகள் 'கிரந்த சாஹிபில்' (சீக்கியர்களின் புனித நூல்கள் அனைத்தும் சேர்ந்தது) ரட்சிக்கப்பட்டு வருகின்றன. முதலாவது குரு நானக்கும் ஐந்தாவது குரு அர்ஜுனரும் தான் சீக்கிய தெய்வ நூல்களை உருவாக்கியதில் முக்கிய மானவர்கள்.

குரு நானக் (1469–1539) தமது கவிதைகள் மூலம் உபதேசம் செய்தார். வாழ்க்கைத் தத்துவத்தை விளக்கி ஒரு குறிப்பிட்ட நெறியில் நிற்குமாறு பணிக்கும் நல்வழி காட்டும் தன்மை படைத்தவை அப்பாடல்கள். குறித்த நோக்குடன் எழுதுவதன் காரணமாக நீதி முறைக் கவிதைகள் பெரும்பாலும் குறுகிய தன்மை கொண்டிருக்கும். ஆனால் குரு நானக்கின் கவிதையில் விசேஷமான சொல்லாட்சிச் சுதந்திரத்தைக் காணலாம். கதிர் நிறைந்த புலன்கள், கீழ்வானம் வெளுக்கும் அழகு, புள்ளரவம், கானகத்தில் மான்கள் துள்ளியோடும் நேர்த்தி, பருவகால முகில்களில் மாட்சிமை, மழை பொழியும் இசை ஆகியவை அனைத்தும் அவரது சமயப் பற்றுதலையும் கவிதையார்வத்தையும் போஷித்தன. அற்ப விஷயந்தான். ஆனால் அதில் அற்புதமான தார்மிகப் புதைப் பொருளைப் புலப்படுத்தும் சின்னமாக ஏற்பார்:

எங்கள் ஆசான் ஓர் உழவன்
ஏர்பூட்டி ஓட்டுகின்றான் எம்மை.
படைச் சாலோட்டி எழுதுகின்றான்
நம் கருமங்களை
தரையே அவன் காகிதம்
அரும்பும் வியர்வை முத்திட்டு
குதிக்கின்றது விதை வீச்சுடன்.
பாட்டாமைக் கேற்ற பயன்.
கொஞ்சம் நமக்கு, மீதம் பிறர்க்கு
ஓ! நானக்! இதுவே உண்மை வாழும் வழி.

“ஜ-ப் சாகிப்” என்பது குரு நானக்கின் மிகச் சிறந்த நூல். அது காலைப் பிரார்த்தனை. அவரது சிருஷ்டிகளில் பெரும்பாலும் பரந்து காணப்பெறும் பக்தியுணர்ச்சிக்கு இது ஓர் எடுத்துக் காட்டு:

நூறுயிரம் நாவெனக் களித்தாலும்
அதை இருபதாய்ப் பெருக்கினும்

நூறுயிரம் தரம் மீட்டுரைப்பேன்.
உலகுகள் அனைத்தின் ஆண்டை ஒருவன்
அதுவே செல்லரிய பாதை
அவையே அம்மலையேறும் படிகள்
ஏறி அடைவீர் அவன் திருவீட்டை
அவனுடன் ஒன்றி நிற்போம் வாரீர்.
மோட்ச இசை நாதம் கேட்டு மெய்சிலிர்க்குது
பறக்க விருப்பமுண்டு ; எனும் ஊர்ந்து
செல்லத்தான் வேண்டியிருக்குது பார்.
ஓ ! நானக் ! நிறைவு தருவது அவனருள், ஒன்றே
பிறவெல்லாம் பிதற்றல், பொய்யென உணர்.

குரு நானக்கைப் போலவே ஆழ்ந்த உணர்ச்சிகள் செறிந்த கருத்துக்களை தமது பாடல்களில் குரு அர்ஜுன் (1563–1606) வெளியிட்டுள்ளார். ரத்தினம் வைத்து இழைத்தது போன்ற சொற்றொடர்களை அவரது செய்யுட்களில் நிறையக் காணலாம். மோனை வளமும் சொற்களைத் திரும்பத் திரும்ப எடுத்துரைக்கும் உத்தியும் சேர்ந்து அதன் இன்னிசை விடாது வந்து பரவசப் படுத்தும். 'சுகமனி' என்பது குரு அர்ஜுனரது படைப்புக்களில் அதிகப் பிரபலமடைந்திருப்பது. பஞ்சாபி மொழியில் அவரது கவிதைகள்தாம் அதிகமாகப் பாடப் பெறுபவை.

பஞ்சாபி இலக்கியத்தில் மகத்தான சிருஷ்டி "கிரந்த்" என்ற தொகுப்பு. குரு அர்ஜுனரும் பாய் குருதாஸ் என்ற எழுத்தாளருந்தான் அதன் தொகுப்பிற்காக அதிகம் உழைத்தவர்கள். இது பல ஆயிரம் பாக்கள் கொண்ட பெரிய நூல். முன்னர் கூறிய ஆறு குருக்களின் நூல்கள் மட்டுமின்றி பக்தி இயக்கத்தினரான பல ஞானக் கவிகளின் கீதங்களும் அதில் இடம் பெற்றுள்ளன. ஆனால் புனையப் பெற்ற பகுதியில் வழங்கும்

மொழி வகையில்தான் அவை அமைந்திருந்தன என்பதில்லை.

சீக்கிய குருக்கள் எல்லோரிலும் குரு கோவிந்த சிங்குதான் (1666–1708) ஆழ்ந்த புலமை படைத்தவர். ஹிந்து புராண வரலாறுகளையும் இஸ்லாமிய சமய சாஸ்திரங்களையும் அவர் நன்கறிந்தவர். அவர் கலை வள்ளலாக விளங்கினார். அவரது அவைப் புலவர்கள் 52 பேர். ஸம்ஸ்கிருதம், பாரசீகம், பஞ்சாபி ஆகிய மூன்று மொழிகளிலும் அவர் எழுதினார். ஆண்டவனது கீர்த்திமையை மட்டுமே பாட வேண்டும் என்று அவர் வரம்பு கட்டிக் கொள்ளவில்லை. அவரது நூல்கள் அறவழி நின்றதுடன், ராஜீயப் பொருள் படைத்தவையாகவும் இருந்தன. 'ஜபர்நாமா' அல்லது வெற்றி மடல் என்ற புகழ்பெற்ற நூலின் சக்தி வாய்ந்த கவிதை மூலம், தம்மைப் பின்பற்றியவர்களுக்கு அவர் வீர உணர்ச்சியை ஊட்டினார். அது அவுரங்கசீப் சக்கரவர்த்திக்கு அனுப்பிய ஓலை. 'ஜப் சாகிப்' என்ற நூல் இன்றும் அவரது மரபினருக்கு ஊக்கம் தரும் சுனையாக இருந்து வருகிறது. குரு கோவிந்த சிங்கின் நூல்களைத் தொகுத்துப் பதிப்பித்தவர் அவர் காலத்திலிருந்த மான்சிங்கு.

கோவிந்த சிங்கின் வீரக் கவிதைக்கு ஓர் உதாரணம்:

அழிவற்ற தெய்வமே, நீயே எங்கள் கேடயம்
கட்டாரி நீ, கத்தி நீ, வாளும் நீயே.
ஆதியிலா, அந்தமிலா, சாவுமிலா வானின்
பதியே, எம் ரட்சகனே.

உருக்கில் காணுது அடங்காத வலிமை
காலமெல்லாம்—பறக்குது தடுப்பாரின்றி.
நீதான் தீர ரட்சகன், நீயே உருக்கு.
காத்தருள்வாய் நின் தாசனை.

பத்து குருக்கள் காலமான பிறகு அவர்களது வாழ்க்கை வரலாறுகளை அவ்வக்காலத்தவரும் பிறரு

மாகப் பலர் வரைந்தனர். இந்த வாழ்க்கை வரலாறுகள் ''ஜனம் சாகி''கள் என்று அழைக்கப் பெறுகின்றன. இவை மதிப்புயர்ந்த வரலாற்று தஸ்தாவேஜிகள், சேவா ராம், ராம் கோர், சந்தோக் சிங்கு, ரதன் சிங்கு பங்கு, ஞான சிங்கு ஆகியோர் இக்காலத்தைப் பற்றி சரித்திர நூல்களை இயற்றியுள்ளனர்.

அதிகாரத்துக்காகப் போராடிய காலத்திலோ சீக்கியர் அரசாட்சி புரிந்த குறுகிய காலத்திலோ அவர்கள் இலக்கியத்தைப் படைக்கவில்லை. அப்பொழுது பஞ்சாபியை விட பாரசீக மொழிக்குத்தான் அதிக மவுசு. ஆனால் தமது ராஜ்யத்தை ஜயித்து அவர்கள் உருவகப்படுத்திய காலத்தில் புலே ஷா (1680–1758) வாரிஸ் ஷா (1735–1798) என்ற இரு முஸ்லிம்கள் பாடல்களை இயற்றினர். பஞ்சாபின் கவிதா உலகில் மிகச் சிறந்த கற்பனையையும் ஆத்மானுபவத்தையும் அவர்களது கவிதைகளில் காணலாம். புலே ஷாவின் .காபிகளும் 'ஹீர் ரஞ்சா' என்ற வாரீஸ் ஷாவின் இதிகாசமும் பிரபலமானவை. ஒவ்வொரு கிராமத்திலும் அவற்றை ஓதுகிறார்கள்; பாடுகிறார்கள். பின்னர் வந்த பல தலைமுறை எழுத்தாளர்களிடம் அவர்களுடைய செல்வாக்கு மேலோங்கி இருந்தது.

## இக்கால பஞ்சாபி இலக்கியம்

பிரிட்டிஷ் ராணுவம் கைப்பற்றிக் கொண்ட பிறகு ஐம்பது ஆண்டுகளுக்கு இந்தியாவில் இலக்கிய சிருஷ்டியே காணப் பெறவில்லை. ராஜீய மாறுதல்களின் விளைவுகளினின்று மீண்டு மேலைநாடுகளின் தராதரங்களைப் புரிந்துகொள்வதற்குப் பல ஆண்டுகளாயின. கீழ்த்திசைப் பண்பாடு பயனற்றது, ஐரோப்பியப் பண்பாட்டை ஏற்றுக்கொள்வதுதான் இந்தியர்களுக்குச் சிறப்பைத் தரும் என்று ஆட்சியாளர்களான ஆங்கிலேயர்கள் முதலில் கருதினர். இந்திய வித்தை, மரபு இரண்டுடனும் அடியோடு தொடர்பற்றுப் போய் ஒரு தலைமுறை இந்தியர்

இதை நம்பி தம்மை ஆங்கில வழிமுறையினராக்கிக் கொண்டுவிட்டனர். இந்த மதியீனத்தை உணர்ந்து, புராதன இந்தியாவின் சாதனைகள் நிறைந்திருந்த நிலையங்களைத் தும்பு தூசு தட்டி நன்கு பயன்படுத்திக் கொண்டனர் அடுத்த தலைமுறையினர். நூற்றாண்டு நெடுக இப்போக்கு காணப் பெற்றது. மேற்றிசை மோகத்துக்குக் கடைசியாக இரையானது பஞ்சாப். எனவே அதன் செல்வாக்கை உதறி எறிவதிலும் அது கடைக் கோடியில் இருந்தது. எனவே எழுத்துலகின் மறுமலர்ச்சி நாட்டின் பிற பகுதிகளைவிட பஞ்சாபில் தாமதித்தே வந்தது.

பஞ்சாப் ஆங்கில ஆட்சியின் கீழ்ச் சேர்த்துக் கொள்ளப்பட்ட பிறகு பஞ்சாபி இலக்கியப் போக்கானது முதலில் சிங்கு சபை இயக்கமும் பின்னர் அகாலி, கம்யூனிஸ்ட் இயக்கங்களையும் சார்ந்தே மாறுதலடையலாயிற்று. இந்த இயக்கங்களை நடத்தியோரை எதிர்நோக்கியிருந்த பிரச்னைகளின் முத்திரையை அவ்வப்போதைய இலக்கியப் படைப்புக்களில் காணலாம். சமூக, ராஜீயப் பிரச்னைகளைப் பொருட்படுத்தாமல், எழுதவேண்டுமென்பதற்காகவே எழுதிக்கொண்டு வந்த எழுத்தாளரும் இருந்தனர்.

## சிங்கு சபை எழுத்தாளர்

சீக்கியச் சமயத்துக்கு சிங்கு சபை இயக்கத்தினரின் இலக்கியப் படைப்புக்கள் தலையாய உதவி புரிந்தன. இவ்வகையில் முதன்மையாகப் பணியாற்றியவர் பாய் வீர சிங்கு. பஞ்சாபி மொழியில் அக்கறை பிறக்கச் செய்தார் அவர். அவரது பணி பஞ்சாபி இலக்கிய வரலாற்றில் சிறப்பாகக் காணப் பெறுகிறது. அவர் 1872இல் பிறந்தார். 85 ஆண்டுகள் நிறைந்த தமது ஆயுளில் வேறு எந்த இந்திய எழுத்தாளரையும்விட அதிகமாக அவர் எழுதிக் குவித்துள்ளார். பிரிட்டிஷ் கலைக் களஞ்சியத்தின்

24 நூல்கள் அடைக்குமிடத்தை அவரது சிருஷ்டிகள் நிரப்பும். எழுதுவதை அவர் இன்னும் நிறுத்தவில்லை. கற்பனைக் கதை, கவிதை, சமய நூல்களுக்கு வியாக்கியானங்கள் முதலியன அவர் இயற்றியிருப்பவை.

பத்தொன்தாவது நூற்றுண்டின் இறுதியில் வீரசிங்கு எழுதத் தொடங்கினர். அப்பொழுது இருந்த சமூக, ராஜீய நிலைமைகளைக் கருத்திற் கொண்டுதான் அவரது சிருஷ்டிகளை மதிப்பிட வேண்டும். தமது முன்னேர்களின் சாதனைகளைப் பற்றி பஞ்சாபியர் சமுசயப்படத் தொடங்கிய காலத்தில் புகழ் தந்த நாவல்களை அவர் வரைந்தார். சீக்கிய ஆட்சி கரடு முரடாகவும் ஊழல் மயமாகவும் இருந்ததென்றும் அதற்குப் பதிலாக நாகரிக அரசாட்சியை தாம் தோற்றுவித்ததாகவும் ஆங்கிலச் சரித்திராசிரியர்கள் பன்னிப் பன்னி சொல்லிக்கொண்டே இருந்தனர். வைதிக மதத்தைத் தழுவி நிற்பதுபோல இருந்தாலும் சீக்கிய சமயம் அதன் வெற்று நிழலே என்று சொல்லி, அதன் அமைப்புக்களும் சின்னங்களும் காட்டுமிராண்டித் தன்மை வாய்ந்தவை என்றனர் ஸம்ஸ்கிருதப் புலவர்கள். சுந்தரி, விஜயசிங்கு, சத்வந்த கௌர், பாபா நெத்சிங் என்ற அவரது நாவல்கள் சீக்கியர்களின் வீரதீர பராக்கிரமங்களையும், தமது சமயத்தின் சீர்மையையும் நிலைக்களனகக் கொண்டவை. பாமர மக்களின் அடிமைப் புத்தியையும் பட்டாணிய, முகலாய அரசர்களின் கொடுமைகளையும் எதிர்நிலைகளாக வைத்துக் கொட்டினர் அவர். உற்சாக மிகுதியுடனும், நன்றியறிதலுடனும் அவரது நாவல்களை சீக்கியர் கரைத்துக் குடித்தனர். ஆனல் அந்தத் தனி மனப்பான்மை மாறியவுடன் அந்த நாவல்களுக்கு இருந்துவந்த மவுசு போய்விட்டது. இப்போதைய வாசகர்களுக்கு அவை வெகு சாதாரணமாகவே படுகின்றன. அவற்றின் உறைவிடம் வரலாறு, இலக்கியம் அல்ல.

வீர சிங்கே கற்பனைக் கதைகள் எழுதுவதை விட்டு

மொழி பெயர்ப்புகளை மேற்கொண்டார். புனிதக் கிரந்தங் களை துண்டுப் பிரசுரத் தொடர்களிலும் "கால்ஸா சமாச் சார்" என்ற தமது வாரப் பத்திரிகையிலும் விளக்கலா னர். இவற்றுடன்கூட அவரது கவிதைகளும் பிரசுரமா யின. பஞ்சாபிக் கவிஞர்களிடையே மதிப்பு மிக்க முதன்மை ஸ்தானத்தை கவிதைகளே அவருக்கு அளித்தன.

முதலில் வசன காவியப் பரீட்சைகளை வீர சிங்கு செய்து பார்த்தார். 'ராணு சூரத் சிங்கு' என்ற நீண்ட கவிதையொன்று 1905-இல் வெளியாயிற்று. வழக்கம் போல இதுவும் சமயத்தைப் பற்றியது. அவரது உத்தி களும் சொல்லாட்சியும் பிரமாதமாயிருந்தன. பஞ்சாபி யில் அதற்குமுன் எவரும் வசன காவியம் எழுதியதில்லை. எதுகை மோனை, ஒலியைக் குறிக்கும் சொற்கட்டு, லயம், மீட்டுக் குரல் போன்ற அணிகளெல்லாம் சேர்ந்து, வேனிற் காலத்துப் பிற்பகலுக்குரிய சோர்வும் காதலுணர்ச்சியும் கலந்தது போன்ற இன்னிசைச் சிறப்புக்கள் இடையருது பரிமளிக்கும் நூலொன்றை அவர் புனைந்துள்ளார். நானக், கடைசி குரு கோவிந்த சிங்கு ஆகியோரின் வாழ்க்கைச் சரிதங்களை அவர் இயற்றினர். "கல்கீதர் சமத்கார்" என்பது குரு கோவிந்த சிங்கின் வரலாற்று நூல். அதுதான் முதலில் வெளிவந்தது. "குரு நானக் சமத்கார்" மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு பிரசுர மாயிற்று.

இவ்விரண்டு வாழ்க்கை வரலாறுகளின் வெளி யீட்டுக்கு இடையே பஞ்சாபிக் கவிகள் முன்னர் கையாண்டிராத குறிலடிப் பாடல்களின் பல தொகை நூல் களை வீர சிங்கு வெளியிட்டார். இவற்றில் அதிகச் செல் வாக்குப் பெற்றிருந்தது ஓமர் கய்யாமின் வாசகர்கள் அறிந்துள்ள ரூபியாத் நடை. தமது தத்துவத்தையும் தெய்வானுபவத்தையும் இவற்றில் அவர் வெளியிட்டார். பக்திப் பிரேமையும் மானிடக் காதலும், ஆத்மார்த்தமும்

இன்பவியலும், அறமும் ஆண்டவனும் வர்ணஜாலச் சித்திரங்களாக, மனதைப் பிரமிக்க வைக்கும் வகையில் கலந்து உறவாடும் அழகே அழகு. இதில் ஆழ்ந்து சிறக்கும் அடக்கமானது சில சமயங்களில் தன்மயம் அடியோடு இல்லாத நிலையைப் புலப்படுத்துகிறது :

" கிளையிலிருந்து என்னைக் கிழித்துப் பறித்தாய்.
கைக்கொண்டு மணம் நுகர்ந்தாய்
தூர எறிந்தாய்.
வீசுண்டு, மிதிபட்டு, தூசிற் கலந்தேன்,
பரிசித்த நினைவே நிற்குது, நன்றியுடன் "

அடிக்கடி எடுத்துக் காட்டப் பெறும் மற்ருெரு செய்யுளில் அவர் கூறுகிருர் :—

" கனவொன்றில் நாடிஞய் என்னை
கட்டியணைக்கத் தாவினேன்
கற்பனை இறுகுமா பிடியில்?
ஆவலால் நீண்ட கரம் வலிக்க
பாதங்களைப் பற்றி அவைமீது
தலை கிடத்த விரைந்தேன்.
எட்டவில்லை அவையும்.
நீ மேலே, நான் கீழேயன்ரே."

பகுத்தறிவை விட நம்பிக்கையே உயர்ந்தது என்ற தமது கோட்பாட்டை வேறு ஒரு பாடலில் வீர சிங்கு வெளியிட்டுள்ளார் :—

" பிச்சைத் திருவோடாக்கினேன் மனதை
வீடுதோறும் இரந்தேன் கல்வியை
வீசியெறிந்த துணுக்குகளால் திணித்தேன்
கனத்தது
பெருமை கொண்டேன்.
நான் புலவன்.
முகில்களில் நடமாட ஆவல்.

ஆனால் தரையிலும் தடுமாற்றம்
குருவை நாடி திருவோட்டுக்
காணிக்கை தந்தேன்.
"மலம்" எனப் பகர்ந்தார். "மலம்"
கவிழ்த்தார் தலை கீழே
துணுக்குகளை வீசி எறிந்தார்
மணல் போட்டுத் துலக்கினார்
நீரில் அலசியெடுத்தார்.
கல்விக் கசடைக் களைந்தார்."

அறுபது பிராயத்தை அடையுமுன் பெரும்பாலோரின் படைப்புத் திறன் காலியாகிவிடுகிறது. வீர சிங்கு அத்தகையோர் அல்லர். தாம் படைக்கும் தீயினில் தூசாகும் ஆவேசக் கவிதா மரபினர் அல்லர் அவர். அவர் நடத்தும் வாழ்க்கையும் புனையும் கவிதையும் என்றும் போலவே இன்றும் தூய்மையான வழி வழி நிற்பவை. கையாளும் சொற்களில் தூய்மை, சிந்தனைச் சுத்தி, சைலியில் தெம்பு காரணமாக அவை சிரஞ்சீவித்துவம் அடைந்துள்ளன. "மேரீ சையான் ஜீயோ" என்ற அவரது நூலுக்கு நாட்டின் மிக உயர்ந்த விருது கிடைத்தது மிகமிகப் பொருத்தமே. வீர சிங்கு, பெயரளவிலேனும் பஞ்சாபி பேசுவோர் தவிர பிறருக்கு இதன் மூலம் அறிமுகமாகிறார். தகுதிவாய்ந்த மொழிபெயர்ப்பாளரின் துணைதான் இனித் தேவை.

பாய் வீர சிங்கின் காலத்தினராக இருந்து மரண மெய்திய நால்வர் குறிப்பிடத்தக்கவர்கள். சீக்கிய சமயத்தைப் பற்றிய சிறந்த நூற் களஞ்சியமொன்றைத் தொகுத்தவர் கஹன் சிங்கு. பஞ்சாபி வசனத்திலும் கவிதையிலும் நகைச் சுவையை ஏற்றியவர் "மௌஜி"

---

4. தேச விடுதலைக்குப் பிறகு, வெளியான தலைசிறந்த பஞ்சாபி நூல் என்று மதித்து சாகித்திய அக்காதெமி இதற்குப் பரிசு வழங்கியுள்ளது.

ஆசிரியர் சரண் சிங்கு. புதிய சைலிகளில் அசாதாரண விஷயங்களைப் பற்றி தலைசிறந்த வசனகாவியம் இயற்றிய வர் புராண சிங். தமது வாழ்நாளில் வீர சிங்குக்கு அடுத்தபடி புகழெய்தியவர் தானென் ராம் சாத்ரிக். "சனி வாரி", "கேசர் கியாரி", "நவான் ஜஹான்", "சூபி காறு" ஆகிய அவரது பாடல்-தொகுப்புக்களில் ரம்மிய மான இசையில் நல்ல பழகு பஞ்சாபியை சுவைக்கலாம்.

இளந் தலைமுறையினரிடையேகூட கவிதையிற் கருத்துக்களைக் கூறுவதுதான் அதிகப் பிடித்தமுள்ள தாக இருந்து வருகிறது. மாதம் தவறினாலும் ஒரு புதுக் கவிஞன் தோன்றத் தவறுவதில்லை. பத்திரிகைகளும், சஞ்சிகைகளும் கவிதைகளுக்குக் கணிசமாக இடம் தரு கின்றன. அரசியல், சமயக் கூட்டங்களைவிட பஞ்சாபிக் கவி தர்பாருக்கு மக்கள் திரளாக வருகின்றனர். இந்தக் கவிஞர்கள் சுமார்தான்; ஆனால் மோகன் சிங்கும் அமிருதா பிரீதமும் இதற்கு விலக்கானவர்கள். "பஞ்ச் தரியா" என்ற மாசிகையின் ஆசிரியர் மோகன் சிங்கு. "சவே பத்தர்", "குசும்பா", "ஆதாவதே" என் பவை அவரது கவர்ச்சிகரமான ஆரம்ப நூல்கள். இள வட்டக் கவிஞர்களில் முதலிடம் வகிப்பவர் என்ற நியாய மான பெருமை அவருக்கு உண்டு. தேச பிரிவினைக்குப் பிறகு வெளியான அவரது நூல்கள், குறிப்பாக "கச்-சச்" இடதுசாரி ஆற்றலுடையனவாகக் காண்கின்றன. கவிதா வடிவத்தை ராஜீய வேகம் முந்திக் கொள்கிறது. முற்போக்காளர் என்று தம்மைக் கூறிக்கொள்ளும் பெரும் பாலான எழுத்தாளர் பலரிடம் இந்த நலக் குறைவைக் காணலாம். மார்க்ஸின் தத்துவத்தில் மயங்கிய மோகன் சிங்கு பிறகு தெளிவு பெற்று ஏழை எளியவர்களுக்குப் பரிந்து எழுதுவதையும் செயலில் இறங்குமாறு அழைப் பதையும் தமது இலக்கியப் பணியாக்கிக்கொண்டார். இயற்கையாக வந்து அமையும் அவரது கவிதை எழில் மீண்டது. இப்போதைய படைப்புத்தரம் நீடிக்கு

மாயின் மாபெரும் பஞ்சாபிக் கவிஞர்களில் ஒருவராக அவர் திகழக் கூடும். இன்னும் அவருக்குப் பிராயமிருக்கிறது. சமீபத்தில், அவ்வளவாக கவனிக்கப்பெருது போய்விட்ட ஒரு கஜலில் தமது புரட்சி உணர்ச்சியை பின்வருமாறு அவர் வெளிப்படுத்தியுள்ளார் :—

" குடத்துள் வதியும் அட்டக் கரி வெடித்தது
சந்திரகாந்த வெண்பாலேக் கொட்டியது.
புதிய அருஞேதயத்தைப் பாடுவோம்.
இரவின் வம்பளப்பு ஓயட்டும்.
சரத் காலம் தீண்டி சில இலேகளின்
பசுமையைக் குடித்தது
சென்று போனதற்கு வருந்தவா ?
மீட்டு நிரப்புவோம் நம்பிக்கையை
வானின் தொன்மைக் குகையினில்
சோம்பற் கற்பனே தீட்டிப் போற்றுவது எதுகாறும் ;
உலகின் கூந்தலில் விரவிக் கொஞ்சுவோம்.
நெருங்கி இருப்பதைப் பேச வாரீர்."

பஞ்சாபின் இரு பகுதிகளிலும் - பாகிஸ்தானிலும் இந்தியாவிலும் - இலக்கியத் துறையினரைப் பெரிதும் ஈர்த்திருப்பவர் அம்ருதா பிரீதம். அவர் முற்போக்கு எழுத்தாளரல்ல. மக்களுக்குச் செய்ய போதனே எதுவும் அவரிடம் இல்லே. கவிதை புனேந்தாக வேண்டுமெனத் தோன்றுகிறது, படைப்பிக்கிருர். அவரிடம் ஆழ்ந்த புலமை இல்லே. எனினும் அதன் சிந்தனேக் குறையை நிறை செய்கின்றன அவற்றின் எளிமையும் கபடமற்ற தன்மையும். பெரும்பாலான கவிதைகளில் நாட்டுப் பாடல்கள், கதைப் பாடல்களின் மென்மையை நுகரலாம். சில சமயம் சொற்ருெடர்க் கவர்ச்சியும் சொல்லணியின் இனிமையும் திசைமாற்றத்தை உண்டு பண்ணி, கையாளும் மைய விஷயத்தைக் குழப்பத்தில்

ஆழ்த்துகின்றன. அவருக்கே மிகப் பிடித்தமான பாடல் ஒன்றில் தலைவன் தலைவியை நோக்கிக் கூறுகின்றான் :—

“ அன்பே ! துயிலெழாய்.
கனவுடன் கனக்கின்றன கண்கள்
கழிந்த நாட்களைக் காட்டும் கனவு
தென்றலுடன் கடிமனம் இழைந்த காலம்
அதை நினைந்த ஆயாசமோ
அமையிரவின் காரிருளில்
விண்மீன் ஆயிரமாயிரம் நின்
குழல்மீது ஒளியைச் சொரியட்டும் ”

பிரிவினைக்குப் பல காலம் முன்னர் துலங்கிய நன் நாட்களில் ஹிந்துக்களும், சீக்கியர்களும், முஸ்லிம்களும் சோதரராய் இன்புற்று வாழ்ந்த காலத்தின் உருவகமாகத் திகழ்ந்த வாரிஸ் ஷாவைப் பற்றி அம்ருதா பிரீதம் எழுதியுள்ள பாடல் எல்லைக்கு அப்பாலும் அவரது புகழ் பரவச் செய்தது. மாகாணத்தின் பிரிவினைக்கும் அதைத் தொடர்ந்து நடந்த படுகொலைகளுக்குமாக புலம்புகின்றார் இக் கவிதையில். கல்லறையினின்று வெளிப்போந்து தாயகத்தில் அடித்த புயற் சூறையைக் காணுமாறு வாரிஸ் ஷாவை அவர் அழைக்கிறார் :

“ துயரைத் துடைப்போனே ! எழுந்து காண் நின்
பஞ்சாபை !
வயல்களெல்லாம் பிணக்காடு, குருதி பாயுது
சீனுபில் நஞ்சு கலந்து
நீர்ப் பாய்ச்சும் அதே கரந்தான் நமது ஐந்து
நதி களையும் நச்சாக்குகிறது.”

அம்ருதா சுலபமாக அபிமானக் கவிஞராகி விட்டார். தரத்தைப் போஷிக்காமல் கரகோஷத்தை அவர் நாடு கிறார். (பெரும்பாலான பாடல்களின் முதல் அடிகள் மிகச் சிறப்பாக அமையும் ; பின்னர் வருந்தத்தக்க வகை

யில் சூம்பிக் கொண்டே போகும்.) ஆனல் இன்னும் அவர் இளவயதினர். மகத்தான எதிர்காலம் காத்திருக் கிறது. அவரிடமிருந்து பஞ்சாப் பிரமாதமாக எதிர் பார்க்கின்றது.

பிறமொழிகளிற் போலவே பஞ்சாபியிலும் யாப்பிலக் கணங்களை அடியோடு புறக்கணித்துக் கவிதை இயற்றும் நவீனப் போக்கு இருக்கவே செய்கிறது. ஆனல் சாதா ரண வாசகர்களின் மனதில் இவை பதிவது இல்லை. அவை பெரும்பாலும் தோன்றித் தோன்றி மறைகின்றன. சத் துள்ள மிகக் கொஞ்சம் மட்டுமே நிற்கின்றன. பிரீதம் சிங்கு ஸபீர் என்ற வழக்கறிஞரின் கவிதைகள் இவ்வாறு நிலைத்து நிற்கும் தகுதி பெற்றவை. கொஞ்சகாலமாக அவரும் ஓய்ந்திருக்கிருர்.

வசனத்தைப் பார்ப்போம். பஞ்சாபி வசன இலக்கி யத் துறையில் முதன்மையாக விளங்குபவர் குருபக்ஷ சிங்கு. அவர் எஞ்சினீராக வாழ்க்கையைத் துவக்கியவர். மேல் படிப்புக்காக அமெரிக்கா சென்ருர். திரும்பிவந்த பிறகு எஞ்சினீரிங் தொழிலை விட்டுவிட்டு நவீன மனப் பான்மையை உண்டு பண்ணும் பிரசாரப் பணியை மேற் கொண்டார். "பிரீத லடீ" என்ற மாசிகையின் மூலம் தமது கருத்துக்களை அவர் முதலில் வெளியிடலானுர். பிரீத நகர் என்ற சமுதாய நலக் கேந்திரமொன்றை அவர் நிறுவினுர். அது இப்பொழுது இந்தியா - பாகிஸ்தான் எல்லையில் இருக்கிறது. அறிவியல்-பணி நிலையமாக அது வளர்ந்தது. "ஸாள்வின் பத்ரி ஜிந்தகி" என்ற கட்டு ரைத் தொகுப்பு பஞ்சாபி வசன இலக்கியத்தில் மிகச் சிறந்த கட்டுரையாளர் என்ற புகழை அவருக்கு அளித் தது. நவதேஜ சிங்கு அவரது புதல்வர். அவர் உட்பட சோஷலிஸ்ட் போக்கினரான பல எழுத்தாளருக்கு ஊக்க மளித்தவர் குருபக்ஷ சிங்குதான். தந்தையும் மகனும் சீன, கிழக்கு ஐரோப்பா, சோவியத் ரஷ்யா போன்ற நாடு களுக்கு "சமாதான மகாநாடுகளை" முன்னிட்டுப்போயி

ருக்கிறார்கள். அவர்களது படைப்புக்கள் பெரும்பாலும் பிரசாரத்தன்மையுள்ளவை. எனினும் வெளியுலக அனுபவத்தினால் வளம் பெற்று, அந்நிய இலங்கியங்களின் நவீனப் போக்குகளும் சேர்ந்து, சந்தேகமற நல்ல தரமுள்ளவையாக அவை விளங்குகின்றன.

குறிப்பிடத்தக்கவாறு பஞ்சாபில் நாவல்கள் கிடையாது. கவிதை புனைவதில் சமர்த்தரான பாய் வீர் சிங்கு கூட நாவலின் அத்தியாவசிய அம்சங்களுடன் கூட எதையும் படைக்கவில்லை. துக்கல் போன்ற இளம் எழுத்தாளர் நீண்ட சிறுகதைகளையும், ஒரே பாத்திரங்களைக் கொண்ட சிறுகதைத் தொடர்களையும் எழுதி, அவையே நாவலாக மதிக்கப் பெறுமென நினைத்துத் திருப்தியடைந்தனர். நானக் சிங்குதான் நாவலாசிரியர்களில் பிரபலமானவர். 'சிட்டாலஹூ' 'ஆதம் கோர்' ஆகிய இரண்டுந்தான் அவரது நாவல்களில் அதிகச் சிறப்புப் படைத்தவை. ஆதம் கோர் சாகித்திய அகாதெமி ஆதரவில் பிற இந்திய மொழிகளில் தர்ஜுமா ஆகி வருகிறது. ஒரு வித சமூக சீர்திருத்தத்தை தமது எழுத்துக்கள் மூலம் பிரசாரம் செய்து வருகிறார் நானக் சிங்கு. அவரது கதைகள் மனதைக் கவருபவை; ஆனால் நல்ல பஞ்சாபிச் சொற்கள் இருக்கையில் அவற்றிற்குப் பதிலாக ஆங்கிலச் சொற்களைப் புகுத்தி அவற்றை அவர் மாசுபடுத்துகிறார். மேலும் திருந்திக் கொண்டே போனால் முன்னுக்கு வரக் கூடிய இரண்டு இளம் எழுத்தாளர் சுரீந்தர் சிங்கு நரூலா, யசவந்த சிங்கு 'கன்வால்'. கன்வால் புகழ்பெறக் கூடியவர் என்பதை அவரது 'பூரணமாசி'யில் காணலாம்.

சிறுகதை எழுதும் கலையில் பஞ்சாபி எழுத்தாளர் குறிப்பிடத்தக்க வெற்றி கண்டுள்ளனர். சஞ்சிகைகளில் வெளியாகும் கதைகள் பொதுவில் தரமானவை. இத்துறையில் முன்னோடியாக விளங்கிய சந்து சிங்கு சேகான் ஐரோப்பிய, அமெரிக்க எழுத்தாளரின் உத்திகளைக் கையாண்டார் என்பதுதான் இதற்குக் காரணம்.

நேரிடையாக கதையைச் சொல்லிக் கொண்டு போகும் முறையைக் கைவிட்டு விட்டனர். சுட்டி விளம்புதல், அடக்கிப் பேசுதல், சந்தர்ப்பச் சேர்க்கை, உளச் சித்திர பாவம், சங்கேத முறை ஆகிய உத்திகளை நுட்பமாகக் கையாள்வதன்மூலம் சிறுகதை எழுத்தாளரில் முதல்வ ரான கர்த்தார் சிங்கு துக்கல் சேகாவின் வழியைப் பின் பற்றினர். ராவல்பிண்டி ஜில்லாவில் வழங்கும் பரிபாஷை யில் அவருக்கு விசேஷ பரிச்சயம் உண்டு. அதைத் திறம்படக் கையாள்கிறர். நூற்றுக்கு மேற்பட்ட சிறு கதைகளை அவர் இயற்றியுள்ளார். 'ஸவேர், ஸரேர்', 'நவான் கர்' ஆகியவை அவற்றில் குறிப்பிடத்தக்கவை. நாட்டுப் பிரிவினைத் தொல்லைகளை வைத்து அவர் நாவல் களை வரைந்துள்ளார். ஆனால் அவை முன்னர் கூறிய படி சிறுகதைத் தொடர்களேயாகும். 'நஹீம் தே மாஸ்' என்பது இன்னும் சில ஆண்டுகளுக்கேனும் பஞ்சாபி கற்பனைக் கலையுலகில் தனிப் பிரகாசத்துடன் விளங்கக் கூடும். உழவனது குண பாவங்களை அது பிரமாதமாகச் சித்திரிக்கிறது. சாந்தி நிலவிய கிராம வாழ்வு துரித கதி யில் சென்று வகுப்பு வெறிப் படுகொலையாக வெடிப்பதை உச்ச நிலையாகக் கொண்ட துன்பியல் படைப்பு அது. வகுப்புவாதப் பாரபட்சம் இல்லாமலிருப்பது அதன் உகப் பான அம்சம். 'லடாயீ நஹீன்' என்ற பிந்திய படைப்பு ஒன்றிலும் இதேமாதிரி நடுநிலை காணப்பெறுகிறது. துக் காவின் கவிதைகள் பிரபலமாகவில்லை. இதற்குக் காரண முண்டு. அவரது நாடகங்களிற் பல ஒலி பரப்பப்பட் டுள்ளன. ஆனால் அரங்கேறியதில்லை, வேறு எந்தப் பஞ் சாபி நாடகாசிரியரையும் விட அதிகமாக அவரது நாட கங்கள் ரேடியோவில் பிரசாரமாகியுள்ளன.

வெற்றி கண்ட மற்றொரு சிறு கதை எழுத்தாளர் குலவந்த சிங்கு விர்க். வடக்குப் பஞ்சாபின் பிராந்தியச் சொல்லாட்சி துக்கலுக்கு வெற்றியை அளித்தது. அதே போல லாகூரிலும் சுற்று வட்டத்திலும் வழங்கும் பஞ்

சாபியைக் கையாண்டு புகழ் பெற்ருர் விர்க். துக்கலது திறன் அவரது படைப்புக்களில் வெளிப்படையாகத் தெரிகிறது. விர்க் கையாளும் விஷயங்களும் படைத்துள்ள பாத்திரங்களும் பஞ்சாபிலேயே வீரியம் மிகுந்த பகுதியைச் சேர்ந்தவை. எனவே ஆண்மை அதிகமாகக் காணப் பெறுகிறது. உணர்ச்சியை அள்ளிக் கொட்டும் போக்கை அதில் காண முடியாது.

பஞ்சாபியில் அதிகமாக அலட்சியம் செய்யப்பட்டுள்ள இலக்கியப் பகுதி நாடகந்தான். ஒழுங்காக ஏற்பாடாகியுள்ள அரங்க அமைப்பு இல்லாததுதான் இதற்குக் காரணம். ஆசிரியன் தான் இயற்றும் நாடகத்தைப் படிக்க வேண்டும், அல்லது ஒலி பரப்பத்தான் வேண்டும். நாடகக் கலையை இதில் எதை கொண்டும் சரிவர விளங்க வைக்க இயலாது. பள்ளிக்கூடங்களிலும், காலேஜுகளிலும் போகிற போக்கில் 'அமெச்சூர்' நடிகர்களைச் சேர்த்து நாடகத்துக்குச் சிறப்பு அளிக்க முடியாது. எனினும் சொல் வித்தை மூலம் ஓரளவு மக்களைச் சிரிக்க வைக்க இயல்புடையனவாக இருந்தன பேராசிரியர் (ஐ. சி.) ஈசுவரசந்திர நந்தாவின் இன்பியல் நாடகங்கள். இன்னும் பஞ்சாபி இலக்கிய வட்டங்களில் இதைப் பற்றிப் பேச்சு இருந்து வருகிறது. புது நாடகங்களை பிரகாசப்படுத்த அவ்வப் பொழுது ஏனோதானோவென்று முயற்சிகள் நடைபெறுகின்றன. குழந்தைகளுக்கான நாடகங்களை அமைப்பதில் குருதயாளு சிங் கோஸ்லா விசேஷமாக ஈடுபட்டுள்ளார். குழந்தைப் பள்ளிக்கூடங்களிலிருந்து நடிகர்கள் அவருக்குக் கிடைக்கிருர்கள். சோவியத் யூனியனிலும் ஐரோப்பாவிலும் நீண்ட பயணம் செய்து நாடக அரங்க அமைப்புக்களை ஆராய்ந்து அண்மையில் திரும்பியுள்ள பலவந்த கார்கி தரமான நாடகங்களை இயற்றுபவர் என்ற புகழ் பெற்றவர். அவருக்கு இடதுசாரி விவகாரங்களில் ஈடுபாடு உண்டு. அவரது நாடகங்களில் ராஜீய நோக்கம் மிடுக்காக இருக்கும். அவரது நையாண்டி காரியகரமா

னது. நகைச் சுவையோ கருத்து மனதில் தைக்கச் செய்ய வல்லது. பாடியாலாவில் வழங்கும் பழகு பஞ்சாபியைக் கையாள்வதன் காரணமாக அவரது நாடகங்கள் புஷ்டி யாக இருக்கின்றன. கிராமிய விஷயங்களுக்கு அது இசைவாகவும் இருக்கின்றது. ராஜீயக் குழுக்கள் நடிப்ப தன் காரணமாக பாரபட்சம் அரங்க அமைப்பில் தொனிக் கிறது. எனவே படித்துத்தான் அவரது நாடகங்களை ரசிக்க வேண்டியிருப்பது வருந்தத்தக்க நிலைமை. அவை ராஜீய காரணங்களால் ஒலிபரப்பப்படுவதில்லை. இப் பொழுது அவர் நாவல்களையும் புனைந்து வருகிறார்.

**எதிர்காலம்**

சீக்கியத் தலைவர்களில் பெரும்பாலானோர் ஏதோ ஒரு சமயம் எழுதவும் கவிதைகளைப் புனையவும் செய்த துண்டு. மாகாண காங்கிரஸ் கட்சியின் தலைவர் குருமுக சிங்கு 'முஸாபிர்' புலமை மிக்க கவிஞர். அமெரிக்க பாமர மரபில் சில நாவல்களை மாஸ்டர் தாராசிங் இயற்றியுள்ளார். பில் கோடி, டேவி கிராக்கெட் போன் றோர் சீக்கியப் பெயர்களுடன் நடமாடுகின்றனர். நம்பி னால் நம்புங்கள். கம்யூனிஸ்ட் தலைவர் சோஹான் சிங்கு ஜாஷ் சீக்கியச் சமயக் கிரந்தங்களை விளக்குவதில் சமர்த்தர். இலக்கியத் திறன் இவ்வாறு முக்கியத்துவம் பெற்றிருப்பதால்தான் பஞ்சாபிக்கு அதிகார முத்திரை, பஞ்சாபிப் பிராந்திய அமைப்பு, பஞ்சாபி அகாதெமியின் தோற்றுவாய் ஆகியவை ஒருமுகமான ஆதரவு பெற் றுள்ளன. இவையெல்லாம், இப்பொழுது கைகூடி விட்டதால், எதிர் காலத்தைப் பற்றிய சிந்தனை எழுந் துள்ளது.

ஆட்சியாளரின் அங்கீகார முத்திரை இலக்கியத்தைப் படைத்து விடாது. பிரிவினை காரணமாக மொழிக்கு ஏற்பட்ட நஷ்டத்தினால் பாகிஸ்தானில் உருதுவுக்கு அங்கீ காரம் கிடைத்தது, இந்தியாவில் ஹிந்தி அபிமானிக்கப்

படுவது முதலியன ஒருவாறு ஈடு செய்துவிடுகின்றன. குர்முகி லிபியைக் கொண்டு மட்டும் எழுதும் சீக்கிய எழுத்தாளர்களைத்தான் பஞ்சாபி இலக்கியச் சிருஷ்டி இன்னும் சில ஆண்டுகளுக்குப் பொருத்திருக்கும். பிராந்தியப் பழகுமொழிகள் பின்னடைந்து, சொல்லாட்சி, தர நிர்ணயம் பெறும் பஞ்சாபி வர வர அதிகமாகப் புழங்குவதன் காரணமாக, முன்னர் இருந்து வந்த நாட்டுப்புற மிடுக்கு அதில் காணப் பெற மாட்டாது. பிற மொழிகளிலிருந்து சாசுவதமான இலக்கியங்களை மொழி பெயர்ப்பதன் மூலமாகத்தான் இந்த வில்லங்கங் களின் விளைவுகளைச் சமாளிக்க முடியும். பஞ்சாபியி லேயே எழுதப் பெறுகிறது என்ற காரணத்தால் பள்ளிக் கூடங்களிலும் காலேஜுகளிலும் பாட புத்தகங்களாகி விடும் இரண்டாந்தர நூல்களை விட இத்தகைய மொழி பெயர்ப்புக்களுக்கு முன்னுரிமை தரவேண்டும். இரண் டாந்தரப் படைப்புக்கள் இலக்கியத் தரத்தைக் குறைப்ப துடன், தாரதம்மியமற்ற எழுத்தைப் போஷிக்கும் தன்மையுள்ளனவாகவும் ஆகி விடுகின்றன. போதிய வரு வாய் இல்லாத காரணத்தால் பஞ்சாபிகள் பிற மொழி களிலும் எழுதுகிறுர்கள். ராஜீந்திர சிங்கின் உருதுச் சிறுகதைகள் முதல்தரமானவை. அவரைப் போன்றவர் கள் தாய்மொழியில் எழுதும்படியாக ஊக்குவிக்க வேண் டும். ஏற்கனவே கூறியுள்ளவை தவிர வேறு சில நல்ல சிருஷ்டிகளும் இருக்கின்றன. பெப்சு, பஞ்சாப் சர்க்கார் களும் இப்போக்கை ஊக்குவித்து வருகின்றன. பல்லாண்டு களாக எழுத்தில் தரத்தை வளர்த்து வரும் 'பஞ்சாபி சாஹித்' என்ற ஹரிகிஷன்சிங்கின் ஜுல்லந்தர் சஞ்சிகை யும் இவ்வகையில் பணியாற்றி வந்துள்ளது. நிர்மாண இலக்கிய கர்த்தாக்களுக்குத் துணைபுரிந்து, மட்டமான எழுத்து விஷயமாக மக்களை எச்சரிப்பதற்கு உண்மை யுணர்ச்சியுள்ள திறனாய்வாளர் தேவை. இதுவரை பஞ்சாபி இலக்கியம் குறுகிய பாதையிலேயே சென்று

கொண்டிருக்கிறது. பரஸ்பரம் தட்டிக் கொடுத்து ஏற வைக்கும் வழியில்தான் எழுத்தாளர் இதுவரை சென்று கொண்டிருக்கின்றனர். நல்லது, கெட்டதைக் கண்டறிந்து, நெடுநாளாக எதிர் பார்த்து வரும் மறுமலர்ச்சியைத் தோற்றுவிக்கும் அறிவாற்றல் அதற்குத் தேவை.

## SELECT BIBLIOGRAPHY OF PUNJABI LITERATURE

*A History of Punjabi Literature.*
By Dr. Mohan Singh.

*Introduction to the Study of Punjabi Literature.*
By Dr. Mohan Singh.

*Punjabi Sufi Poets.*
By Lajwanti Ramakrishna.

*The Sikhs.*
By Khushwant Singh.

*Linguistic Survey of India.*
By G. A. Grierson, Vol. IX, Pt. 1, pp. 607–823.

# மராத்தி இலக்கியம்

எம். வி. ராஜாத்தியக்ஷா

## முகவுரை

மராத்தி மொழி தோன்றி ஆயிரமாண்டுகளுக்கு மேல் ஆகிறது. மொழி தோன்றி இருநூறு ஆண்டுகளுக்குப் பின்னர் அதில் இலக்கியம் உதயமாயிற்று. புதிதாக ஜனித்த மொழி, சமுதாய ஆர்வம் அளித்த வேகத்தின் காரணமாக, இலக்கியத்துக்கேற்ற சாதனமாக உறுதிப் பட்டது. ஆத்மீக ஜனநாயகம் தனக்கு உரிய குரலில் பேச விரும்பியது. சடங்குகள் மலிந்த பூசாரியையும் அவனது ஸம்ஸ்கிருதத்தையும் அது மதிக்கவில்லை. மனிதனுக்கும் கடவுளுக்குமிடையே இயற்கைக்கு விரோதமான தடங்கல்கள் இருப்பதை அது விரும்ப வில்லை. தியானேசுவரர் (1271–1296), நாமதேவர் (1270–1350), ஏகநாத் (1533–1599), துக்காராம் (1608–1649), ராமதாஸ் (1608–1681) ஆகிய ஞானிகளான கவிகள் ஒருவர் பின் ஒருவராகத் தோன்றி, மக்களுக்குப் புரிந்த மொழியில் பேசி, அவர்களிடையே சமுதாய உணர்வை எழுப்பி, மொழிக்கு வலிமை அளித்தனர். ஞாயானேசுவர் தெளிவுறக் கற்றவர். அந்தப் புலமை மிகுதியில் தானுகத் தோன்றியது அவரது வலிமை மிகுந்த சைலி. துக்காராம் நாட்டு மக்களின் ரசமான சொல்லாட்சியை கையாண்டார். அதில் மென்மையையும் மிடுக்கையும் ஒருங்கே

காணலாம். 12, 13-வது நூற்றுண்டுகளில் முகுந்தராஜ் மகானுபாவர்கள் போன்றோர் வைதிக முறையினின்று விலகி, மொழிக்குள்ள திறனை நம்பிக்கையுடன் பயன் படுத்தினர்.

இக வாழ்க்கைத் தேவைகளை நெடுங்காலம் மொழியினுல் அலட்சியம் செய்யக் கூடவில்லை. புராணங்களைப் புதுப்பதிப்புகளாக வெளியிடும் பணி முதலில் மேற் கொள்ளப்பட்டது. இராமாயண, பாகவதங்களைத் தமது உபதேசங்களுக்காக ஏகநாத் பயன்படுத்திக் கொண்டார். அவரது பேரன் முக்தேசுவர் (1574–1645) தொன்மை யான இதிகாசங்களை இலக்கியக் காரியங்களுக்காக உபயோகித்தார். ஸம்ஸ்கிருதத்திலிருந்து தாம் கண்டு தெரிந்த பிரத்தியட்சமான சொற் சித்திரங்களையும், கருத்து மிக்க உழைப்பில் உருவான நயங்களையும் அவர் மராத்தியில் கையாண்டார். ஸம்ஸ்கிருத வடிவானது மராத்தியக் கவிதை மீது உறுதியான செல்வாக்குக் கொண்டிருந்தது. அதற்கு அடுத்த இரண்டு நூற்றுண்டு களில் தோன்றிய ஒவ்வொரு பண்டிதக் கவிஞனும் தனது கலையை அறநெறி வளர்ச்சிக்காகவே உபயோகித்துக் கொண்டான். 17-வது நூற்றுண்டில் வாமன், ரகுநாத் ஆகியோரும் 18-வது நூற்றுண்டில் மோரோ பந்தும் இந்த வகையில் அதிகப் புகழ் பெற்று விளங்கினர். எனினும் அவர்களது படைப்புக்கள் ஒரு சிலருக்கே பயன்பட்டன. வீரத்தைப் பாடிய கதைப் பாட்டும் காதல் சுவை ததும்பிய லாவணி வகையுமே சாமானிய மக்கள் விரும்பிப் படித்த கவிதையாக விளங்கின. ஞானிகளான கவிகளின் மரபு தொடர்ந்து செல்வாக்குடன் விளங்கியது. அயர்ச்சி யடைந்துள்ள மக்களுக்கு நம்பிக்கையையும் மனச் சாந்தியையும் அளிப்பதற்கு இன்றுவரை அது பயன் பட்டு வந்திருக்கிறது.

உரைநடை மெதுவாகவே வளர்ச்சி கண்டது. மகானுபாவர்கள் அதைக் கையாண்டனர். எனினும்

அதை விதி வரம்புகளுக்குள் அவர்கள் போட்டுப் பூட்டி வைத்தனர். மராட்டிய தர்பார்களில் நிகழ்ச்சிகளை வரைவோரும் குறிப்பு வைத்துக் கொள்வோரும், லிகிதம் எழுதுவோரும் அந்தப் பணிகளுக்காகவே ஓர் உரை நடையை வளர்த்தனர். 19-வது நூற்றுண்டில் அச்சு இயந்திரம் வந்த பிறகு, சர்க்காரிலும் கல்வித் துறையிலும் ஒரு புதிய அமைப்புத் தோன்றியதன் விளைவாக, உரை நடையின் உபயோகமும் அந்தஸ்தும் பிரயோக அளவும் அதிகரித்து, செய்யுளை மிஞ்சி விட்டன. மேலை நாடுகளிலிருந்து புதிதாகக் கற்ற கல்வியைப் பரப்புவதற்காக என்று சஞ்சிகைகள் தோன்றின. பழமையும் புதுமையும் மோதியதால் எழுந்த ரசமான சர்ச்சைகளைப் பிரசாரம் செய்யும் சிறந்த சாதனங்களாக அவை விரைவில் உருப்பெற்றன. ஜி. எச். தேஷ்முக் (லோகஹிதவாதி), ஜோதிராவ் பூலே போன்றோர் நமது சமுதாயச் சீரழிவைப் பற்றி, மனதை உருக்கும் வகையில், தீவிரமாக எழுதினர். மராத்தியில் முதல் நாவல் பாபா பத்மன்ஜியின் "யமுனு பாயடன்". 1857-ல் வெளியான இந்நூல் ஆசார சீர்திருத்தத்தை விஷயமாகக் கொண்டது. விரைவில் மட்ட ரகமான காதல் கதைகள் எங்கும் பரந்து கிடக்கலாயின. கவிதை மங்கி விட்டது. ஏதோ பாடல்களைப் புனையும் பயிற்சிகளாக அவை மினுமினுத்துக் கொண்டிருந்தன. அங்கேயும் மேலே தென்பட்ட அமைதிக்கு கீழே ஆழ்ந்த சலனம் இருக்கவே செய்தது. பழமை மண்ணில் புதுமை வேர் விட்டுக் கொண்டிருந்தது.

### 1885 முதல் 1920 வரை கவிதை

1885-ல் "கேசவ சுதா" (1866-1905) என்பவரின் முதல் கவிதையும் ஹரிநாராயண் ஆப்தே (1864-1919) முதல் நாவலும் வெளியாயின. இரண்டும் மராத்தியில் அந்தந்த வகையில் நவீன இலக்கியத்தில் முன்னோடி

களாக விளங்கின. எங்கும் பரவிய மறுமலர்ச்சி காரண மாகவே இலக்கியத்திலும் இந்த நவீன பாணிகள் தோன்றின. அந்த மறுமலர்ச்சியோ சிக்கல் நிறைந்த தொரு சூழ்நிலையில் உருவாயிற்று. பல்வேறு மேலை நாகரிகச் சிந்தனையின் செல்வாக்கும் விரிவான மனப் பாங்கும் ஒருபுறம், வீரகாவிய கர்த்தர்களும் ஐரோப்பிய தேசியவாதிகளும் ஆங்கில இலக்கிய வாயிலாக அளித்த ஊக்கம் ஒருபுறம், பழமையின் பெருமையை - முக்கியமாக மகாராஷ்டிரத்தின் கீர்த்தியைப் பாடுவதில் அக்கறை ஒருபுறம்; இவை தவிர பிரிட்டிஷார் தாமே உயர்ந்தவர் என்று கூறி வந்ததால் ஏற்பட்ட எரிச்சலால் மேலை மரபு பூராவிடமே தோன்றிய வெறுப்பு ஒருபுறம், இத்தகைய பலமுனை நோக்குகளில் மறுமலர்ச்சி வளர்ந்தது. இதைப் போன்றே, ஆனால் இவ்வளவு சிக்கல் இல்லாமல், மறு மலர்ச்சி கண்ட வங்கத்தில் பிரம்ம சமாஜம் மற்றொரு சக்தியாகத் திகழ்ந்தது.

கேசவசுதரின் புரட்சியானது, இலக்கிய உலகுடன் நின்று விடவில்லை. வடிவ, சொல்லாட்சிப் பரீட்சை களுடன் அவர் திருப்தியடையவில்லை. தமது சொந்த விருப்பு வெறுப்புகளை மட்டும் அவர் வெளிப்படுத்தினர் என்பதில்லை. அவர் கவிதையை கிளர்ச்சிக்கேற்றதொரு சாதனமாக அமைத்துக் கொண்டார். வாழ்க்கையைப் பாழாக்கும் பல ஊழல்களைக் கண்டிக்க பயனுள்ள சாதன மாக கவிதையை அவர் கையாண்டார். ஆத்மாவின் பிடிபடாத ஆனந்த நிலையைப் பற்றிய இசைப் பாடல் களில் இந்த அதிருப்தியின் உயர்நிலை, பரிணமித்தது. அவர் கலைஞர்களின் கவிஞராக விளங்கி தமது தலைமுறை யினரான பெரும் புலவர்களுக்கு வாழ்வளித்தார். அடுத்த தலைமுறையிலும் அவரது செல்வாக்கு நீடித்தது. ஆனால் ஒரு குறிப்பிட்ட பரம்பரை என்ற நிர்ப்பந்தம் அவர்களு டைய தனித் தன்மைக்கு ஊறு செய்யவில்லை. பூஜ்யர் நாராயண வாமன் திலகர் (1865–1919) மென்மையான,

அழகுணர்ச்சி மிகுந்த இலக்கியங்களைப் படைத்தார். இல்லறத்தையும் இயற்கையையும் பாடி, அவற்றில் ஒரு குழந்தைக்குள்ள நம்பிக்கையை, தெய்வீகத்தை, வெளிக் காட்டி, ஆத்மாவுக்கு ஒரு சாந்தி கிடைக்கத் துணை புரிந் தார். விநாயகர் (1872–1909) மனவேதனை மிகுந்தவராக, இருவகைச் சிந்தனையாளராகச் செயல்பட்டார். சம்பிர தாயத்தை யொட்டிய நல்லொழுக்கத்துக்கும் சரீரத்தின் பலவீனத்துக்கும் இடையே உள்ள முரண்பாடானது அவரது நெஞ்சை குற்றமுள்ளதாகக் குறுகுறுக்கச் செய்தது. ஆனால் பழமையின் கீர்த்தியை நாடகச் சித் திரங்களாக வழங்கி, அதை மூடி மறைக்க அவரது கவிதை பாடுபடுகிறது. இதைப் போன்றதோர் போராட் டத்தை, அவ்வளவு சுலபமான பரிகாரங்கள் இல்லாமல், ராம் கணேஷ் கட்கரி (1885–1919) யின் படைப்புகளில் காணலாம். இவரே கோவிந்த க்ராஜ் என்ற கவிஞர். இவரது நாடகத்திலும் கவிதையிலும் சிந்தனை மிகுதி யுடன் கூட ஒன்றுக்கொன்று முரணான இரண்டு போக்கு களும் இருக்கத்தான் செய்கின்றன. படித்தவர்களில் ஒரு சாரார், தாம் அறியாமலேயே வருந்தத்தக்க இவ்விரு நிலைகளுக்கும் காரணமாயிருந்தனர். ஆகர்கர் அல்லது சுதா தோற்றுவித்த முற்போக்குப் பாணியும், திலக் அல்லது சிப்லுங்கர் பிரபலமாக்கிய பழம் பெருமை கூறும் மறுமலர்ச்சி இயக்கமும் பரந்து காணப்பெற்றன. நகைச் சுவை ததும்பும் நையாண்டிச் சித்திரங்களைச் சாதனங் களாகக் கொண்டு, வைதிகர்களை, பார்த்து இரங்க வேண் டியவர்களாக வைத்துக் காட்டினர். அவர்களுடைய போதனை அரங்கிற்கு நன்கு பயன்படுகிறது. அதை வர்ண ஜாலங்களுடன் தீட்டி, மக்கள் ஒப்புக் கொள்ளும்படி அவர் செய்தார். மொழியைக் கையாள் வதில் அவருக்கிருந்த சிறந்த திறனும் நாடகப் பாணியில் சித்திரிக்கும் இந்த உத்திக்கு ஆக்கம் அளித் தது. கட்கரி பிரமாதமான புகழ் பெற்றிருந்தார்.

நாடகபாணி, நகைச்சுவை உணர்ச்சி, எல்லாவற்றிற்கும் மேலாக அவர் கையாண்ட நடை, வாசகர்களை அவர்பால் ஈர்த்தன. வாழ்வு பிரகாசமற்றதாக இருந்த போதிலும் அதிலிருந்து தப்பிச் செல்வதற்கு அவை பயன்பட்டன. கட்கரி மன ஒருமைப்பாடு இல்லாதவர். ஆசாபங்கம் மிகுந்தவர். இந்த வேதனைகளிலிருந்து விடுதலைபெற இவை அவருக்கு துணைபுரிந்தன. பாலகவி (1890–1918) யின் கலப்பற்ற இசைப் பாடல்கள் இனிமை யானவை. அவர் அற்பாயுளாக ஆசாபங்கத்துடன் போய் விட்டார். எனினும் அழகான, கற்பனைச் செறிவுள்ள குழந்தை உள்ளத்துடன்கூட, அவர் தமது சிறிய பாடல்களை அமைத்துக் கொடுத்து பெருமையடைந்தார். ஆனால் அந்தக் கனவு கலையத் தொடங்கியபோது மரணம் கருணை கூர்ந்து அவரை இட்டுச் சென்றுவிட்டது. "தேனீ" என்ற புனைப் பெயருடன் எழுதிய நாராயண முரளீதர குப்தே (1872–1947) கேசவ சுதாவுடன் நெருங்கிய தொடர்பு உள்ளவர். சமூக இலக்கியத் துறைகளில் உணர்ச்சியுடன்கூட, வைதிகர்களின் கொடுமையை அவர் எதிர்த்தார். ஆனால் 60 வயதுக்கு மேல்தான் அவரது சிறு நூல் வெளிவர முடிந்தது. பாஸ்கர ராமசந்திர தம்பே (1874–1941) மகத்தான கீர்த்தியை இலக்கிய உலகில் பெற்றார். அவரது வழியென்று சொல்லி பிற எழுத்தாளர் பின்பற்றிய போக்கு குறிப்பாக 1920க்குப் பிறகு மேலும் அவருக்குப் புகழைத் தேடிக் கொடுத்தது. அவரது பாடல்களின் இசையின்பமும், நடையில் தவழும் காதல் பாவமும், சம்பிரதாயமான சித்திர வடிவங்களை சேர்த்துப் பயன்படுத்துவதும் அனுயாசமான ஒரு புகழை அவருக்கு அளித்தன. தம்பே மத்ய பாரதத்திலிருந்து வந்தவர். அவருடைய கவிதைக்கு நிலைக்களனாக அமைந்தது நிலப் பிரபுத்துவமும் காதல் செறிந்த வீரமும் கலந்ததோர் நிலை. கூடவே ஒரு ரம்மியமான அயர்வு சேர்ந்து அபூர்வமான ஒரு கவர்ச்சியை அதற்கு அளித்

தது. கேசவ சுதாவையும் அவரது மரபினரையும் பார்த்த மக்களுக்கு, இந்த முயற்சியானது மறுபடியும் வாழ்க்கையின் பிரச்சினைகளை விட்டு விலகியோடும் போக்கையே புலப்படுத்தியது. இக்காலத்தில் முக்கியமாக விளங்கிய மற்ருெரு கவிஞர் சந்திரசேகர். அவர் வெகு ஜாக்கிரதையாக சொற்களைக் கையாள்வார். அமைப்பும், அழகுணர்ச்சியும் ஸம்ஸ்கிருத சைலியில், பண்டித பாணியில் இருக்கும். இந்த இரு கவிதா வகைகளும் உயர்நிலை எய்துவதற்காக இன்று வரை போட்டியிட்டு வந்துள்ளன. விரிவானதோர் வெளிப் போராட்டம் இலக்கியத்தையும் ஊடுருவுவதற்கு இது காரணமாயிற்று.

## நாடகம்

மராத்திய நாடக அரங்கம் 1843ல் தோன்றியது. எழுத்தில் இல்லாத நாடகங்கள் சில, எல்லோரும் நன்கறிந்த பாத்திரங்களை வைத்து நடிக்கப் பெற்றன. இந்த பாலபருவம் விரைவில் நீங்கியது. பி. பி. கிர்லோஸ்கர் (1843—1885) தாமே நாடகாசிரியராகவும் நடிகராகவும் நாடகத் தயாரிப்பாளராகவும் விளங்கினர். அவர்தான் நாடகத்துக்கு முழுமை தந்தவர். அவரது "சௌபத்ரா" (1882) இதுவரை பெருவாரியான மக்களைக் கவர்ச்சிப்பதாகவே இருந்து வந்திருக்கிறது. அதன் சக்தி அதன் சங்கீதச் சிறப்பில்தான் இருக்கின்றது. ஜி. பி. தேவல் (1854–1916) கிர்லோஸ்கரைத் தமது குருவாகப் பாவித்தார். ஆனல் தமக்கென ஒரு தனி வழியை வகுத்துக் கொண்டார். அவர் ஏழு நாடகங்கள் இயற்றியுள்ளார். அவற்றில் ஆறு ஸம்ஸ்கிருத, ஆங்கில நூல்களை சிறப்பான வகையிலே தழுவித் தயாரித்தவை. ஏழாவது நாடகமான "சாரதா"வோ இன்னும் சிறப்பாகப் போற்றப் பெறுகிறது. பிரத்தியட்ச பாவத்தையும் குணசித்திரச் சிறப்பையும் உரைநடை இனிமையையும் அதில் காணலாம். கதை என்னவோ பழையதுதான்.

கிழவன் இளம் பெண்ணை விலைகொடுத்து வாங்கப் பார்ப்பதுதான். ஆனாலும் நாடக அமைப்பு முறைதான் இதற்குச் சிறப்பைக் கொடுத்தது. தேவல் இயற்றிய நாடகங்களில் முக்கியமானவையும் கே. பி. காடில்கர் (1872–1948) என்பவரின் ஆரம்ப நாடகங்களும் உறுதியானதோர் மரபைத் தோற்றுவித்திருந்தால் இந்த நூற்றுண்டின் முதல் 20 ஆண்டுகளில் மராத்தி நாடக மேடையானது, தான் பெற்றதைவிட அதிக லாபங்களை அடைந்திருக்கும். ஆனால் செழிப்பாக வளர்ந்தது சங்கீதம்தான். அதிலும் உயர்ந்த பாவங்களே ரசித்துப் போற்றப் பெற்றன. காடில்கரின் கீசக வதம் (1910) ராஜீய உட்பொருள் படைத்த நாடகமாக மதிக்கப் பெற்றது. திலகரை பீமனாகவும், லார்ட் கர்ஸனை கீசகனாகவும் அது கற்பித்துக் காட்டியது. அதை ஆட்சியாளர் தடைசெய்தனர். அவரது சரித்திர நாடகங்களில் இதே போன்ற சக்தியைக் காணலாம். அவற்றில் சில ஷேக்ஸ்பியரின் நாடகங்களிலிருந்து உருவாக்கப் பெற்றவை. ஆனால் ஷேக்ஸ்பியரை எடுத்துக் கையாளுகையில் கதை அமைப்பின் சிக்கல், சம்பந்தம் இல்லாதவைகளைப் புகுத்துவது, கோமாளியை இடமில்லாத இடத்தில் ஆடச் செய்வது போன்ற தவறுகள் இதில் மலிந்து போய் நல்ல அம்சங்களை அமுக்கிவிட்டன. புராணங்களிலிருந்து விஷயங்களை எடுத்து தற்கால ராஜீய நோக்கங்களுக்காக பயன்படும் நாடகங்களாக அவற்றை உருவாக்கப் பார்க்கும் நாடகாசிரியராகத் தாழ்ச்சியுற்றுர் காடில்கர். சங்கீதச் சிறப்புதான் அவற்றைக் காப்பாற்றி நாடக அரங்கில் தொடர்ச்சியாக இடம் இருக்கும்படி செய்து வந்தது. ஸ்ரீபாத கிருஷ்ண கோலாட்கர் (1871–1934) இன்ப இயல் நாடகத்தை நையாண்டி பாணியில் காதல் சிக்கல்களையும் சேர்த்து உருவாக்கினர். ஆனல் அவற்றில் காதல் நையாண்டி இரண்டுமே சோபிக்காது போயின. சமுதாய

ஆசார சீர்திருத்தத்தை அவர் ஹாஸ்ய உணர்ச்சியுடன் ஆதரித்து எழுதிய கட்டுரைகள் நன்ருக அமைந்தன. நாடகங்களில் சாதாரணமாக விஷயங்களை ஹாஸ்யமாக எடுத்துச் சொல்லும் போக்கு அவ்வளவாக எடுபடாது போயிற்று. கட்கரி அவரைத் தமது குருவாக வரித்துக் கொண்டார். அவருக்கு விசேஷ வெற்றி கிடைத்தது. இதற்குக் காரணம் காதல், ஹாஸ்யம், குணசித்ர பாவம், உரைநடைச் சிறப்பு எல்லாம் ஒருங்கே அவரது படைப்பு களில் சிறந்து அமைந்திருந்ததுதான். நடக்கக்கூடா தவை, பொருத்தமற்றவை போன்ற அம்சங்கள் மிகுதி யாக இருந்ததன் காரணமாகத்தான் கட்கரி நாடகங்கள் பரிகாசத்துக்குள்ளாயின. ஆனல் அதன் ஜாஜ்வல்யமும் அதற்கு மொத்தத்தில் கிடைத்த வெற்றியும் நிந்தனை யாளரை சங்கடத்தில் ஆழ்த்தின. நரசிம்ஹ சிந்தாமன் கேல்கர் (1872–1947) ஐந்து நாடகங்களை இயற்றியுள்ளார். அவற்றில் மூன்று சரித்திர நாடகங்கள். இரண்டு புராண வகையைச் சேர்ந்தவை. நவீன மராத்தி நாடக அரங்கின் முதல் கட்டத்தில் இவர்கள்தான் முன்னணி யில் காணப்பெற்ற நாடகாசிரியர்கள். இவர்களும் வேறு சிலரும்–முக்கியமாக ஷேக்ஸ்பியரை நல்லபடியாக மொழி பெயர்த்த சிலரும் சேர்ந்து நாடக அரங்கை வலுப்படுத் தினர். ஆனல் பிரத்தியட்ச பாவத்தைக் கொண்டு நாடகம் உருப்பெறவில்லை. நல்லதாக இன்னும் இவ்வகையில் எதுவும் தோன்றவில்லை. வரவர நாடக அரங்கில் இசை மேலோங்கத் தொடங்கியது. பிரத்தியட்ச பாவம் பின்னுக் குச்சென்றது. சாதாரணமாக நாடகத்தைப் பார்ப்பவர் அதை உணராமல் இல்லை. எனினும் அவருக்கு வேண் டியது பொழுதுபோக்கு. கூட பொதுப்படையான வகையிலே புராணத்தையும், சரிதத்தையும் கொண்ட அறநெறி போதனைகளும் கிடைத்தன. வாசுதேவ சாஸ்திரி காரே புகழ் பெற்ற சரித்திராசிரியர். அவர் தமது சரித்திர நாடகங்களில் வீரத்தையும், காதலையும் விலக்கி

எழுத முடியாது போயிற்று. அவ்வாறு அவர் இணைத்துப் படைத்தது ராஜீய நோக்கங்களுடன்கூட. மகாராஷ்டிரத்தையும் இந்தியாவையும் பற்றி பிரிட்டிஷ் சரித்திராசிரியர்கள் கூறியதற்கு ஆப்பு அறையும் வகையில் நாடக அரங்கானது ஜவாப் கொடுத்தது. நாடகங்களை விட நாவல்கள் இப்பணியை இன்னும் விறுவிறுப்புடன் செய்துள்ளன.

## நாவல்

ஹரி நாராயண ஆப்தேயின் (1864–1919) திடீர்த் தோற்றத்துடன் நாவல் முழுமை கண்டது. 1885ல் மதலி ஸ்திதி என்ற நாவலை அவர் முதலில் எழுதினார். மத்திய வகுப்பினரின் வாழ்க்கையைப் பற்றி இன்னும் சில நாவல்கள் தொடர்ந்து வந்தன. பான் லக்ஷ்யாத் கோன் கோதோ (1890–93) என்பது விதவையாகிவிட்ட ஒரு குழந்தையைப் பற்றிய நெஞ்சை உருக்கும் கதை. பின்னர் சரித்திர சம்பந்தமுள்ள வீர நிகழ்ச்சிகளை விஷயமாகக் கொண்டு நாவல்களைப் புனைந்தார். எழுத்தாளரின் மனப்பான்மையில் மட்டுமின்றி வாசகர்களின் ருசியில் ஏற்பட்டு வந்த மாறுதலை இது காண்பித்தது. இளமையில் சமூக சீர்திருத்தத்தில் ஆர்வம் கொண்டவராக இருந்த ஆப்தே அகர்கர், ரானடே போன்றோரின் செல்வாக்குக்குட்பட்டு, சீர்திருத்தத்தையும், மரபையும் சமரசப் படுத்திச் செல்லும் போக்கினராக மாறினார். வரலாற்றிலிருந்து எடுத்துக் கையாளப்பெற்ற மராத்தியர், ராஜபுத்திரர்கள் பற்றிய கதைகள் காதலும் கூடச் சேர்ந்து இந்த சமரசத் தோற்றத்தை ஒருவாறு மிதப்படுத்தின. இதில் கூறப்பெற்ற வீரம் ராஜீய தார்மிக நற்போதனையை நோக்கமாகக் கொண்டது. இக்காலத்து எழுத்தாளர் பலரும் இதே கருத்தினராகக் காணப் பெற்றனர். தமது வாசகர்களை மகிழ்விக்கவும் உட்பொருளுடன்கூட விஷயங்களை எழுதுவதற்கும் தோதாக இந்தத் தூய்மையும்

தேசியமும் கலந்த வீரச் சித்திரங்கள் வரையப் பெற்றன. சாதாரண வாசகர்கள் அவரைப் போலவே எண்ண லாயினர். சமூகப் பிரச்னைகள் விஷயத்தில் அவருக்கு அவ்வளவாகப் பெருமையில்லை. பிரச்னைகள் என்பன இல்லையென்று அவர் திடமாக நம்பினார். அல்லது அவற்றை தூர ஒதுக்கி வைத்துவிட விரும்பினார். பின்னர் சரித்திரத்தை வைத்துக் கொண்டு கதைகளை நிரப்பும் காலையில் மாறுதலை நாடி சமூகப் பிரச்னைகளை மீண்டும் கையாண்டார். அதையும் வீரத்தையும் காதலை யும் சேர்த்து வழங்கி வாசகர்களின் அபிமானத்தையும் திருப்தியையும் பெற்றார். கவிஞன் என்ற வகையில் ஆப்தேயின் வெற்றி, மேடு பள்ளம் நிறைந்தது. தொடர் கதைகள் பிரசுரம் செய்ய வேண்டிய நிலைமையில் கதை அமைப்பில் சீர்மையில்லாத தன்மையும் திருப்பித் திருப்பிச் சொல்வதும் தவிர்க்க முடியாதவை ஆயின போலும். எனினும் இந்தக் குறைபாடுகளை நிறை செய்வன போல ஆழ்ந்த கருத்தொற்றுமையும், உறுதி யான குணச்சித்திரப் பாங்கும் மேலோங்கிக் காணப் பட்டன. 1909 முதல் ஹரி நாராயண ஆப்தே நாவல்களை எழுதி வந்தார். குடும்ப வாழ்வின் நற்பண்புகளுக்கு ஏற்றம் தந்து உதவும் வீரம் செறிந்த சரித்திரக் கதைகளை சிறிது காலம் எழுதினார். நாத் மாதவ் என்ற புனைப் பெயருடன் எழுதிய டி. எம். பித்தாலே (1882–1928) தமது காலத்து வாழ்க்கையைப் பற்றிய நாவல்களை சில காலம் ஏனோ தானோவென எழுதிய பின்னர் சரித்திரக் கற்பனைக் கதைகளுக்கு திரும்பினார். கதை சொல்லும் வகையில் விருவிருப்பு இருந்தது. கடந்த காலத்தை கண்முன் கொண்டுவந்து நிறுத்திக் காட்டுவதில் அவர் நிபுணர். தற்கால விஷயங்கள் சிலவற்றில் கலந்து காணப்பெற்றதையோ, நுண்ணிய திறன்கள் இல்லாமல் இருந்ததையோ சாமானிய மக்கள் அவ்வளவாகக் காண வில்லை. புலமை மிகுந்த சி. வி. வைத்யா, எஸ். எம்.

பரஞ்சபே, ஸி. ஜி. பானு போன்ற நாவலாசிரியர்கள் பின்னர் சரித்திரக் கதைகளை முறைப்படி எழுதினார்கள். எனினும் காலத்திற்கு ஏற்ப வீரத்தையும் அறநெறியையும் கலந்து அவற்றை மிதப்படுத்த வேண்டிய அவசியம் அவர்களுக்கு இருந்தது. பிரத்தியட்ச நிலையை கற்பனைச் சித்திரம் அமுக்கிக் கொண்டிருந்ததால் பங்கிம் சந்திர சட்டர்ஜி, சரத் சந்திர சட்டர்ஜி, பிரபாத் குமார் முக்கர்ஜி போன்ற வங்க ஆசிரியர்களின் நாவல்களை முறையே குர்ஜர், மித்ரா, பஸே போன்றவர்கள் மொழி பெயர்த்து வழங்கினார்கள். தூய்மை முக்கியமாக வற்புறுத்தப்பட்ட காலத்தில் நாவல் அவ்வளவு முக்கிய விஷயமாகக் கருதப் பெறவில்லை. அதே சமயத்தில் அது பண்புகளைப் பாழ் படுத்துகிறது என்று நினைத்தார்கள். வாசகர்களின் தரத்தை உயர்த்துவதன் மூலமாகத்தான் நாவலின் தன்மையும் உயரக்கூடும். எனவே பழமையின் பெருமையை உதாரணமாக எடுத்துக் காட்டுவதைவிட வேறு சிறந்த உத்தியில்லை என்று கருதப்பெற்றது. இது மரபையொட்டிய படிப்பினை. வி. எம். ஜோஷின் ராகினி (1915) என்ற நாவலில் நாகரிகச் சாயை படிந்தவர்களும் ஆட்சேபணைக்குரிய கருத்தினருமான ஆண்களும், பெண்களும் அறநெறி, அன்றாட நடத்தை பற்றிய பிரச்னைகளை ஆராயலாயினர். அவர்களது போக்கு இயற்கையாக அமையவில்லையாயினும் போதனையை ஓர் உயர்நிலைக்கு கொண்டு போயிற்று. நாவலுக்கு ஒரு புதுத் துறை கிடைத்தது. பின்னர் மன முதிர்ச்சி கொண்டு அதிக நம்பிக்கையுடன்கூட எழுதுவதற்கு அது வழியை அமைத்துக் கொடுத்தது.

### விவாத உரை நடை

விஷயங்களை உண்மை உணர்ச்சியுடன் ஆராயும் அக்காலத்தில் வாதப் பிரதிவாதங்களை எடுத்துச் சொல்லும் உரைநடை இலக்கியம் மிகச் சிறந்தது என மதிக்கப்

பெற்றது. இக்காலத்தின் தொடக்கத்தில் விருவிருப்புடன் கூடிய உரை நடையை வளர்த்தது சமூக சீர்திருத்தத்தைப் பற்றிய சர்ச்சைதான். கோபால் கணேஷ் அகர்கர் (1856–1895) லோகமான்ய பாலகங்காதர திலகர் (1856–1920) ஆகிய இருவரும் "கேஸரி" என்ற வாரப் பத்திரிகையைத் தோற்றுவித்து அதில் சேர்ந்து உழைத்தனர். பின்னர் தீவிர தேசியத்தில் ஈட்டி முனையாக திலகர் கையில் அது பயன்பட்டது. இவ்விருவரும் விரைவில் பிரிந்து போயினர். ஆசார சீர்திருத்தம் முக்கியமா, ராஜீய சீர்திருத்தம் முக்கியமா என்பதைப் பற்றிய சர்ச்சையே இதற்குக் காரணம். "சுதாரக்" என்பது அகர்க்கரின் வாரப் பத்திரிகை. அது அச்சமின்றி சமூக சீர்திருத்தப் பிரச்னைகளுக்கு ஆதரவு தந்தது. ஜனங்களுக்கு அவ்வளவு பிரியமில்லாத விஷயங்களை எடுத்துச் சொல்வோருக்கு உள்ள சிரமங்கள் அதிகம். எனினும் அவற்றை அவர் பொருட்படுத்தவே இல்லை. அவர் வீரம் மிகுந்தவர். படாடோபம் இல்லாதவர். சமூகச் சீர்திருத்தப் பணியில் தமது முழு சக்தியுடன் கண்ணியமாக ஈடுபட்டார். கையாண்ட நடையிலேயே அவரது சீரிய நற்பண்புகளை காணலாம். திலகரிடம் விருவிருப்பு மேலோங்கியிருந்தது. சர்ச்சையில் திளைத்தவர். பழமையின் நல்ல அம்சங்களை வைத்துக்கொள்ள வேண்டுமென்று கருதினவர்களிடையே அவருக்குச் செல்வாக்கு ஏற்பட்டது. இது ஓரளவு சமூகப் பிரச்னைகளில் பிற்பட்ட நிலை கொண்டவர் என்ற பெயரை அவருக்குக் கொடுத்தது. இவ்விருவரின் பணியைப் பற்றிக் கருத்து மாறுபாடு இருக்கலாம். எனினும் இவர்களது முயற்சியானது புத்தி பூர்வமாக பிரச்னைகளை மக்கள் தெரிந்து கொள்வதற்கு வரவர அதிகமான அளவில் உதவியது. தீவிர மாறுதலை வேண்டாதாரே பெரும்பாலோர் இருந்தனர். ஆனால் புதிய தத்துவமானது சமூகத்தில் ஊடுருவி, மெதுவாக, வெளியில் புலப்படாத வகையில், உண்மை

உணர்ச்சியுடன் கூடிய ஆத்ம பரிசோதனைக்கு ஆக்கம் அளித்தது. திலகரின் உரைநடை முதன்மையானது. எனினும் அரசியல் துறையில் அவருக்கிருந்த செல்வாக்கு உரைநடை வல்லுநர் என்ற புகழை அமுக்கிவிட்டது. அவரது புலமை உரை நடையை வளப்படுத்தி, "கனமாக" இல்லாமல், கண்ணியமாக, படாடோபம் இன்றி, அது அமைவதற்குத் துணை புரிந்தது. அவர் ஒளிவு மறைவின்றி எழுதுவார். அதே சமயத்தில் குத்தலாகவும் எழுதத் தெரியும். விஷ்ணு சாஸ்திரி சிப்லங்கர் (1850–1882) முதலில் அவருடன் சேர்ந்து உழைத்தவர். சமூக சீர்கேடுகளைக் கண்டனம் செய்வதில் இயற்கையாக இருந்த சைலி அவருக்குப் பெரிதும் துணை புரிந்தது. இதனால் அவருக்குப் பெயரும் புகழும் கிடைத்தன. தமது தன்மையை வெளிப்படுத்தி, அடுக்குச் சொல்லணி கொண்டதாக, சற்று சிக்கலுடன்கூட அவரது சைலி இருந்தது. ஆனால் திட்டி எழுதவும் அவருக்குத் தெரியும். தேசிய உணர்ச்சியைக் கிளறி விடுவதற்கும் அது துணை புரிந்தது. பழமையின் மறுமலர்ச்சியை நாடியோர் சிப்லங்கரின் கட்டுரைகளை புனிதமானவையென மதித்தனர். சிவராம் மகாதேவ் பரஞ்சபே (1864–1929) வாசாலகர். நல்ல பேச்சாளர் என்ற பிரசித்தி உண்டு. அவரும் பழமையின் மறுமலர்ச்சியை நாடியவர். எனினும் அவர் தமது சக்தியை அன்னிய ஆட்சிக்கு எதிராகப் பிரயோகித்தார். அவரது படைப்புகளில் நையாண்டி அம்சம் சக்தி வாய்ந்ததாக இருக்கும். இதனால் ஆத்திரம் கொண்ட ஆட்சியாளர் அவரது கட்டுரைத் தொகுப்புகளை பறிமுதல் செய்துவிட்டனர். லோகமான்ய திலகருடன் நெருங்கி உழைத்தவர் என். சி. கேல்கர். "கேஸரி"யின் பொறுப்பும் அவரிடம் வந்தது. அவர் திறனும், பலதரப்பட்ட ஞானமும் நிறைந்த பத்திரிகையாளர். சாமர்த்தியம் இயல்பாக அவரிடம் அமைந்திருந்தது. அவர் கையாளாத உரைநடை வகையே இல்லை. அவர் மிகத் தெளிவாக,

மக்களுக்கு உகப்பாக எழுதினுர். எனினும் அவரது நூல் கள் பின்னர் வந்த காலத்தவை என்றுதான் கருதப்பட வேண்டும். இந்த நூற்ருண்டின் முதற் பத்து வருஷங் களில் மேலோங்கி காணப்பெற்ற தன்மைகளே அவற்றில் காணலாம். அச்சுத பலவந்த கோல்ஹட்கர் (1879–1931) கேல்கருக்கு பலவகையில் நேர் எதிரிடையானவர். அவரது பகைவரும்கூட. நேர்மை முக்கியமெனக் கருதி யவர்களின் பொல்லாப்புக்கு அவர் உள்ளானுர். சமூகத் தின் கீழ் அந்தஸ்துகளேச் சேர்ந்த வாசகர்கள் அவரது கவர்ச்சிகரமான எழுத்துக்களே விரும்பிப் படித்தவர். அக்காலத்தில் உப்பு சப்பில்லாமல் இருந்த பிற எழுத்து வகைகளேப் போல் அல்லாமல் அவரது பத்திரிகைப் பணி யில் விருவிருப்பு இருந்தது. அவரது எழுத்தில் உயிர்த் துடிப்பு இருந்தது. ஆனுல் அடக்கம் இல்லே. பத்திரிகை களேப் படிப்பதில் சாமானிய மக்களுக்கு அவர் ஆர்வம் உண்டுபண்ணினுர். ஆனுல் அதே சமயத்தில் சைலியைப் பற்றிய நல்ல ருசிகளேக் கெடுத்துவிட்டார்.

பணியாற்றுவதில் ஆர்வம் மிகுதியாகக் காணப் பெற்ற காலத்தில் வாழ்க்கை வரலாறுகள் செல்வாக்குடன் விளங்குமென்றுதான் சாதாரணமாக நினேக்கக்கூடும். ஆனுல் மிகக் குறைவாகவே அவை வெளிவந்தன. அப் படி வெளியான நூல்களும் சிறப்பு அம்சம் எதுவும் இல் லாமல் இருந்தன. எனினும் இரண்டு சுய சரிதைகள், இயற்கையாக அமைந்ததன் காரணமாக, பிரபலமடைந் தன. ஸ்ரீமதி ரமாபாய் ரானடே தமது கீர்த்திவாய்ந்த கணவர் எம். ஜி. ரானடேயின் வாழ்க்கையைப் பற்றி மிக நுட்பமான சித்திரம் ஒன்றை வழங்கினுர். கணவரது வாழ்க்கையில் தமக்கு இருந்த பங்கை மிகமிகக் குறைத்தே அவர் கூறியிருக்கிருர். மற்ருென்று டாக்டர் டி. கே. கார்வே இயற்றியது. மாதர் கல்விக்காக உழைத்தபோது தாம் பட்ட சிரமங்களே யெல்லாம் அந்த நூலில் அவர் விவரித்துள்ளார்.

## 1920—1945

1920–க்குப் பிறகு சோர்வு மிகுதியாகக் காணப்பெற்றது. சமூக, ராஜீயத் துறையில் லோகமான்ய திலகரின் வாரிசுகளாக வந்தவர்கள் தூரதிருஷ்டி இல்லாத பழமை விரும்பிகளாகச் சுருங்கிவிட்டனர். சமூகச் சீர்திருத்த வாதிகள் சில்லறை மாறுதலுடன் திருப்தி அடையும் மனப்பான்மையினராக மாறினர். மேலெழுந்தவாறு சமரசங்களைச் செய்துகொண்டு, ஆழ்ந்த போராட்டங்களுக்குத் தீர்வு காணாத போக்கு பரவலாகக் காணப்பெற்றது. அது சின்ன மனிதனின் காலம். அவனது சில்லரைக் கனவுகளிலிருந்து அக்காலத்துக் கற்பனைகள் உதித்தன. அவனது அற்பமான புகார்கள் பரிதாபகரமாக இருந்தன. எல்லாவற்றையும் அவன் எளிதாக்கிக் காண்பிப்பான். பிரிவினைகளை வியர்த்தமாக்கி, ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பெயரைச் சூட்டுவான். தோற்றம் வேற்றுமையைக் காட்டியது. தன்மையும் அவ்வாறே இருக்கும் என்றுதான் கருதப்பெற்றது. சிறிது சாமர்த்தியமாக, நல்ல உத்திகளைக் கையாண்டு சொல்லாட்சித் திறனும் அதில் சேர்ந்திருக்குமாயின், விமரிசகர்களிடம் நல்ல பெயர் வாங்கி சாமானிய வாசகர்களையும் சுலபமாக அது ஈர்த்திருக்கும்.

எல்லா நூல்களுக்கும் இந்த வாதம் பொருந்தாது. இந்தச் சீரழிவான போக்குகளை நல்ல எழுத்தாளரும் நல்ல விமரிசகர்களும் கண்டனம் செய்தனர். எதிர்ப்புணர்ச்சி வலுத்தது. 1930க்குப் பின்னர் புதிய வடிவங்களை சமைக்கும் வகையில் அது புத்துரு எடுத்தது.

1930க்குச் சமீபமாகத் தோன்றிய வர்த்தக—தொழில் துறை மந்தம், தொழிலாளர் இயக்கத்தின் தோற்றுவாய், காந்திஜியின் தலைமையில் 1930–31ல் நடைபெற்ற தேசியப் போராட்டம் போன்றவை, நிம்மதியில் ஆழ்ந்திருந்த சமூகத்தை ஒரு உலுக்கு உலுக்கி, ஒரு சிலருக்கேனும் புத்துணர்ச்சியை ஊட்டின. இலக்கியத்தை முக்கியமாகப்

படைத்தவர்களும் படித்தவர்களும் நடுத்தர வகுப்பினர் தாம். பெரிய சர்ச்சைகளில் ஈடுபட்டவர்களும் அவர் களே. சமரசங்களை ஒட்டவைத்து, சோம்பேறித்தனத் தில் நிம்மதி கண்டவர்களும் அவர்களே. உண்மையான ஆத்மானுபவமாவது மரபை யொட்டிய தூய்மையைப் பேணுவது கடமை என்று கருதப்பட்டது. மனச் சாட் சிக்கு இது ஒரு நிம்மதியை அளித்தது. எனினும் நடுத் தர வகுப்பைச் சேர்ந்த ஒரு சிலர் மாறிவந்த சூழ்நிலைக்கு ஏற்பப் பணியாற்றினர். யுத்த பிற்கால இலக்கியம் அளித்த ஏமாற்றம், புதிய நாடக பாணி, இங்கிலாந்தில் 1930க்குப் பின்னர் முற்போக்குக் கவிஞர்கள் அடைந்த செல்வாக்கு போன்றவை, இந்தச் சிறு பான்மையோரைப் பெரிதும் கவர்ந்தன. சீரழிவைத் தடுத்து இலக்கியத்தை மீட்க இவர்கள் உழைத்தனர். இந்த் மீட்சிப் பணி இன் றும் தொடர்ந்து நடைபெறுகிறது. இதன் வெற்றி தோல்வி பல ஏற்றத் தாழ்வுகளைக் கொண்டது. காரணம் வழிகாட்டும் செல்வாக்கு உறுதியற்றதாக இருப்பதுதான்.

கவிதைத் துறையில் 1920க்குப் பின்னர் செல்வாக் குடன் விளங்கியவர்கள் ரவிகிரண மண்டல் என்ற குழு வைச் சேர்ந்த கவிஞர்கள். கோவிந்தக்ராஜைப் பின் பற்றியவர்களது கவிதைகள் தன்மையிலும் வடிவத்திலும் மிகைப்பாடுடையனவாக இருந்தன. இந்தப் போக்கை ரவி கிரண மண்டலத்தினர் மாற்றி, அன்றாட வாழ்க்கை யைப் பாடும் சிறப்பைக் கவிதைக்கு அளித்தனர். அவர்கள் இப்படி மாற்றி விட வேண்டும் என்று திட்ட மிட்டு உழைக்கும் காலையில் பழைய போக்கின் தவறுக்கு நேர் எதிரிடையான தவறை அவர்கள் இழைத்து விட்ட னர். கவிதையை மிகமிக எளிதாக்கி விட்டனர். கருத் தாழத்தில் அவர்களுக்கு அவ்வளவாக நம்பிக்கையில்லை. மனம் போனவாறு எழுதினர். மதிப்பாக இருக்க வேண் டும் என்று ஒரு வரம்பு கட்டிக் கொண்டு, அந்தத் கருத் துடன் கலைகள் உள்பட எல்லாவற்றையும் மதிப்பிட்டு

வந்த சமுதாயப் போக்கிற்கு அது இசைவாக இருந்தது. அவர்களுடைய கவிதை பரந்த செல்வாக்குடன் விளங்கியது. கவிஞர்களே தமது படைப்புக்களைப் பாடிக் காட்டியது இச்சிறப்புக்கு ஒரு முக்கிய காரணம். ஒவ்வொன்றிலும் ஒரு தெளிவான நீதி போதிக்கப் பெறும். அதே சமயத்தில் ஓரளவு சீர்திருத்தத் தன்மையும் அதில் தொனிக்கும். காதலுக்கு இடம் தர வேண்டியதே என்று அவர்கள் கருதினர். அப்படியிருந்தால்தான் அது குடும்ப வாழ்வில் நற்குணமாக மலரும் என்பது அவர்களது அபிப்பிராயம். நாட்டுப்புறத்தில் சூழ்நிலை தூய்மையுடன் இருக்குமாகையால் அது அங்கு இன்னும் நன்கு மலர்ச்சி காண இயலும் என்ற கருத்தானது கிராமிய வாழ்வைப் பற்றிய ஒரு பொதுப்படையான அகங்காரத்தை வளர்த்தது. கற்பனைக் கதையிலும் சிறு கவிதைத் துறையிலும் இப்போக்கு காணப்பட்டது. தமது படைப்புக்களை கவிஞர்கள் பாடுவது என்ற மோஸ்தருக்கு வழி காட்டியாக இருந்தவர் தாம்பே மரபினர். போகப்போக இது விபரீதமான உருவங்களை எடுத்தது. சொல்லோசையும் தொழில் வினைஞனைப் போல பாடலைப் புனைந்து தள்ளும் திறனுமே மேலுக்கு வந்தன. எனினும் கவிதையின் வடிவம், கையாண்ட உத்திகள் ஆகியவற்றில் மண்டலம் விசேஷ அக்கறை காட்டியது. அத்துடன்கூட, ஓரளவில் ஜாக்கிரதையாக புதிய பரிட்சைகளை நடத்தியது. ஒரே மாதிரியல்லாமல், படைப்புக்களில் அன்றைய நிலையில் மிகுதியாக தேவைப்பட்ட பல்வேறு தினுசுகளை சிருஷ்டிக்க துணை புரிந்தது. இந்தக் குழுவைச் சேர்ந்த ஒய். டி. பெண்டர்க்கர் ("யசவந்த்") மிகப் பிரபலமாக விளங்கினர். சிறிய ஏமாற்றங்களையும், எரிச்சல்களையும் பற்றிய அவரது கவிதைகள் சாமானிய மக்களது சொந்த கஷ்டங்களை பிரதிபலிப்பனவாக இருந்தன. எஸ். கே. கானேட்கர் (கிரீஷ்) சில்லறை விஷயங்களைப் பற்றி பொதுப்படையாக மென்மையுடன் எழுதும்

திறன் படைத்தவர். எம். டி. பட்வர்தன் (மாதவ ஜூலியன் – 1894–1939) காதல் கீதங்களுடன் தொடங்கினர். பாரசீகக் கஜல்களைத் தழுவி தெம்மாங்கு வகையில் அவர் பாடினர். ஆனல் விரைவில் அவரது ஆர்வம் அடங்கி சம்பிரதாய வழிமுறைகளைக் கையாளும் புலவராக மாறினர். சொல்லாட்சி, உணர்ச்சி வகை இரண்டிலுமே அவர் பழைய நியதிகளைக் கையாளத் தொடங்கி விட்டார்.

பி. கே. ஆத்ரேயின் ஜன்டுச்சி பூலே (1925) இது காறும் வாசகர்களின் அபிமானத்தைப் பெற்றதாய் இருந்து வந்திருக்கின்றது. அவர் நையாண்டி செய்து எழுதியுள்ளார். ஆனல் அவரது குத்தல்களை புரிந்து கொள்ளாமல் கண்மூடித்தனமாகப் பாராட்டியவர்கள் எல்லாக் கவிதைகளையுமே ஏளனம் செய்வதற்கு இது துணை புரிந்தது. 1930ஐத் தொடர்ந்து வந்த ஆண்டுகளில் மிகச் சாதாரணமான கவிஞர்கள் மிகுதியாகக் காணப்பெற்றனர். கவிதைகள் விஷயத்தில் ஒரு கேலி மனப்பான்மை வளருவதற்கு இவர்கள் காரணமாயினர். சிலர் கவிதை எழுதுவதையே விட்டு விட்டனர். மற்றவர்கள் தித்திக்கும் செய்யுள்களை இயற்றி வாசகர்களைக் கெஞ்சும் போக்கில் தமது கவிதைகளைப் படைத்தனர்.

தாம்பேயின் கவிதைகளில் 1920க்குப் பிறகு இயற்றப்பட்டவற்றில் சில மிகச் சிறந்தவை. பின்னர் வந்த எழுத்தாளருக்கு அவை வழி காட்டியாக விளங்கின. பால பருவம் மாறி யுவர் ஆகும் தருணத்தில் ஏற்படும் உணர்ச்சிகளை அழகான இசை வடிவங்களாக அமைப்பதில் அவர்கள் கவனம் செலுத்தினர். விஷயம் எப்படியிருந்தாலும் அதைக் கூறும் நடை உற்சாகமாக இருக்க வேண்டும். இந்தக் கவிதைகள் பாடுவதற்குப் பயன் பட்டன. பலர் கேட்டு மகிழ்ந்தனர். தாம்பேயின் படைப்புக்களில் துல்லியமான உணர்ச்சிச் சித்திரம் உண்டு. ஆனல் அவரைப் போல எழுத முற்பட்டவர்களிடம் இந்த நல்ல அம்சம் இருக்கவில்லை. காதல்

உணர்ச்சியும் சொல்லோசையும் செயற்கையான சொற் சித்திர அமைப்பும் அவற்றில் முக்கியமாக விளங்கின. வாழ்க்கையினின்று வேறுபட்ட, மனோகரமான ஒரு நம்பிக்கையை உண்டு பண்ணக்கூடிய போதையாக கவிதை இருந்தது. உணர்ச்சி, சொல்லாட்சி இரண்டிலுமே சாதாரணமாகப் பலர் அறிந்த விஷயங்களை எடுத்துரைத்தார்களாகையால் வாசகர்கள் புரிந்து கொள்ள விரும்பும் விஷயம் எதுவும் இல்லை. இதன் காரணமாக கவிஞனும் தனது வீரியத்தை இழந்து சகஜமான வளர்ச்சியற்றுப் போய் விட்டான். இந்தத் தலைமுறையைச் சேர்ந்த சில இளம் கவிஞர்களின் வாழ்க்கை இத்தகைய துன்ப இயலாக முடிந்தது, பிரமாதமாக முன்னுக்கு வரக்கூடியவர்கள் என்ற உண்மை பொய்த்துப் போயிற்று. தாம்பேயின் சிறந்த சீடர் பி. பி. போர்க்கர் என்று விமரிசகர்கள் கூறுகின்றனர். அவர் வெறும் சீடர் மட்டுமல்ல. இயற்கையின் சௌந்தரியத்துடன்கூட அகமகிழ்ச்சியையும், புலன்களைக் கவர்ச்சிக்கும் சித்திரப் படைப்புக்களிலும் அவர் திளைத்தார். அவர் கோவாவிலிருந்து வந்தவர். தார்மிக லட்சிய நிலையை தமது கவிதையுடன் சேர்த்துப் பிணைத்துக் கொண்டது சற்று முரணான விளைவுகளை உண்டு பண்ணியது. அப்படியில்லாமல் தமது மேதைக்கே உரித்தான வகையில் பணியாற்றியிருந்தால் இன்னும் அதிகப் புகழை அவரால் அடைந்திருக்க முடியும்.

ரவி கிரண மண்டலத்திற்கு எதிராக மனத் தெளிவுடன்கூட தாம்பேயும் அவரது சீடர்களும் உழைத்ததன் பலனாக அக்காலத்துக் கவிதைகளில் சில மிக சிறப்பாக விளங்கின. 1933ல் சாந்திராத் என்ற சிறிய பாமாலையை வெளியிட்ட பிறகு அனந்த கணேக்கர் கவிதை எழுதுவதை நிறுத்தி விட்டார். எனினும் புதிய போக்கு எவ்வாறு இருக்கிறது என்பதை அந்நூல் வாசகர்களுக்குப் புலப்படுத்தியது. அது ஒரு விசித்திரமான அவியலாக

இருந்தது. சந்திர வெளிச்சம், தொழிற்சாலையின் புகை போக்கி, நையாண்டி போன்ற பலவகை விஷயங்கள் அதில் சேர்ந்து இருந்தன. இடைக்காலப் புதுமை அதில் தென்பட்டது. அனில் என்ற புனைப் பெயருடன் எழுதிய ஏ. ஆர். தேஷ்பாண்டேயும் புதுமைக் கவிஞர்தான். ஆனால் நீண்ட காலம் சக்தி வாய்ந்த பாக்களைப் புனைந்து வழங்கி வெற்றி கண்டவர் அவர். 1932ல் புல்வாத் என்ற பெயர் கொண்ட காதல் கீதங்களைத் தமது சிந்தனைகளை மையமாகக் கொண்டு அவர் இயற்றினர். அதிலிருந்து வளர்ச்சி கண்டு 1940ல் நற் பண்புகளின் உபதேசமாக அமைந்த பாக்னமூர்த்தி என்ற நூலை அவர் வெளியிட்டார். பின்னர் 1947ல் வெளியான பேர்த்தேவாவ் என்ற தொகுப்பில் சிந்தனையும், உணர்ச்சியும் இணைந்து பிரகாசித்தன. எதுகையற்ற கவிதா வடிவத்தைக் கையாண்டு சம்பிரதாயமான பாடல் தோற்றங்களின் நிர்ப்பந்தங்களினின்று கவிதையை அவர் விடுவித்தார். என். ஜி. தேஷ்பாண்டே, கலப்பற்ற இசைக் கவிதைகளையும் உண்மையான கிராமியச் சித்திரங்களையும் கொடுத்தார். ஜி. எச். தேஷ்பாண்டே சொற்செட்டுடன் கூட முரண்பட்ட நிலைகளில் தத்துவார்த்த உண்மைகளை வைத்துக் காட்டி பழைய கவியோகிகளைப் போல், அக்காலத்து மேலெழுந்த போக்கிற்கு சிறந்ததோர் மாற்ருக விளங்கினர்.

1942 இயக்கம் இலக்கியப் படைப்பை துரிதப்படுத்தியது. முந்தைய செப்பிடு வித்தைகள் அகன்றன. வி. வி. ஷிர்வாட்கரின் (குஸுமாக்ரஜ்) மிகுந்த செல்வாக்குடன் வளர்ந்தோங்கி விசாகம் (1942) என்ற தமது கவிதைத் தொகுப்பில் பிரமிக்கத் தக்க புகழை அடைந்தார். அவர் இலக்கியத் திறமை மிக்கவர். உயர் நிலையிலேயே இருந்திருக்க அவரால் முடியும். ஆனால் கவிதையை ஓரளவு அலட்சியம் செய்துவிட்டு பிறவகை இலக்கியங்களில் கவனம் செலுத்தினர். ஏகாதிபத்தியத்திற்கு எதிரிடையான கவிதையில் அவர் கக்கிய அனல்

அழகுணர்ச்சியை வெளிப்படுத்துவதற்கு உதவுபடியாக இருக்கவில்லை. தற்காலிகமான வீரமும் சோகமும் கலந்த படைப்புக்கள் அதிகமாக வருவதற்கு அவரது வெற்றி ஊக்கமளித்தது. ஆனல் சீக்கிரத்திலேயே அது வசன வடிவத்தை அடைந்து கவிதைத் தன்மை காலியாகும்படியான நிலைமை ஏற்பட்டு விட்டது. தனக்கிருந்த பல தடைகளினின்றும் விடுபடுவதற்கு துடித்துக் கொண்டிருந்த கவிதைக்கு அவரது பாடல்களில் மேலோங்கியுள்ள எதிர்ப்புணர்ச்சி நன்மையையே பயத்தது. மன மோகன் யாருடைய மரபினரும் அல்லர். அவரும் வேறு சில இளம் கவிஞரும் மாறி வரும் சூழ்நிலைக்கேற்ப உழைத்து சந்தடியின்றி தமது திறனுக்கேற்ற முழுமையை அடைந்தனர்.

### நாடகம்

1920ம் ஆண்டுக்குப் பிறகு நாடக அரங்கை போஷித்து வந்தது பழைய பெருமைதான். ஒரு சில நடிகர்கள் செல்வாக்கு பெற்றிருந்தனர். அவர்களிடம் நடிப்புத் திறனைவிட பாட்டுத் திறனே அதிகமாக இருந்தது. புகழ் பெறுவதற்கு பாட்டு முக்கிய சாதனமாகக் கருதப்பட்டது. அக்காலத்து சங்கீத வித்வான்களில் பலர், பக்கவாத்தியக்காரர்கள், சாஹித்ய கர்த்தாக்கள், உட்பட நாடகங்களின் பங்கு பெற்றனர். மராத்தியரல்லாதாரும் இதில் கலந்து கொண்டனர். அவர்களை ஈர்த்தது சங்கீதம். மராத்திய அபிமானிகளின் விஷயமும் அதுவே. 1930ஐ தொடர்ந்து பேசும் படம் வந்தது. அது இசையை மட்டுமின்றி பொதுப்படையான பொழுதுபோக்கைக் கலந்து அளித்ததால் நாடக மேடையானது விரைவில் எதிர்த்து நிற்க முடியாது, வருந்தத் தக்க வகையில் சரிந்து விட்டது. முன்னரே அது தள்ளாடிக் கொண்டிருந்தது. அதைச் சினிமாப் படம் ஒழித்து விட்டது.

1920-க்குப் பிறகு தோன்றிய சில்லறை நாடகா

சிரியர்கள் அடைந்த புகழ் விரைவில் மங்கி விட்டது. பழைய வழிகளிலேயே சென்று வெற்றிகாண முயன்றது தான் அதற்கு காரணம். வழக்கம் போல புராணக் கதைகளும், ஞானக் கவிகளும், சரித்திர வீர புருஷர்களும், வீரப் பெண்களும் பாத்திரங்களாக அமைந்தனர். ஆனால் எல்லா நாடக நாயகர்களுமே ஒரே மாதிரி காட்சி அளித்தனர். பிரதி நாயகர்களும் அப்படித்தான். முன்னர் கூறியுள்ள பிரதான நாடகாசிரியர்களில் காடில்கரும் கோல்ஹாட்கரும் நாடக அரங்கில் மதிப்பிழந்து போயினர். கேல்கருக்கு வேறு வகையில் அக்கறை ஏற்பட்டதன் காரணமாக நாடகங்களை அவர் தொடர்ந்து இயற்றவில்லை. மாமா வாரேர்கரின் முதல் நாடகம் 1917ல் நடிக்கப் பெற்றது. அவருக்குப் புகழ் கிட்டலாயிற்று. இக்காலத்து மராத்தி நாடக அரங்கில் வாரேர்கர் முதன்மையான ஸ்தானம் வகிக்கிறார். அவர் முதலில் எழுதியவை புராண நாடகங்கள். ஆனால் ஓய்வு ஒழிச்சலின்றி புதுமைக் கதை அமைப்பிலும் உத்திகளிலும் அவர் பரீட்சை செய்வார். சமுகப் பிரச்னைகளை தமக்கு உசிதமெனத் தோன்றியவாறு எடுத்துக்காட்ட முற்பட்டார். அவரது பாத்திரங்கள் இயற்கையாக, ஆனால் ஒளிவு மறைவின்றி, இலை மறைவு, காய்மறைவின்றி உரையாடினர். நாடக உரையாடல் என்று அதற்கு முன்னர் கருதப்பட்டு வந்த வகைகள் இதன் காரணமாக மதிப்பிழந்து போயின. வாரேர்கர் 40 நாடகங்களை இயற்றியுள்ளார். அபூர்வ பங்கால் (1953) பூமிகன்யா சீதா (1955) ஆகியவை சமீபத்தில் வெளியானவை. அவரது அரிய திறன் இன்னும் மங்காமல் பிரகாசிக்கிறது என்பதை அவற்றில் காணலாம். பிரத்தியட்ச பாவத்தை அளித்து நாடகத்தின் சத்தியை விரிவாக்கியதற்காக நாடகத் துறை அவருக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

நாடகத்தை மங்காமல் காப்பாற்றுவதற்குச் செய்த

பெரு முயற்சிகளுக்கு “ நாட்டிய மன்வந்தர் ” குழுவினர் காரணம். ஐரோப்பிய புதுமை நாடகங்கள் அவர்களுக்கு ஊக்கம் அளித்தன. அந்தல்யாசி சாலா (1933) (குருடர் களின் பாடசாலை) அவர்களது முதல் நாடகம். அது ஒன்று தான் வெற்றிகரமாக நடிக்கப் பெற்றது. ஜோர்சன் என்ற நார்வே நாட்டு ஆசிரியரின் நாடகமொன்றை தழுவி எஸ். வி. வர்த்தக் அதை மராத்தியில் எழுதினுர். அதன் அமைப்பு கம்பீரமானது. ஆனுல் அதில் இருந்த கவர்ச்சியம்சம் குறைவு. அதில் தோன்றிய அயல் நாட்டு வாடையை சாதாரண நாடக அபிமானிகள் அவ்வள வாக ரசிக்கவில்லை. விரைவில் இக்குழு சிதறுண்டு போயிற்று. ஆனுல் நாடக அரங்கை ஜீவ சக்தி உள்ள தாக மாற்றியமைத்த நல்ல நவீன நாடகத்தை இயற்றி, நடிப்பு பூர்வமாக அவருடைய ரசிகர்களின் மனதிலே அது ஆழப்பதிந்துவிட்டது. சினிமா படத்தின் அறைகூவலைச் சமாளிப்பதற்காகச் சிறு நாடகங்களை இயற்றி நடித்துக் காட்ட சில அப்பாவிகளான, கற்பனை வரண்டு போன எழுத்தாளர் செய்த முயற்சி பயனிக்கவில்லை. பழைய காலத்து நாடக அரங்கு உத்திகளைக் கலந்து பாலமோகன் கம்பெனியார் பி. கே. ஆத்ரேயின நவீனப் போக்கு உள்ள நாடகங்களை நடித்துக் காண்பித்தனர். இதன் மூலம் வருவாய் கிடைத்தது. கதை அம்சம் அவ்வளவாக இல்லாத விஷயங்களை எடுத்துக் கொண்டு ஹாஸ்ய பாகங்களை இணைகரமாகச் சேர்த்துப் பிணைத்து ஒரு கோமாளிக் கூத்தைக் காட்டும் முறையை ஆத்ரே கையாண்டார். அவர் நல்ல ஹாஸ்ய உணர்ச்சி படைத்தவர். எனினும் இம்மாதிரி கவர்ச்சி அம்சத்தை பிரதானமாக வைத்து எழுதுகையில் அவர் கூறும் கனமான விஷயங்கள் வெறும் நையாண்டிகளாக மாறி விடுகின்றன. தமக்குக் கிடைத்த வெற்றிகளின் விளைவு களை ஆத்ரே லகுவான ஹாஸ்ய நாடகங்களை இயற்றித் தமது அபூர்வமான சக்தியை வீணடித்துக் கொண்டார்.

ஹாஸ்யம், குணச்சித்திர அமைப்பு. நடை ஆகிய மூன்றிலும் வல்லுனராக இருந்த அவர் விரைவில் சினிமாவுக்குக் கதை எழுதுவதிலும் பத்திரிகைத் துறையிலும் ஆழ்ந்து போனுர். நாடகம் மீண்டும் அயர்ந்து விட்டது. 1940க்குப் பிறகு மீண்டும் நாடகத்துறை மலர்ச்சி கண்டது. எம். ஜி. ரங்கனேகர் என்ற அனுபவமுள்ள பத்திரிகையாளர் இதற்கு வழி காட்டினுர். பொழுது போக்கிற்கு வழி செய்யும் மிதமான நோக்குடன் நாட்டிய நிகேதன் என்ற அமைப்பை ரங்கனேகர் தோற்று வித்தார். கண்ணியமுள்ள சிறு கூட்டத்தினர்கூட ரஸிக்கக்கூடிய இன்பியல் நாடகங்களே அவர் இயற்றினுர். நடுத்தர வகுப்பின் வாழ்க்கை, ஜீவகளை உள்ள உரையாடல், ஒரு சில பாடல்கள் சேர்ந்தது அவரது இன்பியல் நாடக அமைப்பு. இந்தக் கலவை மக்களுக்குப் பிடித்தமாக இருந்தது. அக்காலத்து அமெச்சூர் நாடகங்கள் மேலே நாட்டுப் படைப்புகளின் தழுவல் களாக இருந்தன. அவற்றில் உயிர்த்துடிப்போ, இயற்கை யான அம்சமோ இல்லே.

## நாவல்

நாடகத்தைத் தொழிலாகக் கொண்ட குழுவினர் சரியத்தொடங்கிய பிறகு நடுத்தர வகுப்பினரின் பொழுது போக்கிற்கு நாவல் பெரிதும் பயன்பட்டது. இதற்குச் சக்தி வாய்ந்த போட்டியாகப் பின்னர் வந்தது சினிமாப் படம். தூய்மையாளரிடை இது ஒரு பரபரப்பை விளே வித்தது. எனினும் கண்ணியமும் செல்வாக்கும் விரை வில் நாவலுக்கு ஏற்பட்டன. நாவல்கள் பல்வேறு வகை களில் வெளிவரலாயின. ஒரு சிலர் சீரிய நோக்கங்களுடன் நாவல்களேப் பயன்படுத்திக் கொண்டனர். வி. எம். ஜோஷி (1882–1943) தாம் முதலில் இயற்றிய ராகினியில் அடைந்த புகழைத் தொடர்ந்து ஐந்து நாவல்களேப் படைத்தார். அவற்றில் மிகச் சிறந்தது சுசீலேசா தேவ்

(1930). படித்த பெண்ணின் மதிநுட்பமும் மனப்பாங்கும் எவ்வாறு வளர்ச்சி காண்கின்றன என்பதைப் பற்றிய தீவிர ஆராய்ச்சி நூலாக அது அமைந்தது. "இந்து காளே அனி சரளா போலே" (1935) என்பது மற்ருெரு நாவல். கலை, அற வாழ்க்கை இரண்டுக்குமிடையே உள்ள போராட்டத்தை இது சித்திரிக்கிறது. சிலரது வாழ்க்கையை எவ்வாறு இந்தப் போராட்டம் பாதிக்கிறது என்பதையும் இதில் காணலாம். சமுதாயத்தை ஜோஷி அறியும் முறை ஒரு தத்துவ தரிசி பற்றுதலின்றி பணியாற்றுவதைப் போல இருப்பதால், அதில் ஓரளவு நம்பிக்கைக் குறைவு தொனிக்கிறது. டாக்டர் எஸ். வி. கேட்கர் (1884–1937) இயற்றிய நாவல்களில் நடுநிலை என்பது மருந்துக்குமில்லை. வடிவம், நடை பற்றிய முந்தைய நியதிகளையெல்லாம் புறக்கணித்து, உப்பு சப்பில்லாத விஷயங்களை எடுத்துக்கொண்டு, நடக்க இயலாத கதைக் கோவையை வைத்து அவர் எழுதலானுர். அவர் சமூக ஆராய்ச்சியாளர். தனது பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பதற்கு நாவலை ஒரு சாதனமாக அவர் பயன்படுத்திக் கொண்டார். அவரது படைப்பில் தென்பட்ட அவலட்சணம் சாமானிய வாசகர்களுக்கும் அதிர்ச்சியை அளித்தது. அதன் எண்ணற்ற முரண்பாடுகள் சீரிய வாசகர்களுக்கு அருவருப்பாக இருந்தன. எனினும் மதி நுட்பத்துடன்கூட, தைரியமாக, நாவலை எழுத இயலுமென்று அவர் புலப்படுத்திஞர். அவரும் ஜோஷியும் சேர்ந்து ஆற்றிய பணி நாவலுக்கு ஒரு திடீர்க் கண்ணியத்தை அளித்தது. அக்காலத்திய பிரபல நாவல்கள் மிக மட்டரகமாக இருந்ததை அவை பிரகாசப்படுத்திக் காட்டின. நாடகங்களைவிட அதிகமாக நாவல்களை மாமா வாரேர்க்கர் இயற்றியுள்ளார். அவர் வரைந்தவை 115 நாவல்கள். இவற்றில் 28 துப்பறியும் நாவல்கள், 58 வங்க மொழி பெயர்ப்புகள். சரத் சந்திர சட்டர்ஜியை மிக மிக லாகவமாக மராத்தியில் அவர் மொழி பெயர்த்திருக்கிருர். அவர்

இயற்றிய சொந்த நாவல்கள் அடித்தளத்திலுள்ள சாமானிய மக்களைப் பற்றியவை. ஆனால் அவர்கள் வாயில்லாப் பூச்சிகள் அல்லர். அவரது பெண் பாத்திரங்கள் எல்லா நாவல்களிலும் தாம் வைத்ததே சட்டம் என்ற வகையில் நடந்து கொள்பவர்களாக இருக்கின்றனர். அக்காலத்து கற்பனைக் கதைகளில் ஏழைகளையும் பெண்களையும் சித்திரித்துக் காட்டிய வகைக்கு இது முற்றிலும் வேறுபட்டிருந்தது.

1926-க்குப் பிறகு இரண்டு கதாசிரியர்கள் பெரும் புகழ் அடைந்தனர். இவர்கள் என். எஸ். பட்கே, வி. எஸ். காண்டேகர் ஆகியோர். முதலில் நாவல் ஆசிரியராகவும், பின்னர் சிறு கதையாளராகவும், கட்டுரையாளராகவும், விமரிசகராகவும் இவ்விருவரும் பல துறைகளில் புகழ் எய்தினர். நூலாசிரியர் கோடு காட்டியிருப்பதை வைத்துக் கொண்டு கலை கலைக்காகவே என்பது பட்கேயின் தத்துவம் என்கின்றனர், மேலெழுந்துவாறு பார்க்கும் விமரிசகர்கள். கலை வாழ்க்கைக்காகத்தான் என்பது காண்டேகரின் சித்தாந்தம். நடுத்தர வகுப்பின் மேல் அந்தஸ்தில் காணப்பெறும் காதல் உணர்ச்சியை கேந்திரமாக வைத்து எளிமையான வடிவத்தை உருவாக்கி, சாமர்த்தியமாக கதை புனைகின்றார் பட்கே. அவர் சிறிதும் சோடையில்லாத திறம் படைத்தவர். கதையின் கட்டுக்கோப்பை சாமர்த்தியமாக உருவாக்குபவர். அவரது நடை ரம்மியமானது. அவர் புகழடைந்த பிறகு விமரிசகர்களும் சரி, எழுத்தாளர்களும் சரி, நடைக்கே அதிக முக்கியத்துவம் கொடுக்கலாயினர். இது விரும்பத்தகாத போக்கு. பட்கேயின் நூல்களில் நடை எடுப்பாகத்தான் இருந்தது. ஆனால் இரண்டில் எதையும் அவர் மூடி மறைக்கவில்லை. எல்லாவற்றையும் விளக்கமாக, தெளிவாக, உண்மை உணர்ச்சியுடன்கூட "எப்படி எழுதுவது?" என்ற நூலில் வழிமுறைக் குறிப்புகளை அவர் வழங்கியிருக்கிறார். பட்கேக்குச் சற்றுப் பிறகு

காண்டேகர் எழுத்துத் துறையில் இறங்கினர். அவர் முதலில் புகழடைந்தது சிறு கதை உலகில். பட்கேயின் வழிமுறையை அறைகூவி அழைக்கும் தோரணையில், லட்சிய உயர்நிலை பிரகாசமாகத் தென்படும் முறையை அவர் கையாண்டார். அவரது பாத்திரங்களாக வரும் இளைஞர்கள் சமூக ராஜீய சேவையில் விசேஷ ஆர்வம் உள்ளவர்களாகக் காணப் பெறுகின்றனர். அதைப் பற்றி நன்ருகப் பேசவும் செய்கிருர்கள். போகிற போக்கில் காதல் சந்தடியின்றி சேர்ந்து விடுகிறது. பாத்திரங்களின் சிரத்தையும் ஆர்வமும் வாசகர்களைக் கவர்ச்சிக்கின்றன. அழகுணர்ச்சியை முக்கியமாகக் கருதும் பட்கேயிடம், கூடவே குறைபாடு இருப்பதையும் அவர்கள் கண்டனர். இதை மூடி மறைப்பதற்காக வேண்டி, இளைஞர்களான தமது பாத்திரங்கள் அளவளாவும் அறையில் கூடுவதாக இருந்த நிலைமையை மாற்றி, ராஜீயக் கூட்டங்களில் சந்திப்பவர்களாக நிலைக்களனை மாற்றியமைத்தார். இந்த இரண்டு எழுத்தாளரும் ஒருவரையொருவர் நெருங்கவே இல்லை. ஆனல் அவர்களது அபிமானிகள் முற்றிலும் வேறு வகையினர். இருவரையுமே அவர்கள் ஒரே சமயத்தில் போற்றினர்கள். அவர்களது அபிமானம் சில சமயம் மாறி மாறி வெளிப்பட்டதா? அல்லது ஒருவரிடமிருந்து தப்பி மற்றொருவரை நாடும் போக்கின் விளைவா என்று சொல்வதற்கில்லை. இருவரும் இன்றும் பல வகை படைப்புகளை அளித்து வருகிருர்கள். பட்கே தான் அதிகமாக எழுதுபவர். இருவரின் போக்கும், குறிப்பாக பட்கேயின் வழி, வாசகர்களுக்கு அலுப்புக் கொடுக்க ஆரம்பித்து விட்டது. ஜி. டி. மத்கோல்கரின் நாவல்களில் அரசியல் அம்சம் அதிகம். ஆனல் கதைக் கோவையில் அது ஜீரணித்துக் கொள்ளப்படவில்லை. அவரது பொங்கும் நடையைப் போல இதுவும் ஒரு தனி அணிகலனுகவே தென்பட்டது. பி. ஒய். தேஷ்பாண்டேயின் நாவல்களில் கேந்திரமாக இருப்பது ராஜீயந்தான்.

ஆனால் உணர்ச்சிப் பெருக்கும் நடைச் சித்திரமும் ராஜீயத்தை அடக்கிக் காண்பிக்கின்றன. விசிராம் பெடேகர் "ரணங்கன்" (1939) என்ற ஒரே நாவலைத்தான் இயற்றியுள்ளார். சர்வதேச நிலைமை மோசமாகி வந்தது கதா பாத்திரங்களின் வாழ்க்கையை எவ்வாறு பாதித்தது என்பதுதான் இந்த நாவலின் விஷயம். இந்த நாவலை இலேசாக புறக்கணித்து விட்டார்கள். போதிய மதிப்பு அதற்கு கிடைத்திருந்தால் பிந்திய ஆண்டுகளில் போலித்தன்மையுள்ள அரசியல் கற்பனைக் கதைகள் குறைவாகத் தோன்றியிருக்கும். முந்தைய தலைமுறையைச் சேர்ந்த எழுத்தாளர் வரலாற்று விஷயங்களை எடுத்துக் கொண்டு வீரத்தையும், காதலையும் சேர்த்து வழங்கினார்கள் என்றால் இந்தக் காலத்தின் வரலாற்றை நாவலாசிரியர்களில் சிலர் அதே மாதிரி பெருமைப்படுத்தியுள்ளனர். அதுவே பிரத்தியட்ச அனுபவம், அரசியல் என்று மதித்து பிரியத்துடன் பெரும்பாலான வாசகர்கள் அவற்றில் திளைத்தனர்.

அக்காலத்து மோஸ்தர் என்று கருதப்பட்ட கற்பனைக் கதை வகையை சிறுபான்மையோரான வாசகர்களும் விமரிசகர்களும் இடைவிடாது எதிர்த்து வந்துள்ளனர். இதன் காரணமாகச் சில எழுத்தாளர் புதுவகைகளை நாடி புது வழிகளில் இறங்கியுள்ளனர். பெண் எழுத்தாளர் தோன்றியிருப்பது கணிசமான பொருள் படைத்தது. ஸ்ரீமதி மாலதி பெடேகர் "விபாவரி ஷிரூர்கர்" என்ற புனைப் பெயருடன் எழுதினார். அவரது கதைகள் விசேஷ பரபரப்பை உண்டு பண்ணியுள்ளன. விழிப்புற்று எழுந்த பெண் குலத்தின் துயரங்களைப் பற்றிய அனுபவம் தோய்ந்த உண்மைகளை வடித்துக் கொடுக்கும் இரண்டு நாவல்கள் (1933–35) அவருக்குப் புகழை அளித்தன. ஸ்ரீமதி கீதா சானே அவரைப் போலவே துணிவுடன் எழுதுபவர். ஆனால் ஸ்ரீமதி மாலதி பெடேகரின் வெற்றி அவருக்குக் கிட்டவில்லை. "கிருஷ்ணா பாய்"

என்ற புனைப்பெயருடன் ஸ்ரீமதி முக்தாபாய் தீக்ஷித்தும், ஸ்ரீமதி கமலாபாய் திலக்கும் சமூகத்தை அறைகூவி அழைக்கும் வகையில் இல்லாமல், மென்மை மிருதியுடன், நடுத்தர வகுப்பினரின் வாழ்க்கையைப் பற்றிய கதைகளை எழுதி வருகின்றனர். ஸ்ரீமதி குசுமாவதி தேஷ்பாண்டே மிக மென்மையான நடைச் சித்திரங்களை வழங்குபவர். கவிதா பாவமும் திறனும் அதில் சிறப்பாக இணைந்து இருக்கும். இவற்றிற்கு நல்ல பாராட்டுதல் கிடைத்தது. மாதருக்குரிய மரியாதையைக் கொடுத்து எழுதி வந்த ஆண் எழுத்தாளரைப் போலவே பெண்களைப் பற்றி பிற பெண் எழுத்தாளர்களும் எழுதி வரலாயினர். சம்பிரதாய வாழ்விலிருந்து விலகி எழுதுபவர்களில் ஆர். வி. திவே முக்கியமானவர். சஹ்யாத்ரியில் வசிக்கும் பூர்வ குடிகளைப் பற்றிய அவரது நாவல்களில் பிரமிக்கத்தக்க சொல் வளத்தைக் காணலாம். எனினும் அவரும் காதலென்ற போர்வையில் அவற்றை மூடி வைத்தார். சானே குருஜி (1899–1950) இயற்றிய நாவல்களிலும், கதைகளிலும் உணர்ச்சிப் பெருக்கும், நீதி அம்சமும் கலந்து காணப் பெறுவதால், 1942-க்குப் பிறகு இளைஞர்களிடையே அவை மிகுந்த செல்வாக்குடன் விளங்கின. அக்காலத்தில் பிரபலமாக இருந்த துப்பறியும் கதைகளினின்று இளைஞர்களில் சிலரையேனும் நல்ல திசையில் திருப்பிவிடுவதற்கு அவை பயன்பட்டன.

### சிறு கதை

எச். என். ஆப்தே, எஸ். கே. கோல்ஹட்கர், என். ஸி. கேல்கர், வி. எஸ். கூர்ஜர் ஆகியோரின் ஆரம்ப முயற்சிகளைத் தொடர்ந்துதான் சிறு கதை தனி அமைப்பாக பிரபலம் அடைந்தது. இலக்கிய நயங்கள் இல்லாமல் வெறுமனே கதையைச் சொல்லும் பாணியில் குறு நாவல்கள் பெரிய நாவல் வழிகளையொட்டியே வளர்ச்சி கண்டன. கதையமைப்பில் ஒற்றுமை அம்சமும், உளவியல்

ஆராய்ச்சியும் சேர்ந்து திவாகர கிருஷ்ணுவின் "சமாதியும், இன்னும் ஆறு கதைகளும்" (1923) என்ற தொகுப்பிற்கு புகழையளித்தன. அதுதான் நவீன சிறு கதைத் தொகுப்புக்களில் முதலாவது என்று சொல்லலாம். 1930-க்குக் சமீபமாக காண்டேகரும், பட்கேயும் ஆற்றிய சிறந்த பணியின் காரணமாக சிறு கதை வடிவம் பலமாக வேரூன்றி விட்டது. 1930-க்குப் பிறகு பலவகைப்பட்ட, பல கோணங்களிலிருந்து கிளம்பிய சிறு கதைகள் பிரபலமாயின. அவற்றில் சில பட்கே, காண்டேகர் வகைகளுக்கு மாருக இருக்கவேண்டுமென்ற கருத்துடன் இயற்றப்பட்டவை. இந்த இரண்டு பிரபல எழுத்தாளரும் பிரத்தியட்ச நிலைக்கு ஏற்ப பணியாற்றுவதில்லை என்று நிந்தனை செய்த ஒய். ஜி. ஜோஷி, குடும்ப வாழ்க்வைப் பற்றிய உணர்ச்சியைக் கொட்டும் கதைகளை எழுதி புகழுடைய முற்பட்டார். வி. வி. போகில் எழுதத் தொடங்கியபோது பிரமாதமாக முன்னுக்கு வரக்கூடியவர் என்று தோன்றியது. அவரது நகைச் சுவையில், மிகைப்பாட்டையும் பழைய போக்குகளையும் காணலாம். எனினும் அவற்றினூடே, நடுத்தர வகுப்பின் கீழ், அந்தஸ்துக்களில் உள்ள பரிதாபகரமான, தைரியமில்லாத, குழப்பமான சிந்தனையுள்ள இளைஞர்களை சிறிது கொணர்ந்து நிறுத்துவதைப் பார்க்கலாம். ஆனல் அடக்கமோ விரிவான வேறுபாடுகளோ இல்லாததன் காரணமாக அவரது கோமாளிக் கூத்து எடுபடாது போயிற்று. நாவல்களிலும் இதே முறையை அவர் கையாண்டார். அவரது மிகச் சிறந்த சக்தி விரயமாயிற்று. அனந்த கானேகரின் கதைகளில் காணப்பெறும் எதிர்மறை அணி அடக்கமாக இருந்தது. வாசகர்கள் பலர் அதைப் புரிந்து கொள்ளவில்லை. கானேகர் அதைப் பிரகாசப்படுத்த முடியவில்லை. எஸ். எம். மாதே உட்பட பலர் வளம் மிகுந்த கிராமிய வாழ்க்கையைப் பற்றிய இன்பகரமான கதைகளை இயற்றி

வழங்கினர். பிராந்தியத் தன்மை படைத்த கதைகளை எழுதுபவர்கள் வெகு சிலர். அவர்கள் நம்பிக்கையுடன் இப்பணியில் இறங்கியதாகத் தோன்றவில்லை. கோவா வின் இயற்கை அழகும் பழங்காலத்து வாழ்க்கை முறை அங்கு நீடித்து இருந்து வருவதும் சில எழுத்தாளரைக் கவர்ச்சித்தன. ஒழுக்க முறை சிதறிக் கிடக்கும் நிலைக் களனைக் கொண்ட கதைகளுக்கு அதை ஒரு வசதியான இடமாக்கிக் கொண்டனர், சில எழுத்தாளர். சி. வி. ஜோஷி, பி. கே. ஆத்ரே, சாம்ராவ் ஒக் ஆகியோர் சிறு கதையை இலக்கிய நையாண்டிச் சாதனமாக திறம்பட உபயோகித்தார்கள்.

## தனிப்பட்ட கட்டுரை, மற்ற வசனங்கள்

தனிப்பட்ட கட்டுரை ஆங்கிலத்திலிருந்து பல வடிவங்களில் எடுத்துக் கையாளப்பட்டது. 1920-க்குப் பிறகு அது துரிதமான ஸ்திர நிலையை அடைந்தது. இந்த வெற்றிக்கு பட்கே, காண்டேகர் ஆகிய இருவரும் தான் முக்கிய காரணம். பட்கேயின் படைப்புக்கள் கவர்ச்சிகரமாக இருக்கும். ஆனால் ஆழம் குறைவு. காண்டேகர் தான் எழுதுவதை அழகு படுத்தியதுடன் உணர்ச்சி ததும்ப வரைந்தார். ஆனால் அவை அவ்வளவு கச்சிதமாக இல்லை. தாம் செய்தது எப்படியென்பதை பட்கே விளக்கினார். என். எம். சந்த் என்பவரைத் தவிர அவர்களைப் போல நன்ருக எழுதத் கூடியவர்கள் இல்லை. அனந்த கானேகரின் கட்டுரைகள் நாடறிந்த பழமொழிகளை தலை கீழாக மாற்றி அவற்றைக் கண்டனம் செய்யும் வகையில் வாழ்க்கையை விமரிசனம் செய்தன. இந்த யுக்தியைப் பின்பற்றுவது சுலபம். கானேகர் தாமே இதைப் பன்முறை கையாண்டிருக்கிருர். ஆயினும் இந்த முறையை விரைவில் கை விட்டு விட்டார். ஸ்ரீமதி குஸுமாவதி தேஷ்பாண்டேயைப் போல எழுதுவது அதிகச் சிரமமானது. அவரிடம் தெளிவாகப் புரிந்து

கொள்ளக் கூடிய தனி வழிகள் கிடையாது. அவரது எழுத்தின் மென்மையும் கவிதா உணர்ச்சியும் உண்மையில் அவருக்கே உரித்தானவை. ஒரு குறிப்பிட்ட வடிவத்தை பிரபலப்படுத்தி வெற்றி காணும் முறை விரைவில் காலாவதியாகி விடுவது, இக்காலத்துக்கு இசைவான போக்கு.

இம்மாதிரி பல்வேறு வகைப் பரீட்சைகள் நடந்து கொண்டிருந்த காலையில் வாழ்க்கை வரலாறு நல்ல வலுவுடன் கிளம்பியிருக்க வேண்டும். ஆனால் அவ்வாறு நடக்கவில்லை. அது மந்தகதியில்தான் சென்றது. எனினும் கீர்த்தி வாய்ந்த ஒரு சுயசரிதை வெளியாற்று. என். டபிள்யூ. திலக் என்பவரின் மனைவி ஸ்ரீமதி லக்ஷ்மி பாய் திலக் வெளியிட்ட ஸ்மிருதி சித்ர (1934–1946) குறிப்பிடத்தக்கது. அவருக்கு அகர வரிசை கூடத் தெரியாது. எழுத்தியலுக்கு இடமேது? எனினும் மிகச் சிறப்பாக அவரது நூல் அமைந்தது. சில்லரை விஷயங்களைப் பற்றி பலர் எழுதிய போதிலும் ஒரு சிலர் வசன இலக்கியத்தை வளப்படுத்துவதில் தமது முழு சக்தியைச் செலவழித்தனர். வி.எம். ஜோஷி, டாக்டர் கேட்கர், எஸ்.எம். மாதே, வி. டி. சாவர்க்கர், எஸ். டி. ஜாவ்டேகர் ஆகியோர் இவர்களில் நன்கு பிரபலமானவர்கள். சாவர்க்கர் பெரும் கடமையை ஆற்றும் உணர்வுடன் கவிதைகளையும் இயற்றினர். பத்திரிகை நடையானது மொத்தத்தில் சாமானிய மக்களின் விருப்பத்தை ஒட்டி சமரசமாக உருப்பெற்றது. சீரிய நடையைக் கையாளும் சஞ்சிகைகள் சிரமப்பட்டன. கெட்டிக்கார பத்திரிகையாளன் மக்களுக்கு விஷயங்களைப் புரிய வைக்கவேண்டுமென்பதற்காக மிகச் சிக்கலான தத்துவங்களையும் மிகையாக எளிதாக்கி விடுகிறன். இது ஓர் ஆபத்தான குறை. கேல்கரை இந்த ஆசை பற்றிக் கொண்டது. பத்திரிகையாளராக இல்லாமலேயே பட்கே இதைச் செய்தார். இது காலப்போக்கு. திறனாய்வும் சுறுசுறுப்பாக நடந்தது. ஆனால் உத்திகளையும்

வடிவ அமைப்புகளையும் பற்றி பயனற்ற சர்ச்சையில் காலம் கழிப்பதாகவே அது காணப்பெற்றது. ஸம்ஸ்கிருத கவிதை இயலை திருப்பி எழுதும் வகையில் சில முயற்சிகள் நடைபெற்று வீணுயின. மேலை நாடுகளின் செல்வாக்கில் உருவான இலக்கிய வகையினரை காந்தம்போல மார்க்ஸீய தத்துவம் கவர்ச்சித்தது. இதன் விளைவாக ரசமான சர்ச்சை நடைபெற்று சிந்தனை மீண்டும் ஊக்குவிக்கப் பெற்றது.

## 1945–1955

முன்னர் குறிப்பிட்ட காலவரையறையின் இறுதியில் இலக்கிய மோஸ்தர்களுக்கு எதிரிடையான ஒரு வேகம் உருவாகியது. 1942 இயக்கம், இரண்டாவது உலக யுத்தம், அதைத் தொடர்ந்து வந்த ராஜீய நிகழ்ச்சிகள், சுதந்திர உதயம்—இந்த விரிவான நிலைக்களனை வைத்துக் கொண்டு இலக்கிய விஷயத்தில் ஒரு புது மனப்பான்மையை எழுத்தாளர் உண்டு பண்ணினர். சாதாரண வழியிலிருந்து ஒதுங்கி தனியாக வரம்பு கட்டிக்கொண்டு இலக்கியம் தழைக்க வேண்டுமென்ற தவருன கற்பனை பெரிய அதிர்ச்சிக்குள்ளாயிற்று. ஒருமைப்பாடின்றி ஒட்டுப் போடப்பட்ட வாழ்க்கை வழியானது அதை மூடி மறைத்திருந்த அலங்காரத்தை ஊடுருவிக் கொண்டு வெளிப் போந்தது. பழைய போக்கு நிலைகுலைந்தது. புதிய மனப்பான்மையின் விளைவாக மீண்டும் உயிர்த் துடிப்பு பெற்றவை கவிதையும், சிறு கதையும். வாழ்க்கையை, அதன் விரிவான பல வகைகளில், மூலை முடுக்குகளிலும் துருவித் தேடி ஆராய அவை முற்பட்டுள்ளன. அனுபவத்துக்கு திரையிட்டு கவர்ச்சியற்ற ஒரே நிலையை தோற்றுவித்த படுதாக்கள் பிய்த்தெறியப்படுகின்றன.

புதுமைக் கவிதையானது வாசகனைத் தட்டியெழுப்பி கவிஞனது அனுபவத்தை சுவைக்கும்படியான ஆர்வத்தை ஊட்டுகிறது. துரித கதியில் பொதுப்படையாகப்

பேசாமல் தனிப்பட்ட அனுபவங்களின் ஆழத்தை அது காண்பிக்கிறது. சிந்தனையும், உணர்வும் இணை கின்றன. வடிவம் உரிய இடத்தில் பாந்தமாக அமை கின்றது. கவிஞனுக்கு அது ஒரு பாரமாக இருப்பது இல்லை. கற்பனைச் சித்திரம் தெள்ளத் தெளிவாக, உயிர்த் துடிப்புள்ள அனுபவத்திலிருந்து ஊற்றுப் பெருக்காக ஓடுகிறது. உருவக அணிகளை பேசும் சொற் சித்திரங்களாக விஞ்ஞானம் அளிக்கிறது. வாழ்க்கையின் உண்மையைப் புலப்படுத்தும் எதுவுமே கவிஞனுக்கு அன்னிய விஷயமாகத் தென்படுவதில்லை. ஆண் பெண் உறவு நிலை கூறப்பட்டுள்ள விதத்தில் கேவலமும் இருக் கிறது, சௌந்தரியமும் காணப்படுகிறது. மனதில் வதியும் கருத்துக்கள் சகவாச தோஷங்களை அப்படியே கொப்புளிக்கின்றன. இத்தகைய கவிதையைச் சுலப மாய் புரிந்து கொள்ள இயலாத சோம்பேறி வாசகர்கள் அனுபவக் குறைவாளர்கள் என்றே சொல்ல வேண்டும். புதுமைக் கவிதை உயிர்ச் சத்துள்ள சொற்களை நேரடி யாக அள்ளி வீசுகிறது. கவிதைப் பாணி என்று செயற்கையாக ஒன்றைத் தெரிந்தெடுப்பதில்லை.

பி. எல். மார்தேகரின் (1907–1956) கஹி கவிதா (1947) வெளியானபோது புதுமைக் கவிதை முதல் தடவையாக சமூகத்தின்மீது அலை மோதியது. அதன் விசேஷத் தன்மைகளை பி. எஸ். ரெகேயின் முந்தைய படைப்புக்களில் காணலாம். மார்தேகர் மிக மென்மை யான உள்ளம் படைத்தவர். வாழ்க்கை வெறிச்சோடி இருந்ததால் அதன் ஆசாபங்கங்கள் அவரை குத்திப் பிடுங்கும் நிலை காணப் பெறுகிறது. எனினும் அதை ஓலமிடும் கவிதை என சொல்வதற்கில்லை. அதில் அழ குணர்ச்சி மிகுந்த கனவு அம்சத்தைக் காணலாம். அது நனவாகும் என்ற நம்பிக்கையும் தென்படுகிறது. மார் தேகரின் கற்பனையில் புலன் உணர்வைவிட மதிநுட்பமே மேலோங்கி நிற்கும். ரெகேயின் கவிதையில் உணர்ச்சிப்

பெருக்கு மிகுந்த, இன்பமயமான, கணநேர அனுபவங்கள் முழு விவரணைகளுடன் வழங்கப்பெறும். மற்றபடி இவ்வுலகத்திற்கு அவர் திரையிட்டு விடுகிறார். தனது சொந்த அனுபவத்தைக் கொண்டு அதைக் கவிஞன் சிறப்பாக்குகிறான். மார்தேகரும், ரெகேயும் சொற்செட்டு மிகுந்தவர்கள். மிகையான பிரயோகத்தை அவர்களிடம் காண முடியாது. கவிஞன் தனது பாடல்களுக்கு விரிவுரை எழுதுவதில்லை. ஸரத்சந்திர முக்திபோத், விந்தா கரண்திகர் ஆகியோர் தமது உணர்ச்சிப் பெருக்கில் வார்த்தைகளைச் சற்று கொட்டி விடுகிறார்கள். அவர்கள் படைக்கும் உருவங்கள் புஷ்டி உள்ளவையாக இருக்கின்றன. கிளர்ச்சித் தன்மையுள்ள பாடல்களில் இப்போக்கை விசேஷமாகக் காணலாம். போர்க்கர், தாம்பே ஆகியோரின் வளமான மரபில் திளைத்தெழுந்தவர் மங்கேஷ் பட்காங்கர். இந்தச் செழிப்பை அவரது சைலியில் காணலாம். வஸந்த பாபட் இதே மாதிரி வளர்ச்சி கண்டவர். எனினும் கவிதை உள்ளம் நோகாதபடி அவர் எழுதினார். ஸ்ரீமதி இந்திரா ஸந்த் இன்னும் சுமுகமான வகையில் படாடோபம் இல்லாமல் அனாவசியமானவற்றை நீக்கி எழுதும் சக்தி படைத்திருந்தார். ஒய். டி. பாவே கவிதை எழுதுகிறோம் என்ற பிரக்ஞையுடன் கூடப் பாடல்களைக் கொஞ்ச காலம் புனைந்ததுடன் மௌனத்தில் மூழ்கினார். புதுமைக் கவிதைக்கு இக்கவிஞர்கள் ஒவ்வொருவரும் தமது காணிக்கையை செலுத்தி யுள்ளனர். பலதரப்பட்ட விரிவும் நல்ல செழுமையும் அதற்கு இதனால் கிடைத்துள்ளன. கவிஞர்களில் சிலர் தமது பாடல்களை பகிரங்கமாகப் படிக்கும் முறையைக் கையாண்டதால் கவிதைகளுக்கும், மக்களுக்குமிடையே விமரிசகர்களும், நிந்தனை செய்வதையே பணியாகக் கொண்டிருந்தவர்களும் எழுப்பிய தடை மதில்கள் தகர்ந்தன. இந்தப் புதிய சூழ்நிலை ஏராளமான இளவயதினரை உற்சாகப்படுத்தி உண்மையான கவிதை தோன்றுவதற்குக் காரணமாயிற்று.

பழந்தலைமுறைக் கவிஞர்களில் புது நிலைக்கேற்ப மனதைத் திறந்து காட்டி எழுதியவர் "அனில்". இந்தப் போக்கில் பாதிக்கப்படாத கவிஞர்களே அனேகமாக இல்லையெனலாம். பழமை மாறி புதுமையில் நாட்டம் பிறந்துள்ளதென்று அதிலிருந்து கருதுவதற்கில்லை. ஜி. டி. மாட்கூல்கரி இசைப் பாடல்கள் மக்களின் சம்பிரதாயக் கவிதையின் சொற் சித்திரங்களிலும் பிரயோகங்களிலும் வேரூன்றியவை. நாட்டுப் பாடல்களும், ஞானிகளின் பாடல்களும் அவற்றை போஷித்துள்ளன. ஆனால் வடிவத்துக்கும் உள்ளடக்கத்துக்கும் உள்ள சிறந்த இசைவுநிலை, நல்ல இசைப் பாடல்களில் காணப்பெறும் புஷ்டியான கற்பனை ஆகியவை வெகுதூரம் மேலுக்குக் கொண்டு போய் விடுகின்றன. வெறும் வழி முறைக் கவிஞர் என்று அவரை அலட்சியப் படுத்த இயலாது. பழமைக்கும், புதுமைக்குமிடையே நடக்கும் புனிதமான சர்ச்சை எவ்வளவு பொருளற்றது என்பதை பகினைச்சீகானீ (1952) போன்ற கவிதைகள் புலப்படுத்துகின்றன. ஸ்ரீமதி பகினுபாய் செளத்ரி என்ற அருள்பெற்ற விவசாயப் பெண்ணின் வாழையடி வாழையான ஞான முதிர்ச்சி நமது உள்ளத்தை உருக்கி ஆட்கொள்ளும் தன்மை படைத்தது.

சிறு கதைத் துறையில் துணிவுடன் புதிய பரீக்ஷைகளைச் செய்தவர் கங்காதர் கட்கில். புதுமைக் கவிதைக்கும் புதிய சிறு கதைக்குமுள்ள உறவு முறையை அவரது கதைகளில் காணலாம். அவரது கற்பனைச் சித்திரங்கள் சிறிது கோணங்கித்தனம் உள்ளவை. அனுபவத்தினின்று வெளிப் போந்தவை. எதிர்பாராத முரண்பாடுகள் கொண்டவை. உள்ளக்கிடக்கை வெளிப்பட்டு விடுகிறது. நிம்மதி அளிப்பதாக நினைத்து நாம் பற்றிக் கொண்டிருந்த சின்னஞ் சிறு பிரமைகள் பிய்த்தெறியப் படுகின்றன. தனது சூழலுடன் போராடும் தனி நபர் எவ்வித நிர்ப்பந்தங்களுக்கெல்லாம் உட்பட வேண்டி

யிருக்கிறதென்பதை அரவிந்த கோகலே விளக்குகிறார். பாவே தனி மனிதனை முக்கியமாக வைத்து எழுதுபவரா யினும் அவரது பிரஸ்தாபங்கள் தனி நபருக்கும் சமுதா யத்துக்கும் அப்பாலிருக்கும் மரபையொட்டிய ஒழுக் கத்தை வலியுறுத்துபவை. கிராமத்தாரைப் பற்றி வியங்கடேச மக்துல்கர் எழுதியுள்ள கதைகளில் அப்பட்ட மாக உண்மை காணப்பெறுகிறது. கிராமத்தார் தெய்வப் பிறவிகள் என்ற லட்சியவாதக் கற்பனையின் அபத்தத்தை அது வெளிப்படுத்துகிறது. அவர்களைப் பரிதாபமான பேர் வழிகளாக காண்பிக்கும் உணர்ச்சி வகைச் சித்திரங் களும் சரியானவை அல்ல என்பது தெளிவாகிறது. கிராம வாசிகளும் மனிதர்கள்தாம். தமக்குரிய உரிமைகளுடன் காலம் கடத்துகின்றனர். எந்த தத்துவத்துக்கும் அவர் கள் அடிமை ஆவது இல்லை. புதிய சிறு கதையின் சிற்பி கள் என்று இந்த நான்கு எழுத்தாளரும் மதிக்கப் பெறு வது பொருத்தமானது. நல்ல ஆழமும் வேறுபாடும் நிறைந்தவை அவர்களது கதைகள். டி. பி. மோக்காஷி, சாந்தாராம் ஆகியோரும் கதை உலகைச் சிறப்பித்து இருக்கிறார்கள். அவர்களது கதைகளில் நிகழ்ச்சிகள் மந்த கதியில் செல்லும். செயலுக்குப் பின்னர் இருக்கும் விஷயம்தான் கதைக்கு புஷ்டி தருவது. இவ்வளவு புதுமை மலர்ந்த காலத்தில் முதலில் எதிர்ப்பு கிளம்புவது தவிர்க்க முடியாதது. ஆனால் கொஞ்ச காலம் போனதும் வாசகர்கள் ஆவலுடன் கூட இத்தகைய கதைகளைப் படிக்கலாயினர். கவிதை உலகைப் போலவே கதை உலகையும் நாடிய இளம் எழுத்தாளர் பலர். புதிதாகக் கிடைத்துள்ள சுதந்திரச் சூழ்நிலையில் தனக்கென உரித் தான பாதையை வகுத்துக் கொள்ளும் சக்தி வாய்ந்த சாதனமாகக் கதையை அவர்கள் கருதினர். மத்குல்க ரைப் போல ரஞ்சித தேசாயும் டி. எம். மிராசுதாரும் கிராம மக்களைப் போலத்தான் எழுதுகிறார்கள். சதானந்த ரெகே, கட்கிலைப் போல எழுதுபவராயினும் அவருக்கு

தனித் தன்மையும் உண்டு. பழைய பாணியில் சிறு கதைகள் தொடர்ந்து எழுதப்பெறுகின்றன. சில கதை கள் மதிப்பு உயர்ந்தவையாயும் இருக்கின்றன. மகாதேவ சாஸ்திரி ஜோஷி கோவாவைப் பற்றிக் கதைகளை எழுதி இருக்கிறார். அப்பிரதேசத்தை ஒழுங்கீனமான, காத லுக்கு உரிய, நிலைக்களனாகை பயன்படுத்தும் ஜனரஞ்சிர மான போக்கின் நேர் எதிரிடை விளைவு அவரது கதை யின் வழி. அந்தப் பிரதேசத்தவர் தெய்வ பக்தி உள்ள எளிமையான மக்கள் என்பன போன்ற உணர்ச்சிகள் அக்கதைகளில் காணப்பெறுகின்றன. கதைகளின் பெரு நோக்கம் வாசகர்களைக் கவர்ச்சிக்கிறது. என். ஜி. கோரே கொங்கணத்து மக்களைப் பற்றி உணர்ச்சி ததும்ப நடைச் சித்திரங்களை வரைந்துள்ளார். அவை இலக்கி யப் பெருமை வாய்ந்தவை. உணர்ச்சியை அள்ளிக் கொட்டுவதும் மிதமாகவே இருக்கிறது.

சிறு கதையைப் போல நாவல் அவ்வளவாக செழிக்கவில்லை. இது விசித்திரமான போக்கு. யுத்தத் துக்கு முந்தைய ஆண்டுகளில் எழுதப் பெற்ற நாவல்கள் பிரத்தியட்ச நிலைக்கு ஒத்து வராமல், உணர்ச்சிப் பெருக்குடன்கூட அமைப்பு முறை விஷயத்தில் ஒரே தீவிரப் பற்றுதல் கொண்டதாக இருக்கும். இத்தகைய முயற்சிகள் இன்னும் நீடிக்கின்றன. எனவே வயது வந் தோருக்கு உரித்தான அந்தஸ்தை புதிய நாவல்கள் அடை யக் கூடவில்லை. எங்கும் இதற்கும் சில விலக்குகள் உண்டு. எஸ். என். பென்ட்ஸேயின் 4 நாவல்கள் திறமை யின் வேகமான வளர்ச்சியைக் குறிக்கின்றன. கொங் கணத்தில் ஒரு மூலையைப் பற்றியவை இந்த நாவல்கள். அப்பகுதி மக்களின் மந்தமான வாழ்க்கையின் அடித்தளத் தில் காணப்பெறும் போராட்டங்களை அவை விவரிக்கின் றன. நாடகப்பாணியில் அவை கவர்ச்சிகரமாக அமை கின்றன. நாடகத்தைப் போஷிக்கும் உயிரோட்டம் அவரது கதாபாத்திரங்களில் இருப்பதைக் காணலாம்.

எஸ். ஆர். பீவல்கரின் முதல் நாவல் சுநீதா (1948). பிரிவினைக் காலத்தில் கிழக்கு வங்கத்தின் துயரங்களை சித்திரிக்கும் கதை அது. இதன் ஆசிரியர் பிரமாதமாக வளர்ச்சியடைவார் என்று எதிர்பார்த்தார்கள். ஆனால் அவரது இரண்டாவது நாவல் ஏமாற்றமளித்தது. அதுவே அவரது கடைசி நாவலாகும். விபாவதி ஷிரூர்கர் (ஸ்ரீமதி மாலதி பெடேகர்) எழுதியுள்ள "பலி" என்பது ஒரு அசாதாரணமான பிரத்தியட்ச வர்ணனை நூல், குற்றப் பரம்பரையினரின் குடியேற்றம் ஒன்றை வைத்து எழுதிய கதை. வி. வி. ஷிர்வாட்கர் (குஸுமக் ராஜ் என்ற கவிஞர்) இயற்றியுள்ள நாவல்களில் பழமையும் புதுமையும ஒரு தினுசாகக் கலந்து காணப்பெறும். ஒரு புதிய சமுதாயச் சூழ்நிலையை பழைய வீரமும் காதலும் செறிந்த போக்கில் வைத்து அவை வரையப்பெற்றுள்ளன. பி. பி. போர்க்கர் கோவாவைப் பற்றிய நாவல்களை எழுதியுள்ளார். பி. எஸ். மர்தேகர் நல்ல கவிஞர். அவரது நாவல்கள் அவ்வளவு சிறப்பாக இல்லை. எனினும் மனச்சாட்சியை யொட்டி எழுதும் முறையை முதலாவதாக பரீக்ஷை செய்து பார்த்த பெருமை அவருக்கு உண்டு. வஸந்த கானேட்கர் இந்த முறையை பின்பற்றினர். ஆனால் அவருக்கு அவ்வளவு வெற்றி கிடைக்கவில்லை. சானே குருஜி விட்டுப் போன இடத்தில் தொடங்கிய ஜி. என். தண்டேகர் நிறைய எழுதுவார். தரம் இப்படியும் அப்படியுமாக இருக்கும். உண்மையான உணர்ச்சிப் பெருக்கு, மன நெகிழ்ச்சி ஆகிய இரண்டையும் பிரித்துக் காட்டும் கோட்டை இப்படியும் அப்படியுமாக அவை ஒட்டிக் கொண்டிருக்கும். பழைய எழுத்தாளரில் பட்கே தமது உத்திகளை பிரகாசப்படுத்தும் வகையில் விடாது நாவல்களை எழுதி வருகிறர். அவருக்கு அபிமானிகள் நிறைய உண்டு.

நாடக அரங்கமும் மலர்ச்சியுடன் காணப்பெற வில்லை. பெரிய நகரங்களின் தொழில் முறையில் இல்லா

மல் நாடகங்களை நடித்துக் காட்டுவது காணப்பெறுகிறது. நாடக விழாக்களின்போது பிரமாதமான சுறுசுறுப்பு காணப்பெற்று விரைவில் அது காலியாகிவிடுவது வழக்கம். சிரத்தையுள்ள அமெச்சூர்கள் நவீன மோஸ்தரில் உள்ள நாடகங்களை விரும்புகிறார்கள். ஆனால் அவை சுலபமாகக் கிடைப்பதில்லை. தொழில் முறையில் நாடகம் போடுவது சுருங்கிவிட்டது. அதில் ஈடுபட்டிருப்பவர்கள் ஜனங் களைச் சந்தோஷப் படுத்துவதற்காக அலுத்துப் போன பழைய உபாயங்களையே நீடித்து பின்பற்றி வருகிறார்கள். ஆனால் அவற்றில் கூட நிலையான போக்கு காணப்பெறுவ தில்லை. பம்பாயில் பாட்டாளி மக்கள் வசிக்கும் பகுதியில் நாடகங்கள் தொடர்ந்து நடந்து வந்துள்ளன. இப்பாட் டாளி மக்கள் படிப்பை உரிமையாக அநுபவித்த வர்க்கங் களினின்று ஒதுங்கி நிற்பவர்கள். அப்படி நடிக்கப் பெறும் நாடகங்களில் பழைய பாணியில் உள்ள நாடகங்களின் பெரும்பாலான குறைகளைக் காணலாம். பழைய நாடகங் களின் நல்ல அம்சங்கள் மட்டும் காணக்கிடைக்க மாட்டா. மாமா வாரேர்க்கரைத் தவிர சிறப்பான நாடகாசிரியர்கள் என்று சொல்லக் கூடியவர்கள் அதிகமில்லை. சமூகப் பிரச்னைகளை பயனுள்ள வகையில் விளக்கிக்கூற நாட கத்தை ஒரு சாதனமாக உபயோகிக்கிறார்கள். நானு ஜோக், ஸ்ரீமதி முக்தாபாய் தீக்ஷித் அதையேதான் செய் கிறார்கள். ஆனால் அவர் கையாளும் பிரச்னைகள் விரிவா னவை அல்ல. வியாங்கடேச வக்கீல் இயற்கையான திறமை படைத்த நாடகாசிரியர். உரையாடலின் தொகுப்பில் அவர் சிறந்தவர். ஆனால் மேடை ஏறாமல் அவரது நாடகங்கள் நலிந்து விடுகின்றன. அமெச்சூர் நாடக மேடை கண்டு பிடித்து பிரகாசப்படுத்தியுள்ள இருவர் ஸி. ஒய். மராத்தே, விஜய் டெண்டுல்கர் ஆகியோர். மராத்தே சரித்திர நாடகங்களைப் உயிர்ப்பிக்க முற்பட்டுள்ளார். டெண்டுல்கர் திறமைசாலி. நிந்தனைப் பாணி அவர் கையாளும் உத்தி களில் ஒன்று. பி. எல். தேஷ்பாண்டேயின் அமல்தார்

வெற்றியடைந்த நாடகங்களில் ஒன்று. கோகோலின் "கவர்ன்மெண்ட் இன்ஸ்பெக்டர்" என்ற படைப்பின் அற்புதமான தழுவல் இந்நாடகம். ஐரோப்பிய நாடகா சிரியர்களைத் தழுவி நாடகங்களை இயற்றியுள்ளனர் பலர். அவர்களில் மிகச் சிறந்தவர் அனந்த கனேகர். நாடக விஷயத்தில் உண்மையான ஆர்வம் மக்களுக்கு இருக் கின்றது. ஆனால் நாடக மேடையின் வளர்ச்சிக்கு தவிர்க்க முடியாத இடையூறுகள் இருப்பதன் காரணமாக, சுலபமாக பணத்தையோ புகழையோ அடைய விரும்பு வோர் அதை சுய காரியத்திற்காக பயன்படுத்திக் கொள் கிறார்கள்.

மற்ற வடிவங்களைப் பற்றி அதிகம் சொல்லத் தேவை யில்லை. அனுபவத்தை ஒட்டி கட்டுரை எழுதும் முறையை சென்ற தலைமுறையைச் சேர்ந்த புதிய உத்தி யாளர் பாழ்படுத்தி விட்டனர். அது மலர்ச்சி காண வில்லை. ஆனால் கருத்தாழமும் ஓரளவு தனி நபரைப் பற்றிய வாடையும் சேர்ந்த ஒரு கட்டுரை வகை பிரபல மாகிக் கொண்டு வருகிறது. ஸ்ரீமதி இராவதி கார்வே, குமாரி துர்கா பகவத் ஆகியோர் இவ்வகையில் உழைத் திருப்பவர்கள். ஆர். பி. ஜோஷியின் பிரயாண குறிப்பு களின் உரைநடை உண்மையான தன்மையுடன் விளங்கு கிறது. ஹாஸ்யத்தைப் பற்றித் தனியாகச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. புதிய சிறு கதைகளில் அது கலந்து காணப்படுகிறது. எனினும் பி. எல். தேஷ்பாண் டேயின் நையாண்டிச் சித்திரங்களும் நாடோடி நாடகங் களும் குறிப்பிடத்தக்கவை. இலக்கியத் திறனாய்வு விஷ யத்தில் முன் எவரும் செய்திராத அரும் தொண்டை பி. எஸ். மார்தேகர் ஆற்றியுள்ளார். அவர் கலையின் அடிப்படைக்கே செல்லுகிறார். சர்ச்சைகளையும் அவர் கிளப்பியிருக்கிறார். கலைஞனுக்கும் சமூகத்துக்கும் இருக்க வேண்டிய உறவு முறையைப் பற்றிய ரஸமான விவாதம் அவற்றில் ஒன்று. இவ்விஷயமாக அனேகம்

பேர் ஆழந்த கருத்துக்களை வெளியிட்டிருக்கிறார்கள். முன் ஒப்புக்கொள்ளப்பட்ட நிலைகளையும் வகைகளையும் பற்றி மறு பரிசீலனை தேவையென்று கருதுவோர் பலர் உண்டு. ஸ்ரீமதி குசுமாவதி தேஷ்பாண்டே, டபிள்யூ. எல். குல்கர்னி, டி. கே. பெடேகர், ஆகியோர் இவர்களில் சிலர். இந்த சர்ச்சைகள் உயர்ந்த தரமுள்ள வையாக இருப்பதைப் பார்த்தால் எதிர்கால இலக்கிய ஆராய்சிகள் சிறப்பாக இருக்கும் என்ற நம்பிக்கை ஏற்படுகிறது.

# SELECT BIBLIOGRAPHY OF MARATHI LITERATURE

*A Short History of Marathi Literature.*
By M. K. Nadkarni ; Baroda, 1921.

*History of Modern Marathi Literature* (1800–1938).
By G. C. Bhate ; Poona, 1939.

*The Religious Life of India* ; (1) *Ramdas and Ramdasis, Mysore,* 1928 ; *and* (2) *Eknath, A Marathi Bhakta,* 1931.
By W. S. Deming.

*The Bhagat Namdeo of the Sikhs, Bombay,* 1938 ; *Gramatica Marasta, Bombay,* 1954 ; *A Paizas de Christy, Bombay,* 1940. By A. K. Priyolkar.

*The Life and Teaching of Tukaram.*
By J. N. Fraser and J. F. Edwards ; Madras, 1922.

*The Poet Saints of Maharashtra.*
By E. Justien Abbott ; Poona, 1932.

*Ballads of the Marathas.*
By Hary Arbuthnot ; Acworth ; London, 1894.

*The Poems of Tukaram.*
By J. N. Fraser and K. B. Marathe ; Vol. I, 1909 ; Vol. II, 1913 ; Vol. III, 1915.

*Mysticism in Maharashtra.*
By R. D. Ranade ; Poona, 1933.

*The Christian Purana.*
By Thomas Stephens ; Edited by L. K. Saldanha ; Mangalore, 1907.

*Psalms of Maratha Saints.*
By Nicol Macnicol ; 1930.

*Dnyaneswari.*
By Manu Subedar.

*Linguistic Survey of India.*
By G. A. Grierson, Vol. VII, pp. 1–371.

# மலையாள இலக்கியம்

ஸி. குன்ஹன் ராஜா

மேற்குத் தொடர்ச்சி மலைக்கும், அரபிக் கடலுக்கு மிடையே அழகாக அமைந்துள்ள குறுகிய நிலப் பரப்பின் தென் கோடி கேரளம் என அழைக்கப் பெறுவது. அதில் மலையாள மொழியைப் பேசுவோர் 140 லட்சம் பேர் வசிக் கிறார்கள். பண்டைய கிரேக்கர் கேரளத்தை அறிவர். அசோக கல்வெட்டுகளிலும், ராமாயணம், மகாபாரதம், காளிதாசன் நூல்கள் ஆகியவற்றிலும் அதைப் பற்றிய பிரஸ்தாபம் இருக்கிறது. எனினும் கி. பி. 9-ம் நூற்றாண்டு வரை கேரளத்துக்குச் சொந்தமானது என்று இலக்கியம் எதுவும் இருக்கவில்லை. இந்தக் காலத்தைப் பற்றிக் கூடச் சந்தேகமுண்டு. 14-வது நூற்றாண்டில் மலையாளம் முழு வளர்ச்சி கண்ட மொழியாகி விட்டிருப் பதையும் அதில் கணிசமான இலக்கியம் இயற்றப்பட் டிருப்பதையும் அறிகிறோம். லீலா திலகம் என்ற இலக் கணத்தையும் மொழியாராய்ச்சியையும் பற்றி ஒரு நூல் உண்டு. அதில் காணப்படும் மேற்கோள்களின் மூல மாகத்தான் தெரிந்து கொள்ள இயலுகிறது.

தமிழ் வளர்ச்சி கண்ட மத்திய காலத்தில் அதிலிருந்து கிளைத்தது மலையாளம் என்று நிரூபிக்க ஒரு முயற்சி நடந் திருக்கிறது. எனினும் இந்த சித்தாந்தத்துக்கு ஆதார மான ருசுக்கள் இல்லை. இலக்கிய வளமுள்ள மொழியென முதல் தடவையாக மலையாள மொழியைக் காணுகையில் அதற்கென உரிய சொற்களும், இலக்கணமும், சந்தமும்,

கவிதா மரபுகளும் சிறப்புடன் இருக்கப் பார்க்கிறோம். பின்னர் மலையாளத்தில் ஸம்ஸ்கிருதத்தின் செல்வாக்கு அதிகமாயிற்று. ஸம்ஸ்கிருத சந்தங்கள் மேலோங்கின. ஆனால் பெரிய இலக்கியக் கலைஞர்கள் பழைய மலையாள சந்தங்களையே கையாண்டனர். தமது சொல்லாட்சியில் பகுதியாகி விட்டிருந்த ஸம்ஸ்கிருதப் பதங்களை மட்டுமே பயன்படுத்தினர். எனினும் ஸம்ஸ்கிருத சந்தங்களும், சொற்களும் சிலவகை இலக்கியங்களின் மீது விசேஷச் செல்வாக்கு பெற்றிருந்தன. அத்துடன்கூட எளிய, தூய மலையாளக் கவிதை, மலையாள சந்தங்களில் வளர்ச்சி கண்டு வந்தது.

மலையாள இலக்கியத்தில் உயர்ந்த படைப்புக்கள் மிகுந்த காலம் 15-வது நூற்றாண்டில் தொடங்குவதாகக் கூறலாம். அப்போதுதான் சேருஸேரியின் கிருஷ்ண காதா வெளியாயிற்று. சீரிய சிருஷ்டிகளுக்கு முந்தைய காலத்தில் மூன்று தனித்தனி இலக்கிய மரபுகள் இருந்து வந்தன. ஒன்றில் தமிழின் செல்வாக்கு மிகுதியாக இருந்தது. மற்றொன்றில் அதே மாதிரி ஸம்ஸ்கிருத ஆதிக்கம் பெற்றிருந்தது. மூன்றாவது மரபு இலக்கியம் பெரும்பாலும் நாட்டுப் பாடல்கள், மற்ற ஸ்தல பாடல் அமைப்புகள் கொண்டதாக இருந்தது. இந்த மூன்று மரபுகளுமாகச் சேர்ந்து ஓர் சீரிய மொழியை உருவாக்கித் தந்தன. 16-வது நூற்றாண்டில் வாழ்ந்த எழுத்தச்சன் இதற்கு சாசுவதமான ஒரு உருவ அமைப்பை அளித்தார். மலையாள இலக்கியத்தில் எழுத்தச்சன் வகிக்கும் ஸ்தானம் ஹிந்தியில் துளசிதாஸர், தமிழில் கம்பன் வகிப்பதைப் போன்றது. அவர் இயற்றிய அத்யாத்ம ராமாயணம், மகா பாரதம் ஆகியவற்றை பெரும்பாலான மக்கள் பக்தி சிரத்தையுடன் கூடப் படித்து வருகிறார்கள். எழுத்தச்சன் இன்னும் பல நூல்களுக்கும் ஆசிரியர். அவற்றில் எல்லாம் மிக உயர்ந்த இலக்கியச் சிறப்பும் தத்துவ தரிசனமும் காணப்பெறும்.

17-ம் நூற்றுண்டின் மத்தியிலிருந்து சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு மிகப் பரவலாகக் காணப் பெற்றது கதகளி இலக்கியம். அதில் சிறப்படைந்தவர்கள் கோட்டக் கார தம்புரான், கோட்டயம் கேரள வர்மா, உன்னு வாரியர், இராயிம்மன் தம்பி.

இடைக்காலத்தில் சிறந்து விளங்கிய எல்லா முக்கிய மான மலையாள எழுத்தாளரையும் பிரஸ்தாபிப்பது சாத்யமல்ல. ஆனால் எழுத்தச்சனுடன் ஒப்பிடக்கூடிய மற்றொரு மாபெரும் இலக்கியக் கர்த்தாவை சொல்லத்தான் வேண்டும். அவர்தான் 18-ம் நூற்றுண்டின் முற்பகுதி யில் வாழ்ந்த குஞ்சன் நம்பியார். துள்ளல் பாட்டு என்ற வகையைத் தோற்றுவித்து வளர்த்து, கேரளாவின் முதல் மக்கள் - கவிஞராக திகழ்ந்தவர் அவர். புராணங் களிலிருந்து அவர் தமது கதைகளுக்கு விஷயங்களை எடுத்துக் கொண்டார். ஆனால் சமுதாயத்தை நையாண்டி செய்து குறை நிலைகளைப் புலப்படுத்தும் படைப்புகளுக்கு அவை முனைகளாகப் பயன்பட்டன. புராணங்களை கேரள நிலைக்களத்தில் வைத்து எழுதினர். எளிய பேச்சு மொழியை அவர் கையாண்டார். எனினும் அவரது கவிதையில் சிறப்புக் கவிதைகளின் கண்ணிய மும், இலக்கிய முழுமையும் முதல் நூலின் உண்மை உணர்ச்சியை பிரதிபலிக்கும் தன்மையும் இருப்பதைக் காணலாம்.

## 19-ம் நூற்றுண்டு

கௌடில்யரின் புகழ் பெற்ற அர்த்த சாஸ்திரத்தைப் பற்றி ஒரு வியாக்யானம் உரைநடையில் 14-ம் நூற்றுண் டிலேயே இயற்றப்பட்டிருந்தது. ஆனால் இக்காலத்தில் வழங்கும் நவீன உரைநடையானது 19-ம் நூற்றுண்டில் ஓர் உருவாக அமைந்தது. கிறிஸ்துவ மிஷனரிகளின் பணியை, இங்கே நன்றியறிதலுடன் நினைத்துக் கொள்ள வேண்டும். விரிவான கல்விக்கும் சமயம் அறநெறி

சம்பந்தமுள்ள நூல்களின் வெளியீட்டிற்கும் மலையாளத்தில் அவர்கள்தாம் உண்மையில் வழிகாட்டிகளாக இருந்தனர்.

19-ம் நூற்றுண்டின் மத்தியில் புதிய கல்வியின் செல்வாக்கு கேரளாவெங்கும் எதிரொலித்தது. புதிய பள்ளிக்கூடங்களுக்கு பலவகையான பாடப் புத்தகங்கள் தேவைப்பட்டன. ஸம்ஸ்கிருதத்திலிருந்து பிற நூல்களை மொழி பெயர்க்கும் இயக்கம் இதன் விளைவாகத் தோன்றியது. அசல் மலையாளக் கவிதையும் பொதுஜன ரஞ்சிதத்தை அடிப்படையாகக் கொண்டிருந்த நிலை விலகி, ஸம்ஸ்கிருதத்தின் காவியப் பாணியை பின்பற்றும் இலக்கியப் போக்கில் கொண்டு விட்டது. ஓரளவு நெளிவு சுளிவு அற்ற தன்மையும், சம்பிரதாய நிர்ப்பந்தங்களும் இருந்தபோதிலும் இந்தப் போக்கைப் பிரபலப்படுத்திய கேரள வர்மா (1915-ல் காலமானுர்) மயூரசந்தேசம் உட்பட சில முன்னணி நூல்களை இயற்றியுள்ளார்.

இந்தப் போக்கு உருப்பெற்று வருகையிலேயே ஒரு புதிய மரபும் செல்வாக்கும் பெறத் தொடங்கியது. மக்கள் தமது வாழ்வில் கையாளும் சொற்களைக் கொண்டு புதிய இலக்கியப் படைப்புக்களை அமைக்கும் போக்குதான் அதன் பிரதான அம்சம். இந்த இயக்கத்துக்குத் தலைவர்களாக இருப்பவர்கள் கொடுங்கள்ளூர் ராஜாக்களும், வெண்மணி நம்பூதிரிபாடும். கொடுங்கள்ளூர் குன்னி குட்டன் தம்புரானும், அவரது சகோதரரும் சிறந்த ஸ்ம்ஸ்கிருத புலமையுள்ளவர்கள். ஆனல் தாம் இயற்றிய மலையாள நூல்களில் அவர்கள் ஸம்ஸ்கிருத இலக்கிய அமைப்பை புகுத்த முயலவே இல்லை. கேரள வர்மா செய்தது போல வெண்மணி இன்னும் ஒரு படி முன்னேறிச் சென்று மக்கள் அன்றுடம் பேசும் சொற்களைக் கொண்டு கவிதைகளைப் புனைந்தார். இதன் மூலம் மலையாள இலக்கியம் விறுவிறுப்பும், நேராக கவர்ச்சிக்கும் தன்மையும் பெற்றது. அவர்களது அசல் நூல்களின் இலக்கியத் தரம்

அவ்வளவு உயர்ந்ததாக இல்லையாயினும் மலையாளத்தில் தற்கால எழுத்தின் முன்னேடிகள் என்று அவர்களைக் கருதலாம்.

உரைநடையிலும் இதேபோன்ற ஒரு போக்குக் காணப் பெறுகிறது. 15, 16-வது நூற்றுண்டுகளில் உருவான மலையாள உரைநடையானது அக்காலத்துக்கு ஏற்ப ஸம்ஸ்கிருதச் சொல்லின் அமைப்புக்கள் நிறைந்த தாக இருந்தது. அதிலும் வழிகாட்டியாக இருந்தவர் கேரள வர்மா. அவரது சைலியில் செயற்கைத் தன்மை யும் அடுக்கு மொழிப் பிரயோகமும் முக்கியமாகக் காணப் பெற்றன. ஆனுல் இதைப் பின்பற்றியவர்கள் அதிக மில்லை. திருவனந்தபுரம் அல்லது தென் பிராந்திய மரபினர் எனக் கருதப் படுவோர் ஸம்ஸ்கிருதச் சொற்களை எடுத்துக் கொண்டதோடு, அவற்றை பிரயோகத் தூய்மையோடு இலக்கிய வகையில் பின்பற்ற வேண்டு மென்றும் வற்புறுத்தினர். வளர்ந்து வந்த இலக்கியத்தில் இது இயற்கைக்கு மாறுன அம்சமாக அமைந்தது.

இந்த நடை பொதுஜன ரஞ்சிதமாகவே இல்லை. உரைநடையை உருவாக்கும் பொறுப்பு பத்திரிகைகளுக் கும், சஞ்சிகைகளுக்கும் ஏற்பட்டது. இந்தப் பழைய நடையைக் கையாள்வது சிரமமாக இருந்தது. தவிர மக்களுக்குப் புரியும் உரைநடையை எடுத்தாள்வதில் வல்லவர் ஒருவர் உதித்து விட்டார். இந்துலேகா என்ற புகழ் வாய்ந்த நாவலை சந்துமேனன் இயற்றினுர். சிறப் பிலக்கணப் பரம்பரையினரின் சித்தாந்தங்களை அறை கூவி அழைத்து, உயர்ந்த ரீதியுடன் கூடிய இலக்கிய உரை நடையை மக்களின் அன்ருடச் சொல்லாட்சியிலிருந்து எடுத்து, உருவாக்க இயலுமென்று அவர் ருசுப்பித்துக் காண்பித்தார்.

உரைநடை, கவிதை ஆகிய இரண்டிலுமே மையமான ஒரு பாதையைக் கண்டு பிடித்து, அவசியமான ஒரு அஸ்திவாரத்தை அமைத்து, அபிவிருத்திக்கு வழி

வகுத்துக் கொடுத்த பெரியார் ஏ. ஆர். ராஜராஜ வர்மா. அவர் இலக்கண வல்லுனர், கவி, திறனாய்வு நிபுணர். அவர் இயற்றியுள்ள 'கேரள பாணினீயம்' என்ற நூல் மலையாளத்தில் அதிகாரபூர்வமான, முதல் இலக்கண நூலாக அமைந்தது. மொழியை ஒரு நிர்ணய நிலைக்கு அவர் கொண்டு வந்தார் என்று சொல்லலாம். கேரள வர்மா கொண்டு வந்த ஸம்ஸ்கிருத மித்தியையும், வெண் மணி முயன்று உருவாக்கிய பேச்சு மொழியையும் அவர் நிராகரித்தார். முன்னேற்பாட்டுக் காலம் என இதைக் குறிப்பிடலாம். இது 1915-ம் ஆண்டுடன் முடிவுற்றது.

இந்தக் காலத்தில் வெளிவந்த அசல் நூல்களின் தரம் உயர்ந்ததாக இல்லை, ஆனால் எல்லாத் துறைகளிலும் சுறுசுறுப்பு மிக்கதாகக் காணப்பெற்றது. ஸம்ஸ்கிருதத் திலும், ஆங்கிலத்திலுமிருந்து சிறந்த நூல்கள் விரிவாக மொழி பெயர்க்கப்பட்டு மக்களுக்கு வழங்கப் பெற்றன. சுருக்கப் பெறாத முழு நூலாகவே மகத்தான இதிகாசங் களும், நாடகங்களும், குமாரசம்பவம் போன்ற காவியங் களும் மலையாளத்தில் மொழி பெயர்க்கப்பட்டன. ஆங்கி லத்திலிருந்த நூல்களையும் இக்காலத்தார் அலட்சியம் செய்யவில்லை. ஆனால் அவர்களுடைய மொழி பெயர்ப் பின் தரம் அவ்வளவு உயர்ந்ததாக இல்லை. சில குறிப் பிடத்தக்க நாவல்களும் இக்காலத்தில் தோன்றின. சந்து மேனன் இயற்றிய இந்துலேகா, சாரதா, வி. வி. ராமன் பிள்ளை இயற்றிய மார்த்தாண்ட வர்மா ஆகியவை குறிப் பிடத்தக்கவை. நாடகத் துறையில் வழி வழி முறைகளைப் பின்பற்றி நவீன விஷயங்களை எடுத்தாள முற்பட்டனர். கொச்சுன்னி தம்புரானின் கல்யாணி நாடகம் அக்காலத்து சமுதாய வாழ்க்கையைப் பற்றியது. மாவேலிக்காரச் கொச்சியப்பன் தரகன் இயற்றிய மேரியம்மன் நாடகம் கிருஸ்துவ சமுதாய வாழ்வை பிரதிபலிக்கிறது. பிற வகை இலக்கியப் படைப்புக்களும் தோன்றின. நகைச் சுவையுடன் கூடிய சிறிய கட்டுரை தோன்றலாயிற்று.

குஞ்சிராமன் நாயனர், கேஸரி என்ற புனைப் பெயருடன் இந்த முறையை முதன் முதலாகக் கையாண்டு பிரபலப் படுத்தினர். பழைய பேராசிரியர்களின் நூல்களையும், அக்காலத்துக் கவிஞர்களின் படைப்புக்களையும் சிறந்த இலக்கிய வகையில் திறனாய்வு செய்து மேலே நாட்டு நியதிகளைக் கொண்டு பார்க்கும் முறைகளை பி. கே. நாராயண பிள்ளையும், அனந்த பாயும் வெற்றிகரமாகக் கையாண்டனர்.

மொத்தத்தில் இந்தக் காலம் முன்னேற்பாட்டுக் காலமாகவே அமைந்தது எனக் கூறலாம். மொழி வளத்தையும், நெகிழ்ச்சியையும் இது அளித்தது. வளர்ச்சிக்கு வேண்டிய அவசியமான நிலைமைகளையும் அது தோற்றுவித்தது. புதிய இலக்கிய வடிவங்களையும், உத்திகளையும் கருத்துக்களையும் பிரபலப்படுத்தி, இலக்கியத் துறையில் விசேஷ சுறுசுறுப்பு காண்பிக்கப் பெறுவதற்கு அது ஊக்கம் அளித்தது. இக்காலத்தில் ஏராளமாக படைக்கப் பெற்ற நூல்களில், மொழி பெயர்க்கப்பட்ட நூல்களைத் தவிர, மற்றவை நிலைத்து நிற்கக்கூடிய தன்மை படைத்தவையல்ல. ரகு வம்சம், நைஷதம் போன்ற மகா காவியங்களை மலையாளத்தில் வடித்துத் தருவதில் அக்காலத்து கவி ரத்னங்கள் தமது புலமையையும், கவிதா சக்தியையும் காட்டினர். ஆனல் எதிர்காலத்தில் அவற்றை இலக்கிய விசித்திர சிருஷ்டிகள் என்றுதான் மதிப்பார்கள். எனினும் ஒரு கம்பீரமான முயற்சி, மொழியை உருவாக்கும் சக்தி வாய்ந்த படைப்பு, என்று அவற்றைக் குறிப்பிட வேண்டும்.

### தற்காலம்

மக்களின் இலக்கியச் சுவையில் புரட்சிகரமான மாறுதல் ஏற்பட்டு வருவதை முதலாவதாகப் புலப்படுத்தியது குமரன் ஆசானின் 'நளினி'. அது ஒரு சிறியதோர் கவிதை. அதன் விஷயம் காதல். ஆனல் அது வழங்கப்

பெற்ற விதத்தில் வேற்றுமை உண்டு. வாழ்க்கையின் உயர் நிலையை எட்டிப் பிடித்து தூய்மையை அடைந்த தன் மூலம் காதலுக்குப் புனிதத்தன்மை அளித்துள்ளார். அவரது திறமையும் மதி நுட்பமும் குறிப்பிடத்தக்கது. பழங்காலத்து பயனற்ற சிருங்கார பாணியிலிருந்து விலகி அவர் கவிதைகளை இயற்றினார். பழைய பாணி யானது காதல் ரஸத்தையும் நாயக–நாயகி பாவங்களையும் தன்மைகளையும் பற்றியது. கேரள வர்மா பிரபலப்படுத் திய செழுமை மிகுந்த சொல்லாட்சிப் பரம்பரையை விட்டு ஆசான் விலகினார். எதையும் அவர் நேரிடையாக, நாசூக்காக கையாண்டார். அதில் வெளித் தோற்றத்தை விட கருத்துக்களின் ஆழமே மேலோங்கிக் காணப் பட்டது.

புத்துணர்வின் முதல் தோற்றுவாய் ‘ நளினி ’ என்று சொல்லலாம். ஆனால் பழைய கம்பீரமான நடை மாறி, மலேயாள இலக்கியம் நவீனத் தன்மை பெற சில ஆண்டு கள் பிடித்தது. இந்த இலக்கிய இயக்கத்தின் முக்கிய கர்த்தா வள்ளத்தோல். ‘ஒரு சித்திரம்’ என்ற நூலை 1915-ல் அவர் வெளியிட்டார். அதுவே புதுமைக் கவிதை யின் பிரவேசமாகவும் விளங்கியது. வள்ளத்தோல் பழைய சிறப்பிலக்கியப் பரம்பரையில் புகழ் எய்திய கவிஞர். ஆனால் புது யுகத்தின் உணர்ச்சியானது அவ ரையும் மாற்றியது. வால்மீகியின் ராமாயணத்தை சுலோகம் சுலோகமாக முன்னமேயே மொழிபெயர்த்து அவர் வெளியிட்டிருந்தார். அக்காலத்துப் பெருமைக் கேற்ப ‘சித்திரயோகம்’ என்ற ஒரு மகா காவ்யத்தை 18 ஸர்க்கங்களுடன் இயற்றியிருந்தார். அவரை மாற்றி யது அப்போது நாடு பூராவுமே ஆட்சி கொண்ட மகத் தான தேசிய இயக்கம். முதல் உலக யுத்தமானது ஒரு தேசிய மறுமலர்ச்சிக்குக் காரணமாயிற்று. எல்லா இடங் களிலும் மக்கள் புது வாழ்வை நாடுகின்றனர். இந்தப் புது நாட்டத்தை விளக்கிக் கூறுபவராக முன் வந்தார்

வள்ளத்தோல். அவர் தேசியத்தின் முரசொலியாகப் பணியாற்றினர். குறுகிய விலக்கு மனப்பான்மை அவரிடம் காணப்படவில்லை. ஒரு புதிய தேசியத்தை சிறப்பும், 'உயர் நிலையும், லட்சியத் தன்மையும் படைத்ததாக உருவகப்படுத்த அவர் பாடுபட்டார். சம்பிரதாயமான ஸம்ஸ்கிருத சந்தங்களை அவரே முன்னால் கையாண்டவர். ஆனால் பிறகு அவற்றைக் கைவிட்டு பழைய மலையாளக் கவிஞர்களின் மரபுகளுக்குத் திரும்பினர். பத்து ஆண்டுகளுக்கு அவரது கவிதா மேதை பாடல்களாகப் புனைந்து தள்ளியது. உணர்ச்சி மிகுதியும், வேகமும் காணப்பெற்ற போதிலும், அவற்றின் இலக்கிய வடிவம் முழுமையுடன் காணப் பெற்றது. தேசிய முக்கியத்துவமுள்ள எல்லா விஷயங்களையும் பற்றி அவர் பாடினர். ஆனால் அவர் தேசியக் கவிஞர் என்றும் சமுதாயத்திலுள்ள அதிருப்தியை வெளிப்படுத்தும் பாடகர் என்றும் கருதப் பெறுவதற்கில்லை. அவரது மிகச் சிறந்த படைப்பான 'மக்தலான மாரியம்'* வெளியானது இக்காலத்தில்தான். மேரி மாக்டலினது வாழ்வையும், மாற்றத்தையும் பற்றியது இந்த நூல். கிறிஸ்து மகானின் தெய்வீக சாந்தி நிறைந்த சூழ்நிலையில் வைத்து இந்தப் படைப்பு காணப்படுகின்றது.

புதிய இயக்கத்துக்கு நடு நாயகர்களாக இருப்பவர் மூவர். வள்ளத்தோல், குமரன் ஆசான், உள்ளூர் பரமேசுவர ஐயர் ஆகியோரே அவர்கள். உள்ளூர் பரமேசுவரய்யர் புலமை மிகுதியாக உள்ள கீர்த்திமான். தொடக்கத்தில் கேரள வர்மாவின் இலக்கிய உத்திகளைக் கையாண்டு 'உமா கேரளம்' என்ற சிறப்புப் படைத்த மகா காவியத்தை அவர் இயற்றியுள்ளார். பழைய தத்துவத்தைப் பற்றிக் கொண்டார். ஆனால் இந்த இலக்கிய உற்சாகப்

---

* இந்நூலைப் பிற இந்திய மொழிகளில் மொழிபெயர்க்க சாகித்திய அக்காதெமி ஏற்பாடு செய்திருக்கிறது.

பெருக்கு அவரையும் இழுத்துச் சென்று விட்டது. சமுதாய பிரச்னைகளில் பழைய உயர்நிலைகள் திரும்ப வேண்டுமென்று அவர் நினைப்பவர். எனவே காலப் போக்கின் உணர்ச்சி அவரை ஆட்கொள்ளவில்லை. எப்போதுமே அவர் பின் நோக்கியே பார்த்துக் கொண்டிருந்தார். 'பிங்களா' என்பது அவரது பிரதான படைப்புகளில் ஒன்று. மேரி மாக்டலின் போல திருந்தி நல்வழிப்பட்ட ஒரு தாஸியின் கதை அது. 'கர்ணபூஷணம்' என்பது அவரது மற்றொரு படைப்பு. இரண்டுமே பெருமை படைத்தவை. அவர் கையாண்ட நடை சொற்களின் ஒலிச் சிறப்பு மிகுதியாகக் கொண்டது, ஸம்ஸ்கிருத சைலியில் சமாஸங்கள் நிறைந்தது. எனவே பாமர மக்களிடையே வெகுவாக அது பிரபலமடையவில்லை.

குமரன் ஆசான் வேறு வழியினர். வள்ளத்தோலை மிஞ்சி, புதிய இயக்கத்தால் உதவி பெற்று, விறுவிறுப்புடன், வீர்யத்துடன் எழுதி மலையாள இலக்கியத்தில் மிக உயர்ந்த பதவியை அவர் எய்தினர். சம்பிரதாய வழியை விட்டு பிரக்ஞையுடன் கூட விலகிச் செல்லும் அவரது போக்கை 'வீண பூவு' (விழுந்த பூ) என்ற அவரது முதல் கவிதையிலேயே காணலாம். 'நளினி', 'லீலா' என்பவை அவரது ஆரம்ப நூல்கள். வெற்றி காணுத காதல் பெற்றவை அவை. அவற்றிலும் உயர்ந்த இலக்கியத் திறனைக் காணலாம். ஆனல் சாமானிய வாழ்க்கையை விஷயமாகக் கொண்டு எழுத முற்பட்டபோதுதான் அவரது மேதையானது முழு மலர்ச்சி கண்டது. 'துரவஸ்தா' 'சண்டாள பிக்ஷுகி', 'கருணு' ஆகியவை குமரன் ஆசானின் மூன்று சிறந்த படைப்புகள். முதல் இரண்டும் சமூக விருப்பு வெறுப்புகளின் காரணமாக நெடு நாட்கள் துயரப்பட்டு வந்த ஒரு சமுதாயத்தின் வேதனை நிறைந்த குரலாக அமைந்தன. துரவஸ்தா ஒரு பிராம்மணப் பெண்ணின் வாழ்வைப் பற்றியது. மாப்பிள்ளைக் கலகத்தின்போது தன் வீடு வாயில்களையும்,

உற்ருர் உறவினர்களையும் இழந்து தீண்டப் பெருத ஒருவனது மனைவியாகிருள். அது உள்ளத்தைத் தொடக்கூடிய அழகுணர்ச்சி படைத்தது. உண்மையின் உணர்ச்சி ததும்பியது. அவரது மற்ருெரு கவிதை சிந்தாவிஷ்டயாய சீதா என்பது. அது மாதர் குலத்தைப் பற்றிய மென்மையான ஆராய்ச்சி. அதில் சீதை வெளிப்படுத்தும் உண்மையான மனித உணர்ச்சிகளை வழி வழி வந்தவர்கள் குறை கூறியிருக்கிருர்கள். ஆனல் கவிதை என்ற வகையில் அது உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தது. அவரது பிரதான சாதனை இன்றும் வாழ்ந்திருக்கக் கூடிய குணசித்திர படைப்புக்களை படைத்திருப்பதுதான். அவரது சைலி சில சமயம் கரடு முரடாக இருக்கும். ஆனல் குணசித்திர அமைப்பில் முதல் இருவரையும் விட அவர் நிச்சயமாக மேம்பட்டவர்.

இந்த மூன்று பேருமாகச் சேர்ந்து மலையாளக் கவிதையை அதன் இப்போதைய அந்தஸ்துக்கு உயர்த்தியிருக்கிருர்கள். இக்காலத்தில் சிறப்பாக இருந்த இலக்கிய வல்லுனர்களைப் பற்றி இங்கு பிரஸ்தாபிக்கத்தான் முடியும். கற்பனைச் சிறப்பு வாய்ந்த படைப்புக்களில் திளைத்தவர்களிடையே வி. வி. பாலகிருஷ்ண பணிக்கரைக் குறிப்பிட வேண்டும். அவர் அகால மரணமடைந்தார். எனினும் தனது தலைமுறையினரிடையே அவருக்கிருந்த செல்வாக்கு மிகுதியானது. நளப்பட் நாராயண மேனன் அதிகம் எழுதாத கவிஞர். ஆனல் அவரது சிருஷ்டிகளில் சில, குறிப்பாக 'கண்ணு நீர்த்துள்ளி' என்பது அவருடைய மனைவியின் மரணத்தைப் பற்றிய இரங்கற்பா. அது சாசுவதமாக நிலைத்திருக்கக் கூடிய தன்மை பெற்றது. அதன் ஆழ்ந்த உண்மையுணர்ச்சியின் வேகத்தை அதில் காணலாம். வாழ்க்கையின் பேருண்மைகளை அதில் அவர் புகுத்தியிருக்கிருர். ஆழ்ந்த சிந்தனையும் அவரது பாடல்களில் காணப் பெறும். சக்ரவாளம் (அடிவானம்), ஒரு மணல்தாரி (ஒரு துளி மணல்) என்

பவை அவர் யுகத்தவர்களுக்கான கவிஞர், பாமரருக்கான கவிஞர் அல்ல என்பதைக் காண்பிக்கிறது.

சிறு வயதில் காலமாகிவிட்ட, குறிப்பிடத்தக்க மற்றொருவர் செங்கம்புழா கிருஷ்ண பிள்ளை. அவரது பாடல்கள் இசை நயம் மிகுந்தவையாக இருக்கும். மேலும் அவரது கவிதையில் சோகச் சாயை படர்ந்திருக்கும். இக் காரணங்களால் தம் வாழ்நாளிலேயே அவர் பெரும் புகழ் அடைந்திருந்தார். அவருடைய பிரதான படைப்பு 'ரமணன்' என்ற கிராமிய இரங்கற்பா. இடப்பள்ளி ராகவன் பிள்ளை என்ற அவரது நண்பரின் பரிதாபகரமான மரணத்தைப் பற்றிய பாடல் அது. ராகவன் பிள்ளை திறனும் நம்பிக்கையும் மிகுந்த கவிஞராக இருந்தவர். 'ரமணனை'க் கவிஞர் எழுதியபோது சுமார் 20 வயது இருக்கும். அது மனதைக் கவரக்கூடிய வனப்பு மிகுந்தது. அதன் கீதம் காற்றில் மிதந்து வரும் தன்மையுடையது, இவர்களுடன் ஒன்றி நிற்பது. அதைப் படிப்போர் நண்பனை இழந்து பரிதவிக்கும் உணர்ச்சியைப் பெறுவர். வெறும் சொற்கள் மட்டும் இச் சக்தி வாய்ந்தவையல்ல. செங்கம்புழா நிறைய எழுதினார். இளம் தலைமுறையினரிடையே அவருடைய நூல்களுக்கு விசேஷ செல்வாக்கு இருந்தது. அவரது நண்பர் இடப்பள்ளி அதிகம் எழுதவில்லையெனினும் சில உயர்ந்த ரகப் பாடல்களை இயற்றியுள்ளார். எதிர்காலத்தில் சிரத்தையுடன் அவை படிக்கப் பெறலாம்.

தற்கால எழுத்தாளரில் பல்வேறு விஷயங்களை எடுத்துக் கையாளும் திறம் படைத்தவர்களில் சர்தார் கே. எம். பணிக்கர் ஒருவர். அவரை ராஜதந்திரியாகவும், சரித்திராசிரியராகவும், ஆங்கிலத்தில் சிறப்பாக எழுதுபவராகவும் வெளி உலகம் அறியும். ஆனால் அவர் மலையாளத்தில் முன்னணி எழுத்தாளர்களில் ஒருவர் என்பதை கேரளத்துக்கு வெளியே வெகு சிலரே அறிவர். அவர் கவிஞர், நாடகாசிரியர், நாவலாசிரியர், திறனாய்வாளர்.

அவர் வளமைப்படுத்தாத இலக்கியக் கிளையே இல்லை யென்று கூறலாம். 'சிந்தா தரங்கிணி', 'பாங்கிபரிணயம்', 'அம்பாபாலி' ஆகியவை அவரது கவிதா நூல்களில் குறிப்பிட வேண்டியவை. குமார சம்பவம், இனப் பக்ஷி கள், பதிஞ்சரேமுரி ஆகியவை அவர் செய்யுளாக மொழி பெயர்த்த நாடக நூல்களில் சில. பீஷ்மர், மண்டோ தரி, துருவஸ்வாமினி ஆகியவை கம்பீர நடையில் புனை யப்பெற்ற நாடகங்கள். அவரது சைலி எளிதானது. பெருமையுடன் கூடியது. ஸம்ஸ்கிருத, திராவிடச் சந்தங்கள் இரண்டிலும் நல்ல பழக்கம் உண்டு. மலையா ளத்தில் அவரது உரைநடை நூல்களில் எல்லோரும் நன்கு அறிந்தவை அவரது சுயசரிதையும் கேரள சிம்மம்* என்ற சரித்திர நாவலும். அவர் மதிநுட்பம் மிகுந்தவர். பரந்த டண்பினர். சரித்திர திருஷ்டி படைத்தவர். இந்தக் குணங்கள் அனைத்தையும் அவரது நூல்களில் காணலாம்.

தற்காலத்தில் தோன்றிய கவிஞர்களில் முதன்மை யாக விளங்குபவர் ஜி. சங்கர குரூப். அவரது இலக்கியச் சக்தி சமீபத்தில் முழுமை கண்டது. சிறிய இசைக் கவிதைகளை இயற்றியதுடன், உட்பொருள் வைத்து எழுதும் உத்தியை முக்கியமாகக் கையாண்டு, இன்றைய கவிஞர்களிடையே உயர்ந்த ஸ்தானத்தை அவர் அடைந் திருக்கிறார். அவரது நூல்கள் ரத்தினங்களைப் போன்று சிறப்பாக பட்டை தீட்டப்பெற்றவை. பிறருக்கும், அவ ருக்கும் உள்ள பிரதான வேற்றுமை, ரத்தினச் சோபை யுடன் விளங்கும் அவரது சொற்றொடர் வரிசைப் பிரயோ கந்தான். தமது கருத்துக்களை உட்பொருள் செறிவு வைத்து விரிவாகப் பயன்படுத்தும் தன்மையும் அவருக்கு உரித்தானது. இளம் தலைமுறைக் கவிஞர்களின் தலைவராக

---

* சாகித்திய அக்காதெமி ஆதரவில் சமீபத்தில் இதன் ஹிந்தி மொழிபெயர்ப்பு வெளியாயிற்று.

விளங்குகிறார். அவர்களது கருத்துக்களுக்கு, சிந்தனை களுக்கு ஆக்கம் தருகிறார். இன்றைய உலகின் சமுதாய பொருளாதார ஆற்றல்கள் அவரைப் பெரிதும் கவர்ந்துள் ளன. அவரது கவிதையில் இந்த இளம் வட்டத்தின் முற்போக்கை பிரதானமாகக் காணலாம். வள்ளத்தோலைப் போல அவரது மனப்பான்மையில் ஓர் இரட்டைத்தன்மை தென்படுகிறது. சில வகைகளில் அவர் வைதிகராகத் தென்படுகிறார். அவரது பண்பாட்டில் இந்தியத் தன்மை யும் மரபின் தொடர்பும் அழுத்தமாகக் கூறப்படுகின்றன. ஆனால் அதே சமயத்தில் இடதுசாரி சமுதாயக் கருத்துக் கள் ஓரளவு அவரது சிந்தனையை உருவாக்கியுள்ளன.

சற்று முந்தைய காலத்து கவிஞர்கள் சிலரைக் குறிப் பிட வேண்டும். குந்தூர் நாராயண மேனன் கதைப் பாடலை ஒத்த ஒரு புதுவகைக் கவிதையை பிரபலப்படுத் தினார். இந்தக் கதைகள் பெரும்பாலும் நாட்டுப் பாடல் களிலிருந்து சேகரமானவை. ஸம்ஸ்கிருதப் பதங்களை யெல்லாம் அவற்றிலிருந்து நீக்கி கலப்பு இல்லாத பச்சை மலையாளத்தில் எழுதியதுதான் அவர் செய்த பெரும் சேவை. கோமப்பன் என்பது அவரது மிகச் சிறந்த நூல். அது விசேஷ வெற்றி கண்டது. அதில் சொற் சிலம்பம் நிறைய இருக்கின்றது. அதே சமயத்தில் ஒரு ஸம்ஸ்கிருதச் சொல்லைக்கூட உபயோகியாமல் கதை சொல்லும் விதத்தின் காரணமாகத் தமது செய்யுள்களில் ஒரு புதுமையை, சக்தியை, இலக்கிய வனப்பை அவர் அளிக்க முடிந்தது. கட்டக்கயத்தில் செரியன் மாப்பிள்ளை பழைய மரபினரான மற்றொரு கவி. அவரது மகா காவியம் ஸ்ரீ ஏசு விஜயம், (ஏசு மகானின் வெற்றி) எனப் படுவது. பழைய வேதம் (Old Testament) என்பதில் உள்ள முக்கிய சம்பவங்களுடன் கிறிஸ்து பிரானின் வாழ்க்கை வரலாறுகளைச் சேர்த்து தயாரிக்கப்பட்டது. பழைய மரபுகளில் சேர்ந்தவரும், இன்னும் சுறுசுறுப் பாக இலக்கியங்களைப் படைத்து வருபவருமான வடக்

கும்குர் ராஜராஜ வர்மா பல மகா காவியங்களை இயற்றி யுள்ளார். அவற்றில் மிக முக்கியமானது ராகவாப்யுதயம் என்பது. அவரது கவிதா சக்தியின் உச்சநிலையை அதில் காணலாம்.

எக்காலத்திலுமே மலையாளத்தில் பெண்கள் எழுதி வந்திருக்கிருர்கள். சற்று முந்தைய காலத்தில், அதாவது 1915-க்கு முன், தோட்டக்கட்டு இக்காவு அம்மா, சுபத்ரா அர்ஜுனு என்ற நாடகத்தை உரைநடையும் செய்யுளும் கலந்த உயர்தர இலக்கியமாக உருவாக்கினுர். அதனுல் கியாதி கிடைத்தது. சமீப காலத்தவரில் நலப்பட்டு பால மணியம்மா, லலிதாம்பிகா அந்தர்ஜனம், மேரி ஜான் தோட்டம், முத்துக்குளம் பார்வதியம்மா ஆகியோர் குறிப் பிடத்தக்கவர். பாலமணியம்மா தாய்மையின் கவி என்று கூறக்கூடியவர். அவரது நூல்களில் உணர்ச்சிப் பெருக்கு மிகுந்திருக்கும். அதே சமயத்தில் நடை, அமைப்பு இரண்டிலும் அவர் விசேஷ கவனம் செலுத்து வார். அந்தந்தச் சொல் இடத்திற்கேற்ப சரியாக விழும். லலிதாம்பிகா அந்தர்ஜனம் சிறுகதை எழுத்தாளர் என்று தான் மக்கள் நன்கு அறிவர். ஆனுல் அவர் புகழ்பெற்ற கவிஞர்கூட. மேரி ஜான் தோட்டம் இலக்கிய உலகில் சிறிது காலம் சஞ்சரித்த பிறகு, கன்னியா மடத்திற்குச் சென்றுவிட்டார். அவரது மனம் சமரஸ தத்துவ விசா ரங்களில் வேறு பற்றுதல் கொண்டிருந்ததென்பதை அவரது எழுத்து பிரதிபலிக்கிறது. கவிதாராமம் என்ற அவரது பாட்டுத் தொகுப்பில், இருக்கும் ஆத்மாவின் தனி மொழி என்ற பாடல் நடையில் சிறிது வளர்ச்சி குறைவுள்ளதாக இருந்தபோதிலும், அவர் எவ்வளவு உயர்ந்த சிந்தனையாளர் என்பதைக் காட்டுகிறது.

## புதிய திருப்பம்

1936-ம் ஆண்டின் சமீபத்தில் மலையாளக் கவிதை யில் ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டது. தேசிய இயக்கம்

அளித்த ஆரம்ப வேகம் தணிந்து, இடதுசாரி ராஜியத்தின் செல்வாக்கு மிகுந்து, இளங்கவிஞர்கள் தோன்றிய காலம் இது. முந்தைய கவிஞர்களின் படைப்புகளில் உண்மை ஒளியும் தவறான உணர்ச்சிப் பெருக்கும் இருந்ததாகச் சொல்லி அந்தத் திரையைக் கிழித்த திறனாய்வாளரின் சக்திவாய்ந்த ஆதரவு இவர்களுக்குக் கிடைத்தது. அந்த இலக்கியங்கள் எல்லாம் பிற்போக்குத்தன்மை வாய்ந்தவை என்று நேரிடையாகத் தாக்கினர். புரோகமான வாதம் (முற்போக்குப் பாணி) என்று பின்னர் வழங்கப்பெற்ற போக்கை இந்தத் திருப்பம் தோற்றுவித்தது. திறனாய்வுத் துறையில் முற்போக்காளனின் பின்பலமாக இருப்பவர்கள் ஏ பாலகிருஷ்ண பிள்ளை, ஜோஸப் முண்டஸேரி, எம். பி. பால் ஆகியோர். இந்த வழியினர் புனைந்துள்ள கவிதைகள் தரத்தில் உயர்ந்தவையல்ல. இவர்கள் முக்கியமாக வெற்றி கண்டது சிறு கதை, நாவல் துறைகளில் தான். ஆனால் இப்போக்கினர் பிற முக்கிய எழுத்தாளரின் மனப்பான்மையில் புதுமையைத் தோற்றுவிக்கும் செல்வாக்கு உள்ளவர்களாக விளங்கினர் என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். வள்ளத்தோல், சங்கர குரூப் ஆகியோரின் விஷயத்தில் முற்போக்குக் கருத்துக்களின் செல்வாக்கு விசேஷமாகக் காணப்பெறுகிறது. கலப்பற்ற முற்போக்காளர் சிலர் திறன் மிகுந்த கவிஞர்களையும் தோற்றுவித்தனர். அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் என். வி. கிருஷ்ண வாரியர், அக்கிட்டாம், ஒலப்பமன்ன, வயலார் ராமவர்மா, பி. பாஸ்கரன், கேதமங்கலம் பாப்புகுட்டி, இடசேரி கோவிந்தன் நாயர், ஓ. என். வி. குரூப், அனுஜன் ஆகியோர். சென்ற 20 ஆண்டுகளில் முற்போக்கு கருத்துக்களால் பாதிக்கப்பெறாத கவிஞனே இல்லையென்று கூறலாம். ஆயினும் மலையாளக் கவிதை மரபு தனது பழம் போக்கினின்று அதிகமாக விலகவில்லை. இளவட்டத்தினரான கவிஞர்களில் முக்கியமானவர்கள் வய்லோப்பள்ளி ஸ்ரீதர மேனன், வெண்ணிக்குலம் கோபால

குரூப், பாலே நாராயணன் நாயர். இவர்கள் உண்மையான மலையாளக் கவிதா பரம்பரையினர். ஆனால் முற்போக்குக் கருத்துக்களால் பெரிதும் மாறியவர்கள். 'கேரளம் வளருன்னு' (கேரளம் வளருகிறது) என்பது பாலேயின் கவிதை. அது நவீன கேரளத்தைப் பற்றி இதிகாசப் பாணியில் புனையப் பெற்றுள்ளது. ஒரே நூலில் கேரளத்தைப் பற்றிய கதைகள், அதன் மகா புருஷர்கள் அந்தப் பிராந்தியத்தின் போக்குகள் ஆகிய எல்லாவற்றையும் சேர்ந்த கட்டுக்கோப்பை அது இழைத்துத் தருகிறது. பழைய மரபினர் மறைந்துவிட்டதாகக் கருதுவதற்கில்லை. பி. குன்ஹி ராமன் நாயர், கே. கே. ராஜா போன்றோர் பழைய சம்பிரதாயத்தை இன்னும் சிறப்பாகப் பின்பற்றி வருகிறார்கள்.

### உரைநடை

1919-ம் ஆண்டுக்குப் பிறகு குறிப்பாக வசன நடை இலக்கியம் வளர்ச்சி கண்டது. சரித்திர நாவல் தனது முழுமையை வி. வி. ராமன் பிள்ளையின் ராமராஜ பகதூர் என்ற நாவலில் அடைந்தது. அது திப்புவின் படையெடுப்பைப் பற்றியது. அப்பன் தம்புரானின் பூதராயர், கே. எம். பணிக்கரின் கேரள சிம்மம் இதே தன்மை படைத்தவை. எனினும் இன்னும் அதிக முக்கியத்துவம் உள்ளவை புதிய பாணியில் தோன்றியுள்ள சமுதாய நாவல்கள். மாறி வரும் சமுதாயத்தின் நிலைமைகளை ஆராய்ந்து வர்ணிக்கும் படைப்புகள் இவை. இந்துலேகா, சாரதா ஆகியவை இவ்வகையில் கற்பனைத் திறன் மிகுந்த சிருஷ்டிகளாக விளங்குகின்றன. எனினும் புது வழியினர் பழைய கற்பனை மிகுதிப் போக்கை கைவிட்டு, கலப்பற்ற பிரத்யட்ச வாதத்தில் திளைக்கிறார்கள். அப்பந்தே மகள் என்பது நம்பூத்ரி-நாயர் உறவைப் பற்றிய ஓர் ஆராய்ச்சி. பிரத்யட்ச நாவல் வகையில் இதை முதல் முயற்சி எனலாம். பஷீரின்

பால்யகால சகி (குழந்தைப் பருவத்து நண்பன்) என்பது இத்துறையில் குறிப்பிடத்தக்க நூல். எனினும் பிரத்யட்ச சமூக நாவலை இலக்கிய அளவுக்கு உயர்த்திய பெருமை தகழி சிவ சங்கர பிள்ளைக்கு உரித்தானது. மிகச் சிறந்த சிறு கதைகளை எழுதுவதாக தகழி ஆரம்பத்தில் புகழடைந்தார். மலையாளத்தில் அவர்தான் சிறு கதை மன்னன். அவரது தோட்டியுதே மகன் என்பது மிகச் சிறப்பான நாவல்களில் ஒன்று. ரண்டிதங்கழி[3] (இரண்டு படி தானியம்). இந்த நாவல் நிலமில்லாத குடியானவன் ஆலப்புழைக்கு அருகில் சதுப்பு நிலங்களில் படும் துயரங்களை வருணிக்கிறது. குணசித்திர படைப்புகளில் வீரியம், சமுதாய நிலைகளை அப்பட்டமாக ஆராய்ந்து கூறும் சிறப்பு காரணமாக இந்த நாவல் உயர்தர இலக்கியச் சிருஷ்டியாக மதிக்கப் பெறுகிறது. செம்மீன்[4] என்பது அவரது சமீப நாவல். அது ஆலப்புழை மீனவர்களைப் பற்றியது. மலையாள மொழியில் இயற்றியுள்ள நாவல் எல்லாவற்றையும் விடச் சிறந்தது, முதன்மையானது என்று எல்லோராலும் மதிக்கப் பெறுவது.

நவீன சிறு கதைக்கும், நாவல் துறைகளில் ஆரம்ப காலத்தில் உழைத்துப் பெயர் பெற்றவர்களில் பி. கேசவ தேவைக் குறிப்பிட வேண்டும். அவரது 'ஓடலில் நின்று' (சாக்கடையிலிருந்து) என்பது மலையாள மொழியில் உள்ள சிறந்த நாவல்களில் ஒன்று. எஸ். கே. பொத்தக்கட்டின் 'விஷ கன்னிகா' மகத்தான நாவல் எனக் கருதப் பெறுவது. குறிப்பிடத்தக்க மற்றொரு

3. பிற இந்திய மொழிகளில் மொழிபெயர்ப்பதற்காக இந்த நாவலை சாகித்ய அகாதெமி தேர்ந்தெடுத்துள்ளது. தோ ஸர்த் தான் என்று ஹிந்தி மொழிபெயர்ப்பாக வெளியாகியுள்ளது.

4. இந்த நூலுக்கு 1957-ல் சாகித்ய அகாதெமி பரிசு கிடைத்தது.

நாவலாசிரியர் ஜோஸப் முண்டஸேரி. 'புரபஸர்' என்ற பெயருடன் அவர் இயற்றியுள்ள நாவல் ஏழைப் பள்ளி ஆசிரியரின் சதியைப் பற்றிய சோகக் கதை. 'கொண்டையும் குறுசும்' என்ற அவரது நாவல் ஏழைக் கிறிஸ்துவர்களின் வாழ்க்கையையும் அவர்கள் மீது தேவாலய அமைப்பினருக்குள்ள செல்வாக்கையும் புலப்படுத்துகிறது.

மலையாளத்தில் சிறு கதை ஆரம்ப காலத்திலேயே உயர் நிலையை அடைந்து விட்டது. வெற்றிகரமாக எழுதி புகழடைந்தவர்கள் ஏராளமான பேர். எனினும் இவ்வகையில் முதலிடம் பெற்றவர் தகழி. மாபஸாந்த் அல்லது செகோவ் போன்றோர் கதைகளுடன் ஒப்பிடக் கூடியவை அவரது படைப்புக்கள். பொன்குன்னம் வர்கி, கே. டி. முகமத், பஷீர், பி. வி. குட்டிகிருஷ்ணன், பொத்தக்கட், கோவூர், கரூர், சரஸ்வதி அம்மாள், லலிதாம்பிகா அந்தர்ஜனம் ஆகியோர் மற்ற நல்ல கதாசிரியர்கள். வர்கி, பஷீர், பொத்தக்கட், குட்டி கிருஷ்ணன் ஆகியோர் இடதுசாரி எழுத்தாளர்கள். சமூக அநீதியைப் பற்றி அவர்கள் பெரும்பாலும் எழுதியிருக்கிறார்கள். குட்டிகிருஷ்ணனின் 'உம்மாச்சு' என்பது சிறந்த நாவல் எனப் பாராட்டுகளைப் பெற்றிருக்கிறது. நம்பூதிரிமார் சமூகத்தில் உள்ள சமுதாய முரண்பாடுகளை வர்ணிக்கிறார் லலிதாம்பிகா அந்தர்ஜனம். எனவே பிற மக்களுக்கு தெளிந்தறியாத ஒரு பகுதியில் சமுதாய வாழ்க்கையை அவரது நூலே ஓரளவு பிரகாசப் படுத்துகின்றது.

## நாடகம்

நாடகத் துறையிலும் சுறுசுறுப்பு விசேஷமாக இருந்து வந்துள்ளது. நாடகத்தை இலக்கியமாகக் கருதுவது மலையாள மரபு. காளிதாஸர், பவபூதி பாணியில் த்ருச்ய காவியம் என்று இதைப் போற்றுகிறார்கள்.

இந்தச் சம்பிரதாயம் மரித்து விடவில்லை. மேலை நாடுகளின் பாணியில் நடக்கக்கூடிய நாடகங்களில் அக்கறை வளர்ந்துவருகிறது. ஆனால் நாடக மேடையில் காணப் பெறும் நாடகங்களில் பல இலக்கியம் எனக் கூறத் தக்கவையல்ல.

நாடகாசிரியர்களில் முக்கியமானவர் பி. பி. ராமன் பிள்ளை. அவரது 'குருப்பில்லா கலரி' (ஆசிரியரில்லாத பள்ளிக்கூடம்) என்பதில் நாயர்களது சமுதாய வாழ்விலுள்ள குழப்பம் சித்திரிக்கப் பெறுகிறது. இது சக்தி வாய்ந்த இன்பவியல் நாடகம். இடைக்காலத்தில் எப்படியெல்லாம் நிலவரம் இருந்ததென்பதை எதிர்காலத்தினர் புரிந்து கொள்ளக் கூடியவாறு இது அமைக்கப் பெற்றுள்ளது. தமது சரித்திர நாடகங்களின் மூலம் நாடகத்தின் வளர்ச்சிக்கு துணை புரிந்தவர் இ. பி. கிருஷ்ண பிள்ளை. சைனிக்கார பத்மநாப பிள்ளை கிருஸ்துவின் முக்தியைப் பற்றிய ஒரு நாடகத்தை "கலவரிவிலே கல்பபாதபம்" என்ற பெயருடன் எழுதியிருக்கிறார். என். கிருஷ்ணபிள்ளை, இடசேரி கோவிந்தன் நாயர் ஆகியோரும் புகழ் பெற்ற நாடகாசிரியர்கள். அவர்கள் படைப்புகள் இலக்கியச் சிறப்புள்ளவை. இளந் தலைமுறையினரில் நாடகம் எழுதி வெற்றி கண்டவர்கள் செல்லப்பன் நாயர், கே. டி. முகம்மத், டி. எஸ். கோபிநாதன் நாயர்.

## திறனாய்வு

இக்காலத்தில் திறனாய்வு இலக்கியமும் குறிப்பிடத்தக்கவாறு வளர்ச்சி கண்டது. முதலில் தோன்றிய விமரிசகர்கள் சீரிய இலக்கிய வகைகளில் மட்டுமே கவனம் செலுத்தினர், திறனாய்வுக்கான தரங்களை நிர்ணயித்து வெளிப்படுத்தினர். பி. கே. நாராயண பிள்ளை, கே. ராமகிருஷ்ண பிள்ளை ஆகியோர் இவ்வகையில் குறிப்பிடத்தக்கவர்கள். எம். பி. பால், முண்டசேரி, ஏ. பாலகிருஷ்ண பிள்ளை ஆகியோர் இத்துறையில் அக்கறை காட்டிய பிறகு மலை

யாளத் திறனாய்வு ஒரு புத்துணர்வு பெற்று வளருகிறது. நாவலின் சிறுகதை வடிவத்தைப் பற்றிய எம். பி. பாலின் ஆராய்ச்சியும், இளம் எழுத்தாளருக்கு வழி வகுத்துத் தருவதாய் இருக்கிறது. ஜோஸப் முண்டஸேரி உயர்ந்த இலக்கியங்களில் புலமை மிகுந்தவர். அதே சமயத்தில் மிக நவீனமான மனப்பாங்கு படைத்தவர். இக்கால எழுத்துப் பரம்பரையின் பிரதான பிரதிநிதியாகத் திகழு பவர். பிரெஞ்சு இலக்கிய வடிவங்களை மலையாளத்தில் புகுத்திய பெருமை ஏ. பாலகிருஷ்ண பிள்ளைக்கு உரியது. கேரளத்தில் மாபஸாந்த் எழுத்துக்கு விசேஷச் செல் வாக்கு ஏற்பட்டதற்கு அவரே காரணம். குட்டி கிருஷ்ண மாரர், முர்கோத் குன்ஹப்பா, குப்தன் நாயர் போன்றோர் புது கருத்துக்களின், வளர்ச்சிக்குத் துணை புரிந்தனர். மலையாளத்தில் இன்றைய திறனாய்வு இலக்கியமானது முற்போக்காளர்களுக்கு விசேஷ பட்சபாதமுள்ளதாக இருந்தபோதிலும்கூட, உலகப் போக்கை அறிந்து, போதிய தகுதியுடன், திறனுடன் அதை உருவாக்கியிருக் கிறார்கள் என்று சொல்லத்தான் வேண்டும்.

### வாழ்க்கை வரலாறு; பிரயாண இலக்கியம்

சமீப காலத்தில் ஏற்றம் கண்டுள்ள இலக்கியத் துறை வாழ்க்கை வரலாற்றைப் பற்றியது. பி. கே. நாராயண பிள்ளையின் வாழ்க்கையை பற்றி பி. கே. பரமேசுவரன் நாயர் எழுதியுள்ளார். பிறகு சி. வி. ராமன் பிள்ளையைப் பற்றியும் அவர் ஒரு நூலை இயற்றியிருக் கிறார். இத்துறையில் இதுவே சிறந்த பிரதிநிதித்துவம் உள்ள நூலாக மதிக்கப் பெறுவது. கேரள வர்மா, ராஜ ராஜ வர்மா, உள்ளூர் பரமேசுவர ஐயர் போன்றோரின் வாழ்க்கை வரலாறுகளும் புத்தக வடிவங்களில் வெளி யாகி யிருந்தன. ஆனால் அவை திறனாய்வு இல்லாத வெறும் புகழ் பாடும் நூல்களாகவே இருந்தன. பாரபட்ச மற்ற விமரிசனமாக அவற்றைக் கருதுவதற்கில்லை.

பரமேசுவரன் நாயர், வரலாற்று நூலின் சிருஷ்டியை பெரிய விஷயமாகக் கருதி, குணதோஷ விமரிசனம், ஆராய்ச்சி ஆகிய இரண்டு அம்சங்களையும் சேர்த்து, அத்துடன்கூட இலக்கிய நயங்களையும் இணைத்தார். இத் துறையிலும் ஐ. வி. சாக்கோ, ஏ. டி. ஹரிசர்மா, டாக்டர் கே. எம். ஜார்ஜ் ஆகியோர் நல்ல பணியாற்றி இருக் கிறார்கள்.

சுய சரிதைகளும் வெளிவரலாயின. கவிஞரும், புல வரும் விமரிசகருமான பி. கே. நாராயண பிள்ளை என்ற பெரியார் இயற்றிய 'ஸ்மரண மண்டலம்' இவ்வகையில் சிறந்த நூல். அவர் சட்ட நிபுணராகவும், நீதிபதியாக வும் விளங்கியவர். அவரது வாழ்வின் முற்பகுதியில் திருவாங்கூரிலிருந்த நிலைமையை மிகக் கச்சிதமாக, விசேஷத் திறமையுடன் அதில் வர்ணித்துள்ளார். இ. வி. கிருஷ்ண பிள்ளையின் சுய சரிதை குறிப்பிடத் தக்கது. அவருடைய வாழ்க்கை ஒரு நிலையற்றது. எனவே அவரது சரிதையில் சுவை மிகுதியைக் காணலாம். இந் நூற்றாண்டில் நகைச்சுவையுடன் எழுதியவர்களில் அவர் முன்னணி வகிப்பவர் என்று கருதப்படுகிறார். இத்துறை யில் புகழ்பெற்ற மற்றொருவர் சஞ்சயன் (எம். ஆர். நாயர்) கே. எம். பணிக்கரின் 'ஆத்மகதா', வி. கேசவன் இயற் றிய 'ஜீவிதஸமரம்', கே. பி. கேசவ மேனனின் 'கழிந்த காலங்கள்' ஆகியவை இத்துறையில் உள்ள முக்கிய நூல்களில் சில.

பழைய காலந்தொட்டே மலையாளத்தில் பிரயாண நூல்கள் உள. ஒரு கிறிஸ்துவப் பாதிரியார் 18-வது நூற் றாண்டில் தமது ஐரோப்பிய யாத்திரையை வர்ணித்து எழுதியுள்ள நூல் இன்னும் சிறந்ததாகவே மதிக்கப் பெறு கிறது. 19-வது நூற்றாண்டில் பிரயாண நூல்களை செய்யு ளாக இயற்றும் மோஸ்தர் இருந்தது. பிரயாண இலக்கியம் என்ற வகையில் இக்காலத்தில் உரைநடை நூலாகவே எழுதியவர்களில் கே. பி. கேசவ மேனன்

குறிப்பிடத்தக்கவர். அவருடைய 'பிலட்டி விசேஷம்' என்பது (இங்கிலாந்து பற்றிய யாதாஸ்து) மாணவராக அந்த நாட்டில் தங்கிய காலத்திய அனுபவங்களைப் பற்றியது. இந்த வகை இலக்கியத்தில் விசேஷப் புகழ்பெற்றவர் பொத்தக்கட். ஆசியா, ஆப்பிரிக்கா, ஐரோப்பா உட்பட உலகின் பல பகுதிகளைப் பற்றி அவர் பிரயாணக் கட்டுரைகளை எழுதியுள்ளார். ருசிகரமான விஷயங்களைக் கோர்த்துக் கொடுப்பதில் அவர் நிகரற்றவர். அவரது நடையில் எளிமை தெளிவாகச் சிறந்து விளங்கும். கே. எம். பணிக்கரின் 'ஆபத்கரமயா யாத்ரா' (ஒரு அபாயகரமான யாத்திரை) யுத்த காலத்து அவரது பிரயாணங்களைப் பற்றிய வர்ணனை. 'சீனயிலே ஒரு யாத்ரா' (சீனுவில் ஒரு யாத்திரை) என்பது அந்நாட்டில் மேற்கொண்ட நெடியதோர் சுற்றுப் பிரயாணத்தைப் பற்றியது.

## இலக்கிய வரலாறு

அண்மையில் புலமை மிகுந்த இலக்கிய வரலாற்று நூல்கள் வெளியாகியுள்ளன. இவ்வகையில் முன்னோடியாக விளங்கியது பி. கே. நாராயண பிள்ளையின் மலையாள இலக்கிய சரிதம். அதன் பெயர் மலையாள பாஷை சரித்திரம் என்பது. அது 19-ஆம் நூற்றாண்டின் கடைசி பத்து ஆண்டுகளில் பிரசுரமாயிற்று அதைத் தொடர்ந்து இத்துறையில் இடைவிடாது ஆராய்ச்சி நடந்து வந்தது. பல பழைய நூல்களும் மறந்துபோன நூலாசிரியர்களும் பிரகாசமடைவதற்கு அது துணை புரிந்தது. இவ்வகையில் முக்கிய கண்டுபிடிப்பு 'லீலா திலகம்' என்பது. மலையாள மொழி வரலாற்றையும், இலக்கணச் சிறப்புகளையும் பற்றி ஸம்ஸ்கிருதத்தில் 15-ஆம் நூற்றாண்டில் இந்நூல் இயற்றப்பட்டது. ஆரம்ப கால மலையாள இலக்கியத்தின் தொடர்ச் சித்திரம் என்று லீலா திலகத்தைக் குறிப்பிடலாம். முந்தைய நூல்களிலிருந்து மேற்கோள்களை எடுத்துக் காட்டி அது விமரிசனம் செய்தது. அம்மாதிரி

வெளிக்கொணரப்பட்ட நூல் 'உன்னினிலி ஸந்தேசம்' என்ற தூதகாவியம். 14-ஆம் நூற்றாண்டில் மேக தூத பாணியில் அது இயற்றப்பெற்றது. இன்னும் பழைய நூல்கள் சில உன்னியதி சரித்திரம், உன்னியாச்சி சரிதம் போன்றன பிறகு வெளிக் கொணரப்பட்டன. உன்னி னிலி ஸந்தேசம் ஐந்து திருந்திய பதிப்புகளாக வெளி வந்துள்ளது. லீலா திலகமும் அதே மாதிரி திறனாய்வுப் பதிப்புகளாக பிரசுரமாகியிருக்கிறது. எர்ணு தளம் குஞ்சன் பிள்ளை, சுரநாடு குஞ்சன் பிள்ளை ஆகிய இரு வரும் தம்மிடையே விரிவாக இவ்வகையில் பணியாற்றி யிருக்கிறார்கள்.

இலக்கிய வரலாற்றில் இரண்டு மேதைகள் உண்டு. ஒருவர் ஆர். நாராயண பணிக்கர், மற்றொருவர் உள்ளூர் பரமேசுவர ஐயர். கேரள பாஷை சாகித்ய[5] சரித்திரம் என்பது ஏழு பகுதிகளில் வெளியிட்ட நூல். இந்நூலில் சர்ச்சை அம்சங்கள் மிகுதி. ஆசிரியர் அளித்துள்ள சில முடிவுகள் ஆட்சேபணைக் குரியவை. எனினும் மிகுந்த புலமையுடன் கூடிய வெளியீடு இது. பரமேசுவர ஐயரது நூல்களின் தொகுப்புக்கு கேரள ஸம்ஸ்கிருத சாகித்ய சரித்திரம் என்று பெயர். அவர் காலமான பிறகு திரு வாங்கூர் சர்வகலாசாலையினர் இதை வெளியிட்டு வரு கின்றனர். பிரசுரம் இன்னும் பூர்த்தியாகவில்லை. அது மலையாள மொழியின் இலக்கிய வரலாறாக, கேரளத்தின் இலக்கியச் சரிதமாக அமைந்துள்ளது. ஸம்ஸ்கிருதத்தில் எழுதிய கேரள கவிஞர்களையும் பற்றி இது கூறுகிறது. வடக்கம்கூர் ராஜ ராஜ வர்மாவின் கேரள ஸம்ஸ்கிருத சாகித்ய சரித்திரம் (கேரளாவில் ஸம்ஸ்கிருத இலக்கிய வரலாறு) என்பது விரிவானது. சில அம்சங்களில் தேதி கள் விஷயமாக அதை அப்படியே நம்புவதற்கில்லை.

---

5. 1947-க்குப் பிறகு மலையாளத்தில் வெளிவந்த நூல்களில் மிகச் சிறந்தது எனக் கருதி சாகித்ய அகாதெமியின் பரிசு இந்நூலுக்கு 1955-ல் வழங்கப்பட்டது.

எனினும் விசேஷ முக்கியத்துவம் உள்ள பிரசுரம் என்று அதை மதிக்கவேண்டும்.

## மொழி வரலாறு, சரித்திரம்

மலையாளம் சம்பந்தமான மொழி ஆராய்ச்சியும் பிற வகை ஆராய்ச்சிகளும் அண்மையில் கணிசமான ஏற்றம் கண்டுள்ளன. ஏ. ஆர். ராஜராஜ வர்மா, ஆத்தூர் கிருஷ்ண பிஷரோடி ஆகிய இருவரும் இத்துறையில் மதிப்பு வாய்ந்த அடித்தள வேலை செய்திருக்கிறார்கள். சொல் மூல ஆராய்ச்சித் துறையில் டாக்டர் கே. கோத வர்மா அரும்பாடு பட்டிருக்கிறார். மலையாளத்தில் உள்ள இசைச் சொற்களைப் பற்றிய அவரது குறிப்புகள் விசேஷ மானவை. இத்துறையில் டாக்டர் கே. எம். ஜார்ஜ் குறிப் பிடத்தக்க பணியாற்றியுள்ளார். ராம சரிதத்தின் மொழி யமைப்பைப் பற்றிய அவரது ஆராய்ச்சி, தனி மொழி யென்ற வகையில், தொடக்க காலத்தில் மலையாளம் எவ் வாறு வளர்ச்சி கண்டது என்பதை முழுமையாக அறிவ தற்கு துணை புரிகிறது. கிராமிய நாடகங்களையும், கதை பாட்டு இலக்கியங்களையும் டாக்டர் எஸ். கே. நாயர் சேர்த்து வெளியிட்டுள்ளார். இது ஜனரஞ்சகமான ஒரு பிரிவு. பழகு மொழியும், சமுதாய வாழ்வும் நடுக் காலத் தில் எவ்வாறு இருந்தன என்பதை இவற்றிலிருந்து நன்கு தெரிந்து கொள்ளலாம்.

மலையாள இலக்கியத்தில் புறக்கணிக்கப்பட்ட பகுதி சரித்திரம்தான். கொச்சி ராஜ்ய சரித்திரம் என்ற தலைப் பில் இரண்டு பகுதிகளாக ஒரு நூலை கே. பி. பத்மநாப மேனன் வெளியிட்டுள்ளார். அதைத் தவிர சரித்திர நூல் எதுவும் மொழியில் இருக்கவில்லை. ஸி. அச்சுதமேனன் ஆங்கிலத்தில் எழுதிய கொச்சி மானுவல் பிறகு மலையாள மொழி பெயர்ப்பில் அதிகார பூர்வமாக வெளியாயிற்று. கேரள சரித்திரத்தின் இருள் படர்ந்த பகுதி யென்று இலங்குளம் குஞ்சன் பிள்ளை இயற்றிய நூலும் பழைய

பாமர மான்ய சாஸனங்களைப் பற்றி டாக்டர் கோதவர்மா செய்துள்ள ஆராய்ச்சியும் இவ்வகையில் குறிப்பாக எடுத்துக் காட்ட வேண்டியவை.

## பத்திரிகைத் துறை

மலையாளத்தின் வேகமான வளர்ச்சிக்கு சஞ்சிகைகள் முக்கியமாகத் துணைபுரிந்துள்ளன. இந் நூற்றுண்டின் ஆரம்பத்தில் 'மலையாள மனோரமா' சண்டத்தில் வர்ஜீஸ் மாப்பிள்ளையை ஆசிரியராகக் கொண்டு இலக்கியத்தை ஊக்குவிப்பது என்ற பணியை மேற்கொண்டது. இலக்கிய விஷயங்களுக்கு இடம் கொடுத்ததுடன் கூட கேரளாவில் முதல் இலக்கிய மகாசபையை மனோரமா கூட்டியது. அதன் பெயர் பாஷா போஷிணி சபா. இலக்கிய நடவடிக்கைகளுக்கு அது பெரிய அளவில் ஊக்கம் அளித்தது. 'பாஷா போஷிணி' என்ற இலக்கிய சஞ்சிகையை வெளியிட்டு அசல் நூல்களின் வளர்ச்சிக்கு அது உதவி புரிந்தது. வித்யாவிநோதினி என்ற சஞ்சிகையும், திருச்சூரிலிருந்து வந்த புலவர் குழாத்தினர் பதிப்பித்த ரஸிக ரஞ்சனி என்ற சஞ்சிகையும், வள்ளத்தோலை ஆசிரியராகக் கொண்டு வந்த ஆத்ம போஷிணி என்ற சஞ்சிகையும், அப்பன் தம்புராவின் மங்களோதயமும் இத்துறையில் விசேஷ பணியாற்றியவை. கவிதைக்காக என்று கவன கௌமுதி என்ற மாதப் பத்திரிகை 25 ஆண்டுகளுக்கு பி. வி. கிருஷ்ணவாரியரது ஆசிரியத் தலைமையின்கீழ் பிரசுரமாயிற்று. அதில் எழுதாத கவிஞர் இல்லையெனலாம். இளம் கவிஞர்களில் பலர் தமது முதல் பாடல்களை வெளியிட கௌமுதி உதவி செய்து வந்தது. வள்ளத்தோல், உள்ளூர், சங்கர குரூப் போன்றோர் அதில் வழக்கமாக எழுதி வந்தார்கள். வள்ளத்தோலின் 'விலாஸ லதிகா' உட்பட பல முதன்மையான நூல்கள் அதில்தான் முதல் தடவையாக

பிரசுரிக்கப்பட்டன. பின்னர் சிறப்பு நூல்கள் என்ற பெருமை அவற்றிற்குக் கிடைத்தது. இலக்கியக் கட்டுரைக்காக வென்றே ஒரு சஞ்சிகையை சமஸ்த கேரள சாகித்ய பரிஷத் நடத்தி வந்தது. சரித்திரம், இலக்கியத் திறனாய்வு, பழைய நூல்களின் வெளியீடு ஆகியவை அதில் இடம் பெற்றன.

1930க்குப் பின் வாரப் பத்திரிகைகள் இலக்கிய வளர்ச்சியில் பெரும் பங்கு பெறலாயின. இவை ஜனங்கள் விரும்பிப் படித்த தினப் பத்திரிகைகளின் வார வெளியீடுகள். கோழிக்கோட்டிலிருந்து வெளிவந்த 'மாத்ருபூமி' வாரப் பத்திரிகையும், கொல்லத்திலிருந்து பிரசுரமாகும் மலையாள ராஜ்ய மும் இளம் எழுத்தாளர்களுக்கு நல்ல அரங்காக அமைந்தன. அவை நிலையான வாசகர்களைக் கொண்டவை. எனவே இலக்கிய சஞ்சிகைகளை விட அதிகமான பெயரை அடைவதற்கு எழுத்தாளர்களுக்கு சௌகரியமாக அமைந்தன.

இந்த வரலாற்றுக் கட்டுரையை முடிக்குமுன் மொழி பெயர்ப்பு இலக்கியத்தைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்ல வேண்டும். முதலில் மொழிபெயர்ப்பு என்பது ஸம்ஸ்கிருத நூல்களிலிருந்துதான் நடைபெற்றது. இந்த நூற்றாண்டின் முதல் பத்து ஆண்டுகளுக்குள்ளாகவே ஸம்ஸ்கிருதப் பெரு நூல்கள் அனைத்தும் மலையாளத்தில் வந்துவிட்டன. ஆங்கிலத்திலிருந்து சீரிய நூல்கள் அதற்கு முன்னரே மொழிபெயர்க்கப்பட்டு விட்டன. வங்காளி மொழியிலிருந்து ஆங்கிலத்தின் மூலம் மலையாளத்துக்கு வந்து பிரபலமான நூல்களில் பங்கிம் சந்திர சட்டர்ஜிக்கு விசேஷ பெருமை உண்டு. எல்லா வகுப்பினரும் அவரது நூல்களை விரும்பிப் படித்தனர். வங்காளத்திலிருந்து மொழி பெயர்ப்பு விசேஷ செல்வாக்கு பெற்ற காலத்தில் ரவீந்திரநாத் டாகுருக்கு ஓர் உயரிய ஸ்தானம் மலையாள மொழி பெயர்ப்புகளில் கிடைத்தது.

முதல் உலக யுத்தத்துக்குப் பிறகு எழுத்தாளரின்

அக்கறை விரிவு அடைந்தது. பிரெஞ்சு, ரஷிய, இதர மொழிப் பெருநூல் நூல்களை மொழி பெயர்க்கும் வழக்கம் ஏற்பட்டது. அசல் நூலிலிருந்து மொழி பெயர்க்கப் பட்டவை மிகக் குறைவு. எனினும் இளம் எழுத்தாளரின் சிந்தனையை உருவாக்கும் வகையில் இவை விசேஷச் செல்வாக்கு பெற்றிருந்தன. நளபட் நாராயண மேனன் வெளியிட்ட 'லெஸ் மிஸரபிள்' என்ற நூலின் மொழி பெயர்ப்பும், மாபஸாந்த் கதைகளை ஏ. பாலகிருஷ்ண பிள்ளை மலையாளத்தில் மொழி பெயர்த்ததும், டால்ஸ்டா யின் 'மீட்சி' (Resurrection) யை ஸி. கோவிந்த குரூப் மொழிபெயர்த்ததும் குறிப்பிடத் தக்கவை. மகாத்மா காந்தியின் சத்திய சோதனை, ஜவாஹர்லாவின் சுய சரிதம் ஆகியவை மலையாள மொழி பெயர்ப்புகளில் பேரிலக்கியங்களாகி விட்டன. வேறு பல மூலங்களி லிருந்தும் மலையாளம் உரம் பெற்று போஷாக்கு அடைந் தது. உமர்கயாமை பிட்ஸ் ஜெரால்ட் ஆங்கிலத்திலிருந்து மொழி பெயர்த்ததை ஆதாரமாகக் கொண்டு மலையாளத் தில் ஏழு வெவ்வேறு நூல்கள் வெளிவந்துள்ளன. அவற்றில் ஒன்று ஜி. சங்கர குரூப் இயற்றியது. மற்றொன்று கே. எம். பணிக்கர் புனைந்தது. ஒரு சிறந்த முஸ்லிம் புலவர் திருக் குர் ஆனை மலையாளத்தில் ஆக்கி யிருக்கிறார். வள்ளத்தோல் ஏராளமாக மொழி பெயர்ப்பு நூல்களை இயற்றியுள்ளார். வால்மீகி ராமாயணத்தையும் ஐந்து புராணங்களையும், காளிதாசரின் சாகுந்தலத்தை யும், வத்சராஜாவின் நாடகங்களையும், பாஸரின் ஆறு நாடகங்களையும், பிராக்ருதத்திலிருந்து காதா சப்த சதி என்ற ஹாலாவின் நூலையும், இறுதியாக 'ருக்வேத சம்ஹிதா' பூராவையும் அவர் மொழி பெயர்ப்பில் வழங்கியுள்ளார். பாணினியின் ஸம்ஸ்கிருத இலக்கி

---

6. சாகித்திய அக்காதெமியின் ரூ. 15,000 மான்யம் பெற்று இதன் பிரசுரத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

யத்தை மொழி பெயர்ப்புடன் கூட, விளக்க உரையுடன் ஐ. ஸி. சாக்கோ வெளியிட்ட நூல் சிறப்பானது.[7]

இறுதியாகச் சொல்ல வேண்டியது ஒன்று உண்டு. இந் நூற்றுண்டின் தொடக்கத்தில் இலக்கியத்தை உயர் வகுப்பினர் மட்டுமே சுவைத்தனர். அதை உருவாக்கி கையாண்டவர்கள் மேல் ஜாதியினர்தான். அரண்மனை யையும், செல்வந்தர்களையும் சுற்றி அது வளர்ந்தது. இக்காலத்தில் வல்லுனர்களாக விளங்கியவர்கள் கேரள வர்மா, ராஜராஜவர்மா, குன்ஹி குட்டன் தம்புரான் போன்ற அரச குடும்பத்தினர். படிப்படியாக இலக்கிய வட்டம் விரிவடைந்தது. 1915 முதல் 1936 வரை உள்ள காலத்தில் இலக்கியம் நடுத்தர வகுப்பினரின் சொத்தாக மாறியது. ஆங்கிலத்தில் கல்வி பயின்று சமூக சீர்திருத் தங்களுடன், பொருளாதார மனப்பான்மைகளுடன் அவர்கள் எழுதலாயினர். குமரன் ஆசன் தவிர மற்ற வர்கள் இயற்றிய நூல்களில் பொதுப்படையாக ஓர் ஆத்ம திருப்தி காணப்பட்டது. ஆசன் மட்டும்தான் சமூக அநீதியை எதிர்த்து கலகக்கொடி ஏந்தியவர். மற்றவர்கள் ராஜீய விடுதலைக்குச் சாதகமாக எழுதினுர்கள். 1930க்குப் பிறகு இந்நிலைமையில் அடிப்படையான மாறு தல் ஏற்பட்டது. சாமானிய மக்களின் உடைமையாகி விட்டது இலக்கியம். கேரளத்தில் அநேகமாக எல்லோரும் எழுத்தறிவுள்ளவர்கள். எழுத்தறிவு விகிதாசாரம் இந்தியாவில் அங்குதான் மிகுதி. எனவே மக்களை மொத்தமாகக் கருத்திற் கொண்டு இலக்கியம் விரிவாக்கப் பெறும் என்பது எதிர்பார்க்கப்பட்டதே. இளைஞர்களான ஆக்க இலக்கியக் கர்த்தாக்களில் எல்லா வகுப்பினரையும், ஜாதியினரையும் இன்று காணலாம். புலமை மிகுந்த மரபையொட்டி வந்த பாடல்களின் செல்வாக்குக் காலம் மறைந்து விட்டது. கேரள வர்மாவின் அரண்மனைச் சிறப்புடன், மயூர சந்தேசத்தின் தேனினும் இனிய சுவை

7. 1956ல் இதற்கு சாகித்திய அக்காதெமி பரிசு கிடைத்தது.

இன்று நம்மை ஆட்கொள்ளவில்லே. விறுவிறுப்பு, உண்மை நிலே, மக்களின் வாழ்க்கையுடன் நெருங்கிய உரமுள்ள படைப்புகள் அந்த இடத்தை நிரப்பிக் கொண்டு விட்டன.

## SELECT BIBLIOGRAPHY OF MALAYALAM LITERATURE

*Report of the First All India Writers Conference,* 1945, *Volume on the Symposium on Modern Literatures, Essay on Malayalam.*

*Shippley's Encyclopaedia of World Literature (Essay on Malayalam).*

*A Primer of Malayalam Literature.*
By T. K. Krishna Menon.

*Quest and other Poems.*
By G. Sankara Kurup.

*Tear Drops.*
By Nalappat Narayana Menon.

*Mary Magdalene.*
By Vallathol Narayaṇa Menon.

*Ramacaritam and the Study of Early Malayalam.*
By Dr. K. M. George.

# வங்க இலக்கியம்

காஜி அப்துல் வாதுத்

## முகவுரை

ஆஸ்ஸாமி, ஒரியா, மைதிலி ஆகியவை போலவே வங்காளியும் கீழ்த்திசை பிராகிருதத்திலிருந்து ஜனித்தது என்பது தேர்ந்த அறிஞர்களின் கருத்து. கீழ்த்திசைப் பிராகிருதம் மாபெரும் இந்தோ-ஐரோப்பிய மொழி வம்சத்தின் இந்தியத் தோற்றுவாய். காலக்கிரமத்தில் அது ஒரு தெளிவான தனி வடிவம் எடுத்தது. சொல்வளத்தில் மட்டுமன்றி, கருத்துக்களிலும் கற்பனையிலும்கூட ஆரியத்துக்குப் புறம்பான அம்சங்களைக் கணிசமாக ஜீரணித்துக் கொண்டு, காலக்கிரமத்தில் அது தனி வடிவமடைந்தது.

அதன் தொன்மையான இலக்கியங்களில் சில, 'சார்ய கீதங்கள்' எனப்படுபவை. நேபாள அரசாங்கப் புத்தகாலயத்தில் அவற்றை மகா மகோபாத்யாய ஹரப்பிரசாத சாஸ்திரி கண்டெடுத்து 1916-ம் ஆண்டில் வெளியிட்டார். அவை கி. பி. 1000 முதல் 1200 வரை உள்ள காலத்தைச் சேர்ந்தவை என்று பொதுவாகக் கருதுகிறார்கள். அவை எட்டாம் நூற்றாண்டின் படைப்புக்கள் என்று கருதுவோரும் உண்டு. இந்தப் பாடல்கள் இலக்கிய சிருஷ்டிகள் என்று முற்றிலும் கருதக்கூடியவை அல்ல. மகாயன பௌத்த மதத்தின் ஒரு பிரிவைச் சேர்ந்த ஆசாரியர்கள் தமது சீடர்களின் யோகானுஷ்டானக் கட்டளைகளாக

இவைகளைத் தொகுத்தனர். "மானிடனின் மதம்" என்ற விஷயமாக டாகுர் செய்த ஹிப்பர்ட் பிரசங்கங்களில் பாவுல் (Bauls) என்ற நாடோடிச் சித்தர்களைப் பற்றி பிரஸ்தாபித்துள்ளார். அவர்களது 19-வது நூற்றாண்டுப் பாடல்களுக்கும் சார்ய கீதங்களுக்கும் இடையே வியக்கத்தக்க ஒற்றுமை அம்சங்கள் இருப்பதைக் காணலாம்.

வங்காளம் அநேகமாக புத்தமதம் பரவியிருந்த நாடாக இருந்து வந்தது. ஸேன் மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் (கி. பி. 1000-1200) அது பெரும்பாலும் ஹிந்து நாடாயிற்று. 'சூன்ய புராணம்' என்ற இதிகாச ரீதி காவியம் ஒன்றில் புத்தமதத்தினரை பிராம்மண மறுமலர்ச்சியாளர் இம்சித்ததாகக் காணப்படுகிறது. அக் காலத்தில் வெற்றி விஜயம் செய்துவந்த துருக்கியர்களைத் தமக்கு விமோசனம் அளிப்போராகப் புத்த மதத்தினர் கருதியதாகக் கூடக் கூறப்பட்டுள்ளது. இக்காரணங்களினால் ஹிந்துக்களைப் போலவே வங்க முஸ்லிம்களும் பழைய பௌத்த வமிசாவழியினரே என்று கருதப் படுகிறது.

பழைய நீண்ட வங்கக் கவிதைகளில் முகுந்த ராம சக்ரவர்த்தி பதினாறும் நூற்றாண்டு வாக்கில் இயற்றிய 'சண்டி மங்கள்' என்பது தனித்தியங்குவது. முகுந்த ராமுக்குக் 'கவி கங்கண' என்ற விருது உண்டு. அவரைப் பெரும்பாலும் அந்தச் சிறப்புப் பெயரைக் கொண்டே அழைப்பார்கள். தமது காலத்திய ஆண் பெண்களையும் அவர்களது பழக்கவழக்கங்களையும், நிகழ்ச்சிகளையும் உள்ளது உள்ளபடி அவர் சித்திரித்துள்ளார். சண்டி வழிபாடு எவ்வாறு உருவாயிற்று என்ற வரலாற்றை கோவையாக இல்லாமல், உற்சாகம் அற்ற ரீதியில், அவர் வழங்கியுள்ளார். இந்தக் குறைபாடுகள் இருந்த போதிலும் பலவகையான மானிட ஆசாபாசங்கள் அதில் பிரஸ்தாபிக்கப்பட்டுள்ளதால் அதை ஓர் இதிகாசம் என்றே கருதலாம்.

'சண்டி மங்கள்' வெளியான பிறகு, அல்லது அதே காலத்தில், வெளியான வைஷ்ணவ பிரபந்தங்களை குறிப்பிடவேண்டும். அவை ராதாகிருஷ்ண பிரேம பாசத்தைப் பற்றிய பாடல்கள். வித்யாபதி, சண்டிதாஸ், ஞானதாஸ், கோவிந்ததாஸ் ஆகியோர் இயற்றிவை.[1] அவற்றில் சில அழகு மிகுந்தவை. வங்க வாசகர்களால் மட்டுமன்றி உண்மையுணர்ச்சி மிகுந்து மனதை ஆட்கொள்ளக்கூடிய சொற்சித்திரங்களை மதிக்கும் எல்லோராலும் அவை போற்றப் பெறும். அவற்றில் சிறப்பு மிக்க கவிதைகள் காதலும் பக்தியும் இணைந்த அபூர்வமான ஆனந்த நிலைமையைக் காட்டுவன. எந்த தலைசிறந்த இலக்கியத்திலும் காணக் கூடிய மிகச் சிறந்த காதல் கீதங்களுடனும் - மானிடக் காதலாயினும் சரி, தெய்வீகக் காதலாயினும் சரி - ஒப்பிடக் கூடியவை. காம்பீர்யம் மிகுந்த சைதன்யப் பிரபுவின் செல்வாக்கு அக்காலத்தில் எங்கும் வியாபித்திருந்தது. அவரது வாழ்க்கை வரலாற்று நூல்கள் பல உண்டு. அவற்றுள் பிருந்தாவனதாஸ், கிருஷ்ணதாஸ் கவிராஜ் இயற்றிய இரண்டும் குறிப்பிடத் தகுந்தவை.

வைஷ்ணவர்களின் சாதனைகளுக்கு அடுத்தபடியாகக் குறிப்பிட வேண்டியவை கிருத்திவாசரின் இராமாயணமும் காசிராம்தாசின் மகாபாரதமும். பதினாறும் நூற்றாண்டின் தொடக்கத்தில் இராமாயணமும் இறுதியில் மகாபாரதமும் வெளியாயின. தொன்மையான இவ்விரண்டு இதிகாசங்களும் மக்கள் இலக்கியமாகத் திகழ்கின்றன. சரளமான கவிதை, எளிய முறையில் ஆழ்ந்த உணர்ச்சிகளைச் சித்திரிப்பது, மகத்தான அறவழிகளை விவரிப்பது ஆகிய காரணங்களால் இவை இன்னும் சிறந்து விளங்குகின்றன.

---

1. இந்த கீதங்களின் தொகுப்பு ஒன்றை 'வைஷ்ணவ பதாவளி' என்ற தலைப்பில் சாகித்திய அகாதெமி பிரசுரித்துள்ளது. பதிப்பித்து முன்னுரை வழங்கியவர் டாக்டர் சுகுமார் ஸென்.

பதினேழாம் நூற்ருண்டின் சக்தி வாய்ந்த கவிதைகளை தௌலத் காஜி, சையத் ஆலாவோத் என்ற இரண்டு முஸ்லிம் கவிகள் இயற்றினர். அரக்கானை ஆண்ட முகம்மதிய மன்னர்களும் அவர்களது முஸ்லிம் பிரதானிகளும் இக் கவிதைகளை ஆதரித்தனர். பெரும் புகழ் அடைந்திருக்கக்கூடிய தௌலத் காஜி சிறுவயதிலேயே காலமாகிவிட்டார். ஆலாவோத் நெடுநாள் வாழ்ந்தார். கவிதா சக்தியுடன் பரந்த புலமையும் அவருக்கு உண்டு. கடவுளர் காதலைப் பற்றியே நிறைய எழுதிவந்த முந்திய சூழ்நிலை எல்லாவகைகளிலும் உயர்ந்து காணப்பட்டதாகச் சொல்ல முடியாது. அதை மாற்றி வாழ்க்கையில் தோன்றும் காதலையும் சாதனைகளையும் துணிந்து பாடிய தன் மூலம் வங்க இலக்கியத்துக்கு இவ்விருவரும் தொண்டு புரிந்திருக்கிருர்கள்.

பதினெட்டாம் நூற்ருண்டில் பிரபலமானவர் பாரத சந்திரர். அவர் பண்புமிக்க கலைஞர். அரை நூற்ருண்டுக் காலம் அவர் புகழ்பெற்று விளங்கினர் மேதையும் திறனும் இருந்தபோதிலும் நல்லது கெட்டது பற்றிய உணர்வு அவருக்கு இல்லை நாடு சீர்குலைந்து வந்த காலத்தில் அவர் வாழ்ந்தார். அடுத்தாற்போல் வந்த ராமப்பிரசாத், பாரத் சந்திரரின் அடிச்சுவட்டைப் பின்பற்றினர். ஆனல் வெற்றி காணவில்லை. அவரது சமயப்பாடல்கள் காளியின் தாயன்பைப் போற்றுபவை, தரத்தில் உயர்ந்தவை. எல்லா வகுப்புக்களையும் சேர்ந்த வங்காளிகளின் மனத்தை அவர் ஆட்கொண்டவர்.

## பத்தொன்பதாம் நூற்ருண்டு

பத்தொன்பதாம் நூற்ருண்டின் தொடக்கத்தில் பிரிட்டிஷ் அதிகாரமும் அந்தஸ்தும் வேரூன்றி நிலைத்துவிட்டன. அது மாறுதல் ஏற்பட்டு வந்த இடைக்காலம். நூற்ருண்டின் முற்பகுதியில், அக்காலத்தின் பிரதிநிதியாக வந்த கலைஞர் ஈசுவர குப்தா. கவிதா வன்மை அவருக்குக்

குறைவு. ஆனால், சுற்றி நடப்பவைகளைக் கூர்ந்து கவனித்து அவற்றை ரசமான பாடல்களாக வெளியிட்டார். நியாயமான புகழ் அவருக்குக் கிடைத்தது. இக்கால இலக்கிய முன்னோடிகளான ரங்கலால், தீனபந்து, பங்கிம் சந்திரர் ஆகிய மூவரும் அவரால் முன்னுக்கு வந்தவர்கள்.

சம்பிரதாயமான நாட்டுக் கதைகள், நாட்டுப் பாடல்கள் வளம் நிறைந்தவை. அவற்றில் சில இப்பொழுது ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.[2] அவை பழங்காலப் பாடல்கள் தாம், ஆனால் காலப்போக்கில் பெரிதும் உருமாறி விட்டன. அவற்றின் அசாதாரணமான இலக்கிய நயம் இந்தியாவுக்கு வெளியிலும் போற்றப்படுகிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டுக்கு முன் குறிப்பிடத் தக்க வசன இலக்கியம் வங்காளியில் இல்லை. நூற்றாண்டின் தொடக்கத்தில் வில்லியம் கோட்டைக் காலேஜ் நிறுவப் பெற்றது. அதில் பயிற்சி பெற்ற சிவிலியன் அதிகாரிகளின் உபயோகத்துக்காகப் பாடப் புத்தகங்களை வில்லியம் காரியும் மிருத்யுஞ்சய வித்யாலங்காரும் தயாரித்து வங்க வசனத்துக்கு உருக் கொடுத்தனர். ஓரளவு இது பயனுள்ளதாக இருந்தது. எனினும் உண்மையில் சக்திவாய்ந்த வங்க வசனம் முதல் தடவையாக வெளி வந்தது ராஜாராம் மோகன்ராயின் துண்டுப் பிரசுரங்களிலேதான். சமயம், ஒழுக்கம், ஆசார அனுஷ்டானங்கள் ஆகியவற்றில் மிக விரிவான சீர்த்திருத்தங்களை அவர் இப்பிரசுரங்களில் புகுத்தினர். அவர் ஒரு அபூர்வ மேதை. மதிநுட்பம், சக்தி, பண்பு மிகுந்தவர். ஆனால் சூழ்நிலையை விஞ்சிய கருத்து வேகத்தினர். எனவே, அவரது உதாரணத்தையும் ஞானத்தையும் தமதாக்கிக்

---

2. மைமன்சிங்கின் கதைப் பாடல்கள், கிழக்கு வங்கக் கதைப் பாடல்கள் என்று இரண்டு வெளியீடுகளை கல்கத்தா பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது.

கொண்டு நாட்டிற்கு உழைத்த ஒரு சில வங்க வல்லுனர்கள் தவிர, மக்களில் பெரும்பாலோர் அவரைப் பொருட்படுத்தவே இல்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டில் காணப்பெற்ற வங்க மொழியின் மறுமலர்ச்சி முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய நிகழ்ச்சி. ராம் மோகனது கருத்துக்களும் முயற்சிகளுந்தான் இந்த மறுமலர்ச்சிக்கு முக்கிய காரணங்கள். ராம் மோகனது கருத்துக்களால் பெரிதும் கவரப்பெற்று உருவானவர் தற்காலப் பண்பாட்டின் மகத்தான பிரதிநிதியான ரவீந்திர நாத்.

ராம்மோகன் தீவிர சீர்திருத்தவாதி. நாட்டின் கல்வித் துறையிலும் விரிவான சீர்த்திருத்தங்களைச் செய்ய விரும்பினர். அப்போதிருந்த ஹிந்து காலேஜில் (1817-ல் நிறுவப் பெற்றது) ஆங்கில மொழி இலக்கியம் சில நவீன விஞ்ஞான பாடங்கள் போதிக்கப்பெற்றன. ஆனால் அறவழிக் கல்விக்கும், இந்திய மொழிகள், தத்துவங்களின் போதனைக்கும் ஏற்பாடுகள் இல்லாததால் நிலைமை அவருக்குத் திருப்தியளிக்கவில்லை. எனினும், தன் வழியில், பயனுள்ள வகையில் ஹிந்து காலேஜ் செயலாற்றியது. யௌவன வங்கம் என்று அழைக்கப்பட்ட இளம் சிந்தனையாளர் அதிலிருந்து வெளிப்போந்தனர். ராம் மோகனது கருத்தினரின் வாழ்க்கையில் இடம் பெற்ற சீர்த்திருத்தங்கள் அவர்களுக்குத் திருப்தியளிக்கவில்லை. அவை காலம் கடத்தும் தன்மையின என்று அவர்கள் கருதினர். துரிதமாக, மொத்தமாக கீழ்த்திசை விஷயங்களை யெல்லாம் புறக்கணித்துவிட்டு, மேலை நாடுகளின் அனுபவங்களை யெல்லாம் ஏற்றுக்கொள்ள அவர்கள் ஆசை மிகுதியுள்ளவர்களாகக் காணப்பட்டார்கள். இந்த இரு கோஷ்டியினரின் வழிகள் வெவ்வேருக இருந்த போதிலும் அவற்றைச் சேர்ந்த சிறந்தவர்கள் சீரிய மனத்தினராகவும் ஒழுக்கத்தில் உறுதி கொண்டவர்களாகவும் உண்மைத் தேசபக்தர்களாகவும் திகழ்ந்தனர். ராம் மோகனைப் பின்பற்றியவர்களில் தத்துவபோதனைப்

பிரிவினர் என்று ஒரு கோஷ்டி உண்டு.[3] அவர்களில் சிலர் திறம்பட, சிரத்தையுடன் வங்க உரைநடையை மேலும் வளர்த்தனர். ஆனால் யௌவன வங்கப் பிரிவினர்தாம் நவீன வங்க இலக்கியத்துக்குக் கருத்திலும் அமைப்பிலும் புதுமை மெருகு கொடுத்தனர். மைக்கேல் மதுசூதன தத்தர் யௌவன வங்கத்தினரிடையே முன்னணியில் இருந்தவர். ஆங்கிலத்தில் பாக்களை இயற்றி புகழ்பெற வேண்டும் என்று நெடுநாள் கனவு கண்டவர். கிறிஸ்துவ மதத்தைத் தழுவி (தமது வளர்ச்சிக்கு எவ்வாறான தடையோ இடையூறோ இருக்கலாகாது என்று கருதி) பழைய, புதிய ஐரோப்பிய மொழிகள் பலவற்றைக் கற்று, நவீன வங்க இலக்கியத்தின் முதல் மாபெரும் கவிஞராக விளங்கினார். இந்த இலக்கியத்தைத் தோற்றுவித்தவரும் அவரே என்று சொல்லலாம். நம் நாட்டிற்கும் ஐரோப்பாவிற்கும் இடையே நெடுங்காலமாக இருந்துவந்த பிளவை நீக்கி இரண்டையும் உறுதியாக இணைக்க அவரது இலக்கியப் பாலம் உதவியது. வங்க மறுமலர்ச்சிக்கு இது பெரிதும் இலாபகரமாக இருந்தது. ஆனால், தகுதியற்றவர்கள் இம் முறையைக் கையாள்வதில் ஓர் அபாயம் இருந்தது. பிறகு வந்த யௌவன வங்க பிரமுகர்களில் பங்கிம் சந்திர சட்டோபாத்யாயா "ராஜ்மோகன் மனைவி" என்ற நாவலை, தமது இலக்கிய வாழ்வின் துவக்கத்திலேயே ஆங்கிலத்தில் எழுதினார். பின்னர் ஒன்றன்பின் ஒன்றாகத் துரித கதியில் சக்திவாய்ந்த வங்க மொழி நாவல்களை எழுதி வெளியிட்டார். அக்காலத்து பிரதான வங்க எழுத்தாளர் என்ற அந்தஸ்தை சில ஆண்டுகளில் அவர் பெற்றார். நவீன வங்க உரைநடையில் அவர்தாம் முதல் பெரிய இலக்கிய கர்த்தா.

---

3. அக்ஷய குமார தத்தா, ஈசுவர சந்திர வித்யாசாகர், மகரிஷி தேவேந்திரநாத் டாகுர் ஆகியோர் இந்தப் பிரிவின் தலைவர்கள்.

தமது வாழ்க்கையின் பிற்பகுதியில் பங்கிம் சந்திரர் தேசிய நிர்மாணப் பிரச்சினைகளில் கவனம் செலுத்தினர். பல்வேறு நிகழ்ச்சிகளின் எதிரொலியாக இந்த தேசியம் பிறந்து வளர்ந்த காலம் அது. படித்த ஹிந்துக்களின் வளர்ந்துவந்த அபிலாஷைகளை அங்கீகரிக்க பிரிட்டிஷ் ஆட்சியாளர் பிடிவாதமாக மறுத்து வந்தனர். தமது சுய கௌரவமும் தன்னிறைவும் இம்மாதிரி புறக்கணிக்கப்பட்டதால் படித்த ஹிந்துக்களின் மனம் பெரிதும் புண்பட்டது. "ராஜஸ்தானத்து வரலாற்றுக் கதைகள்" என்று டாட் எழுதிய கம்பீரமான நூலின் செல்வாக்கு அவர்களது தேச பக்த உணர்ச்சிகளை ஊக்குவித்தது. நாட்டுப்பற்றை உணர்ச்சிபூர்வமாகச் சித்திரிக்கும் நாடக வகைகள், புதிதாகத் தோன்றிய தேசிய நாடக அரங்கில் நடத்தப்பட்டன. பிரம்மஞான சங்கத்தைச் சேர்ந்த பிளாவெட்ஸ்கி அம்மையும் பிற ஐரோப்பிய அறிஞர்களும் தொன்மையான ஹிந்து மதத்தையும் தத்துவ தரிசனத்தையும் போற்றிப் புகழ்ந்தனர். பங்கிம் சந்திரர் சிந்தனைத் தெளிவற்றவரல்லர். ஆயினும் அக்காலத்து நாட்டுப்பற்றின் காம்பீர்யமும் இனப் பெருமையுணர்ச்சியும் இணைந்த வசீகர கவர்ச்சிக்கு எப்படியோ அவரும் இரையானார். தேசபக்தர், ஹிந்து தேசியவாதி என்ற வகையில் அவருக்குக் கிடைத்த உடனடியான வெற்றி மகத்தானது. எனினும் அவரது மேதையின் சிறந்த அம்சம் ஓங்கமுடியாதபடி அது உண்மையில் ஆழ்த்தி விட்டது. தமது வாழ்க்கையின் அந்திம காலத்தில் அவர் இயற்றிய நாவல்கள் முற்றிலும் தகுதியற்றவை யெனச் சொல்வதற்கு இல்லை. எனினும் நாட்டின் சிக்கலான தேசியப் பிரச்சினைகளைச் சமாளிக்க இயலாதது அவரது மகிழ்ச்சியற்ற நிலைமையைக் காட்டுகிறது.

---

4. "தர்ம தத்துவம்" என்ற நூலில் வங்க முஸ்லிம்களின் கலாசார நிலைமையைப் பற்றி பங்கிம் சந்திரர் கூறி

அவரது சிந்தனையில் சிறிது குழப்பம் இருந்தபோதிலும் அவரது தேசபக்தியும் நாட்டின் வீழ்ச்சியுற்ற நிலையைக் கண்டு அவர் பட்ட மனவேதனையும் முற்றிலும் உண்மை யானவையே. தேசிய வாழ்வின் பெரிய ஆக்க சக்தியாக அவர் விளங்கினுர். தேசிய மறுமலர்ச்சிக் கருத்துக்களை பங்கிம் சந்திரரிடமிருந்து கற்றவர்கள் ஹேம சந்திர, நவீன சந்திர என்ற கவிகள். அவர்கள் தம் காலத்தில் பெரும் புகழ் எய்தினர். ஆனுல் பிறகு அவர்களது செல்வாக்கு குறைந்தது. ராமேச சந்திர தத்தா, பங்கிம் சந்திரரைப் பின்பற்றிய கீர்த்தி வாய்ந்த ஐ. சி. எஸ். அதிகாரி. அவர் வங்க மொழியில் பல சமூக, சரித்திர நாவல்களை இயற்றினுர். எனினும் ஒரு பொருளாதார நூலாசிரியர் என்றே இன்றைய உலகம் அவரை மதிக் கிறது. பிஹாரிலால் சக்கரவர்த்தி, சுரேந்திரநாத் மஜூம்தார் என்ற கவிகள் அக்காலத்தினர். வாழ்ந்த போது அவர்கள் அதிகச் செல்வாக்குடன் இருக்க வில்லை. ஆனுல் அவர்களது படைப்புக்கள் உள்ளூர உயர்ந்த இலக்கியத் தரம் வாய்ந்தவை என்று பின்னர் வர வர அதிகமாகப் போற்றப்பட்டன. பிஹாரிலால் இயற்கை எழிலைப் பருகியவர். தமது மக்களை நேசித்த வர். மிக மிக எளிய வாழ்க்கையை நடத்தியவர். இள வயதினராக இருந்த ரவீந்திரநாதின் மனத்தை அவர் கணிசமாக ஆட்கொண்டார்.

இந்த ஹிந்து தேசியச் சூழ்நிலையில்தான் ரவீந்திர நாத் வளர்ச்சி கண்டார். ஆனுல் அவரை இது எவ் வகையிலும் பாதிக்கவில்லை. இதற்குக் காரணங்கள்

---

யிருப்பதைக் காண்க. “வங்க தேசகிருஷக்” என்ற நூலில் விவசாயிகளின் வருத்தந் தோய்ந்த நிலையை அவர் மிகச் சிறப்பாக ஆராய்கிருர். ஆனுல் தேசிய பொருளாதாரத்தில் கை வைக்க விரும்பாததால் பரிகாரம் எதையும் காட்ட அவரால் அடியோடு முடியவில்லை.

இரண்டு. சிறு பிராயம் முதலே அவர் கவிதையின் பக்தராகிவிட்டார். காளிதாசர், ஜயதேவர் கவிதைகளும் வைஷ்ணவ பிரபந்தங்களும் ஒருபுறமும், பைரன், ஷெல்லி வேர்ட்ஸ்வொர்த், கீட்ஸ், பிரௌனிங் ஆகியோர் ஒருபுற மும் அவரைக் கவர்ந்தனர். இரண்டாவதாக, அவர் பிறந்த உயர்குடும்பம் ஆழ்ந்த நாட்டுப்பற்றும் தன்மானமும் படைத்தது, படாடோபத்தில் பற்றில்லாதது. இந்த நல்லுணர்ச்சிகளை இளம் டாகுரின் மனத்தில் ஆழப் பதியவைத்தவர் கவிஞர் பிஹாரிலால் சக்கரவர்த்தி.

ரவீந்திரநாத் இயற்கைக் கவிஞராகவே முக்கியமாக ஏற்றம் கண்டார். மதிநுட்பமும் மன நெகிழ்ச்சியும் அவ ரிடம் மிகுதியாகக் காணப்பட்டன. கலை கலைக்கே என்ற கொள்கையினரிடையே முழு மலர்ச்சி கண்ட கவிஞர் அவர். இருபத்தாறுவது வயதுக்குள் கவிதைக் கலையில் அவர் முழுமை பெற்றுவிட்டார். தெம்பூட்டும் கீதங்கள், சிறு நாடகங்கள், சிறு கதைகள், சிறு கட்டுரைகள் எட்டு ஆண்டுக் காலம் ஏராளமாக வரையப்பெற்றன. பிறகு சற்று ஆழ்ந்த சிந்தனையில் அவருக்கு நாட்டம் ஏற்பட் டது. வாழ்க்கையின் உண்மையைப் புகுந்து பார்க்கும் தன்மையினர் ஆனார். இயற்கையின்பால் இருந்த இடை யறாக் காதலுடன் ஆண்டவனை அடைய வேண்டுமென்ற ஆர்வமும் இணைந்து, அவரது சத்திய சாந்நித்ய தர்சனப் பிரக்ஞை உச்சநிலையை அடைந்தது. நாட்டுப் பற்றும் தேசியமும் அவருக்கு விசேஷப் பொருள் கொண்டவை ஆயின. தன்னலத் துறவுணர்ச்சி மிகுந்த ஹிந்துக்களிடம் அவருக்கு விசேஷ பரிவு உண்டு. எனவே அவர் ஹிந்து தேசியவாதியானார். பங்கிம் சந்திரரும் அவரது வழியி னரும் பின்பற்றிய முறைகள் டாகுரின் முறையிலிருந்து வேறுபட்டன. அப்போது செல்வாக்குப் பெற்றிருந்த ஹிந்து வழிமுறையில் டாகுர் நாட்டம் கொள்ளவில்லை. உபநிடதங்களும், புத்தரும் வெளியிட்ட உயர்ந்த வாழ்க் கைக் கருத்துக்களையே அவர் பிரகாசப்படுத்தினார்.

உயர்நோக்கம் கொண்ட அந்த வாழ்க்கை நெறியில் மீண்டும் செல்லவேண்டும் என்று விரும்பினர். புது வாழ்வில் நாட்டமிருந்தாலும், அதிகார ஆசையையும் சிற்றின்பப் பற்றுதலையும் வளர்க்கும் ஐரோப்பாவுக்கு அடிமையாகி விடக் கூடாது என்று கருதினர். 1900-ம் ஆண்டில் தமது நாற்பதாவது வயதில், இவ்வாறு எண்ணமிட்டார் ரவீந்திரநாதர். ஒரு மகா கவி என்ற அந்தஸ்து எல்லாவகைகளிலும் அவருக்கு ஏற்பட்டுவிட்டது. அவரது திடசித்தம் அவருக்கு மேலும் சிறந்த எதிர்காலம் உண்டு என்பதற்கு அறிகுறியாக இருந்தது. ஆனால் அவர் தமது மாகாணத்திலே பரவிய புகழ் பெற்றிருக்கவில்லை. அதற்கு வெளியே அவரை யாருக்குமே தெரியாது எனலாம்.

## இருபதாம் நூற்றுண்டு

இருபதாவது நூற்றுண்டின் தொடக்கத்தில் நூறு பாடல்களைக் கொண்ட "நைவேத்தியம்" என்ற ரவீந்திரரின் தொகுப்பு வெளியாயிற்று. அவை கருத்துச் செறிவுள்ள பதினுலடிப் பாடல்கள் (சானெட்டுகள்). ஜீவன்களில் ஆண்டவன் உறையும் பிரக்ஞை, அன்றுடம் வாழ்க்கையைப் புனிதமாக நடத்த வேண்டிய நியதி, துர்ப்பாக்கிய நிலையிலிருந்த தாய்நாட்டின் பாலுள்ள அவசரக் கடமைகள் முதலியவைபற்றி கவிஞனின் கருத்துக்கள் அப்பாடல்களில் நிறைந்திருந்தன. தாய் நாட்டின் துரதிருஷ்டமான அடிமை நிலை இருவகைப்பட்டது. ஜெயித்து ஆண்டுவந்த அன்னியனின் அகந்தை ஒருபால், மக்களின் விவேகமற்ற, உறுதியற்ற போக்கு மற்றெருபால். இது சக்தி வாய்ந்த தொகுப்பு. இந்திய சமுதாயத்துக்கும் மனித வர்க்கத்துக்கும் டாகுர் இயற்றியளித்த மிகச் சிறந்த கவிதைச் செல்வங்களில் இது ஒன்று. மண்ணுசைத் திமிரில் ஆழ்ந்து கிடந்த மேலைநாடுகளுக்குப் பேராபத்து வந்தே தீரும் என்பதை இந்த

நூலில் அவர் முன்கூட்டியே எச்சரித்திருந்தார்.[5] இந்தத் தொகுப்பைத் தொடர்ந்து இயற்றிய பாடல்களுக்குப் பின் ரவீந்திரருக்கு உலக அங்கீகார முத்திரை 1913-ல் கிடைத்தது.

1905-ல் லார்ட் கர்ஜான் வங்கத்தை பிரிவினை செய்தார். ஆனால் வங்கம் தலைவணங்க மறுத்த அற்புதத்தைக் கண்டார். அந்த மகத்தான எதிர்ப்பின் ஆத்மிக சக்தியை அதன் முழுப் பெருமையுடன் ரவீந்திரநாத் தமது படைப்புக்களில் காட்டினார். அதுவரை கண்டறியாதவாறு வங்க மக்களை அவரது பாடல்களும் உரைகளும் ஊக்குவித்தன. தேசிய வாழ்வின் ஒவ்வோர் அம்சத்திலும் சுய உதவியை அவர் வற்புறுத்திப் பேசினார். பிரிட்டிஷாரிடம் துவேஷம் பாராட்டும் ஒரு சொல்லைக்கூட அவர் உபயோகிக்கவில்லை. அந்தப் பாடல்களும், பேச்சுக்களும் இன்றுகூடச் சுவை குன்றாது விளங்குகின்றன. இதற்குக் காரணம் அவை வெறும் நாட்டுப்பற்றிலிருந்து எழுந்தவைகளாக இராமல், தெய்விகப் பிரக்ஞை அவற்றில் பரந்து காணப்பட்டதுதான். சத்தியத்தின்பாலும் தமது நாட்டு மக்களின்பாலும் அவருக்கிருந்த மகத்தான பொறுப்புணர்ச்சி அவரது தேசபக்திக்கு வலுவூட்டியது. எல்லாப் பெரிய கலைஞர்களையும் போலவே ரவீந்திரநாதரும் ருசிகரமான, நினைவைவிட்டு அகலக்கூடாத ஆண்களையும், பெண்களையும் சிருஷ்டித்துக் கொடுத்துள்ளார். ஆனால் தாம் எழுதிய எல்லாவற்றிலும் தமது உள்ளக் கிடைக்கையை வெளிப்படுத்தியதில் அவர் அடைந்த வெற்றிதான் மகத்தான சாதனை. உண்மையும் வாழ்வின் இன்பமும் சேர்ந்து அற்புதமாகப் பரிமளிக்கச் செய்த நுட்பமான இதயக் குரல் அவற்றில் ஒலிக்கின்றது.

---

5. ஒரு பாடலில் கடைசி இரண்டு அடிகள் பின்வருமாறு:
“ அழிவை நோக்கி விரைந்து பாயுது தேசியம்
சுயநலக் குவியல் நிறைந்து மோதுது மறைந்த
பாறை மேல் ”

பகிஷ்காரமும் சுதேசியமும் பிரிவினையைத் தொடர்ந்து வந்தன. ஆனால் ரவீந்திரருக்கு மகிழ்ச்சி தரக்கூடிய நிலையில் அவற்றை நடத்தி வைக்கக் கூட வில்லை. அவர் எக்காலத்திலும் ஏற்கக்கூடாத பயங்கர இயக்கமாக அது கிளைத்தது. எனவே இயக்கத்துடன் அவரது தொடர்பு அறுந்துவிட்டது. அவருடைய மனம் பெரிதும் வேதனைப்பட்டது. ஆனாலும் அவரது ஆத்மா னுபவம் இதன் விளைவாக மேலும் ஆழம் கண்டது. சுதேசிய இயக்கத்துடன் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டதி லிருந்து அவரது ஹிந்து அல்லது இந்திய தேசியம் விரி வடைந்துகொண்டே வந்தது. எல்லாவிதமான அகந்தை களும், தனது நிலைதான் சரி என்ற அகம்பாவமும், அவை குற்றமற்றவையாக அல்லது நியாயமானவையாகத் தோன்றியபோதிலும்—அவற்றின் விளைவு இழிநிலைதான் என்பதை அவர் விரைவிலேயே கண்டு கொண்டார். இந்த வேதனையின் மூலம் அவர் மனத்தூய்மை பெற்றார். அவரது தேசியம் சர்வ தேசியத்துடன் ஒன்றியது. இதனால் அவர் விஷயத்தில் தப்பபிப்பிராயமும் ஏற்பட் டது. ஆனால் கடவுள் தமக்குப்'புலப்படுத்தியது அதைத் தவிர வேறு மார்க்கமில்லை என்பதை அவர் திடமாக நம்பி னார். உண்மையான சர்வதேசியம், கலப்பற்ற தேசிய அபிலாஷைகளுக்கு எதிரானது அல்ல. அதுமட்டுமல்ல. அதை அடிப்படையாகக் கொண்டால்தான் நியாயத்தில் நிலைத்திருக்க முடியும். சில ஆண்டுகளுக்குப் பின் ஜப் பானிலும், அமெரிக்காவிலும் தேசியத்தைப் பற்றி அவர் புரிந்த பிரசங்கங்களில் இந்த திடநம்பிக்கையை பிரதான மாகக் காணலாம். தமது காலத்தின் விசேஷமான பீடை களைப் பற்றி அவரது சிந்தனைகளில் தவறு ஏதும் காண வில்லை. அவரது ஆத்மா உண்மையொளி வீசியது என் பதைப் பிந்திய உலக நிகழ்ச்சிகள் நிரூபித்தன.

இருபதாவது நூற்றாண்டு தொடங்குமுன்னரே ரவீந் திரநாத் தலைசிறந்த கவிஞராகி விட்டார். நிறைய நூல்

களை இயற்றி வெளியிட்டிருந்தார். எனினும், அவரது கீர்த்தி எங்கும் பரந்து காணப்படவில்லை. பிரபலக் குறைவு இருந்தாலும் அவரிடம் மதிப்புள்ள நண்பர்களும் சீடர்களும் இருந்தனர். அவர்கள் அவரைப் பெரிதும் போற்றினர். அவரது அசாதாரணமான பெருமையை உணர்ந்திருந்தனர். சுதேசிய இயக்கத்தில் அவர் கொண்ட ஈடுபாடு மக்களிடையே அவர் புகழ் பரவுவதற்கும், அவரது இலக்கியங்களை நிறையப்பேர் ரசிப்பதற்கும் துணைபுரிந்தது. அவரது அடிச்சுவட்டில் எழுதிய பலர் வங்கத்தின் பெருமைகளைப் புகழ்ந்தனர். உலக வாழ்க்கை வசதிகள் அரிதாக இருந்தாலும் ஆத்மிகத் துறையில் வங்கம் சிறப்புற்றோங்கியதெனப் பாடினர். ஆனால் டாகுரைப் பின்பற்றி அவர்கள் புனைந்த பாடல்களில் அவர் கையாண்ட உத்திகள்தாம் இருந்தன. கருத்தாழமோ உணர்ச்சி வேகமோ அவற்றில் இல்லை. ரவீந்திரநாத் காலத்தில் வாழ்ந்த கவிஞர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் தேவேந்திரநாத் ஸென், அட்சய குமார பரன், துவிஜேந்திரலால் ராய் ஆகியோர். ரவீந்திரரைப் பின்பற்றி எழுதி வங்க மொழியை அற்புதமாகக் கையாண்டு புகழ் பரவியவர் சத்தியேந்திரநாத் தத்தா. கருணாநிதான பானர்ஜி, ஜதீந்திரநாத் ஸென் குப்தா, மோகித்லால் மஜூம்தார் ஆகியோரும் பெயரும் புகழும் அடைந்தனர். கருணாநிதான் இயற்கையையும் கடந்துபோன பொற்காலத்தையும் நினைந்து பாடினார். ஜதீந்திர நாத், மோகித்லால் பாடல்களில் அவநம்பிக்கையுணர்ச்சி தொனித்தது. குமுத ரஞ்சன மல்லிக், காளிதாச ராய் ஆகியோரும் மக்கள் விரும்பிப் படித்த கவிஞர்கள்.

கற்பனைக் கவிதைத் துறையில் ரவீந்திரநாதரை முதலில் பின்பற்றியவர்களில் நகைச்சுவைக் கதைகளை எழுதி நிறைய வாசகர்களைப் பெற்றவர் பிரபாத்குமார் முகர்ஜி. சாரு சந்திர பானர்ஜியும், சௌரேந்திர மோகன் முகர்ஜியும் ஓரளவு பிரபலமாகியிருந்தனர். ஆனால் அவர்களை

யெல்லாம் மிஞ்சி விட்டார் சரத் சந்திர சாட்டர்ஜி ரவீந் திர நாதரின் மனிதாபிமானமும் கலையுணர்வும் அவரைப் பெரிதும் ஆட்கொண்டன. பத்தொன்பதாம் நூற்றுண் டின் இறுதியில் அவர் எழுதத் தொடங்கினுர். எனினும் தமது நூல்களை வெளியிடுவதற்கு அவரை ஒப்பச் செய் வது 1913-ம் ஆண்டு வரை சாத்தியப்படவில்லை. அவரது வெற்றி வியக்கத்தக்கதாயிருந்தது. 1938ல் அவர் கால மாஞர். அதுவரை அவருக்கு வெற்றிமயந்தான்.

முதலில் சரத் சந்திரர் சக்திவாய்ந்த பிரத்யட்சவாதி என்று கருதப் பெற்ருர். எனவே வாசகர்களில் பெரும் பாலோர் அவரிடம் அபிமானம் வைத்தார்கள். சற்று வயதான பெரியவர்கள் வன்மையாக அவரைக் கண்டிக்க வும் செய்தனர். இதற்குக் காரணம் வங்க இலக்கியப் பரம்பரையில் பிரத்தியட்சவாதம் மிக அபூர்வமாக இருந்து வந்ததே. ஆனுல் குறை கூறுவது சில ஆண்டுகளில் அடங்கிவிட்டது. தமது நிலை தவறு என்று உணர்ந்து விமரிசகர்கள் மாறிவிடவில்லை. அவர்கள் சொன்னதற்கு மக்கள் செவிமடுக்கவில்லை. வேறு எந்த நவீன வங்க எழுத்தாளரும் இவ்வளவு பரவலாக, உண்மையான புகழ் அடைந்ததில்லை. பங்கிம் சந்திரரும், ரவீந்திர நாதருங் கூட இதற்கு விலக்கு அல்ல. இன்னும் எதிர்ப்புக் குரல் கள் ஒளித்துக் கொண்டிருக்கின்றனவாயினும் சரத் சந்தி ரரைப் படிப்போர் பரவலாக இருக்கவே செய்கின்றனர்.

சூருவளியாக வந்து வங்க வாசகர்களை சரத் சந்திரர் கவரத் தொடங்கி ஐம்பது ஆண்டுகளாகின்றன. எனவே உணர்ச்சிப் பெருக்கு இல்லாமல் அவரை நம்மால் இன்று நன்கு மதிப்பிட இயலும். அவரது கற்பனுசக்தி அவ் வளவு வளமுள்ளதல்ல. அவரது அக்கறைகள் போதிய வாறு பரந்து காணப்பெறுபவையும் அல்ல. பிரத்தியட்ச வாத எழுத்து, உணர்ச்சிக்கு எதிரிடையானது. ஆனுல் சரத் சந்திரரின் படைப்பில் உணர்ச்சி வேகத்தின் மிகுதி யைக் காணலாம். இந்தப் பெரிய குறைகள் இருந்துங்

கூட அவரது அருமை பெருமைகள் மங்குமெனத் தோன்றவில்லை. பெருந்துன்பங்கள் வாய்த்தன, அல்லது அவர்மீது திணிக்கப்பட்டன. அவை பலதரப்பட்டவை. தாம் ஆழ்ந்து அனுபவித்ததைத் தயக்கமின்றி எழுதியிருப்பதுதான் இதற்குக் காரணம். இதுதான் அவரது பிரத்தியட்சவாதம். இது காணப்பெருத எழுத்தாளன் மதிப்புப் பெற இயலாது. ஆனல் சரத் சந்திரர் பெரிய லட்சியவாதியுங்கூட. மனிதன் சுபாவத்தில் அருமை பெருமைகள் படைத்தவன்; அவனது தவறுகளும், பாபங்களும், தோல்விகளும் வெளிப்புறம் ஒட்டிக் கொண்டிருக்கும் தூசும் மண்ணுந்தான். அவற்றை ஒரு நொடியில் உதறியெறிந்துவிட்டு மீண்டும் தன் இயற்கையான மென்மையை அவனல் அடைய இயலும் என்ற ஆழ்ந்த நம்பிக்கை அவருக்கு உண்டு.

சரத் சந்திரரின் இந்த மனப்பான்மையும் காரணமின்றி எழும் உணர்ச்சித் தன்மையதுதான் என்று கருதுவோர் சிலர் உண்டு. ஆனல் அது உறுதிப்பாடுடைய தன்மை. அவரது சித்தாந்தம் மனிதனைக் காத்துப் போஷிப்பதே. சித்தாந்தங்களில் கெடுதலானவையும் உண்டு. கெட்டதோ நல்லதோ அதன் இருக்கையைப் பொருட்படுத்தத்தான் வேண்டும். சரத் சந்திரரின் நம்பிக்கையானது, அதிருஷ்டவசமாக சீரியதாக இருந்தது. அவரது கலையானது உயர்ந்த நம்பிக்கையுடன் இணைக்கப் பட்டிருந்ததால்தான், பலவீனங்கள் இருந்துங் கூட, அவரால் வெற்றி காண முடிந்தது. இலக்கிய விமரிசனத்திலாகட்டும், வேறு வகை மதிப்பீடுகளிலாகட்டும், தகுதியானது, உண்மையான திறன் இருக்குமாயின், குறைகள் பலவிருந்துங்கூட, அவற்றை மீறி எடுத்துக் காட்டும்.

சரத் சந்திரருக்குச் சில ஆண்டுகள் பிறகு நீதி நிபுணரான டாக்டர் நரேஷ் சந்திர சென் குப்தா என்ற மற்ருெரு பிரத்தியட்சவாதியின் படைப்புக்களை வங்க

வாசகர்கள் பரவலாகச் சுவைத்தனர். ஆனால் அவரது புகழ் பின்னர் கணிசமாக மங்கிவிட்டது. எத்தனையோ விதவிதமான தகவல்கள் தரப்பட்டிருந்ததால் அவரது நாவல்கள் பொதுமக்களின் கவனத்தை ஈர்த்தன. கருத்துக்களின் உருவகத் தோற்றமாகப் படைக்கப் பெற்றவை அவரது பாத்திரங்கள். எனவே அவை விரைவில் தேய்ந்து மறைந்துவிட்டன.

உணர்ச்சிப் பெருக்குள்ள சிறுகதைகளை எழுதி கல்கத்தா இலக்கியக் களத்தில் 1919ல் புகுந்தார் காஜி நஸ்ருல் இஸ்லாம். அப்பொழுது அவருக்கு வயது இருபது இருக்கும். புலமையில்லை. எனினும் அவரது சிறுகதைகளில் ஒரு வசீகரம் இருந்தது. இளவயதினரும் எழுத்தாளரும் அவரை விரும்பிப் படித்தனர். அற்புதமான உற்சாகம் ததும்புவதன் காரணமாக இளைஞர்களையும் பெரியவர்களையும் அவரது படைப்பு ஒருங்கே கவர்ந்தது. காங்கிரசில் இரண்டு வகையும் சேர்ந்த ராஜீய உத்வேகம் இருந்த நெருக்கடிக் காலமது. அதை ஆழ்ந்து அனுபவித்தவர் நஜ்ருல். வங்க சுதேசி இயக்கம், குறிப்பாக பயங்கரவாதிகளின் சாகஸச் செயல்கள் அவரைப் பிரமாதமாகக் கவர்ந்தன. புதிய சூழ்நிலை அவரது கற்பனைக்கு ஆக்கமளித்தது. வீரப் பாடல்களையும் கவிதைகளையும் புனைந்தார். அவை விரைவில் செல்வாக்கு அடைந்தன. இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு 'வித்ரோகி' (கலகக்காரன்) என்ற தமது புகழ்பெற்ற கவிதையை அவர் இயற்றினார். உடனடியாக வங்கமெங்கும் அவரது கீர்த்தி பரவியது. பிறகு அகில-இந்தியச் செல்வாக்கும் கிடைத்தது. எழுத்து அவரைச் சிறையிற் கொண்டு சேர்த்தது. அங்கு அவர் நாற்பது நாட்கள் உண்ணாவிரதம் இருந்தார்.

விடுதலைப் போராட்டத்தில் நஜ்ருல் ஒரு மாபெரும் சக்தியாகத் திகழ்ந்தார். எல்லாவகைக் கொடுமைகளையும் அநீதிகளையும் முழு மூச்சுடன் எதிர்க்கும் வகையில்

அமைந்த பாடல்களும் கவிதைகளுமே இந்தப் போராட்டத்தில் அவர் பிரயோகித்த ஆயுதங்கள். எண்ணற்ற காதல் கீதங்களை, முக்கியமாக கஜல்களை, அவர் இயற்றினர். பல சமயப் பாடல்களையும் புனைந்தார். சில நாவல்களையும் நாடகங்களையும் வரைந்தார். ஆனல் அவருக்குப் புகழ் அளித்தவை பெரும்பாலும் கவிதைகளும் பாடல்களுமே.

நஜ்ருலின் புகழ் உச்சத்தில் இருந்தபோதே அவரது கவிதைகளின் தரத்தைக் குறைகூறியோர் உண்டு; இன்றும் கண்டனங்கள் கேட்கின்றன. அவை மாசு படிந்தவை என்பதைப் பற்றி ஐயமில்லை. அனுபவ முதிர்ச்சி அவரிடம் பெரும்பாலும் இல்லை. சொற்கள் பாந்தமாக அமைவதில்லை. ஆனல் அச்சத்தையே அறியாத உயர்ந்த ஆத்மாவின் அருங்குணங்களை அவற்றில் காணலாம். நம்மைச் சுற்றி வாழ்ந்து, இகழ்ச்சிக்குரியோர் என மதிக்கப்பெறும் மக்களிடம் அவருக்கு நம்பிக்கையுண்டு. அவரது குறைகளைப் பாடல்களில் காணலாம்; ஆனல் உயர்ந்த தன்மையின் அபூர்வமான மின்வெட்டுக்களும் அவற்றில் தென்படுகின்றன. குணமாகக்கூடாத கடும் நோய் பதினைந்து ஆண்டுகளாக அவரை வதைத்து, இருந்தும் இல்லாததுபோலச் செய்துவிட்டது. எனினும் வங்கத்தின் இரு பகுதிகளிலும் எண்ணற்ற மக்கள் ஆண்டுதோறும் அவரை நினைந்து போற்றுகின்றனர். வால்ட் விட்மனைப் போல அவர் முழுக்க முழுக்க ஜனநாயகப் புலவர், மக்கள்-கவிஞர். அவரைப் புரிந்து கொண்டு அவரது உணர்ச்சிப் பெருக்கிற்கு அவர்கள் நெகிழ்ந்து கொடுக்கிருர்கள். நாட்டு மக்கள் முழுமை காண்கையில் இன்னும் அதிகமான உற்சாகத்துடன் தமது கவிஞனைப் போற்றக்கூடும்.

நஜ்ருல் இஸ்லாமுக்குப் பிறகு கிராமியக் கவிஞர் என்ற புகழ் பரவலாகக் கிடைக்கப் பெற்றவர் ஜஸிமுத்தீன். வங்க கிராமிய இலக்கியம் அசாதாரணமான வளம்

நிறைந்தது. அதை அவர் தமது மூலாதாரமாக்கிக் கொண்டார்.

பிரிட்டிஷ் காலத்துக்கு முந்தைய வங்க இலக்கியத்தில் வங்க முஸ்லிம்கள் கணிசமாகப் பங்கு பற்றியிருந்தனர். 17-ம் நூற்றாண்டில் இருந்த தௌலத் காஜி, ஆலாவோல் ஆகியோரைப் பற்றி முன்னரே பிரஸ்தாபித்துள்ளோம். குறிப்பிடத்தக்க பிற முஸ்லிம் கவிஞர்களும் இருந்தனர். பாவுல்களிடையே முஸ்லிம்கள் தலைவர்களாகத் திகழ்ந்தனர். பழைய முஸ்லிம் அரசர்களும் பிரபுக்களும் வங்க இலக்கிய வளர்ச்சிக்குத் தந்த ஆதரவு கணிசமானது. அந்த ஆதரவுதான் அக்காலத்தில் மொழியைப் போஷித்தது. சாமானிய மக்களின் பழகு மொழியைப் பிராமணர்கள் ஆர்வத்துடன் கையாளவில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய புதிய இலக்கியத்தில் முஸ்லிம்கள் சுறுசுறுப்பான பங்கு பற்றவில்லை. அந்நூற்றாண்டின் முன்னணி எழுத்தாளரில் முஸ்லிம் எவருமில்லை. புது நிலைமைக்கேற்ற புதுத் தலைமை தோன்றாத துரதிருஷ்டமே இதற்குக் காரணம் என்ற விளக்கம் தரப்படுகிறது. அந்த சமூகத்தில் விழிப்புற்றிருந்தவர்களை, ராஜீய காரணங்களால், "இஸ்லாத்தின் சீரிய தூய்மைக்குத் திரும்புவோம்", என்ற வஹ்ஹாபி கோஷம் ஈர்த்தது. இதன் விளைவாக அரை நூற்றாண்டுக்கு ஆங்கிலக் கல்வியைப் புறக்கணித்தனர். அவர்களில் பலர் 1857ல் பிரிட்டிஷ் அதிகாரத்துக்கு எதிரிடையாக, ஆயுதந் தாங்கி கலகத்தில் ஈடுபட்டனர். இதனால் அச் சமுதாயம் பரவலான பேரிடருக்கு உள்ளாயிற்று. ஆங்கிலக் கல்வியைப் பரப்புவதின் மூலம் வருவாய்ச் சாதனங்களை அமைத்துத் தந்து அந்த இடரை மிதப்படுத்துவதில்தான் அப்போதைய தலைவர்களாயிருந்த நவாப் அப்துல் லதீப்கான் பகதூர் வங்காளத்திலும், ஸர் ஸையத் அஹ்மத் ஐக்கிய மாகாணத்திலும் முனைந்திருந்தனர். ஆனால் மிகுதியாகத் தேவைப்

பட்ட மதிநுட்பப் பயிற்சிக்கும் ஆத்மிக மறுமலர்ச்சிக்கும் அவர்கள் எதையும் செய்யவில்லை. எனினும் உலக நிகழ்ச்சிகளிலிருந்து, முக்கியமாக வங்க சுதேசி இயக்கத்திலிருந்து, இந்தப் படிப்பினை அவர்களுக்குக் கிட்டலாயிற்று. பத்தொன்பதாம் நூற்றுண்டில் தோன்றிய மறுமலர்ச்சி கவர்ச்சிகரமாக, புரிந்துகொள்ளக்கூடிய வகையில் உருப்பெற்றது. ஸ்ரீமதி ஆர். எஸ். ஹுஸ்ஸேன் என்று மக்கள் அறிந்த பீகம் ரொகேயா காஜி இம்தாதுல் ஹக், லுட்பர் ரஹ்மான் போன்ற தலைசிறந்த இலக்கிய கர்த்தாக்கள் முஸ்லிம்களிடையே இருபதாவது நூற்றுண்டின் தொடக்கத்தில் தோன்றினர். அதிகமாக எழுதாவிட்டாலும் தரமுள்ள படைப்புக்களாக இவர்கள் வழங்கினர். மனிதாபிமானமும் உண்மையுணர்ச்சியும் உள்ளவர்களாகையில் மனதில் பதியும்படி எழுத இவர்களால் முடிந்தது.

நஜ்ருல் இஸ்லாமைப் பற்றிக் கூறினேம். அவர் வெளிப்போந்த சில ஆண்டுகளுக்குள் டாக்கா (கிழக்கு வங்கம்) பல்கலைக் கழக வட்டாரத்தில் முஸ்லிம் சாஹித்திய சமாஜம் (முஸ்லிம் இலக்கிய சங்கம்) என்ற பெயருடன் ஒரு சங்கம் தோன்றியது. "விவேகத்தின் விடுதலை" அதன் குறிக்கோளாயிற்று. துருக்கியில் கமால் அடாதுர்க் செய்த சீர்திருத்தங்கள், ராம் மோகன் ராய், பின்னர் ரவீந்திரநாத், பிரமதா சௌதுரி, உலகம் நன்கறிந்த சூபிகள், முகம்மத் நபிநாயகம் ஆகியோரின் செல்வாக்கு இவர்களிடையே மிகுந்து காணப்பெற்றது. டாக்கா முஸ்லிம் காலேஜிலும் பல்கலைக் கழகத்திலும் பயின்ற மாணவர்கள் இதன் விளைவாக விவேகமும் பண்பும் அடைந்தனர் என்று பல்கலைக் கழக அதிகாரிகளே அப்பொழுது ஒப்புக் கொண்டனர். மாகாணமெங்கும் படித்த முஸ்லிம்கள் அதற்கு வரவேற்பு அளித்தனர். ஆனல் விரைவில் சமூகத்தின் வைதிகப் பிரிவினர் இதை வன்மையாக எதிர்க்கலாயினர். மூன்ருவது ஆண்டுக் கூட்டத்

துக்குப் பிறகு டாக்கா பல்கலைக் கழக முஸ்லிம் மண்டபத்தில் முன்போலக் கூடுவதற்கு அதற்கு அனுமதி கிடைக்கவில்லை. எஞ்சியுள்ளது நீண்ட கதை. தேசத்தின் பிரிவினையில் கொண்டுபோய் விட்ட வகுப்புவாதத் தாங்கல் மிகுதியாக இருந்த காலமது. அந்த சமாஜத்தின் உறுப்பினர் சிலர் இன்னும் எழுத்துப் பணியாற்றி வருகிறார்கள்.

டாக்காவில் முஸ்லிம் பகுத்தறிவுவாதிகள் தோன்றிய போதே, தம்மைத் தீவிரப் புதுமைவாதிகள் என்று சொல்லிக்கொண்ட சுமாரான திறமையுள்ள இளம் எழுத்தாளர் குழு ஒன்று கிளம்பியது. கோகுல நாக், பிரேமேந்திர மித்திரா, ஜீவனானந்த தாஸ்,[6] புத்த தேவ போஸ், அசிந்தியா சென் குப்தா ஆகியோர் இதில் முக்கியமாக விளங்கியவர்கள். இக் குழுவின் குறிக்கோளை பிரேமேந்திர மித்திரா பின்வருமாறு வருணித்தார்.

“ நான் கருமார்களின் கவி
தச்சர், பித்தளை ஊழியர், அன்றாடக்
கூலியாட்களின் கவி
கீழ் நிலையாளரின் கவி நான் ”

புத்த தேவ போசும் அசிந்தியா சென் குப்தாவும் அப்பொழுதே பிராய்ட் வழியினர் என்று எல்லோருக்கும் தெரிந்தவர்கள். சிறு வயதிலேயே அவர்கள் நிறைய எழுதினர். தமக்கு உசிதமெனப் படுவதையே கூறுவதாக அவர்கள் உரக்கக் கூவினர். இந்த அதிதீவிரப் புதுமையாளர் விஷயமாக ரவீந்திர நாதருக்கு மனக் கலக்கம் ஏற்பட்டது. கசப்பாக அவர்களுக்குச் சொல்லிப் பார்த்தார்; அது உடனடியாகப் பயனளிக்கவில்லை. ஆனால் ரவீந்திர

6. அகால மரணத்தின் காரணமாக அவரது இலக்கியப் பணி அறுந்துவிட்டது. “சிரேஷ்ட கவிதா”, என்ற அவரது பாடல்—தொகுப்புக்கு 1955ல் சாகித்திய அகாதெமிப் பரிசு கிடைத்தது.

நாதர் இங்கிதம் அறிந்தவர். திறமை எங்கிருந்தாலும் மெச்சத் தயாராக இருந்தவர். எனவே சர்ச்சையை அவர் நீட்டவில்லை. அவர் இயற்றிய புதிய நாவல்களிலும் சிறு கதைகளிலும் தமது செல்வாக்கு காணப்பெற்றது குறித்து அவர்கள் மகிழ்ச்சி அடைந்தனர். தம்மைப் பெரிதும் மயக்கிய விஷயங்களை எவ்வாறு கையாள்வது என்பதை அந்தத் தீவிரப் புதுமையாளருக்கும் புலப் படுத்தவே அவ்வாறு எழுதினர் கவிஞர். டாகுரது பண்புக்கும் தீவிரப் புதுமையாளரது தன்மைக்கும் வெகு தூரம்.

இவர்களில் மூவர் குறிப்பிடத்தக்கவர்கள். மன அமைதியும் இயற்கையில் நாட்டமும் கொண்டு எழுதினர் ஜீவானந்த தாஸ். திண்மையான காதலும் வீரமும் பிரேமேந்திர மித்திராவிடம் காணப் பெற்றன. கவிதா தேவியின் அருள் பூர்ணமாக இருந்த தெம்புடன் பாடல் களைப் புனைந்தார் புத்த தேவ போஸ். அஜித் தத்தா இக்குழுவைச் சேர்ந்தவர். ஆனால் அவரது மனநிலை சற்று மாறுபட்டது. இளமை, காதல், இயற்கை போன்ற விஷயங்களைக் குறித்து வீரியத்துடன் அவர் பாடினர். சுதீந்திரநாத தத்தா, விஷ்ணு தே, அமியா சக்கரவர்த்தி பின்னர் தோன்றியவர்கள். சுதீந்திரநாத தத்தாவின் நடையமைப்பும் மதிநுட்பமும் மேலோங்கிக் காணப் பெற்றன. பிரேமேந்திர நாத மித்திரா தவிர மற்ற நவீன எழுத்தாளரின் சிறந்த படைப்புக்களிற்கூட டாகுரின் செல்வாக்கையோ அல்லது வேறு வங்கக் கவிஞரின் வழி யையோ காண இயலாது. உலகின் இன்றைய துன்ப நிலை குறித்து அருவருப்பும் கசப்பும் அகந்தையும் நிறைந்த ஆங்கில, ஐரோப்பிய இக்கால எழுத்தாளரின் மனநிலையே அவற்றில் காணப்பெறுவது. யாரும் அணுக இயலாதபடி ஒதுக்கான உயர்—வாழ்க்கையை டாகுர் எக் காலத்திலும் நடத்தியதில்லை. அகந்தை அவரிடம் அடி யோடு கிடையாது. தோல்வி மனப்பான்மை கொள்வது

அவருக்கு அசாத்தியம். இதுதான் அவருக்கும் அதி தீவிரப் புதுமையாளருக்குமிருந்த அடிப்படையான வேற்றுமை. நவீன வங்கத்தின் வாழ்விலும் இலக்கியத்திலும் அவர்கள் வகித்து வந்த பொருள்படைத்த அந்தஸ்தையும் இது புலப்படுத்துகிறது. அவர்கள் கவி பாடிய விதமும் வேறுபட்டது. எனினும் கணிசமான அபிமானிகள் அவர்களுக்கு உண்டு. அவர்களது எதிர்காலப் புகழைப்பற்றி இப்பொழுது கருத்துரை வழங்குவது அசாத்தியம். அவர்களது எழுத்து சக்தி வாய்ந்தது. அவர்களது இறுமாப்புக்கூட கவர்ச்சிகரமானது. எனினும் மனித இருதயத்தை ஆட்கொண்டு நினைவுகொள்ளும்படி செய்யும் சக்தி இருக்குமா என்பது இனிமேல் தான் தெரியவேண்டும். இளம் கவிஞர்களில் ஓரளவு முன்னுக்கு வந்தவர்கள் நரேஷ் குஹா, தீனேஷ் தாஸ், கோவிந்த சக்கரவர்த்தி.

இக்காலத்து அவல நிலையின் பிரதிநிதிகளாகக் காட்சியளிக்கின்றனர் இந்த அதிதீவிர நவீனக் கவிஞர்கள். ஆனால் பெரும்பாலும் இக்காலத்து நாவலாசிரியர்களையும், சிறு கதையாளரையும் குறித்து இவ்வாறு சொல்வதற்கில்லை. நவீன வங்க கற்பனைக் கதை மரபில், குறிப்பாக டாகுர், சரத்சந்திரர் வழிகளில் அவர்கள் ஏறக்குறைய போய்க் கொண்டிருக்கிறார்கள். சரத் சந்திரருக்குப் பிறகு தமது சிறு கதைகள், நாவல்கள் மூலம், குறிப்பாக ஆரண்யக்[7] பத்தர் பாஞ்சாலி (சினிமா மூலம் உலகப் புகழ் அடைந்தது)யின் மூலம் வங்கக் கற்பனை இலக்கியத்துக்கு திண்மையாகப் பணியாற்றியவர் என்று, சரத்சந்திரருக்கு அடுத்தபடியாக விபூதி பூஷண பானர்ஜியைக் குறிப்பிடலாம். அவர் இயற்கையின் பேரன்பர். வேகமாக மறைந்து வரும் தூய்மையும் நேசமும் மிகுந்த கிராமிய வாழ்க்கையைச் சித்திரிப்பதில் நாட்டம் கொண்டவர்.

7. பிரதான இந்திய மொழிகளில் மொழிபெயர்த்து வெளியிட சாகித்திய அகாதெமி தேர்ந்தெடுத்துள்ள நூல்.

வாழ்க்கையிலும் ஒழுக்க முறையிலும் தென்படும் போராட்டங்களைப் பற்றித்தான் நவீன நாவலாசிரியர்கள் அதிகமாக எழுதுகின்றனர். ஆனால் இவை அவரை ஈர்க்க வில்லை. புதுமையாளர் என்ற அடைமொழியில்லாத பெருங் கலைஞர் அவர். இயற்கையுடன் மனிதனுக்கு இருந்து வரும் அன்றாட உறவை உணர்ந்து அவர் எடுத் துக்காட்டும் விதமே ஓர் அருங்கலை.

விபூதி பூஷண் நீங்கலாக, சரத் சந்திரருக்குப் பின்னர் வந்த நாவலாசிரியர்களையும் சிறு கதையாளரை யும் மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். ரவீந்திரநாத், சரத்சந்திரர் மரபினர் ஒரு வகை. கவிதையில் மட்டு மின்றி கற்பனைக் கதைகளிலும் அதிதீவிரப் புதுமையாள ராகக் காட்சி தந்தவர்கள் ஒரு வகை, இடதுசாரிகள் மற் றொரு வகையினர். முதல் பிரிவில் குறிப்பிடத்தக்கவர்கள். சைலஜானந்த முகர்ஜி, பிரேமேந்திர மித்திரா, சிட்டகாங் கைச் சேர்ந்த மஹ்புயுல் ஆலம், பானு பூல், அன்னதா சங்கரராய், தாராசங்கர் பந்தியோபாத்யாயா, சரோஜராய் சௌதுரி, விபூதி பூஷண மூகோபாத்தியாயா, சுபோத கோஷ், நாராயண கங்கோபாத்தியாயா, சதிநாத் பகதூர், நரேந்திரமித்திரா. ஆசாபூர்ணாதேவி, மாணிக்கியபந்தோ பாத்தியாய மரபை யொட்டி எழுதிப் புகழடைந்து பிறகு இடதுசாரியினராக மாறிவிட்டார். சைலஜானந்தா மென் மையான கலைஞர். வங்க வாழ்க்கையை விரிவாக, நெருங் கிய நிலையில் அறிந்தவர். மலைஜாதியினரைப் பற்றிய அவரது சொற்சித்திரங்கள் மிகச் சிறந்தவையெனப் போற்றப் பெறுகின்றன. எது அழகானது, எது பாந்த மானது என்பதைப் பற்றிய வீரக் கற்பனைகள் காரண மாக அவரது சிறு கதைகள் இன்னும் சிறப்பாக அமைந் துள்ளன. 'மோமனேர் ஜபன்பந்தி' (ஆஸ்திகனின் ஒப்புதல் வரலாறு) மஹ்பூபுல் ஆலத்தில் மிகச் சிறந்த நூல். எந்த வர்ணக் கண்ணாடியின் மூலமாகவும் இல்லாமல் வாழ்க்கையை அப்படியே காண்பதில் அவர் திளைக்கிறார்.

ஏதோ ஒரு சக்தி அவரிடம் இயற்கையாக அமைந்துள் ளது. எனினும் அவர் அதிகமாக எழுதவில்லை. எளிய விஷயங்களைப் பற்றி எழுதும் திறம் படைத்தவர் பாணு பூல். ஆனால் சிறு கதைகளில்தாம் அவரது கலைத் திறனை அதிகமாகக் காணலாம். நவீன நாவலாசிரியர் களில் பேரவாக் கொண்டவர் அன்னதா சங்கர ராய். ஆறு பாகங்கள் கொண்ட நாவலொன்றை அவர் முன்னமே இயற்றியுள்ளார். அதே அளவில் மற்றொன்றைத் தொடங்கியுள்ளார். 'மோன்—பபான்' என்று சிறுகதைத் தொகுப்பு நூல்தான் இதுவரை வந்த அவரது படைப்புக் களில் மிகச் சிறந்தது. இதிலுள்ள குணசித்திர பாவம் மென்மையானது. இப்போதைய நாவலாசிரியர்களில் அதிக வாசகர்களைக் கொண்டவர் தாரா சங்கர பந்தியோ பாத்தியாயா. பிராந்திய வாழ்க்கையைச் சித்திரிப்பதில் அவர் கணிசமாக வெற்றி கண்டிருக்கிறார், உள்ளதை உள்ளபடியே படம் பிடித்துக் காட்டும் தன்மையுள்ளதாக அவரது கலை அமைந்திருப்பதும் வெற்றிக்கு ஒரு காரணம். கொஞ்ச காலமாக குணசித்திரப் படைப் புக்களில் அவர் கவனம் செலுத்தி வந்துள்ளார். சரோஜ ராய் சௌதுரி 'பார்ஸ்டை ஸாகா'வைப் போன்ற பெரிய குடும்ப வரலாற்றுக் கதையை இயற்றியுள்ளார். விபூதி பூஷண மூகோபாத்தியாயா நல்ல நகைச்சுவை எழுத் தாளர். சுபோத கோஷின் பாத்திரங்கள் உயிருள்ளவை. நாராயண கங்கோபாத்தியாயாவின் சிருஷ்டிகள் மிடிமை யில் மூழ்கியுள்ள மக்களின் துயரங்களை அப்பட்டமாக வருணிக்கின்றன. சதிநாத பகதூரி உள ஆராய்ச்சி யாளர். அன்றாட வங்காளியின் வாழ்க்கையை தெளிந் தறிந்து அன்புடன் கையாள்பவர் நரேந்தர மித்திரா. நடுத்தர வங்காளிகளது வாழ்க்கையில் சின்னஞ்சிறு அவ லங்களை கூர்ந்து கவனித்து எழுதுவது ஆசாபூர்ணா தேவியின் வழி. பிறரின் தலையீடு இல்லாதிருத்தலையும் ஏகாந்தத்தையும் பெண் மனம் விரும்புகிறது, அருவருப்

பானவற்றை வெறுக்கிறது. இந்த அம்சத்தை அவர் நன்ருகச் சித்திரித்துக் காட்டுகிருர். கற்பனைச் சிறப் புடன் எழுதும் முக்கியஸ்தர்களில் பிரேமேந்திர மித்திரா, புத்த தேவ போஸ், அசிந்திய சென் குப்தா, மணீந்திர லால் போஸ், மனோஜ் போஸ், பிரமோத குமார் சன்யால் குறிப்பிடத் தக்கவர்கள். இவர்களில் குறிப்பாக சிறு கதைத் துறையில் திடமாக முதலிடம் வகிப்பவர் பிரேமேந்திரா மித்திரா. ரவீந்திர நாதருக்கும் சரத்சந்திர ருக்கும் பிறகு அவர்தாம் தலைசிறந்த சிறுகதை எழுத் தாளர் எனக் கூறலாம். ஆஷிம் ராய் முன்னுக்கு வரக் கூடிய இளம் கற்பனை எழுத்தாளர்.

இடதுசாரிகளின் அங்கீகார முத்திரை பெற்ற எழுத் துலகுத் தலைவர் மாணிக்கிய பந்தியோபாத்தியாயா. "புதுல் நாசர் இதிகதா" என்பது அவருக்குப் புகழை அளித்தது. அவர் எழுத்துக் கலையில் வல்லுனர். வாழ்க்கை யைப் பற்றிய அவரது மனப்பான்மை புடமேறி ஏமாற் றமே இல்லாதது. எனினும் அவரது ஆண் பெண் பாத் திரங்கள் எல்லாமே வாழ்க்கையில் முழுமை காண்கின்ற வர்களாகவே அமைந்துள்ளன. இடதுசாரியான பிறகு அவரது மேதை புதிய உச்ச நிலைகளை எட்டவில்லை. கசப்புதான் எடுப்பாகத் தெரிகிறது. மொத்தத்தில் கற்ப னைக் கதைகளில் இடதுசாரிகள் பிரகாசிக்கவில்லை. மாணிக்கிய பந்தியோபாத்தியாயாவுக்கு அடுத்தபடியாகக் குறிப்பிட வேண்டியவர் அமரேந்திர கோஷ். "மண் ணின் வளர்ச்சி" என்ற ஐரோப்பிய மூலத்தைப் போலவே "சார் காஷெம்" என்ற அவரது வழி நூலும் மதிப்பு மிக்கது. கோஷிடம் இடதுசாரிப் போக்கைவிட மனிதாபிமானமே அதிகமாக காணப்பெறுகிறது. நமது இக்கால வாழ்க்கையின் சில அம்சங்களுடன் நெருங்கிய தொடர்புள்ள சமரேச பாசு, குலாம் குட்டுஸ் ஆகியோரும் இதே தன்மையினர். கோபால் ஹால்டரின் ஏகதா, அன்யா—தின், ஆர்—ஏக் தின் என்ற முக்கூட்டு நாவல்

பெரும்பாலும் கருத்துச் செறிவு மிகுந்தது. இதுவும் குறிப்பிடத்தக்க இடதுசாரிப் படைப்பு.

இளமையில் மரித்துவிட்ட சுகண்ட பட்டாசாரியா நீங்கலாக கவிதைத் துறையில் இடதுசாரிகள் வெற்றி கண்டதாகச் சொல்வதற்கில்லை. சுகண்டாவும் இடது சாரிப் போக்கைவிட மனிதாபிமானமே மிகுந்து காணப் பெற்றவர். எனினும் இளம் இடதுசாரிக் கவிஞர்களில் சிலர் - குறிப்பாக சுபாஷ் முகர்ஜி, மணீந்திர ராய், பூர்ணேந்து பாத்திரா ஆகியோர்—தீவிர அக்கறையுடன் உழைப்பவர்கள். அவர்கள் நல்ல சிருஷ்டிகளை உண்டாக் கக்கூடியவர்களே.

தற்கால இலக்கியத்தைக் குறிப்பிடத்தக்க வகையில் வளப்படுத்தியுள்ள எழுத்தாளர்களிடை பெண்களும் கணிசமாக உண்டு. ஸ்வர்ணகுமாரி தேவி, கிரீந்திர மோகினி தாசி, மணிகுமார தேவி, காமினி ராய், பிரியம் வதா தேவி, பீகம் ரோகேயா, நிருபமா தேவி, அனுரூபா தேவி, சீதா தேவி, சாந்தா தேவி, லீலா மஜும்தார் மைத்ரேயி தேவி, பிரதிபா போஸ், பீகம் சூபியா கமால், பிரபாவதி தேவி, பீகம் ஷம்சுன்-நஹார், மஹ்முதா கடுன் சித்தீகா, ராதா ராணி தேவி, ஆசாபூர்ண தேவி, வாணி ராய் ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்கள்.

எமது குழந்தை இலக்கியமும் விசேஷமாகக் குறிப் பிடத் தக்கது. நமது தொன்மையான ராமாயணமும் மகா பாரதமும் நாட்டுப் பாடல் வகைகளும் குழந்தைகளை எப்பொழுதும் பெரிதும் ஈர்ப்பவை. தற்கால எழுத்தாளர் அதற்கு ஒரு தனி மெருகு தந்துள்ளனர். ரவீந்திர நாதரின் குழந்தைப் பாடல்கள் உலகப் புகழ் பெற்றவை. இந்தியாவின் கலைத்துறைப் பொலிவுக்கு வழிகாட்டியான அவனீந்திரநாத் டாகுர், தட்சிண ரஞ்சன் மித்திர மஜும்தார், உபேந்திர கிஷோர ராய் சௌதுரி, ஜோகீந் திரநாத் போஸ், சுகுமார ராய், சுகலதா ராவ், சுநிர்மல

போஸ் ஆகியோர் அவரைத் தொடர்ந்து குறிப்பிட வேண்டியவர்கள்.

கவிதை, கதைத் துறைகளில் தற்கால வங்க இலக்கியம் நல்ல வளமை படைத்தது என்பதைக் கண்டோம். ஆனால், துரதிருஷ்டவசமாக அது உயர்நிலையை எய்தவில்லை. 1860-ம் ஆண்டுவாக்கில் தீனபந்து மித்திராவின் " நீலதர்ப்பன் " என்ற நாடகத்துடன் இப்பணி செம்மையாகத் தொடங்கியது. ஆனால் கவர்ச்சிகரமாக்கும் படாடோப அம்சம் முன்னேற்றப் பாதையை அடைத்துக் கொண்டு விட்டது. அது இன்றும் அகன்றபாடில்லை. நமது புகழ்பெற்ற நாடகாசிரியர்களில் கிரீஷ் சந்திர கோஷும் துவிஜேந்திரலால் ராயும் குறிப்பிடத் தக்க இருவர். ஆனால் அவர்கள் பிரதானமாக படாடோப நாடக அமைப்பாளர்தாம். ரவீந்திரநாதரின் நாடகங்கள் அலாதியானவை. அவை பெரும்பாலும் இலக்கிய ரத்தினங்கள். ஆனால் ஒரு சில நீங்கலாக, மற்றவைகளை சாதாரண மக்களுக்கேற்ற நாடகங்களென மதிப்பதற்கில்லை.

கட்டுரைத் துறையில் வங்காளி உயர்வான தரத்தை அடைந்துள்ளது. இவ்வகையில் முதன்மையாக விளங்குகிறவர்கள் ரவீந்திரநாதரும் பிரமத சௌதுரியும். பூதேவ மூகோபாத்தியாயா, விபின சந்திர பால், ரமேந்திர சுந்தர திரிவேதி, சசாங்க மோகன சென், மோஹித்லால் மஜும்தார், ஆதுல் சந்திரகுப்தா, துர்ஜடிபிரஸாத மூகோபாத்தியாயா, கோபால் ஹால்டர், அன்னதா சங்கரராய், ஹுமாயூன் கபீர், ஸ்ரீ குமார் பானர்ஜி, பிரமதநாத் பிஸி அபு ஸயீத் அய்யூப், புத்த தேவ போஸ், காஜி மோடாஹர் ஹுசேன், ஸஞ்சய பட்டாசாரியா, ஸயீத் மோடாஹர் ஹுசேன் சௌதுரி, சுபநாராயண ராய் ஆகியோர் பெயர் பெற்ற பிற கட்டுரையாளர். நல்ல வாழ்க்கை வரலாறுகள் உள. ஆனால் அவை மிகச் சிலவே. முற்றிலும் இலக்கியம் பற்றிய நூல்களில் தற்கால எழுத்தினரான ஜாஜாபர்,

ஸையத் முஜ்தபா அலி இருவரும் மக்கள் விரும்பிப் படிக்கிறவர்கள். நகைச்சுவை எழுத்தாளர் பரசுராமின் புகழ் எங்கும் பரந்துள்ளது. அவரது அந்தஸ்தே அலாதி.

நமது இலக்கிய வரலாற்று ஆசிரியர்களென டாக்டர் தீனேஷ் சந்திர சென், டாக்டர் சுகுமார சென், ஜைனிகாந்த தாஸ் ஆகியோர் புகழ் அடைந்துள்ளனர். டாக்டர் சுநீத குமார சாட்டர்ஜியும் டாக்டர் முகம்மத் ஷஹீதுல்லாவும் நமது மொழித்துறை வல்லுநர்கள்.

பேராசிரியர் க்ஷிதிமோகன சென், ரெஜாவுல் கரீம் ஆகியோர் ஹிந்து முஸ்லிம் பண்பாடுகளை சமரஸப் படுத்திக் காட்டுவதில் சமர்த்தர்கள்.

நவீன வங்காளியில் தனிச் சிறப்புக்கள் கொண்ட சமய இலக்கியம் இருக்கிறது. மகரிஷி தேவேந்திரநாத டாகுர், பிரம்மானந்த கேசவ சந்திர சென், ஸ்ரீ ராம கிருஷ்ணு, மௌலானு, கிரீஷ் சந்திர சென், அசுவினி குமார தத்தா, ரவீந்திர நாத் ஆகியோர் இத்துறையில் உழைத்து புகழ் பெற்றவர்கள்.

மொழிபெயர்ப்புப் பிரிவு வளம் பெறவில்லை. உலகப் பேரிலக்கியங்களில் வெகு சிலவே எமது மொழியில் கிடைக்கின்றன. ஆனல் அண்மையில் இளம் எழுத்தாளர் சிலர் இப்பணியைச் சிரத்தையுடன் மேற்கொண்டுள்ளனர். தமது வாழ்க்கையின் பிற்பகுதியில் ரவீந்திரநாத டாகுர் தமது உரைநடையில் மேலும் பல சீர்திருத்தங்களைச் செய்தார். அவரது சாதனைகள் எல்லாத் துறைகளையும் சேர்ந்த உரைநடை எழுத்தாளருக்குப் பெரிதும் பயன்படுகின்றன. இலக்கியத்துடன்கூட தத்துவ நூல்களும் வரலாறுகளும் இருக்கின்றன. ஆனல் அவை அதிகமில்லை. சமூக விஞ்ஞானம், விஞ்ஞானம் ஆகிய துறைகளில் அண்மையில் நல்ல முயற்சிகள் காணப் பெறுகின்றன.

பழைய நூலாகிய ''விசுவகோசம்'' நல்லதோர் கலைக்

களஞ்சியம். ஆனால் புதியன மிகமிகத் தேவை. நல்ல நிகண்டுகள் சில இருக்கின்றன.

நாட்டுப் பற்றும் மதி நுட்பமும் படைத்த இளம் எழுத்தாளர்க் குழு ஒன்று கிழக்குப் பாகிஸ்தானில் வங்காளிகளிடையே தோன்றியிருப்பது விசேஷமாகக் குறிப்பிட வேண்டிய நிகழ்ச்சி. இவர்கள் வஹ்ஹாபி நிலையினின்று கணிசமாக வேறுபட்டவர்கள். அமைதியும் நல்லாட்சியும் நிலவினால், நல்லபடி அமைந்துள்ள தமது மொழியையும் இலக்கியத்தையும், ஊக்கம் தரும் சமீப காலப் போக்கையும் பயன்படுத்திக் கொண்டு, எதிர் நோக்கக்கூடிய வருங்காலத்திலேயே இலக்கிய உலகில் புதிய உயர்நிலைகளை வங்காளிகள் அடையக் கூடும்.

## SELECT BENGALI BIBLIOGRAPHY

[Only a few important books of a general nature available in English are given. For a fuller bibliography the reader may refer to Dr. Sukumar Sen's *History of Bengali Literature* published by the Sahitya Akademi.]

*The origin and Development of the Bengali Language.*
By Dr. Suniti Kumar Chatterjee.

*History of Bengali Language.*
By Dr. Dinesh Chandra Sen.

*Vaishnava Lyrics.*
Translated into English by Surendranath Kumar, Nandalal Datta and J. A. Chapman.

*History of the Bengali Literature in the Nineteenth Century*—1800–1825.
By Dr. S. K. De.

*Eastern Bengali Ballads, Calcutta University.*

*Bengali Literature.*
By A. S. Ray and Lila Ray.

*History of the Bengali Drama.*
By Dr. P. C. Guha Thakurta.

*History of Bengali Literature.*
By Dr. Sukumar Sen.

*An Acre of Green Grass.*
By Buddha dev Bose.

*Linguistic Sruvey of India.*
G. A. Grierson, Vol. V. Part I, pp. 1-391.

# ஸம்ஸ்கிருத இலக்கியம்

வி. ராகவன்

**பீடிகை**

ஸம்ஸ்கிருதம் இந்தியாவின் தொன்மையான மொழி. இந்நாட்டில் அதற்கு நாலாயிர வருஷ வரலாறு உண்டு. அதன் முதல் இலக்கியம் ரிக் வேதப் பிரார்த்தனைகள். இந்தோ-ஐரோப்பிய இலக்கியத்தில் எஞ்சி நிற்பவைகளில் மிக விரிவானது ஸம்ஸ்கிருத இலக்கியமே. தொன்மை யானது என்பதுடன்கூட தொடர்ச்சியாகவும் அது வளர்ச்சி பெற்று வந்திருப்பது குறிப்பிடத்தக்கது. வேத ரிஷி உச்சரித்த அதே சந்தத்தில் அவருடைய மந்திரம் இன்றும் உச்சரிக்கப்படுகிறது. காளிதாஸனும், பாண னும் தமது கவிதைகளை எந்தச் சொல்லலங்காரங்களுடன், சீர்க் கட்டுகளுடன் புனைந்தார்களோ, அதே மாதிரி இன்றையு ஸம்ஸ்கிருதப் புலவர்களும் கவிதையோ வசனமோ எழுதுகின்றனர். வேத காலத்து மொழி வகைகள், சுதந்திரமாக, ஜனரஞ்சிதமாக உருப்பெற்ற இதிகாச சைலி, பாணினி வியாகரணம், பேச்சுக்கு விதித்த முதல் இலக்கணம், முதல் நாடகங்களின் சொல்லாட்சி ஆகிய எல்லாவற்றையும் பார்த்தால் ஸம்ஸ்கிருதம் ஜீவகளையுடன் கூடிய பேசும் மொழியாக இருந்ததென்பது புலனாகும். அதன் பல்வேறு மொழி வகைகளிலிருந்து ஒரு இலக்கிய மொழியானது தரம்

பெற்று உருவான காலத்தில் முந்தைய பிராகிருதங்கள் இலக்கியத்தில் வரவர அதிகமாக இடம் பெற்றன. எனினும், ஸம்ஸ்கிருதம் தொடர்ச்சியாக மேல் அந்தஸ்திலேயே இருந்து வந்தது. "தாய் மொழியாக இருந்த நிலைமை நின்றுபோன நிலையில்தான் ஸம்ஸ்கிருத மொழியானது பண்பாடு, நிர்வாகம் ஆகியவற்றுக்குப் பயன்படும் முழு வளர்ச்சியை யடைந்தது. இது மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் விசித்திரமாகத் தோன்றலாம்." என்று இம்மொழியைப் பற்றிக் கடைசியாக எழுதிய வல்லுநர்[1] கூறியுள்ளார். புத்த, ஜைன சமயங்கள் மக்களிடையே பரவியிருந்த மொழிகளை உபயோகித்தன. எனினும், ஸம்ஸ்கிருதத்தைத் தாண்டிச் செல்ல அவற்றால் இயலவில்லை. இறுதியாக அதற்கு வந்தே தீர வேண்டி ஏற்பட்டது. புதுப் பண்பாடும், சிந்தனையும் அதில் உருப் பெற்றிருந்ததால் அகில-இந்திய மொழியாக ஸம்ஸ்கிருதம் தன்னை உருவகப்படுத்திக் கொள்ளமுடிந்தது. 'அது நாட்டிலுள்ள பல தாய்மொழிகளின் தாய். இன்றும் நாட்டின் ஒற்றுமையை மிக உறுதியாக இணைத்து வைத்திருக்கும் பந்தமாக அது விளங்குகிறது.

'பாலி'யிலும், 'அர்த்த மாகதியிலும்' சமய இலக்கியம் முதலில் வளர்ச்சி கண்டது. பிறகு ஸௌர ஸேனீ போன்ற தொன்மையான பிராகிருதங்களில் இலக்கியப் பணி நடைபெற்றது. அது ஸம்ஸ்கிருத நாடகத்திலும் இடம் பெற்றது. மகாராஷ்ட்ரீ என்ற பிராகிருதத்தில் கவிதை பெரு வளர்ச்சி கண்டது. இந்தப் பிராகிருதம் ஸம்ஸ்கிருத வடிவத்தைப் பின்பற்றியதுடன் கூட, ஸம்ஸ்கிருதத்துடனேயே வளர்ந்தது. இந்த மொழிகளின் இலக்கணங்களை ஸம்ஸ்கிருதத்தில்தான் தொகுத்தார்கள். இந்தப் பிராகிருதங்கள் அவற்றின் இலக்கிய சைலியாலும், தர நிர்ணயத்தாலும் மேலும் பல பாமர மொழி

1. டி. பர்ரோ. 'ஸம்ஸ்கிருத மொழி'. பேபர் அண்டு பேபர் லண்டன், 1955. பக்கம் 57.)

களாகக் கிளைத்தன. முதலில் அப பிரம்சமும், பிறகு வட இந்தியாவில் இப்பொழுது வழங்கும் இந்தோ - ஆரிய மொழிகளும் பிறந்தன.

பிராகிருதங்கள் விஷயத்திற் போலவே, தென்னிந்திய மொழிகள் விஷயத்திலும் ஸம்ஸ்கிருதத்தின் தொடர்பானது இலக்கிய மறுமலர்ச்சியில் கொண்டுபோய் விட்டது. விரிவான சொல்லாட்சி, இலக்கிய வடிவங்களின் விஸ்தரிப்பு, விஷய அமைப்பு, இலக்கிய மூலம் ஆகிய அம்சங்களில் ஸம்ஸ்கிருதம் இந்த மொழிகளில் பரந்து நின்றது. ஸம்ஸ்கிருத அடிப்படையில் இம்மொழிகளில் மூன்று தமது எழுத்து வரிசையை விரிவாக்கிக் கொண்டன. ஒரு மொழி வேறொன்றை அதிகபட்சமாக எந்த அளவுக்கு ஆட்கொள்ள முடியுமோ, அந்த அளவு இவை ஸம்ஸ்கிருதத்தால் பயன் பெற்றன. அவற்றில் இரண்டொரு சொல் விகுதிகளையும், சொற்களையும் தவிர அப்படியே ஸம்ஸ்கிருதத்திலேயே விஷயங்கள் எடுத்துக் கையாளப் பெற்றன. இவை அந்த மொழிகளில் இயற்றப் பட்ட இலக்கியங்கள் என்று கருதப்பட்டன. ஜாவானிய மொழி விஷயத்தைப் போலவே இவற்றில் இரண்டு சம்பந்தப்பட்ட வரை கவிதை புனைவதில் ஒரு சைலி ஜனித்தது. மணிப் பிரவாளம் (ரத்தினமும் பவழமும்) என்ற கலப்பு உரைநடை இதன் விளைவாகத் தோன்றியது. கலைச் சிறப்புக்களுடன் இரண்டு மொழிகளையும் கவிஞன் கலந்து வழங்கினான். பிரதேச மொழிகளுடன் கூட ஸம்ஸ்கிருதம் சேர்ந்து செழிப்பாக, நெருக்கமாக இணைந்து காணப் பெற்றது. சமீபகாலம் வரை ஸம்ஸ்கிருதப் பேரிலக்கியங்கள் இந்தப் பிராந்திய லிபிகளில் பெரும்பாலும் எழுதப்பெற்ற சுவடிகளில் அல்லது எழுத்துப் பிரதிகளில் வரையப் பெற்றிருந்தன.

ஸம்ஸ்கிருதத்தின் பெருமை மேலும் இரு திசைகளில் விரிந்தது. கி. மு. முதல் நூற்றாண்டு காலத்திலிருந்து புத்த சமயத்தின் மூலம் மத்திய ஆசியாவிலும், தொலை

தூரத்திலும் அது பரவியது. கி. பி. இரண்டாவது நூற்றுண்டிலிருந்து அது ஹிந்துப் பண்பாட்டுடன் இணைந்த சாதனமாக வளர்ந்து தென் கிழக்கு ஆசிய நாடுகளில் விரிவடைந்தது. ஸம்ஸ்கிருத இதிகாசங்கள், நாடகங்கள், கவிதைகள் ஆகியவை இந்த தேசங்களுக்கு லிபியை மட்டுமின்றி, இலக்கியத்தையும், நாட்டியக் கலையையும், நாடகம், இசைச் சித்திரம், பிற கலைகளையும் கொண்டு சென்றன. இந்தியா பூராவையும் ஐக்கியப்படுத்துவதற்கு ஸம்ஸ்கிருதம் பயன்பட்டது மட்டுமின்றி, தொலை கிழக்கையும், தென் கிழக்கு ஆசியாவையும் ஒரு கலாச்சார ஐக்கியத்தின் கீழ் இணைக்கவும் அதனுல் முடிந்தது.

இந்த நீண்ட வரலாற்றில் ஸம்ஸ்கிருதமானது சாகித்தியம், தத்துவம், கலைகள், விஞ்ஞானம் ஆகிய எல்லா துறைகளிலுமே ஏற்றம் கண்டிருந்தது. இயற்றிய இலக்கியம் அளவில் மிகமிக அதிகம். அதில் ஒரு பகுதிதான் அச்சாகி இருக்கிறது. பெரும்பாலானவை சுவடி நிலையங்களில் இருக்கின்றன. கணிசமான பகுதி நஷ்டமாகி விட்டது. உலக இலக்கியத்தில் இது அபாரமான பகுதி எனலாம். கற்பனைக்கு வரக்கூடிய மனித நடவடிக்கைத் துறைகள் அனைத்தைப் பற்றியுமே ஸம்ஸ்கிருதத்தில் எழுதி இருக்கிறுர்கள். தாம் சொந்தமாகக் கற்பனை செய்து எழுதுவது, இலக்கியப் பணியில் காண்பிக்கும் திறன், தத்துவ முறைகள், கவிதை—நாடக வகைகளை இதற்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம். இந்தக் கிளைகள் சிலவற்றில் உபநிடதம், கீதை போன்றவை இந்தியாவின் மரபில் மதிப்பு மிகப் பெற்றவை. இன்றைய உலகச் சிந்தனையின் பகுதியாக அவை ஆகிவிட்டன. இரண்டு ஸம்ஸ்கிருத இதிகாசங்களும் பிராந்திய மொழிகளில் ஏராளமான புது இலக்கியங்களுக்கு ஊக்கமளித்தன. அது மட்டுமின்றி, அவற்றில் பிரஸ்தாபிக்கப்பட்டுள்ள பாத்திரங்கள் தேசிய லட்சியங்களை உருவாக்கவும் செய்தன. காளிதாஸன், சூத்திரகன் போன்றோர் இயற்றிய

கவிதைகளும், நாடகங்களும் இன்றும் அத் துறைகளில் மிகச் சிறப்பானவை என்ற புகழுடன் விளங்குகின்றன. மக்கள் பேசலான மொழிகளில் இலக்கியப் பணியானது ஒரு சில துறைகளில்தான் மலர்ச்சி கண்டது. சமயம், இசைப்பாடல், இதிகாசக் கவிதை, ஆகியவையே இத் துறைகள். இலக்கியத் திறனாய்வு, தத்துவம், வேதாந்த விசாரம், வைத்தியம், கலை, சட்டம், வான சாஸ்திரம், கணிதம் ஆகியவற்றில் தொடர்ச்சியாக ஸம்ஸ்கிருதந் தான் துணை புரிந்து வந்தது. எந்த முக்கியமான பிரதேச மொழியிலும் ஒருவர் பேசுவதை அல்லது எழுதியிருப் பதைச் சலித்துப் பார்த்தோமானால், கருத்துக்கள் உயர் நிலையை அவற்றில் அடையும்போதெல்லாம், சொல்லாட்சி யானது ஸம்ஸ்கிருதமாகப் பரிணமிப்பதைக் காண லாம். பிராந்திய மொழியானது எந்த அளவுக்கு வளர்ச்சி கண்டிருந்த போதிலும், இலக்கியமோ அல்லது எழுத் தாளனோ ஸம்ஸ்கிருத மரபையும், அதன் சாதனைகளையும் ஒதுக்கித் தள்ளி விடுவது சாத்தியமல்ல. தொடர்ச்சி யாக அதிலிருந்து விஷயங்களை எடுத்துப் பயன்படுத்தி வந்திருக்கிறார்கள். சமீப காலத்தில் தேசத்தில் ஒளியுடன் விளங்கும் ஆத்மிக மறுமலர்ச்சியானது இந்தியாவின் பழைய பெருமையை புதிதாக உணர்த்துவதுடன், இந்த பிரக்ஞையை மீண்டும் உண்டு பண்ணுங்காலையில் ஸம்ஸ் கிருதச் செல்வத்திற்கு ஒரு புதிய பெருமையையும் அளிக் கிறது. எனவே, புதிய படைப்புக்களின் பின்னாலிருந்து அவற்றை ஊக்குவது பெரும்பாலும் ஸம்ஸ்கிருதமே. ஆனால் இக்கருத்துக்களை வெளியிட உபயோகிக்கும் மொழிகள் பிரதேச பாஷைகளாக இருக்கலாம்.

ஸம்ஸ்கிருதப் பேரிலக்கியச் செழுமையானது பல துறைகளில் பெருமைப்பட்டது. பல வடிவங்களில் வளர்ச்சி கண்டிருப்பது. சாகித்தியச் சிறப்பை மட்டும் எடுத்துக் கொண்டு பார்ப்போமானால், நீண்ட இதிகா சத்தை வளர்த்தது ஸம்ஸ்கிருதமே. இது குறுகிய

காவியம், சிறு பாடல் ஆகியவைகளில் வளர்ச்சி கண்டது. வீரம், வர்ணனை, இசை அம்சங்களும் உள்ளன. சிந்தனைச் செறிவு, நீதி நெறி விளக்கம், வரலாற்று வகை, கதை சொல்லுதல் ஆகியவற்றிலும் அதன் மென்மையை உணரலாம். கவிதைகளில் அற்புதமான பல வகைகளையும், சந்தங்களின் அழகையும் சுவைக்கலாம். அதன் உரைநடையின் மேடு பள்ளங்கள் இசைக்கு வேண்டிய தகுதியை அளித்தன. இரண்டின் அணிகளையும் இணைத்து ‘சம்பூ’ என்ற காவிய வகையை அது உருப்படுத்தச் செய்தது. நாடகத் துறையில், ஸம்ஸ்கிருதக் கவிஞர்கள் பல வகைகளை இயற்றியுள்ளனர். வீர நாடகம், சமூகச் சித்திரமாகிய பிரகரணம், நீண்ட நாடகங்கள், சிறு நாடகங்கள், ஓரங்க நாடகங்கள், கேலிக் கூத்து, தனிமை உரை நாடகம், வரலாற்று நாடகம், அரசியல் நாடகம், சமய நாடகம், மறைபொருள் நாடகம் ஆகியவை சிறந்தன. பிற்காலத்தில் கிடைத்த வகைகளில் நாட்டிய நாடகமும் சேர்ந்தது. எல்லாவற்றிற்கும் மேலாக ரச பாவமும் இந்தியப் பண்பாட்டில் பெருமையுடன் விளங்கும் தருமம் போன்ற பிரதான சொல்லும், தொனி, ஔசித்யம் என்ற இரட்டைக் கருத்துக்களுடன் கூட ஸம்ஸ்கிருதத்தில் அலங்கார சாஸ்திரம் வளர்ச்சி காணத் துணை புரிந்தன. பிரதேச மொழிகளில் இதை மிஞ்சக் கூடிய அளவு எதுவும் இன்னும் தோன்றவில்லை.

**உயிருள்ள பாஷை**

இவற்றையெல்லாம் வைத்துக் கொண்டு ஸம்ஸ்கிருதமானது தனக்கே உரித்தான உயர்ந்த பீடத்தில் இருந்து கொண்டு, வரையறுக்கப்பட்ட தரங்களை வைத்துக் கொண்டு, சம்பிரதாய முறையிலேயே பழைய படைப்புக்களை மீண்டும் மீண்டும் தோற்றுவித்துக் கொண்டிருந்ததென்று கருதலாகாது. அதன் நீண்ட வரலாற்றை ஆராய்ந்து பார்த்தால், அதன் இலக்கியம் செழுமையாக பலவகைகளில் வளர்ச்சியுற்றிருப்பதும், அதில் ஏற்

பட்டுள்ள மாறுதல்களையும் மக்களிடையே வழங்கி வந்த மொழிகளின் மூலம் அது அடைந்த அனுகூலங்களையும் உணரலாம். சப்தபாவம், சொற்கட்டு, சொல்லாட்சி, அர்த்தபாவம் ஆகிய எல்லா வகைகளிலும் அதினின்று ஜனித்த பிராகிருதங்கள் அதன் போக்கை உருவாக்கின. பிறமொழி வகைகளும் அதற்கு உரம் ஏற்றின. சந்தம், காவிய அணிகள், சாகித்திய விஷயங்கள், கற்பனைக் கதைகள், விவரணைகள், நாட்டிய-நாடக வகைகள் (உப ரூபகங்கள்) முதலியவற்றில் வெவ்வேறு பிராந்தியங்கள் அதற்குப் பல வகைகளில் உதவியளித்தன. அந்தந்தப் பிரதேசங்களின் சம்பிரதாயங்களும், இலக்கிய மரபுகளும், ஸம்ஸ்கிருத இலக்கிய விஷயத்தில் செல்வாக்குடன் விளங்கின. தனது சிறந்த அம்சங்களைப் பிற மொழிகளுக்கு ஸம்ஸ்கிருதம் ஈன்றது போலவே, பஞ்சசீல அடிப்படையில், தானும் வாழ்ந்து பிறரையும் வாழவிடும் தன்மையில், பிராந்தியப் பண்பாடுகளின் அழகு-அம்சங்களை ஸம்ஸ்கிருதம் தன்னுள் இணைத்துக் கொண்டது அதற்கு உள்ள ஒரு தனிச் சிறப்பு. இந்தியாவின் எல்லாப் பகுதிகளும் அதை வளர்த்தன என்பதுதான் ஸம்ஸ்கிருதத்தின் தனிப் பெருமை. ஹிந்தியை அரசியல் சட்டமானது இன்று எவ்வாறு வளப்படுத்தி 'ராஷ்டிர பாஷை' என்ற ஓர் அந்தஸ்தை அளித்து, வெவ்வேறு பிராந்தியங்களில் அது வளர்ச்சி கண்டு பிரதேச மொழிகளின் நற்சிறப்புக்களைத் தன்னுள் ஜீரணித்துக்கொள்ள வேண்டுமென்று விரும்புகிறதோ, அதே வகையில் ஸம்ஸ்கிருதமானது இந்தியா எங்கும் வளர்ச்சி கண்டது.

ஸம்ஸ்கிருத நூலாசிரியர்கள் எப்போதும், எல்லா இடங்களிலும் தமது காலத்திய நிகழ்ச்சிகளுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொண்டு புதிது புதிதாகத் தமது கவனத்திற்கு வந்த விஷயங்களைத் தாராளமாகப் பயன்படுத்திக் கொண்டனர். ஆரம்ப காலத்தில் கிரேக்க, ரோமாபுரி செல்வாக்கு, முக்கியமாக வான சாஸ்திர விஷ

யத்தில், மேலோங்கி இருந்தது. நெருங்கி வருகையில் மொகலாய காலத்தில் ஸம்ஸ்கிருத எழுத்தாளர் பாரசீக மொழிகளைக் கற்றறிந்தனர். பாரசீக–ஸம்ஸ்கிருத அகராதிகளை தொகுத்தனர். பாரசீக–அரபு பாஷைகளிலிருந்து இலக்கியங்களை மொழிபெயர்த்தனர். ஸம்ஸ்கிருத சாகித்திய கர்த்தாக்கள் எக்காலத்திலும் தனியே ஒதுங்கியது இல்லை. தமக்கு என்றுள்ள தனித் தன்மையை வைத்துக்கொண்டு, பல்வேறு வெளி அம்சங்களை இணைத்துக்கொண்டு தமதாக்கிக் கொண்டனர். பிற்காலத்தில் தோன்றிய இஸ்லாமியத் தொடர்புகள் ஆதிகாலத்து மத்திய கிழக்குத் தொடர்புகளின் புதிய தொடர்ச்சியேயாயின. முதலாவது தொடர்பு சோஸ்ராவ் அனோஷர்வான் (531–579 கி. பி.) காலத்தில் தொடங்கியது. இஸ்லாமிய காலிப்புகளின் ஆட்சிக் காலத்தில் மேலும் வளம் பெற்றது. வைத்தியம், கணிதம் ஆகிய துறைகளில் ஸம்ஸ்கிருத நூல்கள் மொழிபெயர்க்கப்பட்டு மேற்றிசை சென்றன. இக்காலத்தில் ஐரோப்பிய நாடுகளுடன் ஏற்பட்டுள்ள தொடர்பானது பழங்காலத்தில் ஏதன்ஸ், அலெக்ஸாண்டிரியா, ரோமாபுரி ஆகிய நாட்டு அறிஞர்களுடன் இந்தியா வைத்துக் கொண்டிருந்த தொடர்பின் மறுமலர்ச்சியே யாகும்.

இக்காலத்தில் ஏற்பட்ட இந்திய–ஐரோப்பிய தொடர்பானது ஆசிய–ஆப்பிரிக்கக் கண்டங்களுக்கு விசேஷ பொருள் படைத்ததாக ஆயிற்று. அவர்களது மாபெரும் மறுமலர்ச்சிக்குப் பிறகு ஸம்ஸ்கிருதத்தின் சிறப்பை மேலைநாடுகள் கண்டறிந்தது ஐரோப்பியச் சிந்தனையிலேயே மிக முக்கியமானதொரு நிகழ்ச்சியாகும். இந்தியா சம்பந்தப்பட்டவரை இது இருவிதப் பயன்களை அளித்தது. நவீன காலத்துக்கேற்ப இந்தியர்கள் தமது பண்பாட்டுச் சிறப்பின் மேன்மையைப் புதிதாக உணருவதற்கு அது பயன்பட்டது. கீழ்த்திசைச் செல்வங்களை ஆராய்ந்த மேலை நாட்டினரின் சிந்தனைப் போக்கும்,

வாழ்க்கை வழிகளும், மரபையொட்டிய ஸ்தாபனங்களின் கல்வித் துறையிலும் மாறுதல்களை விளைவித்தன. ஸம்ஸ்கிருதப் படிப்பே நவீன, சம்பிரதாய முறைகள் என்று இரண்டாகத் திளைத்தது. நவீனமுறை புதிய ஆங்கிலப் பள்ளிக்கூடங்கள், காலேஜுகள், சர்வகலாசாலைகள் ஆகியவற்றில் போதிக்கப்பெறுகின்றது. சம்பிரதாய முறை 'டோல்', பாடசாலை முதலியவற்றில் நீடிக்கிறது. கல்வி, நிர்வாகத் துறைகளில் மேலை நாடுகள் விளைவித்த மாறுதல்களும், கருத்துக்களும், இலக்கியமும் இருவகை ஸம்ஸ்கிருத நூல்களை ஊக்குவித்தன. இதன் விளைவாக ஸ்ம்ஸ்கிருத இலக்கியமானது நவீன ஐரோப்பியச் செல்வாக்கின் கீழ் ஒரு புதிய கட்டத்தில் பிரவேசித்து உள்ளது.

மேலைத் தொடர்பானது முதலில் ஸம்ஸ்கிருதத்துடன் இருந்தது, இலக்கியப் பணிக்கு மேலும் புத்துணர்ச்சி அளித்தது. ஆனால் அகில-இந்திய மொழியாக முன்னர் ஸம்ஸ்கிருதம் வகித்து வந்த அந்தஸ்தை ஆங்கிலம் கைப்பற்றிக் கொண்டதன் விளைவாகவும், முன்போல ஸம்ஸ்கிருதத்தை பிராந்திய மொழிகள் மூலம் இல்லாமல் ஆங்கிலத்தின் மூலம் கற்க நேரிட்டதாலும், வரவர ஸம்ஸ்கிருதமானது அன்றாட வாழ்க்கையிலிருந்தும், தாய் மொழியிலிருந்தும் விலகிச் செல்லலாயிற்று. அதைப் படிப்பது புதைபொருள் ஆராய்ச்சித் தன்மையைப் பெற்றது. ஆங்கிலச் செல்வாக்கு முதலில் ஏற்பட்டபோது ஸம்ஸ்கிருதப் பண்டிதர்கள் உற்சாகத்துடன்கூட அம் மொழியில் சஞ்சிகையைத் தோற்றுவித்தனர். ஆங்கில நூல் ஒன்றை ஸம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்த்தார்கள். நாவல்களும், சிறு கதைகளும் வரையப்பெற்றன. அந்த நிலைமை மாறி, இன்று ஸம்ஸ்கிருதப் பண்டிதன் நிராதரவாகி, கையைப் பிசைந்துகொண்டு அங்கலாய்க்கிறன். நம்பிக்கை சிதைந்துவிட்டது. புழக்கத்தில் உள்ள மொழி என்ற அந்தஸ்தை ஸம்ஸ்கிருதம் வரவர இழக்கலாயிற்று.

ஸம்ஸ்கிருத அபிமானிகள்கூட, அதில் புதிதாக எழுது வதை அவ்வளவாக சிலாகிக்கும் நிலைமை போய்விட்டது. அதிருஷ்டவசமாக ஸம்ஸ்கிருதத்தின் இலக்கியப் பணி யாற்றல் விஷயத்தில் சிரத்தை இப்போது மீண்டும் ஏற்பட ஆரம்பித்திருக்கிறது. நவீனக் கல்வி பெற்றுள்ள ஸம்ஸ்கிருதப் படிப்பாளிகள் மொழியை இன்னும் அதிக மாகக் கையாண்டு, தமது கருத்துக்களை, சிந்தனையை வளப்படுத்தும் சாதனமாக அதைப் பயன்படுத்த வேண்டுமென்று விரும்புகிறேன்.

பிரிட்டிஷ் ஆட்சியின் துவக்கத்தில் ஸம்ஸ்கிருதக் கல்வி தன் வாலாயமான செல்வாக்குடன் திகழ்ந்தது. பண்டிதர்கள் ஆழ்ந்த புலமையுடையவர்கள் என்ற சம்பிர தாயம் நிலவியிருந்தது. 19-வது நூற்றாண்டில் ஸம்ஸ் கிருதப் பண்டிதரோ அல்லது புதுக் கல்வி பெற்ற அவரது மகனோ அல்லது பேரனோ ஸம்ஸ்கிருதத்தில் எழுதிக் கொண்டிருந்தான். அவர்களில் சிலர் நிறைய எழுதினர். இனிமையாக எழுதினர். நூறு நூல்களை எழுதி வெளி யிட்டவர்களும் உண்டு. இலக்கியத்தை அச்சுவாகன மேற்றி பிரபலப்படுத்தும் முறை அமுலுக்கு வந்த பிறகு, ஸம்ஸ்கிருத நூல்களின் வெளியீடு போதிய வளர்ச்சி காண வில்லை. புனையப்பெற்ற இலக்கியத்தில் பெரும் பகுதி சுவடியாகவே இருந்து வருகிறது. ஆராயவேண்டிய நூல்களில் பெரும்பாலானவை இன்னும் சுவடிக ளாகவே இருப்பதன் காரணமாகவும், அவை கிடைப்பது சிரமமாக இருப்பதாலும் தற்கால ஸம்ஸ்கிருத இலக்கியத்தைப் பற்றிய முழு வரலாற்றையும் தருவதற் கில்லை. ஸம்ஸ்கிருதத்தில் கவிதைகள், நாடகங்கள், சிறு கதைகள் முதலியவற்றை இக்கால எழுத்தாளர் இயற்றி வருகின்றனர். தேசமெங்கும் பரவிக் கிடக்கும் பொது மக்களின் திருப்திக்காக அவற்றை வெளியிட முடியு மென்ற நம்பிக்கை அவர்களுக்கு இல்லை. இம்மாதிரி பிரசுரம் இல்லாமல் இருப்பதைக் கொண்டு, ஸம்ஸ்கிருதத்

தில் தொடர்ச்சியாக இலக்கிய ஆக்கப்பணி நடந்து வந்திருக்கிறது என்ற உண்மையை மறுக்க முடியாது. சமீப காலத்தில் ஸம்ஸ்கிருதத்தில் புதிய நவீன இலக்கியம் வெளியாகியுள்ளது. நாட்டின் பிறமொழி இலக்கியங்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் அவை மட்டமாகத் தோன்ற மாட்டா.

ஸம்ஸ்கிருத இலக்கியத்தின் வரலாற்றை விவரிக்கும் புகழ்பெற்ற நூல்கள் 12-வது நூற்றாண்டு வரைதான் தகவல்களைக் கொடுக்கின்றன. பிந்தைய நூற்றாண்டுகளின் ஒரு சில அபூர்வமான படைப்புக்களைப் பற்றிய பிரஸ்தாபம் மட்டுமே அவற்றில் காணப்பெறுகிறது. எனவே, இந்த உண்மையைக் கவனிக்குமாறு கூறுவது அவசியமாகிறது. ஒரே ஒரு எழுத்தாளர்தான் இந்தக் குறையை நிவர்த்தித்திருக்கிறார். இக்காலத்தில் இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் ஸம்ஸ்கிருதத்தில் எழுதுபவர்களைப் பற்றியும், அவர்களுடைய படைப்புக்களையும்பற்றி நிறைய தகவல்களை [2] அவர் சேகரித்துள்ளார். தற்கால ஸம்ஸ்கிருத வெளியீடுகளின் சில உதாரணங்கள் ஸம்ஸ்கிருத சஞ்சிகைகளில் பிரசுரமாகியுள்ளன. அவை இப்போது பிரசுரிக்கப்படவில்லை. அவற்றின் பழைய பிரதிகள் கிடைப்பது அரிதாக இருக்கிறது. இந்த முயற்சியுடன் கூட, [3] இந்த எழுத்தாளர் வேறு இரண்டு துறைகளிலும் இறங்கியிருக்கிறார். இந்திய இலக்கியப் பணியாளர்களுக்கும், வாசிக்கும் பொதுமக்களுக்கும் ஸம்ஸ்கிருத இலக்கியத்தின் தன்மையையும், விஸ்தரிப்பையும் பற்றி, தகவல்களைக் கொடுத்து அதில் போதிய அக்கறையை இந்த முயற்சிகள் உண்டு பண்ணும்.

2. எம். கிருஷ்ணமாச்சாரியார்—ஸம்ஸ்கிருத பேரிலக்கியத்தின் சரித்திரம். மதராஸ் – 1937.

3. தற்கால ஸம்ஸ்கிருத படைப்புக்கள், அடையாறு நூல் நிலைய புல்லட்டின் 1956, ஸம்ஸ்கிருத இலக்கியம் 1700 முதல் 1937. மதராஸ் சர்வகலாசாலைப் பத்திரிகை, நூற்றாண்டு விழா மலர் 1957.

### மேலைநாடுகளின் தொடர்பு

மேலை தேசங்களின் இலக்கியத்துடன் ஏற்பட்ட தொடர்புதான் ஸம்ஸ்கிருத இலக்கியத்தில் காணப்பெறும் தற்காலப் போக்கிற்கு முக்கிய காரணம். இந்தத் தொடர்பின் விளைவாகத் தொடங்கிய பணிகளில் முக்கியமானவை ஸம்ஸ்கிருத சஞ்சிகைகளைத் தோற்றுவிப்பதில் தென்படும் புதிய அக்கறை. மேலை தேசங்களின் பிற இலக்கியங்களை மொழிபெயர்ப்பது, சிறு கதையின் வளர்ச்சி, சிறு கவிதை, நாவல், கதை சொல்லுதல், பயனுள்ளவாறு வசனத்தை வளர்ப்பது, வருணனை, திறனாய்வு, இலக்கியம், கட்டுரை, நீண்ட ஆராய்ச்சியுடன் கூடிய விமரிசனம், பொது விவாத வகைகள், தஸ்தாவேஜுகள், இலக்கிய ரசனையை வளர்ப்பது, வரலாற்றுத் திறனாய்வு, விஞ்ஞான அறிவை பிரகாசப்படுத்துவது போன்ற பணிகளில் இவை செயல்படுகின்றன. பிரதேச மொழிகளில் புதிதாக வருகின்ற நூல்களைப் படிக்கும் ஸம்ஸ்கிருத வல்லுநர்கள் தாமே தமது தாய்மொழிகளில் வரும் நல்ல நூல்களை ஸம்ஸ்கிருதமாக்குகின்றனர். பழைய நூல்களும், புதிய நூல்களுமாக இவ்வாறு உருவாக்கப்பெறுகின்றன. ஸம்ஸ்கிருதத்திற்கும், பிராந்திய மொழிகளுக்கும் இருந்து வந்த நெருங்கிய தொடர்பு இவ்வாறு மீண்டும் பலமாக இணைக்கப்பெறுகிறது. மூன்றாவதாக, நாட்டின் பொது வாழ்வில் காணப்பெறும் புது சமூக, ராஜீய, இயக்கங்களும் ஸம்ஸ்கிருத எழுத்தாளர்களைக் கவர்ச்சித்துள்ளன. புதிய சூழ்நிலையில் அவர்கள் இயற்றியுள்ள நூல்களைப் பார்க்கையில் ஸம்ஸ்கிருதம் முழு ஜீவகளையுடன் விளங்குவது தெரியும். தற்கால வாழ்க்கையின் பிரச்னைகளையும், சிந்தனையையும் எடுத்துரைக்க ஏற்ற சாதனமாகவும் அது பயன்படுகிறதென்பதைக் காண்கிறோம்.

சம்பிரதாயமான முறையில் ஸம்ஸ்கிருதப் பயிற்சி தொடர்ந்து நடந்து வருகிறது. எனவே, பழைய மரபில்

வேறுன்றியுள்ள பண்டிதர்கள் நீண்ட கவிதைகளேயும், சிறிய பாடல்களேயும், கீதங்களேயும், நாடகங்களேயும், சமய நூல்களேயும், வியாக்கியானங்களேயும், சாஸ்திரீய, தொழில்-நுட்ப விமரிசனங்களேயும், பழைய பந்தாவிலேயே வளர்த்து வெளியிடுகின்றனர். சமீபத்தில் தென் நாட்டிலிருந்து பட்ட ஸ்ரீ நாராயண சாஸ்திரி என்பவர் 93 நாடகங்களே இயற்றியுள்ளார். ராதாமங்கலம் நாராயண சாஸ்திரி 108 நூல்களுக்கு ஆசிரியர். காவிய கண்ட கணபதி சாஸ்திரி இவர்களேப் போலவே நிறைய எழுதியிருக்கிருர். பிற கல்வி ஸ்தலங்களிலும் இதேமாதிரி பணியாற்றி வருபவர்கள் உண்டு சாகித்திய கர்த்தாவின் புலமையும், திறமையும் பிரகாசிக்கும் சில நூல் வகைகள் அமைக்கப் பட்டிருக்கும் விதமானது சித்திர வடிவங்களே (பந்தங்களே)[4] உருவாக்கித் தருவதாக அமைக்கின்றது. இந்த உத்தி இன்னும் கையாளப் பெறுகிறது. சி. என். ராமசாஸ்திரி (மைசூர்) 1905-ஆம் ஆண்டில் ராவணன்-சீதை உரையாடல் (சீதா–ராவண–சம்வாத–ஜரீ) என்ற நூலே வெளியிட்டுள்ளார். அதில் ராவணன் சொல்வதாக இருக்கும் பாடலிலிருந்து ஓர் எழுத்தை அகற்றிவிட்டால் அது அத்தக் கேள்விக்கு சீதை அளிக்கும் பதிலாக அமைந்து விடும்;[4A] பழைய பாணியில் எண்ணற்ற விளக்கங்கள் கவிதைகளேயும், நாடகங்களேயும் பற்றி, முக்கியமாக சர்வகலாசாலேப் படிப்புக்கு என்று ஒதுக்கப் பட்டுள்ள நூல்கள் விஷயமாக, பழைய வழிப் பண்டிதர்களால்[5] இயற்றப்பட்டுள்ளன. ஆங்கிலம் பயின்ற ஸம்ஸ்

4. உதாரணம்: மைசூர் ஸம்ஸ்கிருத கல்லூரி பத்திரிகையில் ஸ்ரீ டி. என். ஸ்ரீநிவாஸதேசிகாச்சாரியார் எழுதியிருப்பது 1951 மார்-டிசம்பர். மதுரநாதசர்மா, ஜெயபூர். ஜயபூர வைபவ (1947) சித்ர சத்வார பகுதி.

4a. நிரோஷ்ட்ய-தசாவதாரஸ்தவ. தட்டி ஸ்ரீநிவாஸாச்சாரியார் எழுதியது. தஞ்சாவூர் 1900, டி. எஸ். ஸ்ரீநிவாஸ தேசிகாச்சாரியா, MSC MM 1951, மார்ச்-டிசம்பர்.

5. மஹாமஹோபாத்யாய லக்ஷ்மண சூரி, மதருஸ்.

கிருத வல்லுநர்களும்[6] இந்தத் தொண்டில் ஈடுபட்டுள்ள னர். வெவ்வேறு தத்துவ முறைகளைப் பற்றி சர்ச்சை நடத்தியவர்களிடையே மகா மகோபாத்தியாய அனந்த கிருஷ்ண சாஸ்திரி, மதுசூதன சர்மா (ஜெயபூர்) ஆகி யோரும் இவர்களைப் போன்ற திறம் படைத்த காசி, கல்கத்தா, மிதிலை, கேரள பண்டிதர்களும் குறிப்பிட வேண்டியவர்கள். ஆனால் சம்பிரதாயமான வழிமுறை யில் இன்னும் ஏராளமான இலக்கியம் ஸம்ஸ்கிருதத்தில் படைக்கப்பட்டு வருகிறதாகையால் விரிவான பட்டியலை இங்கு தருவது சாத்தியமல்ல.

பிரிட்டிஷ் ஆட்சியாளர் நிர்வாகத் தேவைகளை முன் னிட்டு பழைய சட்டங்களின் நிருபணங்களைத் தொகுத் துத் தருவதற்காக, ஸம்ஸ்கிருத பண்டிதர்களை வேலைக்கு அமர்த்தினர்கள். அதேமாதிரி, பிரிட்டிஷ் மகுடதாரி களான விக்டோரியா, ஏழாவது எட்வர்டு, ஐந்தாம் ஜார்ஜ் போன்றவர்களைப் பற்றி புகழ் பாடுவதற்கும் அவர் கள் அமர்த்தப் பெற்றனர். பராமர சாளுக்கிய, விஜய நகர பரம்பரையினரைத் தமது மூதாதையர் எவ்வாறு போற்றிப் புகழ்ந்து பாடியிருப்பார்களோ, அதே விதத் தில் இந்தப் புதிய மகுடதாரிகளைப் பற்றிப் பண்டிதர்கள் மகா காவியங்களையும், நாடகங்களையும் இயற்றித் தந்தனர். பிரிட்டிஷாரிடம் விசுவாசம் இவ்வாறு ததும்பு வதைப் பிரகாசப்படுத்துவதற்கு நாம் இன்று அவ்வளவு மதிப்புத் தர மாட்டோம். ஆனால் ஸம்ஸ்கிருதக் காவ்யம் அல்லது நாடகத்தை இயற்றுவதற்கு இதன்மூலம் புதிய விஷயம் கிடைத்தது. மேலும் இந்தியாவைப் பிரிட்டி ஷார் ஆட்கொண்டதைப் பற்றிய வரலாற்றை ஸம்ஸ்கிரு தத்தில் தருவதாகவும் இவை அமைந்துள்ளன. இந்த நூல்களில் சில சரித்திரங்களாகவே இருக்க வேண்டு

---

6. பம்பாயில் எம். ஆர். காளேயும் கல்கத்தாவில் எஸ். ஆர். ரேயும், இக்கட்டுரையாளரின் ஆர்ய சதக வ்யாக்யா, ஆனந்தரங்க சம்பு காவியமும் குறிப்பிடத்தக்கவை.

மென்ற நோக்கத்துடன் புனையப் பெற்றவை. விநாயகர் இயற்றியுள்ள ஆங்கரேஜா–சந்திரிகா, ஊர் பேர் தெரியா தவர் புனைந்துள்ள இதிகாச தமோ மணி ஆகிய இரண்டும் இத்தகைய வரலாறுகளுக்கு எடுத்துக் காட்டு கள். மில்பர்டு இயற்றியுள்ள நூலை ஆதாரமாக வைத் துக் கொண்டு இங்கிலாந்தை வருணிக்கும் நூதன உதந் தோத்ஸா என்ற நூலை 1839-ல் கல்கத்தாவில் பிரசுரித் துள்ளனர். தஞ்சாவூரைச் சேர்ந்த ராமஸ்வாமி ராஜு பிரிட்டிஷாரைக் குறித்தும், புகழ்பெற்ற இந்தியர்களைக் குறித்தும் எழுதிய ராஜாங்கல-மகோத்தியானு என்ற நூலை கும்பகோணத்தில் 1894-ம் வெளியிட்டுள்ளனர். முதல் உலக யுத்தத்தை ஆங்கில-ஜெர்மனி யுத்த விவரணு என்ற தலைப்புடன் திருமலை புக்கபட்டினம் ஸ்ரீநிவாச ஆச்சாரியா விவரித்துள்ளார். தமது காதலிக்காக பரந்த ஒரு சாம்ராஜ்யத்தையே தியாகம் செய்த எட்டா வது எட்வர்டைப் பற்றி ஒரு ஸம்ஸ்கிருதக் கவிஞர் உணர்ச்சி மிகுந்த ஒரு காவியத்தை "யது விருத்த-சௌ ஹார்தா" என்ற பெயருடன் வெளியிட்டுள்ளார். அந்தக் கவிஞரின் பெயர் ஏ. கோபால அய்யங்கார். இந்த நூல் வெளியானது 1937-ல், சென்னையில்.

### சரித்திரமும் வாழ்க்கை வரலாறும்

சில அரச பரம்பரையினரைக் குறித்து சரித்திர காவியங்களை எழுதும் பழக்கம் தொடர்ச்சியாக இருந்து வந்திருக்கிறது. இந்தியாவின் வரலாற்றை புதிய சரித் திரக் கண்ணோட்டத்துடன்கூட பிரிட்டிஷ் ஆட்சிக் காலம் வரை தொகுத்து எழுதுவதற்கு பல முயற்சிகள் நடை பெற்றுள்ளன. இந்தச் சரித்திர நூல்கள் உரைநடை யிலும், பாடல்களாகவும் வெளிவந்துள்ளன. இந்திய சரித்திரம் முழுவதையும் பற்றியோ, அல்லது குறிப்பிட்ட சில சகாப்தங்களைப் பற்றியோ அவை தகவல்களைத் தருகின்றன. ஐந்து படலங்களில் அமைந்துள்ள 'இதி

காச தீபிகா'[7] என்ற நூல் இந்திய சரித்திரத்தை திப்பு சுல்தான், மராட்டியர் சண்டைக்காலம் வரை விவரித்துள்ளது. 'பாரத இதிகாச' (SSPP[8]) (1949) இந்திய சரித்திரத்தை உரைநடையில் வழங்குகிறது. மகாமகோபாத்தியாய டி. கணபதி சாஸ்திரி இந்திய வரலாற்றை 'பாரத அனுவர்ணனு' என்ற நூலாக வெளியிட்டுள்ளார். 'பாரதீயம் இதி விருத்தம்' என்ற நூலை அதே மாதிரி ராமாவதார சர்மா இயற்றியுள்ளார். ஜெயபூரைச் சேர்ந்த[9] லக்ஷ்மிநாத சாஸ்திரி 'பாரத இதி விருத்த காரா' என்ற சரித்திர நூலை பிரசுரித்துள்ளார். காவிய கண்ட கணபதி சாஸ்திரி[10] "பாரத சங்க்ரகம்" என்ற நூலில் இந்திய வரலாற்றை விமரிசனம் செய்கிறார். 16 சிறிய அத்தியாயங்கள் கொண்ட[11] 'ஸ்ரயங்க காவியா' என்ற நூலில் கவி கிருஷ்ண கவுர் சீக்கியர்களின் ஆரம்ப

---

7. எப்பொழுது இது அச்சாகியது என்று தெரியவில்லை.

8. பின்வரும் சுருக்கமான பெயர்கள் அவைகளுக்கு எதிரேயுள்ள ஸம்ஸ்கிருத பத்திரிகைகளைக் குறிக்கும்.

SS PP - ஸம்ஸ்கிருத ஸாஹித்ய பரிஷத் பத்ரிகா, கல்கத்தா.

SR - ஸம்ஸ்கிருத ரத்னகரா - ஜயபூர் - பனாரஸ்.

SAH - ஸஹ்ருதயா, ஸ்ரீரங்கம்.

AV - அம்ருதவாணி, பெங்களூர்.

MV - மதுரவாணி, கதக், தார்வார்.

UP - உத்யான பத்ரிகா, திருவையாறு, தமிழ்நாடு.

MSCMM - மைசூர் மஹாராஜா ஸம்ஸ்கிருத கல்லூரி பத்திரிகை.

Manj - மஞ்ஜுஷா, கல்கத்தா.

SC - ஸம்ஸ்கிருத சந்திரிகா - கோலாப்பூர்.

9. ஜெயபூர வைபவாவின் முன்னுரையில் பக்கம் 40 - ஜெயபூர் 1947.

10. அவரது உமா ஸாஹஸ்ரத்தின் முன்னுரையில் பக்கம் 11 சிரசி, வடக்கு கன்னட பிரதேசம் 1943.

11. லாஹூர் - 1935.

கால சரித்திரத்தை வழங்கியுள்ளார். 'பாரத-நர-ரத்ன மாலா' என்ற தொடர்ச்சியாக வரலாற்று விவரணையில் ஸ்ரீபாத சரஸ்திரி ஹஞூர்கர் சரித்திரத் தகவல்களை வழங்கு கின்றார். 1933-ல் இந்தூரில் வெளியிட்ட "சிகா-குரு-சரித்திராமிருதம்" என்ற நூலில் சீக்கிய குருக்களைப் பற்றி எழுதி அவர் வெளியிட்டார். 'கஜனி முகம்மது சரித்திரா' என்ற சரித்திக் காவியத்தை மாமூது கஜனி யைத் குறித்து 'ஸஹ்ருதயா' வெளியிட்டுள்ளார். சந்திரகுப்தன், அசோகன், சம்யோகிதன் போன்றவர் களைக் குறித்து சிறிய கட்டுரைகள் உரைநடையில் அதே சஞ்சிகையில் வெளியாகியுள்ளன. 1914-ம் ஆண்டில் வெளியான ஸம்ஸ்கிருத ரத்னாகரத்தில், இந்தியா மீது அலெக்ஸாண்டர் மேற்கொண்ட படையெடுப்பை பற்றிய வருணனைகள் இருக்கின்றன. 1907-ம் ஆண்டில் அப்பா சாஸ்திரி 'ஸம்ஸ்கிருத சந்திரிகா' என்ற சஞ்சி கையில் 'ஸ்வதேசிய கதா' என்று வெளியிட்டுள்ள நூலில் இந்திய சரித்திரத்தைப் பற்றிய உண்மைகளையும், புள்ளி விவரங்களையும் கொடுத்திருக்கிறார். பிரிட்டிஷ் ஆட்சி யின் நல்ல, கெட்ட அம்சங்களை அவர் வழங்கியுள்ளார். ஸ்ரீநகரிலிருந்து வெளியான 'ஸ்ரீ' என்ற சஞ்சிகையில் காஷ்மீரைப் பற்றிய "ராஜதரங்கிணி" பிரசுரமாயிற்று. இதை இயற்றியவர் கல்ஹணர். அவருக்குப் பிறகு நடந்த காஷ்மீர ஆட்சியைப் பற்றி நவீன காலம் வரை யில் சேர்த்து கோவிந்தர ஜனகா பூர்த்தி செய்துள்ளார்.

பிரசித்தி பெற்ற மகாபுருஷர்களைப் பற்றி உண்மை களும், கட்டுக் கதைகளும் கலந்த கவிதையாகவும், உரைநடையாகவும் வானளாவப் புகழ்ந்தும் எழுதும் நூல்கள் பல உண்டு. அவற்றில் சரித்திரத் தகவல்கள் மங்கி மறைந்து விடுகின்றன. புதிய வாழ்க்கை வர லாற்று நூல்களில் பழங்காலத்து அலங்காரச் சொல் லணிகள் கிடையாது. எளிய நடையோட்டத்தைக் காண் கிறோம். சம்பவங்களை, வாழ்க்கை விவரணங்களைக்

காலக் குறிப்புகளுடன் கூட இன்றைய எழுத்தாளர் சேர்த்து எழுதுகிறார். பலதரப்பட்ட பெரிய மாறுதல்களைப் பற்றி, பழைய சரித்திர புருஷர்களைக் குறித்து, ஞானிகளைப் பற்றியும், புதிய புலவர்கள், அரசியல் தலைவர்கள், சமீபகால பொதுவாழ்வினர் போன்றோரைக் குறித்தும் அவை புனையப் பெற்றுள்ளன. கடைசியாக பொதுவாழ்வினரைப் பற்றிய தகவல்களைத் தனியாகக் கவனிப்போம். பிற வகையினரைப் பற்றிய வாழ்க்கை வரலாற்று நூல்களை முதலில் பார்ப்போம். 'சிவராஜ விஜயா' என்ற தலைப்பில் சிவாஜியைப் பற்றி உரை நடை வரலாறு ஒன்றை ஜெயபூரைச் சேர்ந்த அம்பிகா தத்தர் வியாசா எழுதியுள்ளார். 'ஸம்ஸ்கிருத சந்திரிகா' என்ற சஞ்சிகையில் ஏழு அல்லது எட்டு புத்தகங்களில் அது தொடர்ச்சியாக பிரசுரமாகியுள்ளது. பிருத்விராஜ், சிவாஜி, ராணு பிரதாப சிங் உட்பட இந்திய தேசிய வீர தீரர்களைப் பற்றி உரைநடையில் ஸ்ரீபாத சாஸ்திரி ஹஸூர்கர் எழுதியுள்ளார். 1920–22 ஆண்டுகளில் இந்தூரில் 'பாரத வீர ரத்னமாலா' என்ற தலைப்பில் இது பிரசுரிக்கப்பட்டுள்ளது. ராணி அகல்யாபாயைப் பற்றி சாகாராம சாஸ்திரி ஒரு மகா காவியத்தையே இயற்றினார். 1951–ல் சதாராவில் அது பிரசுரமாகியுள்ளது. அதேமாதிரி காவியப் பாணியில் 'ஜெயபுர ராஜ வம்சாவளி' என்பதை ராமநாத நந்தா 1938–ல் இயற்றி வெளியிட்டுள்ளார். பரவஸ்து இலட்சுமி நரசிம்ம ஸ்வாமி என்பவர் சாளுக்கிய சரிதத்தை சென்னையில் 1938-ல் இயற்றி வெளியிட்டுள்ளார். சாளுக்கிய சிலா சாஸனங்களை ஆராய்ந்து, தொகுத்து வகை செய்து, அந்த பரம்பரையைப் பற்றி தொடர்ச்சியான சரித்திர வரலாற்றை அவர் புனைந்துள்ளார். வீ. ஏ. லட்கர் சாஸ்திரி கோலாப்பூர் மன்னர் ஒருவரைப் பற்றி 'சாகு சரிதா' என்ற நூலை பிரசுரித்துள்ளார். 'பாரத ரத்னங்கள்' என்ற தலைப்பில் சுருக்கமாக பலபேரது வரலாறு

களை 'ஸம்ஸ்கிருத பவிதவ்யம்' என்ற நாகபுரி சஞ்சிகை வெளியிட்டுள்ளது. இந்தியாவின் வெவ்வேறு பிராந்தியங்களிலும், இலக்கியங்களிலும் புகழ் பெற்று விளங்குபவர்களை வாசகர்களுக்கு அறிமுகம் செய்து வைக்கும் பெரும் பணியை இதன்மூலம் அது மேற்கொண்டுள்ளது. சரித்திர நிகழ்ச்சிகளை வைத்துக்கொண்டு கற்பனைக் கதைகளும் இயற்றப்பட்டுள்ளன.

நாட்டின் வெவ்வேறு பகுதிகளைச் சேர்ந்த ஞானிகளின் வாழ்க்கை வரலாறுகளை கவிதைகளாகவும், உரை நடை நூல்களாகவும் இயற்றியிருக்கிறார்கள். மைசூரைச் சேர்ந்த அலமேலு அம்பா என்ற மாது 'புத்த சரிதாம்ருத' என்ற பெயரில் புத்தரைப் பற்றி 1922-ல் எழுதி வெளியிட்டிருக்கிறார். வல்லபாச்சார்யா, ராமதாஸ் ஆகியோரின் வாழ்க்கை வரலாறுகளை உரைநடையில் ஹசூர்கர் தொடங்கினார். 'பாரத சாது ரத்னமாலா' என்பது அந்தத் தொகுப்பின் பெயர். காளிஹரதாஸ் வசு என்பவர் சஞ்சிகைகளில் ஸ்ரீசைதன்யரைப் பற்றியும், அவருக்கு மூத்தவரான அத்துவைத ஆசார்யாரைப் பற்றியும் எழுதியுள்ளார். ஸ்ரீமதி க்ஷமாராவ் என்பவர் ஞானேசுவரா, துக்காராம், ராம்தாஸ், மீரா ஆகியோரைப் பற்றி எழுதியுள்ளார். 'சத்தியானுபவம்' என்ற பெயரில் சத்திய நாராயணனைப் பற்றி ஒரு வரலாறு 1946-ல் பிரசுரமாகியுள்ளது. சிருங்கேரியைச் சேர்ந்த புகழ்பெற்ற நரசிம்ம பாரதி சுவாமியைப்[13] பற்றி ஒரு மகா காவியத்தை ராஜ வல்லப சாஸ்திரி எழுதியிருக்கிறார். காமகோடி சங்கராச்சாரியாரின் வாழ்க்கையும், விஜய சரித்திரங்களையும் பற்றி மூன்று நூல்கள்[14] பிரசுரமாகியுள்ளன. புதிய சமயாச்சாரியார்களைப் பற்றியும்

12. 1944, 1950ff 1953ff.

13. 1936 – மதராஸ்.

14. ஸ்ரீ சந்திரசேகர விஜய மஹாரத்னாகரா—பி. உமா மஹேசுவர சாஸ்திரி 1939.

நூல்கள் உண்டு. 'தயானந்த பிரபாவத்தை' வாமனுச் சாரியாரும், 'தயானந்த திக்விஜயம்' என்ற நூலை அகிலானந்த சர்மாவும் 1910-ம் ஆண்டில் அலகாபாத்தில் பிரசுரித்தனர். அண்மையில் 'ஆர்யோதய காவியா' என்ற மகா காவியம் 21 அத்தியாயங்களுடன் கங்கா பிரசாத உபாத்தியாயரால் இயற்றப் பெற்று 1952-ல் அலகாபாத்தில் வெளியாயிற்று. தயானந்தரின் பிரபாவத்தை விரிவான சரித்திர நிலைக்களனில் வைத்து ஹிந்து சமூகத்தின் சீரழிவும், மறுமலர்ச்சியும், அன்னிய ஆதிக்கம், தேசம் விடுதலை பெற்றது ஆகிய அம்சங்களெல்லாம் இதில் இடம் பெற்றுள்ளன. சில காஷ்மீர ஞானிகளைப் பற்றிய தகவல்களை 'ஸ்ரீ' என்ற ஸ்ரீநகர் சஞ்சிகை பிரசுரித்துள்ளது. ராமகிருஷ்ண பரமஹம்சரைப் பற்றி பி. பஞ்சாபகேச சாஸ்திரி 1937-ல் சென்னையில் ஒரு நூலை வெளியிட்டுள்ளார். பெங்களூர் கே. எஸ். நாகராஜன் 'விவேகாநந்த சரிதம்'[15] என்ற நூலை பிரசுரித்துள்ளார். கர்நாடக சங்கீத சாகித்ய வல்லுநர்களான தியாகராஜர், முத்துசுவாமி தீக்ஷிதர் ஆகிய இருவரையும், அவர்களது காலத்தையும், பழக்க வழக்கங்களையும் பற்றி இரண்டு மகா காவியங்கள் உண்டு. தியாகராஜரைப் பற்றிய நூலை எழுதியவர் சுந்தரேச சர்மா (கும்பகோணம், 1937) முத்துசுவாமி தீக்ஷிதரைப் பற்றிய நூல் இந்தக் கட்டுரையாளரால் வரையப் பெற்றது, இன்னும் பிரசுரமாகவில்லை.

காசி கிருஷ்ணச்சார்யா என்ற பழம்பெரு ஸம்ஸ்கிருத புலவர் வால்மீகியின் கதையைச் சுலபமாக உரை நடையில் ரசமான பல சம்பவங்களைச் சேர்த்து, உப கதைகளையும் இணைத்து, பல இலக்கிய அம்சங்களைச் சுவையாகக் கலந்து வெளியிட்டுள்ளார் (குண்டூர், 1957).

ஹிந்து சமயத்திற்குப் புறம்பாகவுள்ள இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கை வரலாறு 'இயேசு சரிதம்' என்ற

15. அம்ருதவாணியில் தனியாக எழுதப்பட்டது.

உரைநடை நூலாக திருவனந்தபுரத்தைச் சேர்ந்த ஸ்ரீ நீலகண்ட சாஸ்திரியாரால் பிரசுரிக்கப்பட்டது. கத்வாலேச் சேர்ந்த ஸ்ரீ குண்டேராவ் ஹர்க்காரே குர்ரானில் 5 அத்தியாயங்களை மொழி பெயர்த்துள்ளார். 1935-ல் இஸ்லாமியப் பண்பாட்டை பற்றிய முதல் அத்தியாயம் ஹைதராபாத்தில் வெளியாயிற்று.

புலவர்களின் வாழ்க்கையையும், பணிகளையும் பற்றிய நூல்கள் உண்டு. பனாரஸ் ஸம்ஸ்கிருத கல்லூரியைச் சேர்ந்த பண்டித பேசன ராமா என்பவரது ஜீவித கதையை விருத்தாந்தா என்ற பெயரில் சந்திரபூஷண சர்மா எழுதியுள்ளார். இது காசியில் 1890-ல் வெளியாயிற்று. காசியைச் சேர்ந்த ஐந்து பெரிய மகாமகோபாத்தியாயர்களின் வாழ்க்கையை சம்பு நடையில் நாராயண சாஸ்திரி கிஷ்டே என்பவர் 'வித்வத் தாமோதர சாஸ்திரி சரிதபஞ்சக' என்ற பெயரில் எழுதி 1928-ல் பிரசுரித்துள்ளார். கங்காதர சாஸ்திரி மணவள்ளி, கைலாச சந்திரா, சிவகுமார் சாஸ்திரி, ராமகிருஷ்ண (தத்திய) சாஸ்திரி ஆகியோர் இவ்வாறு கௌரவிக்கப் பெற்றவர்கள். பழைய எழுத்தாளர்களையும், புதிய ஸம்ஸ்கிருத புலவர்களையும்பற்றி உரைநடையில் வரலாறுகளை ஸம்ஸ்கிருத சந்திரிகா பிரசுரித்துள்ளது. தமது பாட்டனாரான மன்னார்குடியைச் சேர்ந்த மகோபாத்தியாய ராஜு சாஸ்திரியைப் பற்றி யக்ஞசுவாமி சாஸ்திரி "தியாகராஜ விஜயம்" என்ற நூலை வெளியிட்டுள்ளார். (தஞ்சாவூர் 1904) 1939-ல் பம்பாயில் 'சங்கர ஜீவன ஆக்யானு' என்ற நூலை க்ஷமாராவ் பாடலாக அமைத்து வெளியிட்டார். அது அவரது தந்தையின் வாழ்க்கை வரலாறு. அந்த தந்தை சங்கர பாண்டுரங்க பண்டிதர் என்ற பெயருடன் விளங்கிய கீர்த்திமானாகிய ஸம்ஸ்கிருத ஆராய்சித் துறைப் புலவர். வித்தியாதர சாஸ்திரி தமது பாட்டனைப் பற்றி 'ஹரநாம அம்ருத காவியா' என்பதை பிகானீரில்

1955-ல் பிரசுரித்தார். அக்காலத்தில் ஸம்ஸ்கிருத இலக்கியப் பணி நடந்ததைப் பற்றிய தகவல்கள் அதில் இருக்கின்றன. வீரேந்திர பகதூர் சிங் 'பிரம்ம ரிஷி விலாச' (லக்னோ, 1955) என்ற நூலை பிரசுரித்துள்ளார். புலமை மிகுந்த ஒரு தவயோகியின் வாழ்க்கையையும், தியாகத்தையும் பற்றிய வரலாறு இது. தமது சாஸ்திரப் புலமையை ஆசிரியர் இந்நூலில் வெளியாக்கி இருக்கிறார். பண்டித புருஷோத்தம சர்மா சதுர்வேதி என்பவரது வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாக தீனநாத திரிவேதி எழுதியுள்ளார். டாக்டர் வி. எம். கைக்கினி (பம்பாய், 1950) இயற்றியுள்ள "சிவ கைவல்ய சரிதா' என்பது நூலாசிரியரது ஒரு முன்னோரின் வாழ்வு பற்றியது. பண்டித குடும்பங்கள் நிலை பெயர்ந்து வேறிடம் குடியேறியது பற்றிய சரித்திர பூர்வமான தகவல்களை ருசிகரமாக அது வழங்குகிறது. லூயி ரைஸ் என்ற ஐரோப்பிய கீழ்த்திசை நிபுணர் ஒருவரைப் பற்றியும் ஸம்ஸ்கிருதத்தில் ஒரு வாழ்க்கை வரலாற்று நூல் உண்டு. இதை இயற்றியவர் பத்மநாத பண்டிதர் (பெங்களூர், 1905).

சுயசரிதை ஸம்ஸ்கிருதத்தில் எழுதப்பெறுவது தற்கால நிகழ்ச்சி.[15a] கொறடா ராமச்சந்திர கவி (1816–1900) "சுவோதய காவியா" என்று இயற்றியுள்ளார். அது இன்னும் பிரசுரமாகவில்லை. துர்கானந்த சுவாமி தமது வாழ்க்கையைப்பற்றி 'வித்யோதயா'வில் எழுதியிருக்கிறார். மலபாரைச் சேர்ந்த சுவாமி தபோவனம் திருச்சூரில் 1950-ல் 'ஈசுவர தர்சனு அல்லது தபோவன சரிதா' என்ற நூலை வெளியிட்டுள்ளார். அண்மையில் அவர் ஹிமாலய ஆசிரமம் ஒன்றில் காலமாகி விட்டார். அவரது உரைநடை பல சிறப்புக்கள் கொண்டது.

சில இந்திய சுதேச மன்னர்களது நல்லாட்சியின் கீழ்

15a. பாணனும் தண்டியும் தமது வரலாறுகளை தாமே எழுதியுள்ளனர்.

சமஸ்தானங்கள் பரவலான வளர்ச்சி கண்டிருக்கின்றன என்பது மறக்க முடியாதது. இவர்களில் முதல்வர் காலஞ்சென்ற மைசூர் மகாராஜா கிருஷ்ணராஜ உடையார். அவரைப்பற்றிப் பல கவிதைகள் இயற்றப்பட்டுள்ளன. [16] ரல்லபல்லி அனந்தகிருஷ்ண சர்மா, நரசிம்மாச்சாரியா, சிங்கர் அய்யங்கார் மற்றும் பலர் எழுதிய புகழுரைகள் 1925-ல் வெளியாயின. இவற்றில் மின்சாரம், காவேரி அணை, ஜோக் அருவி, கோலார் தங்க வயல்கள், ஹூலிகேரி குகை முதலியன விவரிக்கப்பட்டுள்ளன. இப்போதைய கொச்சி மகாராஜாவின் மாமன் ராமவர்ம மகாராஜா புகழ்பெற்ற ஸம்ஸ்கிருத புலவர். ராமவர்ம விஜயம் [17] என்ற நூல் அவரைப்பற்றியது. "மாலா"[18] என்ற வெளியீடு இப்போதைய கொச்சி மகாராஜாவைப் பற்றியது. அவரும் நல்ல ஸம்ஸ்கிருத புலமை பெற்றவர். மகாராஜா பலஸம்ஸ்கிருத நூல்களை மரபையொட்டி எழுதியிருக்கிறார். "ஜெயபூர வைபவா"[19] மதுரநாத கவி சாஸ்திரி எழுதியிருப்பது. தற்கால ஜெயபுர், அதன் ராஜவம்சம், ஸம்ஸ்கிருதப் புலவர்கள், ஜெயபூரில் குடியேறியுள்ள அவர்களது குடும்பத்தினர் ஆகியோரைப் பற்றியது இந்த நூல்.

## திறனாய்வு

ஸம்ஸ்கிருதக் கல்வியின் பகுதியாகவே மொழியையும் அதன் இலக்கியத்தையும் பற்றிய வரலாறு சேர்க்கப்பட்டது. சம்பிரதாயப்படி நடைபெறும் பாடசாலைகளிலும் பாடத்திட்டத்தில் அது இடம் பெற்றது. பண்டிதரது மனதில் சரித்திர திருஷ்டியையும் திறனாய்வு மனப்பான்

---

16. 1925, ரல்லபள்ளி அனந்தகிருஷ்ண சர்மா, நரசிம்மாசாரியா, சிங்கர் அய்யங்கார் மற்றும் பலர்.

17. குன்னன் வாரியர் பிரசுரம், 1930.

18. ஏ. வி. கிருஷ்ண வாரியர், திருச்சூர், 1949.

19. ஜெயபூர், 1947.

மையையும் தோற்றுவிக்க இது அவசியமாயிற்று. இவ்வாறுதான் தற்கால மொழி-சொல் ஆராய்ச்சி, சாஸ்திரம் பற்றி ஸம்ஸ்கிருத உரைநடையில் எழுதப்பெற்றது. இந்தோ-ஐரோப்பிய மொழிகளை விசேஷமாகக் கருத்தில் கொண்டு ஸம்ஸ்கிருத இலக்கிய வரலாறு தொகுக்கப் பெற்றது. இந்தோ-ஐரோப்பிய மொழி ஆராய்ச்சிக்கு அனுபந்தம் ஒன்றை ராஜராஜ வர்மா தமது 'லகு பாணினீயம்'[20] என்ற நூலில் சேர்த்துள்ளார். 'பாஷா தந்திரா' ஆர். சாமா சாஸ்திரி இயற்றியது. (MScMM 1925–26) 'ஸஹ்ருதயா' என்ற சஞ்சிகையில் மூன்றாவது பகுதியில் 'ஆரிய பாஷா சரிதை' வெளியாகியுள்ளது. எஸ். எஸ். பி. பி. (1935) என்பதில் தேவ பாஷா தேவ நாகர அக்ஷரயோ: உற்பத்தி: என்ற துவிஜேந்திரநாத் குஹா சௌத்ரியின் நூலை வெளியிட்டுள்ளது. புத்தக வடிவில் ஆர். எஸ். வேங்கடராம சாஸ்திரி 'பாஷா சாஸ்திர பிரவேசினி'[21] என்பதையும் S. T. G. வரதாச்சாரியார் 'பாஷா சாஸ்திர சங்க்ரஹா'[22] என்பதையும் வெளியிட்டுள்ளனர். இதேபோல் பல்வேறு கிளைகளில் ஸம்ஸ்கிருத இலக்கியம் வளர்ச்சி கண்டதைப் பற்றிய வரலாறுகள் பிரசுரமாகி உள்ளன. "கீர்வாண பாஷா அப்யுதயா" என்பதை ஆர். ஸ்ரீநிவாச ராகவன் ஸஹ்ருதயா என்ற சஞ்சிகையில் முன்றாவது பகுதியில் எழுதியிருக்கிறார். 'மித்திர கோஷ்டி' என்ற சஞ்சிகையில் கிரிப்பிரசாத சர்மா ஸம்ஸ்கிருத கவிஞர்களைப் பற்றி உரைநடைக் கட்டுரைகளை வரைந்து இருக்கிறார். 'கவிகாவ்ய விசாரா' என்பது MScMM சஞ்சிகையில் ராஜகோபால சக்ரவர்த்தி பிரசுரித்துள்ள விஷயம். 'ஸம்ஸ்கிருத கிரந்த சரிதம்' என்பது உத்தரப் பிரதேசத்தில் தொடர்க் கட்டுரையாக வந்து கொண்

20. இரண்டாவது பதிப்பு திருச்சிராப்பள்ளி, 1913.
21. சென்னை, 1938. பால மனோரமா அச்சகம்.
22. 1933, சிட்டுகுடேர், சென்னை.

டிருக்கிறது. மெக்-டானல்[23] தமது ஸம்ஸ்கிருத இலக்கிய வரலாற்றில் வேத காலத்து இலக்கியத்தைப்பற்றி கூறியிருப்பதை பி. பி. எஸ். சாஸ்திரி, கே. எல். வி. சாஸ்திரி ஆகியோர் மொழிபெயர்த்துள்ளனர். வேத காலத்து ஸம்ஸ்கிருத இலக்கியத்தையும், பேரிலக்கியங்களையும் பற்றி சென்னையில் ஒரு வரலாற்றை ஆர். எஸ். வேங்கடராம சாஸ்திரி பிரசுரித்து இருக்கிறார். இதே விஷயத்தைப்பற்றி சமீபத்தில் இரண்டு புத்தகங்களைக் கொண்ட விரிவான நூலை பஞ்சாப் சர்வகலாசாலையைச் சேர்ந்த பேராசிரியர் ஹன்ஸ்ராஜ் அகர்வால்[24] வெளியிட்டிருக்கிறார். துவிஜேந்திரநாத் சாஸ்திரி 'ஸம்ஸ்கிருத சாஸ்திரீய விமரிச' என்ற நூலில் ஸம்ஸ்கிருத இலக்கிய வரலாற்றை ஸம்ஸ்கிருதத்திலேயே எழுதியிருக்கிறார் (மீரட், 1957). பல பண்டிதர்களும், ஆராய்ச்சியாளரும் பாட பேத ஆய்வுப் பணியிலும், பரிசோதிக்கப் பெற்ற பேரிலக்கியப் பதிப்புக்களை முன்னுரைகளுடன், குண தோஷ விமரிசனங்களுடன் ஸம்ஸ்கிருதத்திலேயே எழுதியிருக்கிறார்கள். இதன் விளைவாக இந்தப் பதிப்புக்களை பயன்படுத்துவோரின் எண்ணிக்கை பெருகிக்கொண்டே வருகிறது. ஜெயபூரைச் சேர்ந்த மதுசூதன சர்மா போன்ற பண்டிதர்கள் இந்திரன், நான்கு வர்ணங்கள், அத்திரி, யக்ஞம் போன்ற விஷயங்களைப்பற்றி ஆராய்ச்சிப் பிரசுரங்களை வெளியிட்டிருக்கிறார்கள்.[25]

## சமூக, தத்துவ இயக்கங்கள்

நாம் கவனித்து வரும் காலமானது சமூக, சமய, தத்துவத்துறைகளில் புதிய இயக்கங்களைக்கொண்டது. வரவர

---

23. பாலக்காடு, 1927.

24. லூதியானு, 1951.

25. இந்திரவிஜயம் - 1930. சாதுர்வர்ண்ய சிக்ஷா 1927, அத்ரிக்யாதி 1926, யக்ஞஸரஸ்வதி 1946, மஹரிஷி குலவைபவம் - 1956.

மேலை நாடுகளின் வாழ்க்கை வழியைப் பின்பற்றும் இந்தியர்களின் எண்ணிக்கை அதிகரித்தது. அயல்நாடுகளுக்குச் சென்று வருவது சகஜமாகிவிட்டது. ஹிந்து பழக்க வழக்கங்களையும், இளவயது விவாகம், வைதவ்யம், ஜாதி, தீண்டாமை போன்ற விஷயங்களை மேலைநாடுகளும், இந்திய ஆசார சீர்திருத்தவாதிகளும் குறைகூறலாயினர். இந்நிலையில் மரபையொட்டிய வழிமுறைகளை வைதிக ஹிந்துக்கள் ஆதரித்து நிலைநிறுத்த வேண்டியதாயிற்று. ஆசார சீர்திருத்த இயக்கங்கள் அலைபோல் வந்து மோதியபோது முதலில் பண்டிதர்கள் துணிவுடன் நேருக்குநேர் நின்று சமாளித்தனர். கடல் பயணத்திற்கு, ருதுமதி விவாதத்திற்கு, விதவை மறுமணத்திற்கு [26] எதி

26. அப்தி-நௌ-யான-மீமாம்ஸ. காசி சேஷ வெங்கடாசல சாஸ்திரி, பம்பாய் 1903, துர்வித்ததிக்கிருதி, அப்பா சாஸ்திரி (Sc. 1907).

விவாஹ-ஸமய-மீமாம்ச-அப்தி-யான - விமரிசௌ - என். எஸ். அனந்தகிருஷ்ண சாஸ்திரி 1913.

பால - விவா ஹ-ஹானி - பிரகாசா. ராமஸ்வருபா, எட்டாவா 1922.

ருதுமதி-விவாஹ - நிஷேத - பிரமாணுனி—மதராஸ் 1952.

பரிணய-மீமாம்ஸா—கே. ஜி. நடேச சாஸ்திரி ஸ்ரீரங்கம் 1913.

வயோ-நிர்ணய—பி. கணேச சாஸ்திரி கும்பகோணம் 1910.

ஸ்ரீ-ஸம்ஸ்கிருத பரிஷத் நடத்தும் பத்திரிகை. ஸ்ரீநகரிலிருந்து. அதில் சம்மத வயது, ஆலயப் பிரவேசம் முதலியன பற்றி கட்டுரைகள் தொடர்ச்சியாக வந்தன, சீர்திருத்த வாதிகளை ஆதரித்த பண்டிதர்களும் இருந்தனர். உதாரணம் - காசி சந்திரா எழுதிய உத்தர சந்திரிகாவில் கடல் கடந்து சென்றவர்களை மீண்டும் வைதிக கட்டுக்கோப்புக்குள் சேர்த்துக்கொள்வது (ராமகிருஷ்ண மிஷன் கலாசார கழக வெளியீடு 1956 ஜுன் — பக்கம் 132.)

ராக அவர்கள் பல கட்டுரைகளை எழுதினர். சமூக, சமயத் துறையில் ஆரிய சமாஜ இயக்கம் பணியாற்றி வேத காலத்துச் சமய நிலைமையின் தூய்மைக்குத் திரும்புமாறு வற்புறுத்தியது. அது ஸம்ஸ்கிருதக் கல்வி பயில்வதற்கு ஊக்கம் அளித்தது. கல்வியின் போதனைக்காக பல பாட புத்தகங்களை சமாஜம் தயாரித்தது. சர்ச்சைக்கிடமான இலக்கியப் படைப்புக்களை பண்டிதர்கள் வெளியிட்டனர். தயானந்த சரஸ்வதியின் கருத்துக்களைக் கண்டனம் செய்யும் வெளியீடுகளும் அவற்றில் இருந்தன. சுதந்திரத்திற்கு முன்னரும், பிறகும் சனாதனிகள் சமூக, சமய விவகாரங்களில் சட்டபூர்வமான குறுக்கீட்டை எதிர்த்து வந்துள்ளனர். வைதிக பண்டிதர்களை பதிப்பாசிரியர்களாகக் கொண்ட ஸம்ஸ்கிருத சஞ்சிகைகள் இன்னும் இவற்றைக் கண்டித்தே வருகின்றன. 'எஸ். ஆர்.' என்ற சஞ்சிகையில் 1951-ம் ஆண்டில் ஒரு சிறு நாடகம் பிரசுரமாயிற்று. அதை எழுதியவர் சிவநாத உபாத்தியாயர். அதில் இரண்டு மாதர் பாத்திரங்களாக அமைந்துள்ளனர். ஹிந்து சட்டத் தொகுப்பு மசோதாவை அவர்கள் அதில் ஆராய்கின்றனர். இந்தியாவில் ஒவ்வொரு வீட்டிலும் ஒரு பாகிஸ்தானை அந்த மசோதா தோற்றுவித்து விடுமென்று அதில் விளக்கப் பெறுகிறது. ஆனால் சீர்திருத்தங்களை வரவேற்றும் எழுதியிருக்கிறார்கள். சமய விவகாரத் துறையிலும் தர்ம சாஸ்திர விளக்கமாகவும் ஸம்ஸ்கிருத நூல்கள் இயற்றப்பட்டுள்ளன. டாக்டர் பகவான்தாஸ் இயற்றியுள்ள "மானவ தர்ம சாரம்" என்பது இத்தகைய நூல்களில் குறிப்பிடத்தக்கதொன்று. மகாமகோபாத்தியாய விசுவேசுவர நாத் ரூ என்பவர் 'ஆரிய விதானம்' அல்லது 'விசுவேசுவர ஸ்மிருதி' என்ற பெயருடன் ஜோத்பூரிலிருந்து ஒரு நூலை வெளியிட்டிருக்கிறார். டாக்டர் பகவான்தாஸின் நூல் விரிவாகவும், சுருக்கமாகவும் இரு பதிப்புக்களில் வந்திருக்கிறது. அது இயற்றப்பட்டிருப்பது அனுஷ்டுப்

சந்தத்தில். தீவிர நாட்டுப்பற்றுடன் பாரதப் பண்பாட்டின் உயர்வில் விசேஷ ஆர்வத்தை ஆசிரியர் வெளிப்படுத்துகிறார். தமது பரந்த ஞானத்தைக் கொண்டு இந்திய வரலாற்றையும், பல்வேறு சித்தாந்தங்களையும், இக, பர வாழ்க்கையைப் பற்றிய ஹிந்து கருத்துக்களையும் அவர் அதில் விமரிசனம் செய்கிறார். ஜாதி, மாதர், ஆலயங்கள், சம்பந்தமாக சாஸ்திரங்களில் விதித்துள்ள தடைகளின் உண்மையான பொருளை விளக்க அவர் முயன்று இருக்கிறார். பிற சமயங்களுடன்கூட ஹிந்து மதத்தை அவர் ஒப்பு நோக்குகிறார். ஹிந்து சாம்ராஜ்யங்களின் வளர்ச்சியையும், வீழ்ச்சியையும் அவர் விசாரணை செய்கிறார். சங்க-சக்தியை, அதாவது ஐக்கிய தேசிய உணர்ச்சியை, தோற்றுவிக்கத் தவறியதுதான் நமது பண்பாட்டிலுள்ள மிகப் பெரிய குறைபாடுகளில் ஒன்று என்பது அவருடைய கருத்து. விசுவேசுவர நாதரின் தற்கால ஸ்மிருதி பெரு நூல்களில் ஒன்று. புதிய விஞ்ஞானம், பூகோளம், சரித்திரம், ஆரோக்கிய வழி, கருத்தடை முதலிய விஷயங்கள் அதில் இடம் பெறுகின்றன.

புத்த, சமண சமயங்களுக்கு எதிராக ஹிந்து மதத்தைப் பாதுகாக்க வேண்டி நேரிட்டபோது, ஸம்ஸ்கிருத தத்துவ போதகர்கள் பிற சமயங்களின் சமய, தத்துவ வாதங்களை நன்றாகக் கற்றறிய வேண்டியிருந்தது. தாம் தயாரித்த நூல்களில் தத்துவ வாத சர்ச்சையை அவர்கள் தொடர்ந்து நடத்தி வந்தனர். பின்னர், துரதிருஷ்டவசமாக பண்டிதர்கள் தமக்குள்ளேயே சண்டை போட்டுக் கொண்டு தமது திறனை வீணடித்துக் கொண்டனர். அத்வைதிகள், துவைதிகள் பிரத்தியட்சவாதிகள், லட்சிய வாதிகள், பக்தர்கள், நிரீசுவர வாதிகள், பக்த கோஷ்டிகளுக்கிடையே ஒருவருக்கொருவர் சண்டை இம்மாதிரியெல்லாம் நிகழலாயிற்று. முந்தைய ஸம்ஸ்கிருத வல்லுநர்கள் தாம் எழுதியதைப் பகைவன் படித்தாக வேண்டுமென்ற ஒரு நிலைமையைத் தோற்றுவித்து இருந்தனர்.

தனது மொழி, இலக்கியம், சமய மரபு ஆகியவற்றைத் தெளிந்தறிந்து வாதத்துக்கு வரும்படி அவர்கள் செய்தனர். ஆனால் பின்னர், ஹிந்து மதமானது முதலில் இஸ்லாமும், பிறகு கிறிஸ்துவ சமயமும் எதிரிட்ட போது, அக்காலத்துப் பண்டிதர்கள் இந்தக் கடமையைச் செய்யத் தவறி விட்டனர்.[27] எனவே, இத் துறையில் இலக்கியம் வளர்ச்சி காணவில்லை. காலத்தின் தேவைக்கேற்ப தத்துவ இலக்கியமானது வளரத் தவறி விட்டது. ஆகையால்தான் சமூக மாறுதல்கள் ஏற்பட்ட காலத்தில் பண்டிதர்கள் தனித்து நின்று எதிர்த்துத் தோல்வியுற வேண்டி நேரிட்டது. மேலை நாடுகளின் புதிய தத்துவ அடிப்படை, சரித்திரம், பிரபஞ்ச வளர்ச்சி ஆகியவை பற்றிய கருத்துக்களை எடுத்துக்கொண்டு பதில் தராமல், மேலை தேசங்களைச் சேர்ந்த கீழ்த்திசை நிபுணர்கள் வேதங்களையும், ஸம்ஸ்கிருத இலக்கியக் கருத்துக்களையும் தவறாக சிதைத்துக் கூறியிருக்கிறார்கள் என்பதை எடுத்துக் காண்பிப்பதில் மட்டும் தமது சக்தியை அவர்கள் வீணடித்தனர். ஹிந்து சமூகத்திற்குள்ளேயே சர்ச்சை தோன்றியபோது சமய தத்துவ இயக்கங்களை இலக்கியம் போதியவாறு பிரதிபலிக்கத் தவறிவிட்டது. குமிழிட்டு எழுந்த சிந்தனையின் அளவைக்கொண்டு பார்த்தால், எதிர்க்கும் வகையில் உருவான இலக்கியங்கள் போது

---

27. இங்குமங்கும் இதற்கு விலக்குகள் உண்டு. விரஜலால் மூகோபாத்தியாயா (கல்கத்தா, 1894) கிறிஸ்தவ தர்ம-கௌமுதி சமாலோசனு என்ற நூலை இயற்றினார். கிறிஸ்துவ கண்ணோட்டத்துடன் ஹிந்து சமயத்தை டாக்டர் பாலன்டைன் கண்டனம் செய்ததற்கு விமரிசனமாக இது வந்தது. ஜான் மியூர் ஹிந்து மதத்திற்கு எதிராக எழுதிய மதபரீக்ஷா என்ற நூலுக்கு பண்டித நீலகண்ட சாஸ்திரி கோரே 'மதபரீக்ஷா' என்ற பெயரில் பதிலளித்தார். சாஸ்திர தத்துவ நிர்ணய என்பது அதன் பெயர். (உஜ்ஜயினி, 1951) பண்டிதர் கிறிஸ்துவ சமயத்தில் சேருவதற்கு முன் இது வெளியாயிற்று.

மானவையாக இருக்கவில்லை. ஆரிய சமாஜத்திற்கு எதிராக இங்குமங்குமாக சில நூல்கள் வந்ததைப்பற்றி முன்னமேவே கூறியிருக்கிறோம். "நூதன கீதா வைசித்ரிய விலாச" என்ற நூலை சென்னையில் பகவத் கீதை தாசர் 24 அத்தியாயங்களில் 1917ல் வெளியிட்டார். இதற்கு எதிராக சுத்த தர்ம மண்டலம் ஒரு நூலை வெளியிட்டது.

சம்பிரதாய முறையில் பணியாற்றிய பண்டிதர்கள் தமது தத்துவ வகைகளை இந்தக் காலத்திலாவது புதிய வழிகளில் அபிவிருத்தி செய்தார்களா என்று பார்ப்போம். அம்மாதிரி சில முயற்சிகள் இருந்தன. தைரியமாக சில பண்டிதர்கள் சொந்தமாக முயற்சி செய்து உழைத்தனர். திருவிச நல்லூர் ராம சுப்பா சாஸ்திரி நூதனமாக உரைகளை வழங்குவதில் சமர்த்தர்.[28] சில சமயம் பிரம்ம சூத்திரங்களிலும், அவற்றின்மீது சங்கரர் இயற்றிய பாஷ்யங்களிலும் விளக்கப் பெற்றுள்ள அத்வைதத்தைப் புஷ்டி குறைவுள்ளதாக்கும் ரீதியில் அவரது விளக்கங்கள் அமைந்து ஆயாசத்தை விளைவித்தது உண்டு. சமீபத்தில் பெங்களூரைச் சேர்ந்த ஒய். சுப்பாராவ் அத்வைதத்தில் அவித்தையின் தன்மையைப்பற்றி ஒரு புதிய கருத்தை வெளியிட்டார். சங்கரரை அவரது சீடர்களிடமிருந்தும், அத்வைதத்தையே பின்னர் அது உருமாறி விட்ட நியாயவாதக் கட்டுக்கோப்பினின்றும் காப்பாற்றுவது தமது நோக்கமென்று அவர் கூறினார். 'மூலவித்யா நிராசா' (பெங்களூர், 1939) அவரது நூலின் பெயர். பின்னர் சச்சிதானந்த சரஸ்வதி என்ற பெயருடன் அவர்

28. சங்கரரின் இந்த வியாக்கியானத்தை கௌரீநாத சாஸ்திரி தமது நூலில் கண்டனம் செய்தார். வாணிவிலாச அச்சகம் வெளியிட்ட இந்த புத்தகத்தின் பெயர் 'சங்கர பாஷ்ய காம்பீர்ய நிர்ணய கண்டனம்' என்பது. 'பாஷ்ய காம்பீர்ய நிர்ணய மண்டலம்' என்ற பெயருடன் 1913ல் வெளியிட்ட ஒரு நூலில் வேங்கடராகவ சாஸ்திரி சங்கரரது விளக்கத்திற்குச் சாதகமாக எழுதியிருக்கிறார்.

துறவியான காலத்தில் புதிய மெருகு கொடுத்து சங்கரரின் அத்யாச பாஷ்யத்தைப் பற்றி "சுகமா" என்ற நூலே இயற்றினர். (ஹோலெ நரசிபூர் 1955) 'மார்க்கதாயினி' என்ற தமது நூலில் அக்ஷர சங்கியா என்ற ஒரு தத்து வத்தை அவர் படைத்தார். சென்ற நூற்ருண்டின் இறுதி யில் (1901ல் காலமாகிவிட்ட) அப்பையாச்சார்யா, 'சாங்க்ய யோக சமுச்சயா' என்ற ஒரு புதிய புஷ்டியான சமயம் ஒன்றை விளக்கினர். 'அனுபவ அத் வைதம்' என்று இதைக் குறிப்பிட்டார். இந்த வகையில் சிந்தனே செறிந்த பல நூல்களே அவர் பின்னர் வெளியிட்டுள் ளார்.[29]

### சகிப்பு உணர்ச்சி

சகிப்பு உணர்ச்சி ஸம்ஸ்கிருத மரபுடன் ஒட்டி வந்திருப்பது. ஸம்ஸ்கிருதம் சிந்தனேயின் வளர்ச்சியைப் போஷித்து வந்திருக்கிறது. பல்வேறு சமயங்களேப் பற்றிய வாத நூல்களின் மூலம் இதற்கு வழி செய்திருக் கிறது. ஆனல் இம்மாதிரி புலப்படுத்தப் பெற்ற பல்வேறு பாதைகள் ஒரே இலட்சியத்தில் கொண்டுபோய் விடும் என்ற உண்மையை இடைவிடாது அவை வற்புறுத்தி வந்தன. தற்கால இந்திய சிந்தனேயில் இந்த உயர்ந்த அம்சம் விசேஷ முக்கியத்துவம் பெற்றிருக்கிறது. ஸம்ஸ் கிருதத்தில் தர்சனங்களே எழுதிய பண்டிதர்களிடம் இவ் வுணர்ச்சியை மிகுதியாகக் காணலாம். இவ்வகையில் குறைந்தது இரண்டு நூல்கள் குறிப்பிடத் தக்கவை. 'சதுர்மத ஸாமரஸ்யம்' என்ற பெயருடன் (கும்பகோணம், 1944) போலகம் ராமா சாஸ்திரி ஒரு விளக்க நூலே வெளி யிட்டார். நான்கு வேதாந்த மார்க்கங்களுக்கிடையே உள்ள ஒற்றுமை அம்சங்களே அவர் அதில் எடுத்துக்

29. சென்னே சர்வகலாசாலே வெளியிட்டுள்ள 'காட்டலா கஸ் காட்டலாகோரம்' என்ற பிரசுரத்தின் முதல் பகுதி பக்கங் கள் 194-195.

காட்டினர். இந்த வழியில் இன்னும் அதிக முக்கியத் துவம் உள்ளதும், விரிவானதுமான பெரு நூல் "தர்ச ஞேதயா" என்பது. இதை இயற்றியவர் மகாமகோ பாத்தியாய லட்சுமீபுரம் ஸ்ரீநிவாசாச்சார்யா. தனிப் போக்குகளை மிதப் படுத்தி, ஒருவரை ஒருவர் நன்கு தெரிந்து கொள்வதற்கான நோக்கத்துடன் இது எழுதப் பெற்றது.

புதிய இயக்கங்களில் ஸம்ஸ்கிருதத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டு அதன் மறுமலர்ச்சிக்குத் துணை புரிந் திருப்பது ஆரிய சமாஜம். தனது கருத்துக்களையும், லட்சியங்களையும் பற்றிய பல ஸம்ஸ்கிருத நூல்களை அது வெளியிட்டிருக்கிறது. அதன் மிகச் சிறந்த சாகித்ய கர்த்தாவும் கவிஞருமான அகிலானந்த சர்மா[30] கவிதா தேவியின் அருள் பெற்றவர். ஏராளமாக எழுதியிருப் பவர். சமீப காலத்தில் பிரம்ம முனி பரிவ்ராஜகா (ஹரித் துவார்) வேதாந்த சூத்திரங்களைப் பற்றி ஒரு புதிய உரை நூலை வெளியிட்டுள்ளார். (ஹோஷியார்பூர், 1954). பாஷ்யக்காரர்கள் விளக்கம் செய்யும் முறைகளை இந்த நூலில் அவர் கண்டனம் செய்திருக்கிருர். ராமகிருஷ்ண, விவேகானந்த இயக்கமானது இதுவரை ஸம்ஸ்கிருதத்தில் சில துதிப்பாடல்களையே[31] தோற்றுவித்து இருக்கிறது. ஆனல் இந்த இயக்கத்தைத் தோற்றுவித்த இவ்விருவரை யும் பற்றிச் சில சாகித்ய உருப்படிகள்[32] உண்டு. ரமண மகரிஷி, அரவிந்தர் ஆகியோர் ஆசிரமங்கள் பல ஸம்ஸ் கிருத நூல்களில் பிரசுரத்திற்குக் காரணமாக இருந்திருக்

30. சென்னை சர்வகலாசாலை வெளியீடான 'Catalogus Catalogorum' முதற்பகுதி பக்கங்கள் 15, 16.

31. ராமகிருஷ்ண ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரா - எம். ராம கிருஷ்ண பட், பெங்களூர் 1950.

32. சந்யாஸியின் பாட்டு. விவேகானந்தர் ஆங்கிலத்தில் எழுதியதை நித்யானந்த பாரதி ஸம்ஸ்கிருதத்தில் மொழி பெயர்த்திருக்கிருர்.

கின்றன. வசிஷ்ட முனி என்று பின்னர் உலகமறிந்த காவிய கண்ட கணபதி சாஸ்திரி திறமை மிக்க கவிஞர். ரமண பக்தராகி "ரமண கீதை" என்ற நூலை வழங்கியுள்ளார். தெளிவான சந்தத்தில் ரமணரது அத்வைதத்தை "ஸத்தர்சன" என்ற நூலில் அமைத்துள்ளார். அவரது சீடர் டி. வி. கபாலி சாஸ்திரி அதைப்பற்றி ஒரு விளக்கம் வரைந்துள்ளார். வி. ஜகதீசுவர சாஸ்திரி ரமணரைப் பற்றி "ரமண ஸ்தோத்ராவளி" என்ற தொகுப்பை வெளியிட்டுள்ளார். கபாலி சாஸ்திரி பின்னர் புதுச்சேரி ஆசிரமத்தில் சேர்ந்து அங்கே பிரதான ஸம்ஸ்கிருத பண்டிதராக விளங்கினார். அங்கு இருக்கையில் 1952ல் "சாதன சாம்ராஜ்ய" என்ற நூலை அவர் வெளியிட்டார். அது 25 சுலோகங்கள் கொண்டது. அரவிந்தரின் யோகத்தில் சாதனத்துக்குரிய இடத்தை அது விளக்குகிறது. "ஆஹ்னிக ஸ்தவம்" என்பது பிரார்த்தனைக் கீதங்கள் அடங்கிய அவரது மற்றொரு நூல். சித்தரஞ்சன[33] என்ற பெயரில் ரிக்வேத சம்ஹிதைக்கு அரவிந்தரது உரைகளை அனுசரித்து ஸம்ஸ்கிருதத்தில் அவர் இயற்றியுள்ள பெருநூல் இது. சம்பிரதாயப்படி சூத்திரங்களை, தமது சித்தாந்தங்களை பிற அறிஞர்கள் வெளியிட்ட வகையில் அரவிந்த ஆசிரமத்தைச் சேர்ந்த அம்பாலால் புராணி, அரவிந்த யோகத்தைப் பற்றிச் சுருக்கமாக "பூர்ணயோக சூத்ராணி"[34] என்ற நூலை எழுதியிருக்கிறார்.

தமது சொந்த தத்துவக் கருத்துக்களை ஸம்ஸ்கிருதத்தில் உரைநடைக் கட்டுரைகளாகவும், சமய வெளியீடுகளாகவும், பலர் பிரசுரித்துள்ளனர். பண்டிதரும் ஆராய்ச்சியாளருமான மகாமகோபாத்யாயா ராமாவதார சர்மா, சம்பிரதாயமான ஆறு இந்திய தத்துவதர்சனங்களுக்கு மேற்படியாக ஓர் ஏழாவது தர்சனத்தை எழுதியுள்ளார். அதன்

33. பாண்டிச்சேரி - இரண்டு பாகங்கள் 1950, 1951.
34. பாண்டிச்சேரி - 1955.

பெயர் "பரமார்த்த தர்சன பாஷ்யா". அமராவதியைச் சேர்ந்த ஜ்வாலா பிரசாத் "தத்துவ தர்சனு"[35] என்ற நூலை சூத்திரங்களாக இயற்றியுள்ளார். அதற்கு விரிவுரை வழங்கப் பெற்றுள்ளது. நவீன விஞ்ஞான கருத்துக் களுக்கு இசைவாக இந்திய தத்துவத்தை விளக்கிக் கூறுவது இதன் நோக்கம். இந்த முயற்சி அவ்வளவு வெற்றி அடைந்ததாகச் சொல்வதற்கில்லை. காந்திஜியைப் பின்பற்றி பரோடாவைச் சேர்ந்த எம். ஏ. உபாத்யாயா "ஈசுவர ஸ்வரூபம்"[36] என்ற பெயரில் ஒரு தத்துவ உரையை உருவாக்கியுள்ளார். அது ஜாதிய முறையை யும், தீண்டாமையும் கண்டிப்பதுடன்கூட மறு பிறப்பு உண்டென்பதையும் சர்ச்சை செய்கிறது. ரிஷிகேசத் தைச் சேர்ந்த ஸ்வாமி பூர்ணனந்தா "பூர்ண ஜோதி" (1928) என்ற நூலை பிரசுரித்துள்ளார். ஜாதி வேறுபாடுகள் இல்லாததும், எல்லோருக்கும் பொருந்தக் கூடியதுமான ஒரு பொதுப்படையான தத்துவ மரபை அது பிரகாசப் படுத்துகிறது. தர்மம், வைராக்கியம், பக்தி, யோகம் ஆகியவற்றை அது வற்புறுத்துகிறது. அது செய்யுளாக வும், உரைநடையிலும் அமைந்து உள்ளது. உத்தரப் பிரதேச முதல் மந்திரி டாக்டர் சம்பூர்ணனந்தா ஸம்ஸ் கிருதத்தை வளர்ப்பதில் ஆர்வம் உள்ளவர். ஸம்ஸ் கிருதத்தில் எழுதவும், பேசவும் பிரியப்படுபவர். "சித் விலாசா"[37] என்ற அவரது தத்துவக் கட்டுரை ஒன்று சிறப்புடையது. அதர்வ வேதத்தில் "விராத்திய காண்டம்" என்பதைப் பற்றி "சுருதி பிரபா" என்ற பெயரில் ஓர் உரைநூலை அவர் வெளியிட்டுள்ளார். காலடி ராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த ஸ்வாமி ஆகமானந்தா தர்மத்தைப்[38] பற்றி ஸம்ஸ்கிருதத்தில் ஒரு விளக்க நூலை

---

35. மூலமும் உரையும் - அமராவதி - 1950.
36. பரோடா - 1951.
37. பனாரஸ்–1950.
38. காலடி–1955.

பிரசுரித்திருக்கிறார். அரசியலுக்கும், பொருளாதாரத்துக்கும் தர்மம் எல்லாவகைளிலும் பொருந்தும் என்பதை அவர் இந்நூலில் ஆராய்ச்சி வளத்துடன் கூறுகிறார்.

காலேஜ் போதனா முறைத் திட்டத்தில், ஐரோப்பிய தத்துவப் படிப்பு விஷயமாக, நியாயவாதம், மனோதத்துவம், அறவழி ஆகியவற்றை மேலை நாட்டு ஆசிரியர்கள் எழுதியபடி பயன்படுத்துகிறார்கள். மேலை நாடுகளில் உள்ளவர்கள் இத்துறைகளில் என்ன பணி புரிந்து கொண்டுள்ளனர் என்பதை ஸம்ஸ்கிருத அபிமானிகள் அறிவதற்கான விளக்கங்களாகச் சிலர் வெளியிட்டிக்கிறார்கள். புதுவகையில் உருப்பெற்றுள்ள இந்த இலக்கிய சேவையின் பயன்களைக் கவனிப்போம். சென்ற நூற்றுண்டின் மத்தியில் காசியைச் சேர்ந்த "பண்டித்" என்ற சஞ்சிகையில் "மானிட அறிவுக் கோட்பாடுகள்"[39] (Principles of Human knowledge) என்ற பெயரில் "பர்க்கய" எழுதிய நூல் ஸம்ஸ்கிருதத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. மனித அறிவியலைப்[40] பற்றி லாக் எழுதியுள்ள உரைநடைக் கட்டுரையும் இவ்வாறு வெளியாகி இருக்கிறது. பேகவது (Novum Organum)[41] என்ற நூலை விட்டல் மொழி பெயர்த்துள்ளார். "பாஸ்சாத்திய பிரமாண தத்துவம்" "மானஸ தத்துவம்" என்ற பெயர்களில் மேலை தேசங்களின் நியாய வாதம்[42], உள ஆராய்ச்சி பற்றிய தகவல்களை டாக்டர் சாமா சாஸ்திரி (MScMM) எழுதியிருக்கிறார். பிருந்தாவனத்தைச் சேர்ந்த விசுவேசுவர சித்தாந்த சிரோன்

39. ஞான சித்தாந்த சந்திரிகா–பண்டிட் OS VIII, IX, X.

40. வித்வத்வர - லோகாபித - விரசித - மானவிய ஞான - விஷ்யக-சாஸ்திரா. பண்டிட் OS X.

41. பேகனிய-சூத்ர - வ்யாக்யான - பனாரஸ் - 1852. மேற்கொண்டு தகவல்களுக்கு (Bull, R. K. M. Inst. of Culture. ஜுன் 1956–பக்கம்–133-4.)

42. நீதி சாஸ்திரம் சுவடியாகவே இருக்கிறது.

மணி என்பவர் மேலே நாடுகளின் தத்துவத்திலுள்ள "நல்லறம்" என்பதைப் பற்றி ஒரு நூலே எழுதியுள்ளார்.

## நவீன விஞ்ஞானம்

ஆங்கிலம் படிக்காதவர்கள் நவீன விஞ்ஞான அறிவு பெற வேண்டுமென்ற நோக்கத்துடன் அத்துறை பற்றிய விஷயங்கள் ஸம்ஸ்கிருதத்தில் கிடைக்கச் செய்வதன் அவசியத்தை ஆரம்பத்திலேயே ஸம்ஸ்கிருத வல்லுநர்கள் உணர்ந்திருந்தனர். இந்தப் பணியில் அப்பா சாஸ்திரி ரசிவாதேகர் பதிப்பித்த "ஸம்ஸ்கிருத சந்திரிகா" என்ற சஞ்சிகையும், "ஸஹ்ருதயா" என்ற சஞ்சிகையும் நற்பணி ஆற்றின. "விஞ்ஞான குசுமா" என்ற பெயரில் ஸம்ஸ்கிருதத்தில் விஞ்ஞான விஷயங்களை சந்திரிகா வெளியிட்டது. "பிராசம் பூகோள விஞ்ஞானம்," "ஜோதிஷ தத்துவம்" முதலியவை குறிப்பிடத்தக்கவை. இலட்டூர் ராமசுவாமி சாஸ்திரி, யோகத்யான மிசிரா ஆகியோர் 1823–1828 ஆண்டுகளில் ஜியோமிதியைப் பற்றி க்ஷேத்திர தத்துவ தீபிகைகள் என்ற இரண்டு நூல்களை வெளியிட்டனர். பௌதிகம், ரசாயனம், வானவியல், தாவரவியல் போன்ற பல துறைகளில் நவீன விஞ்ஞான விஷயங்கள் பற்றிய கட்டுரைகளை "ஸஹ்ருதயா" வெளியிட்டது. (NS Vol. II ff) "பாஸ்சாத்ய சாஸ்திர ஸாரா" (மேலே நாடுகளின் விஞ்ஞான சாராம்சம் என்பது அதன் பெயர்) வானவியலைப் பற்றி அப்பா சாஸ்திரி எழுதினார். பழைய இந்திய எழுத்தாளர்களின் விஞ்ஞான அறிவைப் பற்றி மைசூரைச் சேர்ந்த சி. வேங்கடரமணய்யா ஒரு நூலை 1939-ல் வெளியிட்டார். "சனாதன பௌதிக விஞ்ஞானம்" என்பது அதன் பெயர். ஹிந்து சாஸ்திரங்களில் அடிப்படையாக ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கும் பஞ்ச பூதங்களின் ரசாயனத்தைப் பற்றி விட்டல் சாஸ்திரி எழுதினார். அதன் பெயர் "பஞ்சபூத வாத அர்த்தா"

(காசி, 1859). பெங்களூரிலும், மைசூரிலும் இருந்து பௌதிக விஞ்ஞானத்தைப் பற்றி அம்சுபோதினி சாஸ்திரம் என்பதை விரிவாக, தனித்தனி நூல்களாக வெளியிட்டு இருக்கிருர்கள். பாரத்துவாஜரும் மற்ற பண்டைய ரிஷிகளும் இவற்றை வெளியிட்டதாகக் கூறப்படுகிறது. விஞ்ஞான விஷயங்களைப் பற்றி எழுதுகையில் 160 சுலோகங்கள் கொண்ட ஒரு கவிதையைக் குறிப்பிட்டாக வேண்டும். அதன் பெயர் "மானவ பிராஜாபதீயம்" (படைக்கும் மனிதன், SSPP பிப்ரவரி, 1917) அதை எழுதியவர் ரவீந்திர குமார சர்மா. விஞ்ஞானம் இறுதியாக தோல்வியேயுறும் என்பது அவர் காட்டும் சித்திரம். ஓர் இளம் திறமைசாலியான இந்தியன் ஜெர்மனிக்குப் போகிருன். விஞ்ஞான நிபுணனுகிருன். திரும்பி வந்து உண்மையில் தன் மனதில் கற்பனை செய்து பார்க்கும் சிறந்த உண்மையான பெண் ஒருத்தியைப் படைப்பிக்க முயற்சிக்கிருன். படிப்படியாக இந்தச் சிருஷ்டி நடைபெறுகிறது. பெண்ணை உண்டாக்குகிருன். உயிரை ஊட்டுகிருன். அங்க அசைவுகளை உண்டாக்கி ஆளாக்குகிருன். கடைசியில் துக்கத்திற்கு ஆளாகிருன். "ஸம்ஸ்கிருதம்" என்ற வாரப் பத்திரிகையில் (20-3-56—17-4-56) ராஜபுதனத்தைச் சேர்ந்த வம்சி கோபால சாஸ்திரி இரண்டு விஞ்ஞானச் சிறு கதைகளை எழுதியுள்ளார். இரண்டும் நன்ருக அமைக்கப் பெற்றுள்ளன. "சேதனம் க்வா அஸ்தி" (வாழ்க்கைத் தத்துவம் எங்கே?) "சுக்ர லோக யாத்திரை" (சுக்கிர லோகத்திற்கு யாத்திரை) என்பன அவற்றின் பெயர்கள். வாழ்க்கையில் தர்மத்தை கண்டுபிடிக்க விஞ்ஞானத்தால் முடியாது போனதை முதல் பாடல் சித்திரிக்கிறது. பரீக்ஷித் மகாராஜவையும் கலியுகத்தையும் பற்றி ஒரு செய்யுள் நாடகம் "துங்கர் காலேஜ் பத்திரிகா"வில் வெளியாயிற்று. வித்யாதர சாஸ்திரி எழுதியுள்ள இக்கட்டுரையில் சுகப்பிரம்மமும், பரீக்ஷித் மகாராஜாவும் இருக்கும் உலகில் பிரவேசிக்க கவி

மறுப்பதாகக் கூறுகின்றார் சாஸ்திரி. நவீன விஞ்ஞான மும் அரசியலும் கவியின் பிரவேசத்தையும், வெற்றியை யும் சாத்தியமாக்குவதாக அவர் கூறியுள்ளார். வான சாஸ்திரம், ஜோதிடம், ஆயுர்வேதம் ஆகிய துறைகளில் இன்னும் ஸம்ஸ்கிருத நூல்கள் வந்து கொண்டிருக்கின் றன. கவிராஜ கணநாத சென் "பிரத்தியட்ச சரீரா" என்ற பெயரில் உடற்கூறு நூலை (கல்கத்தா 1919-ல்) எழுதியுள்ளார். உடலுணர்ச்சி பற்றிய தத்துவங்களை "சித்தாந்த நிதானம்" என்ற நூலில் (1922) விவரித் துள்ளார். ஹிந்து ரசாயன சாஸ்திரத்தைப் பற்றி 1926-ல் "ரசாஜல நிதி" என்ற தலைப்பில் குருதேவ முகர்ஜி எழுதியிருக்கிறார். பி. எஸ். வாரியர் போன்ற ஆயுர்வேத டாக்டர்கள் (மலபாரையும், தமிழ் நாட்டையும் சேர்ந்தவர்கள்) இவை போன்ற நூல்களை இயற்றியுள் ளனர். நோய்க்கு கிருமிகள் ஆதாரனமானவை என்ற தத்துவத்தை "அணுக்கிரக மீமாம்சை" என்ற பெயரில் வி. என். நாயர் எழுதியிருக்கிறார் (கள்ளிக்கோட்டை, 1938). சித்த வைத்தியம் என்ற தமிழ் ஆயுர்வேத முறை யைப் பற்றி ஒரு ஸம்ஸ்கிருத நூலை திருச்சி நடராஜ சாஸ்திரி இயற்றியிருக்கிறார். "ஸ்வாஸ்த்ய விருத்தா" (பம்பாய், 1954) என்ற சஞ்சிகையில் கே. எஸ். மாஸ்கர், என். எஸ். வட்டுவே ஆகியோர் ஆரோக்கியத்தையும், நீண்ட ஆயுளையும் பற்றி எழுதியிருக்கிறார்கள். "ஆயுர் வேதீய பதார்த்த விஞ்ஞான" (1953) என்ற நூலில் பூனைவச் சேர்ந்த காசிகர் ஆயுர்வேத பின்னணி பூரா வையும் விவரித்துள்ளார். பொருளாதாரம், வாணிபம், விவசாயம், பிராணி சாஸ்திரம் முதலியவற்றைப் பற்றி பி. எஸ். சுப்பராம பட்டர் "வார்த்தா" என்ற சிறு நூலில் எழுதியிருக்கிறார் (திருச்சூர், 1954). தொல் பொருள் ஆராய்ச்சித் துறையில் "சிந்து சப்யதா" என்ற பெயரில் சிந்து தீர நாகரிகத்தைப் பற்றி ஒரு புத்த கத்தை கேதாரநாத் சாஸ்திரி இயற்றியுள்ளார். இதே

விஷயத்தைக் குறித்து ஸ்ரீநகர் ஸம்ஸ்கிருத சாகித்ய பரிஷத் நடத்தும் "ஸ்ரீ" என்ற சஞ்சிகையில் (VI–iii–iv) பண்டிதகுல பூஷணு ஒரு கட்டுரையை எழுதியுள்ளார்.

## ஸம்ஸ்கிருத சஞ்சிகைகள்

ஸம்ஸ்கிருத அறிஞர்கள் முதலில் இம்மாதிரி புது சிருஷ்டிகளில் ஊக்குவிக்கப்பட்டு புது சஞ்சிகைகளைத் தோற்றுவிப்பதன் அவசியத்தை உணர்ந்தனர். ஸம்ஸ்கிருத சஞ்சிகைகளை உற்று நோக்குங்கால், உண்மையில் ஒரு புது உலகமே தென்படுகிறது. ஏராளமான எண்ணிக்கை இருப்பதுடன் இவற்றில் நானுவிதமான விஷயங்களைப் பற்றி எழுதியிருப்பதையும் காண்கிறேம். ஸம்ஸ்கிருதத்திற்கு ஒரு புது வாழ்வை ஊட்டுவதில் இவை முக்கியமாக பங்கெடுத்துக் கொண்டிருக்கின்றன என்பது தெரிகிறது. காசியைச் சேர்ந்த "பண்டிட்" என்ற சஞ்சிகைக்குப் பிறகு இவ்வகையில் புது முயற்சிகளை ஊக்குவித்த பெருமை "ஸம்ஸ்கிருத சந்திரிகா", "சுந்ருத வாதினி" ஆகிய கோலாப்பூர் சஞ்சிகையைச் சாரும். அப்பா சாஸ்திரி ரசிவாதேகர் இவற்றுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். "மித்ரகோஷ்டி", "வல்லாரி", "சூர்யோதயா" (பாரத தர்ம மகா மண்டல பத்திரிகை) "சுப்ரபாதம்" (காசி வித்வான் மண்டலா) "ஸம்ஸ்கிருத ரத்ஞகரா" ஸம்ஸ்கிருத சாகித்ய சம்மேளனு) "பண்டித பத்திரிகா" (அகில இந்திய பண்டித பரிஷத்) ஆகியவை காசியில் தோன்றி வளர்ந்தவை, இவற்றில் சில நின்றுவிட்டன. "சூக்தி சுதா", வித்யா ரத்ஞகரா" ஆகியவையும் காசியில் தொடக்கப் பெற்ற வேறு இரண்டு சஞ்சிகைகள். ரிஷிகேச பட்டாச்சாரியா என்பவர் லாகூரில் "வித்யா" என்ற சஞ்சிகையை ஆரம்பித்தார். ஆரிய சமாஜிகள் அலாகாபாத்தில் "ஆரிய சித்தாந்தா" என்ற பத்திரிகையை நடத்தினர். பிரம்ம சமாஜத்தினர் கல்கத்தாவில் "சுருத பிரகாசிகா"

என்பதைத் துவக்கினர். தென் இந்தியாவில் தொடக்கப் பெற்ற சஞ்சிகைகளில் முதன்மையானது ஸ்ரீரங்கத்திலிருந்து வெளியான "ஸஹ்ருதயா" என்பது. அது தரத்தில் உயர்ந்தது. ஆர். கிருஷ்ணமாச்சாரியர், ஆர். வி. கிருஷ்ணமாச்சாரியர் என்ற இரண்டு மேதைகள் அதனுடன் தொடர்பு கொண்டிருந்தனர். டி. டி. தாதாச்சாரியரை ஆசிரியராகக் கொண்ட "உத்யான" பத்திரிகை பிறகு திருவையாற்றிலிருந்து வெளிவந்தது. காஞ்சீபுரத்திலிருந்து "மஞ்சுபாஷிணி", சிதம்பரத்திலிருந்து "பிரம்ம வித்தியா", ஸ்ரீபெரும்புதூரிலிருந்து "விசக்ஷணு" வருகின்றன. பெங்களூரில் ராமகிருஷ்ண பட் நடத்திய "அம்ருதவாணி" நின்றுவிட்டது, ஆனல் வட கர்நாடகத்தில் "மதுரவாணி" தொடர்ந்து, தரமாக நடந்து வருகிறது. பல்வேறு பிராந்தியங்களில் "ஸம்ஸ்கிருத சஞ்சிகைகள் பிராந்திய மொழி அனுபந்தங்களுடன் வந்து கொண்டிருக்கின்றன. "காவ்ய கல்பத்துருமா" என்பது ஸம்ஸ்கிருத, கன்னட சஞ்சிகை (பெங்களூர் 1897). வங்காளத்திலிருந்து "துவைபாஷிகா", குஜராத்திலிருந்து "பாரத திவாகரா", பீகாரிலிருந்து "மிதிலா ஆமோதா", வர்தாவிலிருந்து "ஓஹசுருதா" ஆகியவையும் இரு மொழி சஞ்சிகைகள். ஆங்கிலத்திலும் ஸம்ஸ்கிருதத்திலுமாக பல சஞ்சிகைகள் வருகின்றன. சென்னையிலிருந்து "லோகானந்த தீபிகா" புதுக்கோட்டையிலிருந்து "ஸம்ஸ்கிருத ஜர்னல்", பரத்வானிலிருந்து "ஸம்ஸ்கிருத பாரதி" ஆகியவை இப்பேர்ப்பட்டவை. கே. எம். முன்ஷியின் "ஸம்ஸ்கிருத விசுவ பரிஷத்" ஆங்கிலத்திலும், ஸம்ஸ்கிருதத்திலும் விஷயங்களை பிரசுரிக்கின்றது. காலேஜ் சஞ்சிகைகளில் ஸம்ஸ்கிருதக் கட்டுரைகள் சொந்தமாக எழுதி வெளியிடப்படுகின்றன. நிற்காமல் தொடர்ச்சியாக வெளிவந்து கொண்டிருக்கும் சஞ்சிகைகளில் "ஸம்ஸ்கிருத சாகித்ய பரிஷத் பத்திரிகா" (கல்கத்தா) கே. சி. சாட்டர்ஜி

அங்கேயே வெளியிடும் "மஞ்சூஷா" ஆகியவை குறிப் பிடத்தக்கவை. பல்வேறு ஸம்ஸ்கிருத காலேஜ்களில் ஸம்ஸ்கிருத சஞ்சிகைகள் வெளி வருகின்றன. பட்டாம்பி ஸம்ஸ்கிருத காலேஜ் சஞ்சிகையின் பெயர் "விஞ்ஞான சிந்தாமணி". இதன் ஆசிரியர் புன்னசேரி நீலகண்ட சர்மா. "ஸ்ரீசித்ரா" என்ற சஞ்சிகையை சில வருஷ காலம் திருவனந்தபுரம் மகாராஜா காலேஜ் வெளியிட்டது. மைசூரிலும் ஸம்ஸ்கிருத காலேஜ் சஞ்சிகை வந்து கொண்டிருக்கிறது. "சரஸ்வதி சுஷமா" என்ற பெயரில் சரஸ்வதி பவனமும், காசி ஸம்ஸ்கிருதக் காலேஜும் ஒரு உயர்ந்த ரக சஞ்சிகையை வெளியிட்டு வருகின்றன. சிந்துவைச் சேர்ந்த ஹைதராபாதிலிருந்து "கௌமுதி" வந்து கொண்டிருக்கிறது. "ஸம்ஸ்கிருத சஞ்சீவனம்" என்பது பீஹார் ஸம்ஸ்கிருதக் கழகத்தின் வெளியீடு. "ஸம்ஸ்கிருத" என்ற வாரப்பத்திரிகையும், ஸம்ஸ்கிருத சாகேதா" என்ற வார சஞ்சிகையும் அயோத்தியி லிருந்து பிரசுரமாகின்றன. ஜெயப்பூரிலிருந்து முன்னர் வந்து கொண்டிருந்த "ஸம்ஸ்கிருத ரத்னகரா" என்பத தற்குப் பதிலாக அங்கிருந்து "பாரதி" என்ற பெயரில் ஒரு வெளியீடு வருகிறது. சிம்லாவில் "திவ்ய ஜோதி" என்ற புதிய சஞ்சிகை தொடங்கியிருக்கிறது. தர்பங்கா வில் "சுர பாரதி" பிரசுரமாகிறது. பரோடா ஸம்ஸ்கிருத வித்வத் சபை "சரஸ்வதி சௌரபா" என்ற வெளி யீட்டை பிரசுரிக்கிறது. ஸ்ரீநகரிலிருந்து சில ஆண்டு களாக கால் வருஷ சஞ்சிகை ஒன்றை ஸம்ஸ்கிருத சாகித்ய பரிஷத் "ஸ்ரீ" என்ற பெயரில் பிரசுரித்து வருகிறது. கட்டுரைகள் அதில் விசேஷமாக இடம் பெறுகின்றன. நாகபூர் ஸம்ஸ்கிருத பிரசாரகர்களின் சபை "ஸம்ஸ்கிருத பவிதவ்யம்" என்ற வாரப் பத்திரி கையைக் கொணர்கிறது. அதில் தரும் விஷயமும், கையாளும் சைலியும் சிறப்பாக இருப்பதைக் காண்கி றோம். கொஞ்சகாலம் பிரசுரமாகி நின்று விட்ட சஞ்சி

கைகள் "ரத்நாகர நந்தினி" "வித்வத் கலா", "ஸம்ஸ்கிருத பாரதி", "ஸம்ஸ்கிருத மகா மண்டலா" "ஸம்ஸ்கிருத பத்யவாணி (கல்கத்தா), ஸம்ஸ்கிருத பாஸ்கரா (மதுரை) ஸம்ஸ்கிருத கதம்பினி, வித்யோதயா (பரக்பூர்) அம்ருத பாரதி (கொச்சி), "அமர பாரதி" (காசி), "அச்சுதா" (காசி) "சாரதா" (அலகாபாத்), வேங்கடேசுவர பத்திரிகா" (சென்னை), உஷா, "ஆரிய பிரபா" ஆகியவை குறிப்பிடத்தக்கவை. "ஸம்ஸ்கிருத ரத்னகரத்தின்" 1914ம் ஆண்டு இதழ்களில் பல ஸம்ஸ்கிருத சஞ்சிகைகள் கூடி உரையாடுவதாக நாடகப் பாணியில் ஒரு கற்பனையை வழங்கியிருக்கிறார்கள். "ரத்னகரா", "விஞ்ஞான சிந்தாமணி", "மஞ்சுபாஷிணி", ஹ்ருதயா, உஷா, சாரதா, ஆர்யபிரபா, வித்யோதயா" ஆகியவை இம்மாதிரி கூடி கருத்துக்களை பரிமாறிக் கொள்வதாக எழுதியிருக்கிறார்கள்.

சிறிய கவிதைகளையும், சிறு கதைகளையும், தொடர் கதைகளையும், நாவல்களையும் வெளியிடுவதுடன் கூட இந்த சஞ்சிகைகள் கட்டுரைகளிலும், ஆசிரியர் பகுதிகளிலும் தற்கால நிகழ்ச்சிகளையும், சமூகப் பிரச்சினைகளையும், ஆசார சீர்திருத்தங்களையும், நாவல்களையும் பற்றி விவாதம் செய்கின்றன. எளிய உரைநடையில், விஷயத்துக்குப் பிரதானம் கொடுத்து அவை மொழியைப் போஷித்து வந்துள்ளன. வெவ்வேறு சஞ்சிகைகளிலிருந்து, சில உதாரணங்களை எடுத்து இதை ஒருவாறு விளக்கலாம். இம்மாதிரி எழுதப் பெற்ற விஷயங்களில் ஜெர்மனியில் கல்வி, ரிக்ஷாக்காரனுக்கு நிவாரணம், இந்தியாவில் கால்நடைச் செல்வச் சிதைவு, கருத்தடை, பஞ்சத்தின் அபாயம், குடியானவனின் கதி, தேவைப்படும் கல்வி முறை, பரீட்சை முறையின் சீர்கேடு, ஐரோப்பிய யுத்தமும் இந்தியர்களும், அணுசக்தியின் சமாதானப் பணிகள், தேசியம், ஸர்வதேசியம், ஹிந்து சட்ட சீர்திருத்தங்கள் முதலியன குறிப்பிடத்தக்கவை.

செய்தித் துணுக்குக்கள், ஹாஸ்யத் துணுக்குகள் வெளி யாகின்றன. ஸம்ஸ்கிருத வளர்ச்சிக்கான விஷயங்கள் இடம் பெறுகின்றன. ஸம்ஸ்கிருதத்தை தேசிய பாஷை யாக்கும் விஷயம், ஸம்ஸ்கிருத மொழியை எளிமையாக்கு வது, ஒரே மாதிரியான ஸம்ஸ்கிருதக் கல்வியைப் போதிப் பது, ஸம்ஸ்கிருத போதனு முறைகள், ஸம்ஸ்கிருதத் தின் பெருமை, இப்போதைய நிலே, ஸம்ஸ்கிருத சர்வ கலாசாலேகள் போன்றவை அதில் விவாதிக்கப் பெறுகின் றன. திராவிட இயக்கம், கிறிஸ்துவப் பிரசாரம் முதலி யன பற்றியும் அவை எழுதுகின்றன. பிராந்திய மொழி களில் வல்லுநர்களாக விளங்குபவர்களேயும், அவர் களுடைய சிருஷ்டிகளேயும் பற்றி இந்த சஞ்சிகைகள் எழுதுகின்றன. இதன் மூலம் பல்வேறு ராஜ்யங் களிடையே தொடர்பை தோற்றுவித்து ஒருவரையொரு வர் நன்கறியச் செய்து நாட்டின் ஒற்றுமையை வளர்ப்ப தற்கு அவை துணே புரிகின்றன.

### கட்டுரைகள்

சஞ்சிகைகளில் கட்டுரைகளே வெளியிடும் பழக்கத் தின் காரணமாக இலக்கிய வடிவம் என்ற வகையில் உரை நடைக் கட்டுரை நல்ல வளர்ச்சி கண்டது. பல்வேறு பள்ளிக்கூடங்களுக்கும், காலேஜ்களுக்கும் உரைநடைப் பாடப்புத்தகங்கள் புதிது புதிதாகத் தயாராக வேண்டிய அவசியமும் இந்த வளர்ச்சிக்குத் துணே புரிந்தது. கட்டுரைத் தொடர்பு கொண்ட நூல்களே முக்கியமாக இரண்டு எழுத்தாளர் தயாரித்துள்ளனர். ஹம்சராஜ அகர்வால், சுருதிகாந்த சர்மா ஆகியோர்தாம் அவர்கள். அகர்வாலின் ஸம்ஸ்கிருத பிரபந்த பிரதீபா (லூதியானு, 1955) என்ற தொகுப்பில் சமீபகாலத்து விஞ்ஞான வளர்ச் சிகள், காஷ்மீரப் பிரச்சினே, உணவு நிலேமை, சுதந்தர வாழ்வின் நான்கு ஆண்டுகள், உலக நாடுகளில் முக்கிய மானவற்றின் அரசியல் சட்டங்கள், ஸம்ஸ்கிருதத்தின்

எதிர்காலம், ஹிந்து சட்டத் தொகுப்பு மசோதா, இந்தியா வின் எதிர்காலம், ஸம்ஸ்கிருத போதனமுறை ஆகியவை இடம் பெற்றுள்ள விஷயங்கள். "லகு நிபந்த மணி மாலா" (லூதியானு 1955) என்பது ஸ்ரீ சர்மாவின் நூல். அதில் லகுவான விஷயங்களே அதிகமாகப் பேசப்பட் டுள்ளன. ஹுக்கா, குதிரை—சைகிள் உரையாடல், உதைபந்து ஆட்டம், மூன்ருவது வகுப்பில் ரயில் பிரயா ணம், மதச்சார்பற்ற ராஜ்யம், ஐ. நா., தேர்தல்கள், நட்பு, பேசும்படம், குறிக்கோள் எதுவுமில்லாமல் திரிவதில் உள்ள இன்பம், உல்லாச யாத்திரை, பொழுது போக்கு, ஆட்டக்கார உணர்ச்சி போன்றவை அதில் இடம் பெற்று இருக்கின்றன. பழைய, தற்கால விஷயங்களைக் குறித் துப் பலரது கட்டுரைகளை சாமராஜேந்திர ஸம்ஸ்கிருத காலேஜ் (பெங்களூர், 1958ல்) "பிரபந்த பாரிஜாதா" என்ற பெயரில் வெளியிட்டிருக்கிறது. பஞ்சசீலம், விசால மைசூர், கருத்தடை, ஐ. நா., ராணி லக்ஷ்மிபாய், திலகர், காந்தி போன்ருரைப் பற்றியவை அக்கட்டுரைகள். சரித்திர விஷயங்களைப் பற்றிய கட்டுரைத் தொகுப்பு ஒன்று "கல்ப குசுமாஞ்சலி" என்ற பெயருடன் வெளி யாகியிருக்கிறது. கடிதங்கள், இலக்கிய வகையில் வளர்ச்சி காணவில்லை. ஆனுல் இத்துறையிலும், அப்பா சாஸ்திரி வழி காட்டியிருக்கிருர். அவரது கடிதங்கள் சில பிரசுரமாகியிருக்கின்றன.

### பிரயாண இலக்கியம்

பழைய ஸம்ஸ்கிருத இலக்கியத்தில் பிரயாணம் முக்கிய இடம் பெற்றிருக்கிறது. நவீன காலத்திலும் இம்மாதிரி வெளியீடுகள் வந்திருக்கின்றன. மகா மகோபாத்தியாயா டி. கணபதி சாஸ்திரியின் "சேது யாத்திரா" வர்ணனம் மரபையொட்டிய வெளியீடு, ஹிந்து லட்சியங்களைப் பற்றிச் சேர்த்துக் கூறுவது. ஆனுல் அதில் தற்கால வாழ்வைப் பற்றிய விவரங்களும், சமூகச் சீர்கேடுகளும்

பிரஸ்தாபிக்கப்பட்டுள்ளன. மதுரையைச் சேர்ந்த வி. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரி என்ற வக்கீல் அகில இந்திய யாத்திரையை மேற்கொண்டு "திரிபில்வதள சம்பூ" (1937) வெளியிட்டுள்ளார்.[43] புண்ணியஸ்தலங்களைப் பற்றிய வர்ணனைகள் மட்டுமின்றி இக்கால மக்களைக் கவர்ச்சிக்கும் சர்வகலாசாலைகள், பொதுக் கட்டிடங்கள், புதைபொருள் ஸ்தலங்கள் முதலியவையும் அதில் விவரிக்கப்பட்டுள்ளன. 1924ல் சகாராம சாஸ்திரி கொங்கணத்தில் தாம் மேற்கொண்ட பிரயாணங்களைப் பற்றி எழுதியுள்ளார்.[44] "ஸ்ரீ" என்ற சஞ்சிகையில் அமரநாதா, நாட்டுப்புறம் முதலியவற்றுக்குச் சென்றுவந்த வரலாறுகளும், சரஸ்வதி யாத்திரா என்ற ஒரு தொடர்ச் சித்திரமும் பிரசுரமாயின. சரித்திரம், பூகோளம், பண்பாடு சம்பந்தமான விஷயங்களை அதில் காணலாம். அதில் சிம்லாவைப் பற்றிய வர்ணனைகளும் இருக்கின்றன. எஸ். வி. பட்டாச்சார்யா ஹிமாலயக் கோயில்களுக்கு யாத்திரை சென்று அவை பற்றி "உத்தர கண்ட யாத்திரா" என்ற நூலை வெளியிட்டிருக்கிறார்.[45] டாக்டர் வி. சப்ரா 'நியக்தரசன பாத சோபா' என்ற நூலில்[46] தாம் சில காலம் கழித்த ஹாலந்தைப் பற்றி விவரித்துள்ளார். டெஹ்ரானில் ஸம்ஸ்கிருதப் பேராசிரியராக இருந்த டாக்டர் குன்னன் ராஜா ஒரு பாடலில் "பர்சி போலீசை" வர்ணித்துள்ளார். (அடையாறு லைப்ரெரி புல்லட்டின், டிசம்பர், 1953), பெங்களூரிலிருந்து "அம்ருதவாணி" என்ற சஞ்சிகையைக் கொஞ்ச காலம் பதிப்பித்த ராமகிருஷ்ண பட் சில காலம் கிழக்கு ஆப்பிரிக்காவுக்குச் சென்றிருந்தார். அந்தப் பிராந்தியத்தைப் பற்றிய

43. மதுரை-1937.
44. ஓரியண்டல் லைப்ரரி டைஜஸ்டு-பூனா-பக்கம் 165.
45. கல்கத்தா-1948.
46. AV-பெங்களூர் 1953.

தமது அனுபவங்களை "ஸம்ஸ்கிருத பவிதவ்யம்" என்ற சஞ்சிகையில் ஒரு நீண்ட கடிதமாக அவர் வெளியிட்டுள்ளார்.[46a]

## இலக்கிய திறனாய்வு

ஸம்ஸ்கிருதத்தில் அலங்கார சாஸ்திரத்தில் இலக்கியத் திறனாய்வு விசேஷமாக வளர்ச்சி கண்டிருக்கிறது. ஆங்கிலக் கல்வி பரவிய பிறகு திறனாய்வு, குணசித்திர பாவம், சைலி, போன்ற மேலை நாடுகளின் தராதரங்களை வைத்துக்கொண்டு கவிஞன் கூறும் செய்தியைக் கண்டறியும் முயற்சி சகஜமாகியுள்ளது. மேலை நாடுகளின் இலக்கியத்தைப் போல ஸம்ஸ்கிருதத்திலும் இலக்கியத் திறனாய்வு, நீண்ட உரைநடைக் கட்டுரைகளாக வெளிவர வேண்டிய அவசியம் உணரப்பெற்றது. இவ்வகையில் ஸம்ஸ்கிருத சஞ்சிகைகள் பல கட்டுரைகளை வெளியிட்டன. ஆனால் குறிப்பாக இத்தகைய நூல்களை வெளியிடுவதற்கு முதல் முயற்சி எடுத்துக்கொண்டவர் "ஸஹ்ருதயா" என்ற சஞ்சிகையைப் பதிப்பித்து வந்த ஸ்ரீ ஆர். கிருஷ்ணமாச்சார்யா. ரகுவம்ச விமரிசா [47] மேகசந்தேச விமரிசா [48] ஆகியவை அவரது பிரசுரங்கள். திருச்சியைச் சேர்ந்த ஏ. வி. கோபாலாச்சார்யா இத்தகைய இலக்கியப் படைப்பில் விசேஷமாக உழைத்தவர். "சந்தேச த்வய சாரஸ்வதீனி" என்ற நூலில் மேகசந்தேசத்தையும், ஹம்ச சந்தேசத்தையும் ஒப்பிட்டு விவரமாக அவர் ஆராய்ச்சி செய்திருக்கிறார். சென்ற முப்பது ஆண்டுகளாக சென்னை ஸம்ஸ்கிருத வித்வத் சபையானது ஸம்ஸ்கிருதக் கவிஞர்களின் தினங்களைக் கொண்டாடி வருகிறது. கவிஞர்களையும், நாடகாசிரியர்களையும் போற்றி

---

46a. இதே பத்திரிகையில் ஸ்ரீ பட் ஓர் ஆப்பிரிக்கக் கதையை ஸம்ஸ்கிருதத்தில் எழுதியிருக்கிறார் 26–6–1956.

47, 48. காவ்யகுணாதர்ச பதிப்பு - ஸ்ரீரங்கம் 1908–1915.

கட்டுரைகளை எழுதிப் படிப்பதற்கு அது ஊக்கம் அளித்து வந்தது.[49]

### சிறுகதை

ஸம்ஸ்கிருதத்தில் புதிய வளர்ச்சி முக்கியமாகத் தென்படுவது சிறுகதைத் துறையில்தான். சிறு கதை ஸம்ஸ்கிருதத்திற்குப் புதிதல்ல. ஆனால் இப்போதைய வடிவத்தில் சிறுகதையைக் கையாள்வது மேலைநாட்டுச் செல்வாக்கின் விளைவே. நவீனக் கல்வி தொடங்கியதிலிருந்தே ஸம்ஸ்கிருதச் சஞ்சிகைகளில் புதுவகைச் சிறு கதைகள் வெளிவந்துள்ளன. அவற்றின் எண்ணிக்கை இப்போது அதிகரித்துள்ளது. நாகபுரியிலும், சென்னையிலும் சிறு கதைப் போட்டிகள் நடைபெற்றன. இந்த நவீன நாடகத்திற்குச் சிறப்பான பணியாற்றக்கூடிய ஸம்ஸ்கிருத எழுத்தாளர்கள் நிறைய இருக்கிறார்கள்.

நவீன சிறுகதையை எடுத்துக்கொள்ளுமுன் கண்ணியமான, எளிய நடையில் உரைநடைச் சித்திரங்களை ஸம்ஸ்கிருத மாணவர்களுக்கு எழுத்தாளர் வழங்கினர். இதற்காக கதை இலக்கியத்தைச் சிருஷ்டித்தனர். புராணச் செல்வங்களைத் தொகுத்து ஜனரஞ்சிதமாக அமைத்து வெளியிட்டனர். 100 நாடறிந்த கதைகள் என்பதை உரைநடையில் 1898-ம் ஆண்டில் சென்னையில் எஸ். வேங்கடராம சாஸ்திரி வெளியிட்டார். சுவேதாரண்யம் நாராயண யஜ்வான் "கத்ய காவியம்" என்பதைப் பிரசுரித்துள்ளார். அதில் இரண்டு கற்பனைக் கதைகள் உரைநடையில் வெளியாகியுள்ளன. சுகுமார வர்மன், மகாமோதன் என்பவை அக்கதைகள். "சரித்திர ரத்ன

---

49. இம்மாதிரி கட்டுரைகளில் பல, ஓரியண்டல் ரிஸர்ச் ஜர்னலில் வெளியாகியுள்ளன, மதராஸ்.

49 (a) 24-4-1954ல் வெளியான 'ஸம்ஸ்கிருத பவிதவ்யத்தின்' விசேஷ இதழில் நாகபுரியில் நடந்த போட்டியில் கலந்து கொண்ட எட்டு கதைகள் வெளியாகியுள்ளன.

வளி"[50] என்ற பெயரில் இரண்டு பாகங்களில் பழைய பேரிலக்கியங்களிலும் இதிகாச புராணங்களிலுமிருந்த கதைகளை வடித்து பி. சிவராம சாஸ்திரி எழுதியுள்ளார். என். நீலகண்டபிள்ளை உரைநடையில் "விசுவாமித்திரா" என்ற கதைத் தொகுப்பை எழுதியுள்ளார். (திருவனந்த புரம், 1936). வேங்கடராம சாஸ்திரி, பரசுராம சரிதத்தை எழுதியிருக்கிறார். (யு. பி. திருவையாறு, 1934), பி. வி. கானேயின் "ஸம்ஸ்கிருத கத்யாவளி",[51] என். கே. திரு நாராயண அய்யங்கார் இயற்றிய "கதா ரத்னகரா (பெங் களூர், 1910) அர்ஜுனு, என்ற பெயரில் பெங்களூரைச் சேர்ந்த எம். ராமகிருஷ்ண பட் 1953ல் பிரசுரித்த நூல் ஆகியவை இவ்வகையில் குறிப்பிடத்தக்கவை. பாணன், சுபந்து போன்றோரின் உரைநடை நூல்கள் சுலபமான சுருக்கங்களாக வெளியிடப்பெற்றன. ஆர். வி. கிருஷ்ண மாச்சார்யா, மகாமகோபாத்யாய வி. வி. மிராசி, வி. வி. சர்மா போன்றோர் இத்துறையில் பணியாற்றியுள்ளனர். பாஸன், காளிதாசன் போன்றோரது நாடகங்களை கதை வடிவத்தில் உரைநடையில் வி. அனந்தாச்சாரியா, ஒய். மகாலிங்க சாஸ்திரி, கே. எல். வி. சாஸ்திரி, கைலாச நாதா ஆகியோர் வெளியிட்டுள்ளனர்.

கங்கைக் கரையில் மிட்டாய் விற்றுக்கொண்டிருந்த ஓர் ஏழையைப்பற்றி ஸஹ்ருதயாவில் கே. ஸ்ரீனிவாசன் எழுதிய சிறுகதை நல்ல முறையில் வரையப்பெற்றிருப்ப துடன் உள்ளத்தைத் தொடுகிறது. "மாதுமணி" என் பது அதன் பெயர். எஸ். எஸ். பி. பி. சஞ்சிகையில் பவபூதி வித்யாரத்னு (1923–24) "லீலா" என்ற கதையை எழுதினார். தரணீகாந்த சக்கரவர்த்தி 1924–25 இயற்றிய "புஷ்பாஞ்சலி" கே. ஆர். சங்கர நாராயண சாஸ்திரியின் "ஐந்திர ஜாலிகா" (மே, 1932) ரசமயி (1933–34) ஆகியவையும் ஒரு கிழவனின் இளம்

50. கும்பகோணம் 1922, 1924.
51. மாக்மில்லன்ஸ்.

மனைவியைப்பற்றி எழுதிய "பாமின்ய மதன தாப" (மே, 1955) என்ற கதையும், ஆர். ரங்காச்சாரி வரைந்த "ஐ. சி. எஸ். மாப்பிள்ளை" என்ற கதையும் குறிப்பிடத் தக்கவை. சிறுகதை வடிவு, அமைப்பு நிகழ்ச்சிகளை மனதின் முன் கொணர்ந்து நிறுத்தும் திறன் போன்ற எல்லா அம்சங்களிலும் சிறப்புடன் விளங்கும் கதை "கஸ்யாயம் அபராதஹா" (இது யாருடைய குற்றம்) என்ற பெயரில் பி. வி. வரதராஜ சர்மா (எஸ். எஸ். பி. பி. ஏப்ரல், 1937ல்) வரைந்தது. வறுமையும், நீடித்த துன்பமு மாகச் சேர்ந்து மக்களை கெட்ட வழிகளில் தள்ளிவிடுகிறது என்ற சாதாரண சமுதாய விஷயந்தான் இந்தக் கதையில் காணப்பெறுவது. "நகர பரிபாலன சபா" என்ற பெயரில் (எஸ். எஸ். பி. பி. மே, 1937) ரங்காச்சார்யா ஒரு நகைச்சுவை ததும்பும் கட்டுரையை எழுதியிருக்கிறுர். அது முனிசிபல் தேர்தலுக்கு ஒரு கிழவியை அபேட்சகராக நிறுத்தி வைப்பதைப் பற்றியது. வேணுதர தீர்த்தா என்பவர் எழுதிய பிரயாணக் கதை ஒன்று எஸ். எஸ். பி. பி.யின் பழைய இதழ்களில் ஒன்றில் (1928–29) வெளியாகி இருக்கிறது. கதாசிரியர் கனவில் யமபுரிக்கு யாத்திரை செல்கிறுர். கதையின் பெயர் "யமபுரி பர்யடனு". ஆனுல் திடீரென்று யமனுக்கு ஒரு தர்மசங்கடம் ஏற்படுகிறது. தமது அதிகார வரம்புக்கு ஹிந்துக்கள் மட்டும் தான் உட்பட்டவர்களா, அல்லது மிலேச்சர்களையும் அது கட்டுப்படுத்துமா என்பது விவகாரம். யாத்திரை வந்த இந்தியனை யமன் அவனது தாய் நாட்டிற்கு அனுப்புகிறுன். அங்கு ஒரு பண்டித பரிஷதைக் கூட்டி விவகாரத்தை முடிவு செய்யும்படி கோரினுன்.[52]

எஸ். ஆர். (1909–1948) சஞ்சிகைகளில் வெளியான கதைகளில் பின்வருபவை குறிப்பிடத்தக்கவை. "பச்யதோஹரா", "துஹ்கினி பாலா", "அஸம சாஹஸா,

52. யமராஜ விசாரம் என்ற தலைப்பில் வித்யோதயா என்ற சஞ்சிகையில் ஒரு கதை வெளியாகி இருக்கிறது.

ஆர்வாசீன சப்யதா" (நவநாகரிகத்தைப் பற்றியது). நிரசப்பிரணய, சரளா, சாக்ஷி, ஆதரிச தம்பதி, "அயம் ஏவ பிரேம பரிபாக" (இதுதான் முதிர்ந்த காதல்), கருணு, வரேப்சு - வடுகா - சம்வாதா, (வரனும் மாமனுராக வர இருப்பவரும் உரையாடல்) நியாயாதிகாரி ஆகியவை குறிப்பிடத்தக்க கதைகள். எஸ். ஆர். சஞ்சிகைத் தொடரில் வெளியான கதைகளில் இரண்டு குறிப்பிடத்தக்கவை. ஒன்றில் நவீன வாழ்வின் பகட்டுக்களை வரவர அதிகமாக எதிர்பார்ப்பதன் மூலம் மாதர் அமைதியையும், மகிழ்ச்சியையும் அடையமுடியாது என்ற விஷயம் கூறப்படுகிறது. பரீட்சை முறையின்கீழ் உண்மையான அறிவை அடைய முடியாது என்று, 1947 ஜூனில் காணப்பெறும் "தன்யோயம் பரிக்ஷாயுக" என்ற கதை கூறுகிறது. இவற்றில் சில ஹாஸ்யக் கட்டுரைகள் போல இருக்கின்றன. ரமா துவிவேதி 1944–45ல் எழுதிய விசாகா, பிரமோத க்ருஹம் என்ற கதைகளை சிந்து – ஹைதராபாத்திலிருந்து வெளியான "கௌமுதி" பிரசுரித்தது. விசுவேசுவர தயாள், யௌதகா என்ற பெயரில் வரதட்சணை முறையின் தீமையைப்பற்றி வரைந்துள்ளார். ஒரு கள்ள மார்க்கெட்டுக்காரன் பூனையை வஞ்சித்த வரலாறு "மஞ்சூஷா"வில் (அக்டோபர், 1953) "மார்ஜார சரித்திரம்" என்ற பெயரில் வெளிவந்துள்ளது. ஸ்ரீமதி க்ஷமாராவ் 1953ம் ஆண்டில் அனுஷ்டுப் சுலோகங்களில் ஐந்து சிறு கதைகளை வெளியிட்டார். முதலில் இவை ஆங்கிலத்தில் எழுதப்பெற்று பிறகு ஸம்ஸ்கிருதமாக்கப்பட்டன. ஆசார சீர்திருத்தமே கதைகளின் விஷயம். சிறு குழந்தைகளின் விவாகம், இளம் பெண்களின் கைம்மை முதலியன இடம் பெற்றுள்ளன. அவர் காலமான பிறகு, "கதாமுக்தாவளி" என்ற பெயரில் 1954ல் பம்பாயில் அவரது 15 சிறு கதைகளைத் தொகுத்து வெளியிட்டிருக்கிறார்கள். முதலில் சுலோகங்களாக இயற்றிய சிறுகதை ஒன்று உரைநடைத் தோற்றத்தில் இதில் சேர்க்கப்பட்டுள்ளது. "கிராம

ஜோதிஸ்" என்ற தொகுப்பில் சட்ட மறுப்புக் காலத்தில் குஜராத் கிராமங்களிலிருந்த நிலைமையை மூன்று கதைகளில் அவர் வழங்கியுள்ளார். 1957 ஜூன் ஸம்ஸ்கிருத இதழில் – "கஹூலா" என்ற வரலாறு வந்திருக்கிறது. இந்தியாவின் சரித்திரத்தில் ஹூணர்களின் காலத்தைப் பற்றியது அக்கட்டுரை.

ஸம்ஸ்கிருதத்தில் எளிய உரைநடையில் நல்ல விஷயங்களைப் படிக்கத் தரவேண்டுமென்ற நோக்கத்துடன் "ஸார்வஜன - ஸம்ஸ்கிருத - மாலா" என்ற தொகுப்பில் ஏ. கிருஷ்ண சோமயாஜி டால்ஸ்டாய் கதை ஒன்றை "கஞ்ஜே ஸப்த கிருஹம் தஹதி" (குண்டூர், 1954) என்ற தலைப்புடன் பிரசுரித்துள்ளார். ஈசாப்புக் கதைகளைப் பலர் ஸம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்த்து இருக்கிறார்கள்.

## நாவல்

நவீன இலக்கியம் என்று திட்டவட்டமாகச் சுட்டிச் சொல்லக்கூடியதும் மேலை நாடுகளின் செல்வாக்கின் விளைவாக உருப் பெற்றுள்ளதுமான நாவலை கவனிப்போம். மரபையொட்டி, இயற்றப்பட்ட காதம்பரி முதல், இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலைக்கேற்ப வரையப்பெறும் நாவல்கள் வரை ஏற்பட்ட மாறுதல்களை தொடர்ச்சியாகக் காணலாம். மொழி பெயர்ப்பு, தழுவல், முதல் நூல் என்று மூன்று வகைகளிலும் இத்தகைய சிருஷ்டிகள் வெளிவந்துள்ளன. பங்கிம் சந்திரரின் "லாவண்ய மயீ" என்ற நாவலை "ஸம்ஸ்கிருத சந்திரிகா" என்ற தமது சஞ்சிகையில் அப்பா சாஸ்திரி வெளியிட்டுள்ளார்.[53] பிறகு பல பதிப்புக்களாக தனி நூல் வடிவத்தில் அது வந்துள்ளது. புகழ்பெற்ற

53. வாய்-1907-தார்வார் 1950, பனாரஸ் 1947 அவரது மற்ற உரைநடைகளில் தேவி-குமுதவதி, தாஸபரிணதி, மாத்ரு-பக்தி.

அதே வங்க நாவலாசிரியரின் "கபால குண்டலர"[54] என்ற நாவலை ஹரிகரன் ஸம்ஸ்கிருதமாக்கியுள்ளார். அப்பா சாஸ்திரி இயற்றிய ஸம்ஸ்கிருத சந்திரிகாவில் வெளியான மற்ற நூல்களில் "கிருஷ்ண காந்தஸ்ய நிர்வாணு", "இந்திரா" ஆகியவை குறிப்பிடத்தக்கவை. கதாநாயகி தன் கதையைத் தானே சொல்லும் பாணியில் இவை அமைந்துள்ளன. நரசிம்மாச்சார்ய புனேகர் இயற்றியுள்ள மிருத்திகா விருஷப கதா, பலபத்ர சர்மா எழுதிய "வியோகினி பாலா" என்பவையும் குறிப்பிட வேண்டியவை. உபேந்திரநாத் சென், பல்லிச்சவி மகர கண்டிகா, குந்தமாலா ஆகியவற்றை எழுதியுள்ளார். சரளா என்ற நாவலை ஏ. ஹரிதாஸ சித்தாந்த வாகீசர் எழுதியிருக்கிறுர்.[55] ஏ. ராஜகோபால சக்ரவர்த்தியின் "சைவலினி"[56] மற்ருெரு வங்க நாவலைத்தழுவி எழுதப் பெற்றது. குமுதினி, விலாச குமாரி சங்கரா என்ற வேறு இரண்டு நாவல்களையும் அவர் எழுதியிருக் கிறுர். சிந்தாமணி மாதவகோனே "மதன லதிகா" (பம்பாய் 1911) என்ற நாவலை இயற்றியுள்ளார். பல்வேறு ஸம்ஸ்கிருதக் சஞ்சிகைகளில் நீண்ட கதைகளும், குறு நாவலும் கற்பனைச் செறிவு மிகுந்த கதைகளும் பிரசுர மாகியிருக்கின்றன. கல்யாணராம சாஸ்திரி ஸஹ்ருதயா வில் "கனகலதா" என்ற நாவலை எழுதியிருக்கிறுர். அது அழகான உரைநடையில் அமைந்திருக்கிறது. ஷேக்ஸ்பியரின் "லுக்ரீஸ்" என்ற கவிதையை அடிப் படையாகக் கொண்டு 90 பக்கங்களில் இயற்றப்பட்ட நூல் அது. கோபால சாஸ்திரியின் "அதிரூபா", பரசுராம சர்மாவின் "விஜயின்", நாராயண சாஸ்திரி

54. கல்கத்தா 1926.

55. இதுவும் இந்த ஆசிரியரது மற்ற படைப்புக்களுக் கும் கிருஷ்ணமாச்சாரியா எழுதிய ஸம்ஸ்கிருத பேரிலக்கியத் தில் பக்கம் 673 பார்க்கவும்.

56. மைசூர்-1917.

யின் "சீமந்தினி", சிதம்பர சாஸ்திரியின் "கமல குமாரி", "சதி கமலா" ஆகியவையும் வெளியாகி யிருக்கின்றன. அந்தச் சஞ்சிகையில் ஆசிரிய மேதை ஆர். கிருஷ்ணமாச்சார்யா "சுசீலா" என்ற பெயரில் ஒரு நாவலை இயற்றியுள்ளார்.

எஸ். எஸ். பி. பி. யில் மேலும் பிரசுரிக்கப்பட்டுள்ள நாவல்கள் பின்வருமாறு: ரேணுதேவி இயற்றிய "ரஜனி" (1928–29), ராதா துர்க்கேச நந்தினி (1922–23), ராதாராணி (1930–31) இவை வங்காளியில் பங்கிம் சந்திரர் எழுதியுள்ள நாவல்களின் மொழி பெயர்ப் புக்கள். இதே சஞ்சிகையில் 1935 அக்டோபர் இதழில் தத்தா என்ற பெயரில் ஒரு நாவல் பிரசுரமாகியுள்ளது. மதுரவாணி ஆசிரியர் இ. ராமாச்சார்யா "தேவி வாசந்தி" என்ற தொடர்க் கதையை வெளியிட்டுள்ளார். வீரத்தைச் சிறப்பித்துக் காட்டும் "கீர்த்தி சேனு" என்ற நாவலை என். நரசிம்மாச்சாரி 1948–49ல் எழுதினுர். (எம். எஸ். ஸி. எம். எம்). "பிருகத் கதா மஞ்சரி" கதை ஒன்றை அடிப்படையாகக் கொண்டு 1929ல் சென் னையில் கே. கிருஷ்ணமாச்சாரி "மந்தாரவதி" என்ற நாவலை இயற்றியுள்ளார். ஸ்ரீசைல தாதாச்சார்யா (கால மானது 1925) வங்காள நாவல்களை மொழி பெயர்த்திருக் கிருர். துர்க்கேச நந்தினி, க்ஷத்திரிய ரமணி என்பவை இவ்வாறு வெளியானவை. பூர்ணு[57] என்ற நாவலை காவ்ய கண்ட கணபதி சாஸ்திரி இயற்றியிருக்கிருர். மித்ர கோஷ்டி சஞ்சிகையின் ஆசிரியர் விதுசேகர் "சந்திர பிரபா" என்ற காதல் நாவலை காசியிலிருந்து வெளியிட்டார். "குமுதினி சந்திரா" என்ற தலைப்பில் மேதாவ்ரதா நாவலை எழுதியுள்ளார். (இயோல்,1920). அழகும், வர்ணனைச் சிறப்பும் காவிய காம்பீரிய மும் கொண்ட "சௌதாமினி" என்ற நாவலை நரசிம்

57. அவரது உமா ஸாஹஸ்ரத்தின் முன்னுரையில் பக்கம் 11.

மாச்சார்யா எழுதியுள்ளார் (நவீனகிருதி, சென்னை, 1934). இடது சாரி வாழ்க்கையைச் சித்திரிக்கும் புதிய நாவல் கங்கோபாத்தியாய எழுதிய "ஸீம சம்சயா" என்பது. (மஞ்சூஷா, நவம்பர், 1940). சரித்திர நிகழ்ச்சிகளைப் பயன்படுத்தி எழுதப் பெற்ற நீண்ட கதைகளில் குறிப்பிடத்தக்கவை "வங்க வீர பிரதாப ஆதித்யா" தேவேந்திரநாத் சட்டோபாத்தியாயா எழுதியது. (எஸ். எஸ். பி. பி. 1930–31), "கௌர சந்திரா" இந்திரநாத், வந்தியோபாத்தியாயா எழுதியது, (எஸ். எஸ். பி. பி. 1932–33) "வீர லப்தம் பாரிதோஷிகம்" என்ற சோழ சரித்திரக் கதை (ஆர். ராமமூர்த்தி, யு. பி. 1955). சரித்திர நிகழ்ச்சிகளை வைத்து எழுதிய சிறு கதைகளுக்குப் பின் வருபவை எடுத்துக்காட்டுக்கள். வீரமதி (எஸ். ஆர். 1909), அத்யாசரிண பரிணம (முஸ்லீம் ஆட்சிக் காலத்திலிருந்த அமிதமான போக்கின் விளைவுகளை ஆதாரமாகக் கொண்டது; (எஸ். ஆர். 1942) தானீ தினேஷ் (எஸ். ஆர். 1943) "ஸம்ஸ்கிருதம்" என்ற வாரப்பத்திரிகையில் வந்துள்ளது. அஜந்தா (27–3–1956) ஹீரு (17–1–1956) துவிராசுவமேதயாஜீ (27–12–1955). சென்னையைச் சேர்ந்த ஏ. ராஜம்மாள் பழைய விஷயத்தை எடுத்துக் கொண்டு கதையில் ஒரு நாடகத்தைப் புகுத்தி எழுதியிருக்கும் நாவல் "சந்திரமௌலி" என்பது. வடுவூர் துரைசாமி அய்யங்கார் இயற்றிய "மேனகா" என்ற தமிழ் நாவலை டி. டி. தாதாச்சார்யா ஸம்ஸ்கிருதத்தில் மொழி பெயர்த்திருக்கிறார். "சத்திரசாலா விஜயா" என்ற தமது நாவலை ஜகத்ராம சாஸ்திரி ஹோஷியார்பூரில் பதிப்பித்து உள்ளார்.

## சிறு கவிதை

சிறு காவியங்கள், சிறிய கவிதை, இந்தியாவின் புது வாழ்வில் இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது

மற்ெருரு நவீன அம்சம். ஸம்ஸ்கிருத மரபில் முக்தகா, யுக்மகா, கலாபகா, கூலகா, சதகா என்ற கவிதை வகைகள் உண்டு. ஆனால் குறிப்பிட்ட கருத்தை அல்லது விஷயத்தை வைத்துக்கொண்டு ஒரு வரம்புக்குட்பட்ட செய்யுட்களுடன் சிறிய கவிதையை இயற்றுவது மேலை நாடுகளின் செல்வாக்கினால் வளர்ந்தது. இன்றைய ஸம்ஸ்கிருதக் கவிஞர்கள் கவிதைத் தொகுப்பு நூலை வெளியிடுவது வழக்கமாக இருந்து வருகிறது. ஆனால் பெரும்பாலான கவிஞர்களின் செய்யுட்கள் கையெழுத்துப் பிரதிகளாகவோ அல்லது சஞ்சிகைகளில் வெளிவந்த வடிவத்திலோ புதையுண்டு இருக்கின்றன. ஆங்கில இலக்கியத்திலிருந்து மொழி பெயர்ப்புகளும், தழுவல்களும் இவ்வகைப் பட்டவை. ராமசந்திராச்சார்யாவின் "லகு காவியமாலா" (சென்னை, 1924) மொழி பெயர்ப்புகள் கொண்டது. "புருஷா தச சப்தகம்" என்பது ஷேக்ஸ்பியரின் (As you like it) என்ற நாடகத்தில் காணப்பெறும் மனித வாழ்வின் ஏழு கட்டங்களை ஸம்ஸ்கிருதத்தில் வழங்குகிறது. "சுமனோரதா" என்பது ரோஜர் இயற்றிய 'A wish' என்ற நூலிலிருந்து வந்தது. பிதுர் உபதேசா, (ஹாம்லட்டிலிருந்து) சாதுவாத மஞ்சரி, (பிரவுனிங்கின் All is right with the world என்பதிலிருந்து) ஒய். மகாலிங்க சாஸ்திரி (சென்னை, 1934) இயற்றியுள்ள 'கிங்கிணி மாலா' என்ற தொகுப்பில் ஷேக்ஸ்பியர், வேர்ட்ஸ்வொர்த், ஷெல்லி, டாக்டர் ஜான்சன் போன்றோரது பாடல்களிலிருந்து மொழி பெயர்ப்புக்கள் உள்ளன. தவிர பல புதிய சிறு காவியங்கள், நவநவமான சந்தங்களில் இசை இன்பத்துடன் வழங்கப் பெறுகின்றன. "ஸ்தாணு பரிதேவனு" (சிவபெருமானின் துயரங்கள்) என்பது இவற்றில் முக்கியமாகக் குறிப்பிடத் தக்கது. 'பத்திய புஷ்பாஞ்சலி' (மதுரை 1951) ஸி. சுப்பிரமணிய அய்யர் இயற்றியது. அதில் சொந்தமாகக் கவனம் செய்த பாடல்களும், ஆங்கிலத்திலிருந்து ஸம்ஸ்கிருதத்

திற்குக் கொணர்ந்தவைகளும் இருக்கின்றன. சொந்தமாக இயற்றிய பாடல்களில் ரிஷிகள், கவிதை, வாழ்க்கை, இயற்கை, கலை, சகுந்தலையின் தனி உரை, இந்தியாவின் அற்புதம், முதலியவை காணப் பெறுகின்றன. மகாமகோபாத்தியாய கே. எஸ். கிருஷ்ண மூர்த்தி சாஸ்திரி (மதுரை, 1950) இயற்றியுள்ள "பிரகிருதி விலாசா" என்ற நூலில் பல இயற்கை வர்ணனைகள் இருக்கின்றன. யதீந்திர நாத் பட்டாச் சார்யா (கல்கத்தா, 1938) இயற்றிய "காகலி" என்ற தொகுப்பில் சம்பிரதாயமான பாடல்களும், கீதங்களும் காணப்பெறுகின்றன. அவற்றுடன் கூட காந்தி, டாகுர் ஆகியோரைப் பற்றிய புகழுரைகளும் இடம் பெற்றுள் ளன. நிந்தனைக் கவிதைகள், இரங்கற்பாக்கள், வர்ணனைப் பாடல்கள் கொண்ட செய்யுள் தொகுப்பு பேராசிரியர் ஜி. ஸி. ஜாலா பதிப்பித்தது. அதன் பெயர் "சுஷமா" (பம்பாய் 1955). டாக்டர் பி. சப்ரா 1951ல் எழுதிப் பதிப்பித்தது "சுவர்ண பிந்து" என்ற தொகுப்பு. அதில் எறும்பு, உண்மை நண்பர்கள், இவை வாழக்கையின் பாக்கியங்கள் என்று குறிப்பிடப்பட்டுள் ளது. காந்திஜியைப் பற்றிய கவிதை காயத்திரியின் வேத சந்தத்தில் புனையப் பெற்றிருப்பது குறிப்பிடத் தக்கது. மதுரையைப் பற்றிய பாடல்கள் அதன் இலக் கியச் சிறப்பைப் பற்றியும், புதை பொருட் செல்வங்களை யும் புகழ்கின்றன. "மண்டோர்மி மாலா" (பார்டி, 1956) எஸ். பி. வார்னேகரின் கவிதைத் தொகுப்பு. சில பாடல் கள் வர்ணனைச் சித்திரங்களாகவும், சில சிந்தனைச் சுட ராகவும் சில அறம் கூறுபவையாகவும் இன்னும் சில நாட் டுப்பற்று ததும்புவனவாகவும் இருக்கின்றன. "சாகித் திய வைபவா" (பம்பாய், 1930) என்பது மதுராநாத கவி சாஸ்திரியின் தொகுப்பு. அவர் ஜெயப்பூரில் இருந் தவர். தமது பாடல்களுள் அவர் கையாளாத தற்கால விஷயமோ, நிகழ்ச்சியோ இல்லையெனக் கூறலாம்.

இதன் முதல் பகுதியில் இயற்கைச் சிறப்பும், பின்னர் பல்வேறு உணர்ச்சி பாவ சித்திரங்களும், சிந்தனைக்கு விருந்தளிக்கும் "அந்நியாபதேச" பாடல்களும் புதுயுகத்தைப் பற்றிய "நவயுக விதி" என்ற ஒரு கவிதையும் இடம் பெறுகின்றன. டிராம் வண்டி, ரயில்வே, கப்பல், மின்சார விசை, ரேடியோ, கிராமபோன், அறுவை சிகிச்சை, எக்ஸ்ரே, போட்டோப் படம் பிடித்தல், சினிமா, விஞ்ஞானத்தின் மேன்மை, மேலை நாட்டினரின் தகுதிகள் ஆகியவை அவர் கையாண்ட விஷயங்களில் சில. இந்தியாவின் பொது விவகாரங்களைப் பற்றியும் அவர் ஆழ்ந்த யோசனையுடன் எழுதியிருக்கிறார்.

மேகசந்தேசத்தைப் பின்பற்றி பல நூல்கள் இயற்றப்பட்டுள்ளன. அவற்றில் அசாதாரணமாக ஒரு சிலவற்றை இங்கு குறிப்பிடலாம். யக்ஷன் அளகாபுரியில் நடத்திய வாழ்க்கை, சாபத்தின் மூலகாரணம் என்ன என்பவற்றைக்கூறும் "மேகப் பிரதி சந்தேசம்" என்ற காவியத்தை என். ராமா சாஸ்திரி இயற்றியுள்ளார். (மைசூர், 1923). "கண விருத்தா" (சென்னை, 1955), கொறடா ராமசந்திர கவி இயற்றியது. இதுவும் காளிதாசன் விட்டுச் சென்ற இடத்திற்குப் பின்னர் நடந்தவற்றைக் கூறும் கற்பனையாக அமைந்துள்ளது. மேக சந்தேசத்தைத் தழுவி நையாண்டி செய்யும் ரீதியில் வெளியான பாடல்களை பிரிதோர் இடத்தில் காணலாம்.

என்னென்ன விரிவான விஷயங்களைக் கவிஞர்கள் கையாண்டார்கள் என்பதற்கு சஞ்சிகைகளிலிருந்து சில உதாரணங்களைத் தரலாம். "பாரதி விலாபா" என்பது கே. கல்யாணி எழுதிய கவிதை. ஒரு நூலாசிரியரின் அனுபவங்கள் தரப்படுகின்றன. நூலை இயற்றி, அச்சுவாகனமேற்றி விமர்சிக்கச் செய்து, படிக்கப்பண்ணி, ரசிக்கச் செய்வதில் உள்ள சிரமங்களை அவர் விவரித்துள்ளார். (ஸஹ் 2.) பாரதீய யுத்த ஸஜ்ஜா (எஸ். எஸ். பி. பி. அக்டோபர், 1942

கவிதை வடிவத்தில் அமைத்துள்ள ஓர் உரையாடல்) பழைய, நவீனப் போர் முறைகளைப் பற்றிய நூல் இது. இந்தியாவில் யுத்த முயற்சியை வைத்துக் கொண்டு எழுதப்பெற்றது. புளினவிகாரி தாஸ்குப்தா (எஸ். எஸ். பி. பி. 1923-29) உதை பந்தைப் பற்றி "சர்ம கோளக கிரீடா" என்ற பாடலை எழுதியுள்ளார். ஜோக் அருவியைப் பற்றி (எம். எஸ். ஸி. எம். எம். 1925ல்) குக்கே சுப்பிரமணிய சாஸ்திரி ஒரு பாடலை எழுதியுள்ளார். கூண்டுக்கிளியைப் பற்றி "பஞ்சர பத்த சுகா" (எஸ். ஸி. 1904). அப்பா சர்மா இயற்றிய கவிதை. "டெஸர்ட்டட் விலேஜ்" என்ற பாடலை அவர் மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளார். (தார்வார், 1915)

ஒரே தொடர்க் கதையை வைத்துச் சிறிய பாடல்கள் தொடர்ச்சியாக புனையப் பெற்றுள்ளன. "மஹீபோ மனுநீதி சோழ" (1949). "தேவபந்தி வரதராஜா" (1948) இந்தக் கட்டுரையில் ஆசிரியர் இயற்றியுள்ளவை. சோழ வரலாற்றிலிருந்தும், ஸ்ரீரங்கம் கோயிலைப் பற்றியும் உள்ள நிகழ்ச்சிகள் அவற்றில் இடம் பெற்றுள்ளன; "ந கதாசித் அனீத்ருசம் ஜகத்" (உலகம் ஒருக்காலும் இன்றைய நிலைக்கு மாறாக இருந்ததில்லை) என்பது இக்கட்டுரையாளர் இயற்றி இன்னும் வெளியாகாத நூல். புரூரவஸ் ஊர்வசியை வேத காலத்தில் உணர்ச்சியின்றிக் கைவிட்ட காலத்துக் கதையை முதற் பகுதியாக வைத்துக் கொண்டு இரண்டாவதாக ஓர் ஆங்கில மனைவி இந்தியச்சிற்றரசனிடமிருந்து ஏராளமாகப் பணம் பறித்துக் கொண்டு அவனைக் கைவிடும் வகையில் ஒரு கதையாக வழங்கப் பெற்றுள்ளது.

சஞ்சிகைகளில் ஸம்ஸ்கிருத மொழியையும் அதன் பெருமையும் பற்றி பல சிறிய பாடல்கள் வந்துள்ளன. இதைப்பற்றி 106 செய்யுட்கள் கொண்ட "ஸம்ஸ்கிருத வாக் சௌந்தர்ய அமிருதம்" என்ற பாடலை (டில்லி, 1957) பிரபுதத்த சாஸ்திரி இயற்றியுள்ளார்.

பழைய கண்ட காவ்ய பாணியில் சற்று நீளமான பாடல்கள் வெளியாகியுள்ளன. அவற்றில் ஒரு வித புது மணமும் கமழ்கின்றது. சி. வேங்கடரமணய்யாவின் (பெங்களூர், 1944) "காவிய சமுதாயா" என்ற தொகுப்பில் ஹரிச்சந்திரன், நபநேதிஷ்டன், விசுவாமித்திரா போன்றோரின் கதைகள் பாடல்களாக இயற்றப்பட்டுள்ளது. டி. எம். குல்கர்னி (ஸதாரா, 1952) "தாரா யசோதரா" என்ற பாடலில் இந்தியாவின் புராதனப் பண்பாட்டுக் கேந்திரமாகிய போஜ ராஜனது தலை நகரத்துச் சிறப்புக்களை விவரித்துள்ளார். விஜயநகரம், வி. வேங்கட நாராயண ராயரின் (பனாரஸ் 1909) நற்குணங்களைப் பற்றிய ஓர் உரையாடலை 'பத்மினி-சந்திர ஸம்வாதா' என்ற பாடலாக அமைத்துள்ளனர். திருவையாற்றைச் சேர்ந்த மேதா ஸ்ரீ நாராயண சாஸ்திரி ஏராளமான நூல்களை இயற்யுள்ளார். அவற்றில் ஒன்று நான்கு புருஷார்த்தங்களைப் பற்றியது. "சதுர்வர்க்க சிந்தாமணி" (ஸ்ரீரங்கம், 1922) என்பது அதன் பெயர். சிந்தனைச் செறிவுடன் கூடிய மரபையொட்டிய அந்நியாபதேச சதகங்கள் வெற்றிகரமாக நவீன ஸம்ஸ்கிருதக் கவிஞர்களால் புனையப் பெற்றுள்ளன. முன்னரே மதுரநாத சாஸ்திரியின் "அன்யாபதேச"த்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளோம். "வியாஜோக்தி ரத்னவளி (திருவையாறு, 1953) இந்த ரீதியில் ஒய். மகாலிங்க சாஸ்திரி அமைத்தது. ஜம்முவைச் சேர்ந்த சுகதேவ சாஸ்திரி "ஜிதமாலா சரிதா" என்ற பெயரில் புனைந்துள்ள பாடலும் இதே ரீதியில் இருப்பது. இதை லாகூரில் பிரசுரித்திருக்கிறார். பாபர் ஜீதூ என்ற ஏழைப் பிராமணனும் அவனது பெண்ணும் பட்ட அனுபவங்களை வைத்துக் கொண்டு புனையப் பெற்ற துன்பியல் கதை இது. டோக்ரா காலத்து நாட்டுக் கவிஞர்கள் இதை சிந்துகளாகப் பாடியிருக்கிறார்கள். ஒய். நாகேச சர்மா (பெங்களூர், 1955) பழைய புத்த காலத்து உபகுப்தா கதையையும் வாசவதத்தை விஷயத்

தையும் வைத்துக் கொண்டு மூன்று அத்தியாயங்களில் "நேத்ரோன்மீலனம்" என்ற காவியத்தை இயற்றி யிருக்கிருர். இந்தப் பாடலுக்கு மூலமாக பயன்பட்டது ஹிந்தியில் உரைநடையில் வெளியாகியிருக்கும் ஒரு நூல்.

### நையாண்டி, லகு செய்யுட்கள்

அக்காலத்தில் புதிய ஊக்கம் பெற்றுள்ள எழுத்து வகையில் நையாண்டிப் பாடல்களும், லகு செய்யுட் களும் குறிப்பிட வேண்டியவை. நவீன மனப்பான்மை யினர், மரபையொட்டின படைப்புக்களை கேலி செய்யும் மனப்பான்மையினராக காணப்பெறுகின்றனர். சம்பிர தாய வழியினர் இதற்குப் பதில் உரை தருகிருர்கள். இன்றைய மோஸ்தர்களும், குறைபாடுகளும் வழிவழி எழுத்தாளர்களை கண்டனத்துக்கு உள்ளாக்கி இருக் கின்றன. பல்வேறு கட்சிகளும், தலைவர்களும் சண்டை யிட்டுக் கொண்டு தகராறில் ஈடுபடுவதை விஷயமாக வைத்துக் கொண்டு நகைச்சுவைக் கட்டுரைகளையும் நிந்தனைக் கதைகளையும் அவர்கள் இயற்றியுள்ளனர். மனதைக் கவர்ச்சிக்கும் வகையில் இத்துறையில் ஸம்ஸ் கிருதம் செயல்படுகிறது.

மேகசந்தேசத்தைத் தழுவிய சில தற்கால எழுத் தாளர் நகைச் சுவை ததும்பும் கவிதைகள் இயற்றியுள்ள னர். இம்மாதிரி படைப்புக்களில் ஒன்று சி. ஆர். சஹஸ்ர புத்தே (தார்வார், 1917) இயற்றியுள்ள "காக தூதா"[58] என்பது. இதே பெயரில் எம். ஆர். ராஜகோபாலய்யங் கார் சிறையிலிருந்து ஒரு கள்வன் அனுப்பிய செய்தி யைப் பற்றி எழுதியுள்ளார். பூனைவைச் சேந்த கே. வி. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி எழுதிய "சுனைக தூ"[59] இதே கருத்தைக் கொண்டது. சிறைப்பட்ட ஒரு கள்வன் ஒரு நாயின் மூலம் தன் காதலிக்குச் செய்தி அனுப்பு

58. அண்ணுமலை நகர் மிஸ்ஸானி 1940.
59. ஸரஸ்வதி சுஷமா, பனாரஸ் 1956.

கிறன். வெங்காயத்தின் சுவை எதிர்த்து நிற்க முடியாதது என்பதை வைத்துக்கொண்டு ஸஹ்ருதயா 8-வது வெளியீட்டில் முத்து விட்டலாச்சார்யா தாங்கள் தள்ளி விட்டிருக்கும் இந்தச் சுவையான பண்டத்தை உபயோகிக்குமாறு ஒரு விண்ணப்பம் செய்கிறுர். (பலந்து பிரார்த்தனு) வெங்காய விஷயமாக 100 செய்யுட்கள் கொண்ட ஒரு கவிதையை (பலாண்டு சதகம்) ஜெய்பூரைச் சேர்ந்த கிருஷ்ண ராமா எழுதியிருக்கிறுர். துடைப்பத்தின் சீரிய சேவையைப் புகழ் பாடும் கவிதை ஒன்று மார்ஜனி என்ற பெயரில் வெளியாகி இருக்கிறது. மேல் கோட்டை ஸ்ரீ வைஷ்ணவ மடத்தின் பீடாதிபதி பதவிக்கு வந்த அனந்தாழ்வார் தமது பூர்வாசிரமக் கவிதை ஒன்றில் துடைப்பத்தின் பெருமையை பாடி இருக்கிறுர்.[60] மூட்டைப் பூச்சியும் எறும்பும் கூட கவிஞர்களின் கவனத்தை ஈர்த்திருக்கின்றன. மூட்டைப் பூச்சியைப் பற்றி எட்டு பாடல்களை "மத்குணஷ்டகா" என்ற பெயரில் பூனவைச் சேர்ந்த கே. வி. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி எழுதியுள்ளார். புளின விகாரி தாஸ் குப்தா மூட்டைப் பூச்சியைப் பற்றி ஓர் அஷ்டகத்தை எழுதியுள்ளார். மத்குணஷ்டகா (1928, பிப்ரவரி, எஸ். எஸ். பி. பி.) பூனவில் போலவே வங்காளத்திலும் மூட்டைப் பூச்சியின் தொல்லை அதிகமாக இருக்கவேண்டும். இதைவிட அதிக ஆபத்தானது "மசக" என்று கூறப்பெறும் கொசு. இதை பழங்காலத்து ஸம்ஸ்கிருதக் கவிதைகளிலே பாடிக் கௌரவித்து இருக்கிறுர்கள். தற்கால எழுத்தாளர்களில் ஆத்ரேயா (வி. சாமிநாத சர்மா) கொசுவைப் பற்றி சில வரிகளைப் பாடியிருக்கிறுர்.[61] "தேநீரும், காப்பியும்" தரும் இன்பத்தைக் குறித்தும்

60. ஸம்மார்ஜனி சதகம், மைசூர் ஸம்ஸ்கிருத சந்திரிகா, வால்யூம் 5-ல் துடைப்பத்தைப் பற்றி ஒரு கட்டுரை வந்துள்ளது.

61. அண்ணுமலை நகர் மிஸ்ஸலனி 1940.

அவை விஷமாக பித்துப் பிடித்திருப்பதையும் குறித்து பலர் பாடியிருக்கிறார்கள். ஒரு கீதையே பாடுவதற்குத் தகுதியுள்ளது என்ற கருத்தை சி. ஆர். சஹஸ்ர புத்தே தேநீரைப் பற்றி "சா கீதா" என்பதில் பாடியுள்ளார். "காபி ஷோடசிகா"[62] என்ற பெயரில் காபியின் மகிமையை ஆத்ரேயர் புகழ்ந்திருக்கிறார். அதை கண்டிக்கும் பாடல் களும் இரண்டு உண்டு. "காபி பானீயம்" (எஸ். எஸ். பி. பி., ஏப்ரல் 1951) என்ற பெயரில் என். வி. சம்பத் குமார ஆச்சார்யார் எழுதியிருக்கிறார். சங்கராச்சாரி யாரது "பஜகோவிந்தம்" என்ற பாடலின் சந்தத்தை யும், போக்கையும் தழுவி காப்பியை விட்டுவிட வேண்டு மென்று மக்களைக் கேட்டுக் கொண்டு "காபித் தியாக துவாதச மஞ்சரிகா" என்ற பாடலை இயற்றியுள்ளார். 7 செய்யுட்கள் கொண்ட ஒரு கவிதை தேநீரைப் பாராட்டுகிறது. இதை இயற்றியவர் கரிக்காடைச் சேர்ந்த எம். கிருஷ்ணன் நம்பூதிரிபாட் (ஸம்ஸ்கிருதா, 3–4–1956) வயிற்றைப் புகழ்ந்து பாடியது "உதரப் பிரசஸ்தி (எஸ். கி. 1906) இ. அப்பா சர்மா இயற்றியது. "குரங்குகளின் உபவாசம்"[63] என்ற கற்பனைக் கவிதை ஒன்றில் நோன்பு நூற்பதாக பாசாங்கு செய்யும் சபல சித்தர்களை டி. டி. தாதாச்சார்யா கடுமையாகத் தாக்கு கிறார். கன்னோசி பிராமணர்களை (எஸ். சி. 6-வது புத்தகம்) மகாவீர பிரசாத துவிவேதீ 38 செய்யுட்கள் கொண்ட "கன்யாகுப்ஜ லீலாம்ருத" என்ற பாடலில் விளாசி இருக்கிறார்.

புதிய இயக்கங்கள், அவற்றின் தலைவர்கள், ஆதர வாளர் போன்றோரை நிந்தனை செய்யும் வகையில் பல நிந்தனைக் கவிதைகள் வந்திருக்கின்றன. "தயானந்த அஷ்டகா" என்ற நூலில் சஜ்ஜுராம், தயானந்தரை நையாண்டி செய்திருக்கிறார். தற்கால மாநாடுகளை

62. இபித்.
63. கும்பகோணம் 1925.

கேலி செய்யும் வகையில் பங்கிம் சந்திர சட்டர்ஜி "விலங்குகளின் மகாநாடு" என்று எழுதியிருப்பதை ஸம்ஸ்கிருதத்தில் வெளியிட்டிருக்கிறார்கள்.[64] "சாத்விக சுவப்னு" (எம். இ. 1907, திருச்சூர்) என்ற பாடலில் 100 செய்யுட்களில் ஆரம்பக் கல்வி முறையையும் அரசியல் கிளர்ச்சியாளர்களையும் புன்னசேரி நீலகண்ட சர்மா கண்டித்துள்ளார். பல்வேறு கட்சிகள், வெவ்வேறு கோஷங்களை எழுப்புவதையும் வெவ்வேறு தத்து வத்தைப் பேசுவதையும் கேலி செய்திருக்கிறார் ஸ்ரீ சர்மா. ஒரு காளைமாடு, ஒரு நாய், ஒரு குரங்கு, ஒரு குள்ள நரி, ஒரு கிளி முதலியவை முறைப்படி மகாநாடு கூடுகின்றன. வரவேற்புரை, துவக்கவுரை, தலைமையுரை முதலியன எல்லாம் கிரமப்படி நடக்கின்றன. "காங்கிரஸ் கீதா" (சென்னை, 1908). சூரத் காங்கிரஸ் சூறுவளியான கதையைப் பற்றியது. நவீன புது மோஸ்தரில் முழுகி சம்பிரதாயமான ஆசாரங்களைக் கைவிடுவதை பாபா தீக்ஷிதர் வடாவே ஒரு நூலில் கேலி செய்திருக்கிறார். "கல்பித-கலி-விருத்தாந்ததர்ச-புராணு" என்பது அதன் பெயர்.

## நாடகம்

பொருட்செறிவுள்ள நாடக வகையை எடுத்துக் கொண்டு பார்த்தால், பழைய விஷயங்களைக் குறித்து வழிவழியில் நாடகங்களை இயற்றும் பணி ஏராளமாக நடந்திருக்கின்றது. பட்டஸ்ரீ நாராயண சாஸ்திரி 93 நாடகங்களை இயற்றியுள்ளார். இன்றும் அம்மாதிரி நாடகங்கள் புனையப் பெற்றுத்தான் வருகின்றன. ஆனால் சம்பிரதாயமான முறையை அல்லது வழியை வைத்துக் கொண்டு புதிய அம்சங்களைச் சேர்த்து கருத்துக்களையும் பிணைத்து, நாடகத்தை அமைத்துத் தரும் வழக்கம் பிரபலமாகி வருகிறது. நவீனக் கல்வி பெறுபவர்கள்

64. ஸஹ்ருதயா NS II.

ஸம்ஸ்கிருதத்தில் நாடகம் இயற்றும்போது இம்மாதிரி நடைபெறுவது தவிர்க்க முடியாதது.[65]

பேரிலக்கியங்கள் என்ற புகழ்பெற்றுள்ள நாடகங்களே புதிய நாடகங்களின் தோற்றுவாய்க்கு வழி காட்டுபவையாகவும் இருந்திருக்கின்றன. அவற்றிலே காணப்பெறும் உட்பொருட்களை வைத்து ஒவ்வொரு சூழ்நிலையிலும் நாடகங்களை மாற்றியமைக்கும் முயற்சிக்கு அவை ஆக்கம் தருகின்றன. ஒரு பெரிய நாடகத்தின் கடைசி வரியை எடுத்துக்கொண்டு இரண்டு அல்லது மூன்று அங்கங்கள் கொண்ட சிறிய நாடகங்களை இயற்றும் முறையை மைசூரைச் சேர்ந்த ஐக்கு வகுல பூஷணு கையாண்டிருக்கிருர். அவரது "பிரசன்ன காசயபீய" (மைசூர், 1951) என்பது துஷ்யந்தனும், சகுந்தலையும், யுவன் பரதனும் கண்வரது ஆசிரமத்திற்கு விஜயம் செய்வதான விஷயத்தை எடுத்துக்கொண்டு அமைந்திருக்கிறது. இந்த விஷயத்தையே வைத்து சூரத்தைச் சேர்ந்த பரீக் "சாயா—சகுந்தலா" என்ற ஓரங்க நாடகத்தை எழுதியுள்ளார். இதில் உத்தர ராம சரிதத்தின் செல்வாக்கையும் காணலாம். (சூரத் 1957) (எஸ். சி. 5-வது புத்தகம்). "அதர்ம விபாகா" என்பது புதை பொருள் சேர்ந்துள்ள நாடக வகையைச் சேர்ந்தது. ஆயுர்வேதத்தின் பெருமையை எடுத்துக் காட்டும் புதை பொருள் நாடகம் ஒன்றை "ஜீவசஞ்சீவினி நாடகா"[66] என்ற பெயரில் சி. வெங்கடரமணய்யா எழுதியுள்ளார்.

சென்னை ஸம்ஸ்கிருத வித்வத் சபை அகில இந்திய நாடகப் போட்டி ஒன்றை நடத்தியது. அதில் ஏராளமான பேர் கலந்து கொண்டனர். "பிரதி ராஜசூயம்" என்ற நாடகத்திற்கு முதல் பரிசு கிடைத்தது. ஒய். மாகாலிங்க சாஸ்திரி எழுதிய இந்த நாடகம் இப்போது

---

65. குறிப்பான மாறுதல் ஏற்பட்டுள்ளது. அதாவது ப்ராக்ருதம் கூடுமானவரை தவிர்க்கப்பட்டுள்ளது.

66. பெங்களூர் 1949.

தான் பிரசுரமாகியுள்ளது. தனது பங்காளிகளை வன வாசத்துக்கு அனுப்பிவிட்ட பிறகு துரியோதனன் எதிர் மறையாகச் செய்யும் ராஜசூய யாகத்தைப் பற்றியது இந்த நாடகம். "உத்காத்ரு தசானனு" என்ற நாடகத்தில் இந்த ஆசிரியர் புதிய கருத்துக்களை புகுத்தி யிருக்கிறுர். இந்த நாடகத்திலும் இன்னும் வெளிவராத பிற நாடகங் களிலும் கலிகாலத்தின் பரிபவமாக ஏற்பட்டு வரும் சீரழிவு களை அவர் விஷயமாக்கிக் கொண்டிருக்கிறுர். "கலிப் பிராதுர்ப்பவா"[67] என்ற ஏழு அங்க நாடகம் இத்தன்மை யது. அதுவும் இப்போதுதான் பிரசுரமாகியுள்ளது. அவ ரது "உபயரூபகா" என்ற நாடகம் சமூக நிலவரத்தைக் குறிக்கும் இன்பியல் அமைப்பு. பில்ஹணன் கதையை ஏறக்குறைய அப்படியே வைத்துக் கொண்டு தஞ்சா வூரைச் சேர்ந்த சுந்தரேச சர்மா "பிரேம விஜயா",[68] (காதலின் வெற்றி) என்பதை எழுதி, நடித்தும் காண் பித்து இருக்கிறுர்.

இந்திய சரித்திரத்தில் தோன்றியுள்ள மகாபுருஷர் களைப் பற்றி அதிகமான நாடகங்கள் வந்து கொண்டிருக் கின்றன. மேவார் ராணு பிரதாப் சிங்கைப் பற்றி மகா மகோபாத்தியாய மதுரா பிரசாத் தீக்ஷிதர் நாடகம் இயற்றியுள்ளார் (வீரப்பிரதாப நாடகா, லாகூர், 1937). பாடல்களைச் சேர்த்து மூன்று நாடகங்களை என். எம். யாக்ஞிக் இயற்றியுள்ளார். சம்யோகிதா சுயம்வரா, "சத்ர பதி சாம்ராஜ்யா", "பிரதாப விஜயா"[69] ஆகியவை அவற்றின் பெயர்கள், ஒரிஸாவின் வரலாற்று நிகழ்ச்சி ஒன்றை புதிய பாடல்களுடன் சேர்த்து சுதரிசனபதி

---

67. தொடர்ச்சியாக யு. பியிலும், தனியாகவும் பிரசுரிக் கப்பட்டுள்ளது. திருவாலங்காடு 1956.

68. கும்பகோணம்–1943.

69. பரோடாவிலிருந்து 1929-ல் ஆங்கில மொழிபெயர்ப் புடன் பிரசுரிக்கப் பட்டுள்ளது. (சத்ரபதி ஸாம்ராஜ்யா)

"சிம்ஹல விஜயா"[73] என்ற நாடகத்தை எழுதியுள்ளார். "அமர மங்களா" (காசி. 1939) பஞ்சானன தர்க்க ரத்தினரின் நாடகம். விஜயானந்தா (எஸ். சி. 1904) "பிரேம மோகினி - ரண தீரா" என்ற காதல் நாடகத்தை இயற்றியுள்ளார். அதில் சம்பிரதாயமாகக் கவனம் செய்த சுலோகங்கள் கிடையாது. இக்கட்டுரையாளர் "அனுர்கலி" என்ற பெயரில் எழுதியுள்ள நாடகம் இன்னும் ஏட்டுப் பிரதியாகவே இருக்கிறது. அடிமைப் பெண்ணிடம் ஜஹாங்கீர் கொண்ட நாடறிந்த காதலைப் பற்றியது இந்த நாடகம். க்ஷமா ராவ் காலமான பிறகு வெளியான அவரது சமூகச் சீர்திருத்த நாடகங்களில் "பால விதவா"[71] (இளம் கைம்பெண்) இளம் விதவையைப் பற்றி மூன்று அங்கங்கள் கொண்ட நாடகம். ஒதுக்கான விஷயங்களைக் குறித்தும் நாடகங்கள் இயற்றப்பட்டுள்ளன. இயற்கையின் எழிலைப்பற்றி ஆர்ய சமாஜி மகா விரத் "பிரகிருதி செளந்தரியா" (இயோல், 1934) என்ற நாடகத்தை எழுதியுள்ளார். ஸம்ஸ்கிருதத்திற்கு ஏற்பட்ட துர்த்தசையையும், பல்வேறு சமஸ்தானங்களில் மகாராஜாக்கள் ஸம்ஸ்கிருதக் காலேஜ்களைத் தோற்றுவித்ததால் அதற்குக் கிடைத்த உயிர்ப்பிச்சையையும் நாடகமாக அமைத்து "விஞ்ஞான சிந்தாமணி" என்ற சஞ்சிகையில் புன்னசேரி நீலகண்ட சர்மா "கீர்வாணீ விஜயா" என்ற பெயரில் நாடகம் இயற்றியுள்ளார். பிரம்மா, சரஸ்வதி, ரிஷிகள், ஸம்ஸ்கிருதம், ஆங்கிலம், பிற இந்திய மொழிகள் நாடகப் பாத்திரங்களாக வருகின்றன. "ஸம்ஸ்கிருத வாக்விஜயா"[72] என்ற நாடகத்தை டெல்லியைச் சேர்ந்த பிரபுதத்த சாஸ்திரி ஐந்து அங்கங்களில் ஸம்ஸ்கிருதத்திலும், ஹிந்தியிலும் நாடகமாக அமைத்திருக்கிறார்.

70. பெர்ஹாம்பூர் 1931.
71. மஞ்சூஷா 1966.
72. டெல்லி 1942.

காளிதாஸன், சூத்ரகன், பவபூதி போன்றோரின் உறவு கொண்ட எழுத்தாளர் வரவர அதிகமாக ஷேக்ஸ் பியர் விஷயத்தில் கவனம் செலுத்தி வருகிறார்கள். ஷேக்ஸ்பியரைப் பற்றி சில விமரிசனக் கட்டுரைகள் இந் திய மொழிகளில் வந்திருக்கின்றன. ஆனால் ஷேக்ஸ்பிய ரது நாடகங்கள் ஸம்ஸ்கிருதத்தில் ஆக்கப்பட்டிருப்பதைப் பற்றி அவை எழுதவில்லை.[73] சென்னையைச் சேர்ந்த ஸ்ரீசைல தீக்ஷிதர் (1877) "பிராந்தி விலர்சா" என்ற பெயரில் "காமெடி ஆப் ஏர்ரர்ஸ்" என்ற நாடகத்தை மொழி பெயர்த்துள்ளார் திருவனந்தபுரம் ராஜராஜ வர்மா "ஒத்தல்லோவை"[74]த் தழுவி ஒரு நாடகத்தை எழுதியுள்ளார். "வாசந்திக் ஸ்வப்னு"[75] என்பது (A Mid-Summer Night's Dream) என்ற நாடகத்தை ஸம்ஸ்கிருதத்தில் மொழி பெயர்த்தவர் ஆர். கிருஷ்ண மாச்சார்யா. இது சஞ்சிகையில் வந்து பிறகு புத்தகமாகி இருக்கிறது. இதே நாடகத்தையும் "ஹாம்லெட்"டில் சில அங்கங்களையும், கத்வாலைச் சேர்ந்த குன்டேராவ் ஹத்காரே ஸம்ஸ்கிருதமாக்கி இருக்கிறார். (A Mid-Summer Night's Dream) நாடகத்தின் மற்றொருமொழி பெயர்ப்பு "ஸ்ரீ" என்ற சஞ்சிகையில் (8–3–4) பிரசுர மாகி இருக்கிறது. "யதா அபிமதம்" என்ற பெயரில் As You Like it என்ற நாடகம் மொழி பெயர்க்கப் பட்டு தொடர் நாடகமாக "யு. பி."யில் பிரசுரமாகிக் கொண்டிருக்கிறது. விஜயநகரத்தைச் சேர்ந்த எம். வெங்கடரமணாச்சார்யா[76] (Lamb) லாம்ப் இயற்றியுள்ள Tales from Shakespeare என்ற நூலை ஸம்ஸ்கிருதத்

---

73. சூரியனின் பாதை என்ற ஆங்கில சஞ்சிகையின் 1955 நவம்பர், டிஸம்பர், இதழில் ஸி. ஆர். ஷாவின் இந்திய மொழிகளில் ஷேக்ஸ்பியரின் நாடகங்கள்" என்பது.

74. திருவனந்தபுரத்தில் அச்சாகியது.

75. கும்பகோணம் 1892.

76. மதராஸ் 1933.

தில் மொழி பெயர்த்துள்ளார். ஷேக்ஸ்பியர் நாடகங்களில் "ஒதெல்லோ", "ஹாம்லெட்" முதலியவற்றை உரைநடைக் "கதைகளாக "ஸஹ்ருதயா" பிரசுரித்துள்ளது. ஷேக்ஸ்பியரிலிருந்து சில நாடகப் பகுதிகளையும், கவிதைகளையும் மொழி பெயர்த்து இருப்பதைப் பற்றி முன்னமே கூறியுள்ளோம். பிற மேலைதேச நாடகங்களும் ஸம்ஸ்கிருதத்தில் வெளி வந்திருக்கின்றன. "விசுவ மோகனு"[77] என்ற தலைப்பில் (காதெயின்) "பாஸ்ட்" என்ற நாவலை ஸம்ஸ்கிருதமாக 7 அங்க நாடக வடிவத்தில் எஸ். என். தத்பத்ரீகர் பூனுவில் வெளியிட்டார். லெஸ்ஸிங்கின் "அமீலியா கலேட்டி"யை டாக்டர் சாமா சாஸ்திரி ஸம்ஸ்கிருதமாக்கி யிருக்கிருர். (எம். எஸ். சி. எம். எம். VII, 1931) "கோப்பை" என்ற இரு அங்க துன்பியல் நாடகத்தை, ஸம்ஸ்கிருத நாடக மரபையொட்டி, "கமலா விஜய நாடகா"[78] என்ற பெயரில் சி. வெங்கடரமணய்யா தயாரித்துள்ளார்.

மேலை நாடுகளின் நாடகங்களை ஸம்ஸ்கிருதத்தில் ஆக்கித் தந்ததுடன்கூட, சிறிய நாடகங்களை, குறிப்பாக ஓரங்க நாடகங்களை, மேலை நாடுகளின் தயாரிப்புக்களைத் தழுவி எழுதும் பழக்கம் அதிகரித்துள்ளது. அத்தகைய நாடகங்கள் இக்காலத்தில் நிறைய நடிக்கப்பெற்றுள்ளன. 'பிரஹஸன' என்பது ஸம்ஸ்கிருதத்தில் ஹாஸ்யச் சிறு நாடகம். இது பல காலமாக இருந்துவரும் நாடக வகை. 7வது நூற்றுண்டில் இம்மாதிரி தயாரான இரண்டு நல்ல நாடகங்கள் இன்னும் தம் வசம் இருந்து வருகின்றன. சமீப காலத்தில் முன்னுக்கு வந்த புது நாடகங்களிலும் பல பிரஹஸனங்கள் உள்ளன. காலேஜ் தினங்கள், ஸம்ஸ்கிருத விழாக்கள் முதலியவற்றில் இத்தகைய புது நாடகங்களை நடிப்பது வழக்கமாக இருந்து வருகிறது. சமீப

---

77. பூனு ஓரியன்டலிஸ்ட் XIV
78. மைசூர் (1938).

காலத்தில் சிறிய ஸம்ஸ்கிருத நாடகங்களின் வளர்ச்சிக்கும் வெளியீடலுக்கும் அகில இந்திய ரேடியோ உதவுபடியாக இருந்து வருகிறது.

தற்காலச் சூழ்நிலைக்கேற்ப சமூக விஷயங்களைப்பற்றியதாக பல்வேறு மாறுபட்ட புதுவகை ஓரங்க நாடகங்கள் வந்துள்ளன. இராஜபுத்திர, முஸ்லிம் காலத்து சரித்திரக் காதல் விஷயங்களை எடுத்துக் கொண்டு வி. கே. தம்பி ஸம்ஸ்கிருதத்தில் மூன்று நாடகங்கள்[79] "பிரதிக்கிரியா", "வனஜ்யோத்ஸ்னு", "தர்மஸ்ய சூக்ஷ்மகதி". பி. வி. வரதராஜ சர்மா (எஸ். எஸ். பி. பி. 1939) "கஸ்யாஹம்" (நான் யாருக்குச் சொந்தம்?) என்ற தலைப்பில் ஒரு நாடகத்தை எழுதியுள்ளார். புதுந்த வீட்டில் நாட்டுப் பெண் தன் கதியைக் குறித்து தனிமையில் பேசுவதாக அது அமைந்துள்ளது. பள்ளிக்கூடங்களில் சகஜமாக நடைபெறும் ஒரு சம்பவத்தை வைத்துக்கொண்டு, அதாவது ஒருநாள் விடுமுறை கிடைக்கச் செய்வதற்காக பையன்கள் கையாளும் சூழ்ச்சிகளை வைத்துக்கொண்டு ஏ. ஆர். ஹெப்பரே (எஸ். எஸ். பி. பி. மார்ச், 1941) "மனோகரம் தினம்" (நல்ல நாள்) என்ற நாடகத்தை இயற்றியுள்ளார். "ஆரண்ய ரோதனு" என்பது குடும்பக் கஷ்டங்களை வைத்துக் கொண்டு சீதா தேவி புனைந்துள்ள நாடகம் (மனோரமா, பர்ஹாம்பூர், நெ. 3. 1949). "அமர்ஷ மஹிமா" (உணர்ச்சி வேகம்) ஏ. வி. 1951 என்பது வீட்டிலும், காரியாலயத்திலும் காணப்பெறும் அன்றாட அனுபவங்களை நாடகமாக ஆக்கியிருப்பது. அதன் ஆசிரியர் கே. திருவேங்கடாச்சார்யா. சினங்கொண்ட அதிகாரி தன் மனைவி மீது எரிந்து விழுகிறார். குமாஸ்தாவை சாடுகிறார்; அவருடைய கோபம் குமாஸ்தா மீது அலை மோதுகிறது. குமாஸ்தா தன் மனைவிமீது பாய்கிறார். குமாஸ்தாவின் மனைவி வேலைக்காரியைக் கடிந்து கொள்

79. திருவனந்தபுரம் 1924.

கிறுள்; இப்படியாகப் போகிறது நாடகம். "வணிக சுத்ா" (வியாபாரியின் மகள், மஞ்சூஷா, ஆகஸ்டு, 1955) என்பது ஓர் அசாதாரணமான நாடகம். சுரேந்திர மோகன பஞ்சதீர்த்தா எழுதியது. பணக்காரியான ஒரு இளம் விதவையை ஒரு ஹிந்துவும், புத்த சமயத்தினர் ஒருவரும் நாடுகின்றனர். ஹிந்து இந்தப் போட்டியில் வெற்றி பெறுகிருர். சத்தியாக்ரஹ காலத்தில் சகஜமாக இருந்த ஒரு நிலவரத்தை ஸ்ரீமதி க்ஷமாராவின் "கடுவிபாகா" (மஞ்சூஷா, டிசம்பர், 1955) என்ற நாடகத்தில் வைத்துக் காட்டுகிருர். மகனோ, மகளோ இயக்கத்தில் சேருவதன் காரணமாக குடும்பம் கலகலத்து பெற்ருேர்கள் மனமுடைந்து போவதும், போலீசாரின் பலாத்காரமும், உயிரைத் தியாகம் செய்தல் ஆகிய சோக நிகழ்ச்சிகள் அதில் இடம் பெறுகின்றன. பின்னர் தேசம் அனுபவித்த துன்பங்களைக் குறித்து "மகா ஸ்மசாணு" (பெரிய இடுகாடு) என்ற பெயரில் ஓர் ஓரங்க நாடகத்தை அவர் தயாரித்துள்ளார். அதில் திறமையும், கவர்ச்சியும் உண்டு. மூன்று சிறிய காட்சிகளில் இந்தச் சோகம் நாடகமாக வடித்துத் தரப்பட்டிருக்கிறது. (கௌமுதி, ஹைதராபாத், சிந்து, செப்டம்பர், 1944). தேசம் பிரிக்கப்பட்ட காலத்தில் கல்கத்தாவின் தெருக்களில் பிணக்குவியல்கள் காணப்படுகின்றன. 500 பேர் இருந்த கிராமம் 5 பேர் உள்ளதாகச் சுருங்கி விடுகிறது. பட்டினி கிடந்து உயிர் விடுவது, அல்லது கள்ள மார்க்கெட்டில் அரிசி என்ற பெயரில் விற்கப்படுவதை வாங்கி, கஞ்சி காய்ச்சிக் குடிப்பது என்ற இரண்டில் ஒரு வழியைப் பின்பற்ற வேண்டிய நிர்ப்பந்த நிலையில் வைக்கப்பட்ட ஒரு முஸ்லிம் தையற்காரரின் குடும்ப அனுபவத்தைப் பற்றியது இந்த நாடகம். அந்த அரிசியைச் சமைத்து ஒரு கவளத்தை உட்கொண்டாள் அந்த வீட்டில் தப்பிப் பிழைத்த பெண். அது அவளையும் கொன்று விட்டது.

"ஸ்னுஷா விஜயா"[80] (நாட்டுப் பெண்ணின் வெற்றி) என்பது இலத்தூர் சுந்தரராஜ கவி சென்ற நூற்றுண்டின் இறுதியில் எழுதிய நாடகம். அதில் நகைச்சுவை மேலோங்கி யிருக்கிறது. சமூக, குடும்ப விஷயங்கள் நாடகக் கதையில் அமைக்கப்பட்டுள்ளன. ஒன்று அல்லது மேற்பட்ட அங்கங்களைக் கொண்ட ஹாஸ்ய நாடகங்கள் பல இந்த நூற்றுண்டில் இயற்றப்பட்டுள்ளன. எஸ். கே. ராமநாத சாஸ்திரி இம்மாதிரி பலவற்றை எழுதியிருக்கிறுர். தோலா - பஞ்சீலக பிரஹசனு என்பது அவற்றில் ஒன்று: தண்டியின் தசகுமார சரிதத்தில்[81] வரும் அபகார வர்மனின் கதையை வைத்துக் கொண்டு ருசிகரமாக, திகைக்க வைக்கும் விஷயக் கோர்வையில் " மணி மஞ்சூஷா " என்ற தலைப்பில் ஒரு நாடகத்தை அவர் எழுதியுள்ளார். " லீலா விலாசா "[82] " சாமுண்டா,"[83] "நிபுணிகா" ஆகியவை கே. எல். வி. சாஸ்திரி (சென்னை) எழுதிய மூன்று ஹாஸ்ய நாடகங்கள். தாயும் தந்தையும் தனது மகளை வெவ்வேறு வகையான வரன்களுக்கு கொடுக்க விரும்புகிறுர்கள். தந்தை விரும்புவது இளம் பண்டிதன். தாய் நினைப்பது ஒரு குடிகாரக் கெட்ட நடத்தைக்காரன். பெண்ணின் அண்ணன் தன்னுடன் படிக்கும் ஒருவனை தங்கை மணந்துகொள்ள வேண்டுமென விரும்புகிறுன். அந்தச் சகபாடி திருடர்களிடமிருந்து பெண்ணைக் காப்பாற்றுகிறுன். எனவே, அவனே திருமணத்திற்கு உரியவன் என்று சுலபமாக விஷயத்தைத் தொகுத்து வைத்துக் காட்டுகிறது, இந்த நாடகம். "சாமுண்டா" என்ற நாடகத்தில் இதே மாதிரி

80. இக்கட்டுரையாளர் தன் சொந்த விரிவுரையுடன் மதருஸ் யுனிவர்ஸிடியில் "Annals of Oriental Research"ல் வெளிவந்தது. VII . 1942-43.

81. எஸ். எஸ். பி.யில் தொடராக பிரசுரிக்கப்பட்டது.

82. பாலக்காடு 1935.

83. மதருஸ்

பொருள்படைத்த சமூக நிலவரம் நாடக விஷயமாக அமைந்துள்ளது. நவீன வசதிகளை ஏற்றுக் கொள்ள கிராமத்திலுள்ள வைத்தியர்கள் மறுத்து எதிர்க்கிறார்கள். ஆனால் அந்த வசதிகள் உறுதியாகி அனுகூலங்களைத் தருகையில் அவர்களே மாறி விடுகிறார்கள். ஓர் இளம் விதவை லண்டன் சென்று டாக்டராகித் திரும்புகிறாள். அவளை அவமானப் படுத்த கிராமத்தார் சூழ்ச்சி செய்கிறார்கள். கண்டனம் செய்வோரின் ஒருவருடைய மனைவிக்கு வைத்திய உதவி திடீரெனத் தேவைப்படுகிறது. அவளது பொதுநல உணர்ச்சியும், தியாக புத்தியும் சேர்ந்து கண்டனம் செய்தவருடைய மனதை மாற்றி விடுகின்றன. இதுதான் இந்த நாடகம். ஒய். மகாலிங்க சாஸ்திரி இரண்டு பிரஹஸனங்களை இயற்றியுள்ளார். "கௌடிஸன்ய பிரஹஸனு" ஒரு கஞ்சனைப் பற்றியது. எப்போதுமே பிறர் வீட்டில் சாப்பிடுவதையே தொழிலாக வைத்துக் கொண்டுள்ள ஒருவன் இந்தக் கஞ்சனை ஏமாற்றி விடுகிறான். "சிருங்கார நாரதீயா"[85] என்பது மற்றொரு பிரஹசனம். ஒரு புராண நிலைக்களனை வைத்துக் கொண்டு ஆண்-பெண் பால் மாற்றத்தை ரசமாக சித்திரிக்கிறது இந்த நாடகம். ஸம்ஸ்கிருதத்தில் இரு சொல்லணி பல வகைப் பிரயோகங்கள் கொண்டது. இந்த உத்தியை வைத்துக்கொண்டு "பள்ளிசாலா பிரஹஸனம்" என்பதை (எம். எஸ். சி. எம். எம். மார்ச், ஜூன் 1942ல்) ஸ்ரீ சாஸ்திரி குறுநாடகமாக அமைத்துள்ளார். தன் பையனை அடித்துவிட்ட பள்ளி உபாத்தியாயரை நேரிடையாகத் தண்டிப்பதற்குத் தைரியமுள்ள ஒரு தாய் போகிறாள். பொன் ஆபரணங்கள் விஷயத்தில் அதிகமான ஆசையுள்ள ஒரு மாது "காஞ்சனமாலா" என்ற பிரஹஸனத்திற்கு விஷயமாக அமைகிறாள். பேராசை

84. மதராஸில் 1930ல் பதிப்பித்தது.

85. 1956ல் பிரசுரிக்கப்பட்டது. ஸ்திரீ - நாரத உரை நடையில் 1944 AVயில் பி. எஸ். தக்ஷிணாமூர்த்தி எழுதியது.

பெரு நஷ்டம் என்பது அது புகட்டும் நீதி. இயற்றியவர் சுரேந்திர மோகன் (மஞ்ஜூஷா, பிப்ரவரி, 1955) "புருஷ ரமணீய" (கல்கத்தா, 1948) என்பது ஒரு ஹாஸ்ய நாடகம். ஆனால், கட்டுக்கோப்பில்லாமல் பறந்து கிடப்பது. இயற்றியவர் ஜீவநியாய தீர்த்தா. க்ஷீத கேக்ஷமா (மஞ்ஜூஷா, நவம்பர், 1955) ரசமாக அமைந்துள்ள ஒரு நாடகம். ஒரு லோபி கள்ள மார்க்கெட்டில் பெரும் செல்வம் திரட்டுகிறான். வானுலகில் சித்திரகுப்தனை தன் வலையில் அமர்த்திக்கொண்டு தன் உலக வாழ்வு நீடிக்கும்படி செய்கிறான். 'இரண்டு அங்கங்கள்' அவருடைய மற்றொரு நாடகம். 'சண்ட தாண்டவா' என்பது ஸ்டாலின், ஹிட்லர், முஸோலினி போன்ற நாஸ்திக, சண்டைக்காரர்களையும் அவருடைய தோல்விகளையும் வைத்துக் கொண்டு மதமும், ஆத்மீகமும் நிறைந்த இந்தியாவுக்கு அவர்கள் வருவதாக அவர் நாடக பாணியில் காட்டுகிறார். போலிச் சோதிடனை விஷயமாக வைத்துக் கொண்டு 'மாலாப விஷயம்' என்ற நாடகத்தையும், 'லாலா வைத்தியம்' என்ற பெயரில் போலி வைத்தியரைப் பற்றியும் எஸ். எஸ். கோட்டே இயற்றிய நாடகங்கள் நாகபுரியில் உவப்புடன் வரவேற்கப்பட்டன. 'துருவ அவதாரா' 'ஹாஹந்த சாரதே' என்பவை சமூக விஷயங்களை வைத்துத் தயாரித்த நிந்தனை நாடகங்கள்.

'அலப்த கர்மீயம்' (வேலையில்லாத் திண்டாட்டம்) என்பது நன்றாக எழுதப் பெற்று 'ஸ்ரீ சித்ரா'[86] என்ற சஞ்சிகையில் வெளியான நாடகம். இதை இயற்றியவர் ஆலவாயைச் சேர்ந்த கே. ஆர். நாயர். வேலையில்லாத ஏழை ஸம்ஸ்கிருதப் புலவன் ஒருவனின் துர்க்கதியை இந்த நாடகம் சித்திரித்துக் காட்டுகிறது. அவன் பட்டாளத்தில் சேருவது என்று முடிவு செய்து துணிந்த

86. மஹாராஜா ஸம்ஸ்கிருத கல்லூரியினால் பிரசுரிக்கப் பட்டது. திருவனந்தபுரம் 1942-43.

போது திடீரென 15 ரூபாய் சம்பளத்தில் ஓர் உபாத்தியாயர் வேலைக்கு உத்தரவு வருகிறது. புறக்கணிக்கப்பட்ட ஒரு ஸம்ஸ்கிருதக் காலேஜில், பட்டினி கிடக்கும் பிரின்சிபால் அனுப்பிய வேலை உத்தரவு அது. அதில் மறைபொருளாக வைத்துக் காட்டும் பாத்திரங்கள் ஸம்ஸ்கிருத மொழியும், இலக்கியமும். கவிஞன் பிரதான பாத்திரம். கற்பனை (பாவனை) அவனது மனைவி; கைர்வாணி (ஸம்ஸ்கிருத மொழி) கவிஞனின் தாய்; கருத்தடை மூலம் குடும்பம் கட்டுப்பாடாகி, வறுமையின் காரணமாக இரண்டு குழந்தைகளாகச் சுருங்குகிறது. ஆண் குழந்தை கவிதை; பெண் குழந்தை அபிருசி. 'பாண்டித்ய தாண்டவிதா' என்ற நாடகத்தில் (பல்லாரி, 1953 எப்.எப்.) வடுகநாத சர்மா, பல்வேறு சம்பிரதாயங்களை கண்டனம் செய்கிறார். பண்டிதர்களைக் குறித்து மதுசூதன கான்ய தீர்த்தா 'பண்டித சரித பிரஹஸனு' என்ற பெயரில் ஒரு நிந்தனை நாடகத்தை 'வித்தியோதயாவில்' பிரசுரித்துள்ளார். இந்தக் கட்டுரையாளரின் நாடகங்களில் பிரசுரமாகாமல் இருப்பது 'பிரதாப ருத்தீரிய விடம்பனு' என்பது. சமீபகாலத்தில் தோன்றியுள்ள ஸம்ஸ்கிருதக் கவிதையில் மிகைப் படுத்திக் கூறும் அம்சம் மிகுதியாக இருப்பதை நிந்தனை செய்யும் வழியில் ஹாஸ்யமாக ஒரு நாலு அங்க நாடகம் வந்திருக்கிறது. 'முக்' என்பது இக்கட்டுரையாளரின் இன்னும் பிரசுரமாகாத மற்றொரு கேலி நாடகம். அது ஒரு தத்துவார்த்த மறைபொருளைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருப்பது. 'பாணு' (தனி உரை) என்ற பழைய உத்தியை ஒய். மகாலிங்க சாஸ்திரி கையாண்டு 'குரங்கும் மத்தளமும்' என்ற உலகமறிந்த கதையை ('மர்கட மர்த்தளிகா', மஞ்சூஷா, செப்டம்பர், நவம்பர், 1951) எழுதியிருக்கிறார். பாணு என்பது காதல் சுவை ததும்பும் சம்பிரதாயமான தனியுரை வழி. அதைத் தற்காலச் சமூகச் சூழ்நிலைக்கேற்ப ருசிகரமாக அமைத்துக் காட்ட முடியும் என்பதை இந்த நாடகம் புலப்படுத்து

கிறது. பெண்கள் கையாளும் புதிய மோஸ்தர்கள், அவர்களுடைய கிளப்புகள், புதிய ஆடை அலங்காரங்கள், சீட்டாட்டம், டென்னிஸ், சினிமா முதலியவற்றை விஷயமாக வைத்துக் கொண்டு "சிருங்கார சேகர-பாணு" என்பதில் சுந்தரேச சர்மா ஒரு நாடகத்தை எழுதியுள்ளார்.

அகில-இந்திய ரேடியோவில் ஒலிபரப்புக்காக குறுகிய ஓரங்க நாடகங்களும், பெரிய நாடகங்களிலிருந்து நிகழ்ச்சிகளும் சமீபத்தில் எழுதப்பட்டு வந்திருக்கின்றன. 'ராஸலீலா'[88] என்ற இசை நாடகத்தை பாகவதத்திலிருந்து விஷயத்தை எடுத்துத் தயாரித்து இக்கட்டுரையாளர் வழங்கியிருக்கிறார். காளிதாஸரது குமாரசம்பத்தின் மெய்ப்பொருளை விளக்கும் 'காமசுத்தி'[89] என்பது இவ்வகையில் ஒலிபரப்பான நாடகம். ஸம்ஸ்கிருத இலக்கிய வரலாற்றில் புகழ்பெற்ற மூன்று பெண்மணிகளைப் பற்றிய நிகழ்ச்சிகளை வைத்துக் கொண்டு 'விஜ்ஜிகா', 'விகடநிதம்பா', 'அவந்தி சுந்தரி'[90] ஆகியவற்றை அவர் வழங்கியுள்ளார்.

## பிராந்திய மொழிகளிலிருந்து தர்ஜுமாவும், தழுவலும்

பீடிகையில் சொல்லியிருப்பதுபோல் ஸம்ஸ்கிருதமானது எப்போதுமே மக்கள் பேசும் மொழிகளுடனும், இலக்கியங்களுடனும் நெருங்கிய உறவு கொண்டு வளம் கண்டிருக்கிறது. நவீன காலத்தில் இந்திய இலக்கிய குணதோஷ ஆராய்ச்சியும் சேர்ந்து பிராந்திய இலக்கியங்களிலுள்ள சிறந்த படைப்புக்களை பல ஸம்ஸ்கிருத அபிமானிகள் ஸம்ஸ்கிருதமாக்குவதற்கு ஊக்களித்துள்ளது. பழைய நூல்களும், புதிய தயாரிப்புக்களும்

87. கும்பகோணம் 1938.
88. AVயிலும் தனியாகவும் 1945.
89. AVயிலும் தனியாகவும் 1946.
90. பிரேக்ஷணத்ரயீ மதருஸ் - 1956.

இம்மாதிரி பயன்பட்டுள்ளன. பிராந்திய மொழிகளிலிருந்து ஸம்ஸ்கிருதமாக்கப்பட்ட தற்கால நாவல்களையும், கதைகளையும் பற்றி முன்னரே கூறியுள்ளோம். அதே மாதிரி நீண்ட, குறுகிய பாடல்களும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. தமிழ் இலக்கியத்திலிருந்துதான் முதலில் இம்மாதிரி பணி தொடங்கியதாகச் சொல்லலாம். பிரக்கியாதி பெற்ற ஸ்ரீ வைஷ்ணவ தத்துவ போதகரான வேதாந்த தேசிகரின் அடிச்சுவடுகளைப் பின்பற்றிச் சில நவீன தென்னிந்திய ஸம்ஸ்கிருத அபிமானிகள் ஆழ்வார்களுடைய வைஷ்ணவப் பிரபந்தங்களை மொழிபெயர்த்திருக்கிறார்கள். ஆக்ராவைச் சேர்ந்த மேதபள்ளி வெங்கடரமணாச்சார்யா "கீர்வாண சடகோப ஸாஹஸ்ரா" என்பதை (ஸம்ஸ்கிருதத்தில் திருவாய்மொழி) இயற்றியுள்ளார். மைசூரைச் சேர்ந்த டி. நரசிம்ம அய்யங்கார் 'கல்கி' என்ற புனைப் பெயரில் "ஸஹஸ்ர கதா ரத்னவளி"[91] என்பதை இயற்றியுள்ளார். காஞ்சீபுரம் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியார்[92] "திவ்ய பிரபந்த"த்தில் சிலவற்றை பூராவாகவும், மற்றவைகளைப் பகுதியாகவும் ஸம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்த்துள்ளார். அப்பா வாஜபேயின் ஸம்ஸ்கிருதத்தில் குறளை மொழிபெயர்த்துள்ளார். அதன் பெயர் 'சுநீதி குசுமமாலா'[93]. அதற்கு வியாக்கியானமும் கொடுத்திருக்கிறார். இன்னும் சமீப காலத்திலே வெளியாகி, மேலும் நல்லபடியாக அமைந்துள்ள குறளின் மொழிபெயர்ப்பு 'சுகதி ரத்னகரா' என்ற பெயர் கொண்டது. கச்சிதமான அனுஷ்டுப் சுலோகங்களில் அமைந்திருக்கிறது. ஆசிரியரின் பெயர் சங்கர சுப்பிரமணிய சாஸ்திரி. இந்த மொழிபெயர்ப்பு தொடர்ச்சியாக ஸஹ்ருதயாவில் (13 எப். எப்.) வெளியாகியுள்ளது. இதே சஞ்சிகையில் கம்பராமாய

91. பெங்களூர் 1930.
92. காஞ்சீபுரம் 1947, 1951, 1953, 1954.
93. கும்பகோணம் 1927.

ணத்தைப் பற்றிய பாராட்டுதல்கள் (15), பட்டினத்தார் வரலாறு (13) பிரசுரமாகியுள்ளன. திருவனந்தபுரம் ஸம்ஸ்கிருத காலேஜைச் சேர்ந்த எஸ். நீலகண்ட சாஸ்திரி கம்பராமாயணத்தை ஸம்ஸ்கிருத சுலோகங்களாக மொழி பெயர்த்துள்ளார். 'ஸ்ரீராம சரிதம்' என்ற தலைப்பில் சில பகுதிகளை அவர் பிரசுரித்துள்ளார். கடையக்குடி சுப்பிரமணிய சாஸ்திரி நாலடியாரை தமிழிலிருந்து மொழிபெயர்த்து 'சதுஷ்பதி' என்ற பெயரில் பிரசுரித்து இருக்கிறார். கேரளாவிலுள்ள நெம்மாராவைச் சேர்ந்த சி. நாராயணன் நாயர் 'சிலப்பதிகாரம்' என்ற தமிழ்ப் பெருங்காவியத்தை ஆறு சர்க்கங்கள் கொண்ட ஸம்ஸ்கிருத காவியமாகப் பிரசுரித்து 'கண்ணகி-கோவலம்'[94] என்ற பெயரை அதற்கு அளித்துள்ளார்.

எஸ். வெங்கட்ராம சாஸ்திரி 'கதாசதகம்'[95] என்ற தலைப்பில் வரைந்துள்ள கதைகள் அனைத்தும் இந்திய தேச பாஷைகளின் மூலங்களிலிருந்து எடுக்கப்பட்டவை. சேஷ சூரி 400 பழமொழிகளை ஸம்ஸ்கிருதப்படுத்தி யிருக் கிறார். (எம். எஸ். வி. எம். எம். 1949). இவற்றில் பெரும் பாலானவை தமிழ் நாட்டிலிருந்தும் பிற தென்னிந்திய பகுதிகளிலிருந்தும் வந்தவை. புகழ்பெற்ற தமிழ் இலக் கிய வல்லுநர்களின் செய்யுட்கள், உரைநடைப் படைப்புக் கள் குறித்து சிறிய வரலாறுகளும் ஸம்ஸ்கிருதத்தில் வெளியாகியுள்ளன. வைஷ்ணவ தெய்வக்கொருயான ஆண்டாளைப் பற்றி பெங்களூர் கே. எஸ். நாகராஜன் எழுதியிருக்கிறார். (ஏ. வி. 1947). ஔவைப் பிராட்டி யின் தமிழ் நல்லுரைகளிலிருந்து சில அருமையான பாக் களைப் பொறுக்கியெடுத்து ஒய். மகாலிங்க சாஸ்திரி மொழி பெயர்த்திருக்கிறார். அந்த நூலின் பெயர் "திரா விடார்யா சுபாஷித சப்ததி" (திருவாலங்காடு, 1952). தென்னிந்தியாவைச் சேர்ந்த சமர்த்தர்களான சாகித்ய

94. சேலம் 1955.
95. மைசூர் 1898.

கர்த்தாக்களும் கவிஞர்களும் தமிழ்நாட்டுப் பாடல்களை யும், பக்திப் பாடல்களையும் ஸம்ஸ்கிருதத்தில் மெட்டு அமைத்து வழங்கியிருக்கிருர்கள். ' ஓடப்பாட்டு ', ' ஊஞ்சல் ', ' திருப்புகழ் ', ' கும்மி ', ' கோலாட்டம் ' முதலியன இம்மாதிரி வெளியாகியுள்ளன. இவற்றில் பல. இன்னும் வாய்மொழியாகவே வழங்குகின்றன. இன்னும் சில எழுத்துப் பிரதிகளாகவே இருக்கின்றன. கடையக் குடி சுப்பிரமணிய சாஸ்திரியின் நூல்களில் ஒன்று தமிழ் நாட்டு மெட்டுகளில் அமைக்கப் பெற்றது. தெலுங்கி லுள்ள புகழ்பெற்ற சதகங்களை சிட்டுரூடுர் நரசிம்மா ஸம்ஸ்கிருதக் காலேஜைச் சேர்ந்த எஸ். டி. ஜி. வரதாச் சாரியார் ஸம்ஸ்கிருதத்தில் அமைந்துள்ளார். ' வேமன சதகம் ', ' சுமதி சதகம் ', ' தாசரதி சதகம் ', ' கிருஷ்ண சதகம் ', ' பாஸ்கர சதகம் ', ' காளஹஸ்தி வரசதகம் '[96] ஆகியவை இம்மாதிரி மொழி பெயர்க்கப்பட்டுள்ளவை. க்ஷேத்திரக்ஞர் பதங்கள் சிலவற்றை தெலுங்கிலிருந்து ஸம்ஸ்கிருதப் படுத்தியுள்ளார் டாக்டர் ஜி. வி. சீதாபதி. அவற்றில் சில பரத நாட்டியத்தில் அபிநயம் பிடிப்பதற் குப் பயன்படுகின்றன. கூரஜாடா அப்பாராவின் ' பூர் ணம்மா ' என்ற தெலுங்குப் பாடலும் இம்மாதிரி மொழி பெயர்ப்பாகியுள்ளது. ராஜ மகேந்திரபுரம் மாதர் ஸம்ஸ் கிருதக் காலேஜைச் சேர்ந்த ஒய். மல்லிகார்ஜுஞு ராவ் ' கலா பூர்ஞேதயா ' என்ற தெலுங்குக் காதற் பாடலே ஸம்ஸ்கிருத வசனத்தில் அளித்துள்ளார். அல்லசானி பெத்தண்ணு இயற்றியுள்ள ' மனு சரித 'த்தில் முதல் பகுதியை கே. யக்ஞ நாராயண தீக்ஷிதர் மொழி பெயர்த் துள்ளார்.

கேரளத்தின் மூன்று தற்காலப் பெரும் கவிஞர்கள் உள்ளூர் பரமேஸ்வர அய்யர், வள்ளத்தோல். நாராயண மேனன், குமரன் ஆசன் ஆகியோர். இவர்களுடைய

96. சிட்டுகூடூர், மதருஸ், 1954, 1955, 1956.

நூல்களை ஈ. வி. ராமன் நம்பூதிரி[97] என். கோபால பிள்ளை[98], மலையாளத்திலிருந்து ஸம்ஸ்கிருதத்தில் மொழி பெயர்த்துள்ளனர். 'சந்திரிகா' என்ற நாடகம் (ஹரிபாத் 1955) 'கேசவீயம்', 'நளினி' என்ற காவியங்கள் குறிப் பிடத்தக்க மற்ற மொழிபெயர்ப்புக்கள். மகாராஷ்டிரத்தில் எம். ஆர். டெலாங்கு என்பவர் பல துறை வல்லுநராக விளங்கிய புலவர். அவரது சிருஷ்டிகளில் பல இன்னும் ஏட்டுப் பிரதிகளாகவே இருக்கின்றன. ஞானேசுவரரின் சிறு கவிதை ஒன்றை அவர் ஸம்ஸ்கிருதத்தில் மொழி பெயர்த்துள்ளார். (எஸ். ஆர். மே, 1947). சதாராவைச் சேர்ந்த சாகாராம் சாஸ்திரி பாகவத், பூனாவைச் சேர்ந்த எம். பி. ஹோகா ஆகியோர் ஞானேசுவரியை ஸம்ஸ்கிரு தத்தில் தயாரித்துள்ளனர். பண்டித ஹோகா தொடங்கிய பணியை நீதிபதி ஏ. வி. காஸ்னிஸ் தொடர்ந்து ஆற்றி யுள்ளார். 'கீர்வாண கேகாவளி' (போர், 1945) ஸம்ஸ் கிருதத்தில் இயற்றி யிருப்பது மோரோ பந்தின் கேகா வளிக்கு டி. டி. சாகுரீகர் செய்த மொழிபெயர்ப்பு. 'பலிதானு' என்பது என். சி. கேல்கரின் புகழ்பெற்ற மராத்தி நாவல். இதை லட்கர் சாஸ்திரி ஸம்ஸ்கிருதத்தில் வழங்கியுள்ளார். (கோலாப்பூர், 1940). தென்னிந்திய ஸம்ஸ்கிருத அபிமானிகளைப் போலவே வங்காளிகளும் இத் துறையில் இடைவிடாது உழைத்து வந்திருக்கிறார் கள். 'மேகநாதவதம்' என்ற வங்க இதிகாசம் ஸம்ஸ் கிருதத்தில் வந்திருக்கிறது. (எஸ். எஸ். பி. பி. 1933–34, நித்ய கோபால வித்யா விநோதா). சைதன்யரின் வாழ்க்கை வரலாற்றை பாஸ்கரானந்த சுவாமி ஸம்ஸ்கிரு தத்தில் அளித்துள்ளார். அதன் பெயர் 'சைதன்ய சரிதாம்ருத – ஸம்ஸ்கிருத – அனுவாதா' (எஸ். எஸ். பி. பி. 1954 முதல் பாகம், 1956–57) பங்கிம் சந்திரர்,

97. மஹாகவி க்ருதய: திருவனந்தபுரம் 1945, கேரள பாஷாவிவரதா, திருவனந்தபுரம் 1948.

98. சீதாவிசாரலஹரி, திருவனந்தபுரம் 1942.

சரத் சந்திரர் ஆகியோரின் ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்புக்களைப் பற்றி முன்னரே குறிப்பிட்டுள்ளோம். டாகுரின் காவியங்கள் பலவற்றையும், கட்டுரைகளையும் பதிகலால் தாஸ். ஸம்ஸ்கிருதத்தில் மொழி பெயர்த்துள்ளார். 'ஊர்வசி', 'ஸ்பரிசமணி', 'அபிசாரிகா', 'அஸாரதனம்', 'நிஷ்பல உபகார்', ராஷ்டிரம்—ந:—பிரதிபுத்யதாம்:, மஸ்தக விக்ரய:, துச்ச க்ஷதி:. ஸ்வர்ண மிருக: ஆகிய எல்லாம் 'மஞ்சூஷா'வில் 1954–55-ல் வெளியாகியுள்ளன. "பிரதிநிதி" (எஸ். எஸ். பி. பி. அக்டோபர், 1955) "பூஜார்த்தினி" (எஸ். எஸ். பி. பி. அக்டோபர், 1954) தீரேந்திரநாத் ஸம்ஸ்கிருதப்படுத்தியவை. டாகுரின் கச்சதேவயானியை ஸம்ஸ்கிருதத்தில் எஸ் பார்த்தசாரதி எழுதி 1924–25-ல் சென்னை ஸம்ஸ்கிருதக் காலேஜில் அது நடிக்கப் பெற்றது. ஹிந்தி கவிதையை ஸம்ஸ்கிருதத்தில் அளிப்பதற்கு விடாமுயற்சி செய்து வந்திருப்பவர்களில் ஜெய்பூரைச் சேர்ந்த மதுரநாத சாஸ்திரி குறிப்பிடத்தக்கவர். 'ஜெய்பூர் வைபவம்'[99], 'சாகித்திய வைபவம்'[100], 'கீதி விதி'[101], என்ற நூல்களில் விரஜபாஷை, ஹிந்தி, உருது ஆகியவற்றிலிருந்து பல சந்தங்களையும், பாடல் வடிவங்களையும் எடுத்து ஸம்ஸ்கிருதத்தில் கையாண்டிருக்கிறார். பிராந்தியக் கவிதையின் எழிலை ஸம்ஸ்கிருத பண்டிதர்கள் சுவைக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் அவர் இப்பணியை ஆற்றினார். பிகாரிதாஸின் 'சத்சாய்' என்ற கவிதையை அவர் ஸம்ஸ்கிருதப்படுத்தியிருக்கிறார். 'சங்கீத ராமாயணம்' என்ற பெயரில் ஜனரஞ்சிதமான ஹிந்தி மெட்டுக்களில் ஹோஷ்யார்பூரைச் சேர்ந்த ஜகத்ராம சாஸ்திரி எழுதியுள்ளார். ஹிந்தி கட்டுரைகளில் சிறந்தவையாக இருப்பவைகளை ஸம்ஸ்கிருதமாக்கி 'சூர்யோதயம்' என்ற

---

99. ஜெயபூர் 1947.
100. ஜெயபூர் 1930.
101. பம்பாய்.

சஞ்சிகை பிரசுரிக்கிறது. துளசிதாசரின் பிரார்த்தனைப் பாடல் ஒன்றை விபுலானந்தா மொழிபெயர்த்துள்ளார். (ஏ. வி. 1950). துளசிதாசரது 'ராமசரித மானசா'வை ஸம்ஸ்கிருதப்படுத்தி இன்னும் ஏட்டுப் பிரதியாகவே வைத்துக்கொண்டிருக்கிறார் மைசூரைச் சேர்ந்த கே. திரு வேங்கடாச்சாரியார். பம்பாயைச் சேர்ந்த குஜராத்தி தெய்வானுபவ கவிஞர் 'நிர்மலா' என்றும், சியாமா என்றும் அழைக்கப்படுவர். அவரைப் பற்றிய ஒரு கட்டுரை 'ஸம்ஸ்கிருதம்' என்ற சஞ்சிகையில் வெளி வந்துள்ளது (3–4–1956). வோல்கா நதியின் வடக்குக் கரையில் கி. மு. 6000 ஆண்டு அளவில் காணப்பெற்ற இந்தோ-ஐரோப்பிய 'பழங்குடி வாழ்க்கையை ராகுல சங்கிருத்யாயன 'நிசா' என்ற நூலில் விவரித்துள்ளார். அதன் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பை 1957 டிசம்பர் இதழில் 'ஸம்ஸ்கிருதம்' பிரசுரித்துள்ளது.

நவீன ஸம்ஸ்கிருதத்தை வளப்படுத்த பிற மொழிகளும் அவற்றின் இலக்கியங்களும் பெரிதும் பயன்பட்டுள்ளன. ஆங்கிலக் கவிதைகளில் நடந்துள்ள மொழி பெயர்ப்பைப் பற்றி முன்னரே கூறியுள்ளோம். ஒமர் கய்யாமின் 'ருபாயத்தை' பல ஸம்ஸ்கிருத வல்லுநர்கள் மொழிபெயர்த்துள்ளனர். "கபாலகுண்டல"த்தை ஹரி சரணர் ஸம்ஸ்கிருதமாக்கியுள்ளார். விஜயநகரைச் சேர்ந்த அதிபட்ல நாராயணதாஸ் இதை முதல் முதல் மொழி பெயர்த்தவர்களில் ஒருவர். அடுத்தபடி கிரிதர சர்மா 'அமர சூக்தி சுதாகரா' [102] என்ற பெயரில் இதை மொழிபெயர்த்துள்ளார். மூன்றாவதாக இதை ஸம்ஸ்கிருதத்தில் புனைந்தவர் பேராசிரியர் எம். ஆர். ராஜகோபால அய்யங்கார் [103]. நான்காவதாக இந்த முயற்சியில் ஈடுபட்டவர் பி. வி. கிருஷ்ணன் நாயர். அவரது மொழி

102. ஜால்ரபடான் 1929
103. மதருஸ் 1940

பெயர்ப்புக்குப் பெயர் 'மதிரோத்சவா'[104], சதாசிவ டாங்கே 'பாவ சஷக' என்ற பெயரில் (1956, பம்பாய்) ஒரு மொழிபெயர்ப்பை வெளியிட்டுள்ளார். 'அலிபாபாவும் நாற்பது திருடர்களும்'[105] என்ற மத்திய கிழக்கு இலக்கியக் கதையை ஜி. கே. மோதக் ஸம்ஸ்கிருதமாக்கி இருக்கிறார். 'அலாவுதீனும் அற்புத விளக்கும்', (ஸஹ்ருதயா, 4) பூலிஸ்தான் என்ற நூலின் இரண்டு மொழி பெயர்ப்புக்கள், பிரசூன - வாடிகா ஆகியவை ராமஸ்வாமி எழுதி வெளியிட்டிருப்பவை. (எஸ். எஸ். பி. பி. 1923–24). ஆர். வி. கோகலே[106] புத்தக வடிவில், 'புஷ்போத்யாஞ' என்ற பெயரில் இரண்டு பாகங்களாக ரிக்வேத காலத்து ஸம்ஸ்கிருதத்தில் அவெஸ்தாவை மொழிபெயர்க்க முற்பட்டிருக்கிறார். இப்பணியை ஆற்றி வருபவர்கள் பார்சிகள், கலப்பற்ற ஸம்ஸ்கிருதத்தின் அபிமானிகள் அல்ல. பார்சிகளின் ஸம்ஸ்கிருத இலக்கியத் தொகுப்பு என்ற பெயரில் வெளியாகிருக்கும் எழுத்தாளர்களில் மொழி வல்லுநரான டாக்டர் ஐ. ஜே. எஸ். தாரபோரிவாலா குறிப்பிடத்தக்கவர். அவெஸ்தாவைச் சேர்ந்த கீதங்கள் சிலவற்றை 'மஞ்சுஷா'வில் ஸம்ஸ்கிருதமாக்கி வெளியிட்டிருக்கிறார்கள். பூஜ்யர் ஜோராதுஷ்ட்ரரின் காதாக்களைக் குறித்த புதுத் தகவல்கள் என்ற பெயருள்ள நூலில் பல பாடல்களை ஸம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்த்து, குஜராத்திக் கவிஞர் ஏ. எப். கபர்தார் அளித்துள்ளார். புத்த சமயத்தைச் சேர்ந்த பாலி இலக்கியத்துடன் நெருங்கிய தொடர்புள்ள சில பகுதிகளை மகாமகோபாத்தியாய விதுசேகர பட்டாச்சார்யா 'மிளிந்தபன்ஹா' என்ற பெயரில் (எஸ். எஸ். பி. பி. டிசம்பர், 1936) வெளியிட்டிருக்கிறார். 'தம்மபதா'வின் பல பகுதிகளை ஸம்ஸ்கிருதமாக்கி 'மஞ்சூஷா'வில் தொடர்ச்சியாக அவர் பிரசுரித்

104. திருச்சூர் 1945
105. லாங்மன்ஸ் 1934
106. பெல்காம் 1935

துள்ளார். கிறிஸ்துவப் பிரார்த்தனைக் கீதங்களையும், கிரேக்க பழமொழிகளையும், ஸம்ஸ்கிருத மேற்கோள்களுடன்கூட, ஆர். ஆண்டர்ஸன், எஸ். ஜே., கே. ஸி. சாட்டர்ஜி வெளியிட்டுள்ளனர். (மஞ்சுஷா, 1953). 'மித்ர கோஷ்டி' என்ற சஞ்சிகையில் ஜப்பானிய இலக்கிய மொழிபெயர்ப்புக்கள் சில பிரசுரிக்கப்பட்டுள்ளன.

ஆங்கிலத்தில் இந்தியர் எழுதியுள்ள நூல்கள் சில ஸம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. பி. ஆர். ராஜம் அய்யர் (Rambles in Vedanta) என்று ஆங்கிலத்தில் எழுதியுள்ள நூலின் கதையை பி. சங்கர சுப்பிரமணிய சாஸ்திரி, "அஹோ பலீயஃஸ்த பவிதவ்யாதய:" என்ற பெயரில் பிரசுரித்துள்ளார். சென்னையில் அமெச்சூர் நாடக அரங்கைத் தோற்றுவித்தவர்களில் ஒருவரான வி. வி. ஸ்ரீநிவாசய்யங்கார் ஆங்கிலத்தில் சுவை மிகுந்த பல நாடகங்களை இயற்றினர். "தாமு குடும்பகா" என்ற பெயரில் யு. பி. 4–வது தொகுப்பில் அது ஸம்ஸ்கிருதத்தில் வெளிவந்துள்ளது. கி. வெங்கடராமய்யா இயற்றிய 'உமாதர்ச' என்ற காவியம் கே. ஏ. கிருஷ்ணஸ்வாமி அய்யர் 'உமாஸ் மிர்ரர்' (Uma's Mirror) என்று ஆங்கிலத்தில் எழுதிய பாடலின் மொழிபெயர்ப்பு. ஆங்கிலத்தில் எழுதிப் புகழ்பெற்ற இலக்கிய கர்த்தா கே. எஸ் வெங்கடரமணி இளைஞர்களுக்கான நல்லுரைகளுடன் கூடிய 'A Day with Sambu' என்ற நூலை வெளியிட்டுள்ளார். அதை ஒய். மகாலிங்க சாஸ்திரி 'சாம்பு சர்யோபதேசா'[107] என்ற பெயரில் வெளியிட்டிருக்கிருர். ஸ்ரீ அரவிந்தரின் கவிதையில் சில 'கவிதாஞ்சலி' என்ற பெயரில் டி. வி. கபாலி சாஸ்திரியால் மொழிபெயர்க்கப்பட்டு (சென்னை, 1946) வெளியாகியுள்ளன.

---

107. மதருஸ் 1931

**தேசீய இயக்கம்**

இந்தியா தன் ஆத்மாவை மீண்டும் கண்டு அடைவதற்காக துயிலெழும் நிலைதான் புதிய இயக்கம் நவீன கல்வி, திறனாய்வு முறையின் போஷணை, இந்திய வரலாற்றைத் தீவிரமாக படிப்பது, இந்தியப் பண்பாட்டின் மதிப்பைப் பொதுநோக்குடன் உணர்ந்தறிவது முதலியன இதன் பிரதான அம்சங்கள். மறுமலர்ச்சியின் பகுதியாக ஸம்ஸ்கிருதத்தை வளப்படுத்தும் புது முயற்சியில் ஊக்கத்துடன் இறங்கினால்தான் புராதன இந்தியாவின் பெருமைகளைப் புலப்படுத்த முடியும் என்பதை ஸம்ஸ்கிருத அபிமானிகள் உணர்ந்தனர். இந்தியப் பண்பாட்டின் ஆத்மிக உயர்நிலைச் சிறப்புக்கள் தற்கால நாகரிகத்தின் லோகாயதத் தன்மை, புதிய மோஸ்தர்களும் குறைகளும் அடைந்து வரும் வளர்ச்சி, மேலை நாடுகளை அடிமைப் புத்தியுடன் பின்பற்றும் போக்கு இவை எல்லாமாகச் சேர்ந்து, மீண்டும் இந்தியா ஆத்மிக மறுமலர்ச்சி காண்பதற்குத் துணை புரிந்தன. தேசியம் தோன்றியது. விடுதலை இயக்கம் உருவாயிற்று. தேசபக்தி, தியாகம், வாசாலகம் படைத்த பெரும் தலைவர்கள் தோன்றி கற்றறிந்தவர்கள் மட்டுமின்றி, பாமர மக்களும் கிளர்ந்தெழும்படியாக ஆற்றிய பணி குறிப்பிடத்தக்கது. ஸம்ஸ்கிருத அபிமானிகளையும், தேசிய நடவடிக்கைகள் ஈர்த்தன. இக்காலத்து ஸம்ஸ்கிருத படைப்புகளில் இப்புது உணர்ச்சியின் முத்திரைகளைக் காணலாம். தற்கால ஸம்ஸ்கிருதத்தில் மிக முக்கியமான பகுதியாக காணப்பெறுவது இந்த உணர்ச்சியின் மூலம் அடைந்துள்ள புது வேகந்தான்.

பாரத நாட்டின் அருமை பெருமைகளைப் பற்றி கனவு கண்டு, இன்றைய வீழ்ச்சியைக் குறித்து ஆயாசப்படும் வகையில் முதற் கவிதைகள் அமைந்தன. மீண்டும் நல்வாழ்வு வரும் என்ற நம்பிக்கையும் கூடவே கலந்து வருகிறது. ''தத் அதீதம் ஏவ'' (எல்லாம் போய்விட்டது)

என்ற தலைப்பில், இந்தியாவின் மறைந்துபோன கீர்த்திகளைப் பற்றி அன்னதாசரண தர்க்க சூடாமணி (எஸ். சி. 5-வது புத்தகம்) புலம்புகிறார். 'பாரதீ மனோரதம்'[108] என்ற நூலில் சென்னை பி. டபிள்யூ. டி. யைச் சேர்ந்த எம். கே. தாதாச்சார்யார் கடற்கரையில் உதித்த சிந்தனைகளை வர்ணிக்கிறார். நாட்டின் உயர்ந்த பண்பாட்டையும், அதன் இக்காலச் சீரழிவுகளையும் விவரிக்கிறார். 'சுஷுப்தி விருத்தா'[109] என்பது எஸ். டி. ஜி. வரதாச்சார்யர், மூன்று அத்தியாயங்களில் விவரித்துள்ள ஒரு கனவு. பழைய பெருமையின் பிரகாசம், பின்னர் வந்துள்ள இருள் படர்ந்த நிலவரம் ஆகிய இரண்டையும் வழங்கிய பின், அவ்விருளை அகற்ற வந்த பகலவனாக மகாத்மாவின் உதயத்தை எடுத்துக் காண்பிக்கிறார். 'பாரத—வதூ—விஷாதா' என்ற பாடலில் இந்தியாவின் துல்லியமான சம்பிரதாயம் சீரழிந்ததற்கு வருந்துகிறார் எம். வி. சுப்பிரமணிய அய்யர். (எஸ். எஸ். பி. பி. 1925–26). 'மந்தாகிராந்தா' சந்தத்தில் அமைந்துள்ள 25 சுலோகங்களில் நாட்டுப்பற்று ததும்ப அவர் உணர்ச்சிகளைக் கொட்டியிருக்கிறார். இதே விஷயத்தைப் பற்றி மிக விரிவான காவியம் ஒன்றை 'பாரத பாக்ய விவர்யயா'[110] என்ற பெயரில் கே. எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி தயாரித்துள்ளார். பாரத மாதாவைப் பற்றிய உன்னதமான சுலோகங்கள் கொண்ட 'பாரதி கீதா' ஸஹ்ருதயாவில் வெளியாகியுள்ளது. ஸம்ஸ்கிருத சஞ்சிகை எதை எடுத்துக் கொண்டாலும் பாரதமாதாவின் புகழைப்பாடும் கவிதை ஒன்றுமில்லாமல் இருந்ததே இல்லை. பாரதமாதாவில் எல்லோருக்கும் தாயான தேவியைக் காண்கிறார் டி. வி.

108. முதல் உலகயுத்தத்தின் போது பிரசுரமாகியது.
109. சிட்டுகூடூர் – மதராஸ் 1937.
110. தொடர்ச்சியாக MVயில் வெளிவந்தது.

கபாலி சாஸ்திரி. 'பாரதி ஸ்தவம்'[111] என்பது அவரது நூலின் பெயர். லட்மிசு அம்மாள் 3 சர்க்கங்கள் கொண்ட 'பாரதி கீதையில்' இந்தியாவின் புகழையும் வளர்ச்சியையும் விவரித்து, அது எல்லா வகைகளிலும் மறுமலர்ச்சி காணச் செய்வதற்கு உழைக்க வேண்டு மென்று கோருகிறார். மோச்சேரள ராமகிருஷ்ணு, 'சாரதா பிரசாத'[112] என்ற நூலில், இந்தியப் பண் பாட்டை நிந்திப்பவனது அனுபவங்களைக் கற்பனை செய்து வழங்குகிறார். 'பாரத கௌரவா' என்ற பெயரில் இந்தியாவின் பெருமையைப் பற்றி ஒரு பாடலை பூரியைச் சேர்ந்த மகாமகோபாத்தியாயா தாமோதர சாஸ்திரி வெளியிட்டுள்ளார்.

### தற்கால நிகழ்ச்சிகளின் முத்திரை

தேசிய இயக்கத் தலைவர்களைப் பற்றிய இலக்கியம் அடிப்படையாகக் கவனிக்கப்பட வேண்டிய பிரிவு. ஸம்ஸ்கிருத சந்திரிகா முதல் எல்லா சஞ்சிகைகளும் தலைவர்களின் வாழ்க்கையையும், சாதனைகளையும் பற்றி கவிதைகளையும், வரலாறுகளையும் வெளியிட்டுள்ளன. சந்திரிகாவில் 5-வது தொகுப்பில் திலகர் சிறைப்பட்டது பற்றி 37 செய்யுட்களைக் கொண்ட ஒரு கவிதை வெளி யாகியுள்ளது. கோகலேயைப் பற்றிய ஓர் உரைநடை வரலாறு, ஓர் இரங்கற்பா, சரோஜினி நாயுடுவைப் பற்றி ஒரு கட்டுரை 'ஸ்ஹ்ருதயத்தில்' வந்துள்ளன. லோக மான்ய திலகரது விழாக்கள் வரலாற்றை நான்கு பேர் எழுதி தனித்தனியாக வெளியிட்டார்கள். எம். எஸ். ஆனே, கே. டபிள்யூ. சிட்டாலே, வாசுதேவ சாஸ்திரி வாகேவதீகர், மதுரவாணீ ஆசிரியர் பண்டரிநாத ஆசார்ய கலாகலீ ஆகியோர்தாம் இந்நால்வரும். தேச பக்தர்களின் வாழ்க்கை வரலாறுகள் கொண்ட ஒரு

111. அரவிந்த ஆசிரமம் பாண்டிச்சேரி 1949.
112. நெல்லூர் 1949.

தொகுப்பை 'பாரதீய தேச பக்த சரிதம்'[113] என்ற பெயரில் பெங்களூரைச் சேர்ந்த ஸ்ரீ நாகராஜன் தொடராக வெளியிட்டுள்ளார். திலகர், ஆண்ட்ரூஸ், விவேகானந்தர்[114], ராதாகிருஷ்ணன் போன்ரூர் அதில் இடம் பெற்றுள்ளனர். மாளவியா, ராஜேந்திர பிரசாத், பட்டேல், நேரு ஆகியோரின் வாழ்க்கைச் சரிதங்களை உரைநடையில், குருக்ஷேத்திரத்தைச் சேர்ந்த பண்டித பிக்ஷாராம் இயற்றியுள்ளார். புகழ் பெற்ற கல்விமான் ஆசுதோஷ முகர்ஜியைப் பற்றி 'ஆசுதோஷ அவதான' என்ற பெயரில் காளிபாதர் ஸம்ஸ்கிருத பத்யவாணி என்ற சஞ்சிகையில் பிரசுரித்துள்ளார். ஆந்திர பத்திரிகாசிரியரும் தேசபக்த வள்ளலுமான நாகேசுவரராவ் பந்துலுவின் சுருக்கமான வாழ்க்கை வரலாற்றை 'ஜீவித சரித்திரா' (சென்னை, 1938) என்ற பெயரில் வி. சூரியநாராயண சாஸ்திரி இயற்றியுள்ளார். 'ராஷ்டிர சபாபதி கௌரவா'[115] என்ற பெயரில் லட்சுமி நாராயண ஷான் போக், எல்லாக் காங்கிரஸ் அக்கிராசனர்களையும் பற்றி எழுதியிருக்கிருர். சுபாஷ் போஸைப் பற்றி ஒரு விசேஷக் கவிதையும் 1935-ம் ஆண்டில் காங்கிரஸ் பொன் விழா நடத்திய காலத்தில் பிரசுரமாயிற்று. நேருவைப் பற்றி ஒரு பாடல் நவம்பர், 1948-ல் வந்தது. 'ஜவாஹர் தரங்கிணி' என்ற தலைப்பில் 100 செய்யுட்களைக் கொண்ட ஒரு பாடலை நாகபுரியைச் சேர்ந்த எஸ். பி. வாரனேகர் சமீபத்தில் பிரசுரித்துள்ளார்.

ஒரு புது ராமனுகவோ அல்லது இக்காலப் புத்தராகவோ பாவித்து, புதிய கீதைகளையும், மகா காவியங்களையும் இயற்றுவதற்குத் தகுதி வாய்ந்த வீர புருஷராக மதிக்கப் பெற்று, எல்லா ஸம்ஸ்கிருத ஆசிரியர்களையும் பெரிதும் கவர்ந்தவர் மகாத்மா காந்தி. அவரது அரசியல்

---

113. பெங்களூர் 1952.

114. தனியாக பிரசுரிக்கப்பட்டது. பெங்களூர் 1947.

115. பம்பாய் 1938.

துறைப் பணியையும் புராதன லட்சியங்களிலுள்ள பற்று தல்களையும் அவரது யுக்திகளையும் சேர்த்து கவிதை புனைவது சகஜமாகக் காணப் பெற்றது. நவீன இந்தியாவின் வரலாற்றில் அவரது சத்தியாக்ரஹத்தைப் பற்றிய கதை எல்லா அம்சங்களும் நிறைந்தது. அதைப் பற்றி எவ்வளவோ பாடல்கள் வந்திருக்கின்றன. க்ஷமா ராவின் 'சத்தியாக்ரஹ கீதா'[116] 'உத்தர சத்தியாக்ரஹ கீதா'[117] ஆகிய இரண்டும் மிகக் கம்பீரமான நீரோட்டம் போன்று இதிகாச சந்தத்தில் அமைந்துள்ளவை. ஸ்ரீ பாண்டுரங்க சாஸ்திரியின் 'சத்தியாக்ரஹ கதா', ஜாஜரைச் சேர்ந்த சத்யதேவ வாசிஷ்டா இயற்றிய 'சத்தியாக்ரஹ நீதி காவ்யா', காந்தியின் சிந்தனைச் சுருக்கம் கொண்ட தட்பத்திரிகாவின் (பூனா) வெளியீடு ஆகியவை பகவத் கீதையின் எதிரொலிகள் நிறைந்தவை. அதுவே மகாத்மாவுக்கு மிகவும் பிரியமான நூலும் கூட. சம்பிரதாயமான மகா காவிய சைலியில் சுவாமி பகவத் ஆசார்யா, 'பாரத பாரிஜாத', 'பாரிஜாத அபகாரா', 'பாரிஜாத சௌரபா'[118] என்ற மூன்று பகுதிகளில் பாரதக் கற்பக விருட்சத்தை வருணித்துள்ளார். 'ஸ்ரீமத் காந்தி சரிதா' என்ற பெயரில் மகாத்மாவைப் பற்றிய இருபது அத்தியாயங்கள் கொண்ட ஒரு மகா காவியத்தை தர்பாங்காவைச் சேர்ந்த சாது சரண மிச்ரா இயற்றியுள்ளார். டி. எஸ். சர்மா இயற்றியுள்ள 'காந்தி சூத்திரங்கள்'[119] மரபையொட்டிய சூத்திர வகையில் காந்தீயத் தத்துவத்தை வடித்துக் கொடுக்கின்றன. காந்திஜி எழுதியும், பேசியும் இருப்பவைகளிலிருந்து

116. பாரிஸ் 1932.

117. பம்பாய் 1949.

118. இரண்டாவது முழுப் பதிப்பு—அஹ்மதாபாத். 1951. துவிஜேந்திர நாத் சாஸ்திரியின் ஸ்வராஜ்ய விஜயாவைப் பார்க்கவும்.

119. மதருஸ் 1938–1946.

பொறுக்கு மணிகளாக உள்ளவற்றை எடுத்து சூத்திரங் களாக அவர் கோர்த்து இருக்கிருர். காந்திஜியையும் அவரது பணியையும் பற்றி பல சஞ்சிகைகளில் சிறிய கவிதைகள் வெளிவந்துள்ளன. எஸ். கிருஷ்ணம் பட்டா இயற்றியுள்ள காந்தி 'சப்தாஹம்' (ஏ. வி. 1945) குறிப் பிடத்தக்கது. வேத சந்தத்தில் 'சுவர்ண பிந்து' என்ற பெயரில் டாக்டர் சப்ரா மகாத்மாவைப் பற்றி இயற்றி யுள்ள பாடலில் அவர் இந்தியாவின் தொன்மையான ரிஷி பரம்பரையின் வாரிசு என்று குறிப்பிட்டுள்ளார். காந்திஜி யின் சிந்தனைகள் கொண்ட வெளியீட்டைக் 'காந்தி சூக்தி-முக்தாவளி' என்ற பெயரில் ஸ்ரீ சி. டி. தேஷ்முக் வெளியிட்டுள்ளார். காந்திஜியின் 100 பொன்மொழிகளை வெவ்வேறு சந்தங்களில் அவர் சுலோகங்களாக அமைத் திருக்கிருர்.

விடுதலைப் போராட்ட நிகழ்ச்சிகளை வைத்துக் கொண்டு சிறு கதைகள் புனையப்பட்டதைப் பற்றி முன் னரே கூறியுள்ளோம். இக்கட்டுரையாளர் இயற்றியுள்ள 'கோப ஹம்பன்ன'[120] என்பது ஒரு கதைப் பாடல். குடி கார பிரிட்டிஷ் சோல்ஜர்களிடமிருந்து கெடுதல் நேராமல் ஒரு ஹிந்து ஏழை ஸ்திரீயின் கௌரவத்தைக் காத்து வீர மரணம் எய்திய ஒரு ரயில்வே ஊழியனின் பெருமைகளைப் பற்றியது இந்தப் பாடல். இந்தப் போராட்டத்தைப் பற்றிய முழு நாடகம் 'பாரத மங்களம்' என்பது (எஸ். எஸ். பி. பி. 1951). ஒன்றுபட்ட மக்களின் அபிலாஷைக் குள்ள கண சக்தியை அது தொகுத்துக் காட்டுகிறது. ஒருபுறம் தேவி சண்டியும், மற்ருருபால் பகவத் கீதையும் பிரதான பாத்திரங்களாக அமையப் பெற்று, நாட்டிற்கு விடுதலையையே குறிக்கோளாகக் கொண்டுள்ளது. 1857-ம் ஆண்டில் கிளர்ந்த மாத்ரு-முக்தி என்ற முதல் விடுதலைப் போராட்ட இயக்கத்தின் நூற்றுண்டு விழாக் கொண் டாட்ட தருணத்தில் அதைப் பற்றி ஸம்ஸ்கிருதத்தில் சில

120. A V 1947லும் தனியாகவும் பிரசுரிக்கப்பட்டது.

நூல்கள் வந்துள்ளன. வாசுதேவ சாஸ்திரி வாகேவதீகர் இயற்றியுள்ள 'கிராந்தி யுத்தம்' ஒன்று. இந்தப் போராட்டத்தில் ஈடுபட்ட வீரர்களின் பெருமையைப் பற்றிய மற்றொரு 'கிராந்தி-வீராணும் அத்புத கதா' (எம். வி. மே. 1957.)

அரசியல் நிலைமையைச் சர்ச்சை செய்யும் பல கட்டுரைகள் சஞ்சிகைகளில் வந்துள்ளன. தேசிய முக்கியத்துவமுள்ள வேறு விஷயங்களும் கவனிக்கப் பெற்றுள்ளன. தேச மக்களின் பழக்க வழக்கங்கள் நியதி களுடன் கூடியனவாக இருக்கவேண்டுமென்பது, சுதேசிப் பிரச்னை, மேலநாட்டு பொருட்களின் பகிஷ்கார இயக்கம், இந்தியாவில் அன்னிய சோப்புக்கள் திணிக்கப் படுவது முதலியவை பற்றிய கட்டுரைகள் இவ்வகையில் குறிப்பிடத் தக்கவை. "வைதேசிக-வாணிஜ்யம், பாரத தேசீயா: தர்மஸ்ச" என்பது அதன் பெயர். காந்தி யைப் பற்றிய ஒரு கவிதை "ஸ்ரீ" என்ற சஞ்சிகையில் வந்துள்ளது. பாமர மக்களின் நிலைமையைத் துருவி கிருஷிகர்களுக்கு ஒத்தாசை புரிந்து, மக்களுக்கு அதி காரத்தை மாற்றுமாறு கோரும் ஒரு விண்ணப்பம் சமஸ் தானாதிபதிகளுக்கு 1939-ல் ஸம்ஸ்கிருதத்தில் செய்யப் பட்டுள்ளது. 'தேச தாசா' என்பது 1942-ல் இயற்றப் பெற்ற ஒரு பாடல். நாடு எல்லா வகைகளிலும் ஏற்றம் காண்பதற்கு வேண்டுவது என்னவென்பதை அது விவரிக்கிறது. விநோபா பாவேயின் பூதான இயக்கத் தைப் பற்றி ஒரு பாடல் பாரதி (1953) சஞ்சிகையில் வந்துள்ளது. 'பூதான சதுச்லோகி கீதா' என்பது அதன் பெயர்.

காந்தி சூத்திரங்களைப் போல ராம்ராயின் ராஷ்ட்ர ஸ்மிருதி, (121) கிராமிய மகிமையைப் பற்றியது. கச்சித மான உரைநடையில் கட்டளைகள் ரூபத்தில், கம்பீரமான ஒவ்வொரு தேசபக்தனும் தனக்குத்தானே சொல்லிக்

121. அஹ்மதாபாத் 1950.

கொள்ள வேண்டிய வகையில், அவை தயாரிக்கப்பட்டுள்ளன.

விடுதலை இயக்கக் கிளர்ச்சிகளுக்கும், கூட்டங்களுக்கும் சங்கீதத்தின் போஷணை தேவைப்பட்டது. தொண்டர்களையும், பொதுமக்களையும் ஊக்குவித்துச் செயலில் ஈடுபடுத்த தேசியப் பாடல்களும், இசையும் பணிபுரிந்தன. புதிதாக வந்த நாட்டுப் பாடல்களுடன் ஸம்ஸ்கிருதமும் தன் பகுதியைச் செலுத்தியது. மாயூரம் விசுவநாத சாஸ்திரி என்ற சாகித்ய கர்த்தா தென்னிந்தியாவின் 'பாரத பஜனம்'[122] என்ற பாடல் தொகுப்பை வெளியிட்டார். அவர் கையாண்ட ஸம்ஸ்கிருத சைலி ஜனரஞ்சிதமானது. ஹிந்துஸ்தானி, கர்நாடக இசை மெட்டுகளை அமைத்துப் பாடல்களை உருவகப்படுத்தியதால் பரவலாக அவை உபயோகிக்கப்பட்டன. சாகித்ய வைபவா என்ற பெயரில் மதுராநாத சர்மா சில தேசகீதிகளைச் சேர்த்துப் பிரசுரித்துள்ளார்.

சுதந்திர உதயத்தை கவிஞர்கள் ஸம்ஸ்கிருதத்தில் போற்றி உள்ளனர். தேவகி நந்தன சர்மாவின் 'சுதந்திர பாரதா' (எஸ். ஆர். ஆகஸ்டு, 1947) 'ஸ்வராஜ்யகேது' (விடுதலையின் ஒளியும் கொடியும்) என்ற பெயரில் இந்தக் கட்டுரையாளர் எழுதி சென்னை 'ஹிந்து' பத்திரிகையில் முதல் சுதந்திர தின விழாவின்போது வெளியான கவிதை. குன்ஹன்ராஜாவின் 'பாரத பிரசஸ்தி' (அடையாறு புத்தகாலய புல்லட்டீன், பிப்ரவரி, 1950) பெங்களூர் எம். ராமகிருஷ்ண பட் இயற்றிய 'ஸ்வாதந்தர்ய ஜோதிஸ்' ஆகியவை குறிப்பிடத் தக்கவை. தேசியக் கொடியையும், சர்க்காவையும் பற்றி பண்டித பிரபுதத்த சாஸ்திரி கவிதைகளைப் புனைந்துள்ளார்.

மகாத்மாவின் சோக மயமான முடிவு பல இரங்கற்பாக்களுக்கும், நீண்ட கவிதைகளுக்கும் காரணமாக

122. மதருஸ் 1948.

இருந்தது. இக்கட்டுரையாளரின் 'மகாத்மா'[123] அமர சந்த்ராவின் 'மகாத்மா' (எஸ். எஸ். பி. பி. பிப்ரவரி, 1948), "ஹா, விசுவவந்திய காந்தி" என்ற பெயரில் சுதாகர் இயற்றிய பாடல் (எஸ். ஆர். பிப்ரவரி, 1948), கே. எல். வி. சாஸ்திரியின் 'மகாத்மா விஜயா'[124], ஜி. வி. ஜாலாவின் 'சிரத்தாஞ்சலி'[125], வி. நாராயணன் நாயர் எழுதிய 'மகாத்மா நிர்வாண'[126], பத்ரிநாத ஜா[127] இயற்றிய 'சோக சுலோக சதகம்' ஆகியவை காந்திஜி யின் மரணத்தினால் தேசத்தில் படர்ந்த இருளையும், தேச பிதா காலமானதால் மக்களுக்கு ஏற்பட்ட பெரு நஷ்டத் தையும் கூறுகின்றன.

சுதந்திர இந்தியாவின் அரசியல் சட்டத்தை ஸம்ஸ் கிருதத்தில் இயற்ற வேண்டுமென்ற கருத்து தோன்றி அதற்கு வேண்டிய ஆரம்ப நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டவர் டாக்டர் குன்ஹன்ராஜா. 'பாரத–ராஷ்டிர– சங்கடன'[128] என்ற தலைப்பில் அரசியல் சட்டத்தில் சில பகுதிகளை ஸம்ஸ்கிருதத்தில் மொழி பெயர்த்து ஒரு நகலை அவர் தயாரித்தார். இவ்வகையில் சர்க்கார் நியமித்த கமிட்டி தனது பணியைத் துவக்கும் முன் ஜி. கிருஷ்ண மூர்த்தி என்ற பெஜவாடா வக்கீல் 8–1–1949 வரை அரசியல் நிர்ணய சபை நிறைவேற்றியிருந்த ஷரத்துக் களை ஸம்ஸ்கிருதத்தில் ஆக்கியிருந்தார்.

தேசம் விடுதலை பெற்ற பிறகு, காஷ்மீரில் தலை தூக்கிய பரபரப்பான நிகழ்ச்சிகள் உட்பட பின்னர்

---

123. மதராஸில் 1948–ல் வேதாந்த கேஸரியிலும் தனியாக வும் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

124. பாலக்காடு 1949.

125. வந்தே மாதரத்திலும், சுஷமா தொகுப்பிலும் 1955.

126. திருச்சூர் 1954–ல். ஆசிரியரின் விரிவுரையுடன்.

127. தர்பங்கா 1953.

128. அடையாறு நூல் நிலையம் 1948.

உருவான அரசியல் நிகழ்ச்சிகளை எல்லாம் ஷேக் அப்துல்லா சிறைப்பட்டது உட்பட, எல்லாவற்றையும் என். பீமபட் நாடக பாணியில் "காஷ்மீர–சந்தான–சமுத்யமா"[129] என்ற பெயரில் அமைத்து வெளியிட்டார்.

சுதந்திர இந்தியாவின் பிரச்னைகள் பலவற்றை ஸம்ஸ்கிருத சஞ்சிகைகள் சர்ச்சை செய்துள்ளன. காங்கிரஸ் ஆட்சியின் குறைபாடுகள், லஞ்சம், கள்ள மார்க்கெட் போன்ற சீர்கேடுகள், சுதேசியக் கல்வியையும் பண்பாடுகளையும் ஊக்குவிக்காமல் இருக்கும் போக்கு இவற்றுக்கெல்லாம் வருந்தி 'ஸ்வாதந்தர்ய ஆபாசா' (போலி சுதந்திரம்) என்ற கட்டுரையை ஸம்ஸ்கிருத பவிதவ்யம் என்ற சஞ்கையில் பி. கர்மல்கர் சாஸ்திரி (21–8–54) வெளியிட்டுள்ளார். ஸம்ஸ்கிருதத்தின் இப்போதைய நிலவரத்தைப்பற்றி மீண்டும் பலர் கட்டுரை எழுதியிருக்கின்றனர். ஸம்ஸ்கிருதத்தைப் பற்றிய கவிதைகள் தெளிவாகியுள்ளன, இன்னும் வந்துகொண்டிருக்கின்றன. ஒருபுறம் ஆங்கிலமும், மற்றொருபுறம் பிரதேச மொழியும் இருக்க, அவற்றிடையே உள்ள ஸம்ஸ்கிருதத்தின் கதியைப்பற்றி 'விஞ்ஞான சிந்தாமணி' என்ற ஒரு நாடகம் எழுதி பிரசுரிக்கப் பெற்றது. அதே வகையில் பல இலக்கியப் பணிகள் நடைபெறுகின்றன. 'ஸம்ஸ்கிருத - வாக் - விஜயா என்ற பெயரில் ஒரு 5 அங்க நாடகத்தை ஸம்ஸ்கிருதமும் ஹிந்தியும் கலந்த மணிப்பிரவாளத்தில் பிரபுதத்த சாஸ்திரி (டில்லி, 1942) வெளியிட்டுள்ளார். காசி கிருஷ்ணமாச்சாரியா இயற்றியுள்ள 'பாரதீ - சப்தக - திரயா,' ஆர். வி. கிருஷ்ணமாச்சார் (கும்பகோணம், 1926) இயற்றிய - "வாணி விலாபம்" என்பவை ஸம்ஸ்கிருத கவிதா தேவியின் பரிதாபகரமான நிலைமையை விவரிக்கின்றன. சஞ்சிகைகளில் இத்தகைய கட்டுரைகள் நிறைய வெளிவந்துள்ளன.

---

129. AV பெங்களூர் XI–XII 1952–53.

கவலையுடன் கூட ஒரே திசையில்தான் ஸம்ஸ்கிருத உலகம் இன்று தன் கண்ணோட்டத்தை திருப்பி யிருக்கிறது. சாகித்ய அகாதெமியும், ஸம்ஸ்கிருத போர்டு தோற்றுவித்துள்ள ஸம்ஸ்கிருத கமிஷனும்[130] என்ன செய்யப் போகின்றன என்பதுதான் அவற்றின் ஒரே கவலை.

ஸம்ஸ்கிருதம் உறங்கிக்கொண்டிருக்கவில்லை. பழைய பேரிலக்கிய பணிகளில் ஏதோ எழுதுவதுடன் நின்றுவிடவில்லை; மாறிவரும் உலகில் ஸம்ஸ்கிருத அபிமானிகள் தமது பங்குக்குரிய பணியாற்றி தமது கருத்துக்களையும், விமரிசனங்களையும், அபிலாஷைகளையும் வெளியிட்டு வருகிறார்கள் என்பதை இந்த வரலாற்றில் கூறியுள்ளேன்.

## ஸம்ஸ்கிருதத்தின் எதிர்காலம்

ஸம்ஸ்கிருத மொழியை ஜீவ சக்தியுடன்கூட வைத்துக் காப்பாற்றுவதற்கு ஸம்ஸ்கிருத அபிமானிகள் பெருமுயற்சி செய்து வருகின்றனர். நமது தொன்மையான ஞானமும், கலாசிருஷ்டிகளும் புதைந்து கிடக்கும் பேரிலக்கியப் பெட்டகம் என்று மதித்துக் காப்பாற்றுவதுடன் அவர்கள் திருப்தியடையவில்லை. புதை பொருள் ஆராய்ச்சி வகையில் சர் வில்லியம் ஜோன்ஸ், மாக்ஸ் முல்லர் வெளியிட்ட கருத்துக்களை எடுத்துக் கூறுவதுடனும் நின்றுவிடவில்லை. பழம் பெருமையை பாடிக் கொண்டும் இருந்தால் ஒரு மொழிக்கு ஜீவ சக்தி வந்துவிடாது என்பதை அவர்கள் உணர்ந்துள்ளனர். தான் வாழும் காலத்தில் அதை உபயோகப்படுத்தி அதிலே முதல் நூல்களை இயற்றுவதன் மூலமாக மட்டுமே இந்த அந்தஸ்து அதற்கு உறுதியாகும் என்பதை அவர்கள் உணர்ந்து உள்ளனர். பண்டிதர்கள் மட்டுமின்றி ஆங்கிலத்தில் கல்வி பயின்ற ஸம்ஸ்கிருத அபிமானிகளும் இப்

---

130. இந்த கமிஷனின் யாதாஸ்து இப்போது பிரசுரிக்கப் பட்டு வருகிறது. அரசாங்கம் இதன் சிபாரிசுகளை கவனித்து வருகிறது.

போது தாராளமாக ஸம்ஸ்கிருதத்தில் எழுதுகிருர்கள்; பேசுகிருர்கள். எம். ஏ. பட்டங்களுக்குரிய ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதுவோர் ஸம்ஸ்கிருதத்தை பயன்படுத்துகிருர்கள். ஸம்ஸ்கிருத மகாநாடுகள் ஒழுங்காக நடைபெறுகின்றன. ஸம்ஸ்கிருதத்தை எளிதாக்கி போதனு முறையை சீர்திருத்தும் நோக்கத்துடன் முயற்சிகள் நடைபெறுகின்றன. பயில்வதற்குச் சிரமான மொழி என்ற விவாதத்திற்குப் பதிலாகவே இந்தப் புது முயற்சி நடைபெறுகிறது. ஸம்ஸ்கிருதப் பணியைப்பற்றி பல ஸம்ஸ்கிருத நூல்களும், வெளியீடுகளும் வந்துள்ளன. ஸம்ஸ்கிருதந்தான் தாய்மொழி என்று பலர் முந்தைய ஜன கணிதியில் குறிப்பிட்டுள்ளனர். தமது பல ஜோலிகளிடையே முன்னர் இந்திய சர்க்காரில் நிதி மந்திரியாக இருந்த ஸ்ரீ தேஷ்முக் உட்பட பலர் ஸம்ஸ்கிருதத்தில் எண்ணவும், எழுதவும் தமது சக்தியைப் பயன்படுத்தி புது சிருஷ்டிகளை உற்பத்தி செய்து வருகின்றனர்.

ஸம்ஸ்கிருதத்தில் காணப்பெறும் இந்தப் புதிய உணர்ச்சியின் பிரதான அம்சம், மேலைநாடுகளின் கருத்துக்களும், இலக்கிய வடிவங்களும் அதன்மீது மோதி, புது சிருஷ்டிகளை ஊக்குவித்து வருவதுதான். கூடவே பிராந்திய இலக்கியங்களுடன் நெருங்கிய உறவு முறையை ஸம்ஸ்கிருதம் ஏற்படுத்திக்கொண்டு வருகிறது. தற்கால இந்தியாவின் சிந்தனைகளையும், ஆசாபாசங்களையும் பிரதிபலித்து அது பணியாற்றி வருகிறது. இந்த வளர்ச்சிப் பணியில் குறிப்பிடத்தக்க சில அம்சங்கள் உண்டு. பிற இந்திய மொழிகளைப்போலவே ஸம்ஸ்கிருதமும் ஓரளவு ஆங்கிலச் சொற்களையும், பிறமொழிச் சொற்களையும் எடுத்துக்கொள்ளத்தான் வேண்டும். ஆனல் தொழில் நுட்ப இலக்கியத்தில் ஒரு தொன்மையான மரபு இருந்து வருவதன் காரணமாக, புதிய சொற்கட்டுக்கு வேண்டிய செழுமை, மொழியில் தாதுக்களுக்கு இருப்பதன் விளைவாக, ஸம்ஸ்கிருதத்தில் புதிது புதிதாக எழுது

கிறவர்கள் இப்போது இருப்பதை விட இன்னும் சிறப்பான, கண்ணியம் நிறைந்த சமன்வயத் தன்மை உள்ள தான சொல்லாட்சியையும், சைலியையும் உருவாக்குவதற்குப் பாடுபட முடியும். சில வட இந்திய ஸம்ஸ்கிருத சஞ்சிகைகள் அநாகரிகமான சில ஸம்ஸ்கிருதப் பிரயோகங்களைப் பயன்படுத்துகின்றன. உதாரணமாக சர்க்காரஸ்ய (சர்க்காருடைய) கார்தா (கார்டு) பிலம் (மசோதா) போன்றவை தவிர்க்க வேண்டிய சொல்லாட்சிகள். ஸம்ஸ்கிருத சஞ்சிகைகளிலும், கட்டுரைகளிலும் காணப்பெறும் சில சொற்களைப் பார்ப்போம். கள்ள மார்க்கெட்டுக்கு கிருஷ்ண ஆபணு, உயர்தரக் கல்விக்கு உச்ச சிக்ஷணு, பகிரங்க கடிதத்திற்கு அநாவிருத பத்ரா, இணைப்புக்கு லிவின்கரணு போன்ற பத உபயோகங்கள் சிறப்பானவை அல்ல. இவற்றுக்குப் பதிலாக இன்னும் நல்ல சொற்றொடர்களை உருவாக்க வேண்டும். பிரதேச பாஷைகளில் ஸம்ஸ்கிருத தத்பவ, தத்சம ஆகிய இரண்டையும் கொண்டுள்ள விசேஷ முயற்சியின் மூலம் உருவாகியுள்ள சொற்கள் நாட்டின் பல்வேறு பாகங்களில் புழக்கத்தில் இருந்து வருகின்றன. இவற்றை ஒரு வரையறைக்குட்படுத்திப் பிரயோகத்தை நிர்ணயம் செய்ய வேண்டும். இந்தியா என்ற பெயரையும் இந்தியாவிலுள்ள பல்வேறு ஊர்களின் பெயர்களையும் அப்படியே ஸம்ஸ்கிருத்தில் பிரயோகிக்க வேண்டியதில்லை. பிரிட்டிஷார் காலத்தில் புகுத்திவிடப்பட்ட தவறுகளையும், சிதைவுகளையும் அகற்ற வேண்டும். ஐரோப்பாவில் எந்த ஊரின் பெயரையும் ஆங்கிலத்தில் எழுதுவதுபோல எழுதுவதில்லை, உச்சரிப்பதில்லை. சிறகொடிந்த ஆங்கில வடிவங்களை ஸம்ஸ்கிருதத்தில் அப்படியே ஆக்குவதும் அவற்றுக்கு ஸம்ஸ்கிருத அடைமொழிகளைச் சேர்ப்பதும் ஆபாசமாகவே தென்படுகிறது. இதை அகற்றிவிட வேண்டும்.

தமது சொந்த தாய் மொழிகளுக்குள்ள செல்வாக்கின் காரணமாக பல வட இந்திய ஸம்ஸ்கிருத வல்லுநர்கள்

கலப்பற்ற அனுஷ்டுப் சந்தத்தைக் கையாள முடியாது, அடிக்கடி பிரமாணிக முறைக்கு சரிந்து விடுகின்றனர். ஒரு மெய்யெழுத்தும் இணைப்புமாக சேர்ந்து வருகையில் சீரைச் சிதைத்து இது பாழ்படுத்துகிறது. பின்வரும் சொல்லை இணைத்துக் கையாள்கையில் சந்தியின்றி ஒரு சிறிய ஒத்துடன் கூட பிணைக்கப் பார்க்கிறுர்கள். ஸம்ஸ் கிருதத்தில் இன்னும் தீவிரமாக இலக்கியப் பணியாற்றி நல்ல ஸம்ஸ்கிருதத்திற்கு நமது காதுகளை பழக்கப்படுத் திக்கொள்ள வேண்டும். ஸம்ஸ்கிருதக் கல்வி பரவ லாகவோ, தீவிரமாகவோ இல்லாத சூழ்நிலையில் இலக் கியப் பணி நடைபெறுகையில் இலக்கணப் பிழைகள் மலிந்து விடுகின்றன. இப்படி இருந்துங்கூட எழுது வோரில் பெரும்பாலோர் சரியாகவே எழுதுவது ஆச்சரியமாக இருக்கிறது. நேரிடையான, சுலப மான ஓர் உரைநடைச் சைலி உருவாகியிருப்பது திட்டவட்டமான ஓர் அனுகூலந்தான். ஆனல் சொற் செழுமை, நலம், சொற்கட்டு ஆகியவை ஆங்கில பாணி யில் இருப்பது குறைய வேண்டும். மொழியின் மேதைக்கு ஏற்ப அவை உருப்பெறுதல் வேண்டும். பாணனது காலத்திற்கு முன்னர் தொடக்க காலத்து பாஷ் யங்களில், தொடக்க கால நாடகங்களில், கதை இலக் கியங்களில், நல்ல வளமான சொல்லாட்சி இருக்கிறது. சிக்கல் அதிகமாக இல்லாத சைலியும் காணப்பெறுகிறது. இவற்றை இப்போது. மீண்டும் பிரயோகத்திற்குக் கொண்டுவரலாம். சிறிய பாடல், சிறுகதை, நீண்ட கதை, குறு நாடகம், நீண்ட நாடகம், கட்டுரை, ஆராய்ச்சி, பிரயா ணக்கட்டுரைகள் போன்ற இலக்கிய வடிவங்கள் எல்லாம் பழைய பெருமைக்கேற்ப தயாராகி செயலாற்ற முடியும்.

ஓர் அங்கத்துக்குள் காட்சிகளாக நாடகத்தைப் பிரிப் பது மேலை நாட்டு நாடகங்களின் வழியைப் பின் பற்றியது. இது அவ்வளவு பெரிய முக்கியத்துவமுள்ள புதுமை அல்ல. ஸம்ஸ்கிருத நாடகத்தின் பொதுப்படை

யான திட்ட வட்டத்திற்கு உட்பட்டே இத்தகைய அம்சங்களையெல்லாம் புகுத்த முடியும். வெற்றுச் சொற்களையெல்லாம் களைந்து ஸம்ஸ்கிருத நாடக அரங்கில் புதிய ஜீவசக்தியுடன்கூட அமைத்துத் தருவது அவசியந்தான். பாத்திரங்கள் இன்னும் புஷ்டிகரமாக இருக்க வேண்டும். நாடகக் கதையில் நடிப்பு அதிகமாக பரிமளிக்க வேண்டும். மிகச்சிறந்த நாடக அமைப்புக்கு என்று தனியாக உத்திகளும், தத்துவங்களும் இருக்கின்றன. மேலைநாடுகளிலேயே துன்பியல் நாடகத்தின் அடிப்படையே மாறி வருகிறது. நாடகத்தின் அடிப்படை நோக்கம் என்னவென்பதை எலியட் போன்றோர் விவரிக்கையில் பரதரும், ஆனந்த வர்த்தனரும் என்ன அடிப்படையை நிர்ணயித்து இருக்கிறார்களோ, அதையேதான் கூறுகின்றனர். எனவே மேலைநாடுகளிலேயே கூட, காலத்திற்கு ஒவ்வாதது என்று புறக்கணிக்கப்பட்டு வரும் பாணிகளை நாம் அப்படியே பின்பற்ற முற்படுவதற்கு முன், சிந்தித்துப் பார்க்க வேண்டும். கலை மதிப்புள்ள அம்சங்களை எடுத்து ஜீரணித்துக் கொள்ள வேண்டும். ஆனால் அப்படிச் செய்கையில் அது ஸம்ஸ்கிருத மரபுடன் ஒன்றிவிடுவதாக இருக்க வேண்டும். காளிதாசன் வழி காட்டியிருக்கிறான். அதைப் பின்பற்ற வேண்டும். 'பழையது என்பதன் காரணமாக எதற்கும் மதிப்புத் தரக்கூடாது. புதியது என்பதற்காக எதையும் புறக்கணிக்கலாகாது. அதில் உள்ளூறக் காணப்பெறும் நல்ல அம்சங்களைக் கொண்டே மதிப்பிட வேண்டும்'. 'தகுதி தான் பிரதானம். யாரிடமிருந்து வருகிறது என்பது முக்கியமல்ல; கூறப்பட்டுள்ள விஷயமே முக்கியம்' என்று கூறியுள்ளார் சக்தி பத்திரர். ஸம்ஸ்கிருதம் தொன்றுதொட்டு பணியாற்றி வந்துள்ளது. புதிய சாதனைகளின் மூலம் மீண்டும் அது இலக்கியச் சிருஷ்டி வளமுள்ள மொழியாக வெளிப்போந்து பிரகாசிக்கும்படிச் செய்ய வேண்டும்.

# ஸிந்தி இலக்கியம்

எல். எச். அஜ்வானி

## மொழி

டாக்டர் டிரம்ப் 1872-ல் வெளியான "இலக்கணம்" என்ற தமது நூலில் கூறினர்: "ஸிந்தி மொழியானது பிற வட இந்திய மொழிகளைப் போல அன்னியச் சொற்களின் கலப்பு அவ்வளவாக இல்லாத, தூய ஸம்ஸ்கிருத வழி பாஷை. எந்த அபபிரம்சத்திலிருந்து ஸிந்தி பிறந்ததோ அது பிராகிருதங்கள் அனைத்திலும் மட்டமானது என்று இலக்கண வல்லுநர்கள் கருதினர். ஆனல் மற்ற சகோதர மொழிகளுடன் ஒப்புநோக்கி, இலக்கணக் கண்ணேட்டத்துடன் மதிப்பிட்டால், முதலிடம் ஸிந்தி மொழிக்குத்தான் கிடைக்கும்"[1]. டாக்டர் டிரம்புக்கு முன்னமேயே "ஸிந்தி இலக்கணம்" என்ற நூலை காப்டன் ஜார்ஜ் ஸ்டாக் வெளியிட்டார். "ஸிந்தி மொழியானது கோமாளிகளுக்குத்தான் ஏற்றது என்று கருதும் போக்கை அவர் கண்டித்தார். பிற இந்திய மொழிகளை விட ஸிந்திதான் மொழித்துறை ஆராய்ச்சியினருக்கு அதிக ருசிகரமாக இருக்கும்" என்று அவர் கூறினர். உருபிடைச் சொல், பெயர் பிரதிச் சொல் ஆகியவைகளைச் சொற்களால் இல்லாமல் அடையாளங்களால் குறிப்பிடும் வழக்கம், செயப்பாட்டு வினையின் அமைப்பு எவரையும்

---

1. பீடிகை முதல் பக்கம்.

சுட்டிக் கூறாத சொல்லமைப்பு, காரண வினைச்சொல் இரட்டிப்பது போன்ற அம்சங்கள் பிற இந்திய மொழிகளில் இல்லாத ஒரு தனி அழகை ஸிந்தி மொழிக்கு அளிக்கின்றன.[2]

இப்போது பழக்கத்திலிருந்து வரும் ஸிந்தி லிபியை 100 ஆண்டுகளுக்கு முன்னர் பிரிட்டிஷ் ஆட்சியாளர் உருவாக்கினர். அது அரபி லிபியைப் போன்றது. ஸம்ஸ்கிருதத்திலிருந்து ஸிந்தி வந்தது என்ற உண்மையை லிபியின் வடிவம் மறைக்கின்றது. தனி இந்திய பாஷையாக உருவான எல்லாப் பிராகிருத மொழிகளிலும் ஸிந்தியே மூத்தது என்பதை இது மறைக்கின்றது. ஸிந்தி சொற்களின் மூலாதாரத்தைப் பற்றி அப்துல் கரீம் சந்தேளோ ஒரு நூலை அண்மையில் வெளியிட்டுள்ளார். ஸம்ஸ்கிருதத்திலிருந்துதான் பெரும்பாலான ஸிந்திச் சொற்கள் வந்தன என்பதை அது ருசுப்பிக்கின்றது.[3] அதே சமயத்தில் ஸிந்தி மொழிச் சொற்கள் கலப்படம் மிகுந்தவை என்பதை ஒப்புக்கொண்டுதாகை வேண்டும். பாரசீக, அரபி மூலங்களிலிருந்தும், திராவிட மொழிகளிலிருந்தும், ஆரியர் காலத்திற்கு முந்தைய மூலங்களிலிருந்தும் வந்த ஆயிரக்கணக்கான சொற்கள் ஸிந்தியில் இருக்கின்றன.

முஸ்லிம் படையெடுப்பாளர் கைப்பற்றிய முதல் இந்திய மாகாணம் ஸிந்துதான். (கி. பி. 712). அதற்கு முன்னரேயே கிரீஸ், ஈரான், சிதியா, ஆப்கானிஸ்தான் ஆகியவற்றிலிருந்து வந்த தாக்குதல்களை அது சமாளிக்க வேண்டி நேரிட்டது. பல நிறத்தவர், தேசிய இனத்தவரது ரத்தம் ஸிந்திகளின் உடலில் ஓடுகிறது. தீண்டாமை, கடல் கடந்த பயணத்துக்குத் தடை முதலியன அவர்கள் விஷயத்தில் என்றுமே இருந்ததில்லை. பாலைவனங்களை

2. ஸிந்தி மொழியைப்பற்றிய ஆராய்ச்சி நூல் 1956.77-வது பக்கம் பேருமல் மிஹிர் சந்த் இயற்றியது.

3. தாதீக் லுகாத் ஸிந்தி (1955).

யும் நீள்கடல்களையும் கடந்து சென்று வேறு எந்த இந்தியனும் முன்னர் அடியெடுத்து வைத்திராத ஒதுக்குப் பிரதேசங்களில் தனியாக வேரூன்றினர். எனவே பல்வேறு நாடுகளிலிருந்து வந்த திசைச் சொற்கள் அவர்களுடைய மொழியை வளப்படுத்தியிருப்பது இயல்பே.

வரலாறு தெரிந்த காலம் வரை எட்டிப் பார்க்கையில் ஸிந்திகள் நாகரிக மக்களாகவே வாழ்ந்து வந்திருப்பது புலனாகும். அந்த நாகரிகம் ஸிந்து மொழியிலும் இலக்கியத்திலும் காணப்பெறும் என்றுதான் மக்கள் எதிர்பார்ப்பர். ஆனால் ஸிந்துவின் சரித்திரம் மொகேன்-ஜொ-தாரோவை (மரித்தவர்களின் மேடு) அடுத்தடுத்து நிகழ்ந்தேறிய சங்கிலித் தொடர்தாம். இந்த மேடுகளின் கீழ் ஒவ்வொரு நாகரிகமும் அடுக்கடுக்காகப் புதைந்து கிடக்கின்றன. பாறாங்கல், சலவைக்கல், சித்திரம், கவிதை ஆகியவை இந்த நாகரிகங்களின் அருமை பெருமைகளைக் கூறவில்லை பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு ஒரு ரகல்தாஸ் பானர்ஜி தோன்றி, மேடுகளைத் தோண்டி, மறைந்துவிட்ட பழங்காலத்தின் சின்னங்கள் சிலவற்றைக் கண்டுபிடிக்கும் வரை ஸிந்தி சரித்திரமே இருந்ததில்லை. ஸிந்து நதியின் கரைகளும் படுகையும் எப்பொழுதும் மாறிக்கொண்டே இருப்பவை. பாலைவனம் படர்ந்ததற்கு இதுவே காரணம்.

## கவிதை

### ஷாவும் பின் வந்த கவிஞர்களும்

ஸிந்தி இலக்கியத்தில் உண்மைக் கவிஞர் என்று முதலில் ஒருவரைக் குறிப்பிடக்கூடிய நிலைமை பதினேந்தாம் நூற்றாண்டின் இறுதியில்தான் வாய்த்தது பற்றி ஆச்சரியப்படுவதற்கு இல்லை. அரபு ஆட்சிக் காலத்தில் இங்குமங்குமாக சில பாடல்கள் புனையப்பெற்றன. அதற்கு முன்னர் டோடோ—சனேஸர் போன்ற கட்டுக் கதைகளும், பாட்டுப் புதிர்களும், மாரூயி சோதிட

கவிதைகளும் நாட்டுப்புறத்தில் வழங்கி வந்தன. ஆனல் முதன் முதலாக எழுத்தில் வரையப்பெற்ற பாடல்கள் காஜி கஜானின் பாடல்கள் தாம். பதினைந்தாவது நூற்றுண்டின் இறுதியில் தோஹா சந்தத்தில் அவை உருப்பெற்றன. அன்புக்கு உரியவரைக் காணுமல் (ஆண்டவனை அடையாமல்) வெளிக்கு மட்டும் திறன் பெற்று விளங்குவதுமான, புலமையும் பக்தியும் பயனற்றவை, சர்வநாசத்தில் கொண்டுபோய் விடக்கூடிய அரக்கத் தன்மை படைத்த தகுதிகள் என்ற விஷயம் இடைவிடாது ஸிந்திக் கவிதையில் காணப்பெறுகிறது. காஜி கஜான் ஒரு யோகியைப்பற்றி நன்றியறிதலுடன் பாடுகிருர். மன உறக்கத்தினின்று தம்மைத் தட்டி எழுப்பியதாகச் சொல்லி அவரைப் பாராட்டுகிருர். ஸிந்தி கவிதையின் தனி விசேஷம் ஹிந்து சித்தாந்தம், முஸ்லிம் நம்பிக்கை என்ற இரு நதிகளும் ஒன்று சேர்ந்து 'ஸூபி' கவிதை என்று மக்கள் நன்கு அறிந்துள்ள நீரோட்டம் பெருக்காகக் காட்சி அளிப்பதுதான்.

கபீர், சைதன்யர், நானக், துகாராம் போன்ற தெய்வக்ஞர்களான மகாத்மாக்களைத் தோற்றுவித்த மாபெரும் விழிப்பும் இயக்கமுந்தான் காஜி-கஜானது பாடல்களை ஊக்குவித்தவை. ஸிந்துவில் இந்த இயக்கம் உச்ச நிலையை அடைந்தது 'பீட்'டைச் சேர்ந்த ஷா அப்துல் லத்தீபின் (1689–1752) கவிதையில்தான். நிஸாலோ என்ற அவரது கவிதைத் தொகுப்பு உலகப் பேரிலக்கியங்களில் ஒன்று. ஸிந்தி மக்களின் மதிப்புயர்ந்த இலக்கிய வரலாற்றில் இது மிகச் சிறந்தது. ஷா அப்துல் லத்தீபின் முப்பாட்டன் ஷா-அப்துல்-கரீம் என்பவர் (1538–1623). அவர் பூல்ரியைச் சேர்ந்தவர். அவரும் அவரது மரபினரும் இயற்றிய சித்தாந்தப் பாடல்களை ரிஸாலோவில் இணைத்துள்ளார். ஷா அல்லது மன்னர் என்று அழைக்கப்பெற்ற ஷா அப்துல் லத்தீப் இயற்கையைப் பாடும் கவிஞர், கதை சொல்பவர், தெய்வத்தில் ஆழ்ந்தவர்.

ஸிந்துவையும் அதன் மக்களையும் பற்றி 'சுர்' என்ற வகையில் பாடல்கள் பலவற்றைப் புனைந்துள்ளார். மாபெரும் நதி, அங்குள்ள மீனவர், அண்மையில் உள்ள பாலை, ஒட்டகமோட்டி, அரண்மனையின் காவற் கோபுரங்கள், கிராமப் பெண்கள் செல்லும் கிணறு, பூங்காவில் இளவரசி, பாரசீகம் செல்லும் முத்து வியாபாரி, தறியில் நெய்பவன், சக்கரம் சுழற்றும் குயவன், மழையைக் கண்டு மகிழும் குடியானவன், குதித்தெழுந்து வாளேந்தும் வீரன் ஆகியோரைப்பற்றி அவர் பாடியுள்ளார். இந்த நிலைக்களன்களை வைத்துக்கொண்டு ஸிந்தி வீராங்கனைகளைப்பற்றிய கதைகளை அவர் ஜோடித்துள்ளார். அவை உயர்ந்த உணர்ச்சி பாவமும் சோகமும் கலந்து இழைந்தவை. ஸாஸுயி மாருயி, ஸுஹ்னி, நூரி, லைலா, மூமால் போன்ற பாத்திரங்கள் நல்லபடி சிறக்கின்றவை. அவரது படைப்புக்களில் கதாநாயகிகள்தாம் இருக்கின்றனர், கதாநாயகர்களே இல்லை என்று சொல்லப்படுவதுண்டு. அவரது கதை ஒவ்வொன்றிலும் ஒரு ஆழ்ந்த ஆத்மீகப் பொருள் உண்டு. பாலைவன கீதங்களில் ஒரு தெய்வ ஜோதியைக் காணலாம். எல்லாவகைத் தாழ்நிலைகளும் கரைந்துபோய் காதலன், காதலி, அன்பு மூன்றும் சேர்ந்த திரிவேணிதான் காட்சியளிக்கிறது. மற்றவை மாறி மாறி அற்றுப் போகின்றன. ஆனால் இம்மூன்றும் ஒன்றாக இணைந்து பிரகாசிக்கின்றன. அவர் கையாள்பவை மிக எளிமையான சொற்களே. எனவே அவர் ஒரு மிக சாதாரணக் கவிஞர் என்று சில அந்நியர்கள் தவறாக நினைப்பது உண்டு. ஆனால் துளஸிதாஸ், சூர்தாஸ், ரூமி, ஹபீஸ் போன்ற தெய்வக் கவிஞர்களையும் ஸாஹித்ய கர்த்தாக்களையும் போல அவரும் மிக உயர்ந்தவர் என்று ஸிந்தி மக்கள் மதிக்கின்றனர். உற்சாகம் தரும் ஊற்றாகவும் கலப்பற்ற இன்பத்தை சுரக்கும் சுனையாகவும், குன்றாத நிதியமாகவும் ஷாவை அவர்கள் போற்றி மதிக்கின்றனர்.

ஷாவுடன்கூட அமரர்களான வேறு இரண்டு ஸிந்திக் கவிஞர்கள் ஸசல், (1739–1826) ஸாமி (1743–1850) ஆகியோர். இந்த திருமூர்த்திகளை ஸிந்தி இலக்கியத்தில் எவரும் விஞ்சியதில்லை. ஸசலின் புனைப்பெயர் ஸர்மஷ்ட் (பக்தி வெறி படைத்தவன்). ஸாமிக்கு அந்த புனைப்பெயர் வாய்த்ததற்கு ஸ்வாமி என்ற அவரது குருதான் மூலகாரணம். ஸசல் ஒரே மதி படைத்தவர். சிறிய இசைப் பாடல்களை இயற்றுவதில் அவர் வல்லுநர். அவருக்குக் கதை சொல்லத் தெரியாது. கற்பனைக் காட்சிகளை சொல்லி வைத்துக் காட்டக்கூடியவரும் அல்லர். தெய்வத்தை அன்பின் வடிவத்தில் உணர்ந்து அந்த பக்தி வெளியில் திளைத்து இந்த உலகத்தைப்பற்றிய பிரக்ஞையே இல்லாமல் இருப்பவர். சடங்கும் சம்பிரதாயமும் அவருக்குப் பொருளற்றவை. ஜன்னலில் ஸௌந்தர்ய தேவதையைக் கண்டவன் ஏன் பிரார்த்தனை செய்ய வேண்டும்? ஏன் படிக்க வேண்டும்? ஸசலின் 'கபீ'களில் மதுரம், விருவிருப்பு, பக்தி, பரவசம் ஆகியவை கலந்து காணப் பெறுகின்றன. அவை ஒரு தனி ரகத்தைச் சேர்ந்தவை. எல்லாவகை ஸிந்திகளும் இன்றும் அவற்றைப் பாடுகின்றனர். ஸாமி இயற்றியுள்ள சுலோகங்களில் ஒரு சாந்தமும் அவித்யையை (அறியாமை அல்லது மாயை) களைந்து ஜோதியை அடைவதற்கான வேதாந்த விசாரமும் காணப் பெறுகின்றது. ஷா, ஸசல், ஸாமி ஆகிய மூவரும் கேந்திரமாக வைத்துக் கூறுவது ஒன்றுதான். ஜீவாத்மா பரமாத்மாவை நாடிச் செல்லும் யாத்திரையே அது. சூரிய மண்டலத்திற்கு மீண்டும் திரும்பும் கிரணத்தின் போக்கைத்தான் குறிப்பிடுகிறது அது. மாயை என்கிற குமிழ் வெடித்து திவலை கடலில் கலப்பதுபோல ஆத்மா, பரமாத்மாவுடன் ஒன்றி விடுகிறது.

ஷா, ஸசல், ஸாமி ஆகியோர் செய்த நிர்ணயங்களிலிருந்து ஸிந்தி கவிதை மாறவே இல்லை. அது 'ஸூபி' தன்மை கொண்டது. எந்த தனிப் பிரிவையும் நோக்க

மாகக் கொண்டதல்ல. பலவற்றில் ஆண்டவன் ஒன்றி இருந்து காட்சி தரும் பிரக்ஞைதான் அவற்றில் முழுக்க முழுக்க தோற்றமளிக்கிறது. கடவுளைத் தந்தையாகவும் மனித சமூகத்தை சகோதரத்துவப் படைப்பாகவும் ஸிந்திக் கவிஞர்கள் கருதவில்லை. நான், நீ, அவன் ஆகிய எல்லாமே ஒன்றுதான், என்பது அவர்களுடைய நம்பிக்கை. 'பி' என்பனுக்கு 'ஏ' தீங்கு இழைத்தால் அவன் தனக்குத்தானே தீங்கிழைத்துக்கொள்கிறன். எவ்விதமான தனிமையும் மனிதனது ஆத்மீக வளர்ச்சிக்கு பங்கம் விளைவிக்கிறது. இந்த திருமூர்த்திகளுக்குப் பின்னர் தோன்றிய இலக்கியப் படைப்பாளர்களில் மிகச் சிறந்தவரான 'பேதில்' கூறுகிருர்: "தனியாக பேதில் என்ற பெயரை எனக்கு அளித்திருப்பது வெறும் பாசாங்கு. அவ்வளவும் கண் துடைப்பு." அவர் வேண்டுவதெல்லாம் அன்புடன் ஒன்றிவிடுவதுதான். சடங்கோ இங்கிதமோ அவருக்கு இல்லை. வெட்கம் என்ற உணர்வையே அவர் இழந்துவிட்டார். குறுகிய நோக்கு, ஜாதீயப் போக்கு, பிரிவினை புத்தி முதலியன ஸிந்திக் கவிதையில் அடியோடு இல்லாது வரும் நிலைமையை விசால நோக்கும், 'சூபி' தத்துவ செல்வாக்கும் தோற்றுவித்தன. ஸூஃபி 'லா கூபி' (சமயமோ சடங்கோ இல்லாதவன்) அன்பு வழி மார்க்கம், (ரஹ்-ப்ரீன்-ஜி) தவிர பிற சமயங்களையெல்லாம் நிராகரிக்கிருர் ரோஹல் என்ற கவிஞர். ரோஹல் 1782-ல் காலமானுர். தளபத் 1841-ல் மறைந்தார். மூன்ருவது சமயமாகிய துவேஷம் என்ற மதத்தை உருவாக்கியதற்காக ஹிந்துக்கள், முஸ்லிம்கள் ஆகிய இரு சாராரையும் குறை கூறுகிருர் ரோஹல். தளபத் வெள்ளை மனதுடன் கேட்கிருர்: "காபாவானது கடவுளின் உறைவிடம் என்ருல் தேவதைகள் வைக்கப் பெற்றுள்ள கோயிலைப் புறக்கணிப்பானேன்?" வெவ்வேறு பிரிவுகளாக உலக மக்கள் பின்னப்பட்டிருப்பதற்காக அவர்

வேதனைப்படுகிறார். ஸிந்துவில் சமயங்கள் கலந்து உறவாடியதன் விளைவாக சில விசித்திரங்களைக் காண்கிறோம். ஒரு கோபி தனது அன்பிற்குரிய கிருஷ்ணனிடம் உரையாடுவது போல பாடுகின்றார் ஒரு முஸ்லிம் கவிஞர். ஸிந்தி மக்கள் சாந்தியை நாடுகிறவர்கள், உள்ளொளி பெருவதற்காகத் தவிப்பவர்கள். ஸூபிக் கவிஞர்கள் இடைவிடாது அவர்களுக்கு திருப்தியளித்து வந்திருக்கின்றனர். மேலே சொன்ன அறுவர் தவிர குறிப்பிடத்தக்க பிற கவிஞர்கள் ஹமல்-லகாரி, மூரத், தரியாகான், பேகாஸ் (பேதில் புதல்வன்) ஜீவத் ஸிங் ஆகியோர். ஸிந்தி மொழியினின்று கிளைத்த ஸிரைகி என்ற பாஷையில் இவர்களில் பலர் பாடல்களை இயற்றியுள்ளனர். எல்லைப்புற மக்களது பேச்சின் இனிமையையும், கள்ளங்கபடமற்ற தன்மையையும் இந்தக் கவிதையில் சுவைக்கலாம்.

ஸிந்தி மொழியில் மிகச் சிறந்த ஸூபிக் கவிதை இயற்றப்பட்டது பிரிட்டிஷ் ஆட்சி காலத்திற்கு முன்னர். வடிவத்திலும் விஷயத்திலும் அது அக்காலத்து ஹிந்தி, பஞ்சாபி, பிற வட இந்திய மொழிகளைச் சேர்ந்த கவிதையைப் போன்றது. பிரிட்டிஷார் ஆட்சிப் பொறுப்பை 1843-ல் ஏற்றுக் கொண்ட பிறகு இந்த உறவு முறை முரட்டுத்தனமாக கலைக்கப் பெற்றது. பாரசீக மொழி அரசவை பாஷையாக இருந்த நிலைமை நின்றுவிட்டது. எனவே சாதாரண செய்தி போக்குவரத்துக்கும், கண்யமான இலக்கியப் படைப்புகளுக்கும் தமது சொந்த மொழியை, படித்த வகுப்பினர் பயன்படுத்தலாயினர். ஸிந்தியில் காஸீதா, கஜல், மஸ்னவிஸ், ருபாயத், மூஸாதாஸே, முகாமாஸே போன்ற கவிதா வகைகள் தோன்றின. பிரிட்டிஷ் வெற்றிக்கு முன் பாரசீகக் கவிஞர்களின் அடிச்சுவடைப் பின்பற்றி ஸிந்தி மொழியில் இரங்கற்பாக்களையும் புகழ்ப் பாடல்களையும் இயற்றும் வழக்கம் இருந்தது. இங்குமங்கும் ஸபித் அலி, ஷா

(740–810) போன்ற கவிஞர்கள் இப்பணியில் ஈடுபட்டிருந்தனர். ஆனால் திவான் அல்லது கஜல்களின் தொகுப்பு ஒன்றை ஸிந்தி மொழியில் கலீபா குல் மகமத் (1809–1856) இயற்றிய பிறகுதான் பழைய தோஹா அல்லது அடுக்குப் பாடல்-சந்தம் செல்வாக்கு இழக்கலாயிற்று. குல் மஹாகவி என்று சொல்லக் கூடியவரல்ல. ஆனால் பாரசீக சொல்லலங்காரம், கற்பனைவளம் ஆகியவற்றைப் பயன்படுத்திக் கொள்ள வழி வகுத்துக் கொடுத்தவர் குல். இந்தப் போக்கின் விளைவாக பாரசீக சொற்றொடர்களும், சிறப்பணிகளும், மேற்கோள்களும் ஸிந்தி கவிதையுடன் அதிகமாகக் கலந்து பிரவிருத்திக்கலாயின. குயில், ரோஜா முதலிய பிரஸ்தாபங்கள் மலிந்தன. ரோஜாவும் முள்ளும், விட்டிலும் விளக்கும், செந்நிற மதுவும் மதுவை சேவிப்பவளும், அருவி, நறுமணப் பூங்கா, மான்விழி, மயானத்தின் மரம் முதலியன கவிதைகளில் உலாவலாயின. யூசுப்-ஜுலைகா, லைலா-மஜ்னு, ஷிரீன்-பர்ஹாத் போன்ற கதைகளும் பாடல் விஷயங்களாயின. ஸிந்தியில் பேசுவதை பாரசீகக் கவிதைகளாக திருப்பி முறுக்கி மாற்றியதன் மூலம், மொழியும் இலக்கியமும் கணிசமான நன்மை அடைந்தனவா என்பதைப் பற்றி சந்தேகம் உண்டு. குல் காலமாகி ஒரு நூற்றாண்டு ஆகிறது. ஆனால் மொர்யோ, லாலூ போன்ற அனமதேய கவிஞர்களின் கபீ, பெயிட், வெய், சுர் ஆகியவற்றுடன் ஒப்பிடக்கூடிய கஜல், ருபாயத், காசிதா, முஸாதாஸே போன்றவைகளை ஒரு கவிஞர்கூட இந்த நூறு வருஷங்களில் இயற்றியதில்லை. மொர்யோவும், லாலூவும், ஸாஸுயி புன்ஹூ, ராயி-டியாச், மரூயி, காம்ஸேன் காமரூப் போன்றவைகளைப் பாடியுள்ளனர். பேதில் போன்ற பெரிய கவிஞர்கள் பாரசீக பாணியில் இயற்றியுள்ள கவிதைகளுக்கு அவ்வளவாக மவுசு இல்லை. கலப்பற்ற இசை வடிவங்கள் அல்லது கபீ வகைகளுக்குத்தான் மக்கள் இன்றும் அவரைப் படிக்கிறார்கள். ஸங்கீ (1851–

1924), காகி (லீலா ராம்சிங்) மிர்ஜா காலீச் பெக் (1853–1929), ஹைதர் பக்ஸ் ஜடாய் ("ஹரீஹக்திர்" லீடர்), ஷம்சுதின் புல்புல், லேக்ராய் அஜீஸ் ஆகியோர் சென்ற ஒரு நூற்றுண்டில் ஸிந்தியில் பாரசீக பாணியில் கவிதை இயற்றிய மற்றவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள். ஷம்சுதீன் கஜல்கள் கொண்ட முதல் புத்தகம் 1891-ல் வெளியாயிற்று. இவர்களில் ஒருவர்கூட பெரிய கவிஞர் என்றே மக்கள் விரும்பிய கவிஞர் என்றே கருதப்பட்டவர்கள் அல்லர். திவான் என்ற தொகுப்பு நூலை ஸிந்தியில் வெளியிட்டோர் எண்ணற்றவர்கள். காஸ்ஸிம், பஜீல், வஸீப், களீம் போன்றோர் இவ்வகையினர். அவர்கள் பாடல்களை இயற்ற முயன்று பார்த்தவர்கள் என்று தான் சொல்ல முடியும். உமர்கய்யாம் என்ற ருபாயத்தை பெக் மொழி பெயர்த்திருப்பது, மஸ்ரூரின் முஸாதா பாடல்கள், அபோஜா ஹாலியைத் தழுவி இயற்றிய முஸாதா பாடல்கள், ஸிந்து நதியை நோக்கி ஜடாய் பாடி புகழ்பெற்ற விசேஷப் படைப்பு, ஆகியவைதாம் பாரசீகப் பாணியில் அமைந்துள்ள கவிதைகளில் நிலைத்து நிற்கக் கூடியவை. அண்மையில் பாகிஸ்தானிலும் இந்தியாவிலும் பாரசீக பாணியில் லகு காவியங்களை இயற்றும் போக்கு காணப் பெறுகிறது. பாகீ என்ற நூலை இயற்றிய ஷேக் அய்யாஜ் (பாகிஸ்தான்), பரசுராம ஜியா (இந்தியா) இவ்வகையில் குறிப்பிட வேண்டியவர்கள். அப்ஸர் (அருவி) என்ற பெயருடன் லேகராஜ் அஜீஸ் சமீபத்தில் வெளியிட்ட தொகுப்பு மக்களைக் கவர்ச்சிக்கவில்லை. பாரசீக பாணியில் செயற்கையாக இயற்றப்படும் தழுவல் முறைகளுக்கு செல்வாக்கு இல்லையென்பதையே இது காட்டுகிறது.

### தற்காலக் கவிதை

புதிய ஸிந்து மாகாணம் முப்பது ஆண்டுகளுக்கு முன் பிறந்தபோது தற்கால ஸிந்தி கவிதையும் உதய

மாயிற்று. மொகேன்-ஜொ-தாரோவின் கண்டு பிடிப்பு, சுக்கூர் அணையின் கட்டுமானம் ஆகியவை அப்போது தான் தொடங்கின. ஸிந்தி சாஹித்ய சங்கம், ஸிந்தி முஸ்லிம் அதாபி சங்கம் முதலியன தொடங்கியதும் அப்பொழுதுதான். சர்வ கலாசாலைப் பாடத் திட்டத்தில் ஸிந்தி சேர்க்கப்பட்டது. பாரசீக வடிவங்களைத் தழுவிய பாலைவனத்தை நோக்கி விரைந்து கொண்டிருந்த ஸிந்தி கவிதையை, ஸிந்தி மொழிக்கு இயல்பான சொல்லாட்சியும், சுபாவமும், கற்பனைவளமும் கொண்டதாக மாற்றிய பெருமை ஓர் எளிய பள்ளிக்கூட ஆசிரியரைச் சேர்ந்தது. கிஷின்சந்து பேவாஸ் (கா. 1947) அவருடைய பெயர். ஏழைகளின் கதைகளை அவர் பாடினர். இயற்கையின் சௌந்தர்யத்தை வருணித்தார். ஷிரின் ஷேர், கங்கா-ஜ-ன் லஹ்ரூன் ஆகிய புத்தகங்களில் குழந்தைகளுக்கான பாடல்களையும், இசைச் சித்திரங்களையும் அவர் வழங்கினர். அவரது சிருஷ்டிகள் இலக்கிய நயச் சிறப்புக்கள் கொண்டவை அல்ல. சம்பிரதாயமான ஸிந்தி செய்யுளுடன் பாரசீக ஒலி வடிவங்களை அவர் கலந்துவிட்டார். எனினும் அவரது கவிதையில் புதுமையும், தனிச்சிறப்பும், சொல்-மிடுக்கும் என்றுமே உண்டு. அவரது மகத்தான சாதனை ஒரு கவிதா பரம்பரையை தோற்றுவித்ததுதான். ஹரி தில்கிர், ஹ-ண்டு ராஜ் துகாயால், ராம பஞ்சுவாணி, கோவிந்த பாடியா ஆகியோர் இந்த மரபினர். தமது குருவின் கவிதைகளை அவர்கள் கைக்கு அடக்கமாக பதிப்பித்துள்ளனர். இக்கட்டுரையாளர் அந்த நூலுக்கு ஒரு முகவுரையை வழங்கியுள்ளார். இப்பணியுடன்கூட குருவின் மரபையொட்டிய பாடல்களை அவர்கள் இயற்றி வருகின்றனர்.

ஸிந்தி கவிதையுலகில் ஏற்பட்டுள்ள புதிய இயக்கத்தில் மாணவர்கள், ஆசிரியர்கள், பேராசிரியர்கள் போன்ருேர் பங்கு பெற்று இருப்பது குறிப்பிடத்தக்க அம்சம். பாரசீக சொல்லணிப் பாணியில் ஸிந்தியில்

செய்யுள் வடிவத்தில் பகவத் கீதையை என். வி. தடானி முதன்மையாக மொழி பெயர்த்திருக்கிறார் (1923.) பாரசீக பாணியில் இருந்தாலும் இதன் சொல்லாட்சி ஸம்ஸ்கிருத பெரு நூல்களிலிருந்து ஜனித்தது. மேங்க் ராஜ் கல்வானி, மூல்சந்த் லாலா, செயின்ராய் பூல்சந்த், டி. எல். வாஸ்வானி ஆகியோரும் கீதையை மொழி பெயர்த்துள்ளனர். இவை மதிப்பிட இயலாத இலக்கிய பொக்கிஷங்கள். ஷிக்வா (கடவுளிடம் புகார்) என்ற பெயரில் ஹைதர் பக்ஸ் ஜடாய் இயற்றியுள்ள நூல் இக் பாலது கவிதையைப் போன்றது. துவேஷ புத்தியுள்ளவர் கள் ஒரு பெரிய பூசலை இதைக் குறித்து கிளப்பி விட்டனர். ஆனால் முன்னரே குறிப்பிட்ட ஸிந்து நதியின் புகழைப் பாடும் கவிதையும், ஆஜாதி-ஈ-கவும் (சுதந்திரப் பாடல் கள், 1947) என்பதுவும் நெடுநாளைக்கு படிக்கப் பெறும். அவரது கஜல்கள் மறைந்தபிறகும் இவை புழக்கத்தி லிருக்கும். குல், சங்கீ மரபினராக தமது இலக்கியப் பணியை ஜடாய் துவக்கினார். பிறகு அரசியல் துறை யில் மட்டுமின்றி இலக்கியத்திலும் அவர் புரட்சியாளராக மாறினார் எனவே புதிய ஸிந்தி கவிதையின் வரலாற்றில் மேலாஸுடன் கூட இரண்டாவது வரிசையில் அவர் இடம் பெறுகிறார். தேவன்தாஸ் ஆஜாத், பூராப் சந்தேஷ் (1937) என்ற தலைப்பில் ஆர்னால்டின் ஆசிய ஜோதியை ஸிந்து மொழியில் வழங்கியுள்ளார். அவர் ஸிந்தி மொழி யில் குறிப்பிடத்தக்க மற்றொரு கவிஞர்.

ஸிந்தி கவிதை கொஞ்சகாலமாக பெரும்பாலும் தனக்கென எதுகை மோனையற்ற செய்யுள் பாணியில் சென்றுகொண்டிருக்கிறது. ஷா, ஸசல், ஸாமி ஆகியோ ரையோ அல்லது ஸூபி மரபையோ அவர்கள் பின்பற்ற வில்லை. பாரசீக சொல்லணியும் கற்பனை வளமும் கொண்ட படாடோப பாதையையும் அவர்கள் பின்பற்ற வில்லை. ஐரோப்பிய இலக்கிய வடிவங்கள்தாம் அவர் களுக்கு முன்னோடிகளாக இருப்பவை. இந்த இயக்கத்தை

ஆரம்பித்து வைத்த எழுத்தாளர் ஸிந்தி பண்பாட்டு வரலாற்றில் மிகப் பெரியவர். தயாராம் கிடுமல் என்பது அவருடைய பெயர். அவர் 1857 முதல் 1927 வரை வாழ்ந்தவர், புலமை மிக்கவர், தவச் செல்வர். முப்பது ஆண்டுகட்கு முன் சித்தாந்தப் பாடல்களை இயற்றி பல பெருநூல்களாக அவர் வெளியிட்டுள்ளார். மன-ஜா-சாபூக் (மனதிற்கு சவுக்கடி) என்பது அவற்றின் பொதுப் பெயர். இந்த செய்யுள்களின் சுதந்திர வடிவமும், பொருளமைப்பும் ஸிந்தி இளைஞர்களில் சிந்தனையாளர்களாக இருப்போரின் மனதில் ஒரு புரட்சியை தோற்றுவித்துள்ளன. எல்லாவகை வசன காவ்ய நடைகளையும் பல எழுத்தாளர் மொழிபெயர்ப்புகளில் கையாண்டிருக்கிறார்கள். மங்காராம் மல்கானி, லால்சந்து அமர்திேனுமால், அர்ஜுன இஸ்ரானி, ஹரிராம மரிவாலா ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். மரிவாலா சென்ற வருஷம்தான் டாகுரின் "பழம் கொய்தல்" என்ற நூலை மொழிபெயர்த்து "பல சூந்த்" என்ற பெயரில் பிரசுரித்துள்ளார். வசனகாவிய போக்கை மேலும் ஊக்குவித்திருப்பவர்களில் பிற இந்திய கவிஞர்களை மொழிபெயர்த்திருப்பவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். தயோ மான்ஷுர மானி என்பவர் நஜ்ருல் இஸ்லாத்தை மொழிபெயர்த்தவர். நாராயண சியாம் என்பவர் பனி நீர்த்துளி என்ற பொருள்படும் "மகஜா புரா" என்ற நூலை பிரசுரித்துள்ளார். ஸிந்தியில் பதினான்கு சீர்ப் பாடல்களையும் அவர் புனைந்துள்ளார். எல்லா துறைகளிலும் இலக்கியப் பணி ஆற்றியுள்ள அய்யாஜுமும் நாராயண சியாமும் இன்று வாழ்கின்ற கவிஞர்களில் முதன்மையானவர்கள். அஞ்சல், ரஹி, கோவர்த்தன் மாபுபானி, கியால் தாஸ் பானி, "கும்நாம்" (பல்தேவ் கஜ்ரியா) மோதி பிரகாஷ், அர்ஜுன ஷாத் ஆகியோர் இந்தியாவிலுள்ள ஸிந்திக் கவிஞர்கள். ஒய். கே. ஷேக், பஷீர் மொரியானி, புர்தா ஸிந்தி, அப்துல் கரீம் கதாய் ஆகியோர் பாகிஸ்தானில் உள்ள கவிஞர்கள். மில்டனைப்

பற்றி வொர்ட்ஸ்வொர்த் இயற்றிய கவிதையை நினைவூட்டி ஷாவைப் பற்றி அய்யாஜ் இயற்றியுள்ள பாடலும், கியால் தாஸ் பானியின் "ஓ, என் நாடே, என் நாடே" என்ற பாடலும் தற்கால ஸிந்திக் கவிதையில் மிக உயர்ந்த, சோகம் ததும்பும் பாடல்கள். கியால்தாஸ் பானி இந்தியப் பிரிவினையையொட்டி எழுந்த சூருவளியின்போது தன் சொந்த நாட்டைவிட்டு வெளியேற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டவர். அதன் துயரத்தை இந்தப் பாட்டில் வடித்துக் கொட்டியிருக்கிருர். ஸிந்தி மக்களின் மனதை பாரசீக மரபின் செல்வாக்கினின்றும் பண்டித பாணியினின்றும் விடுவிப்பதில் டி. எல். வாஸ்வானி இயற்றிய வசனகாவிய உபதேசங்கள் மிகுந்த செல்வாக்குடன் விளங்கின. மேதையாக பிரகாசித்து சக்தி மிகுதியுடன் வசனமெழுதி பாடலும் புனைந்தவர் தோலாராம் பலானி. அவர் அகால மரணமடைந்தார்.

## நாடகம்

பிற நாடுகளில் கவிதையும் நாடகமும் பெரும்பாலும் கைகோர்த்துச் செல்வன. ஸிந்துவில் கவிதை முன்னேறியது, நாடகம் பின்தங்கிவிட்டது. ஸிந்தி பாமர மக்களின் நடனமும் (பகத்) நாடகங்களைத் தோற்றுவிக்கவில்லை. இரண்டு நாடக கிளப்புகள்தான் இதுவரை ஸிந்துவில் தோன்றிப் பணியாற்றியுள்ளன. பத்தொன்பதாவது நூற்றூண்டின் இறுதியில் டி. ஜே. ஸிந்து காலேஜில் ஒரு அமெச்சூர் சங்கம் தோன்றியது. மற்ருென்று ரவீந்திர நாத் நாடக இலக்கிய கிளப். 1920-க்குப் பின்னர் இது நிறுவப் பெற்றது. ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் மொழி பெயர்ப்பில் நடிக்கப் பெற்றன. "கிங் லியர்" என்ற நாடகத்தை "ஷா எலியா" என்ற பெயரில் மிர்ஜா காலிச் பெக் மொழி பெயர்த்து மிகச் சிறப்பாக எழுதினுர். வேறு சில பொறுக்கான நாடகங்களும் நடிக்கப் பெற்றன. ஷெரிடனது பிஜாரோவை தழுவி கனிஷ்ட் (1902) என்ற பெயரில்

ஸேவாசிங் அஜ்வானி எழுதிய நாடகம் சிறப்பானது. ராமாயணம், மகாபாரதம் ஆகியவற்றிலிருந்து விஷயங்களை எடுத்து நாடகங்களாக்கினர். லீலாராம் சிங் இவ்வகையில் இயற்றிய நாடகங்களில் திரௌபதி, ராமாயணு, ஹரிச்சந்திரா ஆகியவை குறிப்பிடத்தக்கவை. லால்சந்த் அமர்திஞேமாலின் 'உமர் மரூயி' என்ற நாடகத்தை ரவீந்திர கிளப் வெற்றிகரமாக நடித்துக் காட்டியது. கதையும் பாடல்களும் ஷாவின் நூல்களிலிருந்து எடுக்கப்பெற்றவை.

இந்த கிளப் வெளிக்கொணர்ந்த ஆசிரியர் கே. எஸ். தர்யானி. 'முல்க்-ஜா-முதாபர்' (இப்ஸனது சமூகத்தின் தூண்கள்), பூக்-ஜோ-சிகார் (பசியின் வேட்டை) ஆகியவை அவரது படைப்புக்கள். மங்காராம் மல்கானி சமூக நாடகங்களை இயற்றியதுடன் ஓரங்க நாடகங்களையுல் துவக்கி வைத்தார். இப்பொழுது வாழ்ந்து வரும் நாடகாசிரியர்களில் அவரே மிகக் கணிசமான எண்ணிக்கையில் எழுதியவர். ஜேதானந்த நகரானி, காம்டு (வேடதாரிகள்) என்ற நாடகத் தொகுப்பை ஸிந்தியில் வழங்கியுள்ளார். இவர் சிகார்புரி நாடக கிளப் மூலம் இவற்றை அரங்கேற்றினர். பத் நஸீப் தறி (அதிர்ஷ்டக் கட்டையான தறி) என்பது உர்ஸானியின் நாடகம். இவை மொத்தத்தில் லகுவான கேலிக் கூத்துக்கள்தாம்.

அமைதியாகப் படித்துச் சுவைக்கக்கூடிய நாடகங்களில் இரண்டு முதன்மையானவை. மிர்ஜா பெக்கின் குர்ஷீத். இது ஜொலி ஜொலிப்புள்ள நாடகம், நல்ல பாட்டுக்கள் கொண்டது. (1870-ல் எழுதப்பெற்றது.) மற்றென்று லீலாராம் பெர்வானியின் ஹிக்கா ராத் (1936.) ஷாவின் சுர் ஊலலா சனேஸர் என்பதிலிருந்து ஒரு பகுதியை எடுத்து இதில் மாற்றியமைத்துள்ளார். சத ஸஹேலியும் என்பதில் தயாராம் கிடுமால் வழங்கியுள்ள உரையாடலும், கௌரோமால் சந்தன்மால் இயற்றியுள்ள ரத்ஞவளியின் மொழிபெயர்ப்பும் ஆவலாதி கொண்ட

வாசகர்கள் மட்டுமே ரஸிக்கக் கூடியவை. ராம் பஞ்சு வானியின் மூமல் ராஞே நடிக்கவும் படிக்கவும் இசைவான நல்ல நாடகம். கல்யாண அத்வானியின் 'சாகுந்தல' மொழி பெயர்ப்பு இத்தகையது என்று சொல்வதற்கில்லை.

**வசனம்**

சென்ற நூறு ஆண்டுகளில் ஸிந்தியில் வசனம் கணிச மாக வளர்ச்சி கண்டிருக்கிறது. நாட்டுப்புறக் கதைகளின் தொகுப்புக்கள் முதலில் வந்தன. குலாம் ஹுஸேனின் ஜாம் பாம்போ (ஜமீன்தாரின் கதை, 1853), ஸாதியின் குலிஸ்தானைப் போல கேவல்ராம் சாலமாட்ராய் இயற்றி யுள்ள ஸுக்ரி-குல் தொகுப்புக்கள், அகண்ட லுட்பல்லா 'அரபு இரவுகள்' என்ற நூலை குல்கந்து (1882) என்ற பெயரில் பரிஹாஸம் செய்யும் வகையில் எழுதியிருப்பது - ஆகியவை தொடக்க வெளியீடுகள். முக்கியமாக மொழி பெயர்ப்புக்களின் மூலந்தான் ஸிந்து வசனம் பெருமை யடைந்தது. 1857 முதல் 1907 வரை உள்ள அரை நூற் ருண்டை மொழி பெயர்ப்புக்களின் சகாப்தம் எனலாம். டிரம்ப், ஷர்ட், ஸ்டாக், கிரியர்ஸன் ஆகிய இலக்கண வல்லுநர்களும் அகராதி தயாரிப்பாளரும் ஆங்கிலத்திலும், உதாராம் தன்வேர்தாஸ், ஜமத்மால் நரூமால், ஸிந்தி யிலும் பணியாற்றி இதைத் தோற்றுவித்தனர். தன்வேர் தாஸ் இலக்கணப் புலவர். நரூமால் 'வைத்பதீ கோஷ்' என்ற நூலை இயற்றியவர். இந்தக் காலத்தில் மொழி பெயர்ப்பாளர் என்ற வகையில் புகழ்பெற்ற இருவர் மிர்ஜா காலிச் பெக், கௌரோமால் சந்தன்மால் (1844–1916) ஆகியோர். பேகன் கட்டுரைகளை (மகலத் அல் ஹிக்மத்) என்ற பெயரில் 1877-ல் பெரிய நூலாக இயற்றி அவர் வெளி யிட்டார். சாச் நாமாவை ஆங்கிலத்தில் மொழிபெயர்த் தார். கஜாவின் கிமாயீ-இ-ஸாதத் போன்ற பேரிலக்கிய நூல்களையும் ஸிந்தியில் மொழிபெயர்த்துக் கொடுத்தார். மாதர் கல்வியை ஆதரித்து பகோபஹா என்ற ஒரு துண்டுப் பிரசுரத்தை 1872-ல் முதல் முதலாக வெளியிட்ட

கௌரோமால் சந்தன்மால் குழந்தைப் புத்தகங்கள் பல வற்றை மொழி பெயர்த்தார். கொலம்பஸ் சரிதம், ஆரிய நாரீ சரிதா, பங்கிம் சந்திரரின் ராதாராணி ஆகியவற்றை அவர் ஸிந்தியில் கொடுத்திருக்கிறார். ஜான்ஸனது "ராஸெலஸ்" என்ற நூலை நாவல்ராயும் உதாராமும் 1870-ல் ஸிந்துவில் வெளியிட்டனர். இதற்கு மக்கள் பேராதரவு கொடுத்தனர். ஸ்காட்டின் 'டாலிஸ்மன்' என்ற நாவலை நாவல்ராயின் சகோதரர் நீரானந்த் வெளி யிடுவதற்கு அது வழி வகுத்துத் தந்தது. தயாராம் கிடுமால் மொழிபெயர்ப்பு நூல்களைவிட முதல் நூல்களை அதிகமாக எழுதி வெளியிட்டுள்ளார். யோகதர்சன், ஜாப் சாஹர், கீதா-ஜோ-ஸார் முதலியவை குறிப்பிடத்தக்கவை. பாடப் புத்தகங்களை மொழி பெயர்த்தவர்களில் நந்திராம், நாராயண ஜகன்னாத், பூல்சந்த் கொடுமால் போன்றோரே சிறந்தவர்கள். பூல்சந்த் கொடுமால் இங்கிலாந்தின் சரித்திரத்தை நல்ல கம்பீரமான சொல்லாட்சியுடன் மொழி பெயர்த்துள்ளார். துளஸிதாஸரின் ராமாயணத்தை வஸூமால் ஜேராம்தாஸூம், மகா பாரதத்தின் பகுதிகளை மிஸிர் ஜய்கிஷனும் மொழி பெயர்த்துள்ளனர்.

ஸிந்தி இலக்கியத்தின் நான்கு தூண்கள் என்று கருதப்படும் எழுத்தாளர் தாம் வசனத்திற்கு மூலாதார மானவர்கள். அவர்களில் மூவர் மிர்ஜா காலிச் பெக், கௌரோமால் சந்தன்மால், தயாராம் கிடுமால் ஆகி யோர். நான்காவது தூண் பரமானந்த மேவாராம். கட்டுரைகளையும் நல்லறத்தின் ஒளிவீசும் படைப்புக்களை யும் உண்டாக்கி ஸிந்தி மொழியின் அடிஸன் என்று அவர் புகழ் பெற்றார். மிர்ஜா ஸாஹிப் (1853-1929) பல துறை களில் புது நூல்களையும், மொழி பெயர்ப்புக்களையும் சிருஷ்டித்திருக்கிறார். அவர் இயற்றிய ஜீநாத் (1890) ஸிந்தி மொழியில் வந்த முதல் அசல் நாவல். ஸிந்து வாழ்க்கையைச் சித்திரிப்பதுடன் குணசித்திர பாத்திரங் களை உருவாக்கித் தந்த தனிப்பெருமை அதற்கும் பிரீ

தம்தாஸின் 'அஜிப் பேடா' (1892) என்ற நாவலுக்கும் உரித்தானது. ஷாவின் நூல்களுக்கெல்லாம் அகராதி போன்ற ஒரு கருவூலத்தை அவர் அளித்துள்ளார். அது திறனாய்வுத் துறையில் புலமை மிக்க, புது வழிப்பணி. வானசாஸ்திரம், விவசாயம் முதல், மாதர், பிராணி சாஸ் திரம் வரை, எத்தனையோ விஷயங்களைப் பற்றி 300-க்கு மேற்பட்ட நூல்களை அவர் எழுதினார். ஸிந்தி இலக்கியத் திற்கு கௌரோமால் சந்தன்மால் செய்த மகத்தான தொண்டு ஸமீஜா லோக் என்ற நூலை 1885-ம் பதிப்பித்த தும், உபதேசங்களை நல்ல ஸிந்தியில் அமைத்து வழங்கிய துந்தான். உமர்கய்யாமுக்கு மிர்ஜா சாஹிப் செய்த மொழி பெயர்ப்புக்கு தயாராம் கிடுமால் வசனத்தில் வழங்கி யுள்ள முன்னுரைகளும் கௌரோமாலின் ஸமீஜா சுலோக்கும் ஸிந்தி உரை நடையின் உயர்நிலைகள் எனக் கூறலாம். சொல்லாட்சித் திறனும் தரத்தின் உயர்வும் அதற்கு சிறப்பை அளிக்கின்றன. பத்தொன்பதாவது நூற்றாண்டின் இறுதி முதல் இருபதாவது நூற்றாண்டின் மையம் வரை ஜோதி என்ற இலக்கிய சஞ்சிகையின் ஆசி ரியராக பரமானந்த மேவாராம் சேவை செய்துள்ளார். ஸிந்தியில் மிகச் சிறந்த கட்டுரைத் தொகுப்புக்கள் உண்டு. அவற்றில் ஒன்றை இந்த சஞ்சிகை அளித்தது. அதன் பெயர் 'குல்-பூல்'. மற்றொன்று 'விசார்' என் பது, டி. ஜே. ஸிந்து காலேஜ் சஞ்சிகையிலிருந்து இக் கட்டுரையாளர் தொகுத்து வெளியிட்டது. பரமானந்த மேவாராம் (இமிடேஷன் அப் கிரைஸ்ட்) என்ற நூலை 'கிருஸ்துஜி – பெரාලි' என்ற பெயரில் அற்புதமான வசன நூலாக வழங்கியுள்ளார். 1910-ல் அவர் வெளி யிட்ட ஸிந்தி மொழி அகராதி இன்றும் தலை சிறந்ததாக இருந்து வருகிறது. சமூகப் பிரச்னைகளைப் பற்றி கட்டு ரைகளை நல்லபடி எழுதியவர் வதுமால் கங்காராம். அவரை ஊக்குவித்து வெளிக் கொணர்ந்தவர் பரமானந்த மேவாராம்.

1907 முதல் 1957 வரை உள்ள அரை நூற்றுண்டில், குறிப்பாக சென்ற பத்து ஆண்டுகளில், ஸிந்தி வசனம் வேகமாக வளர்ந்திருக்கிறது. இவற்றில் முதல் இருபதை முன்னேற்பாட்டுக் காலம் எனலாம். அடுத்த முப்பதை 'லட்சியசித்தி'க் காலம் அல்லது தற்கால ஸிந்தி இலக்கியத்தின் காலம் எனலாம். இது புதிய ஸிந்துவின் வளர்ச்சிக் காலமும்கூட. முன்னேற்பாட்டுக் காலத்தில் ஸிந்தி வசன மேதைகளாக விளங்கியவர்கள் மூவர். அவர்கள் ஸிந்துவின் அன்பர்கள். பாரசீக மொழி, இஸ்லாம், ஸுஃபி சிந்தாந்தம் ஆகியவற்றில் புலவர்கள். "ஐ நா" என்ற சஞ்சிகையிலும், ஸரோஜினி தாருராய் ஜி. நகரி போன்ற கதைகளிலும் நிர்மல்தாஸ் பதே-சந்த் புலப்படுத்தும் பாரசீக, அரபி, இஸ்லாமிய அறிவு மிகுதியைக் கண்டு பெரிய கல்விமான்களான முஸ்லிம்கள் வியக்கின்றனர். அகராதியின் துணையின்றி புரிந்துகொள்ள இயலாத ஸிந்தி எழுத்தாளர் வகையில் அவர் மிகப் பெரியவர். அவரது புதல்வர் சோபராஜ் அவ்வளவு கடுமையாக இல்லாவிட்டாலும் தந்தையின் வழியில் எழுதியவர். நிர்மலதாஸின் சம்பிரதாயத்தை ஹிந்து புலவர்களான ஹாரு ஷடரங்கனி ("காதிம்") தயோ மான்ஷரமானி ஆகியோர் பின்பற்றியுள்ளனர். வைத்தியரும் பெரும் புலவருமான பத்தே முகம்மது ஸேவ்ஹானி, அப்தப்-இ-ஆதப் (இலக்கிய சூரியன்), அபுல் பஜல், பைஜி, ஸிரட்-ஏ-நபி (நபி நாயகத்தின் தன்மைகள்) ஆகியவைகளின் ஆசிரியர். திறனாய்வுச் சிறப்புடன் பணியாற்றிய முஸ்லிம் புலவர்களின் முன்னோடியாக அவர் விளங்கினர். 1931-ல் முஸ்லிம் அதாபி சங்கம் தோன்றி இத்துறையில் மேலும் பணியாற்றியது. ஜோயோ, நபீபக்ஷ் பலூச், உஸ்மான் அன்ஸாரி, தீன் மகமது வாபாய் போன்ற புலவர்கள் அதன் அமைப்பில் இடம் பெற்றனர். பதே முகம்மது ஸேவ்ஹானி பண்பாட்டுத் துறையிலும், இலக்கியத் துறையிலும் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்காக உண்மை உணர்ச்சி

யுடன் உழைத்தவர். அவரது வசனம் தெள்ளத் தெளிந்தது, வீரியம் கொண்டது.

ஸிந்தி வசனத்தின் வரலாற்றில் இவற்றையெல்லாம் விட பெரியதோர் பெயரைக் காணலாம். ஹாட்சந்த் குர் பக்ஸானிதான் அந்தப் பெயர். அவரை மிர்ஜா காலிச் பேகுக்கு அடுத்தபடியாகத்தான் சொல்ல வேண்டும். ஷாவின் சிருஷ்டிகளை பிரமாதமாக 1924-ல் அவர் பதிப்பித்தார். அதை அவர் பூர்த்தி செய்யவில்லை. ஆனால் பின்னர் வந்த எழுத்தாளர் பின்பற்றுவதற்கு வேண்டிய தரத்தை அவர் நிர்ணயித்துள்ளார். 'ஸசல் ஸர்மஷ்ட்' என்ற நூலின் பதிப்பை 'ஆகாஸபி' 1930-க்கு பின் வெளியிட்டார். ஷா அப்துல் கரீமை 1937-ல் தாவூத் போத்தா பதிப்பித்தார். குல் பதிப்பை 1938-ல் முஸ்லிம் அதாபி சங்கம் வெளியிட்டது. ஷாவை 1950-ல் ஷாவானி பதிப்பித்தார். பேதிலே 1954-ல் முல்ஸாவி வெளியிட்டார். ஸாமியை 1956-ல் நகரானி பதிப்பித்தார், இவை எல்லாமே குர் பக்ஸானி துவக்கி வைத்த பெரும்பணியின் விளைவுகள். குர் பக்ஸானியைப் பின்பற்றி வசனத்தில் முகவுரைகளை அவை தாங்கி நிற்கின்றன. நூர்ஜஹானிலும், ஷாவின் முகவுரை (முகுதமா-லத்தீபி)யிலும், லவாரி-ஜாலால் என்ற நூலிலும் கு ர்பக்ஸானி எழுதியுள்ள வசனம் பாரசீக மரபுச் சொற்கள் நிறைந்தது, எனினும் ஸிந்தி எழுத்தாளர் பின்பற்றுவதற்கு ஓர் எடுத்துக் காட்டாக அது பயன்பட்டது.

### தற்கால உரைநடை

மிர்ஜா 1929-ல் காலமானார். தயாராம் 1927-லும் கௌரோமால் 1916-லும் உயிர் நீத்தனர். மேலே குறிப்பிட்ட இந்த நான்கு மேதைகளும் மறைந்து 30 ஆண்டுகளாகிறது. அவர்களது செல்வாக்கின்கீழ் தான் தற்கால ஸிந்தி உரைநடை இலக்கியம் முழுமை கண்டது. அதை தமது காலத்தில் போஷித்து நிலைநிறுத்தி பொதுஜன

ரஞ்சிதமாக்கிய பெருமை ஜேத்மால் பரசுராம் (கா. 1948), பேரூமால் மேகர் சந்த் (கா. 1950), லால்சந்த் அமர்தி ஞேமால் (கா. 1954) ஆகியோருக்கு உரித்தானது. தமது வாழ்நாள் பூராவும் பிரம்மஞானம், ஸுஃபி தத்துவம், ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை ஆகியவற்றையே ஜேத்மால் பரசுராம் உபதேசித்து வந்தார். ஷேக்ஸ்பியரின் 14 அடி பாடல்களில்கூட ஸுஃபி தத்துவத்தை அவர் கண்டார். ஸிந்துவில் சஞ்சிகைகளில் கட்டுரை எழுதுவதில் முதல் வராக அவர் விளங்கினுர். ஷாவின் கதைகள் என்ற நூலில் அந்த ஞானியின் தெய்வானுபவத்தை விளக்கி யுள்ளார். ஸிந்து மக்கள் தமது ஞானிகள், தெய்வக்ஞர் கள், ஸுஃபிகள் போன்ரேரின் பெருமையை உணர்ந்து தெளிந்து கொண்டதற்கு அவரது ஊக்கமே காரணம். அவருடைய மேதைக்கு மற்ருெரு புறம் உண்டு. அநாம தேயமாக வரைந்துள்ள ‘சம்ராபோஷ்’ கதைகள் என்ற நூலில் பணக்காரர்களின் காமவெறியையும், பேராசையை யும் அவர் வெளிப்படுத்தியுள்ளார். ஸிந்துவில் இலக்கண வல்லுநராகவும் சரித்திராசிரியராகவும் பணிபுரிந்தார் பேரூமால் மேகர் சந்த். ஸிந்தியில் சோஷலிஸ ரீதியில் இலக்கியத்தை படைத்த முதல்வர் ஜேத்மால். அவர் திறனுய்வில் சமர்த்தர். நல்ல உழைப்பாளி. பிர யாணத்தில் மிகுந்த பற்றுதல் கொண்டவர். ஸிந்தி மொழியில் முதல் கவிதைத் தொகுப்பை (ஜோஹார் நாரும்) அவர் பதிப்பித்தார். ஷாவின் பயணங்களைப் பற்றி எழுதினுர். ஆனந்த சந்திரிகா என்ற நாவலைப் படைத்தார். துப்பறியும் கதைகள் உட்பட பல புத்தகங்களை மொழிபெயர்த்தார். தமது வாழ்நாளைய விசாரங்களுக்கும் ஆராய்ச்சிகளுக்கும் முத்தாய்ப்பு வைத்ததுபோல தமது பெரிய சிருஷ்டியாகிய “ஸிந்தி இலக்கணம், ஸிந்தி மொழியின் வரலாறு” என்ற நூலை 1941-ல் வெளியிட்டார். 1947-ல் அவரது நூலாகிய ‘ஸிந்து ஹிந்துக்களின் சரித்திரம்’ பிரசுரமா

யிற்று. பேருமால் மேகர் சந்த் தமது சைலியில் எந்த வக்கிரப் போக்கையும் புகுத்தவில்லை. கண்ணியமாகவும் லளிதமாகவும் எழுதினர். பல இளம் எழுத்தாளருக்கு அவரது பணி நேரடியாகவோ, மறைமுகமாகவோ ஊக்கம் அளித்திருக்கிறது. அல்லா பச்சையோ என்பவர் 1942-ல் 'சாயர் கோகிஸ்தான்' (கோகிஸ்தானில் பிரயாணம்) என்ற உரைநடை பெருநூலை இயற்றினர். அதை ஊக்குவித்தது பேருமல் மேகர் சந்தின் ஸிந்து-ஜோ-சைலானி என்ற நூல். அவரது மரபில் வந்து இலக்கியப் பணியாற்றியவர்கள் பின்வருமாறு: சேதன் மரிவாலா, சரித்திர விஷயங்களைப் பற்றி எழுதிய நூல் (தரீகி மஜமூன், ஸிந்து-ஜோ-இதிஹாஸ்), ஸிந்தி கவிதை இலக்கியம் ஆகியவற்றின் வரலாறுகளை, முகம்மத் சிதீக் மேமன், லுட் பல்லா பத்லி ஆகியோர் இயற்றியிருப்பதும் மேகர் சந்தின் நூல்களைத் தழுவியே. ஷா, ஸசல், ஸாமி, ஆகியோரின் வாழ்க்கை வரலாறுகளைப் பற்றித் திறனாய்வுச் சிறப்புடன் கல்யாண் அத்வானி எழுதியுள்ள வரலாறும் சரி, காந்திஜி, நேரு போன்றவர்களின் வாழ்க்கைகளைப் பற்றி எழுதியவர்களும் சரி, பேருமால் பேகர் சந்திடமிருந்து தெரிந்துகொண்டது எவ்வளவோ. (குர் பக்ஸானியும் இத்துறையில் செல்வாக்குடன் விளங்கியிருக்கிறார்). மேகர் சந்தின் புதல்வர் பிரிப்தாஸ், 'பில்கிரிம்ஸ் ப்ரோக்ரஸ்' (சாலிக்-ஜோ-சபர்) என்ற நூலை மொழி பெயர்த்துள்ளார். அவரது உரைநடை தந்தையின் சைலிச் சிறப்பு கொண்டது.

இந்தியாவில் மட்டுமின்றி பாகிஸ்தானிலும் ஸிந்தி இலக்கிய உலகின் பிதாமகர் என்று எல்லோராலும் பெருமையுடன் மதிக்கப் பெற்றவர் லால்சந்த் அமர் திேைமால். 1954-ல் அலர் காலமானபோது ஸிந்திகள் எல்லோரும் துக்கத்தில் ஆழ்ந்தனர். எவருக்கும் பின் வாங்காமல், அலுப்பு சலிப்பின்றி ஸிந்து இலக்கியத்தை அவர் அன்புடன் பாலித்தவர். முகம்மத் நபிகளின்

வாழ்க்கை வரலாற்றை எழுதி முதல் நூலாக வெளியிட்டார். ஷாவைப் பற்றிய விமர்சனம், குர் கொள்ளைக்காரர்களைப் பற்றிய கதை, 4-வது பிறைச் சந்திரன் (சோத்-ஜோ-சாந்த்) என்ற துணிகரமான நாவல் அவரது பிரதான படைப்புக்கள். 1914-ல் அவரும் சரணானந்த ஹஸோமாலும் சேர்ந்து ஸிந்தி சாகித்ய சங்கத்தை தோற்றுவித்தனர். ஸிந்தி வாசகர்களின் சுவையே அதன் பின்னர் மாறத் தொடங்கியது. அவர் ஸிந்தியில் எழுதத் தொடங்கிய காலத்தில் ஸிந்திகளைப் பெரிதும் கவர்ந்தவை ஐரோப்பிய, வங்காளி இலக்கியங்கள்தாம். கற்பனைக் கதைத் துறையில் குல்பகாவளி, (1889) மும்தாஜ், தம்ஸாஜ் போன்ற பழங்கதைகளுந்தான். மர்மப் புதையல்கள், மர்ம மனிதர்கள், அலமாரியில் எலும்புக்கூடு போன்ற அம்சங்களைக் கொண்ட சந்திர காந்தா வகைக் கதைகளும் செல்வாக்கு பெற்றிருந்தன. இந்தச் சுவையை தூய்மைப்படுத்தி பழக்கப்பட்டுள்ள விஷயங்களை பழக்கமான, கச்சிதமான பாஷையில் கேட்டு ரசிக்க ஆசையுள்ளவர்களாக அவர் மாற்றினார். உண்மையில் அவர் இத்துறையில் ஒரு வழிகாட்டி. பலதரப்பட்ட ஏராளமான எழுத்தாளருக்கு அவர் முன்னோடியாக பயன்பட்டார். நெஞ்சை உருக்கும் பகுதிகள் கொண்ட ஷேர் என்ற காதல் நவீனத்தின் ஆசிரியர் ஆசானந்த மம்தோரா அவர்களில் ஒருவர். ஸேவக் போஜராஜ் (ஆசீர்வாத் தாதாசியாம் என்ற சுய சரிதைப் பாணி நாவல்களின் ஆசிரியர்), நாராயண பம்பனி 'விதவை வித்யா' போன்ற சமூக நாவல்களின் ஆசிரியர், ராம பஞ்சுவானி (கலை உள்ளம் படைத்து உணர்ச்சி வசப்பட்டு செயலாற்றும் மனிதர்களைப் பற்றிய நடைச் சித்திரங்களையும் பத்மா, கைதி ஆகிய நாவல்களையும் இயற்றியவர்), மங்காராம் மல்கானி (டாகுரின் பாணியில் லால்சந்த் அமர்திேமாலின் 'சதாகுலாப்' என்ற நூலின் உத்தியைப் பின்பற்றி எழுதியவர்) ஆகியோர்

அவரது மரபில் தோன்றி பெருமையடைந்தவர்கள். நாராயணதாஸ் மல்கானியின் கட்டுரைகளிலும் அமர் திருமாலின் செல்வாக்கைக் காணலாம். அவர் அனர் தாரு (மாதுள முத்துக்கள்) என்ற தொகுப்பை இயற்றியவர். தீர்த்த வசந்த் அதேமாதிரி பணியாற்றி சிங்குன் (பொறிகள்) என்ற நூலை இயற்றியுள்ளார். தீர்த்த வசந்த், ஜெத்மால் பரசுராமுடன் சேர்ந்து உழைத்தவர்.

இப்பொழுது நடைபெறும் பத்தாண்டானது பல வகைகளில் ஸிந்தி உரைநடைச் சரித்திரத்தில் விசேஷமாக குறிப்பிடத்தக்கது. இந்தப் பத்தாண்டை தற்கால ஸிந்தி இலக்கியத்தின் கடைசி இருபது ஆண்டுகளுடன் இணைத்திருப்பவர் லால்சந்த் அமர் திருமால். 1947-ம் ஆண்டில் இந்தியா பிரிவினையானது ஸிந்து இலக்கியத்தை நெறித்து அழித்து விட்டதுபோலத் தோன்றியது. ஹிந்துக்கள் அகதிகளாகி விட்டனர். ஸிந்து முஸ்லிம்கள் வெளியிலிருந்து கூட்டமாக வந்த அன்னியர்களால் அமுக்கப்பட்டு விட்டனர். ஆனால் வியக்கத்தக்க ஒரு விஷயம் நடைபெற்றது. எழுதிப் பழக்கமேயில்லாத இள வயதினர் சஞ்சிகைகளையும் இலக்கியக் கழகங்களையும் தோற்றுவித்து, ஆச்சரியமான ஊக்கத்துடன் கூட தமது மொழியையும் இலக்கியத்தையும் விடாமல் கெட்டியாகப் பற்றிக் கொண்டனர். சென்ற பத்தாண்டுகளில் இந்தியாவிலும் ஸிந்துவிலும் காணப்பெற்ற இலக்கியப் படைப்பு பிரமாதமானது. ஸிந்தி மொழியிலும் இலக்கியத்திலும் ஆராய்ச்சியை நடத்துவதற்கென்றே ஒரு பெரிய இயக்கம் தோன்றியது. மிக்ரன் என்ற இலக்கிய சஞ்சிகைதான் இந்த இலக்கியத்துக்கு நிலையான நினைவுச் சின்னமாக இருந்து வருகிறது. இந்தியாவில் சமூக விஷயங்களையும் மனோதத்துவ விவகாரங்களையும் தாங்கி நிற்கும் நாவல்களும், சிறுகதைகளும் வளர்ந்தோங்கின. இவை பொதுவாக புற்றீசல் மூலம் கிளம்பியிருக்கும் சஞ்சிகைகளில் வெளி வந்தவை. 'ஹிந்து

வாசி' என்ற வாரப் பத்திரிகை ஸிந்தி மொழியில் இந்தியாவில் வெளி வருகிறது. அதற்கு பதினையிரத்திற்கும் மேற்பட்ட சந்தாதாரர்கள் இருக்கின்றனர்.

இப்போதைய பத்தாண்டில் ஸிந்தி இலக்கியத்துக்கு மாதர் ஆற்றிவரும் தொண்டு குறிப்பிட வேண்டிய விசித்திரமான அம்சம். பிரிவினைக்கு முன்னால் ஒரே ஸிந்தி பெண்தான் இலக்கியப் பணி புரிந்தார். அவருடைய பெயர் குலி அடரங்கனி. டாகுரின் கோரா என்ற நாவலை அவர் மொழிபெயர்த்துள்ளார். ஒரு ஹிந்துப் பெண் ஒரு முஸ்லிமை மணம் செய்துகொள்ளும் விஷயத்தை வைத்து அவர் இயற்றியுள்ள 'இதிஹாத்' என்ற நாவல் விரிவான சர்ச்சைக்குரியதாயிற்று. இப்பொழுது ஏராளமாக மாதர் எழுதுகின்றனர். போபதி ஹீராநந்தினி என்ற பெண்தான் இன்று ஸிந்தி சஞ்சிகைகளில் ஏராளமான வாசக அபிமானிகளுடன் சிறப்புற எழுதுபவர். நாவலாசிரியர்களாக உண்மையில் வெற்றியடைந்த இருவரில் ஒருவர் பெண். சுந்தரி, உத்தமசந்தனி கோசாங் என்ற சிறுகதைத் தொகுப்பின் ஆசிரியர். கிரண்டர் தேவாரூன் (உதிரும் சுவர்கள்) என்ற சமூக நாவலை மனோதத்துவ ஞான பூர்த்தியுடன், ஸிந்தி வாழ்வை தெளிந்தறிந்து சுலபமான நடையைக் கையாண்டு எழுதுவதன் காரணமாக கற்பனைக் கதைத் துறையில் மற்ற ஸிந்தி எழுத்தாளர்களை அநேகமாக அவர் வென்று விடுகிறார். இதற்கு ஒரே விலக்காக இருப்பவர் கோவிந்த மால்ஹி. அவர்தான் இலக்கிய உலகின் பீமன். கோவிந்த மால்ஹியின் மிகச் சிறந்த நாவல் 'கூட்டத்திலிருந்து பிரிக்கப்பட்ட பறவை' என்ற பொருள் கொண்ட 'பகைரா வலார் கான் விகிரியா' என்பது. இது ஸிந்தி அகதிகளின் துயரம் தோய்ந்த கதை. அவர் ஆன்ஸு (கண்ணீர்) முதல், லோக் ஆஹே போக் (1957) வரை ஏராளமான நாவல்களை இயற்றியுள்ளார். கதை எழுத்தாளர்களில் ஆனந்த கோலானி

மிகச் சிறந்தவர். ஆனால் அவருடைய திறனுக்குக் குறைவில்லாமல் எழுதுபவர் டஜன் கணக்கில் இருக்கிறார்கள். சுகந்த் அஹூஜா, கிராட் பவானி, உத்தம், பிஹாரி சப்ரியா, சாவ்லா, கோவிந்த பஞ்சாபி, தாரா மிர்ச்சண்டானி, கலா பிரகாஷ், கலா ரீஜ சிங்கானி, ஈசுவரி ஜோத்வானி ஆகியோர் இந்த வகையைச் சேர்ந்தவர்கள். இலக்கிய விஷயங்களைப் பற்றி எழுதித் திறனாய்வுத் துறையில் பரந்த புலமையுடன் விளங்குபவர் ஜமக்மால் பவ்னானி. தோளா மாரூவை அவர் ஸிந்தியில் மொழிபெயர்த்திருப்பது இலக்கியத்திற்கு அணி செய்கிறது. ஜமால் அப்ரோ, தானீர் அப்பாஸி, ஷேக் ராஜ், அய்யாஜ் காத்ரி ஆகிய பாகிஸ்தானிகள் நல்ல சிறுகதை எழுத்தாளர் என்ற பெயர் பெற்றிருக்கிறார்கள். இப்போதைய பத்து ஆண்டில் புகழ் பெற்றிருப்பவர்களில் ஆஹே ந ஆஹே என்ற கதையின் ஆசிரியர் ராம் பஞ்சுவானி ஒருவர். அவர் தெய்வபக்தியுள்ள கலைஞர். ஆதாபி உஸூல் என்ற நூலின் ஆசிரியரான மங்காராம் மல்கானி நாடகாசிரியர், கட்டுரையாளர், இலக்கிய சரித்திராசிரியர். ஸிந்தி மொழியில் இலக்கியத் திறனாய்வைப் பற்றிய ஒரே நூல் 'ஆகாபி உஸூல்'.

1947 முதல் 1957 வரை உள்ள பத்து ஆண்டுகளில் தோன்றியுள்ள இலக்கியத்தின் முக்கிய அம்சங்கள் இரண்டு. ஸிந்துவிடம் தீவிர அன்பு, அதன் மொழியிடமும் இலக்கியத்திடமும் (குறிப்பாக ஷாவின் படைப்புக்களில்) காண்பித்து வரும் சிரத்தை. மற்றோர் அம்சம் எல்லா விஷயங்களையும் குறித்து பிரத்தியட்ச பாவத்துடன் 'முற்போக்கு மனப்பான்மை'யில் எழுதுவது. இளம் எழுத்தாளரிடம் இயற்கையாகக் காணப் பெறும் தீயப் போக்கொன்று சிலகாலம் இருந்தது. பால் உணர்ச்சி மிகுதியாக இருந்ததுதான் இக்குறை. ஆனால் இப்போது இந்தப் போக்கு பெரிதும் கண்டிக்கப்படுகிறது. தன்னம்பிக்கையுடன், இன மொழிப் பற்றுதலுடன் இன்

றைய எழுத்தாளர் பணியாற்றுவது எதிர்காலத்தைப் பற்றி நம்பிக்கைத் தருவதாக இருக்கிறது.

ஸிந்தியில் குழந்தை இலக்கியம் அண்மையில்தான் தோன்றியது. ஆரம்ப வகுப்புகளின் உபயோகத்துக்காக தயாரான பாட புத்தகங்களில் எளிய மொழியில் கதைகளும் செய்யுள்களும் முதலில் தோன்றின. இத்துறையில் பெரிய அளவில் உழைத்தவர் கௌரோமால் சந்தன்மால். பேரூமால் மேகர் சந்த் இயற்றிய சில பாடல்கள் வகுப்பு அறைக்கு வெளியேயும் புழங்கலாயின. காலம் என்ற பழைய மன்னனை நோக்கி கூறுவதாக அமைந்துள்ள ஆங்கில பாடலின் ஸிந்தி மொழி பெயர்ப்பு இவ்வாறு விசேஷ புகழ் பெற்றது. உண்மையில் குழந்தை இலக்கியத் துறையில் கீர்த்திமானாக விளங்குபவர் பரமானந்த மேவாராம். இன்பமூட்டி, குழந்தைகளுக்கு அறிவையும் புகட்டும் வகையில் அவருடைய ‘ஜோதி’ அற்புதமாக அமைந்துள்ளது. ‘தில் பஹார்’ என்பது அவரது குழந்தைக் கதைகளின் தொகுப்பு. டாகுரின் பிறைச் சந்திரன், தபாலாபீஸ் போன்ற நாடகங்களும் பங்கிம் சந்திரரின் கதைகளும் முதல் உலக யுத்த காலத்தில் ஆங்கிலத்தில் வெளியாயின. இவற்றை எளிய வசனத்திலும் செய்யுளிலும் ஸிந்தி மொழியில் எழுதி இருக்கிறார்கள். இவற்றைக் குழந்தைகள் பெரிதும் விரும்பிப் படிக்கின்றனர்.

குழந்தைகளுக்கு என்று ஸிந்தியில் கட்டுரைகளும் பாடல்களும் வெளிவருவதற்கு உழைத்த ஸ்தாபனம் பால்கன்–ஜி–பாரி (அகில இந்திய குழந்தைகள் சங்கம்). அதன் ‘தாதா’வாகிய ஸேவக் போஜ்ராஜ் பெரும் பணியாற்றியுள்ளார். முப்பது ஆண்டுகளாக உயர்ந்த ரகத்தில் குழந்தை இலக்கியத்தைத் தோற்றுவித்து வந்துள்ள பெருமை அதற்கு உண்டு. இவற்றில் சிலவற்றைக் குழந்தைகளே இயற்றியுள்ளனர். சிறு பிள்ளைப் பாடல்களும், குழந்தைகளுக்கான கதைப்

பாடல்களும் இன்று ஸிந்தியில் கிடைப்பதற்குக் காரணம் பால்கன்–ஜி–பாரிதான். பகத் பம்போர்ஜோ, பாபோ ஆஹோ சோர் ஜோ (பம்போரில் ஒரு பாடகன் உண்டு, அவன் தந்தை ஒரு திருடன்) என்பவை போன்ற பொருளற்ற எதுகைப் பாடல்களை ஸிந்தியில் 1940-ம் ஆண்டுக்கு சமீபகாலமாக வழங்கியவர் வழக்கறிஞர் ரேவா சந்த் தடானி. ஆனால் இவை இப்பொழுது கிடைப்பதே அரிதாகி விட்டது. குழந்தைகளுக்கு என்று ஸிந்தி இலக்கியத்தில் ஓர் இலாகாவை அமைத்துக் கொடுத்தவர் பதே சந்த் மங்கத்ராம் வாஸ்வானி என்ற ரெவின்யூ இலாகா அதிகாரி. 'சுந்தர சாஹித்ய' என்று புகழ் பெற்ற தொகுப்பை தமது சகோதரர் மேல் ஹாராமின் பெயரால் எழுதி அவர் வெளியிட்டார். பலர் அவரைப் போல எழுத விரும்பி முயன்று பார்த்துள்ளனர். குழந்தைகளுக்காக முதன்மையான கவிதைகளை இயற்றியவர்கள் பேவாஸும் (கிஷின் சந்த் கத்ரி) அவரது மாணவர் துகாயாலும். கிராமங்களிலும் அவை பாடப் பெற்றன. அவற்றை அறியாதார் இல்லை. சென்ற இருபது ஆண்டுகளில் ஸிந்தியில் புகழ்பெற்ற எழுத்தாளர் குழந்தை இலக்கியங்களை பதிப்பித்து இருக்கின்றனர். இவர்களில் விடாமுயற்சியுடன் பாடுபட்டு வந்திருப்பவர் லால்சந்த் அமர்டினோமால்.

தொழில் நுட்ப நூல்களும் 'கனமான' படைப்புக்களும் ஸிந்தியில் மிக அரிது. வெகு அபூர்வமாக வெளி வருகின்றன. ஸிந்தியில் ஒரே ஓர் எழுத்தாளர் மட்டும் அத்தகைய நூல்களை எழுத முயன்றுள்ளார். அவர் தான் மிர்ஜா காலிச் பெக். அவரது படைப்புக்கள் இத்துறையில் முக்கியமாக மொழி பெயர்ப்புக்கள்தாம். 'கனமான' நூல்களை வெளியிடுவதற்கு ஹரிசிங், மோகர்தாஸ் போன்ற பிரசுரகர்த்தர்கள் முன் வந்தனர். உருதுவிலிருந்து பொழி பெயர்ப்பான வைத்திய, தொழிலியல் துறைகளைப் பற்றியவை அந்நூல்கள். இலக்கிய

வகையில் அவற்றின் மதிப்பு மிக மிகக் குறைவு. விவசாயம், பொருளாதாரம், தொழில் துறைகளைக் குறித்து ஸிந்தியில் வந்துள்ள சர்க்காரின் வெளியீடுகள் வழக்கம்போல் உப்பு சப்பில்லாதவை. ஸிந்தியில் முதன் முதலாக அகராதிகளைத் தயாரித்தவர்கள் ஸ்டாக், டிரம்ப், ஷர்ட் போன்ற ஐரோப்பியர்கள்தாம். நரூமால், துலாமால் பூல்சந்த் ஆகியோர் பின்னர் அரும்பொருள் விளக்கங்களையும் அடைவுகளையும் தயாரித்து வெளியிட்டுள்ளனர். ஸிந்தியில் மிகச் சிறந்ததும் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பெறுவதுமான அகராதி, மேதையும் பல துறைகளில் எழுதி புகழ் பெற்றவருமான பரமானந்த மேவாராம் தயாரித்ததுதான். ஆனால் அது வெளியாகி ஐம்பது ஆண்டுகள் ஆகின்றன. அதை அடியோடு திருத்தி அமைக்க வேண்டியிருக்கிறது.

## SELECT BIBILIOGRAPHY OF SINDHI LITERATURE

*Shah Latif.*
By Lilaram Watanmal.

*Sind and its Sufis.*
By Jethmal Parsram; Theosophical Publishing House, Adyar, Madras; 1924.

*Shah Abdul Latif of Bhit.*
By H. T. Sorley, Oxford University Press; 1940.

*Desert Voices.*
By T. L. Vaswani; Ganesh & Co., Madras.

*Linguistic Survey of India.*
By G. A. Grierson, Vol. VIII, Pt. 1, pp. 1–231.

# ஹிந்தி இலக்கியம்

ஸச்சிதானந்த எச். வாத்ஸ்யாயன

## சரித்திரக் கண்ணோட்டம்

ஆட்சேபத்தைத் தெரிவிக்கும் சம்பிரதாயமுள்ள மொழி ஹிந்தி. இப்படிச் சொல்வது முரன்பாடுள்ள ஒரு உண்மை. தொடக்கத்திலிருந்தே ஹிந்தி நூல்கள் எதிர்ப்பை வெளிப்படுத்தும் வகையில்தான் ஏறக்குறைய உருவாகி வந்தன. தெளிவாக வரையறுக்கக்கூடிய குழுக்கள் ஏதாவது ஒன்றை ஆட்சேபிக்கும் வகையில் எழுதி வந்துள்ளன. இந்த ஆட்சேபம் எல்லா நிலைகளி லும் முற்போக்குத் தன்மை வாய்ந்தது என்று சொல் வதற்கில்லை. மாறுதலை எதிர்க்கும் பிற்போக்காகவும் அது அடிக்கடி செயல்பட்டு வந்துள்ளது. அழிந்துபோன ஒரு சம்பிரதாயத்தை அல்லது காலாவதியாகி விட்ட ஒரு உரிமையை ஆதரிக்கும் வகையில், புது வழிகளைப் பின் பற்ற விரும்பும் நல்ல விருப்பத்துக்கு எதிரிடையாக, குறுகிய மனமுள்ள துவேஷமும் அதில் இடம் பெற் றுள்ளது. ஆனால் எப்போதுமே ஆட்சேபிக்கும் எண்ணமே இருந்து வந்தது. எழுத்தாளன் ஏதாவது ஒரு வகையில் ஓர் இயக்கத்தை நடத்துபவனாகவோ, ஆசானாகவோ, தத்துவ உபதேசியாகவோ, ஒரு குறிப் பிட்ட வழியை பிரபலப்படுத்தும் பிரசாரகனாகவோ இருந்து வந்திருக்கின்றான். சமயம், மத நம்பிக்கை,

தத்துவம், கடவுள், படையெடுத்தவன், கொடுங்கோலன், தெய்வ நிந்தனை செய்பவன், கடுமையான நியதிகளை அனுஷ்டிப்பவன், வீடே கதி என்றிருப்பவன், இயற்கை, காதல், இலக்கியம் இவற்றிற்காக பிரசாரம் செய்பவனுகவே அவன் இருந்து வந்திருக்கின்றுன்.

இந்தப் போக்கிற்கு சரித்திர பூர்வமான காரணங்கள் நிச்சயமாக உண்டு. வரலாற்றின் நேரடியான மோதலை சுவைத்துள்ள பிரதேசத்தின் மொழி ஹிந்தி. உரிமை பெற்றிருந்த வகுப்புகளையும், சுக வாழ்வையும், பொழுது போக்குகளையும் ஸம்ஸ்கிருதம் பிரதிபலிப்பதாக இருந்து வந்தது. அதற்கு எதிராக, மக்களின் உணர்ச்சிகளையும், ஆசாபாசங்களையும் தெரிவிக்கும் பொறுப்பு பிராகிருதங்களுக்கும், அபபிரம்சக் கிளை மொழிகளுக்கும் வாய்த்தது. அவற்றின் பொறுப்புகள் வளரலாயின. புத்த சமயச் சிந்தனைகளின் செல்வாக்குக் காரணமாக, யாக யக்ஞச் சடங்குகளையும், ஜாதி முறைச் சிடுக்குகளையும் புறக்கணிப்பதில் தொடங்கி, விரைவில் தாந்திரிக முறையில் வியப்பூட்டும் இரகசியங்களுக்கு எதிராகக் கிளம்பி, சிக்கலான பல்வேறு செல்வாக்குகளை எதிர்க்கும் போக்கு உருவாயிற்று. உலகத்தை முற்றிலும் துறக்கும் நிலைக்கு அது கொண்டுபோய் விடவில்லை. ஆனுல் சாதாரண குடும்பஸ்தன் தனக்கு பொறுப்புண்டு என்பதை மறுப்பதில், அல்லது அதைத் தட்டிக் கழிப்பதில் அது கொண்டு போய் விட்டது. இஸ்லாத்தைப் பின்பற்றியவர்கள் குரூரமாகவும், சகிப்புத் தன்மையின்றியும் நடந்துகொண்டுங் கூட, அதன் தாக்குதலானது சமுதாயத்தில் சமத்துவத்தை வளர்க்கும் விடுதலைச் சக்தியாக விளங்கியது. ஆட்சேபத்தின் தன்மையை அதுவும், படையெடுத்தோர் விளைவித்த நாசங்களும் மேலும் மாற்றிவிட்டன. பேரராட்டத்தின் தன்மைக்கு ஏற்ப கட்டுப்பாடான வகையில் உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் சாதனமாக ஹிந்தி அமைந்தது. நடத்தைக்கு நியதிகளை வகுத்து, ஆனுல்

நம்பிக்கை விஷயத்தில் சுதந்திரத்தை அளித்த ஒரு மதமும், ஒரு சம்பிரதாயத்தை உறுதியுடன் பற்றி நின்று நடத்தை விஷயத்தில் பல்வேறு வேற்றுமைகளை அனு மதித்த ஒரு மதமும் மோதிக்கொண்டன. ஒற்றுமை யைத் தன்னிடையே வளர்த்து, ஒழுக்க முறைகளைக் கண்டிப்பாக்கி, ஆத்ம சோதனையில் ஈடுபாடுகொள்ள விரும்பிய ஒரு சமுதாயத்தின் கருத்துகளை வெளிப்படுத் தும் சாதனமாக விளங்கிற்று ஹிந்தி. இஸ்லாம் சிறுகச் சிறுகப் பரவி, முஸ்லிம் ஆட்சியின் கீழ் அதிகாரம் திரள ஆரம்பிக்கவே, ஹிந்தியானது ஒடுக்கப்பட்ட மக்களின் மொழியாக வளர்ச்சி காணலாயிற்று. பிரித்தாள்வது என்ற பிரிட்டிஷ் கொள்கை இந்தக் கருத்துக்கு வலுவூட்டியது. உருதுவுக்கு இடைவிடாத ஆதரவு தரப் பட்டு வந்தது. காரணம் மொழியென்ற வகையில் அதற்கு இருந்த தகுதியல்ல. சலுகை பெற்ற ஒரு வகுப்பின் மொழியாக இருந்ததுதான் அந்த ஆதரவுக்கு முக்கிய காரணம். ஒரு வகுப்பாரின் மொழி என்ற பொய்யான அந்தஸ்தை சிருஷ்டித்து அதை அப்படியே நம்புவதற்கு பிரிட்டிஷார் ஊக்கமளித்தனர். 19-ம் நூற்றுண்டில், பழம் பெருமையை நாடிய இயக்கங்களும், அதற்கு நேர் எதிராக வகுப்புவாத உணர்ச்சி வளர்ந்து வந்த போக்கும் இந்த மனப்பான்மையை தீவிரமாக்கின. வகுப்புவாதப் போக்கின் செல்வாக்கை மிகைப்படுத்திக் கூறியிருக்கலாம். தேசியத்தில் பொதுப்படையான வளர்ச்சியை விட இந்த வகுப்புவாதச் செல்வாக்கு உண்மையில் குறைந்த முக்கி யத்துவம் உள்ளதாகவே இருந்து வந்தது. தேசியத்தின் மிகச் சிறந்த சாதனமாக அமைவது ஹிந்திக்கு இயற்கை யாகவும், சுலபமாகவும் இருந்தது. (ஹிந்தியில் பேசு

---

1. வங்காளி மொழியின் சாதனையைக் குறைத்துகூற நான் விரும்பவில்லை. வங்க மறுமலர்ச்சியின் செல்வாக்கை நேரடியாகவும் மொழிபெயர்ப்புகள் மூலமாகவும் ஹிந்தியானது சுவைத்து ஜீரணித்துக்கொண்டது. எனினும் வங்காளி மொழி

வோர் எண்ணிக்கையில் அதிகமாக இருப்பதும் இதற்குக் காரணம்). பழம் பெருமையை மீண்டும் நிலைநாட்டப் பார்த்த ஆசையானது மதச் சீர்திருத்த இயக்கங்களாகக் கிளைத்தது. அதில் ஒரு புதிய மதச் சார்பற்ற பண்பாட்டின் கருவைக் காணலாம். 1875-ல் நிறுவப்பெற்ற ஆரிய சமாஜம் பழம் பெருமையை புதுப்பிக்கும் சமய இயக்கமாகி, ஒழுக்க உயர்வை அடிப்படையாகக் கொண்டிருந்ததாயினும், சம்பிரதாயத்தின் உருவகமான பண்பாட்டின் சிறப்பானது மக்களை ஒருசேர இணைத்து வைக்கும் சக்தியாக இயங்கிற்று. ஒரு சமுதாயத்தின் மொத்த அனுபவமும், நிர்மாணத் துறைப் பணியாற்றுதலும் சேர்ந்து விரிவான, நிலைத்து நிற்கக்கூடிய நற்பயன்களை அளிக்கக்கூடும் என்பது புலனாயிற்று.

ஹிந்தியானது தன் வரலாறு நெடுக பெரும்பாலும் முரண்பாடு உடையதாகவே இருந்து வந்திருக்கிறது எனத் தோன்றுகிறது. ஹிந்தியானது மத்திய தேசத்தின் மொழி. ஆனால் தொடக்கத்திலிருந்தே அது ஹிந்து சிந்தனைகளை வெளிப்படுத்தும் ஜீவநதியாகவே செயல்பட்டு வந்திருக்கிறது. தனி நபரின் சம்பிரதாயச் சிறப்புகளையும், உணர்ச்சிகளையும் வெளிப்படுத்தும் தன்மையிருந்த போதிலும், சாதனை சம்பந்தப்பட்டவரை தனி நபரின் உயர்வை அது பிரகாசப்படுத்தவில்லை. அதாவது மிக மிகப் பெரிய இலக்கிய பீமன்களான தனி நபர்களின் தோற்றம் ஹிந்தியின் வரலாற்றில் மிக மிகக் குறைவு. சிந்தனைச் செறிவுள்ள இயக்கங்களும் உணர்ச்சி பூர்வமான அபிமானமுள்ள இயக்கங்களுமாக அது உருப்பெற்றது. தனிப்பட்டவர்களின் சாதனைகளைவிட சில போக்குகளைக் காண்பிக்கும் இலக்கியமாகவே அது இருந்து வந்திருக்கிறது. சில விசேஷ விலக்குகள்

---

ஒரு பிராந்தியத்தில் ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தில் பிரபலமாக இருந்தது என்பதும், ஹிந்தியைப் பேசுபவர்கள் எண்ணிக்கையில் அதிகம் என்பதும் அடிப்படையான விஷயங்கள்.

இதற்கு உண்டு. 19-ம் நூற்ருண்டிலிருந்துதான் தனிப் பட்ட கலைஞனின் அந்தஸ்து முக்கியத்துவம் பெற லாற்று. அவன் தனித் தன்மை உள்ளவன், நிர்ப்பந்த மில்லாதவன் என்ற மேலைநாடுகளின் கருத்து அலை மோதியது. கலைஞனின் பணியைப்பற்றிய எண்ணத்தில் ஏற்பட்ட மாறுதல் தெளிவானது, பெரிய விளைவுகளுடன் கூடியது. எனவே இதை கலைஞனின் விடுதலை என்று கூறுவது கூடப் பொருத்தமாக இருக்கும். இந்த நூற் ருண்டில் 1930 முதல் 1940 வரை உள்ள காலத்தை மார்க் ஸீய வாதிகள் விமரிசனம் செய்கையில் கலைஞனின் நிலைமைக்கு புது விளக்கம் தர முயன்றுள்ளனர். முதலில் சிந்தனைக் குழப்பம் இருந்து வந்தது. பிறகு கட்சியின் கட்டளைகள் மூலம் எழுத்தாளனைக் கட்டுத்திட்டத்தில் வைக்க வேண்டுமென்ற கருத்தை வெளிப்படையாகச் சொல்லி விளக்கம் கூறினுர்கள். இந்த முயற்சி வெற்றி யளிக்கவில்லை. இதைப் பிறகு கவனிப்போம். தனிப் பட்ட எழுத்தாளனுக்கு சுயமாகவே அமைந்துள்ள தகுதி களையும் அவனது தனி குண நலன்களையும் எழுத்தா னது பிரதிபலிப்பதாக இருக்க வேண்டுமென்ற கருத்து 19-வது நூற்ருண்டு முதல்தான் இருந்து வருகிறது. ஹிந்தி மொழியில் சைலி(நடை) மதிப்புள்ள தனியம்சம் என்று உருப்பெற்றது சமீப காலத்தில்தான். தனித் தன்மையுள்ள இலக்கிய நடை என்பது இக்காலத்துத் தோற்றுவாய். பிற இந்திய மொழிகள் விஷயத்திலும் இதுவே உண்மையாக இருக்கலாம். ஆனுல் அதை விளக்குவது இங்கு என் பொறுப்பல்ல.

ஹிந்தியில் நமது காலத்துப் போக்குகளை ஆராய்கை யில் இவை விசேஷ பொருத்தமுள்ளவையாக இருக் கின்றன. மரபையொட்டி ஏற்பட்டுள்ள நிலைமையையும் கண்ணேட்டத்தையும் கருத்திற்கொள்ளாமல், குறிப்பிட்ட சூழ்நிலையில் தனது ஜோலியையும் பணியாற்றலையும் பற்றி தற்கால எழுத்தாளன் என்ன நினைக்கிருன் என்

பதை மதிப்பிடாமல் இன்று காணப்பெறும் பல்வேறு செல்வாக்குகளை பாகுபடுத்தி மதிப்பிட இயலாது. தனிப் பட்ட எழுத்தாளர் குறிப்பிட்ட எந்தத் துறையில் என்ன செய்கிறார் என்பதை விமரிசனம் செய்வதும் அந்நிலையில் தான் சாத்தியப்படும். தன் காலத்து எழுத்தை ஒருவன் மதிப்பிடுவது அபாயம் நிறைந்த பணி. தானே எழுதிக் கொண்டிருக்கும் ஒருவன் இதைச் செய்வதில் சிரமம் நிறைய உண்டு. ஆனால் எங்குமே வர வர, தவிர்க்க முடி யாத வகையில் எழுத்தானது ஒரு கலையாக பரிமளித்து வருகையில் இந்தப் பணியைத் தொடர்ந்து செய்துதான் ஆகவேண்டும். தூரத்துப் பச்சை அழகாகத்தான் இருக்கும். ஆனால் போராட்டத்தின் துன்ப இயல்புகளை அருகிலிருந்து சுவைப்பதில் மனதிற்கு ஓர் ஆறுதல் உண்டு.

## மொழி

இன்றைய நிலவரத்தில் ஹிந்தி இலக்கியம் என்பது பெரும்பாலும் கடீ-போலியில் எழுதப்பெறுவதையே குறிக்கும். டெல்லி–மீரத் பகுதியில் வழங்கும் மொழியே கடீ-போலி. எனினும் எங்கும் ஒரே தரமுள்ளதாகவும் தொடர்நிலை இருப்பதாகவும் கடீ-போலி வளரத் தொடங் கியது சென்ற ஒரு நூற்றாண்டில்தான். இந்த நூற்றாண் டின் தொடக்கத்தில் தான் கவிதையில் அது முக்கியமாக இடம் பெற்றது. அதற்கு முன் கவிதைகளை விரஜபாஷை என்ற சம்பிரதாய மொழியில்தான் புனைவார்கள். விரஜ பாஷை ஆக்ரா–மதுரா பகுதியில் பேசப்பெறுவது. ஹிந்தி என்ற பொதுத் தொகுப்பில் சேர்க்கப்பட்டுள்ள அவதீ, மைதிலி போன்ற பிராந்தியப் பேச்சுமொழி வகைகளில் கவிதைகள் எழுதப்பட்டு வந்தன. ஹிந்தியின் புழக்கத் துக்கு எல்லை கட்ட முயல்வது குறித்து எப்போதுமே சர்ச்சை இருந்து வந்துள்ளது. சமீபகால ராஜீய நிகழ்ச்சி களும் பிராந்திய மொழிகளின் வளர்ந்து வரும் அபிலாஷை

களுமாகச் சேர்ந்து நிலைமையைத் தீவிரமாக்கியுள்ளன. மொழித் தோற்ற ஆராய்ச்சிகள் புதிய சிக்கல்களை விளைவித்துள்ளன. ஹிந்திக்கு வரலாறு பூர்வமான, சம்பிரதாயமான அந்தஸ்து இல்லையென்பதற்கு ஆதாரம் தருபவையாக அவை இருக்கின்றன. ஹிந்திச் சரித்திராசிரியர்கள் எல்லோருமே ஒப்புக்கொண்டுள்ள சம்பிரதாயமான கருத்தை இங்கு சுருக்கமாகத் தருவது பயனுள்ளதாக இருக்கும். இந்தக் கருத்தை அடிப்படையாகக் கொண்டு தான் ஆராய்ச்சியாளன் தன் பணிக்குத் தேவைப்படும் மூல விஷயங்களை யெல்லாம் பெற வேண்டியிருக்கிறது.

பஞ்சாபின் மேற்கு எல்லையிலிருந்து பீஹார் கிழக்கு எல்லை வரையிலும் இந்தியா–நேப்பாள எல்லையிலிருந்து மத்தியப் பிரதேசம் வரையிலுமுள்ள பகுதிகளில் பேசப் பெறும் மொழிதான் ஹிந்தி என்று சம்பிரதாயமாக கூறப் படுகிறது. மற்ற மொழி வழிப் பிரதேசங்களைப் போல இதற்குப் பெயர் கிடையாது. மத்திய தேசம் (மத்திய பிராந்தியம்) என்று இதைச் சம்பிரதாயமாகக் கருதுவதுண்டு. பிற மொழிகளைப் போல அல்லாமல், ஹிந்தியானது, பல்வேறு பிரதேசப் பகுதியினர் பேசும் சிறுமொழிகள் கொண்டதாக இருக்கிறது. இவையெல்லாம் ஒரே மொழியிலிருந்து கிளைத்தவை அல்ல. அருகாமையில் பேசப்பெறும் பிற மொழிகளும் கலந்திருப்பதால் மேற்படி சிறு மொழிகளுக்கும் அவற்றுக்கு மிடையே பொது அம்சம் அதிகமாக இருக்கக்கூடும். மொழி உருப்பெறுவதற்கு முன் ஹிந்தி என்றால் ஒரு சம்பிரதாயம் என்று கருதினர்களே தவிர, மொழி என்று மதிக்கவில்லை. தொடர்ச்சியாக ஒரு மத்திய கேந்திரத்தை நோக்கி, நிர்மாண ரீதியில், அறநெறிப் பிரசார வழியில் இணைந்து, மாபெரும் இலக்கிய முயற்சியாக அது உருப்பெற்று, இந்தப் பிராந்தியம் பூராவிலும் பல்வேறு சிறு மொழியினர் தம்மிடையே அளாவளாவுவதற்கான ஒரு மொழி

வடிவமாக அமைந்தது. ஐக்கியமாக இணையும் இந்தச் சம்பிரதாயந்தான் ஹிந்தியையும் 8-வது நூற்றுண்டின் மொழியான அபபிரம்சத்தையும் இணைத்து வைப்பது. புத்தமதப் பிரசாரகர்களின் பாடல்கள், குறள்கள் முதலிய வற்றிலிருந்து ஹிந்தியின் இலக்கிய வரலாற்றைத் தொகுக்க வரலாற்று ஆசிரியர்கள் முயல்வதற்கு இதுவே நியாயமான காரணமாகிறது. 8-வது நூற்றுண்டில் அபபிரம்சத்திலிருந்து ஜனித்த பல்வேறு சிறு மொழிகள் நிறைய இருந்தன. ஆனால் வட இந்தியா பூராவிலும் பரவியிருந்த ஒரே சீரான இலக்கிய அபபிரம்சம் ஒன்றே ஒன்றுதான் என்று நம்புவதற்குப் போதிய காரணங்கள் இருக்கின்றன. பிற வட இந்திய மொழிகளில் காணப் பெருத வகையில் அபபிரம்சத்தின் சம்பிரதாயங்கள் உண்மையாகவும் விரிவாகவும் ஹிந்தியில் வழிவழியாகக் காப்பாற்றப்பட்டு வந்திருக்கின்றன. இடைக்காலத்தில் (12-வது நூற்றுண்டு முதல் 16-வது நூற்றுண்டு வரை) மகத்தான பக்தி இயக்கப் பரம்பரையானது ஹிந்தியிலும் அதன் கிளை மொழிகளிலுந்தான் பாதுகாக்கப் பெற்று வந்துள்ளது. ஒழுக்கமுறை, ஆத்மானுபவம், பிரவசனம், சங்கீத காலட்சேபம் போன்ற வகைகளில் பணியாற்றிய ஞானிகளான கவிஞர்கள் விரஜபாஷையையும், அவதீயையுந்தான் முக்கியமாகக் கையாண்டிருக்கிறார்கள். அத்தகைய கவியின் தோற்றத்தைப் பொறுத்திருந்தது பிராந்தியமொழி வளர்ச்சி. சூர்தாஸ், துளஸிதாஸ், கபீர், தாடுதயாள் ஆகியோர் ஹிந்தி பிரதேசத்தைச் சேர்ந்தவர்கள். ஆனால் கிழக்கு, வடமேற்கு, தெற்கு பகுதிகளைச் சேர்ந்த பக்தர்களான கவிஞர்களின் தனிச் சிறப்புக்களை அவர்களுடைய ஹிந்தியில் காணலாம். அவர்கள் மூலம் இந்த அம்சங்கள் இங்குமங்குமாகப் பரவலாயின.

சிக்கல் நிறைந்த சர்ச்சைக்குரிய இவ்விஷயத்தை மேலும் கவனிப்பது அவசியமல்ல. இன்று, சந்தேகமற,

ஹிந்தியானது 15 கோடி மக்களால் பேசப்பெறும் மொழியாக இருக்கின்றது. அது வழங்கும் பிரதேசம் இந்தியாவில் ஏறக்குறைய பாதி நிலப்பரப்பு உள்ளது.

## தற்காலம் : தொடக்கம்

இந்தப் பிரதேசத்தின் பிரதான இலக்கிய மொழி என்ற அந்தஸ்தை கட-போலி வேகமாக அடைவதற்குக் காரணமாக இருந்த சக்தி வாய்ந்த இயக்கம் ஹிந்தி ஐக்கியச் சம்பிரதாயத்தில் தோன்றியது. அது பனாரஸில் தொடங்கியது. அன்றும் இன்றும்கூட போஜ்புரி என்ற ஹிந்தி வகைப் பிரிவுதான் அங்கு அதிகமாக வழங்கியது. அவதீ பகுதியைச் சேர்ந்த எழுத்தாளர் மேலும் அதைக் கையாண்டு போஷித்தனர். அதில் கட-போலிப் பிராந்தியம் அவ்வளவு உற்சாகம் காட்டவில்லை. விரஜபாஷைப் பகுதியிலும் ஏறக்குறைய அதே நிலைதான். அங்கிருந்த மக்கள் தமது சொந்த மொழிவகைகளில் விசேஷப் பற்றுதல் கொண்டவர்களாக இருந்தனர். வேர் விட்டிருந்த தமது பழைய நிலையிலிருந்து தமது மொழி அகற்றப்படுவதை அவர்கள் விரும்பவில்லை.

கட-போலி ஹிந்தியின் வளர்ச்சிக்கு ஊக்கம் அளித்த மற்றொரு சக்தி உருதுவின் வளர்ச்சி. அதே சூழ்நிலையில் அதே வழிவழியில் ஒரு சம்பிரதாயத்தை அது கொண்டாடி வந்தது. படிப்படியாக ஹிந்திக்குச் சாதகமான ஒரு திருப்பத்தை அமைத்துக் கொடுத்தது, அதன் பண்பாடு விரிவான அடிப்படையைக் கொண்டிருக்கும் தன்மைதான். உருதுவுக்கு அரசாங்க ஆதரவு இருந்தபோதிலும்[2] ஹிந்தி இந்த நிலையை அடைந்ததற்கு காரணம் பண்பாட்டைப் பற்றிய அதன் வழியானது, மதச் சார்பற்ற

---

2. பாரஸீக மொழிச் செல்வாக்கு மிகுதியாக உள்ள உருது 1836-ல் அரசாங்க மொழி ஆயிற்று. அதற்கு முன் பாரஸீகம் அரசாங்க மொழியாக இருந்தது.

விரிவானதோர் அஸ்திவாரம் கொண்டதாக இருந்தது தான். உருது அரசவைத் தொடர்புடன்கூட, நாகரிக மக்கள் கையாண்டு வந்த மொழியாக வளர்ந்தது. இந் நிலைக்கு இயல்பாகவுள்ள சில குறைகளும் நலன்களுடன் கூடச் சேர்ந்துகொண்டன. நாட்டிலே பரவலாகக் காணப் பெற்ற கொந்தளிப்புக்கு ஏற்ற தெம்பும் நெகிழ்ச்சியும் அதில் இருக்கவில்லை. ஹிந்தியானது கவர்ச்சிக் குறைவாக இருந்தபோதிலும், அதன் தர நிர்ணயம் முற்றிலும் தெளி வாக இல்லாத போதிலும், ஜீவ சக்தியும் நிலைமைக்கேற்பப் பயன்படும் நெகிழ்ச்சியும் அதில் இருந்தன. ஆரம்ப முயற்சிகள் கடுமையாகவும், தத்தித் தத்தித் செல்வன வாகவும் இருந்தது என்னவோ உண்மைதான். ஸம்ஸ் கிருதத்திலும் உருது-பாரஸீக மொழிகளிலும் தமக்குள்ள ஞானத்தை வெளிப்படுத்துவது அவசியமென 19-வது நூற்ருண்டின் பிற்பகுதியில் ஹிந்தி எழுத்தாளர் பெரும் பாலோர் கருதினர். தாம் கையாள்வது சிறப்பு-அணிகள் குறைந்த மொழியாக இருந்தும்கூட, மக்களுக்குத் திருப்தியளிக்கக் கூடியதாக இருந்ததை அவர்கள் உணர்ந்தனர். ஆனல் அதே சமயத்தில் எழுத்தாளர் என்ற வகையில் தமக்குள்ள தகுதிகளை நிரூபணம் செய்ய வும் முயன்றனர். ‘பாரதேந்து’ ஹரிச்சந்திரா (1850–1883) முதல் மகாவீர் பிரசாத் துவிவேதி (1868–1938) வரை யுள்ள பரம்பரை ஆற்றிய பணியின் பயனுக ஹிந்தி இலக்கியத்தின் தரம் நிலை நிறுத்தப் பெற்றது 1910-க்குப் பிறகுதான். அதன் விளைவாக பழைய போக்கு மறைய லாயிற்று. பிரேம் சந்த் (1880–1936) உருது நாவலாசிரியர் என்று பெயரும் புகழும் பெற்றவர். அவர் ஹிந்தியில் எழுத முற்பட்டவுடனே இந்தப் போக்கு உறுதியாயிற்று. இரண்டு மொழிகளுக்குமிடையே சர்ச்சை மீண்டும் கிளம் பியது. ராஜீய காரணங்களினல் கசப்பும் கோபமும் இதில் கலந்து கொண்டன.

பாரதேந்து ஹரிச்சந்திராவின் படைப்புக்கள் விசேஷச் சிறப்புக் கொண்டவையென இன்று ஒப்புக் கொள்ள மாட்டார்கள். மகாவீர பிரசாத துவிவேதியின் நூல்கள் இன்னும் தாழ்வானவையாகவே மதிக்கப்பெறும். ஆனல் பண்பாட்டின் மறுமலர்ச்சியில் ஹரிச்சந்திராவுக்கு விசேஷச் செல்வாக்கு உண்டு. அவர் தமது சொந்த வாழ்க்கையில் விரிவான பரந்த ஞானஸ்தராகவும், தானத்தில் சூரனுகவும் அச்சமில்லாமல் வீர வாழ்வு நடத்தியவராக வும் இருந்தது அந்தச் செல்வாக்கு விரிவடைவதற்குக் காரணமாயிற்று. துவிவேதியின் தகுதி, யோக்கியப் பொறுப்பு, ஆசிரியர் என்ற வகையில் அலுப்பு சலிப்பு இல்லாமல் உழைத்தது ஆகியவை காரணமாக (1903-1920) தற்கால ஹிந்தி உரைநடையின் அமைப்பாளர் என்ற புகழ் அவருக்கு ஏற்பட்டது. ஹரிச்சந்திராவும் அவரை உடனடியாக சூழ்ந்திருந்த வட்டத்தினரும் ஏராளமாக எழுதிக் குவித்தனர்; பலதரப்பட்ட நூல்களைப் படைத்தனர். அவை எங்கும் செல்லுபடியாகக் கூடிய தன்மை பெற்று விளங்கின. அவற்றின் தோரணையில் ஒரு கவர்ச்சி இருந்தது. எப்போதுமே அவை பிழையற்றிருந்தன என்று சொல்வதற்கில்லை. இந்த வட்டத்தைச் சுற்றிப் பெரிய வட்டம் ஒன்று துரிதமாக உருப்பெற்று வந்தது. ஹிந்தி மொழி எழுப்பிய ஆட்சேபக் குரலானது பொதுஜன ஆதரவுள்ள, சமூகப் பண்பாட்டுள்ள இயக்கமாக மாறியது. ஆங்கில இலக்கியத்தின் பரிச்சயம், ஓரளவு கருத்துக்களை எடுத்துச் சொல்லும் வகைகளை விரிவாக்கியது. கவிதைகள், நாடகங்கள், கேலிக் கூத்துகள், சிறு வியாசங்கள், சர்ச்சைப் பிரசுரங்கள், ஆய்வு நூல்கள், ஹாஸ்யக் கட்டுரைகள், தனி நபர்களைப் பற்றிய கட்டுரைகள், சிறுகதை, நாவல் என்று வளர்ச்சி ஏற்பட்டது. ஹரிச்சந்திராவின் காலத்திலிருந்து 19-வது நூற்றுண்டின் இறுதிவரை வங்காளி மூலமாகத்தான் ஆங்கிலத்தின் செல்வாக்கு பிரயோகமாயிற்று. இதற்குக் காரணம்

பிரிட்டிஷ் ஆட்சியாளரின் தலைமையிடமாகவும், ஆங்கிலக் கல்வியின் கேந்திரமாகவும் கல்கத்தா இருந்து வந்தது தான்.[3] நூற்றாண்டின் திருப்பத்தில் ஆங்கிலத்துடனும் பிற ஐரோப்பிய மொழிகளுடனும் நேரிடையான தொடர்பு ஏற்பட்டது. இது மிகுந்த சுறுசுறுப்பானதாகவும் காணப் பட்டது. ரஷியக் கதைகளும், ஓரளவுப் பிரெஞ்சுக் கதை கவிதைகளும் செல்வாக்கு அடைந்தன. சரித்திர சம்பந்த மான வீரம், காதல் வகை நூல்கள் ஹிந்தியில் நேரிடை யாகவோ வங்காளி மூலமாகவோ மொழி பெயர்க்கப் பட்டன. 19-வது நூற்றாண்டின் முற்பகுதியில் வீரக் கதைகள், மர்மக் கதைகள், அற்புத சாதனைக் கதைகள், லகுவான காதல் கதைகள்தாம் முக்கியமாக மக்களுக்குக் கிடைத்து வந்தவை. இந்த நிலைமை மாறிவிட்டது. நேருக்கு நேராக பிரத்தியட்ச நிலையை விவரிக்கும் நாவல், தற்கால சிறுகதை தொடர்ந்து வந்தன. விக்டோரியா காலத்து மாபெரும் எழுத்தாளரின் படைப்புக்களில் ஹிந்தி எழுத்தாளனுக்குப் பரிச்சயம் ஏற்பட்டது. இசை வடிவக் கவிதைகளைப் புனைந்த வீர கவிதா பரம்பரை யினரின் செல்வாக்கும் வளரலாயிற்று. இவர்கள் மட்டு மின்றி போப், டிரைடன், மில்டன் போன்றோரின் நீண்ட வரலாற்றுக் கவிதைகள் தெரியலாயின. ஹியூகோ, டுமாஸ் அறிமுகமாயினர். மோலியேர், பால்ஸாக், பிளாபர்ட், மபஸாந்த், ஜோலா, ஆகியோரின் படைப்புக்களும் தெரிய லாயின. டால்ஸ்டாய், டர்கனீவ், செக்காவ் ஆகியோரின் பெயர்கள் நன்ருய் அறிமுகமாகிவிட்டன.

முதல் உலக யுத்தத்தின் இறுதியிலிருந்துதான் நவீன ஹிந்தி தொடங்குவதாகக் கூறலாம். இப்போதைய போக்குகளைப் பற்றிய ஆராய்ச்சியை ஒரு தலைமுறைக்குப்

---

3. கல்கத்தாவில் முதல் ஆங்கிலக் காலேஜ் ஏற்பட்டது 1830-ல். கல்கத்தா பள்ளிக்கூட புத்தக சங்கம் 1817-ல் நிறுவப் பெற்றது. அதேபோன்று ஆக்ரா சங்கம் 1833-ல் தோன்றியது. 1832-ல் இந்திய மொழிகளில் பைபில் வழங்கப் பெற்றது.

பின்னுல் வைத்துக் கொள்ளலாம். குழப்பமும் கவலையும் நிறைந்த காலம் என்று இதை ஆய்வுத் துறையினர் பேசியிருக்கிருர்கள். ஹிந்தியில் இவ்விரண்டும் ஒரே காலத்தில் உருப்பெற்று, ஏறக்குறைய ஒரே பொருள் உள்ளவையாகவும் இருந்தன. இரண்டு உலக யுத்தங்களுக்கிடையே இருந்த காலத்தை ஒரு மூன்ருவது பெயராலும் அழைக்கலாம். அது குற்றமாகாது. ஆசாபங்கம் நிறைந்த காலமென்று அதைக் குறிப்பிடுவது தவருகாது. தனது தனிப் பண்பு நிலையைக் கண்டறிய தெரிந்தோ, தெரியாமலோ எழுத்தாளன் முயன்று வந்ததுதான் இந்தக் காலத்து இலக்கியத்தின் பின்னணிச் சக்தியாக இயங்கியது. மேலே குறிப்பிட்ட மூன்றும் தவிர்க்க முடியாத மூன்று வெவ்வேறு போக்குகளைப் பிரதிபலித்தன. பரந்து காணப்பெற்ற மனக்கசப்புக்கள், பொருளற்ற போக்குகள், ஆசாபங்கம், திருப்தி நிலை ஆகிய எல்லாமே இதிலிருந்து பிறந்தவைதாம். கலைஞனைவிட அவனது காலம் பிரதானமென்று மதிக்கின்றது சம்பிரதாயம். எனவே இலக்கிய முயற்சிகள் தனிப்பட்ட புருஷர்களை சிருஷ்டிப்பதைவிட சில வகைப் படைப்புக்களில் அதிக அக்கறை கொண்டவையாக இருந்தன. தனி நபரின் துல்லியமான உணர்ச்சிகளை எடுத்துரைக்கும் போக்கு மாறி, கவிதையும் கலைஞனின் நோக்கங்களையும் அகங்காரங்களையும் வெளிப்படுத்துவதாயிற்று. தனக்குத் தனித்தன்மையுண்டு என்பதை ஹிந்தி எழுத்தாளன் கண்டுகொண்டபோது மக்களைப் பற்றிய கவலை தனக்கு உண்டு என்பதையும் உணர்ந்தான். இது வேதனை நிறைந்தது, சங்கடங்களுடன் கூடியது. அதற்குப் பிந்திய எழுத்து வடிவங்களில் காணப்படும் அனுபவ முதிர்ச்சியும் அமைதியும் பொருள் படைத்தவை. புதிய நிலைமைக்கேற்ப தனிப்பட்ட எழுத்தாளன் வேகமாகத் தன்னைச் சரிப்படுத்திக் கொண்டான் என்பதையே அது காட்டுகிறது.

**சாயாவாதம், பிரகதிவாதம்**

சம்பிரதாய மோஸ்தர்களில் எழுதுவது நீடித்தது. பழைய வடிவங்களையும் உத்திகளையும் துறக்காமல் புதிய சிந்தனைக்கு ஏற்ப அவற்றை ஓரளவு மாற்றிப் பயன் படுத்திக் கொள்ளும் முயற்சி வலுத்தது. இரண்டு உலக யுத்தங்களுக்கிடையான காலத்தில் இரண்டு பிரதான இலக்கிய இயக்கங்கள் உருவாயின. ஒன்று கவிதையைப் பற்றியது, மற்ருென்று பொதுப்படையானது.

புதிய உணர்ச்சி-நிலைகளை அனுதாபத்துடன் தெளிந் தறிந்து இலக்கியத்தைச் சிருஷ்டித்தவர்களில் மைதிலி சரண் குப்தா (1886–) குறிப்பிடத்தக்கவர். அவர் சம்பிரதாயமான வடிவங்களைக் கண்டிப்பாகப் பின்பற்று பவர். அவரது சிருஷ்டிகளில் புதிய இயக்கங்களில் எதன் செல்வாக்கும் இல்லையென்று சொல்லமுடியாது. அவரது இசைக் கவிதைகள் இதற்கு எடுத்துக் காட்டு. ஆனல் 50 ஆண்டுகளுக்கு மேற்பட்ட இலக்கியப் பணியில் சம்பிரதாயத்தை விசுவாசத்துடன் பின்பற்றுகையிலேயே புதுப் பரீட்சைகளை அவர் தொடர்ந்து செய்து வந்திருக் கிருர். மகா வீரப் பிரசாத் துவிவேதி வரையறுத்துச் சென்ற தரங்கள் சரியானவை என்பதை, மொழி சம்பந் தப் பட்டவரை, குப்தாவின் படைப்புக்கள் ருசுப்பிக்கின் றன. இந்தத் தரங்கள் பொதுவாக ஏற்கப்படுவதற்கும் அவரது எழுத்து காரணமாயிற்று.

புதியா கவிதா இயக்கமானது அழகுணர்ச்சி, மன நிலை ஆய்வு, சம்பிரதாயச் சடங்குகளுக்கும் ஞான உப தேசங்களுக்கும் எதிரிடையான கலக பாவம் கொண்டது. ஆறு நூற்ருண்டுகளுக்கு முன்னிருந்த பக்தி இயக் கத்தைப் போல, சம்பிரதாயத்தின் நிர்ப்பந்தங்களுக்கு எதிராக, ஹிருதயத்தின் எதிரொலியாக அது உருப் பெற்றது. தனக்குச் சொந்தமான ஒன்றைப் பிரகாசப் படுத்தும் உணர்வு கவிஞனுக்கு ஏற்பட்டது. அதைச் சொல்லியே ஆக வேண்டுமென்ற விருப்பம் தென்பட்டது.

வழிவழியாகத் தனக்குக் கிடைத்த சாதனங்கள் போது மானவையாக இல்லையென்று அவன் அலுத்துக் கொண் டான். மொழி, யாப்பிலக்கணம், பாடல் வடிவங்கள், உத்திகள், தடைகள் முதலியவை அவனது தீவிர புது மனோநிலைக்கு இசைவாக இருக்கவில்லை. எனவே புதியனவற்றைப் படைத்துக் கொண்டான். நிராளா (சூர்யகாந்த திரிபாடி 1896-) சுமித்ராநந்தன் பந்த் (1900–) இருவருந்தான் இந்த இயக்கத்தின் முன் னோடிகள். இருவரும் உயர்ந்த கவிதா அந்தஸ்தினர். ஜயசங்கர பிரசாத் (1889–1937) மகாதேவி வர்மா (1907–) உயர் அந்தஸ்துள்ள கவிஞர்கள். ஆனால் அவர் களை முன்னோடிகள் என்று குறிப்பிடுவதற்கில்லை. முன் னிருவர்களைப் போல இவர்கள் புதிய படைப்புகளை சிருஷ்டித்தனர் என்று சொல்வதற்கில்லை. பந்தும் நிராளாவும் சொல்லாட்சியில், உயிருள்ள எழுத்துக்களை படைக்கும் சாமர்த்தியத்தில், இசை ஞானத்தில் வல்லு னர்களாக இருந்தனர். இயற்கையை புதுமை மெருகுடன் ஆசுகவியாக அவர்கள் வருணித்த திறன் தனிச் சிறப் புள்ளது. தமது காலத்திலும் முன்னாலேயும் இருந்து வந்த கவிதா வழிகளினின்றும் இவர்களது வழி மாறு பட்டது. அதுமட்டுமல்ல, சாயாவாதக் கவிஞர்களின் வழிக்கும் அவர்கள் மாறுபட்டவர்களே. வீரக் கவிதா இயக்கம் என்று இதை வருணிக்கலாம். ஆங்கில வீரக் கவிதா பரம்பரையினர் அல்லது அவர்களில் சிலரது கவிதைகளின் செல்வாக்கு பந்தின் படைப்புக்களில் கணிசமாகக் காணப்பெற்றது. ஆனால் இம்மாதிரி ஒப் பிட்டுப் பேசுவது அபாயமானது. வீரக் கவிதா பரம் பரையைப் போலவே சம அளவில் சக்தி வாய்ந்த ஆனால் அதற்கு நேர் எதிரிடையான மற்றோர் இயக்கம் வந்து இந்தப் பரம்பரையைப் பின்னுக்குத் தள்ளியது. பிரகதி வாதம் அல்லது 'முற்போக்குப் பரம்பரை' என்று இதைக் குறிப்பிடலாம். சாயாவாதம் என்பது இந்திய

வீரக் கவிதா பரம்பரை. அதில் அழகு மிகுந்த இயற்கையை, அருளின் அற்புதத்தைக் காணலாம். தெய்வ பக்தி உள்ளூரக் காணப்பெறும். ஆனால் விதி வழியில் அயர்ந்து போன ஆண்களும் பெண்களும் அதில் கிடையாது. அதைப் போலவேதான் பிரகதி வாதமும் இந்திய முற்போக்கு இயக்கமாக உருப்பெற்றது. வீரக் கவிதா இயக்கத்தின் தலைகீழ் நிலை என்று இதைச் சொல்லலாம். இயற்கையின் அவலட்சணம், காமவெறி நிலை ஆகியவை முக்கியமாக வற்புறுத்தப் பெற்றன. புறக்கணிக்கப் பெற்றவர்களிடம், சமூகத்தில் அடக்கி ஒடுக்கப்பட்டவர்களிடம் அனுதாபம் காணப்படாத இயக்கமாக கவிதா வழி இருந்தது. சுருங்கச் சொன்னால் சாயாவாதம் என்பது அப்போது தொடக்க நிலையிலிருந்த வீரக் கவிதா பரம்பரையும் வேதாந்தமும் சேர்ந்து ஒன்றாக இணைந்தது. பிரகதி வாதம் என்பது பிற்கால வீரக் கவிதா வழியும் மார்க்ஸீய தத்துவ வாதங்களும் சேர்த்து ஒட்டுப்போட்ட இயக்கம்.

சாயாவாதக் கவிஞர்கள் அழகுணர்ச்சி மிகுந்தவர்கள்தாம். ஆனால் கொடுமை, அடக்குமுறை, போன்ற பலவகைப் பிரதிகூலங்களுடன், கஷ்ட வாழ்வு நடத்தி வந்த சாமானிய மக்களின் துயரங்களை அவர்கள் அவ்வளவு நன்றாக அறிய மாட்டார்கள். எனினும் மனிதன் எவ்வாறெல்லாம் துன்பத்துக்கு இரையாக்கப்படுகிறான் என்று முற்போக்காளர் பயங்கரமாக வருணிப்பது போன்ற நிலையும் உண்மையானது அல்ல. சீரழிந்த நிலையில் காணப்பெறுவோரின் மனோவிகாரத்திலிருந்து எழும் படைப்புக்களே இவை. 1880-முதல் ஹிந்தி எழுத்தாளன் மனித சமூகத்தையும் அதன் முயற்சிகளையும் ஒரு பொது நோக்கத்துடன் பார்த்து வருகிறான். அது மதச் சார்பற்ற நோக்கு, சமூகம், பொருளாதாரம் உட்பட பல்வேறு துறைகளில் விமோசனம் அடைவதற்கு மக்கள் போராடி வருவதைக் காண்கிறோம். அவற்றை

மதச் சார்பற்ற நோக்கத்துடன் அவன் அணுகுவதே விமோசனத்தின் ஓர் அம்சமாக விளங்குகிறது. இந்தப் போக்கின் பிரதிநிதி சிறந்த நாவலாசிரியர் பிரேம்சந்த். பொதுப்படையான, தாராளச் சிந்தனையுள்ள இந்த முற்போக்கு மனப்பான்மை பிரகதி வாதத்தின் பிரதான நோக்கமல்ல. ஆரம்ப நிலையில் இத்தகைய கருத்தினரின் ஒத்துழைப்பை பிரகதிவாதிகள் நாடினர். எழுத்தாள னது சமூக அனுதாபங்கள் விரிவடைவதையே நோக்க மாகக் கொண்ட இயக்கமாக அதன் தொடக்கம் ஓரளவு குழப்ப நிலையில் இருந்தது. இலக்கியத்தில் செல்வாக் கும் பொருளும் விரிவடைய வேண்டுமென்ற விருப்பம் காணப் பெற்றது. அதிலிருந்து படிப்படியாக மாறி, சித்தாந்த அடிப்படையில் திட்டவட்டமான கம்யூனிஸ இயக்கமாக அது உருவாயிற்று. முதலில் அதை வெளிப் படையாக அல்லது சங்கேதமாக ஆதரித்து வந்த, தாராளப் போக்குள்ள ஜனநாயக சம்பிரதாயத்தினர் எல்லோரையும் ஒவ்வொருவராக இந்த இயக்கத்தினர் கண்டித்தார்கள். வர வர பிறருக்கு இடம் தராத கம்யூனிஸ இயக்கமாக வளரவே அதன் இலக்கியப் படைப்புகளும் வெளிப்படையாகவே ராஜீயத்தன்மையுடையனவாக மாறின. வரவர கட்டளைகளின்படி இயங்கும் கம்யூனிஸ்ட் தனிக்கூட்ட விவகாரமாக அது மாறிவிடவே, வீரக் கவிதா வழியோ அல்லது பிற வழிகளோ இடம் பெற இயலாது போயிற்று. சகிப்புத் தன்மையில்லாத போக்கின்மூலம் அடிப்படைகளையே தகர்க்க முற்பட்ட தற்கு முன்னரே, இந்த இயக்கத்தைச் சேர்ந்த திறமை சாலிகளான சில எழுத்தாளர்களிடம் கொடுமையில் திளைக்கும் மனப்பான்மை இருக்கவே செய்தது. யஸ்பால் (1904–) நாகார்ஜுன் (1911) இருவரும் திறமையும் சக்தி யும் மிகுந்த எழுத்தாளர்கள். யஸ்பால் ஹிந்தி கற்பனைக் கதைத் துறையில் முன்னணியில் இருப்பவர். இவர்கள் இருவரும் இத்தகைய படைப்புக்களைச் சிருஷ்டித்து

வருகின்றனர். "அஞ்சல்" (ராமேசுவர சுக்லா-1915-), நரேச மேதா (1924) இருவரும் இதற்கு நல்ல எடுத்துக் காட்டுகள். ஆனால் இவர்கள் அவ்வளவு முக்கியமான எழுத்தாளர்கள் அல்ல. ஹிந்திக்குப் புறம்பான சில உதாரணங்களை எடுத்துச் சொல்லக் கூடுமானால் கிருஷ்ண சந்திரர், குவாஜா அஹ்மத் அப்பாஸ் ஆகியோரைக் குறிப்பிடலாம். முற்போக்கு இலக்கிய வழி என்பது எல்லா மொழிகளிலேயும் இருப்பது. இந்த இருவரும் நன்றாக பொதுஜன ஆதரவு பெற்று எழுதுபவர்கள். எனினும் படைப்புகளில் குரூரம் திளைக்கும் போக்கை இவர்களுடைய நூல்களில் நிறையக் காணலாம்.

முற்போக்கு எழுத்து என்றால் போராட்ட சுபாவமுள்ள தொழிலாளி, விவசாயி பற்றிய எழுத்தாகத்தான் இருக்க வேண்டுமென்ற ஒரு தவறான அபிப்பிராயத்தில் பிரகதிவாதிகள் அத்தகைய பாத்திரங்களை, போராட்டச் சூழ்நிலைகளை ஏறக்குறைய ஒரே மாதிரி வைத்து எழுதியுள்ளனர். ஹிந்தி நாவலை அத்தகைய வருந்தத்தக்க நிலையிலிருந்து அப்போதுதான் பிரேம்சந்த் விடுவித்திருந்தார். எழுத்தாளரில் பெரும்பாலோர் நகரங்களைச் சேர்ந்த நடுத்தர வகுப்பினர். எனவே தாங்கள் சித்திரிக்க முற்பட்ட மக்களின் மனோபாவம், வாழ்க்கை வழி முதலியவற்றை அடியோடு அறியாமல் இருந்தனர். எனவே பிரத்தியட்ச நிலைமையிலுள்ள எழுத்து என்று ஏராளமாக வரையப்பெற்று, கட்சி அபிமானிகளான விமரிசகர்களால் இடைவிடாது தூக்கிவிடப்பட்ட படைப்பானது உண்மையில் போலியாகவே இருந்தது. அவர்களது குறுகிய திருஷ்டியும், பிடிவாத வெறியும் பிரமிக்கத்தக்கவையாக இருக்கின்றன. பிரேம்சந்த் ஹிந்தி இலக்கியத்தின் கார்க்கி என்று அவர்கள் குறிப்பிட்டனர். அவரை தலைவர், வழிகாட்டி ஆசான் என்று வணங்குவதாகக் கூறினர். எனினும் அவரது நூல்களில் அவர்கள் கவனம் செலுத்தினார்களில்லை. நவீன

வகையில் நாவல் என்று சொல்லக்கூடிய கற்பனைக் கதைகளை முதலாவதாக ஹிந்தியில் வரைந்தவர் பிரேம்சந்து தான். அவர் தனித்துறையை விவேகத்துடன் பொறுக்கி எடுத்துக் கொண்டார். அவரது பாத்திரங்கள் பெரும்பாலோர் நன்கு அறிந்து மக்களிடையே இருந்து எடுத்துக் கொள்ளப்பட்டவர்கள். விவசாயிகளை அவர் நன்கு அறிவார். நடுத்தர வகுப்பினரில் கீழ்நிலையில் உள்ளவர்களைப் பற்றி அவருக்கு பரிச்சயம் போதாது. (ஒரு சில சமயங்களில் சீரழிந்து வந்த நிலப்பிரபுத்வ முறையையும் மேலோங்கி வந்த அறிவாளி வகுப்பையும் பற்றி அவர் எழுதியதுண்டு. ஆனால் இந்த முயற்சிகள் வெற்றி தரவில்லை. நம்பிக்கையை விளைவிக்கவில்லை.) விவசாயிகளின் வாழ்க்கையை அப்படியே படம் பிடித்து மிகுந்த அனுதாபத்துடன் அவர் விவரித்தார். எப்போதுமே அவரது நாவல்களில் கதையின் கட்டுக்கோப்பு நல்லபடி அமையும். நிகழ்ச்சிகளின் திருப்பம், பாத்திரங்களின் குண விசேஷங்கள் முதலியன வருணனைத் திறம் படைத்தவையாக இருக்கும். ஒவ்வொரு பாத்திரத்தையும் வலுவாக, தனித்தனியாக பிரகாசப்படுத்தும் விசேஷம் அதில் உண்டு. ஆரம்பகாலத்தில் சீர்த்திருத்தவாதியாக இருந்தபோது, கிராம சமுதாயத்தைப் பற்றி உணர்ச்சிவசப்பட்டு அவர் எழுதியதுண்டு. அனுபவ முதிர்ச்சி ஏற்பட ஏற்பட சற்று எட்டியிருந்து குண தோஷ ஆய்வு மனப்பான்மையில் அவர் பணியாற்றினார். அதன் காரணமாக அவரது எழுத்தில் புது சக்தி மிளிரலாயிற்று. முன்னரெல்லாம் அடைய இயலாத லட்சியவாத நிலைகளை சமரசப்படுத்தும் நோக்கத்துடன் அவர் எழுதினார். பிறகு அதைக் கைவிட்டார். (காந்தீய சகாப்தத்தின்போது சேவை, தியாகம் மூலமாக சமரசப்படுத்தும் ஆசிரம வாழ்க்கை அவரது நாவலின் முக்கிய அம்சமாக இருந்தது) பழைய போக்கை கைவிட்டபின்னர் சமுதாயப் போராட்டங்களை வகைப்

படுத்தி, தெளிவாகக் கண்டு உணரும்படி உறுதியாக வைத்து வழங்கினர் பிரேம்சந்த். பிரேம்சந்துக்குப் பிறகு கலைவடிவம் என்ற வகையில் நாவல் வெகுதூரம் ஏற்றம் கண்டிருக்கிறது. ஆனல் அவரது நாவல்களில் காணப்பெற்ற மனிதாபிமானம், கவர்ச்சி ஆகிய அம்சங்களில் இன்னும் எவரும் மிஞ்சவில்லை. சீர்திருத்தப் பகுத்தறிவு வாதம் என்ற நிலையிலிருந்து சமுதாய போராட்டங்களை பிரத்தியட்ச நோக்குடன் கண்டு ஆராய்பவராக பிரேம் சந்த் மாறியபோது, வர்க்கப் போராட்ட சித்தாந்தங்களை அப்படியே அவர் முற்றிலும் ஏற்றுக் கொண்டார் என்று பொருள்படுவதாக முற்போக்காளர் கருதினர். ஆகையால்தான் ஹிந்தி நாவலின் வளர்ச்சிக்கு அவர் ஆற்றிய உண்மையான தொண்டை அவர்கள் அடியோடு அலட்சியம் செய்துவிட்டனர். வாழ்க்கையில் நேராகக் காணும் தனி நபர்களின் குணச்சித்திரங்களை படம் பிடித்துக் காண்பிப்பதுதான் அவரது பெரிய சாதனை.

பிரகதவாதிகளின் பணியில் உருப்படியான அம்சங்கள் உண்டு. அனுதாபம் விரிவடைந்தது. உண்மையில் சுயேச்சையாக எழுதியவர்கள் ஆத்ம சோதனையில் ஈடுபடுவதற்கான வேகத்தை அது அளித்தது. அசட்டு நிம்மதி, திருப்தி ஆகிய குமிழிகளை அவர் வெடிக்க வைத்துவிட்டார். அதன் விளைவாக வளர்ச்சி கண்ட மதிநுட்பத்திறனும், சொல்வதை திருந்தச் சொல்லும் போக்கும் சாயாவாதிகள் மொழிக்கு அளித்திருந்த பரவலான நெகிழ்ச்சியும் ஆழமும் சேர்ந்து, பின்னல் வந்த எழுத்துக்களுக்கு ஒரு புதிய தன்மையையும், மணத்தையும் அளித்தன. நாட்டு இலக்கியம், நாடோடி வாழ்க்கை, பிராந்தியப் பண்பாடு ஆகியவற்றை ஆராய்வதற்கு புதிய ஊக்கத்தை பிரகதிவாதம் அளித்தது. அது முன்னுக்குக் கொண்டு வந்து அறிமுகப்படுத்தி யிராவிட்டால் சில புதிய எழுத்தாளர் அங்கீகார முத்திரை பெறுவதும் தாம

தப் பட்டிருக்கும்; அவர்களது படைப்பும் குறுகிய நோக்குள்ளதாக அமைந்து விட்டிருக்கும்.

பிற இடங்களில் எத்தனையோ பல பத்து ஆண்டுகளில் அடைந்த அனுபவத்தை இந்த இயக்கங்கள் ஒரு சில வருஷங்களில் இணைத்து இங்கு உருவாக்கின. எனவே சாயாவாதமும், பிரகதிவாதமும் (ராஜீய கம்யூனிஸம் அல்ல) இலக்கிய இயக்கங்கள் என்ற வகையில் மரித்துவிட்டன. எனினும் இரண்டு பாணிகளிலும் எழுதுவது மட்டும் நீடிக்கிறது. இந்த இயக்கங்களின்போதும், இன்றும்கூட, சம்பிரதாய முறையில் கவிதைகள் புனையப் பெற்றுவரும் போக்கைக் காணலாம். மைதிலி சரண் குப்தாவின் மிகச் சிறந்த படைப்பு இக்காலத்தில் உருவானது. சம்பிரதாயமான அறவழி நிலைகளை, வழிவழியான உத்திகளை, அவர் உறுதியுடன் பற்றிக் கொண்டிருந்தார். எனினும் பரந்த மனிதாபிமான வளர்ச்சியும் கூடவே அவரிடம் காணப்பெற்றது. மாகன்லால் சதுர்வேதி (1888)[4]. 'நவீன்' (பாலகிருஷ்ண சர்மா-1897) இருவரும் வீர பரம்பையினரான தேசிய வாதிகள். சுட்டிப் பேசும் ஆத்மானுபவச் சொல்லாட்சியை அவர்களிடம் காணலாம். 'தினகர்' (ராமதாரி சின்ஹா-1908) வீர பரம்பரையைச் சேர்ந்த தேசியவாதிதான். அவரும் புராணக் கதைகளை நவீன சூழ்நிலைகளில், மேற்கோள்காட்டி, சாதாரணப் பேச்சுமொழியில் நல்லுபதேசம் செய்யும் முறையைப் பின்பற்றுபவர். அவரது சமீப எழுத்துக்களில் சில சொற்செட்டு மிகுந்தவை, குறள் வடிவத்தில் பளிச்சென விஷயங்களைப் புலப்படுத்தும் தன்மையுள்ளவை. இந்தக் கவிஞர்கள் சாயாவாதக் கவிஞர்களுடனும் இக் காலத்துக் கவிஞர்களுடனும், மொழி சம்பந்தப்பட்ட வரை, பொது அடிப்படையுள்ளவர்கள். இதை ஒப்பிட்டுப் பார்ப்பது ருசிகரமாக இருக்கும். 'நவீன்' மொழியில் தூய்மை

---

4. இவரது ஹிம-தரங்கிணி என்ற நூலுக்கு 1955-ல் சாகித்ய அகாதெமி பரிசு கிடைத்தது.

வேண்டுமென்பவர். ஸம்ஸ்கிருதத்தைத் தவிர பிற வகைகளிலிருந்து வந்த சொற்கள் ஹிந்திக்கு வேண்டாமென்று புறக்கணிப்பவர். ஆனால் இது கொள்கை அளவில்தான். நடைமுறையில் ஒரு சொல் சரியானது என்று புலப்பட்டால், அதன் பிறப்பு-மூலங்களைப் பொருட்படுத்தாமல், தமது எழுத்தை வளப்படுத்துவதற்காக அவர் தயங்காமல் கையாளுகிறார். மற்ற இரண்டு கவிஞர்களுக்கும் இத்தகைய அபிமானம் எதுவும் இல்லை. எந்தச் சொல் சரியானது என்று மனதுக்குப்படுகிறதோ அதை உபயோகிக்கிறார்கள். எழுத்தில் அழுத்தம் இருக்கிறதா என்ற ஒன்றில்தான் தினகர் குறிப்பாக இருந்தார். சாயாவாதக் கவிஞர்களின் படைப்பில் துல்லியமான இசை நாதம் ஒலிக்கும், புதிய கவிதையின் சொல்லோசை மனமறிந்த சப்த ஜாலமாக அமையும். இந்த இரண்டு அம்சங்களும் அவர்களிடம் இல்லை.

பாலகிருஷ்ண ராவ் (1911) தமது வாழ்வின் தொடக்கத்தில் இயற்றிய கவிதைகள் சாயாவாதத் தன்மையுள்ளவை. அவர் பதினலு சீர்ப் பாடல் வடிவத்தைக் கையாண்டு ருசிகரமான பரீட்சை நடத்தியிருக்கிறார். அவரது நடை எளிமை நிறைந்தது, சாதாரண பேச்சைப்போல அமைவது. எடுத்துக் கொள்ளும் விஷயங்கள் இலகுவானவை. ஆனால் அவரது பாடல்கள், அமைப்பின் சிறப்புக் காரணமாக, படிக்கப் படிக்க இன்பம் அளிப்பவையாக இருக்கின்றன.

"சுமன்" (சிவமங்கல சிங்-1916) முற்போக்குக் கொள்கையை விசுவாசத்துடன் கையாள்பவர் என்று வெளிப்படையாகத் தோன்றும். கவர்ச்சிகரமான தோழமையை வீரக் காதல் பரம்பரை வழியில் அவர் கலந்து வழங்குகிறார். ஆனால் சித்தாந்த அபிமான வழக்கங்கள் காரணமாக, நெருடல் ஏற்படுகிறது. அவரது நீண்ட கவிதைகளில் காணப்படும் வாக்குவன்மை, இயற்கையாக அமையவில்லை. நகைச்சுவை கூடச் சேர்ந்து

இழைவதால்தான் பிதற்றல் என்று புறக்கணிக்க முடியவில்லை. இசைப்பாடல்களைத் திறமையுடன், உணர்ச்சி மிகுதியுடன், தோழமை மிகுதியுடன் அவர் இயற்றியிருக்கும் வகை மிக எடுப்பானது.

மேலே விவரித்துள்ள இரண்டு இலக்கிய வழிகள், எதிலும் சேராமல் எழுதுவோர், குறிப்பாக கவிகள் நிறையப் பேர் உண்டு. கற்பனைத் திறனை, வேதாந்தத்தின் சாயையை, மற்ற வர்ணஜாலங்களை அவற்றில் காணலாம். "பச்சன்" (ஹரிவம்சராய்-1907) மக்களைக் கவர்ந்த காதல் கவிதைகளைப் புனைந்தவர், அழகான பல பாத்திரங்களைப் படைத்தவர். ஆனால் அவை மரணம், பேராபத்தின் முன்னறிவிப்புக்கள், மற்ற கவர்ச்சிகரமான படாடோபங்கள் நிறைந்து காணப்பெறுகின்றன. இருபது ஆண்டுகளுக்கு மேலாக அவர் மக்கள் விரும்பிப் படிக்கும் கவிஞராக இருந்து வருகிறார். அவரது நடையில் ஒரு மென்மை உண்டு. ஓட்டம் இருக்கின்றது. சாதாரணப் பேச்சு மொழியின் மரபை காணலாம். எதுகையார்வம் சில சமயம் அவருக்கு குழி பறித்துவிடுகிறது. இக்காலத்துக் கவிதை பெரும்பாலும் அவரது வழியைப் பின்பற்றியது என்று சொல்வதற்கில்லை. எனினும் சாமானியப் பேச்சுக்கும், கவிதையின்சொல்லாட்சிக்கும் வேற்றுமை இருக்கத்தான் செய்யும் என்று சாயாவாத காலத்தில் வாசகர்கள் நம்பியிருந்தது பொய் என்பதை, அவரது எழுத்துக்கள் சந்தேகமற நிரூபணம் செய்தன.

நரேந்திர சர்மா (1916-) சிறந்த உணர்ச்சி பாவக் கவிஞர். அவர் ஒரு வழி வகையென்றில்லாமல் பலமுறைகளைக் கையாண்டு, இங்குமங்குமாக ஊசலாடியவர். முதலில் நாடோடிப் பாடல்கள், காதல் சிந்துகள் போன்ற புதுவகைகளைக் கையாண்டவர். இப்போது பொதுவாக வேதாந்தப் பணியில் ஈடுபட்டுள்ளார்; பழைய பெரும் நூல்களிலிருந்தும், புராணங்களிலிருந்தும் மேற்கோள்

களை எடுத்துக் காட்டி, சம்பிரதாயமான காவியாலங்கார நியதிகளை ஏற்றுக் கொண்டு, அவர் எழுதி வருவதாகவே தோன்றுகிறது. பகவதி சரண வர்மாவின் (1903-) கவிதை களில் காதல் கற்பனைச் சித்திரமும், விளித்துச் சொல்லும் உத்தியும் பகுத்தறிவும் நிறைந்து கிடக்கக் காணலாம். அவரது நாவல்களில் காணப்பெறும் நகைச்சுவை நையாண்டித் தன்மையுள்ளது. கவிதைகளும் அப் படியே. ஒழுங்காக எதுகை மோனை வைத்து சந்தம் கெடாமல் அவர் பாடுகிறுர். இத்தகைய வடிவத்துக்கு வெளியேயும் கவிதை அமைய முடியுமென்று அவர் ஒப்புக் கொள்ள மறுக்கிறுர்.

கிரிஜா குமார மாதுர் (1917-) கற்பனைத் திறம் படைத்த இசைக் கவிஞர்தான். அவரது சிறந்த கவிதை கள் அத்தன்மை வாய்ந்தவை. ஆனுல் வடிவம், உத்தி வகைகளில் பல பரீட்சைகளை அவர் செய்து பார்த்தவர். நயீ கவிதா (புதிய கவிதை) என்று இப்போது அங்கீ காரம் பெற்றுள்ள வடிவத்தின் வளர்ச்சிக்கு, சொல்திற னுக்கு அவர் பெரிதும் உதவுபடியாக இருந்திருக்கிறுர். அமெரிக்காவில் கொஞ்ச காலமிருந்து திரும்பிய பிறகு, குறிப்பிட்ட சில வழிகளில் மிகத் தீவிரமான பரீட்சைகளை நடத்திப் பார்த்திருக்கிறுர். புதிய அனுபவ மிகுதியை விட மிகையான தனிச்சுபாவமுள்ள இலக்கிய நடை சமீ பப் படைப்புக்களில் காணப்பெறுகிறது.

சியாராம சரண் குப்தா (1895-) அந்நியச் செல்வாக்கு களுக்கு உட்படாத கவிஞர், இரண்டு உலக யுத்தங்களுக் கிடையேயுள்ள காலத்தில் பிரபலமாயிருந்தவர். ஆங்கி லத்தைக் கற்று அறியாதவர். அவரது படைப்புக்களில் துல்லியமான உணர்ச்சி விவரங்களையும், சிந்தனை உயர் வையும் அமைதியான சகஜத்தையும், சாசுவதமான, வளமான, பொறுமை மிகுந்த, இந்திய மண்ணின் மணத் தையும் காணலாம். சுபத்ரா குமாரி சௌஹான் (1904-48) வீர தேசியக் கவிதைகளைப் புனைந்தார். வீட்டு வாழ்க்

கையை, நெஞ்சையள்ளும் வகையில், எளிய நடையில், பாடி அவர் தமது காலத்துக் கவிஞர்களை ஆட்கொண்டார். ஹோமவதி (1904-1951) இயற்றியுள்ள கவிதைகள் குடும்ப வாழ்க்கையைப் பற்றிய அந்தரங்க சித்திரங்களை உட்பொருள் வைத்து எழுதுவதாக இருக்கின்றன. ஆனால் அவரது கவிதைகளில் ஒதுங்கி நின்று மதிப்பீடு செய்யும் பிடிப்பற்ற நிலை குறைவாக இருக்கிறது. ஆகையால் தான் அது மகத்துவத்தை அடையவில்லை.

ஹிந்தி இலக்கிய இயக்கத்தில் சுலபமாக இடம் பெறக் கூடாத மற்றோர் எழுத்தாளர் ஜைனேந்திர குமார் (1905). அவரது நாவல்களும், சிறுகதைகளும் இக்காலத்து இலக்கியச் சிருஷ்டிகளில் விசேஷமாகக் குறிப்பிட வேண்டியவை. கீழ்த்தரமான சில நடைவகைகள் அவரது படைப்புக்களைக் கெடுத்து விடுகின்றன. பிந்திய நூல்களில் சில வெறும் சொல்லோசையும் குதர்க்கமும் நிறைந்தவையாகக் காணப்படுகின்றன. தனிப்பட்ட குண சித்திர பாத்திரங்களை தெள்ளத் தெளிவாக அவர் நிறையப் படைத்திருக்கிறார். மனித உணர்ச்சிகளை விசேஷ அனுபவத்துடன் விவரித்துள்ளார், உள்-நோக்குகளை, மோதல்களைச் சித்திரித்துள்ளார். காந்திய தத்துவமாகிய சாத்வீக எதிர்ப்பை அவர் தத்துவார்த்த ரீதியில் உருவாக்கியுள்ளார். தீமையை எதிர்க்காமலிருப்பது, கஷ்டத்தை ஏற்றுக்கொள்வது என்ற ஒரு நிலையில் அவரை அது கொண்டுபோய் விடுகிறது. ''தியாக பாத்திரம்'' என்ற அவரது குறுநாவல் கம்பீரமானது. அவரது சிறுகதைகளில் கற்பனைத் திறன், வாதசக்தி, உண்மை உணர்ச்சி, ஆத்திரமூட்டி சிந்தனையைக் கிளறும் சக்தி ஆகியவற்றைக் காணலாம். கற்பனைக் கதைகளை அப்பழுக்கற்ற கலைப் படைப்புக்களாக எடுத்துக் காட்டும் சிறப்பையும் சுவைக்கலாம். அவரது கட்டுரைகளிலும் இந்தக் குணங்கள் தென்படுகின்றன. ஆயினும் வெறும்

சொற்களை வைத்துக்கொண்டு அம்மானை ஆடும் இழிநிலை யும் அதில் உண்டு.

இரண்டு கவிதா இயக்கங்களும் மேலை நாடுகளின் வீரக் கவிதா பரம்பரை, மார்க்ஸின் சித்தாந்தம் ஆகியவற் றால் ஊக்குவிக்கப் பெற்றவை. விஞ்ஞான ரீதியில் சிந்தனை கண்ட வளர்ச்சி உரைநடையை ஆட்கொண்டது. குறிப்பாக கற்பனைக் கதைகளில் இந்தச் செல்வாக்கைக் காணலாம். சரித்திரக் கண்ணோட்டத்துடன் புனிதமான சமய நூல்களை அணுகும் வகையானது வரலாற்றுக் கதை கள் புது வழியில் தோன்றுவதற்குத் துணை புரிந்தது. பழங்காலக் கட்டுக் கதைகளில் காணப்படும் ஒரு வீர புருஷனை எடுத்துக் கொண்டு, நம்பக் கூடிய நிகழ்ச்சித் தொடர்களிலே அவனை வைத்துக் காட்டும் முறையை எழுத்தாளன் இன்று கையாள்வதில்லை. அந்தக் காலத்து மக்களின் வாழ்க்கையை மொத்தமாக எடுத்துக் கொண்டு அன்றைய சூழ்நிலையை உருவகப்படுத்திக் காட்டும் போக்கையே அவற்றில் முக்கியமாகக் காணலாம். பகவத் சரண் உபாத்யாய (1910-) எழுதியுள்ள சிறுகதைத் தொடர்களில் வேத காலத்திலிருந்து மத்திய காலம் வரை சமூகம் கண்ட வளர்ச்சிச் சித்திரங்கள் கண்முன் கொண்டுவந்து தரப்படுகின்றன. ராஹுல ஸாங்கிருத் யாயனு (1895-) மிகத் தொன்மையான குடியரசுகளில் இருந்த வாழ்க்கை முறையை உருவாக்கித் தர முயன்றுள் ளார். ''ரங்கேய ராகவம்'' (1922) என்ற அவரது நூல் மொகேன்-ஜ-தாரோ நாகரிகத்தைப் பற்றியது. ஆனால் இத்தகைய மறுபடைப்புக்கள் சில சமயம் சரித்திரக் கண் ணோட்டத்துக்குத் தீமை விளைவிக்கின்றன. ஸாங்கிருத் யாயனு விசேஷ அறிவும் ஆற்றலும் படைத்தவர். தாம் எழுதும் காலத்து நடையுடைபாவனைகள், தட்டுமுட்டு சாமான்கள், உணவு வகைகள், சடங்குகள் முதலிய வற்றை அப்படியே விவரிப்பதில் சிரத்தை காட்டியிருக் கிறார். ஆனால் இக்காலத்து மனநிலைகளையும் சமுதாயப்

போராட்டங்களையும் அக்கால நிலவரத்தின் மீது அவர் திணித்திருக்கிறார். சரித்திரத்தை வேண்டுமென்றே பொய்யாகக் காட்டும் நோக்கம் அவருக்கு இல்லை. ஆனால் சித்தாந்த ரீதியில் பாரபட்சம் இருப்பதன் காரணமாக, சமுதாய வளர்ச்சியில் ஒரு குறிப்பிட்ட தத்துவத்தை நிரூபிக்கும் ஆவல்-மிகுதியே இப்படிப் பண்ணச் சொல்கிறது. வர்க்கப் போராட்டத்தை மனமறிந்து ராஹுல ஸாங்கிருத்யாயன திணித்தார். இதைப் போலவேதான், தமது விமோசனத்துக்காக மாதர் போராடியதாக யஸ்பால் சொல்லியிருக்கக் கூடும். ஹஜாரி பிரசாத் துவிவேதி (1907-) எழுதியுள்ள "பாணபட்டா கி ஆத்ம கதா"[5] வரலாற்றுக் காலத்து உண்மைகளை அப்படியே சரிவர வெளிப்படுத்தும் நூலுக்கு எடுத்துக் காட்டு. மத்திய காலச் சமுதாய வாழ்வின் மறு படைப்பை, நன்கறிந்த எழுத்தாளன், சுயசரிதைக்காக புலப்படுத்தும் உத்தியை, நேர்மையுடன் அவர் கையாண்டிருக்கிறார். வெளித் தோற்றத்தில் மட்டுமின்றி சமுதாய நிலைகளை, உணர்ச்சி வகைகளை, உண்மையாகச் சேகரித்து அவர் தந்திருக்கிறார். மறு படைப்பானது உண்மை உணர்ச்சியுடன் இருக்க வேண்டுமென்பதில் உள்ள தனி சிரத்தை அவரது புலமைக்குப் பெருமையை அளிக்கின்றது. ஓர் அலங்கார நடையை, சொல்வளத்தை ஹிந்தி மொழிக்கு அவர் அளித்துள்ளார். ஸம்ஸ்கிருத மூலக்கிரந்தத்தில் காணப் பெறும் இணையற்ற சோபையை அதிலும் பார்க்கலாம். ஹிந்தியிலும் இது படிப்பதற்கு நன்றாகவே இருக்கிறது. இந்த நாவல் பெரும் புகழ் பெற்றது. உண்மையுணர்ச்சியுடன் கூடிய வரலாற்றுத் தன்மையின் சிறப்பு ஒருபுறமிருக்க, கற்பனைக் கதை என்ற வகையிலும் முதன்மையாக அது அமைந்துள்ளது. இரண்டு உலக யுத்தங்

---

5. இந்த நூலைப் பிற இந்திய மொழிகளில் பெயர்த்து வெளியிட சாகித்திய அக்காதெமி முன் வந்துள்ளது. மலையாளம், வங்காளி, ஆஸ்ஸாமி மொழிபெயர்ப்புகள் வந்துவிட்டன.

களுக்குமிடையே இருந்த காலத்தில் வெளியான மிக உயர்ந்த நூல்களில் இதுவும் ஒன்று. ஸம்ஸ்கிருதத்திலும் ஹிந்தியிலும் வல்லுனரான ஒரு புலவரும் ஆசானும் விமரிசகருமான அவர் எழுதிய ஒரே நாவல், அதற்கு உரித்தான அங்கீகாரம் பெறவில்லை. பிருந்தாவனலால் வர்மா (1888) இயற்றியுள்ள நாவல்கள் நிலப்பிரபுத்வம் சீரழிந்த காலத்தைப் பற்றியது. நிறைய பிரதிகள் செலவானதுடன் இலக்கியப் பரிசுகளும் அவற்றிற்குக் கிடைத்துள்ளன. அவற்றில் நடைமுறை பற்றிய குறைகள் இருக்கின்றன. சில நாவல்கள் சரித்திரக் கதைத் தொடராகக் காணப் பெறுகின்றன. கதையின் விஷயத்தில் உணர்ச்சி பூர்வமான ஈடுபாடு காரணமாக அமைப்பு கெட்டு விடுகிறது. "ஜான்ஸி கி ராணி" என்ற நாவலில் இந்தக் குறையைக் காணலாம். "முஸா ஹிப்ஜு" என்ற குறுநாவல் அவரது நல்ல படைப்புக்களுக்கு எடுத்துக்காட்டு.

பிராய்டும் அவரது வழிவகை ஆசிரியர்களும் ஹிந்தி எழுத்தாளரைக் கவர்ந்துள்ளனர். முக்கியமாக கற்பனைக் கதைகளில் இதைக் காணலாம். விமரிசனத்திலுங்கூட மனோதத்துவ ஆராய்ச்சி புகுந்துள்ளது. நேரிடையாகவும், இக்காலத்து ஐரோப்பிய நாவல்கள் மூலமாகவும் இது ஊடுருவியுள்ளது. இதன் விளைவுகளை விவரிக்க வேண்டிய அவசியமில்லை. இதன் போக்கு ஹிந்தி மொழிக்கு மட்டும் தனியாக இருக்கும் அம்சமும் அல்ல. மனோதத்துவ ஆராய்ச்சி முறையில் நாவல் எழுதியவர்கள் அதிகமில்லை. இலா சந்திர ஜோஷி (1902) இவ்வகையில் குறிப்பிடத்தக்க எடுத்துக் காட்டு. பல்வேறு சீரழிவு நிலைகளில் காணப்பெறும் பாத்திரங்களை ஏராளமாகப் படைத்து அவர் வழங்கியுள்ளார். இருளடைந்த சூழ்நிலையொன்றை அவர் தோற்றுவித்துள்ளார். ஆசாபங்கம் மிகுதியாகி நோய்வாய்ப்பட்ட நிலைக்குக் கொண்டுபோய் விடுகிறது. மொத்தத்தில் அவரது நாவல்களின் விளைவு

கள் எதிர்பார்த்தவாறு அமையவில்லை. அவற்றில் விவரிக்கப்பட்டுள்ள நிகழ்ச்சிகளின் கோவை நம்பக் கூடியவையாகத்தான் இருக்கின்றது. ஆனாலும் பாத்தி ரங்களின் செயல்களும் உணர்ச்சி-மோதல்களும் மிகை யாக அமைந்ததன் காரணமாக, நம்புவது அவ்வளவு சுலபமாக இருக்கவில்லை. தவிர ஒன்றைப் போல மற்றொன்று காணப்பெறும் தன்மையும் அவற்றிற்கு உண்டு. அவர் கையாளும் சுயசரிதை முறை இதை மேலும் பிரகாசப்படுத்துகிறது. கதையைச் சொல்லு பவன் நிலைபெயர்ந்து இழுத்துச் செல்லப்படும் ஒரு பாத்திரமாகக் காணப் பெறுகின்றான். குறிப்பிட்ட நிலை களில் அவன் விழுந்து தடுமாறி மீண்டு எழுவது போன்ற ரீதியில் கதை தொடருகிறது. அவரது ஆரம்ப நாவல்களில் ஒன்று "சன்யாசி". அது சிறந்த நாவ லென்று சொல்லலாம். பின்னால் வந்தவை ஏறக்குறைய அதில் இருப்பவைகளையே வேறு நிகழ்ச்சிகளில் வைத்து வழங்கும் தன்மையுள்ளவை.

எழுத்தாளரின் நிலையற்ற போக்கு இந்தக் காலத்தின் விசேஷ அம்சம். அவர்களில் பெரும்பாலோர் கற்பனைக் கதைகள் மட்டுமின்றி கவிதைகளும் எழுதினர். அடிக்கடி விமரிசக உலகிலும் வசன ஸஞ்சாரம் செய்த பகவதி சரண் வர்மா நாவலாசிரியர். சியாம் சரண் குப்தா கட்டு ரைகளையும், கற்பனைக் கதைகளையும் எழுதியுள்ளார். 'பச்சன்', நரேந்திர சர்மா, சுபத்ரா குமாரி சௌ ஹான் ஆகியோர் சிறுகதைகளை வரைந்துள்ளனர். மாகன் லால் சதுர்வேதி, திலகர் கட்டுரைகளை எழுதியுள்ளனர். அவர்களது கவிதைகள் சம்பிரதாய வழிகளில் செல்லு கின்றவை. ஒழுங்கான சந்த அமைப்பு, எதுகை, எடுத் துரைக்கும் தெளிவு போன்றவை சம்பிரதாய ரீதியிலேயே இருக்கின்றன. இதற்கு விலக்காக இருப்பவர் சியாராம் சரண் குப்தா ஒருவர்தான். ஏற்கனவே சொன்னபடி, நரேந்திர சர்மா எதுகையற்ற சிறு பாடல்கள் சிலவற்றைப்

புனைந்துள்ளார். நிராளாவுக்கும் பந்துக்கும் பிறகு, உத்தி சம்பந்தப்பட்டவரை, நவீன மனோபாவமானது திட்ட வட்டமாக இன்னும் உருப்பெறவில்லை. 1940-க்குச் சற்று முன்னால் சில கவிஞர்கள் இந்தக் குறையை நிறைசெய்ய முன் வந்தனர். சம்பிரதாயத்திலிருந்து அறுத்துக் கொள்ளும் முதல் முயற்சி 1943-ல் வெளியான புதிய கவிதைகளின் தொகுப்பு நூலாகும். பரீட்சார்த்தமாகக் கையாண்ட இந்தப் போக்கு இக்கட்டுரையின் பிற்பகுதியில் ஆராயப்பெறும்.

### மனிதாபிமானம், தனித்த பண்பின் விசாரணை

இரண்டு உலக யுத்தங்களுக்கிடையேயுள்ள காலத்தில் தீவிரமான மாறுதல் ஏற்பட்டு வந்தது. ஆனால் அது மந்தமாகவும் வெளிக்கு அதிகம் தெரியாமலும் நடந்தேறியது. சாயாவாதத்தைப் போல அது கலப்பற்ற தன்னிலை விமரிசனமாகவோ, பிரகதி வாதத்தைப் போல நடுநிலை-இணைப்பு முறையாகவோ இல்லாமல், மனிதனைப் பிரதானமாகக் கருதும் அடிப்படையான புது மாறுதலாக இருந்தது. மனிதன் மொத்தமாக மதிப்பிட வேண்டிய ஒரு அசாதாரணமான பிரகிருதியென்பது வர வர அதிகமாக உணரப்படலாயிற்று. அவனது தனித் தன்மைக்கு மதிப்புத் தரப்பட்டது. இலக்கிய மனச்சாட்சி மீண்டும் கலக்கமுற்றது. புதிய பரிமாணங்களில் உணர்ச்சிகள் வெளியாயின. மேலே குறிப்பிட்ட இலக்கிய இயக்கங்களும் இந்த எழுச்சியின் அலைமோதல்கள்தாம். சாயாவாதத்தின் கற்பனைக்கும் தேக்கமான உணர்ச்சிப் போக்கிற்கும் எதிரொலியாகத் தோன்றியதுதான் பிரகதிவாதம். அதற்கு முந்தைய காலத்தில் பசையில்லாத தர்மோபதேசமும் பரிசுத்த வாழ்வைப் பற்றிய பிரசாரமும் மிகுதியாக இருந்ததன் விளைவாகவே சாயாவாதம் தோன்றியது. இந்த மூன்று போக்குகளுமே மாறுதல் என்ற ஆழ்ந்த நீரோட்டத்தில் மேலெழுந்தவாறு காணப்

பட்டவைதான். இந்தப் போக்கிற்கு ஒரு பெயர் தரப்பட்டுள்ளது. அதுதான் தனிப்பட்ட பண்பின் விசாரணை எனப்படுவது.

ஒரு மொழியில் மட்டும் காணப்பெறும் இலக்கிய இயக்கமோ அல்லது நாடு முழுவதிலும் மொத்தமாகக் காணப்படும் நிலவரமோ இந்த விரிவான மாறுதலைப் புரிந்துகொள்வதற்குப் போதுமானவையாக மாட்டா. வெளி நாட்டிலிருந்து இறக்குமதி செய்த ராஜீய சித்தாந்த அடிப்படைகளைக் கொண்டு அவற்றை மதிப்பிடுவதும் சரியாகாது. மேலை நாடுகளின் மோதலினால் ஏற்பட்ட அனுபவம் அடிப்படையான விஷயம். தனிப்பட்ட பண்பின் விசாரணை என்பதில் மேலை நாடுகளின் விஷயத்தில் திருப்திகரமானதும் மனதுக்கு திருப்தியளிப்பதுமான ஒரு மனப்பான்மையைக் கண்டறிவதாக இருந்தது; அதே சமயத்தில், கீழ்த்திசை நாடுகளின் மொத்தமான ஒரு தனி சொரூபத்தை ஆத்மீக வகையில் புலப்படுத்தும் பிரதிபிம்பமாகவும் அது அமைந்தது, குறைந்த பட்சம் தன் சொந்த நிலைகளுக்கு ஆதரவு தரும் சமரஸ வகையில் இருக்கின்றது. உயர்நிலையில், ஆத்மீக சோதனைக்காக, எல்லா நியதிகளையும் மீண்டும் புதிதாக மதிப்பிடும் தன்மையுள்ளதாகவும் இருக்கின்றது. முன்னால் புனிதமானவை யென்று கருதப்பட்ட நியதிகளை அடியோடு நிராகரிப்பது, இப்போதைய நிலை நீடிக்கிற வரை சரியென்று மன ஆறுதல் அடைவது, பழங்கால சமய அல்லது பண்பாட்டு நிலைகளைப் புதுப்பிக்கும் ஆவேசம் கொள்வது - இவ்வாறாக, பல வகைகளில், இந்திய மக்களின் உணர்ச்சிகள் வெளிப்பட்டன. தொழில்துறை வளர்ச்சியில் ஆர்வம் காட்டுவதிலிருந்து மேலை நாடுகளில் அப்பட்டமான லோகாயதக் கொள்கை யுரையில் வெறுப்பு வரை, இந்திய மக்களின் ராஜீய, சமுதாய சிந்தனை ஏறக்குறைய இப்படித்தான் பலவாறாக உருப்பெற்றது. மத்திய தேசத்து மக்களின் உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்

தும் மொழியென்ற வகையில், அவர்களை உருவாக்கி வந்த எல்லாச் செல்வாக்குகளையும் பிரதிபலிப்பது தனக்குள்ள பொறுப்பு என்பதை ஹிந்தி உணர்ந்தது.

இந்தப் போராட்டச் சித்திரத்தை விவரமாக ஆராய்வது இக்கட்டுரையில் அவசியமில்லை, சாத்தியமுமல்ல. இந்தப் போராட்டத்தினின்று எழுந்தது கீழ்நாடுகளைப் பற்றி இந்தியா கொண்டுள்ள கற்பனைச் சித்திரம். கீழ் நாடுகளைப் பற்றி மேல்நாட்டினர் கொண்டுள்ள கருத்தினைப் போலவே, இந்தச் சித்திரமும் விசித்திரமானது, தவறானது. இலக்கியப் போக்குகளின் வரலாறு சம்பந்தப்பட்டவரை, பல வகை வீர மரபுகள் ஒன்றன் பின் ஒன்றாக துரிதகதியில் வந்து கொண்டே இருந்தன. விஞ்ஞான ரீதியில் எழுத்தானது இறுதியாக ஒரு ஒழுங்கை அடைந்து, முற்றிலும் இணக்கமான பரந்த தன்மை அதற்கு ஏற்பட்ட காலம் வரை, இந்த வீர மரபுப் போக்கு நீடித்து இருந்தது. நீதிநெறி நூல்களின் காலம், வீரவாழ்வுப் படைப்புக்களின் காலம், முற்போக்குக் கருத்து மிகுந்த காலம் ஆகிய ஒவ்வொன்றிலுமே வீர புருஷர்கள் அல்லது அந்தந்தப் போக்கைப் பிரதானமாக ஆதரித்தவர்கள், முக்கியமாக மதிக்கப் பெற்றிருந்தனர். சாயாவாத வீரன் தீவிர நாட்டுப்பற்றுள்ளவன், பரம்பரையான ஆத்மீக நியதிகளுக்கு அரண் செய்பவன். பிரகதிவாத வீரன் கட்சியை அமைத்து கிளர்ச்சி செய்யும் தோழன் அல்லது போராட்டச் சுபாவமுள்ள தொழிலாளி அல்லது விவசாயியாக இருக்கிறான். தேசபக்தியானது தவிர்க்க முடியாத வகையில் தத்துவ வாதத்தில் கொண்டுபோய் விட்டது. மேலை நாடுகளின் லோகாயத வாதத்தை நிராகரிப்பது என்றால் வேதாந்தத்திற்கு முக்கியத்துவம் தருவது என்றுதான் அழுத்தம் திருத்தமாகக் கருதப்பட்டது. ஆகையால்தான் இக்காலத்தில் இமயமலை பற்றிய சிந்துக்கள் நிறைய புனையப் பெற்றன. தேசபக்தியும் ஆழ்ந்த தெய்வானு

பவச் சொல்லாட்சியும் மாகன்லால் சதுர்வேதி, நவீன் போன்ற கவிஞர்களிடம் காணப்படுகிறது.

### வீர புருஷனின் மறைவு

இன்றைய நிலவரத்தில் இதெல்லாம் சரித்திர அளவில் மட்டுமே அக்கறையுள்ள விஷயங்கள். ஐம்பது ஆண்டுகளுக்கு முன் அல்லது பத்து ஆண்டுகளுக்கு முன்னுல் கூட, இருந்ததைவிட இன்னும் விரிவான வகையில் இந்தியாவானது உலகின் ஒரு பகுதியாக மாறிவிட்டது. கீழ்த்திசை—மேல் திசைப் பிரிவினைகளில் ஆழமோ பொருட்செறிவோ இல்லை. நவீன விஞ்ஞான தத்துவங்களை ஏற்று, ஜரித்துக் கொண்டு விட்டோம். மேலை நாடுகளின் எழுத்தாளனது உணர்ச்சி வேகத்துக்கும் இந்திய இளம் எழுத்தாளனது வேகத்துக்கும் அடிப்படையில் வேற்றுமை எதுவுமில்லை. எனவே சாயாவாத, பிரகதிவாத வீரபுருஷ மரபுகளின் காலம் மாறி, விஞ்ஞான ரீதியில் அமைந்த மனிதாபிமானம் உயரலாயிற்று. இன்றைய மனநிலை வீர புருஷனுக்கு எதிரிடையானது அல்ல, ஆனுல் வீரத்தை வளர்க்கும் தன்மையுடையதாகவும் இருக்கவில்லை. மனிதனை உருவகப்படுத்திக் காட்டுவதில் இன்றைய எழுத்தாளனுக்கு அவ்வளவாக அக்கறை இல்லை. அவனுடைய மனதை தெளிந்தறியவே, அவனுடைய விசேட முக்கியத்துவத்தை புரிந்துகொள்ளவே அவன் ஆசைப்படுகிருன். இப்போதைய ஹிந்தி எழுத்தாளன் சாமானிய மனிதன் விஷயத்தில் அதிக சிரத்தை காட்டுகிருன். அவன் எளியவன், அவனது ஆசாபாசங்கள் சாதாரணமானவை. பசி, ஆவல், துக்கம், கவலை, சோகம், சந்தோஷம், அல்லல் ஆகிய எல்லாமே சாதாரணமானவை. அந்தச் சாதாரண நிலைக்கும் தனது இலக்கிய நிலைக்கும் முரண்பாடு இருப்பதாக எழுத்தாளனுக்குப் புலப்படவில்லை. மனிதன் சாதாரணமானவன்தான். ஒவ்வொரு தனி நபரும் அதே சமயத்தில் தனித் தன்மையும்

படைத்தவன். இந்த அடிப்படையில் நின்றுதான் இக் காலத்து எழுத்தாளன் மனிதனைப் பற்றிய தனது நம்பிக் கையில் நாட்டம் கொள்கிறுன். 'நயி கவிதா' அல்லது புதிய கவிதை இத்தன்மையது. வீர காவிய காலத்து ஆசாபாசங்களோ அவநம்பிக்கையோ அதில் இல்லை. தொழிலாளி தனது சொர்க்கத்தை அடைந்தே தீருவான் என்ற பொற்காலக் கனவு பற்றிய பிரகதிவாத நம்பிக்கை–மிகுதியின் நிர்ப்பந்தத் தன்மையையும் அதில் காண இயலாது. மனிதனிடம் மிதமான நம்பிக்கை வைத்து, அவனுக்குக் குறைகள் உண்டு, சின்னத்தனம் உண்டு என்பதை உணர்ந்து எழுதும் நிலையே இன்று காணப்பெறுவது. எந்தவிதமான கெடுபிடி, கட்டுப்பாடு, திரளாக ஒரு கூட்டத்தினர் செலுத்தும் ஆதிக்கம், ராஜாங்கம் வழிகாட்டியாக இருப்பது, பெரிய மனித ரீதி யில் தயவு காட்டுவது போன்ற எல்லாவற்றையுமே பலமாக எதிர்க்கும் உணர்ச்சி காணப்பெறுகிறது. மனிதன் சாமானியமானவன். எனவே அடிப்படை நியதிகளை கடைப்பிடிக்கும் சுபாவத்திலிருந்து அவனை வேறு திசை யில் திருப்பி, அவனிடமுள்ள மகத்தான செல்வமாகிய தனிப் பண்பு வெளிவருவதற்கு உள்ள சுதந்திரத்தைப் பறித்துக் கொள்ளும் பொறியிலே அவனை சிக்க வைக்க முடியும். நியதிகள், அபாயங்கள், பலவீனம் ஆகிய எல்லா வற்றையுமே கவிஞன் நேருக்கு நேராகப் பார்த்து, மனித வாழ்வின் பிரத்தியட்ச நிலையை உணர்ந்து சித்திரிக் கின்றுன். இந்த விசேஷத் தன்மையின் காரணமாகத் தான் புதிய கவிதையை மேலெழுந்தவாரியாகப் பார்த்து, அது 'அனுஸ்தா' என்ற தன்மையுள்ளதாக இருக்கின்ற தென்று கூறுகிறுர்கள். இச்சொல்லை மொழிபெயர்ப்பது சிரமம். ஆனுல் இதில் மூன்று விஷயங்கள் சேர்ந்திருக் கின்றன. நம்பிக்கையின்மை, பெரியோரிடம் மரியாதை யின்மை, நியதிகள் விஷயத்தில் மதிப்பின்மை அல்லது மூன்றும் சேர்ந்த நிலையைக் குறிக்கிறது 'அனுஸ்தா'

என்ற சொல். உண்மையில் கூர்ந்து கவனித்தால் அடிப் படை நியதிகள் விஷயத்தில் ஒரு புதிய ஆழமான மதிப்பு இருப்பதைக் காணலாம், பிரத்தியட்ச அனுபவ உணர்வை யும் சுவைக்கலாம். சில ஆண்டுகளுக்கு முன்னர் கவிஞன் தான் கண்ட மோசமான நிலைமையினின்று ஒரு புது சமு தாயச் சீரமைப்பை தோற்றுவிப்பதில் காட்டிய அவசர உணர்ச்சியும் அதில் தென்படும். அடிப்படை நியதிகள் விஷயத்தில் அக்கறை, அவற்றின் மூலாதார விஷயங்களில் சிரத்தை இன்று இருப்பதுபோல எப்பொழுதுமே காணப் பட்டதில்லை. ஆனால் அவற்றை நிலைநிறுத்துவதற்கு மிக மிக உயர்ந்த நிர்ப்பந்தங்களை நாடி அவன் சிரமப்படுவ தில்லை. மனிதனைப் பற்றிய மதிப்பீடு வெளி நியதிகளைப் பற்றியதாக இருக்கலாகாது ; சாமானிய மனிதன்தான் மானிட நியதிகளுக்கு விளக்கமாக இருக்க வேண்டும் ; வீர புருஷனை அதற்கு எடுத்துக் காட்டாக வைத்துக் கொள்ள முடியாது என்ற கருத்து பரந்து நிற்கிறது.

## பிரயோகவாதம் : புதிய கவிதை

புதிய, இக்காலத்துக்குரிய, மனிதாபிமான இயக்கம் மனிதனின் தனிப்பட்ட பண்பாட்டின் விசாரணை, இதற்கு பிரயோகவாதம் அல்லது பரீட்சார்த்த உத்தி என்ற பெய ரைக் கொடுத்தார்கள். இந்தப் பெயரில் விசேஷப் பொருத்தமோ பொருளோ இல்லை. ஏளனம் செய்யும் வகையில் இதைப் பிரயோகிக்கிறார்கள். சாயாவாதத்தை யும் ஆரம்ப நிலையில் இப்படித்தான் நிந்தனை செய்தனர். புதிய போக்கை தாரா சப்தகா என்ற தொகை நூலில் காணலாம். அடிப்படையான ஆராய்ச்சி, பரீட்சை முறை ஆகியவை பற்றிய மனப்பான்மையை நான்முகத்தில் ஆராயுங்கால், உபயோகிக்கப்பட்ட "பிரயோக" என்ற சொல்லை வைத்துக்கொண்டு, தமது கருத்துக்களை யெல்லாம் அதைச் சுற்றி உருவாக்கினார்கள். விரிவான அற உணர்ச்சி, புதிய நியதிகளில் நாட்டம், அடிப்படை

யான நிர்ப்பந்தங்கள், நியதிகளின் மூலாதாரங்கள் ஆகியவற்றின் ஆய்வானது பரீட்சை என்று சொல்லக் கூடுமானுல், புதிய இயக்கத்துக்கு இந்தப் பெயரிட்டது பொருத்தமாக இருக்கும். ஆனுல் இந்த வகைக் கவிஞர்கள் தாம் எழுதுவதை "புதிய கவிதை" என்று மட்டும் குறிப்பிடுகிருர்கள்.

பிற துறைகளிற் போலவே இந்தப் புதிய இயக்கத்தி லும் மோசக்காரர்களுக்கு குறைவே இல்லே. புதிய மனப்பான்மையில், புதிய வடிவங்களேத் தேடி அலேகை யில், மனம்போன போக்கில், உருவற்ற வகையில், கட்டுப் பாடு இல்லாமல், சிறுபிள்ளேத்தன்மையில் கவிதைகள் பலரால் புனேயப் பெற்றன. அது விந்தையாகவும், அபூர்வ மாகவும், பிகுவாகவும், உண்மையை மறைக்கும் தன்மை உள்ளதாகவும் இருக்குமாயின், கற்பனேத் திறனேக் காட்டி மேதாவிலாசத்தை பிரகாசப்படுத்துகிறது என்று கூறப்படுகிறது. ஒரு சில அரிய உதாரணங்கள் நீங்க லாக இலக்கிய சஞ்சிகைகளின் ஆசிரியர்களிடம் தகுதியை உணரும் விவேகமோ, பாகுபாட்டுணர்ச்சியோ துர திருஷ்டவசமாக இருந்ததில்லே. சொந்தக்காரர்களே ஆசிரியர்களாக இருந்த ஆரம்பகாலத்தில் தவிர, நம்பிக் கையை அடிப்படையாகக் கொண்டு தைரியத்துடன் கூட அவர்கள் செயல்பட்டதில்லே. அவர்கள் நிர்மாண ரீதியில் தமது செல்வாக்கை பிரயோகிக்கத் தவறிவிட்டனர். நல்லது கெட்டது பார்த்து ஆராய்ந்து பிரசுரத்திற்கு எடுக்கும் போக்கு காணப்படவில்லே. எது வந்தாலும் சரி, கண்மூடித்தனமாக ஏற்றுக் கொண்டு பிரசுரிக்கும் போக்கே காணப்பெறுகிறது.

ஆசிரியத் திறனுய்வுத் தரங்கள் குழம்பி சீரழிந்தது ஒருபுறமிருக்க, இக்காலத்து இலக்கிய சஞ்சிகைகளில் தீவிரமான விருப்பு வெறுப்புகள் அசாதாரணமாகத் தென்பட்டன. இலக்கிய விமரிசகர்களுக்கும் போதிய தகுதி இருக்கவில்லே. முதல்தரமான ஐரோப்பிய அல்லது

இந்திய ஆராய்ச்சி நூல்களைத் தழுவி ஹிந்தியில் நிறைய புஸ்தகங்கள் வெளிவந்தன. ஆயினும் விமரிசகர்கள் தமது காலத்து ஆக்கப் படைப்பை மதிப்பிடுவதற்கான முழுத் தகுதி பெற்றிருக்கவில்லை. அனுதாபத்துடன் கூட விளக்கம் தந்து, வியாக்கியானம் செய்து பாராட்ட வேண்டும். ஒரு நூலின் மதிப்பீட்டை பின்வரும் தலை முறை வாசகர்களுக்கு விட்டுவிட வேண்டுமென்பதுதான் இந்திய சம்பிரதாயம். அவ்வாறு இருக்க, தாமே முதல் விமரிசகர், கடைசி விமரிசகர் என்று நினைத்துக் கொண்டு எழுத்தாளனுக்கும் வாசகனுக்கும் இடையே பிளவு சுருங்காமல் விரிவடைவதற்கே அவர்கள் பயன் படுகின்றனர். பொதுஜன எதிர்ப்பு இல்லாவிடினும் அலட்சியம் இருந்ததன் காரணமாகத்தான் (ஓரளவு அதன் விளைவாகக்கூட இருக்கலாம்) எழுத்தாளன் மன மறிந்து, மனச் சாட்சிக்கு ஏற்ப, பணியாற்றும் கலைஞனாக மாறுவதில் விசேஷ சிரத்தையைக் காட்டி வந்திருக்கின்றான். கவிதையை ஆராய்ந்து அளிப்பதும் உள்ளூர மனநிலையை கட்டுத் திட்டத்தில் வைத்துக்கொள் வதும் எவ்வளவு முக்கியமானவை என்பதை அவன் அறிந்துள்ளான்.

எல்லா புதிய எழுத்துமே பரீட்சார்த்தத் தன்மை யுள்ளது என்று நினைப்பது பெரும் தவறு. எல்லாக் கவிதைகளுமே புதிய கவிதையாகவும் ஆகிவிட மாட்டா. ராஜீய சித்தாந்த வேற்றுமைகள் இலக்கிய உணர்வுகளை ஆழமாகப் பாதித்துள்ளன. கவிதையுள்ளம் படைத்தவர் கள் என்ற வகையில் ஒன்றாக இருக்க வேண்டியவர்கள் வெவ்வேறு பகுதிகளாகி, சில சமயம் ராஜீய விருப்பு வெறுப்பு காரணமாக, பரஸ்பரம் விரோத மனப்பான்மை யுள்ளவர்களாகவும் மாறிவிடுகிறார்கள். பிரயோகவாத வழியினரது பரீட்சைகளால் லாபமடைந்தவர்கள் முற் போக்கு எழுத்தாளர்கள். இது இயற்கையே எனினும், புதிய மெய்யுணர்வு வளர்ச்சி கண்டதற்கு பரீட்சார்த்த

வாதிகள் மட்டுமின்றி பிற வழியினரும் காரணம் என்றுதான் கூற வேண்டும். ஷம்சேர் பகதூர் சிங் (1911-) பவானி பிரஸாத் மிச்ரா (1914-) இருவரும் இதற்கு எடுத்துக் காட்டுகள். பகதூர் சிங்கின் படைப்புகள் உருது இலக்கியத்தின் நாகரிக மிகுதியையும் பரபரப்பான புறக் கவர்ச்சியையும் கொண்டது. அதில் ஆழமும் மெய் யுணர்வும் உண்டு. ஹைக்கு என்ற ஜப்பானியக் கவிதா வழி அவரைப் பலமாக ஈர்த்தது. அவர் சொற்செட்டு மிகுந்தவர். தீவிர உணர்ச்சிகளை ஒன்றுக்குள் ஒன்ருகச் செருகிக் காண்பித்து மக்களின் அபிமானக் கவிஞுகத் திகழ்ந்தார். அவரது கவிதைத் திறன் ஆட்சேபத்துக்கு இடமில்லாதது. எனினும் கவிஞர்களின் கவிஞராக அவ ரைக் கொள்வது பொருந்துமே தவிர மக்களின் கவிஞராக ஏற்பதற்கில்லை. தான் பிரயோகிக்கும் நடை, உணர்ச்சி பாவ சித்திரங்கள் காரணமாக, பவானி பிரசாத் மக்க ளுக்கு அதிக நெருக்கமானவர். கையாளும் சொற்கள், பாட்டு அமைப்பில் இலக்கண நியதி, ஓசை நயம், சரள மான ஓட்டம் ஆகியவற்றுடன் கூட, சாதாரண உரை நிகழ்த்துவது போல, அவர் பாடுகிருர். சம்பிரதாய யாப்பிலக்கண விதி வரம்புகளை மீருமல் 'பச்சன்' சென்ற வழியை மிச்ராவும் பின்பற்றி, அதே சமயத்தில் சுதந்திர மலர்ச்சி காணும் இக்கால இயக்கத்தை நோக்கி ஏற்றம் கண்டார்.

கவிதையானது நியதிகளைப் பற்றிய பிரச்னைகளில் அதிக கவனம் செலுத்தியது. ஆனல் புதிய மனிதாபி மான மனப்பான்மை உரைநடைப் பதிப்புகளில் பல்வேறு வகைகளில் பரந்து கிடப்பதைக் காணலாம். முன்னரே எடுத்துக் காட்டிய நீர்நிலைத் தகுதியை வெளிப்படுத்தும் போக்கும் இருந்தே வருகிறது. புதிய எழுத்தாளரில், ஏதாவது ஒரு குறிப்பிட்ட வடிவத்தில் உறுதியாக நின்று எழுதுபவர்கள் மிகக் குறைவு. நியதிகளைப் பற்றிய பிரச்னையில் கவிஞர்கள் அவசரவுணர்ச்சியுடன் கவனம்

செலுத்துபவர்கள். ஆகையால் ஆய்வுரைப் படைப்புகளை நிறைய வளர்த்துள்ளனர். படைப்பு முறையில் பல்வேறு தன்மைகளைப் பற்றி அவர்கள் விசாரித்துள்ளனர். தர்ம வீர பாரதி (1925) பல்வேறு விஷயங்களைப் பற்றி நல்ல சக்திவாய்ந்த வகையில் எழுதக் கூடிய இளம் எழுத்தாளர். அவர் செய்யுள் வடிவத்தில் ஒரு நாடகத்தையும் அமைத்துள்ளார். ஸர்வேசுவர தயாள சக்சேனு, ரகுவீர சஹாய், 'மதன் வாத்ஸயாயன்', ஜகதீச குப்தா, வி. என்.சாஹி, ஹரி வியாஸ், குன்வர் நாராயணு, பி. என். திரிபாடி ஆகியோரும் பிறரும் முன்னுக்கு வரக் கூடிய எழுத்தாளர்.

பரீட்சார்த்த வகையில் உணர்ச்சி வேகத்துடன் எழுதும் இயக்கம் ஒன்று குறிப்பிடத்தக்கவாறு இருந்து வருகிறது. இது சில பகுதிகளில் மட்டுமே காணப் பெறுவது. நளின் விலோசன சர்மா, 'கேசரி' நரேச குமார் ஆகிய மூன்று பீகார்க் கவிஞர்கள் எஜ்ரா பவுண்ட், இ. இ. கம்மிங்ஸ் ஆகியோரின் செல்வாக்குக் காரணமாக, பழைய மரபுகளின் கண்டிப்பை எதிர்த்துக் கலகம் செய்பவர்களைப் போல எழுதியிருக்கிறுர்கள். இக்காலத்து எழுத்தாளர் கையாளும் உத்திகளைப் பற்றிய ஆராய்ச்சிக்கு இந்த இயக்கம் உதவுபடியாக இருக்கும். தவிர இது சுவையுள்ளதாகவும் காணப்படுகிறது. ஆனல் இதுவரை பிரதான சாதனை எதுவும் கிட்டவில்லை.

மக்களுடன் ஒன்றியதான இலக்கிய விசாரணையானது பிராந்தியக் கதை வடிவத்தில் கொண்டுபோய் விட்டிருக்கிறது. அதுவும் மனிதாபிமானம் விரிவடைந்து வருவதுமாகச் சேர்ந்து, கிராம வாழ்க்கை, எளிய மக்களின் வாழ்வு ஆகியவை பற்றி துல்யமான படைப்புக்கள் வசனத்திலும், கவிதையிலும், தோன்றுவதற்குத் தூண்டுகோலாக இருந்திருக்கின்றன. புதுமையில் நாட்டமும், புதிய வடிவங்களைக் கையாள்வதில் ஆர்வமும், சொல் நயத்துக்குரிய இடம் வேண்டுமென்ற எண்ணமும் இந்தத்

திசையில் நாட்டு வாழ்வை நோக்கி எழுத்தாளரை உந்தி யிருக்கின்றன. தவிர பாமர மக்களுக்காக, அவர்கள் கையாளும் சொல்லாட்சியைக் கொண்டு எழுத வேண்டு மென்ற சித்தாந்த நிர்ப்பந்தமும் அத்துடன் கூடச் சேர்ந்திருக்கிறது. சம்புநாத சிங், கேதார் நாத் அகர் வால், திரிலோசன சாஸ்திரி, கேதார் நாத் சிங் போன்ற வர்கள் செய்யுள் இயற்றியிருக்கிருர்கள். இன்னும் பலர் மெட்டுப் போட்டு நாட்டுப் பாடல்களை எழுதியிருக் கிருர்கள். 'ரேணு' பணீசுவர நாத் (1921), மார்க்கண் டேயா (1931), கேசவ பிரசாத் மிச்ரா, மனோஹர் சியாம ஜோஷி, சிவப்பிரசாத் சிங் ஆகியோர் இளந் தலைமுறை யைச் சேர்ந்த உரைநடை எழுத்தாளர்கள். குறிப்பிட்ட பிராந்திய வாழ்க்கையைச் சித்திரிப்பதன் மூலம், ஹிந்திக் கதை உலகின் கண்ணோட்டத்தை விரிவாக்கியிருக் கிருர்கள். ரேணுவின் 'மைலா அஞ்சல்' என்பது சிறந்த பிராந்திய கதைகளில் ஒன்ருக இடம்பெற்றுள்ளது. "பஹதீ கங்கா" என்ற நூலில் "ருத்ரா" நகர வாழ்வை மொத்தமாகக் காட்டுகிருர். காசியில் பல தலைமுறை களாக எப்படி மக்கள் வாழ்ந்து வந்திருக்கிருர்கள் என் பதைப் பற்றியது இந்நூல். பிராந்தியச் சூழ்நிலையை வைத்து கற்பனைக் கதைகளை நாகார்ஜுன் இயற்றி யுள்ளார். அம்ருதலால் நாகரின் நாவல்கள் ஒரு குறிப் பிட்ட பிராந்தியத்தைப் பற்றி இல்லாமல், சமூகத்தின் ஒரு குறிப்பிட்ட அந்தஸ்தினரைப் பற்றியவை. இம் மாதிரி, கண்ணோட்டத்தை குறுக்கிட்டுக் கொண்டு எழுது வதன் நோக்கம், உண்மை நிலையை எழுத்தானது பிரதி பலிக்கச் செய்ய வேண்டுமென்ற ஆவல்தான். குறிப் பிட்ட நிலையை மனமகிழ்ச்சியுடன் எடுத்துரைக்கும் திறன் காரணமாக அவரது சித்திரம் கவர்ச்சிகரமாக அமைகின்றது.

செய்யுள் நாடகமும் கற்பனை நாடகமும் புதிய போக்கில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியவை.

ரேடியோ இத்தகைய எழுத்தை ஊக்குவித்துள்ளது. எனினும் அதுவே இதற்குப் பிரதான காரணம் என்று சொல்வதற்கில்லை. ரேடியோ நாடகங்கள் நிறைய எழுதப் பெற்றுள்ளன. ஆனால் அவற்றின் தரம் சுமாராகத்தான் இருக்கிறது. ரேடியோவுக்காக எழுதப் பெறாத நாடகங்களில் சில சமயம் நல்ல நாடகங்களைக் காணலாம். எனினும் நாடகாசிரியருடன் நெருங்கிய தொடர்பு கொண்டு நாடகத்தை நடத்திக் காட்டுவது என்ற மரபு ஜீவசக்தியுடன் கூட இல்லை. இது இத்தகைய முயற்சிகளின் வளர்ச்சிக்குக் குந்தகமாக இருக்கின்றது. உபேந்திரநாத் அஷ்க் (1910), ராமகுமார வர்மா (1905), லக்ஷ்மி நாராயண மிச்ரா (1903), ஜகதீச சந்திர மாதுர், பாரத்பூஷண் அகர்வால் (1919) ஆகியோர் இத்துறையில் நல்ல பணியாற்றியிருப்பவர்கள்.

இந்தக் காலத்தில் மரபையொட்டி, சந்தம் குன்றாமல், இசைக் கவிதைகளைப் புனைந்தவர்கள் பலர் உண்டு. கீதம் (பாட்டு) என்பது இந்த வகையின் பெயர். ஆனால் இந்தப் பாடல்கள் சுருக்கமாகவே இருக்க வேண்டுமென்பதில்லை. இதை அனுபவித்துப் பாடுவோரை ஆதரிக்கும் மக்களுக்கு பஞ்சமில்லை. ஆனால் இத்தகைய எழுத்தில் சுயமான திறன் அதிகமாக வெளிப்படுவதில்லை. பாட்டை எழுதுபவன் என்பதைவிட, இசை வடிவ எழுத்தாளன் என்று கருதப் பெறுவது மரியாதை வழி. இந்தப் போக்கு ஹிந்தி மொழியில் மட்டுமின்றி பொதுப்படையாகவே இக் காலத்தில் காணப்பெறுவது.

தற்கால எழுத்தைப்பற்றிய வரலாற்றில் கருத்துச் செறிவுள்ள ஆக்க நூல்களை ஏற்றுக்கொள்வது மட்டுமே பொருந்தும். இக்காலத்துத் திறனாய்வு முறையைக் குறை கூற முற்படுவதில் ஒன்றுக்கு மேற்பட்ட விருப்பு, வெறுப்பு, பாரபட்ச வகைகள் குறுக்கிடுகின்றன. அவசியமான மறைமுகப் பிரஸ்தாபங்களைப் பற்றி முன்னமே கூறியாகிவிட்டது.

தற்கால எழுத்தைப் பற்றிய எந்த வரலாறுமே சர்ச்சையுள்ளதாகத்தான் இருக்கும். சர்ச்சைக்கு நானும் உள்ளாகியிருக்கிறேன். சார்பு மனப்பான்மை அடியோடு இல்லை என்று என் விஷயத்தில் சொல்லவும் முடியாது. அப்படிச் சொன்னாலும் அது ஆய்ந்து பார்க்க இயலாத சாதனையாகத்தான் இருக்க முடியும். நீண்ட காலக் கண்ணோட்டத்துடன் கூட சாத்தியக் கூறுகளை மதிப்பிடும் நிலையில்தான், போதிய அளவு ஒதுங்கி நின்று விமரிசனம் செய்ய இயலும். ஓர் இலக்கியம் பூராவையும், அல்லது குறிப்பிட்ட பகுதிகள் பற்றி மட்டும், சர்ச்சை நடந்து கொண்டிருக்கும் வகையானது, அத்துறையில் அதிகப் பரிச்சயம் உள்ளவர்களின் சிந்தனையை மட்டுமே கிளறிவிடும். அவ்வளவு பரிச்சயம் இல்லாதவர்களிடமும் அக்கறையை அது உண்டு பண்ணலாம். இத்தகைய முயற்சியினால் தீங்கு இல்லை. பழக்கம் இல்லாத வாசகன், பரந்து கிடக்கும் ஹிந்தி இலக்கியத்தை நம்பிக்கையுடன் ஆராய்வதற்கு ஊக்கம் அளிப்பதற்கு இந்த வரலாறு துணை புரியும் என்று நினைக்கிறேன். புத்திபூர்வமாக உணர்வு பெற்று, உணர்ச்சிபூர்வமாக திருப்தியடைவதற்கு இத்தகைய விசாரணை ஓரளவு வழிகாட்டியாக இருக்குமென்று கருதுகிறேன்.

# SELECT BIBLIOGRAPHY OF HINDI LITERATURE

*Indo-Aryan and Hindi.*
By Dr. S. K. Chatterjee; Gujarat Vernacular Society.

*Modern Vernacular Literature of Hindustan.*
By G. A. Grierson; Calcutta, 1889.

*History of Hindi Literature.*
By E. Greaves.

*History of Hindi Literature.*
By F. E. Keay; Heritage of India series.

*Hindi Literature.*
By R. Dvivedi; Banaras, 1953.

*Linguistic Survey of India.*
By G. A. Grierson, Vol. IX, Pt. I, pp. 1–605.

# ஆங்கிலத்தில் இந்திய இலக்கியம்

கே. ஆர். ஸ்ரீநிவாச அய்யங்கார்

## முகவுரை

ஆங்கிலத்தில் கவர்ச்சிகரமாக நிறைய எழுதுவது பிரிட்டிஷ் மோதலின் விளைவுகளில் ஒன்று. "இந்தோ-இங்கிலீஷ் இலக்கியம்" என்று இதைக் குறிப்பிடுவது வழக்கம். உண்மையில் இது இருமுக இலக்கியம். இந்தியாவிலுள்ள அன்னியர்கள் படைத்த இலக்கியம் ஒரு வகை. தொலை தூரத்தில் உள்ளவர்கள் இந்தியாவால் ஈர்க்கப்பட்டு இந்திய விஷயங்களைப் பற்றி எழுதிய இலக்கியம் மற்றொரு வகை. சாஸர் காலத்திலிருந்து ஆங்கிலேய எழுத்தாளர் தமது நூல்களில் இந்தியாவைப்பற்றி இங்குமங்கும் பொதுப்படையாகக் குறிப்பிட்டுள்ளனர். இந்திய விஷயங்கள், இந்தியரது உணர்ச்சி பாவம் ஆகிய வற்றால் ஊக்குவிக்கப் பெற்ற ஆங்கிலேயர்கள் சிருஷ்டித்த இலக்கியத்திற்கு "ஆங்கிலோ-இந்திய இலக்கியம்" என்று பெயர். இது முறைப்படி தொடங்கியது 19-ம் நூற்றாண்டின் இறுதியில் ஸர் வில்லியம் ஜோன்ஸுடன்தான். பயனுள்ள இரு பண்பாடுகளின் சேர்க்கை பிரமாத விளைவுகளுடன் கூடியதாக இருக்கும் என்று முதலில் தோன்றியது. ஆனால் ஆங்கிலோ-இந்திய இலக்கிய மரபினர் தமக்குக் கிடைத்த சந்தர்ப்பத்தைக் கைநழுவ விட்டனர். ஜோன்ஸ், லேடன், ஸர் ஆல்பிரெட் லையால், ஸர் எட்வின்

ஆர்னல்டு ஆகியோர் தொடங்கிய விதம் எடுப்பாக இருந்தது. ஆனல் தொடக்கமே முடிவாகவும் மாறிவிட்டது. ஆங்கிலோ-இந்திய இலக்கிய மரபினர் நல்லெண்ணம் நிறைந்தவர்கள். எனினும் அவர்கள் தமது இனம் மேன்மையானது என்ற ஒரு மமதை கொண்டிருந்தார்களாகையால் இரண்டு பண்பாடுகளும் உண்மையில் ஒன்றிவிட முடியாது போயிற்று. அவர்கள் தமது சொந்த மனோநிலையை வைத்துக்கொண்டு எழுதினர். மாபெரும் இந்திய மக்களின் ஜன சமூகத்துடன் அவர்களுக்குத் தொடர்பு இருக்கவில்லை. நம்பிக்கையோ, தீர்க்கதரிசனமோ கிடையாது. எனவே இ. எப். ஒட்டன் கூறியபடி, சாதாரண ஆங்கிலோ-இந்திய எழுத்தாளரின் முயற்சி பயனற்ற, குறித்த நோக்கமெதுவு மில்லாத பாலைகளிலும், வனங்களிலும் வீணுகும்படி நேரிட்டது. "இந்தியப் பயணம்" (A Passage to India) என்ற தலைப்பில் பார்ஸ்டர் எழுதிய பெரு நூலும், "இந்தியா பற்றிய தீர்ப்பு" (Verdict on India) என்று நிக்கல்ஸ் மிக மட்டமாக எழுதிய அக்கிரமமான நூலும் ஆங்கில இலக்கியத்தில் அகஸ்மாத்தாக முளைத்தவை என்றுதான் கூறவேண்டும். ஆங்கிலோ-இந்திய இலக்கியத்தின் மேன்மையை முதல் நூலோ அல்லது அதன் கேவலமான தாழ்நிலையை இரண்டாவதோ சித்திரிப்பதாகக் கருதுவது சரியாகாது. இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு ஆங்கிலோ-இந்திய இலக்கியம் தன் தனி அந்தஸ்தை இழப்பது தவிர்க்க முடியாததாகி விட்டது. ஆனல் இன்னும் இந்தியச் சூழ்நிலையை வைத்து ஆங்கிலேயர்களும், அமெரிக்கர்களும் நூல்களை இயற்றி வருகின்றனர்.

அடுத்தபடி குறிப்பிட வேண்டியது ஆங்கிலத்தில் இந்தியர்கள் படைத்த நூல்கள். இதை "இந்தோ-ஆங்கில இலக்கியம்" என்று வருணிப்பது பொருத்தமானது. டாகுர், மனமோகன் கோஷ், ஸ்ரீ அரவிந்தர் போன்ற இந்திய எழுத்தாளரின் நூல்களை "ஆங்கிலோ-இந்திய

இலக்கியம்'' என்ற பகுதியில் சேர்த்து கேம்பிரிட்ஜ் பதிப்பீடான ஆங்கில இலக்கியத்தின் வரலாற்று நூலில் (Concise Cambridge History of English Literature) ஜார்ஜ் சாம்ஸன் குறிப்பிட்டுள்ளார். எனினும் இந்திய விஷயங்களைப் பற்றி ஆங்கிலேயர்கள் எழுதியிருப்பதை வேருகவும், இந்தியர்கள் ஆங்கில மொழியில் தமது இலக்கியத் திறனை வெளிப்படுத்தியிருக்கும் நூல்களை வேருகவும் பார்ப்பது விரும்பத்தக்கது. 1883-ம் ஆண்டிலேயே கல்கத்தாவில் 'இந்தோ–ஆங்கில இலக்கியம்' (Indo-Anglian Literature) என்ற பெயரில் ஒரு புத்தகம் வெளியாயிற்று. சுதேசி மாணவர்கள் எழுதிய ஆங்கிலத்திலிருந்து சில 'மாதிரி'களை எடுத்து அதில் தொகுத்து வெளியிட்டனர். அண்மையில், குறிப்பாக, சென்ற 25 ஆண்டுகளில், 'இந்தோ-ஆங்கில' என்ற சொற்ருெடர் கணிசமாக வழக்கத்திற்கு வந்துவிட்டது. இன அல்லது சமயச் சார்புள்ள பொருள் எதுவும் அதற்குக் கிடையாது. நூல் எத்தகையது என்பதை வருணிக்கவும், எழுதுபவரின் இனத்தை சேர்த்துச் சொல்லவும் அது பயன்படுகிறது. எனவே, இந்த சொற்ருெடர் நிலைத்துவிட்டதில் ஆச்சரியம் எதுவுமில்லை.

பி. இ. என். ஸ்தாபனத்தின் ஆதரவில் இந்தோ-ஆங்கில இலக்கியத்தைப் பற்றி இந்தக் கட்டுரையாளர் எழுதிய சிறு நூலுக்கு முகவுரை வழங்கிய காலஞ் சென்ற டாக்டர் சி. ஆர். ரெட்டி பின்வருமாறு கூறினர்:

> '' இந்தோ-ஆங்கில இலக்கியம், அடிப்படையில் இந்திய இலக்கியத்திலிருந்து மாறுபட்டது அல்ல. அது இந்திய இலக்கியத்தின் பகுதியே ஆகும். வேதங்களில் தொடங்கி தொடர்ச்சியாக முதிர்ச்சியின் ஒளி வீச்சுடன்கூட பிரகாசமாக இருந்து வந்திருக்கும் கீர்த்தியின் நவீன தோற்றமே இவ்விலக்கியம். இந்தச் சோபை சில சமயம் கண்ணைப் பறிப்பதாகவும், சில சமயம்

மங்கியும் காணப்பெறும். காலமும், வரலாறும் இத்தகைய மாறுதல்களைத் தோற்றுவிப்பது இயல்பே. இந்த வளர்ச்சியானது டாகுர், இக்பால், அரவிந்த கோஷ் காலம் வரை பிரகாச மாக இருந்து வந்திருக்கிறது. நமது எதிர் காலமும், மனித சமூகத்தின் எதிர்காலமும் விரிவாகிக் கொண்டே வருகையில், இதுவும் கூடவே வளர்ச்சி காணும்.''

தற்கால இந்திய இலக்கியம் என்பதே ஏறத்தாழ ஒரு நூற்றுண்டு காலத்தியது. ஒரு காலத்தில் கல்வி-கேள்வி கள், நுண்கலைகள், பண்பாட்டுச் சிறப்பு ஆகியவற்றின் தாயகமாக இருந்த இந்த விரிவான உபகண்டத்தில் 17-வது, 18-வது நூற்றுண்டுகளில் குறிப்பிடத்தக்க, கட்டுப்பாடான கல்வி முறை எதுவும் இராது போயிற்று. அன்று இருந்து வந்த நிலைமைகளின் கீழ் சம்பிரதாயக் கல்வி இங்குமங்கும் குற்றுயிராக ஒரு சில கேந்திரங்களில் முடங்கிக் கிடந்தது. அவற்றிற்கும் எழுத்து வாசனையற்ற கோடானு கோடி மக்களுக்குமிடையே பெருகிக் கொண்டு வந்து பிளவைக் குறுக்குவதற்குத் தீவிர முயற்சி எதையும் அப்போது இருந்து வந்த நிலைமைகளின் கீழ் செய்ய முயலவுமில்லை, இயலவும் இல்லை. உடல், உள்ளம், மதி அனைத்தையும் சொல்லொணுத ஒரு சோம்பேறித்தனம் பீடிக்கலாயிற்று. இந்திய மக்களின் ஆன்மாவும், உடலும் அதன் பிடியில் சிக்கின. இந்தியப் பண்பாடு என்ற நீரோட்டம் தேசிய அடிமை வாழ்வு என்ற பாலைவனத்தில் பாய்ந்து வறண்டுவிட்டது.

பிரிட்டிஷ் செல்வாக்கானது காலக்கிரமத்தில் தேவை யான மூவகை உணர்ச்சி வேகத்தை நமக்கு அளித்தது. ஸ்ரீ அரவிந்த கோஷ் கூறியபடி, உறக்கமுற்றிருந்த படித்த வகுப்பினரையும், திறனாய்வு உணர்ச்சியையும் மீண்டும் ஊக்குவித்தது. வாழ்க்கைக்கு மறுவாழ்வு தந்து புதிய படைப்பில் ஆவலை உண்டு பண்ணி

யது. மறுமலர்ச்சி கண்ட இந்திய உணர்ச்சியானது நவ நவமான நிலைமைகளில், புதுப்புது லட்சியங்களை எதிர் நோக்கி இருந்தது. அவற்றை நன்குணர்ந்தறிந்து, ஜரித்துக்கொண்டு, தமக்கு பணிபுரியச் செய்யும் அவசர அவசியம் அவர்களுக்கு ஏற்பட்டது. புதிய கருத்துக் களும், புதிய இலக்கியமும் வேர்விட்டுத் தழைக்கவேண்டு மானால் சிறந்த நோக்கமும் சிந்தனையும் மறுமலர்ச்சி காணக்கூடிய புதிய சூழ்நிலையைத் தோற்றுவிக்க வேண்டி யிருந்தது. மண் பழைய மண்தான். ஆனால் நவீன கருவிகளையும், வளமான எருக்களையும் பயன்படுத்துவது விரும்பத்தக்கது. தூரதிருஷ்டியும், சாதனைச் செழுமை யும் பெற்றிருந்த மாபெரும் ராஜாராம் மோகன்ராய், சக்தியே உருவான இந்தியாவின் தோற்றத்தைக் கனவு கண்டார். அதைத் தமது காலத்திலேயே அடைந்தே தீருவதற்குப் பாடுபட்டார். கிறிஸ்துவ மிஷனரிகள் தேசமெங்கும் அச்சு யந்திரங்களை நிறுவி விவிலிய நூலை இந்தியப் பிரதேச மொழிகளில் மலிவுப் பதிப்புக்களாக வெளியிட்டனர். இந்தியப் புலமைக்குக் கீழ்த்திசைக் கல்விமான்களும் ஒரு புதிய திருப்பத்தை அளித்தனர். அழிவை எதிர்நோக்கிய நிலையிலிருந்து பல பழம்பெரு நூல்களை மீட்டு உலகிற்கு வழங்கினர். ஆனால் ஆங்கில மொழிக் கட்சி, சுதேசிக் கல்விக் கட்சி என்று இரண்டாகப் பிரிந்து சில காலம் இரண்டின் ஆதரவாளரும் சொற்போர் நடத்தினர். இறுதியாக சீர்திருத்தவாதிகள் வென்றனர். ராம் மோகனும், அவரது சகாக்களும் கொண்டிருந்த புரட்சி ஆர்வமும், மிஷனரிகள் கல்வித் துறையில் செய்த புது முயற்சிகளும், நவீனக் கல்வியை ஆங்கில மொழி மூலம் போதிப்பது என்று மெக்காலே தயாரித்த திட்டத்தை 1835-ம் ஆண்டு சர்க்கார் ஏற்றுக் கொண்ட தும், இந்தியக் கல்வியும் பண்பாடும் அடுத்த ஒரு நூற் றுண்டுக்கேனும் எவ்வாறு இருக்க வேண்டுமென்பதை முடிவு கட்டிவிட்டன.

விரிவாக, ஆனால் படிப்படியாக, பாடசாலைகளிலும், காலேஜுகளிலும் ஆங்கில மொழியின் மூலம் போதனை நடைபெறலாயிற்று. ஆதரவு அதிகரிக்க அதிகரிக்க இந்த முறையின் அந்தஸ்தும் ஓங்கியது. ஒன்றிரண்டு தலை முறைகளில் கணிசமான எண்ணிக்கையில் இந்தியர், ஐரோப்பிய இலக்கியம், பண்பாடு ஆகியவற்றில் விதவித மான செல்வங்களுக்கு அறிமுகமாயினர். குறிப்பாக ஆங்கில இலக்கிய விஷயத்தில் இது விசேஷமாகத் தென் பட்டது. புதிய பள்ளிக்கூடங்களில் சக்திவாய்ந்த கல்வி பெறுவதை பாக்கியமாகக் கருதிய இளைஞர்களில் பலர் மீண்டும் உலகில் இந்தியப் பண்பாடு, தனக்குரிய ஸ்தானத்தை அடையச் செய்ய வேண்டுமென்று ஆர்வம் கொண்டனர். ஆங்கில எஜமானர்களின் கவனத்தை நிச்சயமாக ஈர்க்கும் நோக்கத்துடன் அவர்கள் ஆங்கிலத் தில் எழுதலாயினர். அந்த எஜமானர்களை மட்டுமின்றி, மற்ற பல்வேறு மொழிப் பகுதிகளிலுள்ள தாய் நாட் டினரையும் கருத்தில் கொண்டே அவர்கள் எழுதினர்; தாய்மொழியில் எழுதியாக வேண்டுமென்று பொதுவாக ஆவல் கொண்டனர். அப்படிச் செய்யாவிடில் ஆத்ம திருப்தி ஏற்படாது, பாமர மக்களுக்குக் கல்வியை அளிக்க வும் இயலாது. அவர்கள் ஆங்கிலத்திலோ, அல்லது தமது தாய்மொழிகளிலோ எவற்றில் எழுதினாலும் எழுது வதற்கு எடுத்துக்காட்டாக ஆங்கில இலக்கியத்தை வைத்துக் கொண்டனர். அவர்களுக்குத் தெரிந்த நவீன ஐரோப்பிய இலக்கியம் அது ஒன்றுதான். மேலை நாடு களின் தொடர்பினால் ஏற்பட்ட அதிர்ச்சியானது நிலத் தைக் கிளறிவிட்டது. ஆங்கில இலக்கியம் உரமாக அமைந்தது. கால முதிர்ச்சியில் நவீன இந்திய இலக் கியம் பிறந்தது. நவீன வங்காளி, ஹிந்தி, மராத்தி, தெலுங்கு, தமிழ், குஜராத்தி இலக்கியத்தைப் போலவே இந்தோ-ஆங்கில இலக்கியமும் இந்திய இலக்கியந்தான். அதற்கென்று பிரகாசமான ஒரு மரபு உண்டு. இன்றும்

புதிய ஜீவகளையும் சக்தியும் அதனிடம் காணப் பெறுகின்றன.

இந்தோ-ஆங்கில இலக்கிய வரலாற்றை ஐந்து பகுதி களாகப் பிரிக்கலாம்:

| | |
|---|---|
| 1820 முதல் 1870 வரை: | தொடக்கம், வழிகாட்டி களின் காலம். |
| 1870 முதல் 1900 வரை: | ஆன்மீக மறுமலர்ச்சி, மத, இலக்கிய விழிப்பு தோன்றிய காலம். |
| 1900 முதல் 1920 வரை: | ராஜீய எழுச்சிக் காலம், வந்தே மாதரம், சுயாட்சிக் காலம். |
| 1920 முதல் 1947 வரை: | காந்தியப் புரட்சிக் காலம், நவீன வீர சகாப்தம். |
| 1947 முதல் | சுதந்திர சகாப்தம். |

நாம் கவனிக்க இருக்கும் காலத்தை இம்மாதிரி பிரித்துக் கொள்வது சௌகரியத்திற்காகத்தான். இதில் ஓரளவு ஒன்றேடொன்று சேரத்தான் செய்யும்.

## 1820–1870

இந்தியர்கள் ஆங்கிலத்தில் முதலில் எழுதியது உரை நடையில்தான். ராஜாராம் மோகன்ராய்தான் இந்தோ-ஆங்கில இலக்கியத்தில் முதல் பெரிய எழுத்தாளர். அவர் சிறந்த வழிகாட்டியாகவும் விளங்கினர். அவர் கம்பீரமான வர். தேச வாழ்வின் பல துறைகளில் பயனுள்ள சீர்திருத் தங்களைத் துவக்கிவைத்தார். எல்லாவற்றிலும் ஆக்க வேலை யிலேயே அவர் ஈடுபட்டார். விரும்பத் தகாதவற்றை யெல்லாம் அகற்றி நவ இந்தியாவுக்கு அடிகோலும் பணி அவருடையதாயிற்று. தெளிவான ஆங்கில மொழி உரை நடையில் அவர் வல்லுநர். அவரது திறனும், சக்தியும்

"ஜீஸஸின் சித்தாந்தங்கள்" (1820) (Precepts of Jesus) என்ற நூலிலும், இன்னும் பல உரைநடைப் பிரசுரங்களிலும் காணக்கிடக்கின்றன.

தன்னம்பிக்கையுடன் லாகவமாக ஆங்கில உரைநடையில் எழுதிய முதல் இந்தியர் ராம் மோகன்ராய். இந்தோ - ஆங்கிலக் கவிஞர்களில் முதல்வர் ஹென்றி டெரோஜியோ. டெரோஜியோ 1807-ல் பிறந்தார். அவரது வாழ்க்கை ஏற்றத் தாழ்வு மலிந்தது. 1831-ல் அவர் காலராவினால் காலமானார். அவரது படைப்புக்கள் கணிசமானவை. ஜங்கீரா பக்கீர் (The Fakir of Jhungheera) என்ற கதைப் பாடல் அவரது தொகுப்பில் காணப்படுகிறது. டெரோஜியோ பாதி இந்தியர், பாதி போர்த்துகீசியர். ஆனால் அவரது உணர்ச்சி முற்றிலும் இந்திய மயமாகவே இருந்தது. இந்தியாவின் தேசியக் கவியாகத் திகழ வேண்டுமென்பது அவரது ஆசை. அவரது கவிதை சிலாக்கியமானதுதான். ஆனால் அவற்றைவிட அவர் பிரமாத வளர்ச்சிக் காணக் கூடியவர் என்ற தோற்றந்தான் இன்னும் அதிகப் பெருமையை அவருக்கு அளித்தது. மற்றொரு வழிகாட்டி காசிப் பிரசாத் கோஷ். "ஷேர், மற்ற பாடல்கள்" (1830) (The Shair and Other Poems) என்பது அவரது நூல். ஆனால் அவரது படைப்புக்களில் கவிதைச் சிறப்பு குறைவுதான்.

பம்பாய், கல்கத்தா, சென்னை நகரங்களில் 1857-ல் சர்வகலாசாலைகள் ஏற்பாடாயின. மில்ட்டனது மகத்தான கவிதா இன்பத்தைச் சொல்லிச் சுவைத்து, பர்க்கின் இடிமுழக்கத்தை மீண்டும் வாயாற் கூறி மகிழ்ச்சியுறும் ஒரு புதிய தலைமுறை ஓங்கியது. தனது படைப்பை பாராட்டக்கூடிய மக்களின் எண்ணிக்கை பெருகிக் கொண்டே வந்தது, இந்தோ-ஆங்கில எழுத்தாளருக்குப் பெருமை தந்தது. பத்திரிகைத் தொழிலை பல இளைஞர்கள் நாடினர். ஆங்கிலத்தில் கவிதை புனைய முற்பட்டவர்களும் உண்டு. அவர்களில் புகழ் பெற்றவர் மைக்கேல்

மதுசூதன தத்தர். அவர் ஓர் இந்தியக் கிறிஸ்தவர். விதி அவரையும் வாட்டத்தான் செய்தது. முக்கியமாக அவர் வங்க இலக்கிய வழியினர். ஆனால் சென்னையில் ஓர் ஆங்கிலப் பத்திரிகைக்குப் பதிப்பாசிரியராக இருந்த துடன், "சிறைப்பட்ட பெண்" (1849) என்ற கதைப் பாடலை அவர் வெளியிட்டார். பிருத்வி ராஜ், ராணி சம்யுக்தை ஆகியோரின் கதையே அந்தப் பாடல்.

## 1870–1900

முன்னரே கூறியவர்கள் வழிகாட்டிகளாக விளங்கிய வர்கள். ஆனால் பிறரை மாதிரியாக வைத்துக்கொண்டு அவர்களது வாழ்க்கையைப் பின்பற்றி, இந்தியச் சிந்தனைகளையும், உணர்ச்சிகளையும் ஆங்கில வடிவங் களில் அல்லது சொல்லாட்சியில் பிணைத்துக் காட்ட முயன்று பலிக்காது போனவர்கள் பலருண்டு. 19-வது நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து ஆங்கில கவிஞர் களும், நாவலாசிரியர்களும் கற்பனைச் செழுமைச் சந்ததி யினர் (English Romantics) என்று குறிக்கப்பெறுகிற வர்கள். புதிய இலக்கிய கர்த்தாக்களை இந்த ஆங்கிலக் கவிதா பரம்பரையினர் பெரிதும் ஈர்த்தனர். எனினும் இந்தோ–ஆங்கில இலக்கியப் பரீட்சைகள் வெறும் ஈயப் பூச்சாகவே இருந்தன. ஆனால் விரைவில் காலச் சூழ லினின்று அசாதாரணமான ஆண், பெண் எழுத்தாளர் வெளிப் போந்து, ஆங்கிலத்தில் வெற்றிகரமாக தமது கருத்துக்களை எடுத்துரைக்க முடியும் என்பதை மீண்டும் மீண்டும் நிரூபணம் செய்தனர். 19-வது நூற்றாண்டின் கடைசி முப்பது ஆண்டுகளில் ஒரு புதிய ஆத்மீக மறு மலர்ச்சி சிறப்பாக மிளிர்ந்தது. மேலை நாகரிகத்தின் ஒளி-மிகுதியால் கண்கூசி, பார்வை இழந்த பலரை ராம கிருஷ்ண பரமஹம்சர் விழிப்புறச் செய்தார். தமது குருவின் உபதேசங்களை நாகரிக உலகின் தொலைகளுக்கு எல்லாம் தாங்கிச் சென்றார் விவேகானந்தர். வேதாந்த

பிரவசனத்திற்கும், சமயப் பிரசார அருட்பணிக்கும் ஆங்கில மொழியை அவர் பயன்படுத்திக் கொண்டார். பிரம்ம சமாஜம், ஆர்ய சமாஜம், பிரார்த்தனு சமாஜம் போன்ற இயக்கங்களைச் சேர்ந்த சமயமாற்றுப் பிரசார கர்கள் ஆங்கில மொழியை மிகத் திறம்பட லாகவமாகக் கையாண்டனர்.

ஆரு தத், தோரு தத் ஆகிய இருவரும் புனைந்த கவிதைகள் இந்தோ–ஆங்கிலக் கவிதையின் வரலாற்றில், பொருள்படைத்த முழுமையைக் கண்டன எனக் கூறலாம். ஆனால் இந்த லட்சிய பூர்த்தி துக்கம் படிந்தது. ஆரு தத் 1874-ம் ஆண்டிலும் தோரு தத் 1877-ம் ஆண் டிலும் 20, 21 வயதுகளில் காலமாயினர். டெரோஜியைப் போலவே ஆருவும், தோருவும் தமது கீர்த்தியின் முழு மையைக் காணுது மங்கிவிட்ட சுடர்கள். இருவரும் பிர மாதமாக முன்னுக்கு வரக்கூடிய வாய்ப்பிருந்த கவிதா சிகாமணிகள். அவர்களுடைய எழுத்து சிறந்த சாதனை. பிரெஞ்சு கற்பனை வள மரபினரது இசைப் பாடல்களை 1876-ல் அவர்கள் ஆங்கிலமாக்கிக் கொடுத்தனர். "பிரெஞ்சு வயல்களில் அறுத்த கதிர்" (A Sheaf Gleaned in French Fields) என்ற தலைப்பில் அவை வெளியாயின. "காலைக் காதல் கீதம்" உட்பட சில பாடல்களை ஆரு தத் எழுதினர். எட்மண்ட் கோஸ் அவற்றைக் கண்டு புளகாங்கிதம் அடைந்து தமது பேராச்சரியத்தை வெளியிட்டார். ஆனல் முக்கியமாக அவரைக் கவர்ந்தது தோருதான். புத்தகத்தின் விவர ணைப் பக்கத்தில் தோருவின் பெயர்தான் காணப்பட்டது. "பழைய கதைப் பாடல்களும், ஹிந்துஸ்தான் கட்டுக் கதைகளும்" (Ancient Ballads and Legends of Hindustan) என்ற நூல் அவர் காலமான பிறகு 1882-ல் பிரசுரமாயிற்று. அன்னிய மொழி ஒன்றில், கவிதை நயம் குறையாது, பாடல் புனையும் திண்மையை அது வெளிப்படுத்தியது. சாவித்திரி, சீதை, துருவன், பிரக

லாதன் ஆகியோரின் கதைகளை மீண்டும் ஒரு புதிய நறுமணத்துடன், அவர் ஆக்கித் தந்தார். தோரு தத்தின் பாடல்களை உலகம் சுவைக்கத் தொடங்கிய பின் எண்பது ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. ஆனால் எச். ஏ. எல். பிஷர் கூறியதுபோல், என்றென்றைக்கும் ஆங்கிலக் கவிதா பரம்பரையில் மறக்கமுடியாத இடத்தை அவர் பெற்றுவிட்டார்.

ஆரு தத், தோரு தத்தைப் போல இன்றி ராமேஷ் சந்திர தத் நீண்ட நாள் வாழ்ந்து பெருமையை அடைந்தவர். "புராதன இந்தியப் பண்பாட்டின் சரித்திரம் (1890)" (A History of Civilization in Ancient India) "பிரிட்டிஷ் இந்தியாவின் பொருளாதார வரலாறு (1902)" (Economic History of British India). "விக்டோரியா காலத்து இந்தியா (1904)" (India in the Victorian Age) என்ற நூல்களைத் தவிர, ராமாயணத்தையும், மகா பாரதத்தையும் அவர் ஆங்கில பாடல்களாக இயற்றி வெளியிட்டிருக்கிறார். அவரது வங்காளி நாவல்கள் ஆங்கிலத்தில் "தென்னை ஏரி" (The Lake of Palms), "ஆக்ரா அடிமைப் பெண்" (The Slave-girl of Agra) என்ற பெயர்களில் வெளி வந்துள்ளன. ராமேஷ் சந்தரின் ராமாயணமும், மகாபாரதமும் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் வழியில் வெற்றி கண்டவை. 24,000 ராமாயண சுலோகங்களையும், 2,00,000 மகா பாரத சுலோகங்களையும் 'லாக்ஸ்லி ஹால்' என்ற புகழ் பெற்ற பாடலின் சந்தத்தில் 4,000 குறள்களாக அவர் சுருக்கித் தந்திருக்கிறார். இதிகாச முதல் நூல்களை முரட்டுத்தனமாக அவர் சுருக்கவில்லை. நிகழ்ச்சிகள் பலவற்றை நீக்கியும், சில முக்கியமல்லாத விவரணைப் பகுதிகளை அகற்றியும், அவசியமான இணைப்புக்களை உரைநடையில் வழங்கியும், இப்பணியை அவர் செய்து முடித்துள்ளார். ராமேஷ் சந்திரரது இதிகாசச் சுருக்கங்கள் காலத்தை வென்றவை. ஆங்கிலத்தில் நமது மகத்

தான தேசிய இதிகாசங்களுக்கு மிகச் சிறந்த அறிமுக நூல்களாக இன்றைக்கும் அவை விளங்குகின்றன. ஆங்கிலத்தில் எழுதிய பிற இந்திய எழுத்தாளர் ராமகிருஷ்ண பிள்ளை (இந்தியக் கதைகள், 1895) (Tales of Ind), பேஹ்ரஞ்சி மலபாரி, (ஆங்கில உடையில் இந்தியக் கவிதா தேவி) 1876 (The Indian Muse in English Garb), "இந்தியர் கண்ட ஆங்கில வாழ்க்கை, 1893" (The Indian Eye on English Life), நாகேச விசுவநாதபாய், "சக்மக்பூரில் வரைந்த சில குறிப்புகள், 1894" (Stray Sketches in Chakmakpore), "துரதிருஷ்ட தேவதை, 1904" (The Angel of Misfortune). முதலில் பாய் விசேஷமாகக் குறிப்பிட வேண்டியவர். சமயச் சொல்லாட்சி கலந்த சித்திரங்களைத் தீட்டுவதிலும், வர்லாற்றுக் கவிதைகளை இயற்றுவதிலும் அவருக்கிருந்த நல்ல புலமையைக் காண்கிறோம். முற்றிலும் இந்திய மயமான சூழ்நிலையில் ஆங்கிலத்தில் எழுதி, ஒரு தனிச் சிறப்பை அவர் அடைந்துள்ளார். (பத்மினி, 1903), "மரண நாட்டியம்" 1912 (The Dance of Death), ஆகியவை ராமகிருஷ்ண பிள்ளை இயற்றிய நாவல்கள். ஆனால் இவ்விரண்டும் நன்றாக உழைத்து எழுதப் பெற்ற சாதாரண நூல்கள் என்று மட்டுந்தான் கூற வேண்டும்.

## 1900–1920

டாகுர், ஸ்ரீஅரவிந்த கோஷ் ஆகிய மாபெரும் புலவர்களைப் பார்க்கலாம். அவர்கள் பெரிய சக்திக் களஞ்சியங்கள். பல துறைகளை ஒரே சமயத்தில் ஆட்சி கொண்டவர்கள். 19, 20-வது நூற்றாண்டுகளில் 60 ஆண்டுகளுக்கு மேலாகச் சிறப்புடன் விளங்கிய பெரிய கவிஞர்கள். இந்திய தேசிய காங்கிரஸ் தோன்றிய காலம் முதல் அரசியல் முனையில் சுறுசுறுப்பானவேகம் காணப்பட்டது. ஆனால் இந்த நூற்றாண்டின் முதல் பத்தாண்டுகளில்தான்

தேசிய இயக்கமானது ஒருமுக நோக்குடன்கூட ஜீவ சக்தியை அடைந்தது. "வந்தே மாதரம்", விழிப்புற்று எழுந்த இந்திய தேசியத்தை உயிர்ப்பித்த மந்திரமாக மாறியது. முதலில் வங்காளமும், பின்னர் இந்தியா பூராவுமே, செயலாற்றுமாறு கோரிய அந்த அழைப்புக்குப் பணிந்தது. உடனடியாக எழுத்தாளர் செயலாளராக மாறினர். அன்னிய கொடுங்கோன்மை பலரை சிறைக்குள் தள்ளிய காலத்தில் கரும வீரர்கள் இலக்கிய வல்லுனர்களாக மாறினர். அலிபூர் சிறையில் ஸ்ரீ அரவிந்த கோஷிற்கு நாராயண தரிசனம் ஏற்பட்டது. திலகர் தமது கீதா ரகசியத்தை மாண்டலே சிறையில் எழுதினர். வந்தே மாதரம், ஹோம்ரூல் இயக்கங்கள் 20-வது நூற்றுண்டின் முதல் இருபது வருஷங்களில் வளர்ந்தவை. வீர முயற்சிகளையும், வீரத் தியாகங்களையும் நாட்டில் அவை ஊக்குவித்தன. அக்காலத்து இலக்கியம், இந்தோ-ஆங்கில இலக்கியம் உட்பட, மக்களது முயற்சிகளையும், துன்பங்களையும் அவர்களது தோல்விகளையும், கீர்த்திகளையும் அப்படியே பிரதிபலித்தது.

வங்காள இலக்கியத்தில் டாகுர் வகிக்கும் இடம் முதன்மையானது. ஆனல் சந்தர்ப்பச் சேர்க்கையின் நிர்ப்பந்தம் காரணமாக இன்னும் பலரைப்போல் அவரும் இரு மொழிகளில் பணியாற்ற வேண்டியிருந்தது. இந்தோ-ஆங்கில இலக்கியத்தில் சாசுவதமான இடத்தை அவர் சம்பாதித்துக் கொண்டது இவ்வகையில்தான். தமது கதைகளையும், நாடகங்களையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்ததுடன் 'குழந்தை' என்ற ஒரு நூலை அவர் ஆங்கிலத்திலேயே எழுதியிருக்கிறர். ஆண்களும் பெண்களும் சேர்ந்து உழைப்பதன் மூலம் முழுமை காண்பது என்ற தெய்வானுபவத்தை நோக்காகக்கொண்டு மேற்கொள்ளும் சமூக க்ஷேத்திராடன வர்ணனையாக அது அமைந்துள்ளது. இப்சனுக்கு அவர் இவ்வடிவத்தில் புது உருவம் கொடுத்திருக்கிறர். அவரது உரை நடை நூல்களில்

"சாதனு" (Sadhana), "தேசியம்" (Nationalism), "தனி நிலைப் பண்பு" (Personality), "மனிதனின் சமயம்(1930)" (The Religion of Man) ஆகியவை முதலில் ஆங்கிலத்தில் எழுதப் பெற்றவை. பல தேசப் பொதுமக்களை உத்தேசித்து இயற்றப்பட்டவை யாகையால் ஆங்கிலத்தில் எழுதினுர். எந்தத் தரத்தைக் கொண்டு மதிப்பிட்டாலும் டாகுரது பலதரப்பட்ட சாதனைகள் நிச்சயம் அங்கீகாரம் பெறத்தான் செய்யும். அவர் வங்காளத்திற்கு மட்டுமின்றி, இந்தியாவுக்கும், உலகுக்கும் பெரியவர். மறுமலர்ச்சி கண்ட இந்தியாவின் மகத்தான கவிச் சக்கரவர்த்தி டாகுர். கதை சொல்வதில், நாவல் புனைவதில், கல்வித் துறையில், விசாலமான மனிதாபிமான நல்லுரையில் முதல்வராக விளங்குகிறுர். தமது படைப்புக்களைவிட உயர்ந்தவர் டாகுர் என்ற அற்புத சிருஷ்டி. 'அவர் வாயிற் கதவைத் தட்டினுர், தாள்கள் தகர்ந்தன. கதவுகள் தாமாகவே படாரெனத் திறந்து கொண்டன.'

அரவிந்த கோஷும் அவரது அண்ணன் மனமோகனும் இங்கிலாந்தில் கல்வி பயின்றவர்கள். அங்கிருந்த போதே கவிதை இயற்றி புகழ்பெற முற்பட்டவர்கள். மனமோகனது கவிதைகள் ஆஸ்கார் ஒயில்டை பரவசப் படுத்தின. 'பால்மால் கெஜெட்'டில் அவர் எழுதினுர்: "நமது இலக்கியத்தில் கோஷ் ஒருநாள் புகழ் பெற்றே தீருவார்". "காதல் கீதங்களும், இரங்கற்பாக்களும்" (1898) (Love songs and Elegies) என்ற நூலும், "காதல் பாடல்களும் மரணமும்" (1916) (Songs of Love and Death) என்ற தலைப்பில் அவர் காலமான பிறகு வெளியான நூலும் சாசுவதமாக இருக்கக்கூடிய மனமோகனரது படைப்புக்கள். "அமர மாலை" (Immortal Eve), "இன்னிசை மர்மங்கள்" (Orphic Mysteries) போன்ற கவிதைத் தொடர்களில் உண்மையான சோகச் சுவையையும் தூய்மையான கவிதையின் சிகரத்

தையும் காணலாம். துயரம் இருந்தது, ஆனால் அது அவரது மனதை அடியோடு கசப்பாக்கி விடவில்லை. வெளித் தோற்றத்திற்கு அது ஊடுருவிச் செல்ல முடியாத துக்கமாகத் தென்படலாம். ஆனால் கடைசிவரை, ஆனந்தத்தை நோக்கி விம்மி எழுந்த மகத்தான கவிதா நயம் அதில் நீடித்து இருக்கவே செய்தது.

மனமோகனது சகோதரர் அரவிந்தர் லண்டனில் செயின்ட் பால்ஸில் படித்து கேம்பிரிட்ஜில் கல்வியைப் பூர்த்தி செய்தவர். சிவில் சர்வீஸ் பரீட்சையில் தேறினார். ஆனால் அதன் தளைகளில் சிக்காமல் தப்பியது அவரது அதிருஷ்டமே. சில காலம் பரோடா காலேஜில் ஆசிரியராகப் பணிபுரிந்த பின்னர் அரசியல் வாழ்வை நோக்கி தாம் விரைந்து கொண்டிருந்ததைக் கண்டார். யோகத்தின் நியதிகள் அவரை ஈர்த்தன. 1907 முதல் 1909 வரை அரசியலில் முக்கிய பங்கெடுத்துக் கொண்ட பிறகு, சக்தியையும், ஞானத்தையும் நாடி, புதுச்சேரிக்கு அவர் சென்றுவிட்டார். 1950 டிசம்பரில் மரணம் வந்துற்ற காலம் வரை அங்கேயே அவர் இருந்து வந்தார். கிரீக், லத்தீன், ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன், இத்தாலியன், ஸம்ஸ்கிருதம், வங்காளி போன்ற பல மொழிகளில் அவருக்குச் சிறந்த புலமை உண்டு. அதே மாதிரி அவரது அறிவும் கடல்போல் பரந்தது. அவரது நியமநிஷ்டைகளும் அதேமாதிரிதான். காலக்கிரமத்தில் அவர் அழிவற்ற பரம்பொருளை நோக்கிச் செல்லும் யாத்திரிகராகி விட்டார். ஒரு மகா புருஷராக, மகா யோகியாக அவர் மாறிவிட்டார். புதுச்சேரியில் அவரைச்சுற்றி சாதக்குகள் (சீடர்கள்) கொண்ட ஒரு சமூகம் வளர்ந்தது. அவர் காலமான பிறகு உலக ஸர்வ கலாசாலைக் கேந்திரம் ஒன்று அவர் தோற்றுவித்த ஆசிரமத்தில் நிர்மாணிக்கப் பெற்றுள்ளது.

கவிஞராகவோ, வாழ்க்கையையும் இலக்கியத்தையும் ஆராய்பவராகவோ எவ்வகையில் பார்த்தாலும் நமது

காலத்து மிகச் சிறந்த புலவர்களில் அரவிந்தர் சிறப்புடன் விளங்குபவர். அவரது கதைகளையும், நாடகங்களையும் இரண்டு கனத்த புத்தகங்களாக (Collected Poems and Plays) என்ற பெயரில் 1942-ல் வெளியிட்டுள்ளனர். 1890 முதல் 1900-ம் ஆண்டு வரையிலும் எழுதியவையும், சமீபகாலத்தில் கணிசமாக இயற்றிய கவிதைகளும் இத்தொகுப்பில் சேர்க்கப்பட்டுள்ளன. மொழிபெயர்ப்பாளர், வரலாற்றுக் கவிஞர், சொல்லாட்சிப் புலவர், காதல் சந்தப் புலவர், இசைவாணர், நாடகக் கவிஞர் போன்ற பலவகைகளிலும், பல துறைகளிலும் புதுப் பரீட்சை நடத்தினர். எல்லாவற்றுக்கும் மேலாக தமக்கே உரிய வகையில் வருங்காலத்தைப் புலப்படுத்தும் திறமையாளராகவும் ஸ்ரீ அரவிந்தர் திகழ்கின்றார். அவருடைய கவிதைச் சிறப்பு ஈடு இணையற்றது. "ஊர்வசி" (Urvasi), "காதலும் மரணமும்" (Love and Death) ஆகியவை இசை இன்பம் தரும் கதைப் பாடல்கள். "பாஜி பிரபு" (Baji Prabhu) செயலாற்றுமாறு அழைக்கும் தலைசிறந்த கவிதை. "விடுதலை வீரன் பெர்சியஸ்" (Persias the Deliverer) என்பது எதுகை மோனை இல்லாத பாடல் வகையில் அமைக்கப்பட்டுள்ள காதல் நாடகம். இதன் நிலைக்களங்கள் எடுப்பானவை, வருவதை முன்னரே உரைக்கும் திறம் படைத்தவை. "ஆண்டவனின் ரோஜா" (The Rose of God) "ஆறுதல் அளிக்கும் சிந்தனை" (Thought, the Paraclete) ஆகியவை மொழியைச் சிறப்பிக்கும் மிகச் சிறந்த தெய்வானுபவக் கவிதைகள். தமது நோக்கத்திற்கு என்றே சம்பிரதாயமான சில சந்தங்களை வெற்றிகரமாக அரவிந்தர் அமைத்துக் கையாண்டிருக்கிறார். அறுசீர் விருத்தம் இசை நாடகங்களை இணக்கமாக அமைப்பதற்கு உகந்ததல்ல என்று கருதுவோருண்டு. ஆனால் அஹானா, இலியன் போன்ற நீண்ட பாடல்களில் இதை அவர் சாதித்துக் காண்பித்து இருக்கிறார்.

கவிஞராகத் திகழ்வதுடன் ஸ்ரீ அரவிந்த கோஷ் உரை நடையிலும் வல்லுநர். சர் தாமஸ் பிரவுன், டீகுவின்ஸி போன்ருரது மரபைப் பின்பற்றி அவர் எழுதுவார். ஆனால் விரும்பியபோது, பிரகாசமான எளிமையுடன், சுபாவமாகத் தோன்றி ஆட்கொள்ளும் சக்தியுடன் உரைநடையை எழுத அவரால் இயலும். "தெய்வீக வாழ்க்கை" (The Life Divine), "கீதைக் கட்டுரைகள்" (Essays on the Gita), "யோகத்தின் இசைவு" (The Synthesis of Yoga), "சமூக வட்டம்" (The Social Circle), "மனித வர்க்கத்தின் ஒற்றுமை லட்சியம்" (The Ideal of Human Unity), "எதிர் காலக் கவிதை" (The Future Poetry) ஆகியவை முதலில் 1914-ம் ஆண்டுக்கும் 1921-ம் ஆண்டுக்குமிடையே 'ஆரியா' என்ற சஞ்சிகையில் வெளியாகி, பின்னர் புத்தகமாக தொகுக்கப்பெற்றன. ஆராய்ச்சியாளரின் உழைப்பும், ஆர்வம் மிக்க கவிஞனின் கற்பனையும், ஞானிகளின் ஆக்க திருஷ்டியும் அவற்றில் ஒருமிக்க இணைந்திருப்பதைக் காணலாம். அவரது உரைநடை நூல்களில் "தாய்" (Mother), "ஹெராக்கிளிட்டஸ்" (Heracletus), "இந்திய மறுமலர்ச்சி" (The Renaissance of India) ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

அரவிந்தரைப் போலவே சரோஜினி நாயுடுவும் கவிஞராகவே வாழ்க்கையைத் தொடங்கியவர். பின்னர் அரசியல் துறை அவரை ஆட்கொண்டது. காந்தீய சகாப்தத்தில் அவர் முக்கியமான பணியாற்றினுர். "பொன்வாசல், 1905" (The Golden Threshold) என்பது அவரது முதல் பாடல் தொகுப்பு. புகழ் மிக்க கவிஞர் என்ற பெயரை அவருக்கு அது அளித்தது. 1906-ம் ஆண்டில் மேடைப் பிரசங்கி என்ற வகையில் அவர் புகழ் பெற்றபோது, "உங்கள் உரை மிகச் சிறந்த தரம் வாய்ந்தது; புத்திக்கு ஒரு விருந்து. அது மிகச் சிறந்த கலைப்படைப்பு. அதைக் கேட்கும்போது ஓர்

உயர்நிலைக்கு விம்மினோம் என்ற உணர்ச்சி எங்கள் எல்லோருக்கும் ஏற்பட்டது'', என்று கோகலே கூறினார்.

இரண்டு கவிதைத் தொகுப்புக்கள் நீண்ட இடைக் காலம் விட்டுவிட்டு வந்தன. "காலப் பறவை, 1912" (The Bird of Time), "அறுந்த சிறகு, 1917" (The Broken Wing) என்பவை இத் தொகுப்புக்கள். எல்லாக் கவிதா வடிவங்களையும் சுலபமாகக் கையாள முடியும் என்ற பெருமை அவருக்கு உண்டு. "தாமரை மீது அமர்ந்த புத்தர்" (The Buddha Seated on a Lotus), "பிருந்தாவனத்து குழலூதி" (The Flute Player of Brindavan) போன்ற இசைப் பாடல்கள் அப்பழுக் கற்றவை. தமது காலப் பறவையைப் போலவே சரோஜினி விரிவாகச் சிறகடித்துச் சென்றவர். ஆயினும் நமக்கு மிகப் பழக்கமான பண்டங்களிலும் எழிலைக் கண்டுணர்த்தும் சிறப்பு அவருக்குத் தனியாக வாய்த் தது. பிந்தைய நூல்களில் துக்கத்தின் சுமை மேலும் மேலும் அழுத்தும் ஓர் அனுபவம் பிரத்தியட்ச பூர்வ மாக காணப் பெறுகிறது. அவர் தீட்டும் சித்திர வடிவங் கள் ஒரு கட்டுதிட்டத்தில் நிற்கின்றன. இசையானது ஆழ்ந்து காண்கின்றது. மதிநுட்பத்துடன் கூடிய முதிர்ந்த பிரார்த்தனையுள்ளத்தைக் காண்கிறோம். எல்லா வற்றிலும் பரிமளிக்கும் கவிதைச் சிறப்பு ஒன்றே. ஆயினும் 'பொன் வாசலில்' காணப்பெறுவதைவிட முதிர்ந்த அனுபவம் பிந்தியவற்றில் பிரகாசிக்கிறது. "ஆலயம் அன்பின் யாத்திரை" (The Temple, a Pilgrimage of Love) என்பது மூன்று இசை வடிவச் சித்திரங்களின் தொடர் நூல். ஒவ்வொன்றிலும் எட்டுப் பாடல்கள் உண்டு. போர்த்துகீசியப் பதினன்கு சீர்ப் பாடல்கள் என்று ஶ்ரீமதி பிரவுனிங் இயற்றிய கவிதை களுடன் ஜான் கால்ஸ்வொர்த்தி இதை ஒப்பிட்டு எழுதியிருக்கிறார். அரசியலின் குளறுபடிகளைச் சமாளிப் பதற்கு வேண்டிய சாதுரியம் பெண்ணாகிய தமக்கு இல்லை

யென்று ஒரு சமயம் அவர் கூறியதுண்டு. எனினும் கடைசிவரை பாரதமாதாவுக்கு அவர் தொண்டாற்றியது அரசியல் மூலந்தான். காந்திய சகாப்தத்தினர் அரசியலை அன்பின் வடிவமாக மதித்தனர். ராஜ நிந்தனையே கவிதா சொரூபமாக அவருக்குக் காட்சி யளித்தது.

## 1920–1947

முதல் உலக யுத்தத்தின் இறுதியில் ஒரு புதிய சகாப்தம் இந்தியாவில் தொடங்கியது. ஈடு இணையற்ற சாத்தியக் கூறுகள் நிறைந்ததாக அது காணப்பெற்றது. களம் மாறியது, நாடகப் பாத்திரங்களுக்கும் மாறின. பிரோஜி-ஷா மேதா காலமாகி விட்டார். கோகலேயும் திலகரும் இல்லை. விபின சந்திர பாலின் அனல் கக்கும் இடிமுழக்கம் ஓய்ந்துவிட்டது. சுரேந்திரநாதரின் நீண்ட உரைகள் தமது பழைய கவர்ச்சியை இழந்துவிட்டன. ஸ்ரீ அரவிந்தரும் புதுச்சேரியில் தவயோகி ஆகிவிட்டார். புதிய காட்சி, புதிய நாடகக்காரர்கள், புதிய மோஸ்தர் கள். இந்தோ-ஆங்கிலப் பத்திரிகைத் தொழில் புதிய விருவிருப்பு உள்ளதாக, சுட்டிச் சொல்லும் திறம் படைத்ததாக மாறியது. மேடைப் பேச்சாளரின் உரை கள் குறுகின. ஆனால் பேச்சில் அழுத்தம் ஏறியது. உரைநடை எழுத்தாளர் மெக்காலே பாணியின் கொடு மையை உடைத்தெறிந்து இயற்கையாக எழுதி மன மாறு தலைத் தோற்றுவிக்க முற்பட்டனர். காந்தீயத் தலைமை யின் தாக்குதல்கள் காரணமாக ஆங்கிலக் கல்வியின் மவுசு சிறிது குறைந்தபோதிலும் காலேஜ் மாணவர்களின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டே சென்றது. 1917-ல் 61 ஆயிரமாக இருந்த காலேஜ் மாணவர்கள் பத்தாண்டு களில் 84 ஆயிரமாகக் கூடுதலாயினர். “யங் இந்தியா” பின்னர் “ஹரிஜன்” ஆகிய பத்திரிகைகளைத் தான் காந்திஜி தமது கருத்துக்களையும், வேலைத் திட்டங்களை

யும், விரிவான உரைகளையும், பெரு முழக்கங்களையும் பிர சாரம் செய்வதற்கு ஏற்ற சாதனங்களாக நம்பியிருந்தார். மற்ற தலைவர்கள், குறிப்பாக சி. ஆர். தாஸ், மோதிலால் நேரு, லஜபத் ராய், டி. பிரகாசம், பட்டாபி சீதாராமய்யா, ஆகியோர், தமது தேசியக் கருத்துக்களை வெளியிடு வதற்கு தினசரி அல்லது தேசிய வாரப் பத்திரிகைகளை சொந்தமாக நடத்தினர். அவரவர்கள் வற்புறுத்தக்கூடிய விஷயங்கள் வெவ்வேருக இருந்தன. காலேஜ் பேராசிரி யர்கள் தமது போதனையை ஆங்கிலத்திலேயே நடத்தி னர். உரைநடை விஷயமாயினும், கவிதைகளின் தொகுப் பாயினும் விளக்கத்திற்கு அவர்கள் ஆங்கிலத்தையே நம்பியிருந்தனர். பிரதேச மொழிகளில் இலக்கியம் ஏற்றம் கண்டு வந்தது. ஆனல் ஆங்கிலத்தில் இந்தியர் எழுதுவது சுறுசுறுப்பாகவே காணப்பட்டது. எழுதப் பெறும் விஷயங்களிலும் இதே விரிந்த புலமை தென் பட்டது. பிரிட்டிஷ் அல்லது ஐரோப்பிய இலக்கியம் சுவையிலும், பிற வகைகளிலும் தோற்றுவித்த புரட்சிகள் 1920 முதல் 1940 வரை இந்தியாவெங்கும் எதிரொலித் தன. சம்பிரதாயமும், புரட்சியும் மல்லுக்கு நின்றன. மரபும் புதுப் பரீட்சையும் எதிர்நோக்கிட்டன. பிற இடங் களிற் போலவே இங்கும் திட்டவட்டமான முடிவு காணுத வகையில் இப்போராட்டம் நிகழ்ந்தது.

1920 முதல் பத்தாண்டுகளில் திடீரெனப் புகழ் எய்திய இந்தோ-ஆங்கில எழுத்தாளர்களில், மனதிற்குத் தெம்பூட்டும் சிந்தனைச் சிறப்புக்களுடன், விரிவான சொல்லாட்சித் திறனுடன் விளங்கிய முதன்மையான எழுத்தாளர் கே. எஸ். வேங்கடரமணி. "காகிதக் கப்பல் கள் (1921)" (Paper Boats) அவரது முதல் நூல். தென் னிந்திய வாழ்க்கை பற்றிய சில சொல்லோவியங்களை அவர் வழங்கியிருக்கிருர். ஒரு கலைஞனின் துல்லிய மான சாதுரியத்தையும், கவிதையின் நறுமணம் கமழ்ந்த சிறப்பையும், நகைச்சுவையையும் அதில் கலந்து காண

லாம். "மணல் மேட்டின் மீது '(1923)" (On the Sand-Dunes) வசன காவிய நூல். நியாய, அநியாய உணர்ச்சியுள்ள மக்கள் மீது நாகரிகம் திணிக்கும் மன நோய்க்காக வருந்தும் தன்மையில், சில சமயம் கடுமையாகக் கூட, தாக்கி எழுதும் இலக்கிய வகைகள் இவை. "முருகன் ஓர் உழவன் (1927)" (Murugan, the Tiller) சென்னையில் படித்த வகுப்பினரை ஒரு கலக்குக் கலக்கியது. பிரசுரமானவுடனேயே அது புகழ் அடைந்தது. கிராம வாழ்க்கையைப் பற்றிய விவரமான சித்திரங்களை, செயலும் கருத்தும் சேர்ந்து புதுவழி வகுக்க முயல்வதை, நையாண்டி முறையில் எடுத்துக்காட்டி, அதுவே நகர வாழ்க்கையின் தோற்றம் என்பதைப் புலப்படுத்தி, குண சித்திர பாகங்களை விரிவாக அமைத்துக் காட்டி, அதைப் பெருமைப் படுத்தியிருக்கிறார் ஆசிரியர். கவிதையும், ஹாஸ்யமும், லட்சிய வாதமும், பிரத்தியட்ச வாதமும் கலந்து அதில் காணப்படுகின்றன. •மாறி வரும் இடைக் கால இந்தியாவைப் பற்றிய முதல்தரமான நாவல் அது. முருகனைத் தொடர்ந்து "சாம்புவுடன் ஒரு நாள்" (A Day with Sambhu) என்ற நூலை குழந்தைகளுக்காக அவர் இயற்றினார். "அடுத்தபடி" (The Next Range) என்பது காலப் போக்கில் ஒட்டிய சிறு நூல். "தேச பக்தன் கந்தன்" (1932) (Kandan the Patriot) வேங்கடரமணியின் இரண்டாவது நாவல். 1930-31-ம் வருஷத்து காந்திய சகாப்தத்தின் தேசிய எழுச்சி அதை ஊக்குவித்தது. அரசியல் வாழ்வை லட்சிய நிலைக்கு உயர்த்தினார் இந்தப் படைப்பில். கிராமியப் பொருளாதாரத்தை லட்சிய நிலையில் வைத்துக் காட்டியது முருகன். இவை வெவ்வேறாக இருந்தபோதிலும் ஒன்றையொன்று நிறை செய்வதாக அமைக்கப்பட்டன. சங்கர ராம் என்ற மற்றொரு சென்னை எழுத்தாளர் இரண்டு சிறுகதைத் தொகுப்புக்களைப் பிரசுரித்துள்ளார். "காவேரியின் குழந்தைகள்" (Children of the Kaveri), "எல்லாம்

அவன் சிருஷ்டியே'' (Creatures All) என்பவை இத் தொகுப்புக்கள். "மண்ணுசை'' (1938) (The Love of Dust) என்பது நெஞ்சை உருக்கும் ஒரு நாவல். குடியானவன் தனது நிலத்தின் மீது எப்படி விடாப்பற்று உள்ளவனுக இருக்கிருன் என்பதை அது சித்திரிக்கிறது. கற்பனைக் கதைகளைப் புனைவதில் சங்கர ராம் மிகச் சிறந்து விளங்குகிருர். மனித வாழ்க்கையில் முளைக்கும் மகத்தான ஆத்மீக நெருக்கடிகளைச் சுவைபட எழுதுவதில் அவர் சமர்த்தர். சிரிப்பையும், கண்ணீர்ப் பெருக்கையும் பிரித்துக் காட்டும் வேற்றுமை அதில் மிக மிக துல்லியமானது.

மேலே குறிப்பிட்ட இருவரையும்விட இன்னும் அதிகமாக எழுதியிருப்பவர் முல்க்ராஜ் ஆனந்து. இந்திய சமூகத்தின் அடித்தளத்தில் இருந்துவரும் பல தாழ்த்தப் பட்ட மக்களின் பிரச்சினைகளில் அவர் ஆழ்ந்து காணப் படுகிருர். "இரண்டு இலையும் ஒரு மொட்டும்'' (Two Leaves And a Bud) "கூலி'' (The Cooli) "தீண்டப் படாதவன்'' (The Untouchable), "கிராமம் (1939)'' (The Village) இந்த விஷயங்களைப் பற்றியது. மேல் நிலையிலிருந்து கொண்டு ஆதரவாளன் என்ற வகையிலே அவர் எழுதியது இல்லை. மனிதவர்க்கத்தினர் என்ற வகையிலே மதிப்புக் கொடுத்து, அனுதாபத்துடன் அவர்களைப் பற்றி எழுதுகிருர். தோட்டி, விவசாயி, மலைத்தோட்டத் தொழிலாளி, நகரத்தில் அலுப்பு சலிப்பின்றி உழைக்கின்றவன், சிப்பாய் ஆகிய எல்லோருமே அவரது நாவல்களில் தோன்றுகின்றனர். வேதனையும், பசியும் மிகுதியாக உண்டு. எனினும் மனிதத் தன்மை, மூட நம்பிக்கை, தமக்குள்ளே பிளவு ஆகியவை, நோக்கங்களில் ஒற்றுமையிடையே பீறிட்டுக் கிளம்புகின்றன. எல்லா நூல்களிலும் படிப்போர் மனதுக்கு அதிகமாக திருப்தி அளிக்கும் வகையில் எழுதுபவர் ஆர். கே. நாராயண். அவர் பல நாவல்களையும், சிறுகதைத் தொகுப்புகளையும் வெளியிட்

டுள்ளார். "பி. ஏ.," (Bachelor of Arts), "இருட்டறை (1938)" (Dark Room) "ஆங்கில உபாத்தியாயர் (1945)" (The English Teacher) ஆகியவை அவரது படைப்புக்களில் சிறந்தவை. தென்னிந்தியர்களிடையே நாகரிக முதிர்ச்சி யுள்ள வாழ்க்கையில் மிதமிஞ்சி கலந்து காணப்படும் கபடங்களைப் பற்றி மிகத் தெம்புடன் கூட அவர் எழுதுகிறார். "ஆங்கில வேடதாரியான இந்தியன்" நாராயணனது பேனு முனையில் அதிகமாக நடனமாடுபவன். பேதித்த உள்ளம், தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்வது, அபத்தம் ஆகிய அவனது தன்மைகளை சிறுகதைகளில் வைத்துக் காட்டுகிறார். "மகாத்மாவுக்காக காத்து இருத்தல்" (Waiting for the Mahatma) என்பது நாராயணனது சமீப நாவல். ராஜாராவின் "காந்தபுரம்" என்ற நூலைப் போல் இதுவும் காந்தியப் புரட்சியின் அறைகூவலுக்கு இந்திய மக்கள் செவிசாய்த்த வரலாற்றை ஆராயும் ஒரு முயற்சி. இவை ராஜீயப் பிரசார நூல்கள் அல்ல, உரைநடையில் அமைந்துள்ள கலைப் படைப்புக்கள்.

இக்காலத்து நாவலாசிரியர்களில் குறிப்பாக எடுத்துச் சொல்லக்கூடியவர்கள் ஹுமாயூன் கபீர் "மக்களும் நதிகளும், 1945" (Men and Rivers) டி. எப். கராக்காவின் 'நகரம் இருந்த இடம்'. 1941, (There Lay The City) குமர குரு இயற்றிய "வாழ்க்கையின் நிழல்கள், 1938, (Life's Shadows) அஹ்மத் அலியின் "டெல்லியில் அந்திமாலை," 1940 (Twilight in Delhi) ஏ. எஸ். பி. அய்யர் எழுதிய "பாலாதித்யா, 1930" (Baladitya) கே. நாகராஜனின் "அடாவர் இல்லம்" (Athawar House)

மீண்டும் கவிஞர்களைப் பார்ப்போம். இரண்டு உலக யுத்தங்களுக்குமிடையே இருந்த முப்பது ஆண்டுகளில் இந்தோ-ஆங்கிலக் கவிஞர்கள் போற்றக்கூடிய வகையில் சுறுசுறுப்புக் காட்டினர். உணர்ச்சி பாவத்துடன் ஆத்

மிக வர்ண விசித்திரங்களுடன் கூடிய பளபளப்பான கவிதைகளை அமைத்து வழங்குவதில் ஹரீந்திரநாத் சட்டோபாத்தியாயா புகழ் பெற்று விளங்கினர். பேராசிரியர் பி. சேஷாத்திரி, ஜி. கே. செட்டுர், வி. என். பூஷண், ஹுமாயூன் கபீர், உமா மகேசுவர், என். வி. தடானி ஆகியோர் மொத்தத்தில் மரபையொட்டிய பாடல்களைப் புனைந்தனர் என்ருலும் இந்தோ-ஆங்கிலக் கவிதைக்குப் பணியுண்டு, பரந்த திறனுண்டு என்பதை ருசுப்பித்தனர். கோவாவைச் சேர்ந்த கவிஞர்கள் ஜோசப் பர்ட்டாடோ ஆர்மாண்டோ மெனீஜிஸ், மானுவஸ் கி. ராட்ரிகஸ் ஆகியோரின் பாடல்கள், நாடு கடத்தப்பட்டோரின் கவிதா வகையில் புதுமைப் பொலிவுடன் விளங்குகின்றன. எஸ். ஆர். டாங்கர்கெரீ சம்பிரதாயப் பாதையினின்று வழுவாமல் "தந்த கோபுரம்" (The Ivory Tower) என்ற நூலை வழங்கியுள்ளார். பிரெடுன் கப்ராஜி இயற்றியுள்ள "ஒரு சிறு ஜார்ஜியனின் மரண கீதம்" (A Minor Georgian's Swan Song) என்பதில் மென்மையும், வீரியமும் கலந்து காணப் பெறுகின்றன.

மரபுக்கு மாறுபட்டவர்கள் அல்லது புதுமைக் கவிஞர்கள் என்போர் எண்ணிக்கையில் மிகுதியானவர்கள். 1937-ல் "செய்யுள் பரீட்சை" (Essays in prose) என்ற தலைப்பில் ஷஹீத் சுஹரவர்தி வெளியிட்ட 40 பாடல்கள் கலகத்தை விளைவிக்கும் வகையில் அறைகூவுகின்றன. சீரழிந்து வரும் நமது நாகரிகத்தின் சோகம் படிந்த முனகல், காய்ச்சி வாட்டும் ஜுரம், நிச்சயமற்ற இருதய ஒலிகள் ஆகியவற்றை அவை புலப்படுத்துகின்றன. மஞ்சேரி எஸ். ஈசுவரன், பி. ஆர். கைக்கினி, இருவரும் 1930-க்குப் பின் லட்சியவாதிகளாகவும், மரபையொட்டிய கவிஞர்களாகவும் தமது கவிதா உபாசனையைத் தொடங்கினர். ஆனல் சொந்த விவகாரங்களும் வெளி மோதல்களுமாகச் சேர்ந்து அவர்களை வர வர அதிகமாக இடதுசாரித்திசையில் உந்தின. "Catguts"

"Brief Orisons" (1941) என்ற தலைப்புக்களில் ஈசுவரன் வெளியிட்டுள்ள தொகுப்புகள் நெஞ்சை வதை செய்யும் வகையில் இருக்கின்றன. நம்பி ஏமாந்த உணர்வின் விளைவாக அவரது கவிதையில் பயங்கரமான ஒரு கடுமை காணப்படுகிறது. ஆனால் அதேசமயத்தில் மனதை விட்டு அகலாது ஒன்றிக் கொண்டிருக்கும் ஓசை நயமும் இருக்கவே செய்கிறது. கைக்கினியின் முதல் இரண்டு நூல்கள் கீதாஞ்சலி பாணியில் இருந்தன. ஆனால் சர்வதேச நிலைமையில் ஏற்பட்டு வந்த மாறுதல்களுக்கு இசைவாக, போரையும் குருதியையும் அவர் பாடலானார். மற்ற தற்காலக் கவிஞர்களில் குறிப்பிட வேண்டியவர்கள் பி. ராஜன் "பருவ மழை, 1945" (Monsoon), கிருஷ்ன் ஷ்ங்குலு "இரவின் இருள், 1943" (The Night is Dark), நிஸ்ஸிம் எஜக்கீல் "மாற வேண்டிய காலம், மற்ற 60 பாடல்கள்" (A Time to change and Sixty Poems) சுபா டாகுர், சுதீந்திரநாத் தத்தா, சிரில் மோதக், நிலிமா தேவி, ஜே. விஜயதுங்கா, பி. லால், ஏ. கே. ராமானுஜன், ஆர். எல். பார்த்தலோமியோ. ஆதி கே. சேட் என்பவர் மிகவும் ருசிகரமான ஒரு பிரகிருதி. எதுகை மோனை இல்லாத காவிய வகையில், உண்மையான உணர்ச்சி பாவத்துடன் கம்பீரமாகப் பாடல்களை அவர் புனைந்துள்ளார்: "மேகங்களுக்கு மேலுள்ள ஒளி" (The Light Above The Clouds). குரு தயாள மல்லிக் ஒரு மகான். 62-வது வயதில் ஆண்டவனது தரிசனம் பெற்றவர். அவரது கவிதை "இருதயத்தின் வேட்டை நாய்" (Hound of the Heart) அப்பழுக்கற்ற ஆத்மானுபவத்தையும், ஆண்டவனின் கீர்த்தியை மெய்ம் மறந்து பிரம்மானந்தமாகப் பாடும் கீதங்களையும் கலந்து வழங்குகிறது.

இந்தோ-ஆங்கிலப் புலவர்கள் கவிதைத் துறையில் மட்டுமின்றி பிற வகை இலக்கியப் பிரிவுகளிலும் பணியாற்றியுள்ளனர். நாடகாசிரியர்கள் மிகச் சிலர். நாட

கத்தை அரங்கேற்றும் வசதி பலருக்கு இல்லை. வி. வி. ஸ்ரீனிவாசய்யங்கார் "மனமகிழ் நாடகங்கள்" (Dramatic Divertisements), ஏ. எஸ். பி. அய்யர் "சீதாவின் சுயம் வரம்", (Sita's choice), 'கருத்துக்களுக்கு அடிமை', (Slave of Ideas), பைஜி ரஹ்மானின் 'இந்தியாவின் செல்வி' (Daughter of Ind), பாரதி சாராபாய் "மக்களின் கிணறு, இரண்டு பெண்கள்" (The well of the People, Two women), மிருளினி சாராபாய் "பிடிபட்ட மண்" (Captive soil), ஜே. எஸ். லோபோ பிரபு "கூடத்திலும் குடும்பக் கூண்டிலும் மனிதக் குரங்குகள்" Apes in the Parlour and the family cage, புருஷோத்தம் திரிகம் தாஸ் "வாத்துக்கு குழம்பு" - (Sauce for the goose) டி. பி. கைலாசம் "கர்ணன் நிறைவும் சுமையும்" (Karṇa, fulfilment and the burden) ஹரீந்திரநாத் சட்டோ பத்தியாயா 'ஐந்து நாடகங்கள்' (Five plays), ஆகி யவை ஆங்கிலத்தில் நாடகங்களை இந்தியர்கள் இயற்று வது அசாத்தியமல்ல என்பதைக் காண்பிக்கின்றன. நகைச்சுவை ததும்பும் கட்டுரை, ஹாஸ்ய வருணனைகள் மனதை மேம்போக்கில் ஓடவிடும் ஜான்சன் வகைக் க்ட்டுரைகள். மான்டேனெஸ்குவைப் போல் சற்று உரக்க சிந்தித்து எழுதுவது ஆகியவையும் சமீபகாலத் தில் ஆங்கிலத்தில் காணப்படுகின்றன. எஸ். வி. வி. யின் "சோப்புக் குமிழிகள்" (Soap bubbles), "மேலும் சோப்புக் குமிழிகள்" (More Soap bubbles), "உமியும் அவலும்" (Chaff and Grain), ஆர். பங்காருசாமியின் "என் எஜமான் குக்குடுன் கூன்" (My Lord Kukudoon Koon), ஈசுவர தத்தரின் "இவையும் பிறவும்" (And all that), என். ஜி. ஜோக்கின் "வெங்காயமும் அபிப்பிராயமும்" ஆர். கே. நாராயண், சலபதி ராவ், சாந்தா ரங்காச்சாரி, எம். கிருஷ்ணன் ஆகியோரது லகுவான கட்டுரைகளும். 'சாகா' (காஸா சுப்பாராவ் எழுதும் 'சைட்லைட்ஸ்' என்ற பகுதியும்), போதன்

ஜோசப் வரையும் " ஒரு கோப்பை தேநீருடன் " (Over a Cup of Tea), "மெல்லிய குரலில்" (Sotto voce), என்று ' விக்னேசுவரா ' (என். ரகுநாத அய்யர்) எழுதுபவையும் தமது வகைகளில் மிகச் சிறந்தவை. திறனுடன் இலக்கிய ஆராய்ச்சி செய்யும் துறையில் உழைத்துள்ள பலரில் என். கே. சித்தாந்தாவின் " இந்திய வீர சகாப்தம் " (The Heroic Age of India), அமரநாத ஜா, அமியா சக்கரவர்த்தி, சி. நாராயண மேனன் (ஷேக்ஸ்பியர் விமர்சனம்) ஹுமாயூன் கபீரின் " கவிதை, தனிப்பாடல், சமுதாயம்" (Poetry, Monads and Society), வி. கே. கோகக் " மொழியை கவிஞன் அணுகும் விதம் " (The Poetic Approach to Language), எம். எம். பட்டாசார்ஜி, எஸ். ஸி. சென்குப்தா (ஷேக்ஸ்பியரின் இன்பியல் நாடகங்கள்), சி. டி. நரசிம்மையா, கே. சுவாமிநாதன் ஆகியோர் திறனாய்வாளரில் குறிப்பிட வேண்டியவர்கள். ஸ்ரீ அரவிந்தரின் இலக்கியத் திறனாய்வு " எதிர்காலக் கவிதை" (The future poetry), ஆனந்த குமாரசுவாமியின் கலை மதிப்பீடு (History of Indian and Indonesian Art, The dance of Siva, An Introduction to Indian Art) (இந்தியா, இந்தோனேஷியா கலையின் வரலாறு, சிவ நடனம், இந்தியக் கலைக்கு ஒரு நூன்முகம்) ஆகியவை ஒரு தனி வகையைச் சேர்ந்தவை. வாழ்க்கை வரலாறுகளில் சர் ஹோமி மோடி (பிரோஜி ஷா மேதா, 1921), சர் ருஸ்தும் மசானி (தாதா பாய் நௌரோஜி, 1939), வி. எஸ். ஸ்ரீனிவாச சாஸ்திரி (என் குரு கோகலே, 1946), பி. சி. ராய் (சி. ஆர். தாஸின் வாழ்க்கையும் காலமும்), யதுநாத சர்க்கார் (சிவாஜி), டி. வி. தமாங்கர் (லோகமான்ய திலக் ; இந்திய கலகத்தின் பிதா, நவீன இந்தியாவின் கர்த்தா), ராம் கோபால் (லோகமான்ய திலக்), பிராங்க் மோரேஸ் (ஜவாஹர்லால் நேரு), ஆர். ஆர். திவாகர் (மகா யோகி) ஆகியவை வெளியாகியுள்ளன. சுயசரிதைகளை எழுதியவர்களில்

மகாத்மா காந்தியும், ஜவாஹர்லால் நேருவும் முன்னணி யில் இருப்பவர்கள். நிரத். சி. செளதரியின் "ஒரு அனுமதேய இந்தியனின் சுயசரிதை" பரவலாகப் படிக்கப் பெற்று, பேசப்பட்டும் உள்ளது. அதில் சில குறைபாடுகளும் உண்டு. கனமாக இருப்பதுடன், கோபமும், அநேகமாக மகிழ்ச்சிக்கு வேட்டு வைக்கும் தன்மையும் கொண்ட நூல் அது. எனினும் அதில் புலமை மிகுதியைக் காணலாம். துணிவுடன்கூட உண்மையைச் செப்பியிருப்பது அதன் விசேஷச் சிறப்பு. மற்றவைகளில் கிருஷ்ணு ஹத்தீசிங் (வருத்தமின்றி - With No Regrets), பரதன் குமரப்பா (அமெரிக்காவில் என் மாணவ வாழ்க்கை), ராஜேந்திர பிரசாத், சிமன்லால் செதல்வாட் (நினைவுகளும், சிந்தனைகளும் - Recollections and Reflections), கே. ஈசுவர தத் (இங்கித் தெருவு - The Street of Ink), கே. எம். முன்ஷி (மகாத் மாவை நான் பின்பற்றுகிறேன், ஒரு சகாப்தத்தின் முடிவு - I follow the Mahatma and The End of an Era), பரமஹம்ஸ யோகானந்தா, கிருஷ்ணலால் ஸ்ரீதரணி (மை இந்தியா, மை அமெரிக்கா), பி. இ. தஸ்துர் (அமெரிக்க நாட்கள் - American Days), உண்ணி நாயர் (மை மலபார்), காலஞ்சென்ற எம். என். ராய் ஆகி யோர் வெவ்வேறு வகைகளில் இந்தச் சிரமம் நிறைந்த ஆனால், மேலுக்குச் சுலபம் போலத் தோன்றும் இலக் கியப் படைப்பில் இந்தியர்களுக்கு நல்ல திறனுண்டு என் பதைக் காண்பித்துள்ளனர். சரித்திரம், தத்துவம் ஆகிய துறைகளிலும், ஞானிகளும், சிந்தனையாளர்களும் கம்பீர மாக விளங்குகின்றனர். அவர்களில் குறிப்பிடத்தக்கவர் கள் எம். ஜி. ரானடே, ஆர். சி. தத், திலக், யதுநாத சர்க்கார், விரஜேந்திரநாத் சீல், பி. டி. ஸ்ரீனிவாசய்யங் கார், பாரிஸ்டர் சாவர்க்கர், ஆர். சி. மஜும்தார், எம். என். ராய், ஆர். டி. ரானடே, எஸ். ராதாகிருஷ்ணன், பி. என். ஸ்ரீனிவாசாச்சாரி ஆகியோர் குறிப்பிடத்தக்க

வர்கள். இளம் எழுத்தாளரில் அத்தகையோர் பி. டி. ராஜூ, எஸ். கோபால், எம். என். ஸ்ரீநிவாஸ் ஆகியவர்கள். பத்திரிகையாளர்கள், நீதி நிபுணர்கள், வாசாலகர்கள், அரசியல் துறை எழுத்தாளர், பொருளாதார எழுத்தாளர் ஆகியோர் எண்ணற்றவர்கள். அவர்களில் பத்திரிகையாளரிடையே பிராங்க் மோரேஸ், சலபதி ராவ் ஆகியோரும், நீதி நிபுணர்களிடையே ஆஷூதோஷ் முகர்ஜி, சுப்ரமணிய அய்யர் ஆகியோரும், வாசாலகர்களிடையே ஸ்ரீனிவாச சாஸ்திரி, சி. ஆர். ரெட்டி ஆகியோரும், அரசியல்துறைக் கட்டுரையாளரில் எம். ரத்னசுவாமி, கே. எம். பணிக்கர் ஆகியோரும், வாத வித்தையில் வல்லுநரிடையே சி. இராஜகோபாலாச்சாரியும், கல்வித் துறையில் தேறியவர்களில் டாக்டர் லட்சுமண சுவாமி முதலியாரும் தத்தம் துறையில் மிகச் சிறந்த இங்கிலீஷ், அமெரிக்க உரைநடையாளருடன் ஒப்பிடக் கூடியவர்கள்.

மேலே குறிப்பிட்டுள்ள உரைநடை எழுத்தாளர்களிடையே மூன்று அல்லது நான்கு பேர் தமது தனித்திறனாலும், தமது ஆகர்ஷண சக்தியாலும் சிறந்து விளங்குகின்றனர். அவர்களுடைய சிந்தனைத் தரமும், அவர்கள் கையாளும் சைலியும் அபூர்வமாக இருக்கின்றன. காந்திஜியின் சுயசரிதையாகிய "சத்தியசோதனை"யை ஆங்கிலத்தில் வரைந்தவர் மகாதேவ தேசாய். தமது குருவின் சைலியை அப்படியே கிரகித்துக்கொண்டு அவர் எழுதியது உண்மையில் அசாதாரணமானது. ஒரு கம்பீரமான, சாந்தியுடன் கூடிய அழகு அந்நூலில் ஒவ்வொரு பக்கத்திலும் அமைந்து இருப்பதைக் காணலாம். காந்திஜி எழுதிய எல்லாவற்றிலுமே இந்த அம்சம் முக்கியமானது. காந்திஜியின் உரைநடையில் கோணல் மாணலோ அல்லது விபரீதத் தன்மைகளோ கிடையாது. எல்லாமே தெளிவாகக் கூறப் பெறுகின்றன. மிக எளிமையான சொல்லாட்சி. பைபிளைப் போல் கருத்துக்கு

வேண்டிய எளிமையான சொல்வளம் உண்டு. எதையும் தட்டிக் கழிக்கும் அல்லது குழப்பும் போக்கு இல்லை. மூடிமறைக்கும் மனப்பான்மையும் இல்லை. தெளிவான, எளிமையான சைலிக்கு அது எடுத்துக்காட்டு. நல்ல குடிநீரைப் போல் அது தெளிவாகவும் தூய்மையாகவும், ஆரோக்கியமாகவும் காணப்பெறுகிறது.

பண்டித ஜவாஹர்லால் நேருவின் "சுயசரிதை", "இந்தியாவின் கண்டுபிடிப்பு" (Discovery of India) ஆகியவை ஆங்கில உரைநடையைச் சிறப்பாகக் கையாளும் மற்றொரு திறமைசாலியின் படைப்புக்கள். ஆங்கில இலக்கியத்தில் பரந்த, ஆழ்ந்த ஞானம் அவருக்கு உண்டு. ஐரோப்பியச் சிந்தனைகளும், இலக்கிய இயக்கங்களும் அவருக்கு நன்கு பரிச்சயமானவை. இந்திய, ஆசிய சம்பிரதாயத்தின் நீரோட்டத்துடன்கூட, நேருவின் ஆங்கில எழுத்தில், ஒரு துல்லியமான உணர்ச்சி பாவத்தையும், எல்லாவற்றையும் சொல்லியே தீர்க்காமல், சிலவற்றைச் சங்கேதமாகச் சுட்டிக் காட்டும் தன்மையும் இயற்கையாகவே அமைந்திருப்பதைக் காணலாம். அவருடைய குண விசேஷங்களை அவர் கையாளும் சைலி பிரதிபலிக்கிறது. பேசினாலும் சரி, எழுதினாலும் சரி, முழுமையாக அதில் அவரது பண்பாடு, சக்தி, மனிதாபிமானம் ஆகியவை கண்ணாடியில் பிம்பம்போல் தெளிவாகப் புலப்படுகின்றன. அதை இயற்றிய புருஷனை வியந்து பாராட்டுகிறோம், தட்சணமே அவரிடம் அன்பு சுரக்கிறது.

பேராசிரியர் ராதாகிருஷ்ணன் உரைநடை வல்லுநர்களில் ஒருவர். இந்திய தத்துவ வரலாற்றை இரண்டு புத்தகங்களாக அவர் எழுதியுள்ளார். ஆங்கிலத்தில் இந்திய தத்துவ நூல்கள் எப்படி இருக்கவேண்டுமென்பதற்கு ஒரு தரத்தை அவை நிர்ணயித்து உள்ளன. அவர் விளக்கிக் கூறும் விதம் சிறப்பு வாய்ந்தது. வெவ்வேறு போட்டிச் சித்தாந்தங்களை பாரபட்சமின்றி அவர்

எடுத்துக் காட்டும் விதம், வாதத் திறன் ஆகியவை ராதா கிருஷ்ணனின் வெற்றிக்குக் காரணங்கள். இந்திய தத்துவத்துக்கு அவர் ஜீவகளை கொடுத்து உயிர் வாழும் ஒரு மரபையும் தந்துள்ளார். அவருடைய பிந்திய படைப்புக்களில் "வாழ்க்கையைப் பற்றிய லட்சிய நோக்கு" (An Idealist View of Life) என்பதில் ஆக்க மனப்பான்மையுடன் எழுதும் தத்துவப் புதுமையைக் காண்கிறோம். எப்போதுமே அவரது உரைநடையானது எல்லாவகைகளிலும் போதுமான கவர்ச்சியுள்ளதாக, வளம் படைத்ததாக, திறம்பட எடுத்துச் சொல்வதாக, மேலை நாடுகள், கீழ் நாடுகள் ஆகியவைகளின் இலக்கிய மேற்கோள்கள் கலந்து பரிமளிப்பதாக இருக்கின்றது. அருவியின் வீழ்ச்சி போன்ற பேச்சு வன்மையும் லளித மாக எழுதும் திறனும் அமைந்த பண்டிதர், வருங்காலம் உரைப்பவர், விவகார புருஷர் போன்ற பல அம்சங்கள் ஒன்றி அமைந்த பிரகிருதியாக விளங்குகிறார் பேராசிரியர் ராதாகிருஷ்ணன். அவரது ஆங்கில உரைநடைக்குச் சக்தியையும், மேன்மையையும் இந்த இசைவுதான் வெகு வாக அளிக்கிறது.

மற்றோர் எழுத்தாளரையும் குறிப்பிட வேண்டும். ஸ்ரீ சி. இராஜகோபாலாச்சாரியார் வாதப் பிரதிவாதங்களில் தலைசிறந்தவர் என்று வழக்கமாகக் கருதப்படுவதுண்டு. ஆனால் அது அவரைப் பற்றிய முழு உண்மையாகாது. தோற்றத்தில் ஓரளவு கண்டிப்பை அவர் பழக்கப்படுத் திக் கொண்டிருக்கிறார். ஆனால் அவருக்கு உணர்ச்சி பாவமும் ஆத்ம அனுபவமும் நிறைய உண்டு. இவற்றை அவரது எழுத்துக்களில் காணலாம். ராஜாஜி யின் உரை நடை காந்திஜியின் சைலியைப் போல் அவ்வளவு வெளிறியதாகக் காணப்படாது. அதைப் போல் செழுமையோ, மனக்கிளர்ச்சியை விளைவிக்கும் தன்மையோ இதில் இராது. நேருஜியின் வாழ்க்கைச் சுடரொளியின் பிரகாசமும் அதில் இல்லை. வாக்கியங்

களின் ஓட்டம் ஒரு நியதியில் காணப்படுகிறது. ஒன்றைத் தொடர்ந்து ஒன்றாகத் தேற்றங்களைப் போட்டு மனதை ஆட்கொள்ளக்கூடிய தத்துவ வாதங்களைக் கட்டுக் கோப்பாக அமைத்து அவர் எழுதுகிறார். ஆனால் மேலுக்கு அமைதியாகத் தென்பட்ட போதிலும், அதனடியே இருண்ட வேகமான நீரோட்டமும், கண் டறிய வேண்டிய கருத்துச் செறிவும் இருக்கும். மகா பாரதத்தையும், ராமாயணத்தையும் சமீபத்தில் அவர் ஆங்கிலத்தில் எழுதியதன் மூலம் இன்றைய உலகிற்கு வியாசரையும், வால்மீகியையும் தற்கால மதிநுட்பச் சொல்லாட்சியுடன் வடித்து, பக்குவப்படுத்தி வழங்கி யிருக்கிறார்.

### சுதந்திரத்திற்குப் பின்

1945-ம் ஆண்டில் இரண்டாவது உலக யுத்தம் முடி வடைந்த சூழ்நிலையில் ஆசாபங்கம் மிகுதியாகக் காணப் பட்டதால் இந்திய மக்கள் பொதுவாக இன்பத்தைச் சுவைக்க முடியவில்லை. காந்தி-ஜின்னா பேச்சுக்கள் தோல்வியுற்றன. இந்திய தேசிய ராணுவத் தலைவர் களின் வழக்கு விசாரணை நடந்துகொண்டிருந்தது. இந்தியாவில் ஏற்கெனவே குழப்பமாகி விட்டிருந்த நிலைமையை, அந்த வழக்கில் ஆஜராகிய ஸ்ரீ பூலாபாய் தேசாய் செய்த அற்புதமான வாதம் மேலும் குழப்பி விட்டது. 1946 செப்டம்பர் 2-ம் தேதி (ஜப்பான் வீழ்ச்சிக்கு ஓராண்டு பின்னர்) நமது சரித்திரத்தில் ஒரு மகத்தான தினம். அன்றுதான் இடைக்கால சர்க்கார் பதவியேற்றது. அந்த மகிழ்ச்சியுடன் வருத்தமும் கலந்தே இருந்தது. இதற்குக் காரணம் முஸ்லிம் லீக் கோபங்கொண்டு அதில் சேர மறுத்து வெளியே இருந்தது தான். கல்கத்தா, நவகாளி, பீகார், பஞ்சாப் ஆகியவற் றில் வகுப்புவாத வெறியாட்டங்கள் வாலாயமாக நடை பெற்றன. சரித்திரத்தின் படிப்பினையைப் புறக்கணித்து,

பகுத்தறிவை உல்லங்கனம் செய்து, மகாத்மாவின் உள்ளொளியையும் எச்சரிக்கைகளையும் பொருட்படுத்தா மல், ஆசாபங்கத்தில் வளர்ந்து வந்த துன்பியலின் நிர்ப் பந்தத்திற்குப் பணிந்து நாட்டின் பிரிவினையை காங்கிரஸ் தலைவர்கள் ஒப்புக் கொண்டனர். எனவே 1947 ஆகஸ்டு 15-ம் தேதி சுதந்திர இந்தியாவும், பாகிஸ்தானும் பிறந்தன.

விடுதலை வந்துவிட்டது. ஆனால் பழைய எழுத் தாளர் கனவுகண்டு, பாடிய விடுதலை அல்ல அது. பல தலைமுறைத் தேசபக்தர்கள் ஆதர்சமாகக் கருதி உழைத்த லட்சியமான விடுதலை அல்ல அது. அது தோஷம் தோய்ந்த சுதந்திரம், முன் எப்போதும் கண்டிராத குரூர முள்ள வகுப்புவாதக் கலவரங்களிடையே, வெறியாட்டங் களிடையே அது ஜனித்தது. மக்கள் பத்து லக்ஷக்கணக் கில் நிலைபெயர்ந்து எல்லைகளைக் கடந்தனர். வீடு வாயில் கள் தகர்ந்தன. பலரது வாழ்வு பாழாயிற்று. மனிதப் பண்பாடுகள் மிதியடியில் நசுங்கின. எனினும் அதி ஆச் சரியமாக இந்தியா தப்பிப் பிழைத்தது. 1948-ம் ஆண்டில் ஜனவரி 30-ம் தேதி நடைபெற்ற கோர மான நிகழ்ச்சியையும் அது தாங்கிப் பிழைத் தது ஒரு அதிசயம். 1946 முதல் 1948 வரை தாக்கிய அதிர்ச்சிகளினின்று இந்திய இலக்கியம் இன்னும் மீள வில்லை. படுகொலைக்குள்ளான குற்றமற்றவர்களின் குருதிப் பெருக்கு, மகாத்மா அமரரான வகை, அதற்குக் காரணமான தேசிய அவக்கேடு, மன வேதனை, உணர்ச்சியைச் சில்லடிக்கும் ஆசாபங்கம், அதைத் தொடர்ந்து வந்தன. இவற்றையெல்லாம் எழுத்தாளரும் அனுபவித்துள்ளனர். ஆனால் இந்த அனுபவத்தை அவர்கள் இலக்கியத்தில் வடித்துத் தர முடியாது சிரமப் பட்டனர்.

மாதங்கள் கழிந்தன. ஆண்டுகள் வழக்கம்போல் அலுப்பு சலிப்பில்லாமல் உருண்டோடின. மந்திரி

சபைகள் மாறின. புதிய அரசியல் கட்சிகள் தோன்றின. கண்ட்ரோலும், கண்ட்ரோலின் நீக்கமும் கண்ணும்பூச்சி ஆடின. சுபிட்சத் திட்டத்தை வைத்துக்கொண்டு தேசம் சங்கநாதம் பாடியது. ஆக்கப் பணியில் முனேந்துள்ள எழுத்தாளனுக்குத் தன் பணியை ஆற்றுவதற்கு விஷயப் பஞ்சமே இல்லே. நையாண்டி, நிந்தனே, இன்பியல், கேலிக்கூத்து, கண்டனம், கவர்ச்சிகரமான நாடகப் பணி ஆகிய எல்லாவற்றுக்குமே விஷயங்கள் இருந்தன. ஆனல் லட்சிய சித்தியைப் பற்றி இதிகாசம் புனேய அல்லது புகழ் பாடி இசை புனேய விஷயம் இல்லே. எங்கு பார்த்தாலும் முயற்சியில் ஆக்கம் குறைந்தது. தரம் வரவரச் சீரழிய லாயிற்று. இன்றைய இந்தியாவில் பதவி வேட்டை பிரமாதமாகிவிட்டது. அதற்காக 'டெல்லிக்குப் போ' என்பது எங்கும் செவியில் விழும் கோஷமாகிவிட்டது. தன்னேத்தானே வஞ்சித்துக்கொள்ளும் போக்கு தேசிய வினேயாகப் பரவிவிட்டது. தேசமும், உலகமும் இன்ன மும் பண்டித நேருவுக்குச் சரியான மரியாதையைச் செய்கின்றன. ஆனல் கிடைத்ததைச் சுருட்டும் சந்தர்ப்ப வாதமும், எதைச் செய்தாவது சுயநலத்தைப் பேணும் கயமையும், சுதந்திரத்திற்குப் பிறகு தேசத்தில் கட்டுத் தறித்து தலேவிரித்து ஆடுவதும் மலிந்துள்ள நிலவரத்தில் உருப்படியாக அவரால் எதையும் செய்ய முடியவில்லே. நாட்டுக்கு நல்வழி காட்டத் தகுதியானவை என்று எதிர் பார்த்த சர்வகலாசாலேகளும் மிக மோசமான தவறுகளே இழைத்து வருகின்றன. சுதந்திரமான சிந்தனேயோ ஆக்கப் பண்புகளோ இல்லாத சின்ன மனிதர்களின் ஆதிக்கத்தில் அவை பெரும்பாலும் சிக்கிக் கொண்டு விட்டன.

எனினும் ஐந்தாண்டுத் திட்டங்கள் மூலம் தோற்று விக்கப்பட்ட வேகமானது மக்களது ஆக்க சக்தியை ஒழுங்குபடுத்த உதவும் என்ற நம்பிக்கையில் புது முயற்சி கள் நடந்து வருகின்றன. இரண்டு ஆண்டுகளுக்கு

முன் சாகித்திய அகாதெமி தோற்றுவிக்கப்பட்டது முதல் மக்களது சுவையை மேம்படுத்தவும் இலக்கியம் ஏற்றம் காணச் செய்வதற்கும் அது பாடுபட்டு வருகிறது. புத்தக டிரஸ்டுகள் ஏற்பாடாகியுள்ளன. பத்திரிகைகள் புது சுதந் திரத்தையும், பொறுப்புகளையும் பெற்றுள்ளன. எனினும் அகாதெமியோ, டிரஸ்டுகளோ, உரிமை சாஸனங்களோ பேரிலக்கியத்தை சிருஷ்டிக்கக் கூடியனவல்ல. இலக்கி யத்தை உண்மையுணர்ச்சியுடன் படைப்பவன் பிறருக்கு தனது உள்ளக்கிடக்கையை எடுத்துரைக்கும் மனதை யுடையவன் ஆவான். இது கருத்துப் பரிமாற்றத்தை அடிப்படையாகக் கொண்டது. நமது சுயநலச் சிறுமை களை உதறியெறிந்து, ஆத்மானுபவத்துடன் உறவாடி, மனங்கள் ஒன்றுபட்டு முன்னேற்றப் பாதையில் ஆற்ற வேண்டிய பணி இது. இலக்கியத்தின் தரமானது, இறுதி யாக, தனிப்பட்ட எழுத்தாளரின் தரத்தையே பொறுத் துள்ளது. பேராசிரியர் ராதாகிருஷ்ணன் கூறியது போல், அரசியல் நிர்ப்பந்தங்களைத் தாங்கி நின்று, புதுமையின் மோகம், போஷகரின் ஆதரவு, பிரசார ஆதிக்கம், சொற்சிலம்ப ஆர்வம் ஆகியவற்றை தனியர் களாக நின்றேனும் சமாளிக்கும் உறுதி படைத்த எழுத் தாளர் இருக்கும்வரை, தமது தேனினும் இனிய ஆதர் சங்களை, நிலைத்து நிற்கக்கூடிய கலைப்படைப்புக்களாக மாற்றுவதில் வெற்றி காண அவர்களால் இயலும்.

சுதந்திர சகாப்தத்தின் மகத்தான நிகழ்ச்சிகளில் ஒன்று ஸ்ரீ அரவிந்தரின் "சாவித்திரி" என்ற கவிதை வெளியானதுதான். அது 1950–51ல் பிரசுரமாயிற்று. "ஊர்வசி", "காதலும் மரணமும்" ஆகியவை போலவே "சாவித்திரி"யும் 1890-க்குப் பிறகு தொடங்கப் பெற்றது. அது 50 ஆண்டுகளாக வளர்ச்சி கண்டு வந்தது. பல தடவை அதில் திருத்தங்கள் செய்யப்பட்டன. இப் போது எடுத்துக்கொள்வது, பின்னர் புறக்கணிப்பது, புதிய உற்சாகத்துடன் புது மெருகு கொடுப்பது,

ஓர் அற்புதமான ஆதர்சச் செல்வமாக மாற்றி அமைப்பது என்று அது வளரலாயிற்று. இறுதி வடிவத்தில் வசனகாவிய நடையில் புனையப் பெற்றுள்ள இந்த இதிகாசம் 3 பாகங்கள் கொண்டது. 12 புத்தகங்கள் அல்லது 48 படலங்கள் இதில் இருக்கின்றன. மொத்தமுள்ள வரிகள் 24,000. கதை எல்லோருக்கும் தெரிந்தது தான். சாவித்திரியையும், சத்தியவானையும் பற்றி மகா பாரதம் சொல்லும் கதைதான். ஆனால் ஸ்ரீ அரவிந்தர் அதற்கு ஓர் ஆத்ம அனுபவ வர்ண ஜாலத்தை, நிலைத்து நிற்கக்கூடிய தன்மையை அளித்துள்ளார். மில்டன் இயற்றிய "சுவர்க்க நீக்கம்" (Paradise Lost) என்ற கவிதைக்குப் பிறகு ஆங்கிலத்தில் எழுதப்பெற்ற மகத்தான இதிகாசம் என்ற புகழுரையை எதிர்கால இலக்கிய, சரித்திர ஆசிரியர்கள் இதற்கு வழங்கக்கூடும். எதிர்காலக் கவிதை (The Future Poetry) என்ற பெயரில் பிரகாசமாக ஸ்ரீ அரவிந்தர் புனைந்துள்ள பெரு நூல் 40 ஆண்டுகளுக்கு முன் வெளியாயிற்று. எதிர்காலக் கவிதையின் எல்லைகள் எவ்வாறெல்லாம் விரியக்கூடும் என்பதை அதில் அவர் சுட்டிக் காட்டியுள்ளார். ஆத்மாவுடன் ஆத்மா செய்யும் உரையாடலே தூய்மையான கவிதை என்று கொள்வோமானால், அதற்குப் புறம்பான இடைச்சொற்களைச் கூடியவரை குறைத்துக்கொள்வது கவிதையின் பொருள் விளங்குவதற்கு அதிக உதவுபடியாக இருக்கும். கற்பனைச் சித்திரங்களை கலைத்து, வாக்கியங்களைக் கூறிட்டுப் பார்க்கு முன், சொல் - அலங்காரத்தில் கவனம் திரும்பு முன், கவிதைச் சிறப்பானது படிக்கும்போதே மனதுக்குத் தன் செய்தியைச் சேர்ப்பித்துவிட வேண்டும். இன்னிசை காதில் விழுவதுபோல, ஒளி தன் இலக்கை அரவணைத்துக் கொள்வதுபோல, மந்திரம் ஆத்மாவில் ஆழ்ந்துவிடுவது போல இந்த அனுபவம் ஏற்பட வேண்டும். கவியின் சொல்லாட்சி

யானது சிந்தனையின் இடத்தை நிரப்பிவிடக் கூடியதல்ல. ஆக்க வாழ்வை ஊக்குவிக்கும் ஒரு சிறு பொறியே கவியின் சொல். மீண்டும் மீண்டும் அதே தன்மையுள்ள கவிதைச் சொற்களைச் சிருஷ்டிக்கும் திறனுடன் திகழ்வது புதிய கவிஞனுக்கு வாய்க்கும் அறைகூவல். தெய்வ வாழ்வை இவ்வுலகிலேயே அனுபவிக்கலாம் என்ற வாக்குறுதியைக் கவிதையின் மூலம் மனதில் பதிய வைப்பது தான் 'சாவித்திரி'யைப் புனைந்ததில் ஸ்ரீ அரவிந்தருக்கு இருந்த மகத்தான நோக்கம். அறிவின் வெண் சுடரொளியாக ஜொலிக்கின்ற இக்காவியம், தன்னுள் மகத்தான சக்தியைத் தேக்கி வைத்துக்கொண்டு ஒரு சீராகத் தருகிறது. சிருஷ்டித் தத்துவத்தின் மேன்மையான லய விந்யாசத்தை அதில் காணலாம். அது மண்ணிலிருந்து கிளர்ந்தெழும் ஜுவாலை. எனினும் அமரர் அனுப்பியுள்ள தெய்வீகத் தூதர் என்றே அதைக் கொள்ள வேண்டும்.

ஸ்ரீ அரவிந்தரைத் தவிர அவர் மூலம் உற்சாகமடைந்த பலர் அதே உணர்ச்சி பாவத்தில் புதிய கவிதைகளைப் புனைந்து வருகின்றனர். கே. டி. சேத்னு, தெய்வ விளக்கத்தின் வீர யாத்திரையில் (1949) "இரகசிய காம்பீர்யம்" என்ற தமது முந்தைய நூலைப் போலவே ஆவி உலக அனுபவங்களையும் ஆத்மீக உண்மைகளையும் பிரகாசமாக எழுதி வைத்துள்ளார். திலீப் குமார ராய் இயற்றிய "ஒளியின் கண்கள், (1948)" (Eyes of Light) நீண்ட தத்துவக் கவிதை, பாகவதத்தில் காணும் பிரகலாதனது கதையை அடிப்படையாகக் கொண்டது. அவரது யோகானுபவத்திலிருந்து பிறந்த பல இசைப் பாடல்கள் அதில் இடம் பெற்றுள்ளன. புதுப்புது உண்மைகளை இடைவிடாது கிளர்ந்து காட்டிக்கொண்டே போகும் தன்மையை அது அடைந்துவிட்டது. "மொட்டுகள், (1947)" (Sub blossoms) என்ற நூலை நிரத் பரன் இயற்றியுள்ளார். எதிர்காலக் கவிதை மெது

வாக வளர்ச்சி காணக்கூடிய பாதையைப் புலப்படுத்தும் ஒரு குறியீடாக அது மதிக்கப் பெறுகிறது. நளினிகாந்த குப்தா (உச்சியை நோக்கி - To the Heights) ரிஷி காந்தா (கனவின் இசையொலி - Dream Cadences புஞ்சாலால் (திருமாலையும் தாமரை இதழ்களும் - Rosary and Lotus Petals), பிருதிவீந்திரா ரோமென், டேஷ்மீ ஆகியோர் ஸ்ரீ அரவிந்தரின் செல்வாக்கில் திளைத்த பிற கவிஞர்கள். தெய்வானுபவக் கவிதை கடமையை விட்டோடும் தன்மை கொண்டதல்ல. தனது தராதரங்களையும் நல்லது கெட்டது பற்றிய நியதிகளையும் இழந்து விட்டதுபோல் தோன்றும் ஒரு சகாப்தத்தில் தவறுகள் திருந்துவதற்கு உண்மையான தெய்வானுபவம் பெரிதும் பயன்படும். எல்லாவற்றுக்கும் வேராக இருப்பதும், வித்தாக விளங்குவதுமான அடிப்படைக்குச் செல்வது தான் அரவிந்தரது கவிதா பரம்பரையின் பிரதான நோக்கம். மந்திரங்களின் உச்சாடனத்தில் புதுயுக மனிதனின் ஆதர்சனத்தைக் காட்டி தெளிவில்லாத ஆசா பங்கம் நிறைந்த இன்றைய உலகிலிருந்து விடுபட்டு, புதுயுகம் தோன்றச் செய்வதற்குத் துணைபுரிவதே அதன் லட்சியம்.

திலீப் குமார் ராய் இயற்றியுள்ள "மேல் நோக்கிய விம்மல்" (The Upward Spiral) என்ற அசாதாரணமான நாவலிலும், ஆத்மீகச் சாயை படிந்து கிடப்பதைக் காணலாம். அது கற்பனைச் செழுமையுள்ள கட்டுரை. அபிலாஷைகளையும், லட்சிய சித்தியையும் எவ்வாறு உருவாக்க வேண்டும் என்பதற்கான வழிவகைகளை அது தருகிறது. இதிலுள்ள உரையாடல்கள் அலுப்பூட்டக் கூடியவை, ஆனால் அடிப்படையான யோக சாதகம் எல்லாவற்றையும் அதில் இணைத்து வைத்துக் கொண்டிருக்கிறது. ஆனால் அரசியல் சுதந்திர அனுபவமும், புதிய தேசியப் பிரக்ஞையும், சென்ற 10 ஆண்டுகளில் பிராந்திய மொழிகள் வேகமாக வளர்ச்சி கண்டிருப்பதும்

ஆங்கிலத்தில் இந்தியர் எழுதுவதன் அளவையோ, தரத்தையோ, பாதிக்கவில்லை. சில துறைகளில் முன் எப்போதையும் விட அதிகமான வாய்ப்பு இப்போது ஆங்கிலத்திற்கு இருக்கிறது. சுதந்திரம், தேசப் பிரிவினை, சுபிட்சத் திட்டங்கள் ஆகியவை ஒரு விசேஷ பரபரப்பை இந்த யுகத்திற்கு அளித்து, பாடுபட்டு உழைக்கின்ற ஓர் உணர்ச்சியை அளித்துள்ளன. இது பொருள் படைத்த ஒரு சகாப்தம். இதில் பரபரப்பைக் காணலாம். இதில் ஆர்வம் தென்படும். சாதனைகள் உண்டு. அவற்றுடன் கூட பின்னோக்கித் தள்ளப்படுவது, ஆசாபங்கம், அவக்கேடு ஆகியவைகளும் கலந்தே இருக்கும். ஆக்க எழுத்தாளனை, குறிப்பாக நாவலாசிரியனை, எழுத வா வா என்று அவை அழைக்கின்றன. இது ஓர் அறை கூவல், கீர்த்தி அடைவதற்கான பொன்னான சந்தர்ப்பமும்கூட. வெயில் காயும்போது தூறும் மழை வர்ண ஜாலங்களைக் காட்டும் வான வில்லை வழங்குவது போல, நீண்டகால அடிமையிருளின் பயங்கரத்தினின்று வந்து கொண்டிருக்கும் ஒரு தேசத்தின் நவநவமான வர்ண விசித்திரங்களைத் தீட்டித் தருவோர் யார்? நமது சாதனைகளை இதிகாசங்களாக எழுத வல்லவர் யார்? மகத்தான முயற்சிகளைப் பாடல்களில் புனைந்து இசைப்பவர் யார்? சுய வஞ்சகத்தை நையாண்டி செய்வோர் யார்? இரக்கமற்ற தோல்விகளுக்கு இரங்கற்பா பாடுபவர் யார்?

1930-க்கும் 1940-க்குமிடையே 1940-ஐ அடுத்துக் கற்பனைக் கதைகளை எழுதி அங்கீகாரச் சிறப்பை அடைந்தவர்களில் ஆனந்து, நாராயணன் ஆகியோர் தமது படைப்புத் திறன் குன்றாமல், மக்களின் அபிமானத்தையும் பெற்று முன்னுக்கு வந்துள்ளனர். புதிதாக எழுத முற்பட்ட பவானி பட்டாச்சாரியா, கமலா மார்க்கண்டேயா, குசவந்த சிங், சாந்தா ராமராவ், சுதிர் கோஷ் ஆகியோரும் பிறரும், தற்கால இலக்கிய நிலைக்களனுக்கு தமது பல்வகைப்பட்ட அனுபவங்களின்

உணர்ச்சி வேகத்தை அளித்துள்ளனர். எதிர்காலம் பிரமாதமாக இருக்கக்கூடும் என்ற நம்பிக்கை அவர்களால் ஏற்பட்டுள்ளது. இந்த பிற்காலக் கற்பனைக் கதைப் புரட்சிகளில் வீர சுதந்திரப் போர்தான் முக்கியமாகக் காணப்பெறுவது. குறிப்பாக, வேணு சிட்டாலேயின் (மார்க்கத்தில்–1951–In Transit), அஹ்மத் அபாவின் "இன்குவிலாப்", பவானி பட்டாச்சாரியாவின் எவ்வளவு பசி–1948 (So Many Hungers) கமலா மார்க்கண்டேயாவின் (ஒரு உள்ளுறைச் சீற்றம்–Some Inner Fury), குசவந்த் சிங்கின் "பாகிஸ்தானுக்கு ரயில்" (Train to Pakistan) ஆகியவை இந்த வகையைச் சேர்ந்தவை. "என் தேசம் துயருடன் துஞ்சுகிறது" (Sorrowing Lies My Land) என்ற தலைப்பில் லாம்பெர்ட் மாஸ்கரேனஸ் இயற்றியுள்ள கதை போர்த்துகீசிய ஆட்சியின் கொடுமையை எதிர்த்து கோவா நடத்தி வந்த விடுதலைப் போரைப் பற்றியது. கிராமிய வாழ்க்கை, நகரத்தின் நாகரிகமான கபடங்கள், உள்ளோருக்கும் இல்லாதாருக்குமிடையே நடைபெறும் போராட்டங்கள், மேற்றிசை நாடுகளுக்கும் கீழ்த்திசை நாடுகளுக்குமிடையே இருப்பதாகத் தோன்றும் பிளவு, சம்பிரதாயமும், கலக உணர்ச்சியும் நேர் எதிர்த்திசையில் வலுத்து வரும் போக்கு - ஆகியவை தற்கால நாவல்களுக்கு விஷயமளிக்கும் ஊற்றுச் சுனைகளாக இருந்து வருபவை. இன்னும் சில வெற்றிகரமான கட்டுக் கதைகள் உண்டு. ஒரு மனிதனது தலையை மற்றொருவனது உடலுடன் சேர்த்து இணைத்து விடுவதன் விளைவுகளை கற்பனை செய்து, மாறுத சுவையுள்ள நூலை புருஷோத்தம திரிகம்தாஸ் இயற்றியுள்ளார். இதன் சாத்தியக்கூறுகளை எல்லாம் அவர் தொடர்ச்சியாக கற்பனை செய்து வழங்குகிறார். "உயிருள்ள முகமூடி" (The Living Mask) என்ற இந்த நாவல் மனத்தை இம்சிக்கிறது, அதேசமயத்தில் கவர்ச்சிக்கவும் செய்கிறது. சுதிர்கோஷின் "மஞ்சள்

படகு" (The Vermilion Boat), "காட்டுத் தீ" (And Gozalles Leaping the flame of the forest) போன்றவைகளில் கீழ்த்திசை மணம் கமழ்கின்றது. ஆனால் பொருளடக்கம் கனமாக இல்லை. போகப் போக நைந்து விடுகிறது. எனினும் படிப்பதற்கு இன்பமாகவும், மனதுக்கு திருப்தியளிப்பதாகவும் இருக்கிறது. "ஹாட்டரைப் பற்றிய முழு விவரங்கள்" என்று ஜி. வி. தேசானி இயற்றியுள்ள நாவல் ஜேம்ஸ் ஜாய்ஸது வழியில் தோன்றியது.

டாக்டர் பவானி பட்டாச்சாரியா மூன்று நாவல்களை எழுதியுள்ளார். "எவ்வளவு பசிகள்" (So Many Hungers), "மோகினிக்கு சங்கீதம்" (Music for Mohine), "புலி மீது சவாரி செய்பவன்" (He who rides a tiger) (1954) ஆகியவைதாம் அந்த நாவல்கள். இவற்றின் மூலம் கற்பனைக் கதைகளைப் படைக்கும் திறனுளர் என்ற புகழ் அவருக்கு நிலைத்து விட்டது. "எவ்வளவு பசிகள்" என்பது வங்காளத்தில் யுத்த காலத்திலிருந்த நிலவரத்தை அப்பட்டமாக உரித்துக் காட்டுகிறது. இது உலகெங்கும் நிறையப் புகழ்பெற்ற நூல். "மோகினிக்கு சங்கீதம்" என்பது மோகினி என்ற ஒரு இளம் பிராமணச் சிறுமிமையைப் பற்றியது. அவள் ஜயதேவ் என்ற புலவரை மணந்துகொண்டு வெற்றிகரமான இல்வாழ்க்கையை அவருடன் நடத்த முயல்வதைப் பற்றியது. "புலி மீது சவாரி செய்பவன்" என்பது வங்காளப் பட்டினியை நிலைக்களனாகக் கொண்டது. ஆனால் இதன் அமைப்பு அவ்வளவு கனமானதல்ல. காலோ என்ற பாத்திரம் சமூகத்தைக் கேலி செய்யும் விதம் உண்மையில் சிறந்த பொழுதுபோக்கு. கல்கத்தாவில் வாழ்க்கை நடைபெறும் வேகம், நகரங்களில் கெட்ட பழக்கவழக்கங்களும் நாகரிகச் சாயைகளும் கலந்து தோற்றுவிக்கும் தீய சக்திகள். வெகு ஜன இயக்கங்களும், வெகு ஜன மதி மயக்கங்களும் நிர்ப்பந்திப்பதன்

விளைவுகள்—இவை எல்லாமாகச் சேர்ந்து இந்த நாவலுக்கு ஒரு தனித்தன்மையை அளிக்கின்றன. நாவலாசிரியர் என்ற வகையில் பட்டாச்சாரியா அருமை பெருமைகள் நிறைந்தவர். நையாண்டித் தன்மையுள்ள ஹாஸ்யம், சமுதாய நல உணர்ச்சி, குணசித்திர பாவங்கள் உணர்ச்சியுடன்கூட ஒன்றிவிடச் செய்யும் திறமை, எல்லாவற்றுக்கும் மேலாக எல்லாவிதமான துயர்களையும் துடைப்பதற்குத் துடிக்கும் வேகமான மனப்பாங்கு ஆகியவை அவரது நூல்களின் விசேஷ அம்சங்கள்.

கமலா மார்க்கண்டேயாவின் "சல்லடையில் அமிருதம்" (Nectar in a Sieve), "ஓர் உள்ளுறைச் சீற்றம்–1956" (Some Inner Fury) ஆகியவை காலஞ் சென்ற கே. எஸ். வேங்கடரமணியின் "முருகன் ஓர் உழவன்", "தேசபக்தன் கந்தன்" என்ற நூல்களை முறையே நினைவூட்டுகின்றன. "சல்லடையில் அமிருதம்" என்பது கிராம மக்களைப் பற்றிய கதை. தொழில் வளர்ச்சி, நவீன யந்திர சாதனங்களின் திறன் ஆகியவற்றுக்கு எதிரே நிராதரவாக, நம்பிக்கையின்றி, தடுமாறிக் கொண்டிருக்கும் கிராம மக்களைப் பற்றிய கதை. இதைச் சொல்பவள் கதாநாயகி ருக்மிணி. அவள் துக்கத்திற்கு எல்லாம் தாயாக தன்னை சித்திரித்துக் காட்டிக் கொள்கிறாள். "உள்ளுறை ஆவேசம்" என்பது இன்னும் சற்று சிரமம் நிறைந்த விஷயத்தைப் பற்றியது. 1942 ஆகஸ்டில் இறுதிவரைப் போராட்டம் தொடக்கப் பெற்ற சூழ்நிலையில், ஓர் ஆங்கிலேயனைக் காதலித்த இந்தியப் பெண் ஒருத்தியைப் பற்றிய கதை அது. முந்தைய நூல் இந்தியப் பொருளாதாரத்தின் துன்பியலைக் காட்டுகிறது. அதைப்போல் அரசியல் வாழ்வின் சீரழிவைச் சித்திரிக்கிறது 'உள்ளுறை ஆவேசம்'. இரண்டு நாவல்களிலும் பிரதான பாத்திரங்கள் சந்தர்ப்பச் சேர்க்கையில் ராஜீய அல்லது பொருளாதார நிர்ப்பந்தங்களுக்குப் பணியாமல், அடக்க முடியாத ஆத்மீக பலத்தை நிலைநிறுத்தப் பார்க்

கும் மானிடனது தன்மையைப் புலப்படுத்துபவை. கமலா மார்க்கண்டேயாவின் வெற்றிக்கு முக்கிய காரணம் அவரது உரைநடையின் தூய்மையும், எல்லாவற்றையும் விவரிக்காமல் சங்கேதமாக சுட்டிக் காட்டும் விசேஷத் தன்மையுந்தான்.

"வீட்டை நினைந்துகொள்" (Remember the House) என்ற சாந்தா ராமராவின் முதல் நாவல் அவர் வெகுதூரம் முன்னுக்கு வரக்கூடியவர் என்பதைப் புலப் படுத்துகிறது. பாலா என்ற பெண் கதை சொல்கிருள். புதிய சந்தர்ப்பங்கள் வாய்க்கையில் அவளது மதி கூர்மை யாகி வளர்ச்சி காண்கிருள். வெற்றியும், பெருமையும் போலவே தோல்வியும் ஏமாற்றமும் அவளுக்கு நலனையே பயக்கின்றன. காதல் அழைக்கிறது. ஆனல் பிரத்தியட்ச நிலைமை பின்னுக்குத் தள்ளுகிறது. புதுமையில் பர பரப்பு இருக்கிறது. ஆனல் சம்பிரதாய முறைகளைச் சுலபமாக உதறியெறிய முடியவில்லை. "சிறையும் சாக் கலெட் பணியாரமும் (1954)" (Prison and Chocolate Cake) என்பது நயனதாரா சேகாலின் ரம்மியமான சுய சரிதை. "உல்லாஸ வேளை (1957)" (A Time to be Happy) என்ற நாவலையும் நயனதாரா வெளியிட்டிருக் கிருர். அது சுதந்திரத்திற்கு முந்திய நாட்களைப் பற் றியது. ஷைவால், சாகாய் என்பவை இரண்டு முற்றிலும் மாறுபட்ட, தெளிவான தன்மைகள் உள்ள பிரிவுகள். ஒரு சகாப்தத்தைப் பற்றிய நல்ல கதையும், நல்ல விவரணைச் சித்திரமும் இதில் அடங்கியிருக்கின்றது. "ஆதம்பூர் வீடு" (The House of Adampore) என்ற நாவலில் ஆனந்தலால், 1947-க்கு முன் டெல்லியிலும் பொதுவாக பஞ்சாபிலும் இருந்த பணக்கார வர்க்கத்தை மூடி மறைத் திருந்த திரையை விலக்கிக் காண்பிக்கிருர். அப்போது முரண்பாடுகள் ஒருவனிடமே சேர்ந்து குடிகொண்டிருந் தன. மக்கள் வெவ்வேறு உலகங்களுக்குத் தாவித்தாவிப் பாய்வதுபோல் இருந்தது. ஆனல் புழுப்போல் அதிருப்தி

யானது உள்ளூற நெளிந்து கொண்டிருந்தது. "ஓடை" (The Stream) என்று எம். ஸி. ராமசர்மா இயற்றியுள்ள நாவல் அனுமதேய கோபாலத்தைப் பற்றியது. ஹார்டி யின் "ஜூட்" என்ற பாத்திரத்தைப் போல் அவன் இரண்டு மாதர்களிடையே ஊசலாடுகிறான். இருவரில் எவருடனும் முற்றிலும் திருப்திகரமான உறவு முறை இல்லை. "கல்யாணியின் கணவன் (1957)" என்ற பெய ரில் எஸ். ஒய். கிருஷ்ணசுவாமி எழுதியுள்ள நாவல், உட் லண்டர்ஸின் ஹார்டி-பிட்ஜ் பியர்சை நினைவூட்டுகிறது. சேகர் கல்யாணியின் புருஷன். அவன் ருசிகரமான பாத்திரம். ஆனால் அப்படி ஒருவன் இருந்திருக்கக் கூடும் என்ற நம்பிக்கை ஏற்படவில்லை. "முருகன் ஓர் உழவன்" என்ற நாவலில் வேங்கடரமணி சித்திரித்துள்ள மற்றொரு வீழ்ச்சியுற்ற மயிலாப்பூர் மேலோனை—"கேதாரி" என்ற பாத்திரத்தை, சேகர் நினைவூட்டுகிறான். ஆனால் மயிலாப் பூருக்கே உரித்தான மேதையை வெளிக்கொணர்வதிலோ, கதாநாயகனிடம் பின்னிக் கிடக்கும் முரண்பாடுகளை சரி வர அமைத்து வழங்குவதிலோ வேங்கடரமணியின் அள வுக்கு கிருஷ்ணசுவாமி வெற்றி காணவில்லை.

"பாகிஸ்தானுக்கு ரயில் (1956)" என்ற குசவந்த் சிங்கின் நாவல் ஒரு தனி வகையைச் சேர்ந்தது. "விதி வழியில்" வந்த இந்தியப் பிரிவினைக் காலத்து பஞ்சாபில் நரக வாழ்வு கட்டவிழ்ந்து கிடந்த அலங்கோலத்தை அது பயங்கரமாக நினைவூட்டுகிறது. ஒரு நாட்டை எதேச் சாதிகாரமாக இரண்டாகப் பிளப்பது ஒரு தீய செயல். தீமை மேலும் மேலும் தீமையை வளர்த்துக்கொண்டு போகத்தான் செய்யும். வகுப்புத் துவேஷ வித்தை ஊன்றிய பிறகு, கூட்டம் கூட்டமாக பெருவாரியான ஜனத் திரளை சூறுவளிக் காற்றுப்போல பயமானது நிலை பெயர்த்தெறிந்து, சின்னாபின்னமாக்கிக் குவித்தது தவிர்க்க முடியாத விளைவு. குற்றம், பதிலடி, மேலும் குற்றம். சங்கிலித் தொடராக வரம்பின்றி இப்படி நடந்து

கொண்டே போக வேண்டியதுதானு? மனிதனது சகஜ மான தன்மை அன்பு, துவேஷம் அல்ல. சூருவளியின் பலாத்காரம் அடங்கிய பிறகு இறுதியாக அமைதி வரத் தான் வேண்டும். ஜகத்சிங் என்ற முரடன் நூரான் என்ற ஒரு முஸ்லிம் பெண்ணை நேசிக்கிருன். தனது உயிரை யும் மதிக்காமல் சீக்கியனுகிய அவன் அவளையும் இன்னும் எண்ணற்ற முஸ்லிம் அகதிகளையும் இந்தியாவிலிருந்து பாகிஸ்தானுக்கு தாங்கிச் செல்லும் ஒரு ரயில் வண்டித் தொடரில் காப்பாற்றுகிருன். குசவந்த் சிங் கற்பனைக் காதல் வழிக்கு எதிரிடையானவர். மோசமும், பித்த லாட்டமும் அவருக்குப் பிடித்தமானவை அல்ல. குறிப் பாக ஞானமும் நேர்மையும் போல் அவை வேஷம் போடு கையில் கட்டோடு அவருக்கு அது பிடிக்கமாட்டாது. ரத்தமும் கண்ணீரும் கலந்த இந்த நாவலில் மட்டுமின்றி, சிறுகதைகளின் தொகுப்பாகிய "விஷ்ணுவின் குறி" (The Mark of Vishnu) என்பதிலும் இதைக் காண் கிருேம். ஈசுவரனது "புலி வேஷம்" (Painted Tiger) என்பது குறிப்பிடத்தக்க மற்ருெரு சிறுகதைத் தொகுப்பு.

நாவல்களும், சிறுகதைகளும் ஒரு சீராக வந்து கொண்டே இருக்கின்றன. சஞ்சிகைகளுக்கு அவை தேவை. படிக்க விஷயம் வேண்டுமென்று வாசகர்கள் தவிக்கிருர்கள். இந்திய எழுத்தாளர் ஆங்கிலத்தில் நல்ல கற்பனைக் கதைகளை எழுதுவதற்கு அமெரிக்க, பிரிட்டிஷ் பிரசுரகர்த்தர்கள் ஊக்கம் அளிக்கிருர்கள். ஆனுல் நல்ல படியாக புனையப்பெறும் நாவல் அல்லது சிறுகதை வேறு, சாதாரணமாக வெளி வந்து கொண்டிருக்கும் கற்பனைக் கதை வகை வேறு. மேலே குறிப்பிட்ட நாவல்கள் ஏதா வது ஒரு காரணத்திற்காக பரபரப்பாக அல்லது திருப்தி யளிப்பனவாக இருக்கக்கூடும். ஆனுல் பரந்த கற்பனைத் திறனுடன், அற்புதமான விடுதலைப் போராட்டத்தை விஷயமாக வைத்துக்கொண்டு அவை புனையப் பெற வில்லை. டால்ஸ்டாயின் "யுத்தமும் சமாதானமும்"

(War and Peace) என்ற பெரு நூலுடன் ஒப்பிடக் கூடிய உரைநடை இதிகாசம் ஒன்றைச் சிருஷ்டித்து வழங்க வேண்டியது எதிர்கால நாவலாசிரியர்களுக்குள்ள பொறுப்பு. பலர் எழுதத்தான் வேண்டும். பிறகு தான் ஒரு சிலர் அந்தக் கூட்டத்திலிருந்து பிரகாசமாக வெளிக் கிளம்புவர். மேலே குறிப்பிட்ட எழுத்தாளர்களைப் போன்றவர்கள் நாவல்களும், சிறுகதைகளும் தொடர்ந்து எழுதிக் கொண்டிருக்கும் வரை, இந்தோ-ஆங்கிலக் கற்பனைக் கதைக்கு எதிர்காலம் நிச்சயம் உண்டு. மேலை நாடுகளுக்கும் கீழை நாடுகளுக்குமுள்ள முரண்பாடு, புதுமைக்கும் மரபுக்கும் உள்ள போராட்டம் ஆகியவற்றை வெவ்வேறு அந்தஸ்தில் வைத்து எப்போதும் எழுதிக் கொண்டே போகலாம். இதற்கு முன்போலவே இனியும் நாவலாசிரியர்களும், நாடகாசிரியர்களும் இத்துறையில் பெரிதும் கவனம் செலுத்துவது திண்ணம்.

இறுதியாக ஆங்கிலத்தில் வெளியாகும் இந்திய சஞ்சிகைகளைப் பற்றி ஓரிரண்டு கருத்துக்கள். நமது தேசிய மறுமலர்ச்சியின் ஆரம்ப காலத்தில் "ஹிந்து" (சென்னை), "அமிருத பஜார் பத்திரிகை" (கல்கத்தா) போன்ற பத்திரிகைகள் சுயாட்சி மேலும் மேலும் வளர்ச்சி காணவேண்டுமென்ற பிரச்சினைமீது பொதுஜன அபிப் பிராயத்தை உருவாக்கித் திரட்டிக் கொடுத்தன. அவை இன்னும் செழிப்பான தேசிய ஸ்தாபனங்களாக இருந்து வருகின்றன. "ஹிந்து பிரகாஷ்" (பம்பாய்). "வந்தே மாதரம்" (கல்கத்தா) இன்று பிரசுரமாகவில்லை, வரலாற்றில் ஏறிவிட்டன. தேசியத் தலைவர்கள் தமது பொது வாழ்க்கைக் காலங்களில் தமது கருத்துக்களை எடுத்துரைப் பதற்கு சஞ்சிகைகளை பயன்படுத்திக் கொண்டனர். அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் ஸ்ரீ அரவிந்தர் (வந்தே மாதரம், கர்மயோகி), லாலா லஜபதிராய் (பீபிள்), சி. ஆர். தாஸ் (பார்வார்டு), காந்திஜி (யங் இந்தியா, ஹரிஜன்),

சி. ஒய். சிந்தாமணி (லீடர்), பட்டாபி சீதாராமய்யா (ஜன்ம பூமி), சுபாஷ் போஸ் (பார்வார்டு பிளாக்), எம். என். ராய் (சுதந்திர இந்தியா, மார்க்ஸீய பாதை), லோகமான்ய திலக் (மராட்டா), ஆசார்ய கிருபளானி (விஜில்), கே. எம். முன்ஷி (சோஷல் வெல்பேர்).

தற்போது ஹிந்து, பத்திரிகா, இந்தியன் எக்ஸ்பிரஸ், ஹிந்துஸ்தான் டைம்ஸ், பம்பாய் கிரானிகிள், நேஷனல் ஹெரால்டு ஆகியவையும், சமீபகாலம் வரை ஆங்கிலோ-இந்திய பத்திரிகைகள் என்று கருதப்பட்டு வந்த டைம்ஸ் ஆப் இந்தியா, ஸ்டேட்ஸ்மன், மெயில் ஆகியவையும், குடியரசாக மாறியுள்ள இந்தியாவின் புது நிலவரத்திற் கேற்ப, அற்புதமாக தம்மை ஒழுங்கு செய்து கொண்டிருக்கின்றன. நல்ல பத்திரிகைத் தருமங்களைப் பின்பற்றி, முற்போக்குத் தன்மையுடன் அகில-இந்திய அல்லது தேசியக் கண்ணோட்டத்துடன் பிரச்சினைகளை அவை ஆராய்கின்றன. செல்வாக்கு மிகுந்த "இல்லஸ்டிரேடெட் வீக்லி"யை தவிர வாரப் பத்திரிகைகள் அவ்வளவு விரிவாக இன்னும் வேர் விடவில்லை. ஒரு காலத்தில் "இந்தியன் சோஷல் ரிபார்மர்", "சர்வன்ட் ஆப் இந்தியா" ஆகியவை நாட்டில் மிடுக்குடன் வெளிவந்தன. ஏறக்குறைய அதேமாதிரி இன்று பிரசுரமாகின்றவை "மைஸிந்தியா" (பெங்களூர்), "தாட்" (டெல்லி), "ஸ்வராஜ்யா" (சென்னை), "ராடிகல் ஹ்யூமனிஸ்ட்" (கல்கத்தா) ஆகியவை. நமது தேசிய வாழ்வில் அவசியம் ஏற்படும்போதெல்லாம் சிறுபான்மைக் கருத்துக்களைத் தெளிவாகவும், விருவிருப்பாகவும் வெளியிட்டு பயனுள்ள பணியை இவை ஆற்றி வருகின்றன. மாதந்தோறும் வரும் சஞ்சிகைகளும், உலகில் பிற பகுதிகளிலுள்ள மாசிகைகளைப் போலவே சிரம நிலையில் இருந்துதான் வருகின்றன. "கல்கத்தா ரெவ்யூ", "மாடர்ன் ரெவ்யூ", "இந்தியன் ரெவ்யூ" ஆகியவை நெடுநாளாகப் பயனுள்ள தொண்டாற்றி சரித்திரப் புகழ் பெற்றவை.

“பிரபுத்த பாரதா”, “வேதாந்த கேசரி”, “மதர் இந்தியா” ஆகியவை உயர்ந்த தரமான சஞ்சிகைகள். ஆனால் அவை முக்கியமாக வேதாந்த, ஆத்மீக விஷயங் களையே எழுதுகின்றன. “ஆரியன் பாத்” 30 ஆண்டு களாகக் கீர்த்தியுடன் செயலாற்றி வந்திருக்கின்றது. சாசுவதமான நியதிகளையும், தருமங்களையும் போதித்து, நாட்டில் திறனாய்வுடன் கூடிய மரபு ஒன்றை நல்லபடி யாக உருவாக்க அது பாடுபட்டு வந்திருக்கிறது. மூன்று மாதங்களுக்கு ஒருமுறை அல்லது இரண்டு மாதங் களுக்கு ஒருமுறை வெளிவரும் விசுவபாரதி, காலாண்டுப் பத்திரிகையாகிய “குவெஸ்ட்” (பம்பாய்), “ஆட் வெண்ட்” (புதுச்சேரி), “லிட்டரரி கிரைடீரியன்” (மைசூர்) ஆகியவை குறிப்பிட வேண்டியவை. இவற் றைத் தவிர சர்வகலாசாலைகளும், மற்ற அறிவாளிகள் நிறைந்த ஸ்தாபனங்களும், பிரசுரிக்கும் வெளியீடுகளும் உயர்ந்த வகையில் பணி புரிகின்றன.

கதையோ, நாடகமோ, நாவலோ, சிறுகதைகளோ, வரலாறோ, வாழ்க்கை நூலோ, தத்துவமோ, ராஜீய சித் தாந்தமோ, வாசாலகமோ, பத்திரிகை எழுத்தோ, எந்தத் துறையாயினும் சரி, ஆங்கிலத்தில் இந்தியர் எழுதுவது வற்றாத ஊற்றாகவே இருந்து வருகிறது. அதில் உப்பு சப்பில்லாத எழுத்து கிடையாது. தனக்கென்று ஒரு கண்ணோட்டத்தையும், எடுத்துரைக்கும் வகையையும், ஒவ்வொரு எழுத்தாளனும் வைத்துக்கொண்டு இருப்ப தால், இந்தோ-ஆங்கில இலக்கியம் தற்கால இந்தியாவின் பிற இலக்கியங்களைப் போலவே மேலும் மேலும் வலுத் துக் கொண்டே செல்லும். முற்போக்குத் தன்மையுள்ள மக்கள் கொண்ட நவீன சமுதாயம் தோன்றி, தேசியச் சீரமைப்புக்கும், சர்வதேச சௌஜன்யத்துக்கும் உழைக்கக்கூடிய வகையில் அது துணை புரியும்.

## SELECT INDO-ANGLIAN BIBLIOGRAPHY

*Indian Writers of English Verse.*
By Latika Basu ; 1933.

*An Anthology of Indo-Anglian Verse.*
By A. R. Chida ; 1935.

*Indo-Anglian Literature.*
By K. R. Srinivasa Iyengar ; 1943.

*Literature and Authorship in India.*
By K. R. Srinivasa Iyengar ; 1943.

*Indian Contribution to English Literature.*
By K. R. Srinivasa Iyengar ; 1945.

*Indian Masters of English.*
Edited by E. E. Speight ; 1934.

*Indian Short Stories.*
Edited by Iqbal and Mulk Raj Anand ; 1947.

*Collected Poems and Plays.*
By Sri Aurobindo ; 1942.

*The Mahabharata and the Ramayana.*
By R. C. Dutta ; (Everyman's Series)

*Ancient Legends and Ballads of Hindustan.*
By Toru Dutt ; 1882.

*The Sceptred Flute.*
By Sarojini Naidu ; 1945.

*Collected Poems and Plays.*
By Rabindranath Tagore ; 1937.

*Autobiography.*
By Jawaharlal Nehru ; 1936.

*Discovery of India.*
By Jawaharlal Nehru ; 1946.

*Indian Philosophy.*
By S. Radhakrishnan ; 1928.

*Eastern Religions and Western Thought.*
By S. Radhakrishnan ; 1939.

*Collected Works.*
By Swami Vivekananda (Advaita Ashrama edition)

# பெயர் அகராதி